Vol. XXXIV 1959—1960



# செந்தமிழ்ச்செல்வி

திங்கள் வெளியீடு

முப்பத்துநான்காம் சிலம்பு

ச. அ. இராமசாமிப்புலவர்,
கருப்பக்கிளர். (அஞ்சல்)
கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்.

ககூசு0—ககூசுக

The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.,
Tirunelveli. :: Madras-1.

 [Price Rs. 6-00

# செந்தமிழ்ச் செல்வி

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்
## EDITORIAL BOARD MEMBERS

# உள்ளுறை

அச்சப்பத்து
—*நல்லைக்கவி இளங்கோவன்* ௪௯௨

அச்சுக்கு வாராத அருந்தமிழ்ச் செல்வங்கள் ௪௫௧

அஞ்சல் தலையும் திருவள்ளுவரும் ௩0௫

அடைக்கலப் பத்து
—*நல்லைக்கவி இளங்கோவன்* ௪௪௬

அமரர் சண்முகம்
—*திரு. M. N. நாகரத்தினம், B. A.,* ௩0

அமெரிக்கத் தலைவர் ஐசனேவர் இந்தியா வருகை ௨௫௧

அமைதி
—*வித்துவான், மாவை. துரை. பழநிமகாதேவன்,
ஆம்பூர்* ௩௭0

அமைதி எய்துக !—*நாஞ்சில், திரு. கா. கணபதி* ௩௯௭

அருளோங் அடிசார் அண்ணல்
சதாசிவ பண்டாரத்தார் ௨௪௮

அறக்கொடை வடிவினர் அருணந்தித் தம்பிரானடிகள்
—*கழகப் புலவர், திரு. ப. இராமநாத பிள்ளை* ௭௧

அறிவீரே!
—*வெண்பாவூர், பொ. திருஞானம்* ௪௩௪

ஆட்சிமொழி பொதுவாம் ஆங்கிலமே நன்று ௫௫௪

ஆதன் அவினி
—*திரு. பா. பாப்பு இராமநாதன்* ௪௮௯

ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவ பண்டாரத்தார்
வாழ்க்கை வரலாறு
—*திரு. T. S. நடராச குருக்கள், பி. ஏ., எல். டி.* ௨௭௩

ஆவியுலகத் தொடர்பாளர்
நெல்லை, இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை ௮௯, ௨௧௬

ஆனாங்கூர் அகத்தீச்சுரர் கல்வெட்டுக்கள்
—*வித்துவான், இரகுபதி பாலசுப்பிரமணியன்* ௪௩௩

இந்திரப் புரட்சி
—*வித்துவான் அ. பாலசுந்தரக் குருக்கள்* ௬௬

இயற்கை (ஆவியுலகச் செய்தி) ௬௩
௧0௪, ௧(

இயற்கை எய்திய சக்கரவர்த்தி நயினர் M.A., L.T. I.E.S. ௩௧௯
இரங்கற் கூட்டம் ௨௯௪
இராயபுரம், தென் இரயில்வே தமிழ்மன்றப்
பொங்கல் விழா ௩௪௮
இலக்கியத்திறனாய்வு
—திரு. ச. அகத்தியலிங்கம், M.A., B.SC. ௪௦௭
இலக்கியமும் உணர்ச்சியும்
—திரு. தி. ந. அறிவு ஒளி ௫௭௯
இழிசொல் ஏன்றல் என்னை—திரு. அ. கணேசன் ௫௭௮
இளமைபெற்ற கதை
—திரு. சு. அ. இராமசாமிப் புலவர் ௪௩
இறையடி எய்திய செல்லூர்க்கிழார்
இராமசாமிப் பிள்ளை ௩௫௪
இறையருள் - நாஞ்சில், திரு. கா. கணபதி ௩௨
இறைவன் துணை - நாஞ்சில், திரு. கா. கணபதி ௪௪௫
இன்புற என் தனி நாடு எழுக!
—வித்துவான், மாவை. துரை. பழநிமகாதேவன் ௪௪
ஈடிலான் சிவன் ௨௯
உணர்க அன்னோர்!
—வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனார் ௩௯௮
உறக்கத்தின் பொருள் என்ன?
—கூடலூரர், பெரு. இராமச்சந்திரன் ௧௧௮
ஊதடா சங்கு - திரு. ஆ. துரைக்கண்ணு ௧௯௪
ஓவியம்—திரு. தி. நா. அறிவு ஒளி ௩௨௭, ௩௭௧
கடவுட் கழலிணை எய்திய நாவலர்
ச. சோமசுந்தர பாரதியார் ௧௯௩
கலைக்களஞ்சியம் ஏழாந் தொகுதி வெளியீட்டு விழா ௫௧௩
கலைமகள் வணக்கம் (ஆவியுலகச் செய்தி) ௧௯௯
கவுந்தியடிகள்—திரு. மது. ச. விமலானந்தம், எம். ஏ.
௩௨௧, ௩௮௧, ௪௪௩
கவை மகன்—திரு. பி. எல். சாமி. பி. எஸ் ஸி ௧௧௯
களை அகற்றுக!—நாஞ்சில், திரு. கா. கணபதி ௫௪௦
கள்வனும் களவனும்
—வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம் ௮௫
கற்றபின்கூறு!—திரு. பொ. திருஞானம் ௩௯௫
காலை இசைப்பா—திருவாட்டி. C. பத்மாவதி எம்.ஏ. ௫௭௭

குரீஇ யொலியும் குணக்கெழு கதிரும்
—திரு. ஆதி முருகவேள் ௫௩௦
குறள் தந்த வள்ளுவர் குந்த குந்தரா?
—வித்துவான், அ. பாலசுந்தரக் குருக்கள் ௨௪௧
கொட்டடா முரசு!
—திரு. ஆ. துரைக்கண்ணு ௫௨௯
கோவில் திருப்பணியும் கோன் ஆட்சியும் ௪௫௭
சித்தாந்த சைவத் தேர்வுகள் ௩௮
சிலம்பிலே செங்குட்டுவன்
—திரு. மது. ச. விமலானந்தம், எம். ஏ. ௫௩௧, ௫௬௩
சிவத்திரு. சேலம், கி. சுப்பராய பிள்ளை அவர்கட்கு
நிகழ்த்திய பாராட்டு விழா ௩௧௮
சிவனடி சேர்ந்த சுப்பையதாசு ௨௪௬
சின்மய தேசிகர்
—திரு சு. அ. இராமசாமிப் புலவர் ௪௭௧
செந்திலாண்டவன் செய்தருளுஞ் சிறப்புத் திருவருள்
—சித்தாந்த பண்டிதர், ப இராமநாத பிள்ளை ௪௩௫, ௪௬௭
செய்திகளும் குறிப்புக்களும்
—௪௫, ௯௩, ௧௪௧, ௧௯௦, ௨௫௪, ௩௦௧, ௩௫௩, ௩௯௯, ௪௪௭,
௪௯௩, ௫௪௩, ௫௯௧
'செல்வி' கட்டுரையாளர்கட்கு ௧௯௧
சென்னை மாநிலத்தில் கல்வி நிலையங்களின் வளர்ச்சி ௫௦௬
சைவ சமயச் சீர்திருத்தம்
—பண்டித. திரு. கா. பொ. இரத்தினம், எம். ஏ.
இலங்கை ௨௩௩
சைவசித்தாந்த சமாசத்தின் மாநாடு ௨௪௭
சோலையப்ப சுவாமிகள்—திரு. சு. அ. இராமசாமிப்புலவர் ௫௫௫
ஞானியாரடிகள் நல்லுரை (ஆவியுலகச் செய்தி) ௩௯
டாக்டர். எஸ். ஆர். அரங்கநாதன் சொற்பொழிவுகள் ௧௯௨
டாக்டர். சு. சங்கரராசு, எம். ஏ, பி. எச். டி.
வாழ்க்கைக் குறிப்பு ௩௬௬
தங்கப்பாவை
—வித்துவான், திரு. இ. பொ. நாராயணசாமி பாரதி,
உத்தமபாளையம் ௫௩௮
தஞ்சை ஆபிரகாம் பண்டிதர்
—திரு. ஏ. சி. பால்நாடார் ௧௩

தமிழகப் புலவர் குழு மூன்ருவது கூட்டம் அ௩

தமிழர் நாகரிகம்
—திரு. ஹுமாயுன் கபீர் கஅரு

தமிழன்னை - பண்டிதமணி (ஆவியுலகச் செய்தி) [illegible]

தமிழிசையும் கர்னடக சங்கீதமும்
—இசைத் தமிழ்ச்செல்வர்,
திரு. இலக்குமண பிள்ளை பி. ஏ. உசாசு

தமிழிசை விழா உரு0

தமிழின் பெருமை—சித்தாந்தச் செல்வர்,
திரு. டி. சி. சண்முகசுந்தரம் பிள்ளை, நெல்லை கஎ

தமிழ் கற்றவை—மேட்டூர்—தேன்மழை அஅ

தமிழ்ச் செய்தித்தாள்களும் தமிழும்
—புலவர், திரு. வி. போ. பழனிவேலன், பி. ஓ. எல். ருஎ0

தமிழ்த் திருநாள்—C. பத்மாவதி எம். ஏ. உருஉ

தமிழ் நாட்டுப் பள்ளிச் சீரமைப்பு சாகக

தமிழ்ப் புலமை சான்ற தனபால பத்மாவதி
அம்மையார் மறைவு சாருரு

தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு சாக

தனித் தமிழ்ப் பகைஞர் க

தாராபுரம் விவேகானந்த சபையின் தீர்மானங்கள் சாஉ

திருக்கயிலை சென்று திரும்பிய அடிகள் அக

திருக்கோளிலிக் கல்வெட்டுக்கள்
—வித்துவான், திரு. வை. சுந்தரேசவாண்டையார் [illegible]

திரு. செல்லூர்க்கிழார் செ. ரெ. இராமசாமி பிள்ளை
யவர்கள் மறைவு குறித்த இரங்கற்பாக்கள் [illegible]

திரு. டி. வி. சதாசிவ பண்டாரத்தார் மறைவுக்கு
இரங்கற் செய்திகள் உஅரு

திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள்
கடவுள் திருவடி எய்துதல் உருஎ

திருநெல்வேலி கஉஆவது தமிழ்த் திருநாளில்
மூன்ருவது சிற்றிலக்கிய மாநாடு [illegible]

திரு. பா. வே. மாணிக்க நாயகர் கடிதம்
(ஆவியுலகச் செய்தி) உகஎ

திருப்பனந்தாள் காசிமடத்தாரின்
திருமுறைக் கொடைப் பொருள் உருரு

திருமணத் திருவாழ்த்து (ஆவியுலகச் செய்தி) சு

திரு. மறைமலையடிகளின் திறன்
—திரு. பா. வெ. மாணிக்க நாயகர்
(ஆவியுலகச் செய்தி) உகஅ
திருவருள் பெற்றார் செயலனைத்தும் சிவன் செயலே
கூஎ, கசரு
திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதி பகவன்
—வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம். சகசு
திருவாட்டி இராதாபாய் சுப்பராயன் மறைவு சசுசு
திருவாட்டி ஈ. த. இராசேசுவரி அம்மையார் கடிதம்
(ஆவியுலகச் செய்தி) உஉ0
திரு. வி. க. அவர்களின் கடிதம் (ஆவியுலகச் செய்தி) கசுரு
தீப நாடகங்கள்—திரு. பா. பச்சையப்பன் ௩௩, எரு,
கநரு, கஅஎ, உசுரு, ௩௩௩, ௩எஅ, சக௩, சஅ௩
தூயோன்—வித்துவான், நெல்லை. க. சுப்பிரமணியன் ருருச
தெ. இ. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக
அறநிலையங்களின் தேர்வுகளின் அறிக்கை கஅஉ
தெய்வத் திருமறை—சித்தாந்த பண்டிதர்,
திரு. ப. இராமநாத பிள்ளை உரு
தென்னிந்திய தமிழ்ச் சங்கம், திருநெல்வேலி
தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு சஉசு
தேவையா?—வித்துவான், திரு. ச. சவரிமுத்து சசுஉ
தேனின்பம் அடைந்திடுமே!
—வெண்பாவூர், திரு. பொ. திருஞானம் சுஉ
தைப்பொங்கற் பெருவாழ்த்து—திருவாட்டி,
இ. நீலாம்பிகையம்மையார் (ஆவியுலகச் செய்தி) ௩கச
தைப்பொங்கல் வாழ்த்து (ஆவியுலகச் செய்தி) உசுரு
தைப்பொங்கல் வாழ்த்து விளக்கம்—திருவாட்டி,
இ. நீலாம்பிகையம்மையார் (ஆவியுலகச் செய்தி) ௩கரு
தொடர்மொழி
—வித்துவான், திரு. வே. சிவசுப்பிரமணியன் கஉசு
தொல்காப்பியத்தில் ஓரறிவுயிர்
—திரு. மு. அரங்கராமானுசம் கஎஎ, கசு௩
தோழி தந்த வாழ்வு
—திரு. மருதூரார் இளங்கண்ணன், M. O. L. ககஉ
நக்கீரர்—திரு. சோ. ந. கந்தசாமி, பி. ஏ. (ஆனர்சு)
கஉ௩, உஉஎ, உஅசு, ௩அஎ

நம்பி திருமுருகனார் திருமடம்
—புலவர், திரு. ச. கணபதிராமன், எம். ஓ. எல். ௫௮௮
நன்கு வாழ்வீர்—நாஞ்சில் திரு. கா. கணபதி ௮௦
நாவலர் பாரதியார், ஆராய்ச்சிப் பேரறிஞர்
சதாசிவ பண்டாரத்தார் நினைவுக் கூட்டம் ௩௩௭
நாவலர் பாரதியார் மறைவுக்கு இரங்கல் ௧௪௬, ௨௧௦
பண்டிதமணியவர்கள் முடங்கல் (ஆவியுலகச் செய்தி) ௧௯௮
பண்டைப் பிரித்தானியர் சைவ சமயத்தினரா?
—வித்துவான், மாவை - துரை. பழநிமகாதேவன்
ஆம்பூர். ௫௧௫
பதவிப் பித்தர்!
—வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனார் ௧௭௯
பயனற்ற இந்தி—மறைமலையடிகள் ௫௮௭
பல்கலைக்கழகம் கற்பிக்கும் மொழியும் தமிழே ௪௦௩
பாரதத்தின் பண்பாட்டு வளர்ச்சிக்குத் தென்னாடு
தந்திருக்கும் உதவிப் பங்கு—கோவைகிழார் ௨௯௯
பாரதியாரின் உள்ளாற்றல்
—நாஞ்சில், திரு. கா. கணபதி ௨௪௦
பாரதியார் பண்டாரத்தார் இவர்களின் நினைவுக்
கூட்டக் கையறு நிலைகள் ௩௪௯
பால் பொங்குகவே—புலவர் அரசு ௨௪௮
"பெண்ணினத்திற் கொரு நல்லுரை"
(ஆவியுலகச் செய்தி) ௨௫௯
பெண்ணின் கடமை
—திருவாட்டி இராசேசுவரி அம்மையார் ௨௨௧
பெண்ணின் பெருமை (ஆவியுலகச் செய்தி) ௧௦௯
"பெயர் சொல்லாப் பெரும் புலவர்"
—திரு. கி. இரா. திருமலையப்பன், தென்காசி ௫௪௧
பெருவிழாச் சிறப்பு ௫௧௭
பேராசிரியர், மயிலை. சிவமுத்து அவர்கட்குப்
பாராட்டு விழா ௪௫௪
பொங்கல் வாழ்த்து (ஆவியுலகச் செய்தி) ௨௯௩
பொங்கல் வாழ்த்துக்குரிய விளக்கம்
(ஆவியுலகச் செய்தி) ௩௧௧
பொங்கற் புதுநாளில்!
—வித்துவான், சொ. சிங்கார வேலனார் ௨௩௯

பொருள் தலைப்புக்கள் கங-ச
மக்கள் பண்பாடும் மகளிர் நிலையும்—வித்துவான், சு. குமாரஸ்வாமி ஆச்சாரி, M. A. மயிலம். ருகக,ருருக
மணிவிழா மாண்பு—சித்தாந்த பண்டிதர், திரு. ப. இராமநாத பிள்ளை கூச, சுOக
மதிப்புரை — சஎ, கூரு, கசச, ககூஉ, உருசு, நOச, நருக, சOக, சசக, சகூஎ, ருசரு, ருகூந
மதுரை சைவசித்தாந்தப் புத்தக நிலையத் திறப்பு விழா ருகச
மதுரைப் பழம்பதி மாண்பு (ஆவியுலகச் செய்தி) சஎசு, ருOஎ
மயக்கொழிக—தொண்டன் உச
மலரில் மலர்ந்த மலர் —திரு. ஈ. வே. வேங்கடசுப்பிரமணியம் உஅ
மலைக்கண் பிறந்த மணி—திரு. ஆதிமுருகவேள் ருநO
மறைமலையடிகளார் மாண்பு —திரு. ஆ. பழ. குமரப்பன் கக
மறைமலையடிகளின் சொல்லாட்சி —வித்துவான், நெல்லை. க. சுப்பிரமணியன் ருஉஎ
மறைமலையடிகளின் தமிழ் நடை —வித்துவான், நெல்லை. க. சுப்பிரமணியன் நசுஅ
மறைமலையடிக்ள் நூல் நிலையத்திற்கு நிதி அமைச்சர் சுப்பிரமணியம் வருகை நஉO
மறைமலையடிகள் நூல் நிலையத்தின் முதலாண்டு நிறைவு விழா (தலையங்கம்) சகூ
மறைமலையடிகள் நூல் நிலையம் (சொற்பொழிவுகள்) உநரு
மறைமலையடிகள் நூல் நிலையத்தின் முதலாண்டு நிறைவு விழா வாழ்த்துரை (ஆவியுலகச் செய்தி) சுO
மாத்தமிழும் மகரவீறும்—புலவர், தேவி. கவிமணிதாசன் ருஎந
மிளகு பயருன கதை —திரு. சு. அ. இராமசாமிப் புலவர் உஅஅ
மீண்டு வந்தெய்திய திருத்தணிகை வெற்றி விழா நருரு
முதற் பாவலரும் பெருநாவலரும்—மதுரைச் சிவம் உநஎ
முந்நூல்— நாஞ்சில், திரு. கா. கணபதி ருகூO
மேற்கு செர்மனி பான் பல்கலைக் கழகத்திற்குத் தமிழ் எழுத்தொலி ஆராய்ச்சியாளர் சகூஎ

மொக்கணீசுரன் கதை
*திரு. சு. அ. இராமசாமிப் புலவர்* கூக
வடநாட்டில் தமிழ் பயிற்றல் ருகச
வாழ்விசைப்பா
*—தமிழாக்கம்: கு. பரமசிவன், எம். ஏ.* உருங
வித்துவான். திரு. மு. இராகவையங்கார்
அவர்கள் மறைவு ங0ங
வேண்டாப் பத்து—*நல்லிசைக்கவி இளங்கோவன்* ருகஅ
வேலிக்கு வெளியே (Life beyond death)
*(ஆவியுலகச் செய்தி)* உகங
ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக
பரமாசாரிய சுவாமிகள் கடிதம் சஎரு
Satement about ownership and other Particulars about the journal - 'Sentamil Selvi' as required by rule 8 of the Registration of News paper (Central) Rules (1956) ஙசகூ

# படங்கள்


அருளிசைப் புலவர் சிவத்திரு, பூ. மாரியப்ப அடிகள் ௪0௩

சிலம்புச் செல்வர். திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் ௩௫௫

சிவத்திரு. சேலம். கி. சுப்பராய பிள்ளையவர்கட்குப் பாராட்டு விழா:

சிவத்திரு. கி. சுப்பராய பிள்ளை,
கழகப்புலவர் திரு ப. இராமநாத பிள்ளை,
கழக ஆட்சியாளர். திரு. வ. சுப்பையா பிள்ளை. ௩௧௮

சிவத்திரு. கி. சுப்பராய பிள்ளையவர்கட்குப் பாராட்டு விழா:

(1) திரு. அ. உத்தண்டராம பிள்ளை தலைமை தாங்குதல்.
(2) பாராட்டு விழாவிற் கலந்துகொண்ட பெருமக்கள். ௩௧௯

சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநர். திரு. நெ. து. சுந்தர வடிவேலு, எம். ஏ., எல். டி. ௪௯௯

டாக்டர் சங்கரராசு அவர்கட்கு டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் பரிசு வழங்குதல் ௩௬௭

டாக்டர். C. R. சங்கரன் ௪௬௭

திருநெல்வேலி, திரு. இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை [ஆவியுலகத் தொடர்பாளர் (Auto writer)] ௮௯

நாவலர், கணக்காயர், டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் ௧௯௩

மங்கலகிழார் திரு. குப்புசாமி முதலியார் ௩௫௫

மணிவிழாக் கொண்ட மாண்பினர், திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள் ௧௮௬

நாவலர், சோமசுந்தர பாரதியார், ஆய்வறிஞர் சதாசிவ பண்டாரத்தார் நினைவுக் கூட்டம்:

(1) அமைச்சர். சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை உரையாற்றி நூலை வெளியிடுதல். ௩௩௬
(2) செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் பாரதியார் உருவப் படத்தைத் திறந்துவைத்துப் பேசுதல். ௩௩௬
(3) பேராசிரியர், கோ. சுப்பிரமணிய பிள்ளை பண்டாரத்தார் உருவப் படத்தைத் திறந்துவைத்துப் பேசுதல். ௩௩௭
(4) நாவலர் பாரதியார், ஆய்வறிஞர் பண்டாரத்தார் திருவுருவப் படங்கள் திறந்துவைக்கப்பட்டிருத்தல். ௩௩௭

மதுரை சைவசித்தாந்தப் புத்தக நிலையத் திறப்பு விழா :

(1) புத்தக நிலையத்தைக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் திறந்து வைத்தகாலை எடுத்த படம். ௫௪௯

(2) கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள், நிலைய உரிமையாளர் மீ. சண்முகம் அவர்கள், வருகை தந்த பெருமக்கள் ஆகியோர்.

மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு நிதியமைச்சர் வருகை தந்தகாலை கழக ஆட்சியாளர்களும் அலுவலர்களும் வரவேற்றல். ௯௨0

மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு வருகை தந்த நிதியமைச்சரவர்கட்குக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை, அடிகளார் படித்துப் பாதுகாத்து வைத்த நூல்களைக் காட்டுதல். ௯௨௧

மறைமலையடிகள் நூல் நிலைய ஆண்டு விழாக் காட்சி : ௪௯

டிை விழாவில் சங்க அமைச்சர் திரு. வ. சுப்பையா பிள்ளை யவர்கள் வரவேற்புரை நிகழ்த்துதல். ,,

டிை விழாவில் உயர்நீதி மன்ற நடுவர் திரு. வி. சுப்பிரமணிய நாடார் அவர்கள் தலைமையுரை ஆற்றுதல். ,,

டிை விழாவில் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியாரவர்கள் மறைமலையடிகள் வரலாற்று நூலை வெளியிடுதல். ,,




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, ஆவணி | பரல் |
|---|---|---|
| ௩௪ | செப்டம்பர், 1959 | ௧ |

# தனித்தமிழ்ப் பகைஞர்

ஆருயிர்கள் "ஓரறிவு முதல் ஆறறிவு" ஈறாகச் சொல்லப்படும் அறுவகையான உணர்வுநிலை வேறுபாடும், ஊர்வன முதல் நிலைத்திணை ஈறாகச் சொல்லப்படும் எழுவகை உடல் நிலை வேறுபாடும் உள்ள பல்வகைப் பிறப்புக்களை விழுமிய முழுமுதல்வன் திருவருளால் பெறுகின்றன. பெற்று இருள்சேர் இருவினையும் நீங்கி, அருள்சேர் இறைபணியினோங்கிச் சிவபெருமான் திருவடியின்கண் சேர்ந்து என்றும் பொன்றா இன்பம் நுகர்கின்றன. இவ்வின்ப நுகர்வு எய்துதற்கு வாயிலாகிய ஏற்றஞ்சால் பிறப்பு மக்கட் பிறப்பேயாகும். ஏனைப் பிறப்புக்களினின்று மக்கட் பிறப்பு உயர்ந்ததென்பது எதனால் பெறப்படுகின்றதெனின்? ஏனைப் பிறப்புக்களான் எய்தமுடியாத விழியினும் சிறந்த அழிவிலா மொழி ஒன்றினானேயாம்.

உயிர்க்கு உடம்பு சிறந்தது. அவ்வுடம்பினைப் பெறுதற்குத் துணைக்காரணமாய் அமைந்த தாய் தந்தையர் அவ்வுடம்பினும் சிறந்தோராவர். அவ்வுயிரினும் சிறந்ததொன்று அதற்கு உண்டெனின், அஃதொழுக்கமேயாம். இவ்வுண்மை வரும் செந்தமிழ்ப் பொதுமறையானுணரலாம் :

"ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்." —திருக்குறள், ௧௩௧.

அவ்வொழுக்கத்தினும் சிறந்தது ஒன்று உண்டெனின், அஃது என்றும் இயல்பொடு நின்று துணைபுரியும் மொழியே யாம். அம்மொழி தாய்மொழி எனவும் சேய்மொழி எனவும்

இருவகைப்படும். தாய்மொழியென்பது தாயினால் பிறந்த நாள் தொட்டு பயிற்றுவிக்கப்பட்டுப் பயிலப்பெறும் பிறப்புமொழி. ஈண்டுப் பிறப்பென்பது உடலுயிர்ப் பிறப்புப்போல் உணர்வுயிர்ப் பிறப்பாகும். இதனையே காரைக்காலம்மையார் வருமாறு அருளிச்செய்தனர் :

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழு
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்." —அற்புதத்திருவந்தாதி, க.

அம் முறையினால் தாய்மொழி நற்றாயினையொக்கும். சேய்மொழி என்பது தொலைவிலுள்ள மொழியென்பதாகும். சேய்மை-தொலைவு. அம்மொழி அறிவு பெருகற்பொருட்டுப் பிறர் கருத்தினையும் ஒப்புநோக்கி ஆய ஆசானால் அறிவுறுத்தப்படுவதாகும். அங்ஙனமன்றியும் வந்தேறியும் சென்றேறியும் வேற்றுமொழியாளரோடு கலப்புற நேர்ந்தமையான் தாமே பயிலப்பெறுவதுமாகும். இம்மொழியினை ஒருபுடையொப்பாகச் செவிலியெனலாம். தாய்மொழியினைத் தனிமையும், தூய்மையும், இனிமையும், மேன்மையும் எஞ்ஞான்றுங் கெடாது நின்று நிலவுமாறு நூலானும், உரையானும், நுண்மையமைய நோன்மையொடு கற்பிப்பதானும் குறிக்கொண்டு வளர்த்துக் காத்துவரும் நூலோரும், கணக்காயன்மாரும் அம்மொழிக்குத் தந்தையராவர். தாய்மொழியையும் அம்மொழியினை உயிரினும் சிறப்பாகக் காத்து வளர்த்துவரும் தலைமைசான்ற நூலாசிரியன்மாரையும் மனமார நினையாது, வாயாரப் புகழாது, தலையார வணங்காது புறக்கணிப்போரும், மன்றிற் பழிப்போரும் என்றும் செய்ந்நன்றி கொன்ற தீயரினும் தீயராவர். என்னை! மொழிவளம்படுத்தல் செய்ந்நன்றியினும் சிறந்த உய்ந்நன்றியாகும். உய்ந்நன்றி என்பது ஆருயிரின் உய்விறுக்கு முதற்காரணமாயுள்ள விழியினும் சிறந்த என்றும் அழியா மொழியினை ஈடும் எடுப்புமில்லாப் பீடுடன் நின்று நிலவச் செய்து நெஞ்சத்தூட்டும் பெரும் நன்றியாகும்.

மாநதரையும, அமமாநதா வாழ மண்ணினையும் மாண்புடன் எண்ணி அழைப்பதும் சிறப்புச் செய்வதும் ஆய்தற்கமைந்த தாய்மொழிப் பெயரானேயாம். இம் முறைமை உலகத்திலுள்ள எல்லா மக்களுக்கும் நாடுகளுக்கும் இயைந்த தொன்றேயாம். அம்முறையில் நாம் வாழும் தொன்மையும் நன்மையும் ஒருங்கமைந்த நன்னாடு தமிழ்நாடு என்றும் நாம் தமிழ் மக்களென்றும் அழைக்கப்படுகின்றோம். இங்ஙனமே ஒவ்வொரு நாடும் மக்களும் அழைக்கப்படுகின்றனர் என்பது உலகறியுண்மையே.

உலகத்தில் ஏறத்தாழ இரண்டாயிரத் தெழுநூற்றைம்பது மொழிகள் வழங்கி வருகின்றன என்ப. இவற்றுள் நாவலந் தீவாகிய நம் பரத கண்டத்தில் மட்டும் ஒரு நூற்றெழுபத் தொன்பது பெருமொழிகளும், ஐந்நூற்று நாற்பத்து நான்கு கிளைமொழிகளும் வழங்கி வருகின்றன. மேற்கூறிய ஒருநூற் றெழுபத்தொன்பது மொழிகளுள் ஒரு நூற்றுப் பதினாறு மொழிகள் நம் பாரதநாட்டின் கீழக்கோடியிலும் வடகிழக்கு எல்லையிலும் வாழும் மலைமக்கள் பேசும் திபேத்து—சீனமொழி இனத்தைச் சார்ந்த மொழிகளாம்.

இலக்கிய வளமொழிகளாக நம்பரதகண்டத்தில் விளங்கு பவை: தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், மராத்தி, குசராத்தி, உருது, இந்தி, வங்காளம், ஒரியா, சிந்தி, பஞ்சாபி, காஃச்மீரி, நேபாலி, அசாமி, சமஃச்கிருதம் என்னும் பதினாறு மொழிகள் என்ப. இவற்றுள் தமிழ் முதலான பதினைந்து மொழிகளும் உலகியல் வழக்கினும் நூல் வழக்கினும் தோன்றிய நாள்தொட்டு இன்றுகாறும் நின்று நிலவுவன. ஆனால் சமஃச் கிருதம் ஒன்று மட்டும் உலக வழக்கழிந்தொழிந்து நூல் வழக் கில் மட்டும் அடங்கியிருக்கின்றது' நாடுமின்றி நாட்டஞ்சார் மக்களுமின்றி ஏட்டளவில் பூட்டப்பட்டிருக்கும் மொழியினை அவ்வளவில் இருக்கவொட்டாது இருவகை வழக்கிலும் பெரு மிதத்துடன் வாழ்ந்து எழிலுடனியங்கும் மொழிகளுள் ஒரிரு சொற்களைச் சில்லோர் தம் அறியாமையாற் புகுத்திச் செறிமகிழ் கொண்டு நெறிகோடித் திரிகின்றனர். என்னே இவர்தம் செயல் இதனால் இவர்கள் அம்மொழியினிடத்துப் பிறமொழி யாளர்கட்கு நீங்கா வெறுப்பினை நேர்விக்கின்றனர். அம் மட்டோ? தாமும் தம் தாய்மொழியினிடத்து மெய்ம்மைப் பற்றில்லாதவராகின்றனர். மேலும் தாய்மொழிப் பகைஞர் என நடுநிலை திறம்பா வடுவறு சான்றோரால் பழிக்கப்படுந் தன்மை யினைத் தமக்குத் தாமே ஆக்கிக்கொள்கின்றனர். இதனால் இவர்கள் அம்மொழிக்குச் செய்ததாகக் கருதும் சிறப்புத்தான் என்னையோ! சான்றோர் பழிக்கும் வினையினைச் செய்யலாகா வரும் தமிழ்மறையா னுணர்க:

"ஈன்றாள் பசிகாண்பா னாயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை." —திருக்குறள், ௬௫௬.

சான்றோன் எனக் கேட்டவிடத்து ஈன்றபொழுதிற் பெரி துவத்தல் தாயினியல்பு. அத்தகைய தாயே தன் மகன் முயற்சி யின்றி நல்கூர்வானாயின் அவனைப் பிறன்போல் மதிப்பள். இவ் வுண்மை வருமாறு :

“ அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.” —திருக்குறள், ௧0௪௭.

இந்தமுறையில் தாய்மொழித்தாயும் தம்மக்கள் முயற்சி யின்றிப் பிறமொழிச் சொற்களைப் பிச்சையேற்று வேண்டா வகையாகத் தன்கட் புகுத்தித் தன்னை இழிவுபடுத்திவரின் எங்ஙனம் ஆற்றுவள்? எங்ஙனம் பொறுப்பள்? பிறமொழிச் சொற்களை ஏற்பதால் தனித்தியங்கும் தன் ஆற்றல் அழியுதே என்று விழிநீருகுத்து வருந்துவள். மேலும் தாம் அருஞ் சான்றோர் தம் பெறற்கரும் பெருமுயற்சியால் பெற்று வளர்த்துப் துப் பெரும்பாடுபட்டுப் பேணிய நம் அருமை மக்களை இறப்பித் துப் பிறமக்களை வலிதிற் புகுத்திச் சுமப்பிக்கின்றனரே என்றும் நைவள். அம்மட்டோ? ‘ஊரார் நாய்க்குப் பூட்டிடினும் உடையா ரையே நோக்கும்’ என்னும் மொழியினையும் கருதுகின்றிலரே எனக் கலங்குவள்.

மற்றொன்று: ஒரு மகன் தாயினிடத்து விலைவரம்பில்லா மணிகுயிற்றி விலங்கி வில்லுமிழும் பொற்பூணினை வேண்டு மென்றே வலுகட்டாயமாக அகற்றிவிட்டுப் பிறர்பால் பிச்சை யேற்றுக் கொணர்ந்த போலிக்கற் பதித்த மெருகிட்டு விளக்கிய பித்தளை யணியைப் பூட்டுவிப்பின் அவள் எங்ஙனம் மகிழ்வள்? மேலும் குறைவிலா நிறைவுடனிருக்கும் ஒரு தாயின் உடலுறுப் புக்களை வெட்டிச் சிதைத்து அவற்றிற்கு மாறாக மரத்தாலும் தோலினாலும் அமைத்துப் பொருத்தியணைத்து முன்னையினும் வளமுற வளர்ந்திருக்கிறது, செழித்திருக்கிறது, பொலிந்திருக் கிறது, சிறந்திருக்கிறது என்று நினைந்து பொய்ப்பால் குடித்துக் களிப்பின் அத்தாய் என் நினைப்பள்? எங்ஙனம் வாழ்வள்?

ஒருமொழியினை வளமுறச் செய்தற்கு அம்மொழியின்கண் வாய்ப்பும் ஆற்றலும் இன்றெனிற் பிறமொழியின்கண் பிச்சை ஏற்பதும் பீடுடைத்தேயாகும். தமக்கென நிலமிலாரும் களர் நிலமுடையாரும் பிறர் நிலம் பெற்றே வாழல்வேண்டும். நம் தாய்மொழியாம் தமிழ்மொழி எல்லாவளமும் ஆற்றலும் நிறை வும் உடையது. புதுக்கருத்துக்களுக்கு வேண்டும் புதிய புதிய சொற்களைப் புதுமையும் வியப்பும் பொருந்த அவ்வப்போது ஆக்கற்கு வேண்டும் அழியாவளமுடையது. இஃது இலையுதிர் வின்றிக் குலையுடன் நிற்கும் வாழைபோன்றது. தமிழ் மக்கள் சிறிது கருத்தூன்றி முயற்சி எடுத்துக்கொள்ளுதல் ஒன்றே வேண்டுவது. எடுத்துக்காட்டாக நாம் வழங்கிவரும் உருளைக் கிழங்குக்கு அமைத்திருக்கும் பெயர் தமிழின்கண் ஆற்றலா லமைந்த பெயராகும். அங்ஙனமமைந்ததால் தமிழ் வளராது தளர்ந்து விட்டதென்று எவரேனும் கூறுவரா? அன்றிப் பிற

மொழிப் பிச்சையின்றி மடிந்துவிட்டதென்று மனங் கலங்குவரா? உருளைக்கிழங்குக்குப் பிச்சைச்சொல் பெய்திருத்தல் வேண்டுமாயின் 'பொட்டட்டோசு' என்ற (Potatoe) அயன்மொழிச் சொல்லினை மயலுறப் புகுத்தியிருத்தல்வேண்டும்.

சங்ககாலச் சான்றோர் எத்துணை விழிப்பாகத் தமிழின் கடன்படா வாழ்க்கையினையும் தனித்தியங்கும் ஆற்றலினையும் ஓம்பியுள்ளாரென்பதனை நாம் கருத்திருத்துதல் வேண்டும். எத்துணை எடுத்துக்காட்டுக்கள் காட்டல்வேண்டும் எனினும் காட்டுதல் இயலும். ஒன்றிரண்டு காட்டுதும்.

'சாம்புநதம்' என்னும் சொல்லுக்குத் திருமுருகாற்றுப் படையின்கண் வரிபதினெட்டில் "நாவலொடு பெயரியபொலம்" எனவும், 'திருதராஷ்டிரன்' என்னும் பெயர்க்கு "வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற முகத்தவன்" எனவும் வழங்கியுள்ளமை காண்க. அவர்தம் மரபினராகிய நாம் அவர் போன்று கருத்துடனும் விழிப்புடனும் வாழாது பிச்சையெடுக்கும் கொச்சையராக வாழ்தல் அறிவும் ஆற்றலும் செறிந்த நல்லோர் எனப் பெயர்பெறவோ? அல்லோரெனப் பெயர் பெறவோ? அறிந்து கூறுமின். இவற்றை மனங்கொளாது வாய்க்கு வந்தவாறு பேசுவதும், எழுதுவதும் மேற்கொண்டால் "நலத்தின்கண் நாரின்மை தோன்றுத"லாகாதா? எம்முறையாக அயன்மொழிச் சொற்கள் புகுந்தன என்பதைக் காண்பாம்: சங்க இலக்கியத்தின்கண் நூற்றுக்கு இரண்டு விழுக்காடும், கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரங்களில் நூற்றுக்கு நான்கும், ஒன்பதாம் நூற்றாண்டுவரை வெவ்வேறு காலங்களில் வாழ்ந்த நாயன்மார் ஆழ்வாராதிகள் அருளிச்செய்த நூல்களில் நூற்றுக்குப் பதினைந்துமாகக் காணப்படுகின்றன என்ப.

கி. பி. பத்தாம் நூற்றாண்டு தொடங்கிச் சமணர்களால் புகுத்தப்பெற்ற மணிப்பிரவாளம் என்னும் போலிப் பொய்ப் புனைவால் வரைதொகையின்றிப் புகுவவாயின. கி. பி. பதினைன்கில் வில்லிபுத்தூராரும், கி. பி. பதினைந்தில் அருணகிரியாரும், பின்னுள்ளாரும் நனிமிகப் புகுத்தினர். அயன்மொழியாகிய சமஃச்கிருதம் புகுந்த வழிகளையுன்னின், க. பிராகிருதம் பேசும் வடநாட்டு மக்களுடன் நேரே பேசிப் பழகிய தமிழ்மக்கள் கடன் வாங்கினவை, உ. வடமொழிகற்ற வடநாட்டு அறிஞர்களால் தமிழ் நூலின்கண் புகுத்தப்பெற்றமை, ங. வடமொழி கற்ற தமிழறிஞர்கள் புகுத்தியவை, ச. மணிப்பிரவாளமென்னும் மொழிநடை விழைந்த களிஞரால் புகுத்தப்பட்டவை எனப் பகுக்கலாம். இம்முறையானே புகுந்த அயன்மொழிச் சொற்க

ளால் தூய தமிழ்மொழி அழிந்து அடங்கியொழியுமோ என்னும் ஐயம் நல்லார் பல்லோருள்ளத்தும் தோன்றும் நிலை ஏற்பட்டது. மேலும் அயன்மொழி மயலாலும் ஆய்வின்மையாலும், தனித் தமிழ்ப் பற்றுக்கோடல் தம் தலைக்கடன் என்னும் மெய்ம்மையினை நாடாமையாலும் "ஒன்றேயாயினும் தனித்தமிழுண்டோ" என்னும் ஒவ்வாவுரையும் உலவத் தொடங்கிற்று. அம்மட்டோ? தூய தனித்தமிழ்ச்சொற்களையும் சேய அயன்மொழிச் சொற்களாக மயல் கொண்டு வழக்கிடுவாருமாயினர். அத்தகைய சொற்களுள் சில வருமாறு: காலம், உலகம், முத்து, மீன், நீர், குடி, ஆணி முதலியன.

தமிழரால்—தமிழ் கற்றோமென்று அயன்மொழி மயலாம் தருக்கினரால் தமிழ் வடமொழியினின்றும் பிறந்ததென வாய் கூசாது பேசவும், கைசலியாது எழுதவும் ஏற்பட்டுவிட்டது. இந்த நிலையில் மேலைநாட்டறிஞர், பன்மொழிப்புலவர், அம்மொழிகளை ஒப்பு நோக்கி நடுநின்று உண்மைகாணும் வேட்கையொன்றே குறிக்கோளாகக்கொண்டு உள்ளவாறும் வடுவறு காட்சியர், ஆகிய டாக்டர் கால்டுவெல், போப் முதலிய துரைமக்கள் தமிழின் ஏற்றத்தையும், தனித்தியங்கும் ஆற்றலினையும், தொன்மையினையும், உயிர்ப்புச்செட்டாம் நன்மையினையும், இயற்கை, எளிமை, இனிமை, தெளிவு முதலிய மேன்மையினையும் மேலும் மேலும் வலியுறுத்து வரைந்து நிறுத்துவாராயினர். ஒரு சொல்லைத் தூய தனித்தமிழ்ச் சொல்லென்று உறுதி கொள்ளற்காம் வாயில்களாய் டாக்டர் கால்டுவெல் ஒப்பியல் இலக்கணத்திற் கண்டபடி வருமாறு: க. ஒரு சொல் மட்டும் அடிச்சொல்லும் இனமான சொல்லும், அதிலிருந்து தோன்றி வளர்ந்த சொல்லும் இல்லாமலிருக்க, அதற்கினமான, அதிலிருந்துண்டான சொற்கள் தமிழ், தெலுங்கு, கன்னடமுதலான திராவிடமொழிகளில் காணப்படின் அதனைத் தமிழ்ச்சொல் அல்லது திராவிடச்சொல் எனக்கோடல். உ. ஒரு சொல்லின் பொருளை உணர்த்த வேறு பல சொற்கள் வடமொழியிலிருக்க அப்பொருளுக்குரிய சொல்லொன்றுமே தமிழ் முதலிய திராவிட மொழிகளில் காணப்படுமானல் அதனையும், ௩. ஒரு சொல் வடமொழியில் மட்டும் காணப்பட்டு, அம்மொழிக்கினமான கிரேக்கம், இலத்தீன், செர்மன் முதலிய ஆரிய மொழிகளில் காணப்படவில்லையானாலும் அச்சொல் திராவிடமொழிகளிலெல்லாம் வழங்குமானாலும் அச்சொல்லையும், ச. ஒரு சொல்லின் பிறப்பைப்பற்றி வடநூலார் கூறுவது நம்ப முடியாததாயும், வேடிக்கையாயும் இருக்க, தமிழ்நூலார் கூறுவது பொருத்தமாயின் அச்சொல்லையும், ரு. ஒரு சொல் திராவிட மொழிகளில் தக்கதாகவும், அடிச்சொல்லுடன் தொடர்புடையதாயும் அமைய

வடமொழிக்கண் அங்ஙனம் அமையாவிட்டால் அச்சொல்லையும்,
௬. வடமொழியில் பெருமதிப்புள்ள திராவிடமொழிப் புலவர்கள் ஒரு சொல்லைத் தமிழ்ச்சொல் அல்லது திராவிடச்சொல் என்று கூறினால் அச்சொல்லையும் தமிழ்ச்சொற்கள் அல்லது திராவிடச் சொற்களென்று கோடற்கு எட்டுணையும் ஐயமின்றென்பதேயாம்.

கடைக் காலத்தில் தூய தமிழின்கண் அயன்மொழிக் கலப்புமிக்கு அழகிய முகத்தில் அருவருப்பினைத் தரும் அம்மைத் தழும்புபோன்றும், நிலவொளிகாலும் முழுமதியின்கண் கரும் பாம்பு பற்றும் மழுக்கம்போன்றும் மங்கா மாசு தங்குவவாயின. அவற்றைக் கண்டு ஆற்றுறு அல்லலுற்றழுங்கிய மெய்ம்மைத் தமிழ்ச் சான்றோர்கள் சிலராவர். அவருள் தலையாயவரும் தம் பெயரையே 'மறைமலையடிகள்' என மாற்றி வழங்குவித்து ஏனை யார்க்குத் தனித்தமிழ் மாண்பினைக் கட்டுறுத்தி யோம்புமாறு வழிகாட்டியவரும் ஆசிரியர் மறைமலையடிகளாராவர். அவர் களின் செய்யுள் நூல், உரைநடை நூல் முதலியவற்றை நன்கு பயின்றவர்கள் செந்தமிழின் சீரிய தன்மையினையும், தனித்தியங் கும் ஆற்றலினையும், இயற்கை இனிமையினையும், உளங்கவர் வனப்பினையும் செவ்விதினுணர்ந்து உவகை மிக்குக் கைக் கொள்வர். ஆழ்கடல் முத்து வருந்திப் பெறுவது; வனப்பு மிக்கது; வாழ்வு தருவது; மதிப்புப்பெறுவது. போலி முத்தி னுக்கு இவை ஏதுமின்று ஒன்றினை அணிபெறச் செய்வதே செம்மைப் பணியாகும். ஊக்கமில்லார் எங்ஙனம் ஆக்கமெய்து வர்? முயற்சியன்றோ திருவினையாக்கும்! முயலாது வைத்துத் தனித்தியங்கும் தமிழின் சிறப்பாற்றலைக் கெடுத்துக் கலப்பு வேண்டாக் கன்னித்தமிழின்கண் மனம்போனவாறு கலந்து இனத்தைக் கெடுக்க எண்ணுவது எங்ஙனம் ஏற்புடைத்தாகும்?

ஒவ்வொருவரும் தம் தாய்மொழிப் பற்றுடன் இருப்பதற்கு மாறாகச் சிலர் அப்பற்றின்றி நுனிப்புல் மேய்வார் போன்று தம்மைத்தாமே பெரிதுங் கற்றவராகத் தருக்கித் தம் புல்லிய தமிழே நல்லியற்றமிழ் என நினைந்து நல்லியற்றமிழினை உயிரி னும் சிறப்பாக நாளும் ஓம்பிய தமிழ்ப்பெருஞ் சான்றோர்களை யும், அவர்தம் விலைவரம்பில்லாச் சீரிய நூல்களையும் எண்ணிப் பாராது பழித்துத் திரிவாரும் உளர். அவர்தம் புன்செயல் அவர்க்கே நீங்காப் பழியினையும் தாங்காத் துன்பினையும் தலைத் தலைத்தருவதாகும்.

இந்த நிலை எதிர்பாராத வேண்டத்தகாத முறையில் "தமிழ் எழுத்தாளர் சங்கத்தின்" ஏழாவது மாநாட்டு இரண்டாவது நாள் கூட்டத்தில் ஒருவரால் நேர்ந்தமைக்கு நனிமிக வருந்துகின்றோம். கூட்டம் 2-8-'59-இல் நிகழ்ந்தது. அக்கூட்டத்திற்கு டாக்டர்

அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள் தலைமை பூண்டார்கள். அக்கூட்டத்தில் திரு. ரா. தேசிகன் அவர்கள் தெரிந்தோ தெரியாமலோ வாய் சோர்ந்து 'மறைமலை தமிழ் தமிழாகுமா? உரைநடை யொன்றும் புரியவில்லையே, பிறமொழிக் கலப்பில்லாத் தமிழ் சிறக்குமா?' என்றெல்லாம் பேசுவாராயினர்.

அதனை மறுத்துத் தலைமைபூண்ட திரு. செட்டியாரவர்களே உணர்ச்சி ததும்ப உரை நிகழ்த்தியுள்ளார்கள். அவர்கள் கூறிய கழற்றுரை, 'மறைமலையடிகளாரையும் அவர்தம் மாண்புமிக்க தேனினுமினிய உரைநடையினையும் இழித்தும் பழித்துந் தூற்றுவாரும் தமிழகத்திலிருக்கின்றனரா! தமிழ் நாடும் இடங்கொடுத்திருக்கிறதே! எழுத்தாளர் சங்கத் தொடர்பும் ஏற்பட்டிருக்கின்றதே!' என்பனவாகும். 'இங்கிலையில் எழுத்தாளர் சங்கம் இயங்குமாயின் உண்மைத் தமிழாசிரியன்மார் அச்சங்கத்தினின்று விலக நேரிடு'மெனவும் கூறினர். இதனையடுத்துத் திருவாளர்கள் கா. அப்பாத்துரையவர்களும், ம. பொ. சி. அவர்களும் வன்மையாகக் கண்டித்தனர். இறுதியில் அச்சங்கத்தின் நிலைத்தலைவரும் மாநாட்டுத் தலைவரும் ஆகிய திரு. மீ. ப. சோமசுந்தரம் அவர்களும் கழறிக் கூறியதுடன் இவை தனிப்பட்டவர்களின் கருத்தென்றுஞ் சாற்றினர்.

'தமிழ் நாடு, நவஇந்தியா, தினத்தந்தி' முதலிய நாளிதழ்களும் 'செல்வி' முதலிய திங்களிதழ்களும் தனிப்பட்ட கழகங்களும், அறிஞர்களும், அன்பர்களும் வன்மையாகக் கண்டித்து வரைந்தும், தீர்மானங்கள் செய்து வெளிப்படுத்தியும் கழறியுள்ளன. கழறுதல் - எச்சரித்தல்.

இதுபற்றிச் சென்ற 'செல்வி'யில் குறிப்பிட்டுள்ளோம். இச்செல்வியிலும் "மறைமலையடிகளார் மாண்பு" என்னும் தலைப்பில் செட்டிநாடு வேகுப்பட்டி சை. சி. நா ப. கழகமும், தாரா புரம் பெரிய கடைவீதி 'விவேகானந்த சபை' "தீர்மானங்கள்" என்னும் தலைப்பிலுமாக இருபெரும் கட்டுரைகள் வெளிவருகின்றன. இவற்றால் யாமும் இம்மட்டில் நிறுத்துகின்றாம்.

இத்தகைய சிறுசிறு தூறல்கள் இடையிடையே வருவன தனித்தமிழ் ஆர்வத்தினரைத் தட்டியெழுப்பி ஊக்குவிப்பதும், உண்மைத் தமிழர் எவர் எவரென்பதை எடுத்துக்காட்டுவதும் செய்வ ஆகும். பைங்கூழினுக்குக் களை தோன்றுவது போன்று பைந்தமிழினுக்குக் கலப்பு வேண்டுமென்னும் கருத்துடையாருமாவர். பைங்கூழ்க்காவலன் களைகண்டஞ்சான். களைகட்டோம்ப லஞ்சான். 'கேட்டினுமுண்டோருறுதி'யென்னும் நாட்டியல் மொழியினையும் நன்குணர்வான்.

# *திருமணத் திருவாழ்த்து

மணமகன் :
நிறைநாட்செல்வன்
முத்துக்குமாரசாமி, எம்.ஏ.,

மணமகள் :
நிறைநாட்செல்வி
வ யி ர ம ணி ய ம் மை

தென்னகத்துத் திலகங்காள்!

ஓர் ஆயிரத்தி ஒரு நூற்று முப்பத்து நான்காமாண்டு ஆனித் திங்களில் அருமையுட னழைக்கின்ற பொன்னுளாம் புதன்நல் நாளில்தேதி பத்ததிலே, நீங்கள் திருவருட்டிறத்தால் புத்துலகச் சிற்பிகளாய்ப் பொலிவுற விளங்கத் திருத்தலமாம் திருப் பரங்குன்றத்தில் திருவேளருளால் திருமணம் நடக்கும் அன்று நாம் அவனருளாலுரைத்ததே என்பது நுங்களின் நலனுக்கே.

வெற்றிகொண்ட வீரரே!

நும்தம் கருத்திற்கோ ரியைந்த கருவிழியாள் (காதிலே போடுகின்ற உயர்தரத்து இனமாம் வைரம் என்பது, உருக்கிக் கொண்டு தங்கத்தை எடுத்துவிடலாம், வைரத்தைத் தனியாகப் பிரிக்க இயலாது என்ற கருத்துத் தாமறிந்ததே.) தாம் எம் மங்கையர்க்கரசியின் அருந்தவச் செல்வியாம், வைரமணியாம் எங்கள் குலவழிக்கொடியுடன் கூடிவாழ்ந்து செயற்கரிய செயற் பல செய்து செம்மையுடன் சிறக்கவாழ எம் அண்ணலாம் ஆனந்தக் கூத்தனின் அருள் என்றுமே அவன் திறத்தாலுண்டு. செல்வியின் செம்மையறிந்து தாம் எம்மங்கையர்க்கரசி தன் குலக்கொடியாள் வைரமணி தன் இயற்கைக்கேற்ற குணாளனென்றறிந்துதாம், கன்னியை உமக்குக் கைப்பிடித்துத் தருகின்றோம். செல்வியவள் தம்மோடு தாமியைந்து இல்லறம் இனிது நடாத்திச் செல்வங்களை உலகுக்கீந்து உறுதியுடன் உற்றதோர் துணையாய்ச் செம்மையுடன் சிறக்க வாழவே, எம்தம் அருட்கடலைப் பாமாலையாற் பன்முறை வணங்குகிறேன்.

தொல்லுலகிற் றெளிக்கின்ற வைரமே!

நீ என்றுமே எம்தம் குலத்திற்கோர் நல்விளக்காய் நானிலத்தில் நாதனுடன் நாட்டோர் நாண, நல்லறமாம் இல்லறத்தை

---

* திருமணத்திற்கு முந்தியநாள், 1945-ல் காலஞ்சென்ற மறைமலையடிகளார் மகளார் திருவரங்க நீலாம்பிகையம்மையார் ஆவியுலகினின்று நெல்லையிலுள்ள ஆவியுலகத் தொடர்பாளர் ஒருவர் வாயிலாக உணர்த்தி எழுதச்செய்து (Auto writing) அனுப்பியதாகும்.

நலமுறவே நடத்தி மாண்புறு மக்கட்பேறு பெற்றுப் பெரு வாழ்வு வாழவே எம்தம் கருத்தே. செல்வியே, நீ செல்வனின் நலன்பேணி நாக்குக்கு உருசியும், வயிற்றிற்கு வளமுமுற உணவு சமைத்தும், களைத்து வரும் கணவனின் கருத்தறிந்து உபசரித்துக் களைப்பதைப் போக்கியும் கருத்திற்கோ ரின்னிசையாய் உன் நாதம் அவர்தம் செவியிலுறச் சீர்கொண்ட செல்வியாய், அவர் தம் நலனே உன் நலனென்றிதயத்திடம் பெற்று நீ நற்பெயரை எடுக்கவே எங்கள் விருப்பமென்பதை உனக்கு எடுத்துரைக்

செல்வரிற் சிறந்தவரே!

செல்வியவள் தன் நிழலே உம்தம் இதயத்து நிழல்பெற்று, அன்புடன் அவளை ஆதரித்து, நல்லறமாம் இல்லறத்தை நலனுடன் நடத்தினுல் என்றுமே உம்தமக்கு ஓர் உயரிடமுண்டு என்பது என்போன்ற பெண் எடுத்துரைக்கத் தேவையில்லை. இருப்பினும் எமக்குமோர் கடமையுண்டு என்பதும், தாமறிந்ததே. செல்வியின் செம்மையறிந்து அதற்கேற்பச் செல்வியின் கருத்துச் சரியானுல் ஏற்றும், இல்லையேல் எடுத்துரைத்தும், இல்லறத்தை நல்லறமா இயக்கும் தன்மை ஆண் மகனுக்கே என்பதை நான் எடுத்துச் சொல்லித் தாம் எம்மைக் குறைகூற நான் விரும்பவில்லை. எனினும் எம்தம் கருத்தை எடுத்துரைக்கும் உரிமை எனக்குண்டு. தாமென்றுமே தம் இல்வாழ்க்கைத் துணைவியாம் எங்கள் குலக்கொடி வைரமணியுடன் வையத்தினைந்து வாழ அம்மை பங்கனைப் பணிவுடன் இறைஞ்சுவேன்.

மங்கைதன்னில் மாணிக்கமே!

வைரமணியென்று உனக்கு நாங்கள் பெயரிட்டதற்கிணங்க, நீ என்றுமே, எங்கள் குலத்திற்கோர் இல்விளக்காயும், வையத்திற்கோர் வைரமாயும், நீ உன் நாதனுடன் இயைந்து நல்லறமாம் இல்லறத்தை அன்புடன் நடத்தி வெளிச் சொல்லுக்குச் செவி சாய்க்காது வீண் சந்தேகத்திற்கு இடம் கொடாது, கணவனே கண்கண்ட தெய்வமென்ற கருத்துத்தான் உன்னிதயத் தெழவேண்டும்; நிலைபெறவேண்டுமென்பதே என் கருத்து.

தொன்மைகொண்ட தென்நாட்டுத் திலகங்காள்!

தங்களுக்கு என்னுலியன்றளவு எடுத்தியம்பினேன். நீங்கள் செல்வரும் செல்வியும் இயைந்து செவ்வனே நல்லறமாம் இல்லறத்தை நடாத்தி, வரும்விருந்துபசரித்தும், இன்சொல்லே என்றும் உங்களிதயத்தெழும் குரலும், தங்களகமதிலே அகமென்ற அரக்கனுக் கிடங்கொடாதும் கற்பெனப்படுவது இரு

சாரார்க்கும் இயைந்ததே என்ற தங்களின் இதயத்திலோரூற்று என்றுமே சுரந்தும் பொறுமையென்ற சிறந்த அணிகளை அணிந்தும், நாட்டிற்கு எடுத்துக்காட்டாய்த் திறம்பட வாழவே எம்தம் கருத்து என்பது மீண்டும் அறிவிக்கிறேன்.

திருமணத் தம்பதிகாள்!

நீங்கள் எல்லா நலனுமுற நான் திருப்பரங்குன்றத்தமர்ந்துறையும், தெய்வயானை அம்மையை ஆட்கொண்ட அருட்பெருங்கடலாம் திருவருளை இன்முகத்தான் இறைஞ்சி வேண்டுகிறேன். திருவருள் திறத்தால் நீங்கள் நெடுங்காலம் அன்புடன் நகமும் சதையதுபோல் நீங்காது நெறி தவறாது, எஞ்ஞான்றும் அவன் சிந்தையே தங்கள் கருத்திலோடத் தென்னகத்துத் திலகங்களாய் வாழ எம்மங்கையற்கண்ணிபங்கனும் அருளுடை அண்ணலாம் ஆனந்தக்கூத்தனை இறைஞ்சி வாழ்த்துகின்றேன்.

இப்படிக்கு,

திருநெல்வேலி, 23-6-1959 — தம்தம் உறவால் உந்தப்பட்ட மங்கை நீலாம்பிகை, திருவரங்கம் பிள்ளை இல்லறக்கிழத்தி, ஆவி உலகவாசி.

---

# மறைமலை அடிகளார் மாண்பு

[திரு. ஆ. பழ. குமரப்பன்]

தோற்றுவாய்: தமிழ் எழுத்தாளர் சங்க விழாவில், வடமொழித் தமிழ் எழுத்தாளராகிய, ரா. ஸ்ரீ தேசிகன் என்பவர், "தமிழ் மொழியில் பிற மொழி கலக்கப்படலாமா" என்னும் தலைப்பில் பேசும்பொழுது, தமிழ்க் கடலாகிய, மறைத்திரு மறைமலையடிகளாரைப் பற்றியும் அடிகளாரின் உரைநடையைப் பற்றியும், தமிழ் அறியா "மேதை" பழித்துப் பேசியதை அறிந்தும் இக் கட்டுரை தோன்றுவதாயிற்று.

தமிழின் பெயரில் சங்கம் வைத்துக்கொண்டு தமிழையும் தமிழ் அறிஞர்களையும் பழித்துப் பேசுவதை எந்தத் தன்மானத் தமிழனும் பொறுத்துக்கொண்டிரான். வடமொழி எழுத்தாளர் சங்கம் என்று ஒன்று வைத்துக்கொண்டு, அம் மொழியை வளர்ப்பதில் நமக்கு எவ்வித மறுப்புமில்லை. தமிழின் பெயரைச் சொல்லித் தமிழகத்தில் வாழ்ந்தும், பிழைத்தும் வருகின்ற ஒரு கும்பல் தமிழ்க் கடலாகிய மறைமலையடிகளாரைப் பழித்துக்

கூறியதைப் பற்றித் தமிழ்ப்புலவர் குழு தக்க நடவடிக்கை எடுக்காது வாளாவிருப்பதேன்?

மறைத்திரு மறைமலையடிகளார், தனித்தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாண்டு காலமாக அரும்பாடுபட்டு, (பெற்று) அரிய கருத்துக்களைத் தமிழகத்திற்கு வழங்கியிருப்பதை எவரும் மறுக்க முடியாது. அடிகளாரின்றேல் தனித்தமிழ் வளர்ச்சியடைய முடியுமா? செத்த மொழியை அரியணையில் ஏற்றி மகிழத் தமிழகந்தான் கிடைத்ததா? ஞாயிற்றைப் பார்த்து நாய் குரைப்பது போல இருக்கிறது—அறிவுக் கடலை—தமிழ்க் கடலைப் பழிப்பது.

முத்தமிழ்க் காவலரால் துவக்கப் பெற்ற, புலவர் குழு உடனே கூடித் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். இனியும் வாளாவிருந்தால், "அவ் வடமொழி விரும்பிகள்" தமிழை அழித்தே தீருவர். டாக்டர். சிதம்பரநாதச் செட்டியாரவர்கள், தக்க பொழுதில் அக் கூட்டத்திலேயே கண்டித்துப் பேசியதைப் பாராட்டுகின்றேன். தேசிகன் பேசியதால், அடிகளாரின் மாண்பு சிறிதுங் குன்றாது. "அரைக்கினும் சந்தனம் தன் மணங் குன்றாது" என்பதுபோல், மேன்மேலும் மாண்பும் புகழும் குன்றாது வளரும் என்பது ஒருதலை.

சோறு, நீர், திரு, மொழி, ஒளி, சொற்பொழிவு, வணக்கம், வெளியீடு, வெற்றி, குடிமதிப்பு, ஆண், பெண், குடிகள், பெரும் பேராசிரியர், முழுநிலா, திருமணம், உரைநடை, ஆறு, புதல்வன், புதல்வி, ஆண்டு, வானொலி, கடல், சிற்றூர்-போன்ற எண்ணிறந்த தமிழ்ச் சொற்கள் மறைவுற்றன. அடிகளார் போன்ற தமிழ்ப் பேரறிஞர்கள் அல்லும் பகலும் பழந்தமிழ் இலக்கியங்களை ஆராய்ந்து, மீண்டும் மேற்கண்ட சொற்களை வழக்கிற்குக் கொண்டு வந்தனர். முறையே:—சாதம், ஜலம், ஸ்ரீ, பாஷை, பிரகாசம், பிரசங்கம், நமஸ்காரம், பிரசுரம், ஜயம், ஜனசங்கியை, புருஷர், ஸ்திரீ, பிரஜை, மஹாமஹோபாத்தியாயர், பௌர்ணமி, விவாகம், வசனம், நதி, புத்திரன், புத்திரி (குமாரன், குமாரத்தி) வருஷம், ஆகாசவாணி, சமுத்திரம், கிராமம் போன்ற எண்ணிறந்த வடசொற்கள் பாலில் நஞ்சு கலந்ததற்கொப்ப, நம் அருந்தமிழில் வந்து கலந்து தூய தமிழ்ச் சொற்களை மறைத்து விட்டன. சென்னை நகராட்சி மன்றத்தினர், "ஸ்ரீ" என்ற வட சொல்லுக்குப் பதில் 'திரு' என்ற தூய சொல்லைத்தான் பயன் படுத்தவேண்டுமென்று கட்டளை பிறப்பித்து வழக்கிலும் கொண்டுவந்திருக்கின்றனர். அவர்களின் தமிழ்ப்பற்றுக்குத் தமிழ்க் கடலாகிய மறைமலை அடிகளாரின் தனித்தமிழ் வளர்ச்சியேயாகும்.

# *தஞ்சை ஆபிரகாம் பண்டிதர்

வாழ்க்கையில் இருள் சூழ்ந்த நிலையிலிருந்து வியக்கத்தக்க ஒளி பொருந்திய உயர் நிலையும் புகழும் பெற்றுயர்ந்தவர் ஆபிரகாம் பண்டிதர். இஃது அவரது தொழில் அவருக்களித்த சீரிய சிறப்பாகும். ஒரு துவக்கப்பள்ளி ஆசிரியராகத் தம் வாழ்க்கையைத் தொடங்கினார் பண்டிதர். பின்னர் மருத்துவத் தொழில் மூலம் திரண்ட செல்வத்தையும், பயிர்த்தொழில் மூலம் பெருமதிப்பையும் பெற்றார். நிழற்படம் பிடித்தல், வண்ண ஓவியம் தீட்டுதல், சோப்புச் செய்தல் போன்ற சிறு கைத்தொழில்களிலும் ஈடுபட்டார். பொறியியற் றுறையிலும் பயிற்சி பெற்றார். கர்னாடக இசைத்துறையில் பயனுள்ள ஆராய்ச்சிகளைச் செய்தார். இதனால் தமிழ் இசை மறுமலர்ச்சி வரலாற்றில் நீங்காத இடமும் முதன்மையும் பெற்றார்.

பண்டிதர் 1859 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 2 ஆம் நாள், குற்றாலத்திற்கு அண்மையில் உள்ள சாம்பூர்வடகரை என்னுமிடத்தில் பிறந்தார். இவருடைய பாட்டனார் சுப்பிரமணிய நாடார் என்பவர். ஒரு தோட்டமும் ஒரு சிறு கிணறுமே அவருடைய உடைமைகள். அவருக்குப் பதின்மூன்று மக்கள் இருந்தனர். தீயூழின் பயனாக அவர்களுள் பதினொருவர் இறக்க, இருமக்களே எஞ்சி நின்றனர். இதனால் அவர் மன அமைதி நாடி கிறித்துவ சமயத்தில் சேர்ந்தார்.

ஆபிரகாம் பண்டிதரின் தந்தையார் முத்துச்சாமி என்பவர் ஒரு தோட்டத் தொழிலாளியாகவும், அன்னையார் அன்னம்மாள் ஒரு விவிலிய போதகப் பெண்ணாகவும் பணியாற்றினர். பண்டிதர் தமது 12 ஆம் அகவை நிறையுமுன்பே துவக்கக் கல்வியில் தேர்ச்சிபெற்று ஒரு பள்ளி ஆசிரியராக அமர்ந்தார். ஆனால் ஆசிரியத் தகுதிபெற 150 கல் தொலை நடந்து சென்று, திண்டுக்கல்லில் 1874 ஆம் ஆண்டில் ஒரு பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து படித்துத் தேர்ச்சிபெற்று அங்கொரு பள்ளியில் ஆசிரியரானார். அங்கிருந்தகாலை கருணாநந்தர் என்னும் சித்த மருத்துவரிடம் தொடர்பு கொண்டார். கருணாநந்தர் 'கருணாநந்தர் சஞ்சீவி மருந்துகள்' என்று தம்முடைய பெயரில் மருந்துகளைச் செய்ய இவருக்குக் கற்றுக்கொடுத்தார்.

---

* இக் கட்டுரை ஆகஸ்டுத் திங்கள் 23 ஆம் நாள் வெளியான 'இந்து' (The Hindu) இதழில் திரு. A. C. பால் நாடார் எழுதிய கட்டுரையின் மொழிபெயர்ப்பு.

இவருக்கு 1882 ஆம் ஆண்டில் திருமணம் நடைபெற்றது. பின்னர், திண்டுக்கல் பள்ளிக்கூடம் கலைக்கப்பட்ட காரணத்தால் இவரும் இவர்தம் மனைவியாரும் வாழ்க்கைக்கு வழிதேடும் பொருட்டு, தஞ்சையில் குடியேறினர்.

தஞ்சையில் கோட்டைப் பகுதியில் உள்ள லேடி நேப்பியர் பெண்கள் பள்ளியில் இவரும் இவர்தம் மனைவியாரும் வேலைக் கமர்ந்தனர். அங்கிருந்த காலை ஒருபுறம் சங்கீத மகாலிலிருந்தும் மற்றொருபுறம் இராமர் கோவிலிலிருந்தும் நல்ல இசைகளைக் கேட்கும் வாய்ப்பு இவருக்கு ஏற்பட்டது. அங்கு இவருக்கு ஒரு பார்ப்பனர் நண்பரானார். அவர் இவருக்கு வேதாந்தக் கருத்துக்களைப் போதித்தார். பண்டிதர் மருத்துவக்கலை பயிலுதலையும், மருந்துகளைச் செய்தலையும் தொடர்ந்து மேற்கொண்டார். மருத்துவப் பணியிலேயே தம்முடைய முழுநேரத்தையும் செலவிட எண்ணி இவரும் இவர் மனைவியும் பள்ளிக்கூடப் பணியைவிட்டு விலகினர். ஆனால் அவர்கள் எதிர்பார்த்தவண்ணம் அத்தொழிலுக்கு வேண்டிய வசதிகள் போதிய அளவு கிடைக்காமையால் இரண்டு ஆண்டுகள் வறுமையால் வாடினர்.

பின்னர்ச் சிறிதுசிறிதாக நல்லூழ் வந்துற இவர்கள் தொழில் வளம்பெறலாயிற்று. நிலமும் வீடும் வாங்கினர். அந்த வீடு தான் பின்னர் 'கருணாநந்தர் மருத்துவமனை' ஆயிற்று. வயது முதிர்ந்த தம் பெற்றோரைத் தம்மிடமே அழைத்துக்கொண்டார். அங்ஙனமே உடன்பிறந்தோரையும், ஏழை உறவினரையும் தம்முடன் சேர்த்துக்கொண்டு அவர்கட்கெல்லாம் வேலை கொடுத்து ஆதரவு தந்தார்.

பிறகு பண்டிதர் தம் நாட்டத்தைப் பயிர்த் தொழில்பக்கம் திருப்பினார். தஞ்சை நகர்க்கு வெளியில் ஒரு நிலம் வாங்கி அதற்குக் 'கருணாநந்தர் பண்ணை' என்று பெயரிட்டார். அந்நாளில் சென்னை ஆளுநராக இருந்த சர். ஆர்தர் லாலி என்பார் இப்பண்ணைக்கு வருகைதந்த காலை, "இப்பண்ணை பயிர்த் தொழில் துறையில் அறிவு ஆற்றல் நன்முயற்சி ஆகியவற்றுக்கு ஒரு நிலைத்த நினைவுச்சின்னமாகக் காட்சியளிக்கின்றது. இஃது இந்திய நாட்டில் நான் பெற்ற அனுபவத்தில் தலைசிறந்ததாகும்," என்று கூறிப் போந்தார்.

பண்டிதரின் பண்ணையில் பலவகைக் கனிமரங்களும், ஆங்கிலநாட்டுக் காய்கறிகளும் பயிரிடப்பட்டன. அவர் புதுமுறையான கரும்பு பயிரிடும் முறையைக் கண்டுபிடித்தார். அது 'நியூ ஸ்போர்ட்' என்று அழைக்கப்பட்டது. பால் பண்ணை, கோழிப்பண்ணை முதலியவற்றையும் அவர் நடத்தினார். சோளம்,

கரும்பு, பருத்தி, நிலக்கடலை முதலியவற்றைப் பயிர் செய்வது எப்படி என்பது பற்றி ஒரு சிறு வெளியீடு அச்சிட்டுக் குடியான வர்களுக்கு வழங்கினார்.

1911 இல் 'லாலி மின்விசை அச்சகம்' என்னும் ஓர் அச்சகத்தை நிறுவி, அதில் அச்சடித்தல், நூற்கட்டடம் செய் தல் முதலிய வேலைகளைப் புதுமுறையில் செய்து வந்தார்.

பண்டிதர் இசையிலே ஆர்வம் மிகக்கொண்டவர். இந்திய இசைக்கும் மேனாட்டு இசைக்கும் இடையேயுள்ள வேற் றுமையைக் குறைத்து இரண்டையும் இணைக்கும் முறை யாதென ஆராயலானார். அந்நாளில் தஞ்சையில் பிச்சைமுத்து என்பார் மேனாட்டு இசையில் வல்லுநராக இருந்தார். அவரும் இவரும் கூடி ஆராய்ந்து சில இந்திய இராகங்களை ஒழுங்குபடுத்தி னர். இதனைக் காயகசிகாமணி முத்தையா பாகவதர் பெரிதும் பாராட்டினார்.

தெலுங்கில் தியாகராய கீர்த்தனங்களில் உள்ள கருத்துக் களுக்கு நேர் தமிழ்க்கருத்துக்களை அமைத்துப் பண்டிதர் தமிழில் பாடல்களை அமைத்தார். தாமோ அல்லது தம்முடைய மாணவர் எவரேனுமோ தமிழிலேயே அத்தகைய கீர்த்தனங்கள் அமைக்கும் நாள் எந்நாள் என அவர் பேரவாக் கொண்டிருந் தார்.

தம்முடைய மக்களுக்கு வீணை, பிடில் முதலிய இசைக் கருவிகளைப் பயிற்றுவிக்கத் திறமைமிக்க ஆசிரியர்களை அவர் அமர்த்தியிருந்தார். முத்தையா பாகவதர், மைசூர் வைணிக சேஷண்ணா, விசயநகர சமத்தான வைணிக சிரோமணி வெங் கட்ராமதாஸ் ஆகியோருடன் இவர் நெருங்கிப் பழகி, உரையாடி, வினாக்களை எழுப்பிக் கர்நாடக இசை என்பது யாது?—அதன் தோற்றம்—சுரங்களிலிருந்து சுருதிகள் அமைவது எங்ஙனம்? இராகங்களின் அமைப்பு—இன்ன பிற செய்திகளை அறிய முயன்றார்.

கீர்த்தனங்கள் கீதங்கள் முதலியவற்றை அமைக்கப் புது முறைகளைக் கண்டுபிடித்தார். தம் மகள் திருமதி ஞானசிகா மணி, இரண்டாம் மனைவி பாக்கியம்மாள் ஆகியவர்களின் துணைகொண்டு புதுமுறையில் பல பாடல்களை அமைத்தார். சேஷண்ணா, முத்தையா பாகவதர், இசை இதழ் ஆசிரியரா யிருந்த எச். பி. கிருட்டிண ராவ் ஆகியோர் அவற்றைத் தடை யின்றி ஏற்றுக்கொண்டனர்.

வடநாட்டு இசை மாணவர்களுடன் பண்டிதர் தொடர்பு கொண்டார். 1916 இல் பரோடாவில் நடைபெற்ற அனைத்

திந்திய இசை மாநாட்டில் கலந்துகொண்டார். சுருதிகள் 22 என்பது தவறு என்றும் மொத்த சுருதிகள் 24 என்றும் அவர் ஆராய்ச்சிமுறைப்படி நிறுவிக் காட்டினார். புகழ்பெற்ற கர்நாடக இசைவாணர்கள் அக் கருத்தினை ஏற்றுக்கொண்டனர். 'ஸ்தாய்' என்பது 24 சுருதிகளாகப் பிரிக்கப்படுவன என்றும், அவை இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டு 12 கூறுகள் இன்று வழக்கி லுள்ளன என்றும் எஞ்சியவை ஒன்றுக்கொன்று பங்கிட்டுக் கொண்டு ஒத்து வருவன என்றும் நிலைநாட்டினார்.

பண்டிதர் தாமே ஒரு வீணையைத் தயாரித்து அதில் அவர் கண்டு பிடித்த சுருதி முறைகளை இயக்கிக் காட்டினார். மரகத வல்லி துரைப்பாண்டியன், கனகவல்லி நவமணி என்னும் அவ ருடைய பெண்மக்களிருவரும் அந்த வீணையைப் பல இசை யரங்குகளிலும் மாநாடுகளிலும் இயக்கிக் காட்டினர். அதனைப் பல இசையறிஞர்களும் போற்றிப் புகழ்ந்தனர்.

1917 மே திங்கள் 17 ஆம் நாள் வெங்கடாரமதாஸ் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் "11, 12, 24, 48, 96 சுருதிகள் பயன்படுத்தப்பட்டுக் கீர்த்தனங்கள் பாடப்பட்டபோது எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பரோடாவில் திருமதி மரகதவல்லி அம்மையார் பாடியதைக் கேட்டோர் இசையுலகில் ஒரு புதிய சகாப்தமே தோன்றியிருக்கிறது" என்று குறிப்பிட் டிருந்தார்.

...மிர்த சாகரம்' என்னும் நூலைப் பண்டிதர் வெளி யிட்டார். அந்நூலின் இரண்டாம் பகுதி எழுதி முடியுமுன், 1919 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 31 ஆம் நாள் அவர் இம் மண்ணுலக வாழ்வை நீத்தனர். அந்நூலை அவர்தம் மகளார் மரகதவல்லி அம்மையார் எழுதி முடித்தார். அதனைப் பண்டித ரின் மைந்தர் டாக்டர் ஆ. சுந்தரபாண்டியன் அவர்கள் வெளி யிட்டார். அந்நூற்கு திரு. எம். அனந்தநாராயணன், ஐ.சி.எஸ். முன்னுரை வழங்கியுள்ளார். பண்டிதர் எழுதிய கிறித்துவமதக் கருத்தடங்கிய 'நான்மறை காட்டும் நன்னெறி' என்னும் தத்துவ நூலும் முற்றுப்பெறாத நிலையிலேயே விடப்பட்டது.

பண்டிதரின் மருத்துவப்பணி, பயிர்த்தொழில், இசையா ராய்ச்சி பிற கைத்தொழில்கள் ஆகிய அனைத்தும் அவர்தம் மக்களாலும் பேரன்மார்களாலும் தொடர்ந்து மேற்கொள்ளப் பட்டு வருகின்றன. பண்டிதரின் மூன்றும் புதல்வரான ஏ. ஏ. வரகுணபாண்டியன் என்பார் 'யாழ்' என்னும் பொருள்பற்றி ஆராய்ச்சி செய்துள்ளார். இவையனைத்தும் பண்டிதரின் பணி எங்ஙனம் பயனளித்துவருகின்றன என்பதைக் காட்டுவனவாம்.

# தமிழின் பெருமை

[சித்தாந்தச்செல்வர், திரு. டி. சி. சண்முகசுந்தரம் பிள்ளை, நெல்லை.]

தமிழ் மொழி தென்மொழி என்றுங் கூறப்படும். பாரத நாட்டின் தென்பாகத்திலுள்ளவர்களால் பேசப்படும் மொழி. திருக்கைலாயத்திற் பேசப்படும் மொழியாக அது திகழ்ந்து விளங்குகிறது. எம்மொழியுந் தனக்கு இணையில்லாத உயர்வொப்பில்லாத இனியமொழி. மற்றைய மொழிகளிலில்லாத 'ழ' கரவொற்றை உடைமையின் வீறுகொண்டெழுந்தளித்த 'ழ' கரமுடைய தொன்மை வாய்ந்த மொழியாகும் இது, இத்தகைய சிறப்பெழுத்தைந்தோடு கூடியவிடத்து உயிரெழுத்துப் பன்னிரண்டும், மெய்யெழுத்துப் பதினெட்டும், உயிர் மெய்யெழுத்து இருநூற்றுப் பதினாறுமாக விரிந்துகிடப்பதை நாம் தமிழிலக்கண நூல்களிற் பரக்கக் காணலாம். இத்தகைய சிறப்பு, தமிழுக்கே உரியதாதலின் பரம்பொருளாகிய சிவம் தமிழ் நாட்டவர்களுக்கு வெளிவந்து அவர்களால் பாடப்பெறுந் தமிழ்ப் பனுவல்களுக்கு, அஃதாவது தேவார திருவாசகமாதிப் பன்னிரு திருமுறைகளுக்குப் பரிசிலாகப் பரகதி கொடுத்தருளுகிறார் என்பது உலகப்பிரசித்தம். இத்துணை அருமைப்பாடு இம்மொழிக்கே சிறத்தலின் அன்பை அடிப்படையாகக்கொண்டு உலகை உய்விக்கவந்த மணிவாசகப்பிரான் பெருமானை விளிக்கும்போது, "தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானை" என விளித்தார். மாதவச் சிவஞானவள்ளலும், "அன்றுதொட்டின்று காறும் அருமறை நான்குந் தேடி, நின்றலந் தோலமிட்டுங் காணொணா நிமல மூர்த்தி, இன்றமிழ்க் கலைசை வாணனியல்பினை யிரண்டு நாளில், பொன்றிடும் மனிதர் தேறி எங்ஙனம் போற்று வாரே," என்று பெருமானுக்கு இனிமை பயக்குந் தன்மையது என்றார். குமரகுருபரவடிகள் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்ப் பிரபந்தத்தில், "நறைபழுத்த, துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ் சுவையே," எனச் சொற்றார். இது கயிலாயத்திலும் வழங்கும் மொழி என்பது தம்பிரான் தோழராகிய நம்பியாரூரர் (நொடித்தான் மலைப்பதிகத்தில்) "இந்திரன் மால்பிரமன் எழிலார்மிகு தேவரெல்லாம், வந்தெதிர் கொள்ள என்னை மத்தயானை யருள்புரிந்து, மந்திர மாமுனிவர் இவனாரென வெம்பெருமான், நந்தமரூரனென்றான் நொடித்தான் மலையுத்தமனே" என்று கூறினமையானும், சேரமான்பெருமாள் நாயனார் தாம் கன்னித் தீந்தமிழில் பாடியருளிய, "திருக்கைலாய ஞான உலா"வைத் தேவர்கள், மூவர்கள் யாவர்களுமறியச் சிவபெருமான் முன்னிலையில் அரங்கேற்று வைபவம் நடத்தியமையானும் விளங்கும்.

இதுவுமன்றித் தத்துவங்கடந்த தனிப்பொருளாகிய சிவம் தமிழினயங்களெல்லாம் பேசிப்பேசிக் கூத்தாடுவதென்றால் சிற்றறிவும் சிறுதொழிலுந் துக்கவுருவுமுடைய மானுடர் முதலிய உயிர்கள் அங்ஙனம் செய்யவேண்டுமென்பது சொல்லவும் வேண்டுமோ?

தமிழினயம் பேசிப் பாடியாடுகின்றா னிறைவன் என்பது பின்வரும் தேவாரப் பாவா லினிது விளங்கும்.

திருக்கானூர்—க-ஆம் திருமுறை.

"தமிழி னீர்மை பேசித்தாளம் வீணைபண்ணிநல்ல
முழவமொந்தைமல்கு பாடல் செய்கையிடமோவார்
குமிழின்மேனி தந்துகோல நீர்மையதுகொண்டார்
கமழுஞ்சோலைக் கானூர்மேய பவளவண்ணரே."

பன்னிரு திருமுறைகளும் பதிநூல்களென்று சொல்லப்படும். அவைகளில் மந்திரமுறை என்று சொல்லப்படுந் "திருமந்திரமே," அவைகள் யாவும் மந்திரச்சொற்களாலாயது என்பதை நிலை நிறுத்தும். "நமக்கு........அற்சனை பாட்டேயாகுமாதலான் மண்மேல் நம்மைச், சொற்றமிழ் பாடு கென்றார் தூமறை பாடும் வாயார்" என்று சுந்தரப்பெருமானுக்கு இங் நல்லுரை வழங்கினார் "சிவபெருமான்" என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் விதந்தெடுத்தோதியுள்ளார். பரிசுத்தமான மறையைப் பாடும் அந்த வாயினாலேயே "சொற்றமிழ் பாடுக" என்று பரம்பொருள் சொன்னமையானே தேவாரம் திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகளும் இறைவற்கே என்று துணியப்படும். இனி அறிவாற் சிவமாய் விளங்கும் ஆளுடைய அடிகள் உலகமுய்யப் பாடியருளிய ஞானப் பாடலொன்றை நீங்கள் செவ்வனே பரிசீலனை செய்தால் உண்மை விளங்கும். அவர் பாடியருளிய திருவாசகத் திருமுறையில்,

"காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப் பிரான்றன் னடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின் றான்வந்து முந்துமினே."

என்ற பாவை நேர்மையாகப் படித்து, காய்தல் உவகத்தலற்றிப் பொருளாய்ந்தால் உண்மை விளங்கும். இந்தப் பாட்டில் "மூல பண்டாரம்" என்ற சொல்லிற்குரிய பொருளமைதி கண்டால், மற்றது வெளிப்படை. மூலபண்டாரம்=மூலபொக்கிஷம் அல்லது முத்திச் செல்வம். "Pandora" in classical language means—"A valuable present" இந்தச் செல்வமிருக்குமிடம் நமக்குத் திருமுறைகளே. இவை சிவனடியார்கள் தம் உள்ளத்தின்கட்

கிடக்கப்பெறுதலின் அவர்களுக்குப் பண்டாரம் எனப் பெயரா யிற்று. ஆகவே பவமாயக் கடலிலழுந்துகின்ற நம்மை எல்லாம் முத்திப்பேற்றில் சேர்க்குந் தகுதிப்பாடு அல்லது தகைமை யுடையது "பன்னிரு திருமுறைகள்" என்பது வெட்டவெளி யாம். சிவபூசை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு அது செய்தற் குரிய வடமொழி மந்திரங்களை எல்லாம் தென்மொழியில் பொரு ளுணர்ந்து ஆக்கிக்கொண்டு தேவார திருவாசக மாதி பன்னிரு திருமுறைகளிற் கூறி யாங்குள்ள பாக்களைப் பொருளுணர்ந்து மனமார நினைத்து வாயாரப் பாடி யுருகி உருகிக் கும்பிட்டால் பெருமான் வெளிவந்து அருளுவர். இதற்குச் சந்தேகமில்லை. "நீற்றுமேனி நிமலன் திருநடம் போற்றியன்பு புரிந்துருகா நின்றார், மாற்றருங்கதி வைகுவ துண்மையாற் சாற்றினே மிது சத்தியம் சத்தியம்," என்ற உபதேச காண்டச் செய்யுளையுமிவ் வமையத்தில் நோக்குக.

நோக்கினால் இறைவன் நமக்குச் சிவஞானத்தை நல்கி அதி தீவிர பக்குவமுடையனாய்ச் செய்து முத்திப்பேற்றிற்கு முடுகும் வழியைக் காட்டி நம்மை யாட்கொள்ளுவன். இழிந்த மார்க்கத் துழல்வோர் தம் பிதற்றுரைகட் கணுகொணாத திருநெறிய தமிழ் வல்லவர்கள் வகுத்த செந்நெறியிற் படர்ந்து உமாநாதன் திருவருளைப் பெறுவோமாக. வழிவழி இம்மாண்பைக் கடைப் பிடித் துய்யுமாறு எங்கள் மாதவச் சிவஞானயோகிகள், தெய் வச்சுருதி "எழுதாக்கிளவி" என்றும் அதைத் தீட்டும் பெரு மைத்தாய் விளங்குவது தமிழ் என்றும், மற்றமொழிகளுக்கு இத்தகைய சிறப்பில்லை என்றும், "தெய்வச் சுருதி தமிழ்க் கன்றித் தீட்டா நிலைமைத்து" என வாயாரப் புகழ்ந்துள்ளார். இறைவன் திருவுள்ளக்கிடக்கை இதுவாக இதற்குப் புறம்பாய்ப் பிரசாரம் செய்வோர் கயவரிற் றலையாய கயவராய்ச் சைவசித் தாந்தச் செல்வர்களால் காற்கடை கொண்டொதுக்கப்படுவர்.

நிற்க, சித்தாந்திகளிற் சிலர் தெய்வச் சேக்கிழார் திருவாக் கால், "ஆகம விதியெலாஞ் செய்காளுயிர்கள் யாவையுமீன்ற வெம்பிராட்டி" என்று சொல்லியிருக்கிறபடியால், ஆகமப் படியே மந்திரார்த்தங்களால் பூசிக்கவேண்டுமென்கிறார்கள். என்னே! இவர்கள் அறியாமை. ஆகமவிதி பற்றியொழுக வேண்டுமென்றால் ஆகமவிதிகளைத் தமிழில் மொழிபெயர்த்து அக்கருத்து நெஞ்சில் இடம்பெறவே நெக்கு நெக்குருகிப் பூசனை இயற்ற வேண்டுமென்பதுதான் தாற்பரியமேயன்றிப் பிறிதல்ல. "தமிழ்க் கன்றித் தீட்டா நிலைமைத்து தெய்வச் சுருதி" என்புழி, தெய்வச்சுருதி வடமொழியின்கண் ணிருந்தாலும் அதன் கருத்தைத் தமிழ் மொழியிலாக்கி அடைவு பெறச்செய்து

தேவாரமாக உலகுய்ய வெளிப்படுத்தினர் ஞானசம்பந்தப் பெருமான் என்பதுதா னதனுள்ளுறைபொருள். சம்பந்தப் பெருமான் தேவாரத்தோடு, ஏனைய ஆச்சார்ய மூர்த்திகளா லருளிச் செய்யப்பட்ட நூல்களும் சேர்ந்த பன்னிருதிருமுறைக் கண் ணடங்கிய பேரருளாளர்கள் திருவாக்குகளும் பதிவாக் கன்றி வேறென்னென்பேம்? இவர்கள் தெய்வத் திருவாக்குகளில் கண்ட தமிழ்ப்பாக்களில் அம்புலிசூடிய வெம்பெருமான் அளவு கடந்த விருப்பமுடையான் என்பதும் அவ் வருமைப் பாக்க ளுக்கு வெளிவந்து அவ்வெம் பெருமக்கள் வேண்டியதைவேண்டி யாங்குக்கொடுத்து உதவினன் என்பது பெரியபுராணம் முதலிய நூல்களிற் பிரசித்தம். தவிர மாதவச்சிவஞான சுவாமிகள், சிவஞானபோதம் என்னும் ஒப்புயர்வற்ற திவ்விய நூலின் சிறப் புப் பாயிரத்தில், "இனி அதர்வசிகை முதலிய உபநிடதங்களிற் கூறும் பொருள்களும் சிவாகமப்பொருளை நோக்கும்வழிச் சூத்திரமும் பாடியமும் போலத் தூலாருந்ததி முறைமையா மாகலின் வேதம் பொதுநூலெனவும் ஆகமம் சிறப்பு நூலென வுங் கூறப்பட்டன. "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத் திறனிங்கு தெரிக்கலுற்றாம்" என்றதூஉம் இம்முறை தெரிந் துணர்ந்து கோடற்கென்க.

"வேதப்பயனாஞ் சைவமும்போல்," என்பதும் அது. இவ் வுண்மையுணர்ந்து கொள்ளமாட்டாதார் உபநிடதங்கள் ஒன்றோ டொன்று முரணுமெனவும், உபநிடதங்களும் சிவாகமங்களும் தம் முள் முரணுமெனவும், சிவாகமங்களுள்ளும் ஒன்றோடொன்று தம்முள் முரணுமெனவும் மயங்கி ஒன்றன் பொருளையே பற்றி ஏனையவற்றை இகழ்வர்; தொன்றுதொட்டுவருங் கேள்வியான் அனுபவமுடைய தேசிகன் றிருவருள் பெறாமையான் என்பது. 'சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் றன்வசன—மாத் திரத்தே வாய்க்குநலம் வந்துறுமோ—வார்த்தகடற், றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ—தெண்ணீர்மை யாயி தனைச் செப்பு," என்ற திருக்களிற்றுப்படியார் பனுவலும் இங்கு நோக்கத்தக்க.

இனி மொழிபெயர்த்துக் கூறும் நூல்களினும் ஞானமிர்தம் முதலியன பெரும்பாலும் பொதுவியல்பு மாத்திரையே கூறு தலிற் பொதுவெனவும், திருவுந்தி, திருக்களிற்றுப்படியார் முத லியன சிறப்பியல்பு மாத்திரையே கூறுதலின் உண்மையெனவுமா மென்பது — மாதவச்சிவஞானசுவாமிகள் — மாபாடியம். இத னானே "திருவுந்தி, திருக்களிற்றுப்படியார் என்னுஞ் சித்தாந்த நூல்கள், மொழிபெயர்த்துக் கூறும் நூல்கள்" என்பது சிவ ஞானசுவாமிகளாலேயே கூறப்பட்டதொரு கூற்று.

யார் திருக்களிற்றுப்படியார் என்னுமிருவகை நூல்களுக்கும் சிவஞானசுவாமிகள் உரை கூறுமையான் இவைகள் சிறப்பியல்பு கூறும் உண்மை மொழிபெயர்ப்பு நூல்கள் என்புழி, சிறப்பியல்பு கூறும் வடமொழி நூலுக்கு இவ்விரண்டும் தமிழ்மொழியிற் பெரும்பாலும் அக்கருத்துகள் மலிந்த நூல்களென்று பொருள்கொள்ளவேண்டுமே யொழிய வேறென் செய்வது? நுண்ணறிவுடையோர் இதைச் சீர்தூக்கிப் பார்ப்பார்களாக.

திருஞானசம்பந்தப்பெருமான் முதலாக நம்பியாண்டார் நம்பிகள் ஈறாக இருபத்தேழு சைவப்பெரியாரால் பாடப்பெற்ற பன்னிருதிருமுறைகளும் காலத்தாலும் சீலத்தாலும் வேறுபட்டனவாயிருந்தாலும் சித்தாந்தக் கருத்துக்கள் அத்திருமுறைகளில் முழுக்க முழுக்க நிலவுவதைக் கண்கூடாகப் பார்க்கலாம். ஆயினும் அப்பேரருளாளர்களிற் சிலர் தமிழுக்குப் பிரமாணியங் கொடுத்தும் வேறு சிலர் "ஆரியன் கண்டாய், தமிழன் கண்டாய்" என இருமொழிக்கும் சமத்துவங் கற்பித்தும் பாடியுள்ளார்கள். ஒன்பதாந் திருமுறையாகிய 'திருவிசைப்பா' பாடியருளிய ஒன்பது நாயன்மார்களில் திருமாளிகைத்தேவர், "திசைக்குமிக் குலவு சீர்த்தித் தில்லைக்கூத் துகந்து தீய, நசிக்க வெண் ணீற தாடும் நமர்களை நணுகா நாய்கள், அசிக்கவா ரியங்களோது மாதரைப்பேதவாதப், பிசுக்கரைக் காணு கண்வாய்பேசாதப் பேய்களோடே," என்று வடமொழியைக் கடிந்து கூறியுள்ளார். இஃதேபோல், நக்கீர தேவரும் "கோபப்பிரசாதம்" என்ற பனுவலில், "கச்சங்கொண்டு கடுந்தொழின் முடியாக், கொச்சைத் தேவரைத் தேவரென்றெண்ணிப், பிச்சரைப் போலவோ, ராரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று, வட்டணை பேசுவர் மானுடம் போன்று" என ஆரிய மொழியை இழித்துரையாடியுள்ளார். எவ்வளவுதான் சொன்னாலும் சமயப்பற்றும் மொழிப்பற்றும் முன் வந்து நிற்கும் என்பதை இவ்விரு பெரியார்களுடைய கூற்றுக்கள் நிரூபிக்கின்றன.

ஆரியத்திலேயே அழுந்தித் துறை தெரியாது மயங்கிக் கிடந்து வைணவப் பெரியாராயிருந்து பின் சைவத் திருமுறையாராய்ச்சியிற்றலைப்பட்டுச் சைவாசாரியாராய்த் திகழ்ந்து விளங்கியவர் திருமாளிகைத்தேவர். திருமாளிகைத்தேவர் என்றமையானே யவர் வைணவப் பெரியாராய் ஒருகாலமிருந்தார் என்பது சொல்லாமே யமையும். இப்பவும் வைணவர்கள் ஆரிய வேதத்தையுயர்த்தியும் சிவாகமங்களைப் புறக்கணித்தும் வாழுகிற வாழ்க்கை நிதரிசனம். ஆகையாலிவர் மயக்கமுறுதலுக்கு ஏதுவாயிருந்த ஆரிய வேதத்தைக் கண்டித்தார். நக்கீரரோவெனில் தமிழ்மொழியில் பெரும்புலவராகவிருந்து அம்மொழி

யைத் தாரகமாகக் கொண்டு சிவபெருமான் அருளைப் பெற்று விளங்கினர் என்பதொருதலை. மொழிப்பற்றும் சமயப்பற்றும் இத்தகைய காரியங்களில் அவரவர்களின் பரிபக்குவம் பற்றியும் நிகழ்தல் சகசம்தானே? அற்றாயின் திருமுறைகளிலுள்ள திருவாக்குகளும் ஒன்றனுக்கொன்று காலவேறுபாட்டானும், மரபு வேறுபாட்டானும் முரண்பட்டவழிப் பிரபல சுருதிவாக்கியம், அற்ப சுருதிவாக்கியம் என்ற பகுப்பானே பக்கிசைத்துக் கூறல் (வேறுபடுத்திக் கூறுதல்) பொருந்தாது என்று சமரசங்கண்டு போவதே அறிவுடையார் கடமை என்று கலாம் விளைக்காமல் இருப்பதே நன்று. இதைக் கடைப்பிடித்துத்தான் ஸ்ரீமத் இராமலிங்கவடிகள், தாம் மேற்கொண்ட சமயம் சைவசித்தாந்தச் செந்நெறி என்று தெரிந்தும், அதற்குப் புதுவதாக "சமரச சுத்த சன்மார்க்க"மென்று பெயர் சூட்டியுள்ளார். அறிஞர்கள் ரடு தெளிக.

நிற்க, இப்பொழுது சில நூற்றாண்டுகளாக நம்மிடை நடமாடும் கிறித்தவ சமயம், இஸ்லாமிய சமயம் என்னுஞ் சமயங்களில் முறையே ஹீப்ரு பாஷையிலும் அரபி பாஷையிலும் கடவுளை யழைத்தாற்றான் அவ்வாண்டவன் துயர்களைக் களைவான் என்ற மூடநம்பிக்கை இருந்து வருகிறது. இந்தப் பாஷைப் பித்து எலிசப்பெத்து, ஜேம்ஸ் காலங்களிலிருந்து கிறித்தவர்களிடை நெகிழ்ந்து கொண்டு வருகிறது. இந்த இருபெருஞ் சமயிகளாற் சூழப்பட்ட நம் நாடும் பெறுதற்கரிய மானுடப் பிறவியை எடுத்தும் வடமொழியில் மந்திரங்களைச் சொன்னாற்றான் இறைவன் நமக்கு அருளுவன் என்றும், சமயாச்சாரியர்கள் சந்தானச்சாரியர்கள் கொண்ட (கையாண்ட) கோட்பாட்டுக்கு மாறாக வடமொழி யாதிக்யம் நிறைந்த பிராமணர்கள், குருக்கள்மார்கள் வசப்பட்டுத் தெய்வத் திருமுறைகளாகிய பன்னிரு திருமுறைகளைக் கொண்டு பெருமானையருச்சித்து வழிபடுவதைவிட்டு வாளா பொழுது கழிக்கின்றார்கள். இவ்விதம் நமக்குத் தெரியாததொரு மொழியில் அருச்சனை செய்தால் தெய்வத் தீந்தமிழில் பாடிய ஆலவாயுடையாரை யுள்ளிட்ட தேவார திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறையாசிரியன்மார்களும் தமிழ்த் தெய்வமாகிய திருமுருகனைப் பாடியுள்ள அருணகிரியார் இராமலிங்கவடிகள் முதலாயினோரும் உங்களை மடமட்டிகள் என்று மதிப்பாரேயன்றித் தங்கள் சைவ மரபிற் றோன்றிய கால்வழித் தோன்றல்களாகிய செல்வங்கள் என்று ஒருபோதும் மதியார்கள்.

சைவ சமயாச்சாரியார்களில் முதல்வராகிய ஞானசம்பந்தப் பெருமான் தாம் பாடியருளிய "திருநல்லம் பதிக"த்தில்,"கல்லால்

நிழல்மேய கறைசேர் கண்டாவென்று, எல்லா மொழியாலும் இமையோர் தொழுதேத்த, வில்லா லரண்மூன்றும் வெந்து விழ வெய்த, நல்லான் நமையாள்வான் நல்ல நகரானே.'' என்று எந்தெந்த மொழியிலும் ஆர்வம் படைத்துள்ள இமையவர்கள் அந்தந்த மொழியிற்றான் தொழுதேத்த அருள் செய்வான் என்று இந்தப் பாட்டிற்குத் திண்ணிய பொருள் கண்டிருப்ப இதற்கு மாறாகச் சிலர் தமிழராய்ப் பிறந்தும் பண்பாடு ரவை லேசங்கூடவிலராய்த் தாம் கொண்ட கருத்திற்கேற்பப் பொருள் தேட முயன்று இடர்ப்பட்டு நலிவெய்துவார்கள்.

உண்மைதான் யாதெனில், தமிழ்நாடு பன்னூறு வருடங்களுக்கு முன்பு வடநாட்டு மன்னர்களாலடிபட்டு சாதிப்பூசல் பழுத்துக்கிற்றுக்கிற்றாய்ச் சிதறுண்டு வேறுபட்டவழி, திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர் போன்ற சமயாச்சாரியர்கள் இங்கு மங்குமாய்த் தோன்றிச் சைவ சமயத்தை நிலைநாட்டினார்கள். இந்த எப்பெருமக்கள் அவதார புருஷர்களாய்த் தோன்று வதற்குச் சற்றுமுன்னால் சைவ சமயம் சீர்கேடுற்றிருந்தது. காரணம் :—தெய்வத் தீந்தமிழ்நாட்டில் ஆரிய மொழிகொண்டு அருச்சனை செய்து பிராமண போசனம் செய்வித்து நாட்டி லுள்ளாருக்குப் புரியாத மொழியிற் சடங்கியற்றி ஒரு கூட்டத் தார் முன்னேற்றத்திற்கு வழிதேடி உழலும்போது நாடு சமணத் திலும் பௌத்தத்திலுமாழ்ந்தது. பாண்டி நாட்டில் மங்கையர்க் கரசியார் (பாண்டியன் மனைவி) குலச்சிறையார் (முதன் மந்திரி) இவர்கள் நீங்கலாக அரசனையுள்ளிட்ட யாவருஞ் சமணர்களா யிருந்தார்கள். சேர நாட்டிலும், சோழ நாட்டிலும், சமணம், புத்தம் எனப்பட்ட சமயங்கள் வேரூன்றிப் பொலிவெய்தியது. சுமார் பதினாறாயிரம் பேர் கொண்ட ஒரு கூட்டம், கணக்கிறந்த அடியார்களடங்கிய பிறிதொரு கூட்டம். இவ்விரண்டு கூட்டங் களுக்குந் தலைமைசான்ற பெரியோராகத் திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் என்னும் இருவர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் என்ன செய்தார்கள்? சைவ சமயக்கடவுளாகிய மகா தேவனுக்குத் தெய்வத்தீந்தமிழிற் பாமாலை வழங்கினார்கள். சாதிப்பூசல் சமயப்பூசல் என்றும் ஒருபடித்தாய் நிற்ப, மாநில மக்களைச் சைவ சமயத்தை மீண்டுந் தழுவச் செய்தார்கள். தழுவச் செய்தும் என்ன பயன்? படிப்படியாகச் செந்தமிழ் நாடு அடிமை நாடாயிற்று. வேற்றுச் சமயங்களாகிய கிறித்தவ மும் இஸ்லாமும் தலைகாட்டியது. சுமார் 10 வருடங்களுக்கு முன்புதான் இமசேது பரியந்தமுள்ள இந்திய நாடு (பாரத பூமி) சுதந்திரம் பெற்றது. அன்று முதலின்றுவரை பல ஆக்கவேலை களில் மக்கள் ஈடுபட்டு நாடு முன்னேற்றமடைந்து வருகிறது.

இப்பொழுது எங்குப் பார்த்தாலும் இந்தி எதிர்ப்புப் போராட்டம் தமிழ்மொழியை ஆட்சி மொழியாக்க வேண்டுமென்று பலத்த ஆர்ப்பாட்டங்கள் செய்யப்பட்டு வருகின்றன. கோயில்களில் தமிழில் அருச்சனை செய்யவேண்டுமென்ற கட்சியும் வலிபெற்றிலங்குகிறது. கலியாணம், ஈமச்சடங்கு இவைகளெல்லாம் தமிழர்கள் பண்பாட்டில் நடத்தப்பட வேண்டுமென்றும் தமிழிலேயே நடத்தப்பட வேண்டுமென்றும் மக்கள் கூட்டம்போட்டு ஆரவாரம் செய்கின்றனர்.

நாளடைவில் இவ்வியக்கங்ளெல்லாம் விருத்தியடைந்து சீவகாருண்ணியம், அன்பு, பரோபகாரம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டு தமிழில் அருச்சனை முதலியவைகளை ஆண்டவனை உவப்பிப்பான் வேண்டிச் செய்து, வைதீகச் சடங்கு முதலியவைகளை அக் கருத்தையுள்ளிட்ட தமிழ் மொழியியற்றிச் சாதிப்பிணக்கை யறவே தொலைத்துத் தொண்டர் கூட்டுறவுடன் வாழ்ந்து முடிவில் நடராசப் பெருமான் குஞ்சிதபாத நீழலில் குடிபுக வேண்டுமென்பது எனது சங்கற்பம்.

## மயக்கொழிக

தாய்மொழியில் எல்வாச் சடங்கு மியற்றிடநல்
வாய்மொழிகள் தாராமல் வந்தமொழி—வாய்மொழியே
என்பார்க்கிங் கென்னுரைப்பாம் ஈன்றூளைப் பேணுத
வன்பார் மனத்தரிவர் மற்று.

மற்றிம் மயக்கொழிய வண்டமிழும் மேலோங்க
உற்றபணி செய்வார் உயர்ந்தாரே—மற்றவர்தம்
செந்நெறியைப் பின்பற்றிச் சேர்வோம் திருமுறைகள்

ஆரியத்தை யேபெயர்த்திங் காக்க வெனநினைக்கக்
காரியமொன் றின்றூற்கன் னித்தமிழில்—சீரிய
எல்லா முளவால் இனியதிரு ஐந்தெழுத்தே
எல்லாமாம் மந்திரங்கள் ஈண்டு.

—தொண்டன்.

# தெய்வத் திருமறை

[சித்தாந்தபண்டிதர், கழகப்புலவர், திரு. ப. இராமநாதபிள்ளை]

" சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வ மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் யாம்வணங்குங் கடவு ளாரே. சு. கூ. க0

பொருள் : சங்கநிதி - சங்கு போன்ற பெருஞ்செல்வம், பதுமநிதி - தாமரை போன்ற பெருஞ்செல்வம், இரண்டுந் தந்து- கிடைத்தற்கரிய இவ்விரண்டு பெருஞ்செல்வங்களையும் வலியக் கொண்டு வந்து ஒப்படைத்து, தரணியொடு - சிறந்த இந் நில வுலகத்தோடு, வான் - (இந்திரன், நான்முகன், மால் முதலியோர்க் குரிய) மேல் உலகங்களையும், ஆள - (தனி உரிமையாக நெடுநாள் முடிவேய்ந்து) வேந்தராய் ஒருகுடைக்கீழ் ஆளும்படி, தருவரே னும் - கொடுப்பாரானாலும், மாதேவர்க்கு-(எல்லாத் தேவர்க்கும் முதல்வராய்என்றும்பிறப்பும்இறப்பும்இல்லாதவராய்ப்பேரருளே திருமேனியாகவுடைய விழுமிய முழுமுதல்வராகிய சிவபெரு மானே பெருந்தேவர் என்றழைக்கப்படுவர்.) அத்தகைய பெருந் தேவர்க்கு, ஏகாந்தர் - உள்ளம் ஒருங்கி உணர்ச்சி அழுந்தி ஓவாது நினைக்கும் ஒருமைப்பண்புடையவர், அல்லாராகில் - அல்லாதவராகவிருந்தால், மங்குவார் - (திருவருளில் பொங்கிப் பொலிந்து பேரின்புற்று வாழும் பேறு இல்லாதவராய்) இருளில் தங்கிப் பிறந்து இறந்து துன்புற்று ஒளிமழுங்குவாராவர், அவர் செல்வம் - மேலே கூறிய அவருடைய அழியும் செல்வங்களை, மதிப்போம் அல்லோம் - ஒரு பொருளாக மதிக்கமாட்டோம், அங்கமெலாம் - உடலின் உறுப்புக்களெல்லாம், குறைந்து - குறைவுபடும்படியான, அழுகு - சீழ்வடிந்து அழுகிப்புண்ணாகிப் பொறுக்க முடியாத நாற்றங் கொண்டு, தொழுநோயராய் - (சிவ பெருமானலன்றி வேறெவராலும் நீக்க முடியாத காணத்தகாத) தொழுநோய் உள்ளவராய், ஆவுரித்து - (முன்) பசுக்களைத் தோலுரித்து, தின்றுழலும் - அதன் இறைச்சியைச் சுவைபடத் தின்று திரியும், புலையரேனும் - (ஆன்றோரால் என்றும் வெறுக் கப்பட்ட) கீழ்மையாகிய புலையராக இருந்தாலும், கங்கை - வான் புனலாகிய கங்கையினை, வார்சடை - தம்முடைய நீண்ட

திருச்சடையினில், கரந்தார்க்கு - மறைத்து வைத்தருளும் சிவ பெருமானார் திருவடிக்கு, அன்பராகில் - மெய்யன்பு உடையவ ராக இருந்தால், அவர்கண்டீர் - அத்தகைய மெய்யடியார்களே, யாம் - (அடியேனும் என்னைப் போன்ற பிறரும் ஆகிய) யாங்கள், வணங்கும் - (மனத்தால் நினைந்து, வாயால் வாழ்த்தி தலையால் வணங்கி) தொழப்படும் தகுதி வாய்ந்த, கடவுளார்-கண்ணெதிரே காணப்படும் மெய்க்கடவுளராவர்.

விளக்கம்: கண்டீர், ஏ: அசைச் சொற்கள். ஒருவர் மெய் யடியாராயின பின் அவர்தம் முன்னைக்குல முதலிய புன்மைகளை யெண்ணுதல் தவறு. மேலும் அவர் உண்மையான திருநீறு சிவமணி திகழும் சிவப்பொலிவும், திருவைந்தெழுத்து நினைவும் நீங்கப் பெறுதவராகவிருப்பின் அவர்தம் உடல்நோய், உளநோய் முதலியவனைத்தும் "வெற்பிற்றோன்றிய வெங்கதிர் கண்டவப், புறபனிக் கெடுமாறுபோல்" போயகலும். சிவனினைவுடை யார்க்கு உடலுயிராய்த் திகழ்வன முறையே அன்பும் அருளுமே யாம். இவ்விரண்டுமே புலாலுண்ணாமையையும், கொலை செய் யாமையையும் கொண்டு வந்து புகுத்தும். ஆகவே முன் "ஆவு ரித்துத் தின்றுழலும் புலையரெனக்" கொள்வதே ஏற்புடைத் தாம். மூன் என்னும் சொல் அவாய் நிலையான் வந்தியையும்.

"ஆவுரித்துத் தின்றுழலும் புலையர்" வரும் பிறப்பில் "அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்" அல்லலுறுவர் என்னும் மெய்ம்மை புலப்படுத்தவே இவ்விரண்டும் காரண காரியத் தொடர்பாய் அமைக்கப் பெற்றன. இத்தகைய தீரா நோய்க்குக் காரணம் கொலையும் புலையுமேயாம். அவ்வுண்மை வருமாறு:

"உயிருடம்பின் நீக்கியா ரென்ப செயிருடம்பில்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்." —திருக்குறள், ௩௩௦

"பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்.
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமும் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே." —.௯௦

எக்குலத்தாராயினும் செந்நெறித் தொண்டர் குலத்தா ராவதற்குத் திருவெண்ணீறும், சிவமணியும், திருவைந்தெழுத் தும் கைக்கொண்டு ஒழுகுதல் வேண்டும். அவ்வுண்மை வருமாறு:

"சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கல்லால்
நலமிலன் நாடொறு நல்கு வானலன்
குலமில ராகிலுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே." —௪. ௧௧. ௬.

ஒருவர் காதலுடன் "காலை நண்பகல் மாலை நள்ளிருள்" என்ற நாற்பொழுதினும் நன்றாகத் திருவெண்ணீற்றினைச் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தோதிச் சாம்பர் பூச்சாகவும் தண்ணீர்விட்டுக் குழைத்தும் அணிவரேல் அம் மெய்யடியார் சிவன் திருவுருத் தாங்கிய நற்றவத்தவராவர். அவரைச் சிவனெனவே கருதுதல் செந்நெறியாளரின் சிறந்த கடனாகும். சிவபெருமான் அனைத்துயிர்களிடத்தும் தினைத்தனைப்பொழுதும் நீங்காது நிறைந்திருப்பினும் திருவெண்ணீறு சிவமணி திருவைந்தெழுத்தாகிய மூன்று முறையே உடலுளம் உயிராகக் கொண்டு பொலியும் மெய்யடியார்களிடத்தில் தயிரில் நெய்போல் விளங்கித் தோன்றுவன் கண்ணெதிரே காணும் இவரைத் தேவரெனக் கொள்ளாது காணாதவிடத்துள்ள அவர் தேவர் என்னும் இரண்டு வகையால் பேசாது "ஈசன் திறமே பேணி"த் தொழுதல் வேண்டும். இவ்வுண்மை வரும் திருமறையா னுணர்க :

"எவரேனும் தாமாக விலாடத்திட்ட
திருநீறும் சாதனமுங் கண்டாலுள்கி
உவராதே யவரவரைக் கண்டபோது
உகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணி
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே." ௬. ௬௧-௩.

இத் திருப்பாட்டில் 'தாமாக' என்பது பிறர் தூண்டுதலின்றி முன்னைத் தொடர்பால் சண்டேசுரர் சிவபூசை செய்தது போல் தாமாகத் திருநீறணிந்தென்பதாம். மற்றுள்ளுறையாக அணிபவர் தாம் சிவனாக என்பதாம். சிவன் என்னும் செஞ்சொல் அவாய் நிலையான் வந்தியையும். 'இவர் தேவர் அவர் தேவர்' என்பதற்குச் சார்புபற்றி இரண்டாட்டிக் கூறாது திருவெண்ணீற்றுப் பொலிவு பற்றி எல்லாரிடத்திலும் சிவன் ஒன்று போல் விளங்குந் திறமுன்னி அனைவரையும் சிவனெனவே கருதுதல் வேண்டும். செம்பொருட்டுணிவினராம் நன்னெறியாளர் இதனை நன்குணர்ந்து ஒழுகுதல் வேண்டும்.

"தெய்வத் திருமறையும் செய்ய பொருண்முறையும்
உய்வைத் தருந்தமிழின் ஒண்ணூல்கள்—மெய்வைத்த
காதலால் ஓதிக் கடவுள் அடிதொழுக
ஈதலால் ஊதியம்வே றின்று."

திருச்சிற்றம்பலம்.

# மலரில் மலர்ந்த மலர்

[திரு. ஈ. வே. வேங்கடசுப்பிரமணியம்]

உலகம் உவப்பத்தோன்றும் ஞாயிறு. இருள் கடிந்தெழுகின்றது ஞாயிறு. உள்ளம் உவக்க மலர்கின்றது தாமரை;—தாமரையின் மலர்ச்சியும், ஞாயிற்றின் எழுச்சியும், அஃதாவது பேரொளியின் எழுச்சியும் இணைந்த நிகழ்ச்சிகள். தவிர, தாமரையில் அழகு, மென்மணம், தண்மை முதலான தன்மை நிறைந்திருக்கின்றன. அதனால்தானே என்னவோ, தாமரையைத் தெய்வத்தன்மையுடன் இணைப்பது மரபாயிற்று!

தாமரையில் தோன்றினாள் திருமகள். அவள், தவமிருந்து கமலக்கண்ணனும் திருமாலை மணந்தாள். திருமாலின் உந்திக் கமலத்தில், பிரமன் தோன்றினான்; அவனுடைய தேவியாம் கலைமகளும் வெள்ளைத்தாமரைப் பூவிலிருப்பவள். 'முருகன் திருமால் மருமகன்.'

அகிலாண்ட நாயகியாம் பரசிவை 'சகஸ்ரதள புஷ்பமிசை விளங்கும் புங்கவி.' அவள் தவமிருந்தடைந்த சிவபெருமான் திருவடியை "ஆதியாம் பாதமலர், அந்தமாம் செந்தளிர்கள், போகமாம் பூங்கழல்கள், மால் நான்முகனுங் காணாத புண்டரிகம், உய்ய ஆட்கொண்டருளும் பொன் மலர்கள்" என்று போற்றுகிறார் மணிவாசகர். 'செந்தாமரைக் காடன்ன மேனியனும் சிவபெருமான் விழிமலரில்' அறுமுக உருவாய்த் தோன்றிச் சரவணப் பூந்தொட்டிலில் விளையாடுகிறார், முருகப்பிரான். அவரைத்'தாமரையமரர் மேவரத் தோன்றிய அண்ணல்' என்கிறார் 'சிந்தாமணி' ஆசிரியர்.

முருகன் திருவடியை, "வேதன்முடியிற் படுங்கமலம், விண்ணோர் சிரத்தில் அணிபதுமம், விசய மயின் மேலெழுமுளரி, விமலர் புயஞ்சேர் திருக்கஞ்சம், சாதமொழிக்கும் அம்புயம், என் தலைமேலிருக்கும் புது நளினம் தண்டை சதங்கை கிங்கிணிசேர் சலசம்" என்றவாறு மார்க்க சகாயதேவர் புகழ்கிறார். அத்தகைய திருவடி சுனையோடருவித் துறையோடு பசுந்தினையோடிதணோடு திரிந்து திரிந்து சிவந்து மணந்துசென்று தேடியடைந்த வள்ளிநாயகி, கமலக்கண்ணனும் மலர்மகளும் நோக்கில் கலக்கத் தோன்றியவள். அப்பெருமாட்டியின் எட்டு அங்கங்களை, முடியடி வரிசையில், "திருமுகங்கமலம், இணை விழி கமலம், செய்ய வாய் கமலம்..." என்றவண்ணம் கச்சியப்பமுனிவர் திருத்

தணிகைப் புராணத்தில், போற்றியுள்ளார். அவிழ்ந்த அன்பாய் மலர்ந்தது அப்பெருமாட்டியின் உள்ளம். அத்தகைய அன்புள்ளத்தில் புகுந்து நிறைந்து மலரும் முருகப்பிரான் திருவுருவம் முழுவதும் தாமரையே போன்றிருத்தல் வியப்பன்றே! இதனை விளக்கவந்தன இரண்டு பாடல்கள்!

உண்ணு வினிக்க உருகடியார்
  உளத்தா மரையில் மலர்ந்திலகும்
தண்ணார் சரணம் அரவிந்தம்,
  தகவார் உந்தித் தடம்பதுமம்,
பண்ணார் மறைசொல் வாய் வனசம்,
  பரிவோ டருள்செய் கரமுளரி,
கண்ணு றிரண்டுங் குளிர்நளினம்,
  கமலம் சிறந்த முகமாமே!

அருளார் தண்மை சரணளிக்க
  அகலா மென்மை உந்திதரப்
பொருளாய் வாயெல் லாமணக்கப்
  பொற்பாய் வதனம் பொலிந்துதவக்
கருணு ரசத்தேன் கண்பொழியக்
  கரத்தே அபயம் செம்மைதர,
ஒருதா மரையாய் முருகன்பர்
  உளத்தா மரையில் மலர்ந்ததுவே!

## ஈடிலான் சிவன்

ஏவும் முழுமுதல்வன் ஈடில் சிவபெருமான்
தேவுமாய் ஆணையினால் சிற்றுயிர்கள்—யாவும்
இயற்றுமால் இத்தால் இறையாகப் பண்டும்
முற்றுசிவன் ஒன்றே முதல்.

சிவபெருமான் ஐந்தொழிற்கும் என்றுமுரியன். அவன் திருவாணையினைப்பெற்ற ஆருயிர்கள் அயன் அரி அரன் என்னும் நிலைப்பெயர்களுடன் முறையே படைத்தல் காத்தல் துடைத்தல் ஆகிய முத்தொழில்களைச் செய்வர். இம்மூவரும் சிவபெருமானால் முத்தொழிற்படுவர். இதனால் சிவபெருமான் ஏவும் முழுமுதல். இம்மூவரும் இயற்றுங் கருவியர். அதனால் சிவபெருமான் ஒருவனே ஈடும் எடுப்புமில்லாப் பீடுடைய பெருமான். அவன் ஒருவனே தொழப்படும் முழுமுதல்வன். அவனையே தொழுது தொண்டுசெய்து நலமெய்தி வாழ்வோமாக.

# அமரர் சண்முகம்

[திரு. M. N. நாகரத்தினம், B. A.,]

'மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே.'

என்ற புறநானூற்று வரிகளின் பொன்மொழிக்கேற்பச் சென்னை சர். தியாகராயர் கல்லூரி முதல்வர் திரு. ம கி. சண்முகம் அவர்கள் தம் புகழை உலகில் நிறுவிக் கடந்த ஜூலை 29 ஆம் நாள் (29-7-59) அன்று இறைவன் திருவடி நிழலை அடைந்தனர். கல்வி நிழல் பரப்பி அன்புக் கிளைகளில் அறிவுக் கனிகள் குலுங்க நின்ற அருளென்னும் பெருமரம் காலப் பெரும் புயலால் வேரற்று வீழ்ந்தது. மகிழ்ந்து பாராட்டும் எல்லாவித நலன்களையும் ஒருங்கே அமையப்பெற்ற அண்ணலின் மறைவினால் பேராசிரியப் பெருமக்கள் ஓர் உயரிய உண்மை நண்பரை, தங்கள் உயர்வுக்காகப் போராடும் ஒரு பெரும் வீரரை இழந்தனர். ஆங்கிலப் பேராசிரியர்கள் நடுவில் சண்முகனார் தமிழ்ப் பற்று மிகக் கொண்ட ஒருவர். தமிழ்ப்பற்று மிகக் கொண்டவர் நாப்பண் அவர் ஓர் ஆங்கிலப் பேராசிரியர். கல்லூரிகளில் தமிழன்னை அரியணைமீது அமர்ந்து எல்லாத் துறைகளிலும் அரசோச்ச வேண்டுமென்று அல்லும் பகலும் அரும்பாடுபட்ட அழகுதமிழ்ச் சொற்பொழிவாளர் சண்முகனாரை இழந்ததால் தமிழகமே ஒரு நல்ல தமிழ்ப் பணியாளரை இழந்தது. மாணவர் உலகமோ கடமையுணர்ச்சியையும் கட்டுப்பாட்டையும் காட்டிய தந்தையை, அன்புவழி நின்று அறமுணர்த்திய அன்னையை, நல்வழிகாட்டி நடத்திச் செல்லும் நல்ல தலைவரை, இடுக்கண் வருங்கால் இன்முகத்தோடு உதவி செய்யும் வள்ளலை இழந்தது என்றால் மாணவர்தம் மனத்துயர் மாற்றலும் எளிதோ? தம் இல்லத்தையும் இதயத்தையும் எப்பொழுதும் திறந்து வைத்து இலட்சக்கணக்கான மாணவர்களுக்கு அறிவொளி தந்த இணையற்ற அருளொளி அணைந்ததே! அணைந்ததே!!

கல்வித்துறையில் சண்முகனார் ஆற்றிய அரும்பணிகள் அளவிலடங்கா! நடுத்தரக் குடும்பம் ஒன்றில் பிறந்து பல இடுக்கண்களை வென்று கடலலைபோல் ஓயாதுழைத்து, தம் முயற்சியால் நன்னிலை அடைந்தவர் ஆதலின் ஏழை மாணவர்கள் கல்வி பெறுதற்குத் தம்மாலான எல்லாவித உதவிகளையும் செய்து உயர்வு பெற்றார். குறைவான மதிப்பெண்கள் பெற்றுப் பிற கல்லூரிகளில் இடம் பெறாது தவித்த மாணவர்கள் அவர்தம்

கருணையால் உயர்கல்வி பெற்றனர்; உய்ந்தனர்; நடுத்தர மாணவர்களைக்கொண்டே சர். தியாகராயர் கல்லூரிக்கு நற்பெயர் வாங்கித் தந்தார் எனில் அன்னார் தம் ஆற்றலுக்கும், அறிவிற்கும் அயரா உழைப்பிற்கும் வேறு சான்றுகள் வேண்டுமோ? களிமண் கொண்டு பொற்குடம் வனைவதுபோல் நடுத்தர மாணவர்களை உயர்தர மணிகளாக்கித் தம் கைவண்ணம் காட்டினார். வறுமைப் புயலில் சிக்குண்டு வாடிடும் மாணவர்கள் தொடர்ந்து படிக்க இயலாது என்று தங்கள் குறையைக் கூறிக் கண்ணீர் உகுக்குங் கால் அவர்களின் விழித்திரையில் படிந்துள்ள பனித்திரையை மட்டும் துடைத்திலர்; அவர்கள் மனத்திலும் மகிழ்ச்சித் தென்றல் உலவுமாறு தொடர்ந்து படிக்கவேண்டிய வசதிகள் செய்திடுவார். மாணவர்களை வெறும் புத்தகப் புழுக்களாக மாற்றாமல் சிறந்த நாவலர்களாக, நடிகர்களாக, புலவர்களாக மாற்றி மாப்புகழ் கொண்ட பெரியார் மறைந்தார் என்றால் மாணவர் தம் மனத்துயர் மாற்றுதல் யாங்ஙனம்?

சண்முகனார் அவர்களின் செல்வம், கல்வி, செல்வாக்கு அத்தனையும் எளிய மாணவர்களின் நலனுக்காக ஊருணி நீர்போலும் பயன்மரம் உள்ளூர் பழுத்தாற் போலும் பயன்பட்டது. அன்ன சத்திரங்கள் ஆயிரம் கட்டுவதினும், ஆலயங்கள் பதினாயிரம் கட்டுவதினும் ஆங்கோர் ஏழைக்குக் கல்விக்கண் தருதலே மேலான அறம் என்று கருதி அதன்வழி நின்று வாழ்ந்தார். கல்வி பெற்ற மாணவர்களின் வேலைதேடும் பொறுப்பையும் தாம் மேற் கொண்டு பொறுப்பு வாய்ந்த உயர்ந்த பதவிகளில் இருப்போர்க் குத் தொலைபேசி மூலம் பேசியும்,நேரில் கண்டு கூறியும், பரிவுரைக் கடிதங்கள் எழுதித் தந்தும் பெரும்பணி செய்தார். பிறருக் காகப் பரிவுரைக் கடிதங்கள் எழுதி எழுதிச் சிவந்த கரங்களை உடையவராய் இருந்தார் என்று கூறின் அது மிகையன்று. அவர் ஏற்றிய மணிவிளக்குகள் எத்தனையோ இல்லங்களில் அறியாமை இல்லாமை ஆகிய இருள்களைப் போக்கி ஒளிவெள் ளம் பரப்புகின்றன.

வெள்ளுடை வேந்தர் திரு. தியாகராயர் பிற்பட்ட மக்களின் நல்வாழ்வுக்காக வாழ்ந்து வழிகாட்டியவர். அவர் பெயரால் நிறுவப்பெற்ற கல்லூரியில், அவர் கொள்கைகளை ஏற்று மகிழ் வோடு பணியாற்றச் சண்முகனார் அவர்கள் கல்லூரி முதல்வ ரானார். கல்லூரி முதல்வர்களில் முதல்வரானார். அக் கல்லூரி யின் வளர்ச்சியையே தம் இலட்சியமாகக் கொண்டு வாழ்நாள் முழுவதும் தளர்ச்சியுறாது பணியாற்றினார். பத்தே ஆண்டுகளில் சர். தியாகராயர் கல்லூரியின் புகழ்க்கொடி பட்டொளி வீசி வானளாவப் பறக்கின்றது என்றால், அது பேராசிரியரின் பெரும்

பணியினலும் சலியாத உழைப்பினலும் ஆயது என்பதைக் கல்லூரியின்கண் தொடர்பு கொண்டோர் அனைவரும் அறிவர். கலைத்துறை நண்பர்கள், அரசியல் தலைவர்கள், சமுதாயச் சிற்பிகள், அருள் உள்ளம் கொண்ட பொருள் வள்ளல்கள் ஆகியவர்களின் ஒத்துழைப்பைப் பெற்றுக் கல்லூரியை வளர்த்தார். மேலும் அதுவளர என்னென்ன திட்டங்கள் வைத்திருந்தாரோ! அவைகளையெல்லாம் காலதேவன் சிதைத்துவிட்டானே! என் செய்வோம்.

நேர்மையின் திரு உருவேயன்ன நெடிய திரு உரு, அன்பு முகம், அருளொழுகும் திருவிழிகள்! இன்சொல் பேசும் இனிய திருவாய், அஞ்சாது செயலாற்றும் நெஞ்சம், அறிவின் மிகுதி காட்டும் அகன்ற நெற்றி, அதில் இலங்கும் குங்குமம், அனைவரையும் வரவேற்று வணங்கி வாழ்த்தும் வண்மைமிகு கரங்கள்; இவைகள் அனைத்தும் சண்முகம் என்றலே எவர்தம் நெஞ்சினும் தோற்றும். ஐம்பதே ஆண்டுகள் வாழ்ந்து அருந்தொண்டாற்றிய அவரை இறைவன் ஏன் அழைத்துக்கொண்டான்? அல்லது அவராற்றன் எவ்வாறு அவர்மீது அன்புள்ளவரை விட்டுப் பிரிய முடிந்தது? அவர் நெடுங்காலம் வாழ்ந்து பணிசெய்ய விரும்பினரே! ஒருவேளை ஓய்வே இல்லாது உழைத்த அவ் உத்தமர்—உயர்ந்தவர் ஓய்வுபெற வானவர் தம் பொன்னுலகே சாலச்சிறந்ததென எண்ணி இறைவன் அழைத்துக் கொண்டனனே! எல்லாம் இறைவன் திருக்கூத்தே!

வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து வானவர்தம் விருந்தினராகச்சென்ற வள்ளல் சண்முகம் அவர் வளர்த்த சர். தியாகராயர் கல்லூரியின் வளர்ச்சியில் தம் வாழ்வின் வெற்றிகாண உழைத்தார். அவருடைய ஆன்மா அமைதியுற அவர்பால் அன்புள்ளம் கொண்டோர் அனைவரும் அக் கல்லூரியின் வளர்ச்சிக்கு ஆவன செய்வது ஒன்றே நன்றாகும். காலத்தை வென்றவர் சண்முகம். ஞாலம் உள்ளளவும் அவர்புகழ் நிற்கும்; நிலைக்கும்.

---

## இறையருள்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

எல்லாம் வல்ல இறையருளை
என்றும் ஏத்தி வாழ்வோமேல்
சொல்லா நிலைகள் தாமேவந்
தெய்தும் வாய்மை மொழியாமே.

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

*முற்குறிப்பு*

*சொபக்கிளியன் கி. மு. 496-ல் பிறந்தான். தொண்ணூறு ஆண்டுகள் வாழ்ந்தான். நல்ல குடும்பத்தில் பிறந்தவன். இளமை வளமும் நல்ல கல்வியும் பெற்றுத், தக்க காலத்தே நாட்டு அரசியலில் ஈடுபட்டு, முதுமையில் பேரும் புகழும் பெற்றவன். அவன் பிறந்த காலம் ஏதென்சு மக்களாட்சி தொடங்கி அதற் கேற்ற மக்களியக்கம் வளம் பெற்ற காலமாகும். அவன் இளம்பருவத்தினனாயிருக்கும் போதுதான் ஏதென்சு, பெரிசிய நாட்டு ஆக்கிரமிப்புக்கு எதிராகக் காத்துக்கொள்ள வேண்டி யிருந்தது. அவனுக்கு வயது பதினாறானபோது தான் சலாமிய வெற்றி கிடைத்தது. அப்போது அவன்தான் வெற்றி விழாவில் பங்கு கொண்டு நன்கு நடத்திய இளைஞர் கூட்டந் தேர்ந்தெடுத்த தலைவன். பின் ஐம்பது ஆண்டுகள் வரை ஏதென்சு அமைதியான வாழ்வில் இருந்து வந்தது. அக்காலத்து, சொபக்கிளியன் தனக்கு வாய்த்த அரசியல் துறைத் தொழிலோடு இலக்கியம் முதலிய பண்பாடுகளுக்கு நல்ல தொண்டினையும் செய்தான். அவனுக்கு ஐம்பத்தாறும் வயது நடந்து கொண்டிருக்கும்போது, ஏதென் சுக்கு இடுக்கண்கள் நேர்ந்தன. பிலிபோனிசியப் போரில் ஈடுபட்டு அரசியல் அமைப்பு, உயர் நிலைமை முதலியவற்றிற்காகக் கிரேக்க நாடு முழுவதும் அல்லலுறத் தொடங்கியது இப்போரில் மனவலிவும், உடல் வலிவும் இழந்து முதிய பருவத்து இறந் தான்.*

*அக்காலத்தியக் கிரேக்க நாகரிக நிலைமை முதலியவற்றை இலக்கிய வாயிலாகத்தான் ஒருவாறு அறிய முடிகிறது. இரொதத்தன் துசிதின் என்டாரின் அரைகுறையான இரு பெரிய சரித இலக்கியங்களைத் தவிர, துன்பியல் ஆசிரியர் ஏச்சிலன், சொபக்கிளியன், உரிபிடன் என்பாரின் இலக்கியங் களும், அரித்தொபன் இன்ப முடிவு இலக்கியமும் கிடைத்தன. கி. மு. ஏழாம் நூற்றாண்டும், ஆறும் நூற்றாண்டும் உயர் கருத்துக்களடங்கிய இசைப்பாக்களின் காலமாகும். பின் வந்த ஐந்தாம் நூற்றாண்டின் பாக்கள் முன்னவற்றைப் பின் பற்றினவே யன்றி முன்னேற்றம் வாய்ந்தவை யல்ல வெனலாம். நல்ல உரை சொல்வன்மை வாய்ந்த நாடக இலக்கியங்களும், தத்துவ நூல்களும் நான்காம் நூற்றாண்டில் தான் தோன்றின.*

*கிரேக்க நாட்டு நாடக மேடைகள் இன்று நம் நாடுகளில் வழங்கும் பொழுதுபோக்கு இடங்கள் போன்றவை யல்ல.*

மனிதனின் உயர்ந்த கருத்துக்களை வெளிப்படுத்தும் வாயிலாகப் பயன் பட்டனவாகும்.

துன்பியல் நாடகங்கள் ஒருசில ஆண்டு விழாக்களில் நடிக்கப்பெற்றன. அக்காலைப் புதியவர்களோடு உறவாடலும், சமயநோன்புகளும், விழாச்செய்தலும்—பதினோயிரம் மக்கள் கூடிக்காணும் வாய்ப்பான திறந்தவெளி மேடையில் நாடகம் நடத்தலும், ஆகிய விழாக் கொண்டாட்டங்கள் நடை பெற்றன.

எனவே, நாடகக் கலையில் வல்லவர்களுக்கு ஒரு பெரும் பொறுப்பு இருந்தது. வல்லமையைக் காட்ட வாய்ப்பும் போட்டியும் இருந்தன. துன்பியல் நாடகம் நடிப்பதற்கு எடுத்துக் கொள்ளுமுன், ஒரு கலைக் குழுவினர் ஆய்ந்து பார்த்துக் கொள்வர். நடிப்பதற்கென்று எடுத்துக் கொள்வது கிடைத்தற் கரிய ஒரு பெரிய நன் மதிப்பாக இருந்தது. இந்தப் போட்டிக்கு மூன்று துன்பியல் நாடகங்களும் தணிந்த கருத்துடன் அமைந்த வஞ்சப் புகழ் நாடக மொன்றும் ஆக ஒரு ஆசிரியன் கொடுக்கவேண்டும். இவ்வாறு மூவர் நாடகங்களை, குழுவினர் மக்களின் கருத்துக் களையத் தேர்ந்தெடுப்பர்.

கிரேக்க நாடகங்கள் மற்ற நாட்டு நாடகங்களைப் போல் தான் இலக்கியம் முதலிய பல வற்றிற்கும் அப்பாற் பட்டதாகும். மனித இயல்பின் பல்வேறு திட்ப நுட்பங்களைக் காட்டுவனவாக நாடகங்கள் அமைந்தன.

சொபக்கிளியன் நாடகங்களில், நடிகர்களின் நடிப்பு உண்மை வாழ்வினை ஒட்டியிருக்கும். 'கோரஸ்' என்போர் நாடகம் பார்க்கும் மக்களுக்குக் கதைப் போக்கினை இசை நுணுக்கத் தொடர்பு படுத்தவும், நடிகர்களுடன் தாமும் ஆடுவர் போலும் இருப்பர். ஆயின் ஏச்சிலன் போன்றார் நாடகங்களில் 'கோரசர்' தாம் இசைத்துப் பாடியும் நடித்தும் எடுத்துக் கொண்ட கருத்தினை விளக்கிக் காட்டுவர்.

இனி, சொபக்கிளியன் நாடகத்தில் நடிகர்கள் மேடைகளில் நடிப்பர். அம்மேடைக்குச் சற்றுக்கீழே கோரசர் இருப்பர். நாடக அரங்கின் ஒரு புறத்தே யிருந்தும் மேடையருகே நின்றும் பின் மறுபுறத்துக்குச் சென்றும் அவ்வப்போது நாடக நிகழ்ச்சியுடன் ஒன்றி நடப்பர்.

## கதைச் சுருக்கம்

இனி, தீப நாடகங்களின் கதைச் சுருக்கம் வருமாறு: தீபநாடு கதுமன் என்பானல் தோற்றுவிக்கப் பெற்றது.

கதுமனுக்குப் பொலிதொரன் பிறந்தான். பொலிதொரன் இலப்தகனைப் பெற்றான். இலப்தகன் இலேயனைப் பெற்றான். இலேயனுக்கும் அவன் மனைவி யோகத்தாளுக்கும் ஒரு மகன் பிறந்தான். அக் குழந்தை பிறக்கு முன்னமே, அவனுடைய பிறப்பால் வரும் பின்விளைவுகளையறிந்த பெற்றோர் குழந்தை பிறந்ததும் அதனைக் கொன்று விட முற்பட்டனர். எனவே, தம் வேலையாள் ஒருவனிடம் குழந்தையைக் கொடுத்து மலைப் பக்கத்தே காலைக் குத்திப் போட்டு விடுமாறு கட்டளையிட்டனர். ஆயின், அவ்வேலையாள் அவ்வாறு கொல்லும் மனமில்லாதவனாய்த் தீபநாட்டுக்கப்பால் இருந்த கொரிந்திய நாட்டான் ஒருவனிடம் கொடுத்துத் தன் மகனைப்போல் காப்பாற்றிக் கொள்ளச் சொல்லிவிட்டான். அவன் தன் அரசன் பொலிபனிடம் அக் குழந்தையைக் கொடுத்தான். அவ்வரசன் குழந்தை யற்றவனாகலின், அக்குழந்தையை மகிழ்ந்தெடுத்து 'ஒதிபன்' என்னும் பெயரிட்டு வளர்த்தான்.

ஒதிபன் வளர்ந்து கொரிந்த நாட்டு இளவரசனுனன் வளர்ப்புப் பெற்றோர்களுக்கு அன்புச் செல்வனாக இருந்து வந்தான். ஆயினும் அவனால் பெற்றோர்களுக்குத் தீங்கு விளையும் என்னும் சொல் கேட்டு அதனை நீக்குவதற்காக அந்நாட்டைத் துறந்து வெளியேறினான். அவ்வாறு துறந்து திரிந்தபோது தீப நாட்டுக்கு வந்து விட்டான். அப்போது தீப நாட்டில் குழப்பமாயிருந்தது.

மன்னன் இலேயன் இனந்தெரியா ஒருவனால் கொல்லப் பட்டான். பிங்கினி என்னும் அரக்கி யொருத்தி தன் தந்திரக் கேள்விக்கு விடைசொல்லாத மக்களை யெல்லாம் கொன்று வந்தாள். ஒருவராலும் அவளுக்கு விடை சொல்ல இயலவில்லை. ஒதிபன் வந்தான். அவளுடைய கேள்விக்கு விடைகூறி அவளுடைய ஆற்றலை ஒழித்தான். மக்கள் அவனை மகிழ்ந் தேற்றுத் தீப நாட்டின் முடியைச் சூட்டினர். கணவனை யிழந்த அரசி யோகத்தாளை மணந்து அமைதியாக நாட்டை யாண்டான். அவனுக்கும் அரசி யோகத்தாளுக்கும் குழந்தைகள் பிறந்தன. இவ்வாறே பதினைந்தாண்டுகள் சீரும் சிறப்புமாக வாழ்ந்தனர். ஆயினும் அவர்கள் வாழ்வினுள்ளே மறைந்து கிடக்கும் அவமானமும் அருவருப்புமான நிகழ்ச்சிகள் அவர்களுக்குத் தெரியாமலிருந்தன. தெய்வங்கள் இனியும் இக்கேடு நீடித் திருக்கக் கூடாது என்று தீபநாட்டைப் பஞ்சம், தொற்று நோய் முதலியவற்றால் ஒழிக்க முற்பட்டன. மக்கள் அக் கொடுமைகளை ஆற்றாராய், அரசனையும் அப்பலோ தெய்வத்தை யும் அணுகினர். இங்கு நாடகம் தொடங்குகிறது.

## நாடக உறுப்பினர்

| | | |
|---|---|---|
| ஓதிபன் | ... | தீபநாட்டு மன்னன் |
| யோகத்தாள் | ... | ஓதிபன் மனைவி |
| கிரியோன் | ... | யோகத்தாளுடன் பிறந்தவன் |
| திரியோன் | ... | குருடன்; உறுவதுரைப்போன். |

செய்தி சொல்லி, இடையன், வேலையாள், தீப நாட்டு முதியவர்களின் குழு, அரசனின் வேலையாட்கள், அரசியின் வேலையாட்கள், தீப நாட்டு மக்கள்.

## காட்சி

### தீப நாட்டு அரண்மனைக்கு முன்னால்

அரசன் மனைக்கு முன்னிருக்கும் படிக்கட்டுகளின் மேலும், பிற இடங்களிலும் தீப நாட்டு மக்கள் வணக்கத்துடன் உட்கார்ந்துகொண்டிருக்கின்றனர்.

[ஓதிபன் மத்திய வாயில் வழியாக வேலையாட்களுடன் வருகிறான்.]

**ஓதிபன்:** மக்களே! பண்டைய கதுமன் வழி வந்தவர்களே, நீங்கள் இவ்வாறு வணங்குவதன் காரணமென்ன? இப் பூங்கொத்துக்களும் மாலைகளும், நறுமணமூட்டும் பொருள்களும் ஏன் நிரம்பக் கிடக்கின்றன? இவைகளைப் பற்றியெல்லாம் செய்தி சொல்லிகளால் அறிவதைக் காட்டிலும் நேரில் தெரிந்துகொள்ள ஓதிபன் என்னும் யானே இங்கு வந்துள்ளேன். (பூசாரியை நோக்கி) பெருமைக்குரியவரே, தாங்கள் முதியவராதலின் இவ்வனைவருக்கும் என்ன நேர்ந்தது என்பதைக் கூறுங்கள். ஏதேனும் அஞ்சத்தக்கன நேர்ந்துள்ளதா? அன்றி ஏதேனும் வேண்டி வந்துள்ளார்களா? உங்களுக்கெல்லாம் விருப்புடன் எதையுஞ் செய்து உதவ இருக்கிறேன். இவ்வாறு அனைவரும் கூடிக்குறையிரந்து கொள்வதைக் கேளாமல் காதை மூடிக்கொள்வேனாயின் நன்னெஞ்சமற்றவனாவேன்.

**பூசாரி:** எம் தலைவரே! மன்னவரே!! குஞ்சு குழந்தைகளும் இளைஞரும், முதியவர்களும், பூசாரிகள் என அனைவரும் இங்கு வந்திருப்பது எதற்காகவெனின் கூறுவேன். நம் நகரத்தின் தீவினையைத் தாங்கள் காணுகிறீர்கள். பெருவாரி மக்கள் மரண அலையினால் இழுக்கப்பெற்றுத் தப்புதற்கு வழியில்லாமல் போயினர். செழிப்பான நிலவளத்திற் பிறந்தவர்களின் ஆடுமாடுகள் இறந்துபோகின்றன. குழந்

தைகள், குழந்தைப் பருவத்தேயே இறந்துபடுகின்றன. இவை யாவற்றிற்கும் காரணமான தொற்றுநோய் என்னும் அரக்கன் நகரத்தைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு, கதுமன் வழிவந்தோரை வேரறுத்து நரகுக்கு அனுப்பிக் குவித்து, அழுகையில் திளைக்கச் செய்துள்ளான்.

இப்போது நாங்கள் தங்களிடத்தில் ஏன் வந்துள்ளோம் என்றால், யானும் இந்தக் குழந்தைகளும் தங்களிடத்தில் வேண்டுகோள் செய்துகொள்ளவேயன்றி, தங்களைப் பொறுப் பாக்கவல்ல. தாங்கள் மனித வலிமைக்கு மேற்பட்ட ஒன்றை எதிர்க்க வழிசெய்ய வேண்டும் என்று வேண்டிக் கொள்ள வந்துள்ளோம். கதுமன் நகரத்திற்குப் புதிதாக வந்த தாங்களே, எங்களை அக் கொடிய மந்திரக்காரியின் தளைகளிலிருந்து விடுவித்தீர்கள். நாங்கள் இப்படித்தான் செய்ய வேண்டும் என்று சொல்லுதற்கு உரிய அறிவு இல்லாதிருந்தும், தெய்வத்தின் உதவியால் தாங்கள் எங்களுக்கு உயிர்கொடுத்தீர்கள்.

வீரர் பெரும, இப்போது தாங்கள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று வேண்டுகிறோம்.

தெய்வமோ, கடவுளோ காட்டும் வழியொன்றைப் பின்பற்றி எங்களை இம் மரணப் படுகுழியினின்று மீட்டுக் கொடுக்க வேண்டுகிறோம். பழைய நிகழ்ச்சியினால் இப்போதும் தங்களால் இயலும் என்று அறிவோம். எனவே மனிதர்களில் மிகப் பெரியவரே நம் நகரத்தை வாழ வையுங்கள். தங்கள் பெருமைக்குப் பாடுபடுங்கள். முன்னமேயே ஒருமுறை தங்கள் திறன் வாய்ந்த உழைப்பு எங்களைக் காப்பாற்றிற்று. தங்கள் ஆட்சியில் இக் குறையும் நீக்குவீராக. நம் நகரத்தைக் காப்பாற்றி இனி என்றும் தீங்குள்ளாகாதவாறு செய்யுங்கள்.

அன்று எங்களுக்கு நல்லதிர்ஷ்டத்தைத் தந்த அவ்வான ஒலியே இன்றும் நல்லதற்கு வழிகாட்டுக. எங்கள் மன்னனாகத் தாங்கள் இருக்கவேண்டுமாயின் வாழும் மனிதர்களின் அரசனாக இருங்கள். பிணமாக வெறிச் சென்று போனபின் என்ன இருக்கிறது? கோட்டைக்குள் மனிதர்கள் இல்லையென்றாலோ, கப்பலுக்குள் மனித மூச்சேயில்லை யென்றாலோ, கோட்டைக்குத்தான் வலிவேது, கப்பலால்தான் வெற்றியேது?

(தொடரும்)

# சித்தாந்த சைவத் தேர்வுகள்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தென்னிந்திய சித்தாந்த சங்கத்திலிருந்து ஆண்டுதோறும் கீழ்க்கண்ட சமயத் தேர்வுகள் நடைபெறும். இவ்வியாண்டு 1960 (1136 புரட்டாசித் திங்கள்) இறுதி வாரத்தில் நடைபெறும்.

1. சித்தாந்த இளம்புலவர் தேர்வு:

சாத்திரம்: (1) முதற் சைவ வினாவிடை (ஆறுமுக நாவலர்)
(2) பூப்பிள்ளை அட்டவணை (கழகம்)
(3) சித்தாந்தப் பிரகாசிகை ,,
(4) ஞானாமிர்தக் கட்டளை ,,
(5) திருவருட்பயன் மூலமும் உரையும் ,,
(6) சிவப்பிரகாசம் ,, ,,
(7) சிவஞானபோதச் சிற்றுரை
—கா. சுப்பிரமணிய பிள்ளை ,,
(8) சைவப்பிரகாசனம் ,,

தோத்திரம்: அகத்தியர் தேவாரத்திரட்டு ,,
திருவாசகம் (திருச்சதகம்) ,,

2. சித்தாந்தப் புலவர் தேர்வு:

சாத்திரம்: (1) இரண்டாம் சைவ வினாவிடை (நாவலர்)
(2) சிவஞானபோதச் சிற்றுரை
(சிவஞானசுவாமிகள் பொழிப்பு)
(3) சிவஞான பாடியம் (பொது அதிகாரம்)
(4) சிவஞானசித்தியார்
(சிவஞான சுவாமிகள் உரை
பொது அதிகாரம்)
(5) சிவஞானசுவாமிகள் உரைச்செய்யுள்
(6) தர்க்க சங்கிரகம்
(7) சைவசித்தாந்த ஞானபோதம்
(மறைமலையடிகள்)

தோத்திரம்: பதினோராந்திருமுறை

இளம்புலவர்த் தேர்வில் முதல் மதிப்பெண் 60-க்கு மேற் பெறுபவர்க்கு ரூ. 40/-ம் இரண்டாவது மதிப்பெண் 50-க்குக் குறையாமல் பெறுபவர்க்கு ரூ. 30/-ம், மூன்றாவது மதிப்பெண் 40-க்குக் குறையாமல் பெறுபவர்க்கு ரூ 20/-ம் பரிசளிக்கப் பெறும். புலவர்த் தேர்வில் முதல் மதிப்பெண் 60-க்குமேற் பெறுபவர்க்கு ரூ. 50/-ம், இரண்டாவது மதிப்பெண் 50க்குக் குறையாமல் பெறுபவர்க்கு ரூ. 40/-ம் மூன்றாவது மதிப்பெண் 40-க்குக் குறையாமல் பெறுபவர்க்கு ரூ 30/-ம் பரிசளிக்கப்பெறும்.

ஓம்

செவ்வேள் துணை

# ஞானியாரடிகளின் நல்லுரை

## [ஆவியுலகத்திலிருந்து]

திருச்செந்தூரில் விளங்கிவரும் திருக்குமரனும் சேவற் கொடியோனைச் சிந்தித்து அவனைப் பன்முறை வணங்கி அவன் கருணை எம் மெய்யன்பர்க்குக் கிடைக்க, யாமென்றுமே வணங்குவோமென்ற கருத்தை அறிய வேண்டிக்கொண்டு "திருக்குமரன் தோற்றம்" என்ற பொருளைத் தலைமையாகக்கொண்டு சிறு சொற்பொழிவு இயக்குநர் குகனருள் கொண்ட குற்றாலலிங்கம் வழித் (திருப்பாதிரிப்புலியூர் மறைத்திரு ஞானியாரடிகள்) வகைதெரியாது திகைத்துவரும் அன்பர்களுக்காக இதனை வரைகின்றோம்.

திருக்கூத்தனின் ஐந்தொழில்களில் ஒன்றாகிய அருளுதல் என்பதற்கோர் இலக்கணமாய்த் திருமுருகன் அவன் வழியே திருத்தோற்றமுற்றுப் பற்பல வடிவுகளுடன் வழக்கில் வழிபடுதற்குரிய முழுமுதற்கடவுளாய் விளங்கி வருகிறான் என்பதை எவரும் எளிதில் மறுக்க முடியாது; மறக்கவு முடியாது. திருக்குமரன் இஞ்ஞாலத்துத் தோன்றியருளுவதற்குக் காரணம், அக் காலத்து அசுரகுலத்தவரால் சிவத்தொண்டர்களும், வைணவத் தொண்டர்களுமாய் வானுலகில் வாழ்ந்த விண்ணோர்க்கு இடையூறு விளைந்தது. அதனை அவர்களால் பொறுக்கமுடியாமல் முழுமுதற் கடவுளும், ஆலகால நஞ்சுண்டவனும், ஒவ்வொரு தொழிற்குமுரிய துறைக்கென ஒவ்வொரு வடிவையும் தன் ஆற்றலிலிருந்தே படைத்து வேண்டுவார்க்கு வேண்டுவன ஈயும் அவனே தனிப்பெருங் கருணையுடன் காத்தற் றொழிற்கும் அழித்தற் றொழிற்கும் அருளற் றொழிற்குமாய் அரியதோர் படைப்பினைப் படைத்துத் தேவர் தமக்காகவும், அவன் படைப்பாகிய நம்மெல்லாருக்குமாகவும் கனிவுகொண்டு கருணையுடன் அனுப்பியருளினன் என்பதே.

இத் தன்மைகளெல்லாம் ஒருங்கே அமையப்பெற்றவனே திருச்செந்திலுறைபவனவன். அவனே குன்றுதோறாடல் என்பன போன்ற பற்பல இடங்களிலும் பற்பல தோற்றத்துடன் எழுந்தருளியுள்ளான். அவனருளினாலே இத் தோற்றங்களுள் அருளுடை வடிவாய்த் தனியொரு தோற்றமாய்ப் பால கோலத்துடன் திருச்செந்திலம்பதியிலமர்ந்து கருணைபொழி முகத்தின

ணைய்த் திருமுகங்களோராறும், திருக் கைகள் பன்னிரண்டும் கொண்டு, அசுரர் தம்மைப் போர்முகத்தில் புறமுதுகிட்டோடச் செய்து கருணைகொண்ட முகத்தினனையும் திருச்செந்திலம்பதி யின்கண் இவ்விரு தோற்றமுங் கொண்டருளி அமைந்தன னென்பதே அறிவுடையோர் கொண்ட கொள்கையும், அவனரு ளால் எமக்குத் தெரிந்த கொள்கையுமாகும்.

இவ்வகையான தன்மை அமையப்பட்டவனைத் திருச் செந்திலம்பதியில் உறைந்து அவனை வேண்டி வரும் அன்பர் குழுவிற்கு அருள்புரிந்து வருகின்றானென்பது யாவரும் அறிந்ததே. அன்னவன் நேர் நின்று போர்புரியத் திருவுளங் கொள்ளாது அசுரர் குலத்தை யழிக்க முதற்கொளலாய்க் கொண்டது அவன் திருக்கையில் தாங்கியிருக்கும் திருவேல். அவ் வேலினாற்றான் அவன் அசுரர் குலத்தை வேருடன் அழித் தனன். கருணைபொழி திருமுகத்துடன் இன்னொரு திருக் கையினால் அஞ்சற்க என நமக்கு உறுதியருளும் தோற்றத் தன்மையனைத் திருக்கையினைத் தூக்கி நேராக நெஞ்சளவின் நிறுத்திக் காட்டியருள்கின்றனன். இதன்பொருள் எம்மிடம் வருவோர்க்கும் எம்மை நினைந்துருகுவோருக்கும் அஞ்சல் (அபயம்) இங்கிருக்கிறது என்பதே அதன் கொள்கை நிலையாகும்.

மேலும் அவன் திருக்கையிற் கொண்டுள்ள வேலை வணங்கு வதும் அவனை வணங்குவதும் ஒன்றே. வேலை வணங் குதலென்பது வேலையுடைய கருத்தாவை வணங்குத லென்றே பொருள்படும். அதனால் வேல் வேறு அவன் வேறு என்றெண்ணுதல் ஒவ்வாதென்பது எம் கருத்து. அதனை எவரும் மறுக்கத் துணியார்கள் என்பதும் எளியனாகிய (ஞானியாரடிகள்) யான் ஞாலத்தின்கண் கண்டதும் தேற்றியது மாகிய கருத்து.

திருக் குமரவேளை நாளும் நாளும் அன்பர்கள் தம் நல்லுள்ளத்தில் எண்ணுதல் அம்மையப்பரை உன்னுதலென் பதே. வேல் வேறு சிவம் வேறு என்ற கொள்கை தவறு. ஐந்தொழிற்கும் உறைவிடமாய அங்கயற்கண்ணி பங்கன் அழித் தற்கோலத்தைத் தான் மேற்கொண்டு ஆடிய பெருமை அனைவரு மறிந்ததே. அத்தொழிலை அவனருள்கொண்டு செய்துமுடித்து, மற்றைய தொழில்களுக்குரியவற்றை அவன் தன் ஆற்றலி லிருந்தே பிரித்தெடுத்தருளினன். அன்னவனே இக்கோலங் கொண்டு நிலவுலகில் வைணவக் கடவுளாகிய திருமாலையும் தோற்றுவித்தருளினன். மேலும் எப்பணியையும் இயக்கு முன்பு அவன் தன் திருவுருவத்திற்றானே தோன்றிய யானை

மூகப் பிள்ளையாரை முதற் பொருளாக என்றும் வைத்து வணங்கும் ஒழுங்குமுறையை உலகுக்கு ஈந்து மோன நிலையினை யடைந்து உருவற்ற ஓர் அருவுருவனுய் - சிவத்தூ (இலிங்கம்)ணுய் அமைந்திருக்கின்ருன் என்பதே உட்பொருள். இம் மெய்ம்மையினை எவரும் உறுதியாக, மனத்திற்கொள்ளுதல் மதியே.

பின் விரிவுரை செய்வோம்.

அன்பன்

மறை ஞானியாரடிகள்

காணுவுலக வாசி.

குறிப்பு : மறைத்திரு ஞானியாரடிகள் ஆவியுலகினின்றும் ஞாலத்தோர்க்கு நல்லன புரியவேண்டுமென்னும் நன்னேக்கத்துடன் இச்சீரிய கட்டுரையை இயக்குநர் திருநெல்வேலி திரு. ஆர். என். குற்ருலலிங்கம் பிள்ளையவர்கள் வாயிலாக வெளிப்படுத்துள்ளார்கள். கட்டுரையின் கருத்துக்கள் சிறந்தனவாயிருப்பதுடன் அடிகளார் நிலவுலகத்து வாழ்ந்த காலத்து இனிய வாய்மொழியாகவும் எழுத்து வடிவமாகவும் வழங்கிய வாய்மை வண்கொடைகளை மெய்ப்பிக்கின்றமையா லீண்டு வெளியிடுகின்ரும்.

## தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு 1960 சனவரி இறுதி வாரத்தில் ஆங்காங்குள்ள புலவர் கல்லூரிகளிலும், திருநெல்வேலி சென்னை போன்ற முக்கிய இடங்களிலும் நடைபெறும். தேர்வு முடிவு 1960 மார்ச்சு முதல் வாரத்தில் தெரிவிக்கப்படும். ஆதலால் விண்ணப்பங்களை கட்டணத்துடன் 1959 டிசம்பர் 10 ஆம் தேதிக்குள் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பிவைக்கவும்.

கட்டணம் :
வித்துவான் புகுமுகம் ரூ. 1/-
,, முதனிலை ரூ. 2/-
,, இறுதிநிலை ரூ. 3/-

பு சி புன்னைவனநாதன்,
புலவர்குழுத்தலைவர்,
தென்னிந்திய தமிழ்ச்சங்கம்,
98, கீழைத்தேர்த்தெரு,
திருநெல்வேலி.

தாராபுரம் விவேகானந்த சபையின்

# தீர்மானங்கள்

தாராபுரம் பெரியகடை வீதி, விவேகானந்த சபையில் 16-8-1959 ஞாயிறு மாலை 6 மணி அளவில் புலவர் திரு. ந. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் தலைமையில் தமிழன்பர்கள் பொதுக் கூட்டம் ஒன்று நடைபெற்றது. அது சமயம் திரு. மே. சி. சிதம்பரனார், அவர்களும். புலவர் கொங்குச் செல்வர், டாக்டர் எம்.ஏ. லத்திப் அவர்களும், தமிழ்க்கடல் மறைமலையடிகளாரும், தமிழ்த் தென்றல் திரு. வி. கலியாண சுந்தரனார் அவர்களும் தமிழுக்குச் செய்த பெரும்பணி குறித்தும் அவர்கள் தமிழ் உரை நடைச் சிறப்புக் குறித்தும்-அவ் வுரைநடையினை இன்று சிலர் தாழ்த்திக் கூறியது குறித்துக் கண்டித்தும் சொற்பொழிவு நிகழ்த்தினர். அக்கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டன.

(1) 1959 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 1, 2 தேதிகளில் சென்னையில் நடந்த தமிழ் எழுத்தாளர் மாநாட்டில் ரா. ஸ்ரீ. தேசிகன் என்பவர் தமிழ்க்கடல் மறைமலையடிகளார், தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தரனார் ஆகிய மூதுபெரும் தமிழ்ப்பெரியார் இருவரையும் அவர்தம் உரைநடை மாண்பையும் இழித்தும், பழித்தும் பேசியமைக்கு இக்கூட்டம் வருத்தத்தையும் வன்மையான கண்டனத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறது.

(2) திரு. ரா. ஸ்ரீ தேசிகனின் செயல் தமிழ் அறிஞர்களையும் தூய தமிழ் நடையினையும் இழிவு படுத்துவதோடு தமிழினத்தின் உள்ளம் ஆறாப் புண்ணுறும் வகையில் அமைந்திருப்பதால் அவர்தம் தகாத செயலை உணர்ந்து, வருந்தி மன்னிப்பு வேண்டும் நிலையைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தோற்றுவித்தல் வேண்டும் என்றும் இக்கூட்டம் தீர்மானிக்கிறது.

(3) ஆண்டுதோறும் செப்டம்பர்த் திங்களில் தமிழ்க்கடல் மறைமலையடிகளார், தமிழ்த்தென்றல் திரு. வி. கலியாணசுந்தரனார் ஆகியோரின் நினைவு நாளை விழாவாகக் கொண்டாடுமாறு கல்வி நிறுவனங்கள் அனைத்துக்கும் அரசியலார் ஆணையிட வேண்டும் எனவும் இக்கூட்டம் வேண்டுகிறது.

**குறிப்பு:** உண்மைச் செந்தமிழ் ஆர்வமிக்க இச்சபையினர் காலத்தொடு பொருந்தத் தம் வன்மையான கண்டனத்தை வெளியிட்டுத் தனித் தமிழையும் தமிழ்ப்பெரியார்களின் பெருமைகளையும் நிலை நாட்டியுள்ளமையைப் பெரிதும் பாராட்டுகின்றோம். ஏனைக் கழகத்தினரும் இம்முறையில் முன்வருவார்களாக.

# இளமைபெற்ற கதை

[திரு. கு. அ. இராமசாமிப் புலவர்]

ஒரு காலத்தில் ஓர் ஊரில் மூலன் என்னும் பார்ப்பான் ஒருவன் இருந்தனன். கல்வி கேள்விகளில் அவன் வல்லவன். அவனுக்கு மாணவர்களும் இருந்தனர். அகவை முதிரப்பெற்ற அவன் இளமை அடையவேண்டும் என்று எண்ணினான். நரை திரை போக்கும் மூலிகை கஞ்சமலையில் உள்ளது என்று உணர்ந்தான். தன் மாணவன் ஒருவனோடு மேற்படி மலைக்குச் சென்று

வெகுநேரம் தேடியபின் தன் மாணவனைச் சமையல் செய்யுமாறு கூறிவிட்டுத் தான்மட்டுந் தேடிக்கொண்டிருந்தான். சமையல் செய்துகொண்டிருந்த மாணவன் பக்கத்தில் அகப்பட்ட மரக்கொம்பு ஒன்றினால் சோற்றைக் கிளறினான். அக் கோல் கருநெல்லிக்கோல் ஆகையால் உணவு கறுத்துப்போய்விட்டது. உணவு கெட்டுப்போனதற்கு ஆசிரியர் சினங்கொள்வாரே என்று அஞ்சிய அம் மாணவன் அவ்வுணவைத் தானே உண்டுவிட்டு வேறு சமையல் செய்தான். சமையல் முடிவதற்குள் அவனுடைய முதுமைபோய் இளமைவந்து பதினாறாண்டிளைஞனாக

யர் வந்தால் யாது சொல்வரோ என்று அஞ்சிய மாணவன் ஓரிடத்தில் ஒளிந்துகொண்டிருந்தனன். ஆசிரியன் அங்குவந்து மாணவனைக் காணாது கூப்பிட்டனன். மறைவில் இருந்த மாணவன் வெளியே வந்தான். அடையாளந் தெரியாது ஆசிரியன் திகைத்தனன். மாணவன்தான் இளமைபெற்ற வகையைக் கூறினான்.

“உணவைக் கிளறிய கொம்பு எங்கே?” என்று ஆசிரியன் கேட்க, மாணவன் தான் அதை அடுப்பில் போட்டு எரித்துவிட்டதாகக் கூறினான். ஆசிரியன் வருந்தினான். “உன்னுடைய வாயில் உடனே விரலைவிட்டு நீ உண்ட உணவை வாந்தி செய்வாயாக” என்றனன். மாணவனும் அவ்வாறே செய்ய ஆசிரியன் அதனை உண்டு தானும் இளமை பெற்றான். இவ்வாறு இருவரும் இளமை பெற்றார்கள்.

[கரபுரநாதர் 'புராணம் கஞ்சமலைச் சருக்கத்தில் கூறப்பட்ட இச் செய்தியைக் கொங்குமண்டல சதக உரைகாரர் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்.]

“அந்தமா ணாக்கன் தன்னை அடுகைநீ செய்யென் றோதி
புந்தியின் மருந்து தேடிப் போயினன் அயலிற் சீடன்
உய்ந்திடக் கருநெல் லிக்கொம் பொன்றினால் அனந்து ழாவ
வெர்தனங் கரிபோ லாக வெருவிஅன் னத்தை உண்டான்.
நரைதிரை மாறி மேனி நடந்தவீ ரெட்டாண் டேபோல்
புரையிலா அழகு பெற்றுப் புடமிடு பொன்போல் ஆனான்.
துழாவிய கொம்பெங் கென்றான் சுல்லியிற் போட்டேன் என்ன
வழாதுநீ உண்ட சோற்றை வாயினிற் கக்கென் றோத
விழாதசோ றதனைக் கக்க மிச்சிலைக் குருவும் உண்டான்
தொழாரெவர் இவர்கள் தம்மைச் சுந்தரப் பால ரானார்.”

# *இன்புற என்தனி நாடு எழுக!

[வித்துவான், மாவை. துரை. பழநி மகாதேவன்.]

யாங்ஙனம் உள்ளம் அச்சம் நீங்குமோ,
யாங்கு தலைநிமிர் செலவுண்டோ, யாங்கு
யாவரும் அறிவொளி பெறுவரோ, யாங்கு
மன்பதை குறுகிய கொள்கையாம் குறுஞ்சுவர்
அதனாற் பிரியுத லில்லதோ, யாங்கு
பேருண்மைப் புதையில் பெரியதோர் சொற்றான்
தோன்றுத லுண்டோ, தொலையா அயரா
உழைப்பான் முழுதும் உரிமை எய்துமோ,
யாண்டு பகுத்தறி வாம்பேரி யாறு
மூடக் கொள்கையாம் முழுப்பாலை தன்னில்
சுவறித்தன் தோற்றம் வழிகளை இழத்தல்
இல்லதோ, யாங்கு எண்ணமும் செயலும்
தொடர்ந்தினி தியங்க உளமுந்தப் பெறுமோ,
ஆண்டு வீடதாம் விடுதலை சிறக்க
இன்புற என்றனி நாடுதான் எழுகவே!

* தாகூரது கீதாஞ்சலி பாடலொன்றின் தழுவல்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) ஆங்கிலத்திற்கும் இடமுண்டு

"ஆங்கிலத்திடம் எனக்குத் தனிப்பற்று உண்டு. தொழில் நுட்ப அறிவு வளர்ச்சிக்கு அது இன்றியமையாதது...மக்களுக்குத் தேவைப் படும்வரை ஆங்கிலம் மற்றொரு ஆட்சிமொழியாக இந்தியாவில் நீடிக்க வேண்டும்...இந்தி பேசாத மக்கள்மீது இந்திமொழியைத் திணிக்க லாகாது. இந்தி படிப்படியாக வளரும்வரை மாநிலங்கள் ஆங்கிலத் தைப் பயன்படுத்த அனுமதியளிக்க வேண்டும்" இவை கடந்த 7-8-59 இல் மக்கள் மன்றத்தில் பேசியகாலை இந்திய முதலமைச்சர் பண்டித நேரு அவர்கள் வெளியிட்ட கருத்துக்கள்.

மேலும் 4-9-59 இல் நடைபெற்ற விவாதத்தின்போது "ஆங்கிலம், இந்தியோடு இணைந்து ஆட்சிமொழியாகவே 1965-க்குப் பிறகும் நீடிக்கும். இதில் எவ்விதத் தடையுமிராது. ஆட்சிமொழிக் கொள்கையில் கட்டாயம் எதுவுமிராது. இந்திமொழி பேசாத மக்களுக்கு வேலைதரும் வகையிலோ பணித் துறையிலோ எத்தகைய இடையூறுகளும் இந்தியால் ஏற்படாதவாறு சட்டம் இயற்றப்படும். இந்திமொழியிடம் ஆர்வம் கொண்டவர்கள் இந்தியைப் பரப்பக் கொள்ளும் வெறிதான் இந்தி பேசாத மக்களுக்கு எரிச்சலையூட்டுகின்றது. இந்தியை ஆட்சிமொழி யாக்குவதும் ஆக்காததும் இந்தி பேசாத பகுதியில் வாழும் மக்களின் ஒத்துழைப்பைப் பொறுத்தே அமையவேண்டுவதாகும்" எனப் பேசி யுள்ளார்.

குறிப்பு: ஆங்கிலத்தின் இன்றியமையாமையையும், இந்தித் திணிப் பால் விளையுந் தீமைகளையும் உணர்ந்து அமைச்சரவர்கள் பேசியிருப்பது வரவேற்கத்தக்கதே. எனினும், இந்திபால் அவர் [illegible] கருத்துக்கள் மேலும் மாறவேண்டும். எவ்வகையினும் இந்திக்கு ஏற்றம் இருத்தல் ஆகாதெனவும், விரும்பிப் படிப்பவர்கள் படிக்கலாம் என்றும் [illegible]மியற்றும் அளவுக்கு மனமாற்றம் தேவை.

## (உ) தமிழ் கற்க உருசியர் ஆர்வம்

"ஒரு காலத்தில் எல்லாத் துறைகளிலும் சிறப்படைந்திருந்த தமிழ் மக்களின் வரலாற்றை அறிய உருசியர் (ரஷியர்) விரும்பு கின்றனர். தமிழ் இசை, ஓவியங்கள் கல்வெட்டுக்கள் முதலியவற்றை அறிய அவர்கள் ஆவலுள்ளவர்களாக இருக்கின்றனர்" என்று சென்ற திங்களில் நடைபெற்ற அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழாவில் தொடக்கவுரை ஆற்றிய உருசியப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பகுதிப் பேராசிரியர் திருவாட்டி எம். ஆதிலட்சுமி அம்மையாரவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: மற்ற நாடுகளைவிட ரஷியா தமிழகத்தைப் பற்றி அதிகம் அறிந்துகொள்ளல் வேண்டும். ஏனெனில் பண்டைத் தமிழகம், அரசியல், பொருளியல் துறைகளில் சிறந்து விளங்கிய நாடு. அதற்கு இலக்கிய ஏடுகளில் சான்றுகள் பல உள. அம்மையார் போன்றவர்கள் அவற்றை மேலும் உருசியர் உணர வழிவகை காண்பார்களாக.

(ங) இந்தி வெறியர்க்கு திரு. ஈ. வி. கே. சம்பத் இடித்துரை

"முதல் அமைச்சர் இன்றைய நிலைக்கேற்ப மொழிபற்றி உறுதி மொழி தந்திருக்கிறார். ஆனால் உள்நாட்டு அமைச்சரின் பேச்சு தெளிவில்லாததாகவும் ஏமாற்றமளிப்பதாகவும் இருக்கிறது. இந்தி வெறியர்கள் ஆணவத்தோடு பிறமொழிகளையும் பண்புகளையும் அலட்சியப்படுத்துகின்றனர். எப்பாடுபட்டாயினும் இந்தியை ஆட்சிமொழியாக்க முனைந்துள்ளனர். பீகாரில் வங்காளிப் பள்ளிகளை மூடியதும், உத்தரப்பிரதேசத்தில் உருதுமொழிக்கு வட்டாரமொழிக்குரிய தகுதி அளிக்கப்படாததும், தென்னாட்டில் மைல்கற்களில் இந்தி எண்கள் பொறிக்கப்படுவதும் ஆன செயல்கள் இந்த ஆணவத்தையே காட்டுகின்றன. பெரும்பான்மை பலத்தால் இந்தியைத் திணிக்க முயன்றால் அது வெற்றிபெறாது" என்று கடந்த 2-9-59 இல் இந்தியப் பாராளு மன்றத்தில் ஆட்சிமொழி பற்றி நடைபெற்ற விவாதத்தின்போது திரு. ஈ. வி. கே. சம்பத் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

குறிப்பு: ஆட்சி மொழியைப்பற்றி அரசியலார் அடுத்தடுத்துத் தெளிவில்லாத கருத்துக்களை வழங்கிவரும் இவ்வேளையில் திரு. சம்பத் அவர்களின் இடித்துரை ஏற்ற பலனைத் தருமென நம்புகிறோம்.

(ச) சென்னைக் காவல்துறை நூற்றாண்டு விழா

சென்னைக் காவல்துறையின் நூற்றாண்டு விழா கடந்த ஆகஸ்ட்டுத் திங்கள் இறுதியிலிருந்து செப்டம்பர்த் திங்கள் முதற்கிழமை முடியக் கொண்டாடப்பெற்றது. சென்னைக் காவல்துறையினரின் அரிய தொண்டினைப் பாராட்டி நாட்டிலுள்ள அமைச்சர்கள், அறிஞர்கள் நல் வாழ்த்துக்கள் அனுப்பியிருந்தனர். நகரில் பல கேளிக்கைகள் காவற்றுறையினரால் நடத்திக் காட்டப்பட்டன; ஊர்வலங்கள் நடைபெற்றன.

குறிப்பு: மற்ற மாநில காவல்துறையினரைவிடச் சென்னை மாநிலக் காவல்துறையினர் பல்லாற்றானும் திறம்படைத்தவர் எனப் புகழப் படுதலை நாடு அறியும். இத்தகைய காவல்படையினரின் பணியினைப் பாராட்டுகிறோம்—வாழ்த்துகிறோம். விழாவோடு நின்றுவிடாது காவல் துறை ஊழியர்களின் வாழ்வு வளம்பெறவும் அரசினர் வழிகோலுவார்களாக.

# மதிப்புரை

"சைவ வழிபாடு"

இச் சீரிய நூற்றொகுப்பினைத் தொகுத்துப் பதித்து வெளியிட்ட பதிப்பாசிரியர் திரு. இரா. கு. நல்லகுற்றாலம் பிள்ளை அவர்களாவர். இதன் விலை முப்பது காசு. இந் நூற்கண் திருமுறைகள், திருத் தணிகைப் புராணம், தொண்டர் புராணம், அருணகிரியார், தருமையா தீனம், காசி ரகசியம், சிவஞானமுனிவர், இராமலிங்க அடிகள், தாயுமானவர், சிவப்பிரகாசர் முதலிய திருவருள் நூற்களின் திருப்பாடல்களாக அறுபத்துமூன்று திருப்பாடல்கள் இறைவணக்கம், வேண்டுகோள், நன்னெறியொழுக்கம், உறுதி கடைப்பிடித்தல், முப்பொருண்மை, முழுமுதற் றன்மை முதலிய பல சிறந்த தலைப்புக்களில் அமைக்கப்பெற்றுள்ளன. தலைப்பமைப்பு முற்றும் பாட்டுக்களின் உள்ளுறையாக அமைந்துள்ளமை பெரிதும் பாராட்டுதற்கு உரியதொன்றாகும்.

மேலும் முற்பகுதியில் "சைவ நன்னெறி" யெனவும் பிற்பகுதியில் "சைவத்தின் சிறப்பு" எனவும் இரண்டு சிறந்த கட்டுரைகளும் விளங்கிப் பொலிகின்றன. சித்தாந்த சைவத்தின் சீர்மைபற்றி ஆங்கிலத்திலொரு கட்டுரையும், இக் குறிக்கோளை வலியுறுத்துவதாகிய மேற்புல அறிஞர் பற்பலரின் மூதுரைகளும் ஆங்கிலத்தில் பொறிக்கப் பட்டுள்ளன. இந் நூல் தொகுப்பாசிரியரவர்களின் அறுபத்துமூன்றும் அகவை நிறைவின் நினைவாகும். நல்ல பதிப்பு. கிடைக்குமிடம், இரா. கு. நல்லகுற்றாலம் பிள்ளை, பிள்ளையகம், இராசபாளையம். இங்ஙனம் செந்நெறிச் செல்வர்கள் ஒவ்வொருவரும் தத்தம் நினைவாகச் சின்னஞ்சிறிய நூல்கள் பல வெளியிட்டுச் செந்நெறியினைப் பேணுதல் சிறந்த சிவபுண்ணியமாகும். இந் நூலினைப் பொதுவாகச் செந்தமிழன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் பெற்றுக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

"தேவாரத் தல வணக்கம்"

காரைக்குடி "சிவநேசர் திருக்கூட்ட"த்தார் வெளியீடு. இவ் வெளியீடு நன்கொடையாக வழங்கப்படுவது. ஆனால் அஞ்சற்செலவின் பொருட்டுப் புதுக்காசு எட்டு அஞ்சற்றலை அனுப்புவித்தல் வேண்டும். இது செந்நெறிச் செல்வர்கள் அனைவர்கட்கும் கிடைத்தற்கரிய இன்றியமையாச் சீரிய நூலாகும். சிவபெருமான் வீற்றிருந்தருளுவதும், நால்வர் நாயன்மார்களால் திருப்பாடல்கள் பெற்றதுமாகிய திருவூர்கள் இருநூற்றெழுபத்தைந்தாகும். இவ் வூர்களை நாளும்சென்று நற்றமிழ்மாலை சாற்றி வழிபடுதல் இறப்பில் நற்றவமும் ஈடில் சிவத் தொண்டுமாகும்.

சோழநாட்டுத் திருப்பதிகள் நூற்றுத்தொண்ணூற்றொன்று, ஈழநாட்டுத் திருப்பதிகள் இரண்டு, பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினான்கு, சேரநாட்டுத் திருப்பதி ஒன்று, கொங்குநாட்டுத் திருப்பதிகள் ஏழு, நடுநாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டு, தொண்டைநாட்டுத் தலங்கள் முப்பத்திரண்டு, துளுவநாட்டுத் திருப்பதி ஒன்று, வடநாட்டுத் திருப்பதிகள் ஐந்து ஆக ஒன்பான் வகைய நாட்டுத் திருவூர்கள் இருநூற்றெழுபத்தைந்தாகும்.

இத் திருவூர்களை நாளும் நாம் நினைவுகூர்ந்து மலர்தூவிப் போற்றித் தொழுதல் வேண்டும். அதற்கு ஏற்புடைத்தாக இந்நூல் போற்றியென முடிகின்றது. இதனையும் திருக்கோவில் வழிபாடு, திருமட வழிபாடு, பொதுநிலைய வழிபாடு, வீட்டு வழிபாடு முதலியவற்றில் அருச்சனை நூலாகக் கைக்கொண்டொழுகுவது சாலச்சிறந்ததாகும். இதுபோன்ற சிவத்தொண்டு முதலியவற்றில் செந்நெறிச் செல்வர்கள் ஒவ்வொருவரும் முந்துறவேண்டுமென அன்பொடு மொழிகின்றோம்.

## மறைமலையடிகள் நூல்நிலையத்தின்

## முதலாண்டு நிறைவு விழா

13-9-1959 ஞாயிறு மாலை 5 மணிக்குச் சென்னை இலிங்கச் செட்டித் தெரு, நூலகக் கட்டிடம், திரு மல்லீசுரர் கோயில் மண்டபம் இவற்றிற்கு முன், சென்னை உயர்நீதி மன்ற நடுவர் உயர்திரு. வி. சுப்பிரமணிய நாடார் அவர்கள் தலைமையில் நடைபெறும். உயர்திரு. ஆர். சனார்த்தனம் நாயுடு அவர்கள் கொடுத்து வாங்கும் பகுதியினைத் திறந்து வைப்பார்கள். செந்தமிழ்க் காவலர், டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார், எம். ஏ., எம். எல். சி. அவர்கள் மறை திருநாவுக்கரசு அவர்கள் எழுதிய மறைமலையடிகள் வரலாற்று நூலை வெளியிடுவார்கள். கீ. இராமலிங்க முதலியார் எம். ஏ., அ. மு. பரமசிவாநந்தம் எம். ஏ. எம். லிட்., கு. அண்ணல்தங்கோ, க. அன்பழகன் எம்.ஏ., எம்.எல்.ஏ., இரா. பாலகிருட்டிண முதலியார் பி. ஏ. எல். டி. ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



நூல்நிலைய ஆண்டுவிழாக் காட்சி



சங்க அமைச்சர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள்
வரவேற்புரை நிகழ்த்துதல்



உயர்நீதிமன்ற நடுவர் திரு.. வி. சுப்பிரமணிய நாடார் அவர்கள்
தலைமையுரை ஆற்றுதல்



டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள் மறைமலையடிகள்
வரலாற்று நூலை வெளியிடுதல்




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, புரட்டாசி | பரல் |
| --- | --- | --- |
| ௩௪ | அக்டோபர், 1959 | ௨ |

ஓம்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தின் ஆதரவில் சென்னைக்கண் நிகழும்

## மறைமலையடிகள் நூல்நிலையத்தின்

# முதலாண்டு நிறைவுவிழா

இவ்விழா 13-9'-59, ஞாயிறு மாலை 5 மணிக்கு, இலிங்கிச் செட்டித்தெரு நூலகக் கட்டிடத்திற்குமுன் வனப்புற அமைக்கப் பெற்ற மாண்புமிக்க பந்தர்க்கீழ்த் தொடங்கப்பெற்றது. அப்பொழுது சென்னை உயர்நீதி மன்ற நடுவர் உயர்திரு, வி. சுப்பிரமணிய நாடார் அவர்கள் தலைமை பூண்டார்கள். பேரவைக்கண் கல்வி, அறிவு, ஒழுக்கம், செல்வம், முதன்மை முதலியவற்றால் சிறந்து எல்லாரும் ஒற்றுமையுடன் இலங்க விழையும் மக்களிருபாலாரும் திரளாகக் குழுமியிருந்தனர்.



திருமதி லீலா அம்மையாரால் முறையுற இறைவணக்கம் இயல்பாக அமைந்த இனியகுரலில் பண்ணோடு பாடப்பட்டது. எல்லாரும் அமைவொடும் எழுந்து ஒருங்கிய மனத்தராய்த் தமைமறந்து தொழுது நின்றனர்.

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தின் பொறுப்பாணையர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கள் இவ்விழாவுக்கு வந்துள்ளோரனைவர்களையும் நல் வரவேற்று நன்மொழி நவின்றனர். சுருக்கம் வருமாறு: "இதுகாறும் இறையருளால் அறிஞர் பலரும் இந் நூல்நிலையத்திற்கு வந்து குறித்த நேரம்வரை தங்கிப் படிக்கவும் பலதுறை ஆய்வுகள் பாங்குறப் புரியவும் அனைத்து நூல்களும் நல்லமுறையாகப் பயன்பெற்று வருகின்றன.

இனிமேல் பொருவரும் பெருமக்கள் பலரின் புகலரிய நன்மையை நாடி அவரவர்தம் இல்லங்கட்கு எடுத்துச் சென்று நல்லமுறையாகப் படித்து நலம் பெறவும் வாய்ப்பளிக்கப்பட்டுள்ளது. அதுவே "கொடுத்து வாங்கும் நூலகப் பகுதி" யாகும். இப்பகுதி முதற் றளத்தின்கண் அமைக்கப்பட்டுள்ளது. இதன்கண் இருபால் பெருமக்களும் திரளாகக் கலந்து நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் நலம்புரியும்வகையான் நூல்களைக் கற்றுப் பெரும்பயன் எய்துமாறு வேண்டுகின்றோம்.

பின்னர் இவ்வுலகின்கண் தந்நிகரில்லாச் சீர்சிறப்புடன் வாழ்ந்து அரும்பெரு நூலானும், உரையானும், நுண்மாண் நுழைபுலத்திறலமை பேச்சானும், நடைநொடி தோற்றப் பொலிவானும் பலரையும் தம் வயப்படுத்திப் பின்பற்றி யொழுகுமாறு வழிகாட்டிப் பெரும்புகழ் நிறீஇப் பருவுடல் நீத்து நுண்ணுடலோடும் அதன் காரியமாகிய எண்ணுடலோடும் வானிடைப் புக்கு மறைந்து நின்று வேண்டுவ புரியும் மறைமலையடிகளார் தம்மைக் காணுவுலகவாசி யென்கின்றனர். அவர்தம் விலைவரம்பில்லா நிலைபேறும் அருங்கருத்துக்களை நெல்லைக்கண் உறையும் ஓர் அன்புமிக்க இயக்குநர் (மீடியம்) வாயிலாக அவர்தம் செவிக்கண் உணர்த்தி வரைவித்து அவ்வப்போது நமக்குத் தண்ணளியுடன் அளித்தருளுகின்றனர். அம்மட்டோ? அவரேயனைய ஞானியாரடிகள், திரு. வி. க. முதலிய பெருஞ்சான்றோர் பலரும் அங்ஙனமே தத்தம் கருத்துக்களைத் தந்தளிக்கின்றனர்."

அம்முறையில் மறைமலையடிகளாரிடமிருந்து வந்துள்ள நூல்நிலைய ஆண்டுவிழா வாழ்த்தைத் திரு. வ. சு. அவர்கள் படித்தார்கள். இதுபோன்று காணுவுலகவாசியாகிய ஞானியாரடிகள், திரு. வி. க., வரகவி. பாரதியார், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, திராவிடக் கவிமணி வே. முத்துசாமி ஐயர், வ. திருவரங்கனார், திருவரங்க நீலாம்பிகையார் முதலியோர்களிடமிருந்து வந்த வாழ்த்துக்களும் இடையிடையே கழகத் தலைவர் பாகனேரி திருவாளர் மு. காசிவிசுவநாதன் செட்டியாரவர்க

ளாலும், திருநெல்வேலி சித்தாந்தமணி வித்துவான் திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளையவர்களாலும் படிக்கப்பட்டன.

பின்னர் நூலகர் திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., டி. எல். எஸ்ஸி அவர்களால் நூலக அறிக்கை படிக்கப்பட்டது. அது வருமாறு :

"தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தினரால் தனித் தமிழியக்கத் தந்தை மறைத்திரு. மறைமலையடிகள் திருப் பெயரால் நிறுவப்பட்டிருக்கும் இந்நூல் நிலையம் இறையருளால் 24-8-'58 இல் தொடங்கி நிகழ்ந்து வருகின்றது. ஓராண்டு நிறைந்து ஈராண்டு தொடங்கியிருக்கின்றது. இந்நூல் நிலையத்தில் தற்பொழுது ஏறத்தாழப் பன்னீராயிரம் நூல்கள் தொகுத்து வைக்கப் பெற்றுள்ளன. மறைமலையடிகள் தமிழ், ஆங்கிலம், வடமொழி ஆகிய மூன்று மொழிகளிலுமாகத் தொகுத்து வைத்துள்ள நாலாயிர நூல்களும் இதன்கண் அடங்கியுள்ளன.

சென்னை மாநிலக் கல்லூரியில் வரலாற்றுத்துறைப் பேராசி ரியராகப் பணிபுரிந்து காலஞ் சென்ற திரு. வி. அரங்காச்சாரியா ரவர்கள் தென்னிந்திய வரலாற்று ஆராய்ச்சிக்காகத் தொகுத்து வைத்திருந்த கிடைத்தற்கரிய பல நூல்களை வெண்பொன் ஆயிரத்து எழுநூற்றைம்பது கொடுத்துப் பெற்று இந் நூலகத்து நூல்களுடன் அவைகள் சேர்த்துவைக்கப்பட் டுள்ளன.

இலக்கியம், வரலாறு, தத்துவம் போன்ற சீரியதுறைகளில் நனிமிக ஆராயும் அறிஞர்க்குப் பயன் பெரிதும் தரக்கூடிய அவ்வப்போது வெளிவரும் நூல்களனைத்தையும் இந் நூலகம் விடாது வாங்கிவைத்துக் கொண்டு வருகின்றது. இவ்வாண்டில் வெண்பொன் ஓராயிரத்து எழுநூறு மதிப்புள்ள எண்ணூற்று ஐம்பத்தெட்டு நூல்கள் புதிதாக வாங்கிச் சேர்க்கப்பட்டுள்ளன. வெண்பொன் ஐந்நூறு மதிப்புள்ள இருபத்திரண்டுக்கு மேற் பட்ட திங்கள், கிழமை இதழ்கள் ஒழுங்காக வந்துகொண்டிருக் கின்றன. இந் நூலகத்தில் நூற்றாண்டுக்கு மேற்பட்டு வெளிப் போந்த பழந்தமிழ் நூல்கள் பல இருக்கின்றன.

இந் நூலகத்தை இவ்வாண்டில் பயன்படுத்திக்கொண்டோர் தொகை பதினாலாயிரத்து எழுநூற்றுப் பதினொன்றாகும். அவர்கள் படித்துப் பயனெய்திய நூல்களின் எண்ணிக்கை ஆங்கிலம் ஓராயிரத்து ஒரு நூற்றெண்பத்தேழும், தமிழ் ஐயாயிரத்து நானூற்று எழுபத்து மூன்றுமாகும்.

இந்நூலகச் சார்பில் நூல்நிலைய நுண்கலைப் பேராசிரியர் டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்களால் நூலகத்துறை

பற்றிய மூன்று அரிய சொற்பொழிவுகள் வெவ்வேறு காலங்களில் நிகழ்த்தப்பெற்றன. டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் அனைத்துலக நூற்பதிவுக் குழுவின் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டித் திசம்பர் பதினெட்டாம் நாள் ஒரு நல்விருந்தளிக்கப்பட்டது. அக் கொண்டாட்டத்திற்கு அண்மையில் காலஞ் சென்ற, வண்ணையம்பதித் தியாகராயக் கல்லூரி முதல்வர் திரு. ம கி. சண்முகம் அவர்கள் தலைமை தாங்கினார்கள்."

தலைவரவர்கட்கும் சொற்பொழிவாளர்கட்கும் அவ்வப்போது மணம்கமழ் மலர்மாலை சூட்டப்பெற்றது. பின்பு தலைவரவர்கள் அரியதோர் முன்னுரை நுட்பதிட்பமும், சுருக்க விளக்கமும், இனிமையும் தெளிவும் எடுத்துக்காட்டும் பொதுள ஆற்றினர். சுருக்கம் வருமாறு:

ஆசிரியர் மறைமலையடிகளார் தனித்தமிழியக்கத்திற்கும் தூய சிவனெறி வளர்ச்சிக்கும் திருவருளால் தோன்றிய ஒப்பில் பெரியார் என்பது அவர்தம் இளமைக்கால வாழ்க்கை தொட்டு ஆற்றிவந்த அரும்பெருஞ் செய்கைகளால் எவரும் நன்குணர்வர். தாம் நாகையிற் கல்வி கற்குங்கால் மேற்புலக் கிறித்துவத் தொண்டர் தம் சமயத்தை விளக்குவதும் பரப்புவதும் கண்டு தாமும் அங்ஙனம் தொண்டாற்றுதல் வேண்டுமென்று உளங் கனிந்து உறுதியாக எண்ணினர். எண்ணியாங்கு உழைத்தனர். நன்னெறிக்கழகம் கண்டனர். மாணவர்களும் பெருமக்களும் ஒருங்கியைந்து பெரும்பயன் கொண்டனர். செந்தமிழும் சிவனெறியும் தழைத்தோங்கின. அம்முறையாக வாழ்நாள் முற்றும் அவற்றிற்கே எழுத்தாலும் பேச்சாலும் அருந்தொண்டாற்றினர். ஒவ்வொருவரும் தத்தம் இளமைக்காலத்து, உண்மை உணர்ச்சியுடன் உயர்ந்த நோக்கொன்றனை உளுற்ற உறுதிகொள்வராயின் முழுமுதற் கடவுள் அந்நோக்கம் நிறைவேறுவதற்காம் ஆற்றலினையும் சூழ்வினையையும் அளித்தருள்கின்றனன் என்பது ஆங்காங்கு நிகழும் மெய்ம்மை நிகழ்வாகும்.

எடுத்துக்காட்டாக அமெரிக்க மாநிலத்து இஞ்ஞான்று பெரும்புகழும் பிறங்கப் பீடுடன் கொண்டாடப்பெறும் ஆபிரகாம் லிங்கன் அவர்கள் பதினைந்து பதினாறகவை இளமையாகவிருக்கும்போது தெருவின்கண் ஓர் அடிமை நீக்கிரோப் பெண் விற்கப்பட்டாள். அவள் விலைகொடுத்துப் பெற்றவனுடன் செல்ல இணங்கவில்லை. அவன் கடுஞ் சினமுடையவனாய்க் கசையால் குருதி பீறிடக் கொடுமையாக அடித்தனன். அதனைக் கண்டு ஆற்றொணாத் துன்பமெய்தி மனமுருகிய லிங்கன் எங்ஙன

மேனும் எவரும் எந்நிலையினும் எண்ணுதற்கும் அரிய இக்கொடிய அடிமை முறையினை அறுத்தொழிப்பே னென்று உறுதிகொண்டனர். அதற்குரிய பருவமேனும், குடும்பச்சூழ்வேனும், கல்வி செல்வம் முதலிய தகுதியேனும் அவர்க்குச் சிறிதும் அமைந்தில. எனினும் உள்ளத்துக்கொண்ட வுறுதியானே திருவருளாற்றல் உள்நின்றாக்கப் பிற்காலத்து அப்பெரிய தொண்டினை நிறைவேற்றி அடிமை வழக்கினை அடியோடு அறுத்தொழித்து முடியாப் புகழெய்தினர். இதனால் உள்ளத்துறுதியுடையார்க்குப் பேராற்றலும் பேரறிவும் பெருமுயற்சியும் திருவருளால் வேண்டியாங்குத் துணைபுரியும் என்பதுறுதி என்பதாம்.

திரு. சனார்த்தன நாயுடவர்கள் (சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் நூலகர்) 'கொடுத்து வாங்கும் நூலகப்பகுதி'யினைத் திறந்துவைத்துப் பேரார்வத்துடன் பேசியதன் சுருக்கம் வருமாறு :

இதுகாறும் இந்நூலகத்துக்கு வந்து படித்துப் பயன்பெறுவதுபோன்று வீட்டிற்கு வாங்கிச் சென்று படிப்பதற்கும் வாய்ப்பளிக்கப்படுகின்றது. இம்முறை பெருமக்களுக்கு நனி மிகப் பயனளிக்குமென்பதுறுதி. ஏறத்தாழ ஐம்பதாண்டுகளுக்குமுன் தமிழை இகழ்வதன்றிப் பொருட்படுத்துவாரெவருமிரார். மாணவர்களும் தமிழையும் தமிழாசிரியர்களையும் அறவே புறக்கணித்துத் திரிந்தகாள் அந்நாள். அந்நாளிலும் மறைமலையடிகள் தமிழ்ப்பாடம் நடத்துகிறார்கள் என்றால் மாணவர்களனைவர்களுக்கும் தனி எழுச்சியும், ஈடுபாடும், எவற்றினும் இல்லாத இனிமையும் உண்டாவதியல்பாகவிருந்தது. என் தமையனார் மேல்வகுப்பிலும் யான் அடுத்த வகுப்பிலும் கல்வி பயின்றுகொண்டிருந்தோம்.

எங்கள் தாய்மொழி தெலுங்கு; நாங்களும் ஏனையரும் விழைந்து கற்பது ஆங்கிலம். அங்ஙனமெல்லாமிருந்தும் எங்களுக்கு அடிகளார், குயிலினும் இனிய தம்மியற்கைத் தீங்குரலால் எளிமை பொதுளக் கற்பிக்குந் திறத்தால் இயற்கை இனிமைத் தமிழ்மொழிக்கண் தனித்ததோர் இன்பமும் ஈடுபாடும் உண்டாயின. எப்பொழுதும் தமிழ் வகுப்பு நேரத்தை மிக்க ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டே யிருப்போம். வீட்டிற்கு வந்தபின் நாங்களிருவரும் அடிகளாரைப்பற்றிப் பேசிப் பேசிப் பெருமகிழ்வு கொள்வோம். அந்நிலையில் அருந்தமிழ் மொழியினைத் தாய்மொழியாகப் பெற்ற உங்களுக்கெல்லாம் எங்ஙனமிருந்திருக்குமென்று யான் சொல்லவும் வேண்டுமோ? மறைமலையடிகளின் மாண்பினுக்கிரங்கி இக்கூட்டத்திற்கிடையூறாக மழை

வாதிருக்க இறை அருள் புரிவன் என்பது உறுதி. என்னை? அவன் நந்தனார் வேண்டுகோளின்படி தன் திருவுருவினை நேரே காணுவதற்கு நந்தியை விலகியிருக்கத் திருவருள் புரிந்தமையா னென்க. வழக்கமாக வந்துகொண்டிருந்த மழையும் அன்று வாராது நின்றது. தக்க பெரியவரைப் பற்றிப் பேசாத நாளெல்லாம் பிறவா நாள் என்று கருதுதல் வேண்டும். பெரியவர்களை இறைவன் அருளாளர் என்று கருதுதலே நம் நாட்டு வழக்கு. அந்நிலையில் நாம் மறைமலையடிகளைப் பற்றிப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளென்று கருதுவோமாக. அடிகளார் அல்லும் பகலும் ஆண்டவனிடம் வேண்டியது தமிழர் முன்னேற்றமொன்றே.

மேனாட்டு நூல்நிலையங்களில் படிப்பவர்கள் எந்நூலை எப்பொழுது படித்தாலும் அந் நூலாசிரியர்களையே கருத்திலும் கண்ணிலும் கண்டுகளிக்கின்றனர்; உறவாடுகின்றனர்; உணர்வு பெறுகின்றனர்; உணர்ச்சி யெய்துகின்றனர். அதுபோல் நாமும் மறைமலையடிகள் போன்ற மாண்புமிக்கார் நூல்களை மன வெழுச்சியுடன் படிக்குங்கால் ஆவோம் என்பது உறுதி. நூல் நிலையங்களால் கல்வியறிவும் உளத்தூய்மையும் கணக்கின்றி ஓங்கிவளரும். இந் நூலகத்திலுள்ள மறைமலையடிகளாரின் நூல் களைக் கண்ணுறுவார் நூல்களைக் கற்கும்முறை, காப்பாற்றுமுறை, குறிப்பெழுதுமுறை முதலியவற்றை நன்குணர்வர். நூலகப் பகுதியை வாழ்த்துவதுடன் நிறைவு செய்தனர்.

அடிகள் புதல்வர் மறை. திருநாவுக்கரசு வரைந்துள்ள "மறைமலையடிகள் வரலாறு" என்னும் நூலை டாக்டர் அ. சிதம்பர நாதன் செட்டியார், எம். ஏ., எம். எல். சி. வெளியிட்டுப் பேசியது பின் வருமாறு:

"அடிகளார் பெயரில் அமைக்கப் பெற்ற இந்நூல் நிலையம் சிறந்த அறிவுச் சுரங்கமாகத் திகழ்கின்றது. மேலும் மேலை நாட்டுப்பல்கலைக் கழக நூலகங்களுடன் ஒப்பிடக்கூடிய வகையில் அனைத்துமுறையிலும் சாலச் சிறந்து தனிமாண்புடன் விளங்கு கின்றது. மறைமலையடிகளாரை நம்மில் பலர் இன்னும் புரிந்துகொள்ளவில்லை. கற்றவர்கள்கூட அடிகளாரை நாம் ஏன் போற்றுகின்றோம் எனத் தெரியாதவர்களாக இருக்கின்றார்கள். தமிழ்மொழி தன்னிகரில்லாதது, அது தனியொரு முதல்மொழி, பிற மொழிகளின்வழி வந்ததல்ல என்பதனை உணராது உறங்கிக் கிடந்த தமிழர்களை உண்மை உணர்ந்து தலைநிமிர்ந்து நிற்கும்படி செய்தவர் மறைமலையடிகளேயாவர். பிற மொழிகளின் கலப் பின்றித் தமிழ்மொழி தனித்தியங்கக் கூடியது—தனித்தியங்க முடியும் எனக் காட்டியவர் ஒப்பில் ஒருவராம் மறைமலையடிகளே.

தமிழ் மொழியிலிருந்து வடமொழி தேவையான மட்டும் சொற்களைக் கடன் வாங்கியுள்ளது என்று முன்பு அடிகளார் கூறியதை உலகம் ஒப்புக்கொள்ளத் தயங்கியது. அது மட்டுமல்ல, அடிகளாரின் எழுத்திலும் பேச்சிலும் வடமொழி கலந்திருப்பதாக வழக்கிட்டனர் பலர். ஆனால் உண்மையில் வடமொழியில்தான் ஏராளமான தமிழ்ச் சொற்கள், திராவிடச் சொற்கள் கலந்துள்ளன. இதைச் சுனிதகுமார் சட்டர்ஜி போன்ற அறிஞரும், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகப் பேராசிரியர் பரோவும் ஒப்புக்கொண்டுள்ளனர். சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தில் 'சமஸ்கிருத மொழி' என்ற பெயரில், பேராசிரியர் பரோ எழுதிய நூல் ஒன்று உள்ளது. அதில் வடமொழி எங்கெந்த மொழியிலிருந்து சொற்களைக் கடன் வாங்கி வளமாகி யுள்ளது என்பது யாவர்க்கும் எளிதாக நன்கு தெரியும். அருளும் ஆற்றலும் மிக்க ஆண்டவனுக்குத் தமிழ் புரியாதா? விலக்குண்ட மொழியாகுமா? ஆண்டவனைத் தமிழில் வழி படுதலால் யாது குறையுறும்? அன்றே அடிகளார், நாட்டிலும் வீட்டிலும், அரசியலிலும், தமிழ் ஆட்சி செலுத்தவேண்டு மென்றும், கடவுளைத் தமிழில் எண்ணி, சொல்லி, வழிபட முடியும் என்றும் கூறினர். ஆனால் அவர் கூற்றை அன்றைய நிலையில் பலர் புரிந்து கொள்ளவில்லை. அடிகளார் பார்ப்பனப் பகைஞர் என்று பலர் தவறாகக் கருதுகின்றனர். தமிழ் மாண்பினை ஒப்புக்கொண்ட எந்தப் பார்ப்பனரையும் அடிகளார் வெறுத்ததில்லை. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் போட்ட நூல் என்றால் அதில் ஒரு பிழைகூட இராது என்ற எண்ணம் நாடெங் குப்பரவி வருகின்றது. அடிகளாரின் மகனார் எழுதிய இந்நூலில் அடிகளாருடைய பலவகை நிலையில் உள்ள படங்கள் பாங்குற மிளிர்கின்றன. நம்மை நல்வழியில் செலுத்த இந்நூல் நன்கு உதவும். அடிகளார் உலகைவிட்டு மறைந்த பின்பாவது அவர் கருத்தை எல்லோரும் ஒப்புக்கொண்டனர் என்பதை இந்நூல் காட்டுகின்றது. இந்நூலில் ஓர் ஏடு போனாலும் எந்நூல் என்று நன்கு தெரியும் வண்ணம இக்கழகத்தார் இந்நூலை மிக விழிப்பாக வெளியிட்டிருக்கின்றார்கள். திரு. கா. சு. அவர்கள், திரு. வி. க. அவர்கள் முதலியோர் அடிகளை எவ்வாறு போற்றி னார்கள் என்று விளக்கமாக இதில் கூறப்பட்டிருக்கின்றது.

பண்டிதமணி அவர்களுக்கும் அடிகளாருக்கும் அன்று ஏற்பட்ட சொற்போர்மேடையில் இருந்தவர்கள் சிலர்கூட இப் பொழுது இங்கே அல்லது பிற இடங்களில் இருப்பார்கள்.

'நாட்குறிப்பு' என்பது நம் சைவசித்தாந்தக் கழகத்தார் முதலில் நாட்டில் வழங்கிய ஒரு சொல். அடிகளார் எழுதி

வைத்திருந்த நாட்குறிப்புக்களிலிருந் தெடுத்தவையும் பிறவும் சேர்த்துத்தான் திருநாவுக்கரசு அவர்கள் திரட்டி இந்நூலை எழுதியிருக்கின்றார்கள். அடிகளாரின் நல்ல திருமகனாராலே—திருநாவுக்கரசனாராலே 'மறைமலையடிகள் வரலாறு' என்னும் இந் நூல் நன்கு பெருமைப்படுகின்றது. இந்நூல் பலவகைச் சிறப்புக்கள் கொண்டிருப்பதால், கொட்டை எழுத்துக்களில் நன்முறையில் அருமைப்பாடுகளுடன் வெளியிட்டிருப்பதால் இதன் விலை மிகுதி என்று யாரும் நினைத்தல் கூடாது. மறைமலையடிகளாரவர்கள் தமிழுக்கே, தமிழ்நாட்டுக்கே, தமிழ் மக்களுக்கே பெருமை தந்தார் என்றால் அது மிகையன்று."

அடுத்து, கி. இராமலிங்கனார், எம். ஏ. அவர்கள் பேசியதன் சுருக்கம் வருமாறு :

"மறைமலையடிகளாருடைய பெருமையாக இருப்பது தமிழைப்பற்றிய உண்மைதான். தமிழ்மொழி இன்னொரு மொழியிலிருந்து தோன்றியது, இன்னொரு நாகரிகத்தில் இருந்து தோன்றியது என்று தப்பான ஒரு கருத்து நிலவி வந்தது. நமக்கு மட்டுமல்ல, தமிழ், உலகுக்கே தாய்மொழி எனப் பிற மொழியாளரும் தமிழைப்பற்றிய இவ்வுண்மையைக் கூறுவது தான் நமக்கு மகிழ்ச்சி.

மறைமலையடிகள் என்று தம் பெயரையே மாற்றிக்கொண்டவர்கள் அடிகள். ஒரு காலத்தில் தமிழ்ப் பெயரையெல்லாம் வடமொழிப் பெயராக மாற்றுவது என்று ஒரு நிலை நிலவி வந்தது. மறைக்காடு என்ற தமிழ்ப் பெயர் வேதாரணியம் என்ற வடமொழிப் பெயராயிற்று. முதுகுன்றம், விருத்தாசலம் ஆயிற்று. மயிலாடுதுறை மாயூரம் என்றாகிப் பின் மாயவரம் ஆகிவிட்டது. அங்கு வீற்றிருக்கும் இறைவி அஞ்சொல் நாயகி, அஞ்சல்—அபயம் என்றுகொண்டு அபயாம்பிகை என்று பேரை வைத்துவிட்டார்கள். நல்ல பண்புகளை—நல்ல பெயர்களை அடியோடு மாற்றிவிட்ட போக்கு இருப்பது கண்டபோது யாருக்குத்தான் மனம் பொறுக்கமுடியும்? வேற்றுமைகள் ஏன் என்ற எண்ணங் கொண்டுதான், உண்மையை உணர்த்துதற்கு ஓர் எடுத்துக்காட்டாகவே அடிகளார் தம் பெயரையே மாற்றிக் கொண்டார். சங்கராச்சாரியார் அடிகளாரின் வடமொழியறிவை நன்கு பாராட்டியிருக்கின்றார். தமிழ்நடையோடு கூடப் பிற சொற்கள் சேர்ந்து அதன் பயனாக மலையாளம் ஒன்று தோன்றிற்று. தெலுங்கு தோன்றிற்று. கன்னடம் தோன்றிற்று. இவையெல்லாம் தமிழ்தான். ஒவ்வொரு மொழிக்கும் ஒரு தனிச் சிறப்பு உண்டு."

பிறகு, காணுவுலகவாசிகளாகிய, திரு. திருவரங்கனுர், திருவாட்டி நீலாம்பிகை அம்மையார், திராவிடக் கவிமணி, வே. முத்துசாமி ஐயர் ஆகிய மூவரிடமிருந்து வந்த வாழ்த்துச் செய்திகளை வித்துவான் திரு. வே. மாணிக்கவாசகம் பிள்ளை யவர்கள் வாசித்தார்கள்.

பின்னர், பேராசிரியர், அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட். அவர்கள், பேசிய சுருக்கம் வருமாறு:

"எங்கோ திசை தெரியாமல் சென்றுகொண்டிருந்த தமிழ் நாட்டை நன்னிலையில் திருப்பிக்கொண்டு வந்தவர்கள் நம் மறை மலையடிகளாரவர்கள். தேர்ச் சக்கரத்துக்குக் கொடுக்கும் இருசுக் கட்டைபோல் முட்டுக்கொடுத்துப் பல பெரியார்கள் நன்னிலைப் படுத்துகின்றூர்கள்.

தொல்காப்பியருக்கு அவருடைய தாய்தந்தையர் இட்ட பெயர் நமக்குத் தெரியாது. ஆனல் மறைமலையடிகளுக்குத் தாய் தந்தையரிட்ட பெயர் வேதாசலம் என்பது நமக்குத் தெரியும். அப்பெயர் மறைந்துவிட்டது. கம்பருக்கு அவருடைய பெற்ருேர் வைத்த பெயர் நமக்குத் தெரியாது. 'பெற்ருேர் இட்ட பெயர் அழிந்து போனுலும் தமிழ்மக்கள் இட்ட பெயர் என்றும் அழியாது. தொல்காப்பியரின் பெயர் ஒல்காப் பெரும் பெயராக வளர்ந்து வருகின்றது. தமிழ்நாட்டிலே தனித்தமிழ் என்று சொல்கின்ற அளவுக்குத் தமிழ்நாட்டின் நாகரிகம் இருக்கின்றது. அதைக் களைய வேண்டிய பொறுப்புத் தமிழன் கையில் இருக் கின்றது. காலமும் இடமும் வாலிதின் நோக்கிக் களைந்துதான் வருகின்ருர்கள். நம்முடைய நாட்டில் தமிழ் மொழியைப்பற்றியும், தமிழ் நயம் பற்றியும், பண்பாட்டைப் பற்றியும், நம்மொழியி லேயே எழுதுகின்ருர்கள். ஆங்கிலத்தில் வல்லவர்கள் அவை பற்றி ஆங்கிலத்தில் எழுதினுல் மேனுட்டாரும் வியப்படைய நேரிடும். டாக்டர் அ. சி. செட்டியார் அவர்கள் நல்லதொரு தனிப் பொறுப்பு வாய்ந்த நிலையினை, ஏற்றிருக்கின்ருர்கள். 'தமிழர் என்ருல் விளிம்பில்லாப் பாத்திரம்' என்று முன் எழுதியது போன்று எழுதாமல் நன்முறையில் தொண்டாற்றுவார்கள் என்று எதிர்பார்க்கின்றேன். ஆங்கிலமும் தமிழும் கற்றவர்கள் இங்கு வீற்றிருக்கின்ருர்கள். அவர்கள் தமிழைப்பற்றித் தமிழில் ஆயிரம் பக்கம் எழுதுவதைவிட ஆங்கிலத்தில் ஐந்து வரிகள் எழுதினுல் போதும். சிறிது முன்புதான் திரு. வ. சு. அவர் களிடம் 'மறைமலையடிகளாரின் ஆங்கில முன்னுரைகளை யெல் லாம் திரட்டி ஆங்கிலத்தில் ஒரு நூல் வெளியிடுங்கள்' என்று சொன்னேன். தமிழன் உறங்காத நிலையில் நீறுபூத்த நெருப்புப்

போல் இருக்கின்றான். சங்க இலக்கியத்திலே வரும் 'தேய்புரிப் பழங்கயிற்றினார்' 'ஓரேருழவனார்' என வரும் தொடர்ப்பெயர்கள் போல மறைமலையடிகளார் பெயரும் என்றும் வாழும்."

அடுத்து, திரு. இரா. பாலகிருட்டிண முதலியார், பி.ஏ. எல்.டி., அவர்கள் பேசிய சுருக்கம் வருமாறு :

"இவ்விழாவில் கலந்துகொள்ள எனக்கு வாய்ப்பளித்த திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களுக்கும், இக்கழகத்தைச் சார்ந்த பிறருக்கும் என் நன்றி. நான் அடிகளாரைப்பற்றி மிகக் காலம் தாழ்த்தே அறிந்தேன். அஃதாவது 1938-இல்தான் என்று உங்களிடம் நாணத்துடன் சொல்லிக்கொள்கின்றேன். இந்தி மொழித்திணிப்பு வந்ததே இதற்குக் காரணம். தமிழர் தம் தாய்மொழியைப் புறக்கணித்ததன் காரணமாகவன்றோ இந்நிலை வந்துற்றது என்று கண்டு பின்பே அடிகளாரின் நூல்களைப் பயிலத் தொடங்கினேன். பின்பு நான் தலைமை ஆசிரியனாகச் சென்று பணியாற்றிய இடங்களிலெல்லாம், சுற்றறிக்கைகள் அனுப்பும்பொழுதெல்லாம் தமிழிலேயே அனுப்பிக்கொண்டிருந்தேன். இதுபோன்ற பணிகளாற்றச் சில இடங்களில் எதிர்ப்புக்கள் இருக்கத்தான் செய்யும். அதற்காக அஞ்சுதல் கூடாது. துணிவுடன் பணியாற்றத்தான் வேண்டும். தமிழோடு ஆங்கிலமும் தெரிந்தவர்கள் ஆங்கிலத்தில் எழுதி மேனாட்டாரும் அதன் பெருமையை உணரச் செய்யவேண்டும் என்று பலர் சொல்கின்றார்கள். அடிகள் மும்மொழி வல்லார். நானும் சங்கப் பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வைத்திருந்ததை மூன்று பகுதிகளாகச் சைவசித்தாந்தக் கழகத்தார் வெளியிடுகின்றார்கள். இரண்டு பகுதிகள் வெளிவந்துவிட்டன. மூன்றாவது பகுதி அச்சாகிக்கொண்டிருக்கின்றது. 'இளங்கண்ணன் நினைவு மலர்' என ஒரு தமிழ்நூலும் என்னால் எழுதிவைக்கப்பட்டிருந்தது; திரு. வ. சு. அவர்கள் முயற்சியால் கழக வழியாக வெளிவந்துள்ளது. பாரதியாரின் குயில் என்ற சிறந்த கவிதையையும், பாரதிதாசனாரின் சில கவிதைகளையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வைத்திருக்கின்றேன். இதுபோன்ற மக்களுக்குப் பயன்படும் நூலகங்களை அரசாங்கம்தான் வளர்க்க வேண்டும் என்று காத்திருப்பதில் பயனில்லை. மக்களே வளர்க்க முன்வரவேண்டும். திருமணங்கள் நடத்துவோர் திருமண நினைவாக ஒரு பகுதியை இவைபோன்ற செயல்களுக்கு ஒதுக்க வேண்டும்."

அடுத்துத் திரு. க. அன்பழகன், எம். ஏ., எம். எல். ஏ. அவர்கள் பேசிய சுருக்கம் வருமாறு :

"இந்தி பொது மொழியா?" என்ற வினாவில் அடிகளார் நூலின் பயன்தான் இராசகோபாலாச்சாரியாரவர்களால் அன்று மறுக்கப்பட்டு இன்று ஏற்கப்பட்டு இந்தி எதிர்ப்பாக வளர்ந்து இன்று பாராளு மன்றத்தில், நேருவால் ஓரளவாவது 'இந்தி மட்டும்தான் பொதுமொழி ஆகவேண்டும் என்று சொல்லவில்லை' என்று சொல்லக்கூடிய அளவுக்கு ஆக்கமாகி யிருக்கின்றது. மறைமலையடிகள் உண்மையாகவே சில புராணங்களை இந்த நாட்டிற்குத் தேவையில்லை என்று ஒதுக்கியவர். சில புராணங்களைச் சைவ சமய ஆராய்ச்சிக்காக எடுத்துக்கொண்டனர். இந்த நூல்நிலையத்தை அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள்தாம் திறந்துவைத்ததாகச் சொன்னார்கள். அவர்கள்தாம் 'தமிழில் அர்ச்சனை செய்தால் எனக்குப் புரியவில்லை' என்று இன்று சொல்கின்றார்கள். 'மறைமலையடிகள் தமிழ் தமிழா?' என்று கேட்கின்றவர்களும், 'நான்கு திருக்குறள்களையும், நான்கு சங்க இலக்கியப் பாடல்களையும் சடசட என்று ஒப்புவித்துவிட்டுத் தமிழ்ப் பேராசிரியர்கள் என்றும், தமிழாசிரியர்கள் என்றும், இலக்கிய ஆசிரியர்கள் என்றும் பெயர் வைத்துக்கொண்டு நாட்டில் நடமாடிக்கொண்டிருக்கின்றார்கள்' என்று எழுதக் கூடியவர்களும் இன்னும் சில நாட்கள்தாம் இங்ஙனம் செய்ய முடியும். தாம் அறிவுப் பஞ்சமுடையவர்கள் என்பதை அவர்கள் உணராமல், சில செய்தித்தாள்களில் எழுதியே வயிறு வளர்க்க வேண்டும் என்ற நிலையில் இருப்பதால் வந்த நிலையே இது. மறைமலையடிகளாரவர்கள் ஆராய்ச்சித்திறன் உடையவர்கள். எழுத்துவன்மை உடையவர்கள். சீர்திருத்தக் கொள்கைகளைச் செப்பமுறப் பரப்பியவர்கள். நான் இங்குப் பேசியதில் நேரம் கடந்திருக்குமானால், இங்கு வீற்றிருக்கும் தலைவராகிய நடுவரவர்கள், ஏற்கெனவே குற்றங்களை மன்னிக்கும் இயல்பால் என்னையும் மன்னிக்கும்படி கேட்டுக்கொள்கின்றேன்."

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நன்றி கூறவும், தாய்மொழி வாழ்த்துடன் கூட்டம் 9-15 மணிக்கு நிறைவுற்றது.

நீங்காக் கலைபயில் நீள்களமாம் நூல்நிலையம்
ஓங்கு மறைமலையார் ஒண்பெயரைத்—தாங்கிவளர்
இந்நூல் நிலையமும் எம்மான் திருவருளால்
எந்நாளும் வாழ்கநலம் ஈந்து.

திருச்சிற்றம்பலம்.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கத்தின்
ஆதரவில் நடைபெறும்

## சென்னை மறைமலையடிகள் நூல் நிலையத்தின்

## முதலாண்டு நிறைவு விழா

# வாழ்த்துரை

(காணுவுலக வாசியாய்நின் றியக்குநர் வழி, கழக, சங்கவமைச்சரின் விருப்பினால், மறைத்திரு மறைமலையடிகள் வரைந்த வாழ்த்துரை.)

நோக்காளர்களே !

முதலிலொன்றினை மொழிய விழைகின்றனம். தமக்கும் இவ்விழாத் தலைவருக்கும் இதுவொரு வியப்பினை அளிக்கு மென்பது மறுக்கற்பாலதும் மறத்தற்பாலதும் அன்று, எங்ஙனே, இக்கூற்று மெய்ம்மையெனக் கொளல் அறிதற்பாலது? அதனை அறிந்தபின் அக்கூற்று வியக்கற்பாலதேயென வுள்ளத்தொரு கருத்துதித்தல் இயற்கையே. சான்றுடன் அதனை விளக்கத் தோற்றிய நூல்கள் நம் நாட்டிலே நிறைந்துள. மேலை நாட்டினர் இன்று எத்துறையில் இதனைச் செயல்படுத்துகின்றன ரென வுளகருத்தும் நூல்கள் வாயிலாகவும் அறிதலே சிறந்தது.

தன்னிகரில்லாத் தலைவரே!!

இன்றைய, நூல்நிலையத்தின் முதலாண்டு நிறைவிழாவுக்குத் தம்போன்ற சட்ட வல்லுனரமைத லென்பது இந்நூலகத்தின் வளர்ச்சிக்கோருறுதுணையும், வாய்ப்பு மென்பதனைக் கருத்திற் கொளல் சாலச் சிறந்ததெனக் கழிபேருவகை யெய்தினம், யாமாகிய தாம் காணுவுலகவாசி மறைமலை. மேலும் இத் தருணத்தில் எமக்குமோர் வாய்ப்பு. எம்சிந்தையி னினைவாய்க் கொண்டமைத்ததோர் நூலகமாம், மறைமலையடிகள் நூல் நிலைய முதலாண்டு நிறைவு விழாவாகிய இன்று தமது தலைமையின்கீழ் ஒரு வாழ்த்துரை வரைந்தளிக்க விரும்பிய செயலாம், சங்க வமைச்சர் திரு. சுப்பையா பிள்ளையின் வேண்டுகோள். பிறர் தமக்கு விருப்பினையளியா. என்னையெனின், அவர் பெயராம் நூலகத்திற்கு அன்னவரே, வாழ்த்தளித்த லென்பது நெறியா என்றதோ ருணர்வுதோன்றலே. இருப்பினும் எமக்கித் தருணம், நும் தலைமையின்கீழ் வாய்த்தது, திருவருட்டிறனே யென்றவனை வழுத்துகின்றேம்.

**சங்கச் செயற் குழுவினரே !!!**

நுங்கள்தம் பணியாம் இந்நூலக வமைத்தலை வரவேற் கின்றேம், கடமைப்பட்டுள்ளேம். இருப்பினும் நுங்கள் தமக்கு இக்கருத்தெழுந்தது கற்றறிதலென்றதோர் கருத்தே நற்கருத்தா யமைந்ததை உன்னி நோக்குங்கால், எம்மிறை இக்கருத் தளித்தது, தெய்வப்புலவரின் திருவிளக்கம் பொதுமறையே யென யாமறிகின்றனம். இதனையே திருவள்ளுவர் பொருட்பால், கல்வி யென்ற தலைப்பின்கீழ் தந்ததாய தோர்

" தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்"

என்ற மொழியின் கருத்தாம், தாம் இன்புறுவதற் குறுதுணையான, செல்வமாம் இரண்டினுள் கல்விச் செல்வத் தால், உலகமும் இன்புறுவதைக் கண்டு, கற்றறிந்த அறிஞர் மென்மேலும் அக் கல்வியையே விரும்புவரென்பது சரியெனக் கண்ட பின்னரே, நுங்கள் தம் கருத்தில் இங்ஙனையோர் நூலகமமைத்தி ரென்றதே எம்முள் ளெழுகின்றது, தாம்பெற்ற பேற்றினை இவ்வையத்து வாழ்வாரும் பெறுக என்றதோர் உயர் கருத்து உதித்துச் செயல்பட்டதனை வரவேற்கின்றேம். நூலக மென்ற ஒன்றினுல், வேண்டிய கருத்தினை வெவ்வேறு நூற்கள் வழியுற்றுய்தல் ஞாலத்து மக்களுக்கோர் அறிவினை எடுத் தோதவோர் வாய்ப்பெனக் காணலும் அதனைச் செயல்படலும் நன்றே. மேலும் இந் நூலகத்திற் கெளியனும் எம் பெயரை இட்டு எம்மை நினைவுகொளச் செய்வான் செய்த செயல் திரு வருட்டிறனே யெனக் கொண்டு இறையை ஏத்துகின்றேம்.

தமிழினமே நம் முன்னோர் கண்டுரைத்ததோர் உயரின மாயின. தமிழை ஏத்துதலென்ற கொள்கையுடைத்தென்ற கருத்தெழுந்து வரைந்த நூல்களைத் தொகுத்தலென்பதே எனவுள கருத்தும், பிறமொழியினறைந்த கருத்தறி நூற்களைத் தொகுத்து இரண்டையுமொருங்கிணைத்து உற்று நோக்குதற்கோர் உறுதுணையாயிருப்பது நூலகமே யென்ற கருத்தியைப் பெற்றே இந்நூலகத்தைத் திறம்பட அமைத்தீ ரெனவுமுள்ளதோ ரெண்ணமும் எம்முள்ளெழுகின்றன. இந் நூலகம் பல்லாண்டிப்பாரினில் விளங்குதல் திறனே யென்றதோர் நற்கருத்து உங்களுள்ளிலே யெழுந்து, அதற்குரிய திட்டங்களை வகுத்துச் செயற்பட அரியதோருறவாம் கூட்டுறவினை யென்றுமே உங்களுள்ளிலே நின்றிலங்கத் திருவருளே துணை செய்வானென்று அவனையே வணங்கி வாழ்த்துகின்றனம். இந் நூலகம் சென்னையிலோர் எடுத்துக்காட்டாக என்றுமே நின்றிலங்கத் தக்கதாயதோர் கருத்தோர் கருத்தே நுங்கள்

சிந்தையிற் றனியொரு கருத்தாய், யாமமைத்த நூலகத்தின் வாய்ப்பு, பயனுறு வழியாய் இப் பாரிலுளோர்க் கென்றுமே, தடையதின்றி யுறுதுணை செயலே சிறந்ததெனக் கருத்தெழ, எம்மியக்குநர்வழி வேண்டி விரும்புதற் றெரிவிக்கின்றனம்.

சென்னையம்பதியுறை செல்வர்காள் !!!!

நுங்களுக்கு யாமாகிய மறைமலையடிகளோர் வேண்டுகோள் விடுத்தல் சாலச் சிறந்ததெனக் கருத்துட் கொண்டு கல்வி யுடையாரே, கண்ணுடையரென்பதைக் கருத்திற்கொளல் நன்று அதற்குறுதுணையா யமைவது நூற்களே. எல்லா நூற்களையும் ஒருவன் விலை கொடுத்து வாங்குதல் எளிதல்ல என்ற கருத்தினையே கொண்டு நூலகமே இதற்குறுதுணை செய்வதெனக் கருத்துட்கொண்டு ஓய்வு கிட்டும் சமயத்து நூலகத்தின்கண் போந்து, வேண்டிய நூற்களைக் கற்றறிதல் சாலச் சிறந்ததெனக் கருத்துட்கொண்டு கற்றுய்தல் கருத்தென வுணர்விலோ ரொளி யுதித்தல் நன்றென வேண்டியும் கீழ்தரும் புறநானூற்றுப் பாவினை அறிவான் விரும்பி வரைகின்றனம்.

“ உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளுஞ்
சிறப்பின் பாலால் தாயுமனந் திரியும்,
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்,
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே”

கல்வியையுங் கற்றாரையும் உயர்த்திச் சாதியுயர்வினைக் கீழ்ப்படுத்துரைத்தமை கற்றறிதலுக்கோர் பெருஞ் சான்றாய் விளங்குகிறதன்றோ? சென்னையம்பதியுறை செல்வர்காள்! நீங்களிப்பாவினை யுற்றாய்ந்தால் நூலகம் எத்துணைச் சிறப்பு வாய்ந்ததென நும் மனத்து விளங்குமென்ற வேண்டுதலுடனும், நோக்காளர்களாய அன்பர்கட்கும், தந்நிகரில்லாத் தலைவருக்கும், செயற்குழுவினர்க்கும் வணக்கஞ்செய்து, திருவருளே, இந் நூலகம் பல்லாண்டு, செழித்து வளர்மதிபோல் வளர்ந்துவரக் கருணை செய்வானென எமக்குட்கொண் டன்னவனை வழுத்துகின்றேம்.

ஆங்கில நாள் 13—9—59

தாம் காணுவுலக வாசி, நெல்லை. இயக்குநர்வழி
வரைந்த மறைத்திரு மறைமலை.

# இயற்கை

ஆங்கில நாள் 19—9—59 மாலை 6 மணி சமய அளவில் அடிகளாம் மறைமலை இயச்குநராமினையனிட முரைத்த கூற்று. இளையனே, தம்பி! உரைக்கின்ற கருத்தினை யுற்று நோக்கு. அன்பர் திரு. சுப்பையா பிள்ளைக்கும் அனுப்பு.

கருவுற்ற நாள் முதலாகவும் அன்னையின் வயிற்றிலோர் கருவாக வுதித்த நாள் முதலாகவும் எவ்வினங்களு மெதனை நம்பி வாழ்கின்றன, வாழ்கின்றனர், வாழ்ந்தன, வாழ்ந்தனரென, சிந்தையிற் றரித்தலே கூற்று. ஆண்டவனென்றொருவன் நம்மைக் காக்கும் சத்தியுடையனென்ற நம்பிக்கையிற்று னென்ற கருத்துட் கொண்டல்லவோ? வாழ்ந்தன, வாழ்ந்தனர், வாழ்கின்றன, வாழ்கின்றனர். இயற்கையென்ற ஒன்றினைக்கொண்டே உயிர்கள் பிறத்தலும் இறத்தலும் தொடர்ந்து செயலாற்றப் படுகின்றதென உரைக்கு மன்பரும் இவ்வுலகிலுள்ளா ரென்பதுவும் இல்லையென வுரைக்கவியலுமோ? அற்றேல், இருந்து இருந்து தோன்றினன் ஒருவன் இயற்கையை எய்தினனென்ற கருத்து உதித்துரைக்கும் கொள்கை யெங்ஙனே? சிந்திமின்! நோக்குமின்!! இயற்கை யென்ற ஒன்றே பிறப்பிற்கும், இறப்பிற்கும், (தோன்றற்கும், மறைதற்கும்,) ஒரு பொருளா யமைந்திருப்பின், இயற்கையே யளித்ததொன்றினுக்கு, மறைத்தலென்ற ஒன்று ஒரு நியதிக்குட்படாது, பலப்பல விதத்தில் பலப்பல சமயத்து நேருவதென்னை? சிந்திமின்! சிறச்கவாயுமின்!! அவ்வியற்கையே தனியொரு பொருளாய் அமைந்திருத்தலென்பது சரியா? நோக்குமின்! உலகத்துவாழ் சகல வுயிர்களுக்கும் இயற்கையென்ற ஒன்றே இருக்கிறதெனவுள்ள கருத்துதித்தால் அவ்வியற்கையின் தொழிலிலே பாகுபாடு காண வழி வகுத்ததென்னை? இயற்கையே தனியதோ ரொன்று யமையின், மானிட இனம் செல்வரெனவும், வறியரெனவும் பாகுபடுத்த வழிவகுத்த தன்மையென்னை? காணும் உலகியலின் படி மங்கை கருத்தரித்தாள்; மாதா வுடல் சலித்தாள்; மங்கை நல்லாள் பத்தாம் திங்களிலே தோற்றுவித்தா ளொரு உருவினை யுலகுக்கு. அவ்வுரு, ஆணோ, பெண்ணோ, அலியோ, அல்லையேல், குருடோ, முடமோ, அல்லையேல், உருவற்ற ஒரு பொருளோ என்ற ஏதாவதோருருவிற் றோன்றுகின்றதனை யாம் காண்கின்றோமல்லமோ? மேலும் ஒன்றினை மொழிகின்றனம். இயற்கையென்ற ஒன்றினுக்கு இச் சத்திகள் அளிக்க வாய்ப்பளித்ததென்னை? கதிரவன் கிழக்கிலுதிக்கின்றான்; மேற்கில்

மறைகின்றன். அதுபோல் இயற்கையே, அத்தொழிலைக் கொண்டு நடத்துமாஞல், இங்ஙனே, இயற்கை தோற்றுவித்தாயதோர் மக்கள் பிராணிகளிலே பாகுபாடு வகுத்ததெங்ஙனே? எங்ஙனம் பொருந்தும்? இவ்விடத்துத்தான் சிந்தனைத் திறன் தேவையென்பதைக் கருத்துட்கொளல் நன்றன்றே? பார்மின்கள்! இயற்கை யென்ற ஒன்று, ஒன்றினையே குறிக்கோளாகக் கொண்டு நடைபெறுதலல்லவோ? அவ்வியற்கை யென்ற ஒன்றினுக்கு இவ்விதம் பாகுபா டியக்கச் சத்தி வந்ததெங்ஙனே? ஆய்மின்! ஆய்வாளரே! இன்னமும் உரைக்கின்றனம். கல்வியறிவிலும் சொல்வன்மையிலும் சிறந்தாரொருவர் ஓரவைக்களத்தேறிக் கடவுளின் அளவிறந்த ஆற்றலையும், அவர் எண்ணிறந்த உலகங்களையெல்லாம் வான்வெளியிற் பந்துகள்போல் அவைகளைச் சுழற்றுதலையும், அவ்வுலகங்கள் ஒவ்வொன்றினும் உள்ள எண்ணிறந்த உயிர்களுக்கும், எண்ணிறந்த வியத்தகும் உடம்புகளைக் கொடுத்து அவற்ருல் அவர் அவை தமக்கு அறிவு விளங்கச் செய்துவரும் அருட்டிறங்களையும் நாம் நம் கண்ணெதிரே காண்பதுபோல் எடுத்துரைத்து, நம் அறிவையும் அன்பையுங் கவர்ந்து சென்றக்கால், நாம் அதனுல், அவர் வயமாகி அவரைப்போற் பேசவும் அவரைப்போற் கைகால் அசைக்கவும் விழைகின்றனம் அல்லமோ? அவ்விழைவு மீதூரப் பெற்றக்கால் அவர்போல் அவைகளைச் செய்யக் கற்று நாம் மகிழ்தலும் உண்டன்றே?

இங்ஙனம் நல்வினை செய்வாரைக் கண்டு நாமும் அவர்போற் செய்யவுஞ் செய்து மகிழவும் முனைந்து நிற்றல் போலவே, தீவினை செய்வாரைக் கண்டும், அவர்போற் செய்யவுஞ் செய்து மகிழவும் முனைந்து நிற்பாரும் உலகில் மிகப் பலராயிருக்கின்றனர். கடவுள் இல்லையென்றும், எல்லாம் இயற்கையே யென்றும், ஊன் உண்டல் கட்குடித்தல் வரைதுறையின்றி மருவல், ஏமாந்தவர் பொருளைக் கவர்தல், ஏமாருதவரையும் ஏமாற்றுதல், அறிவில் ஏற்றத் தாழ்வின்மையின் ஒருவர் ஏனையொருவர்க்கு அடங்கா தொழுகுதல் முதலிய வினைகளையெல்லாம் அவரவர் தத்தம் வன்மை மென்மைகட் கேற்பச் செய்தல் குற்றமாகாதென்றும், ஆரவாரத்தோடு உரையாடுவார் திறத்தைக் கண்டு அவரை வியப்பாரும் செய்தொழுகுவாரும் வரவர மிகுதல் காண்கின்றனமல்லமோ?

இஃதென்னை? இயற்கையென ஒன்றே அனைத்து வல்லமையுடன் தோற்றுவித்ததோ ரினமாம் மாந்தரிலே இவ்விதப் பாகுபாடுகளை இயக்கவைத்த தென்னை? சிந்தித்தாய்வு காண்மின்! சிந்தனையாளரே! இத்தன்மையில் பாகுபாட்டை யளிக்கும் ஒரு

திறன் இயற்கைக்குண்டோவென வினவுகின்றேன். மேலும் இவ்வுலகில் நாம் காணுவதையொழிய வேறொன்றினையும் நாம் நம்போம், ஆவி உலகச் செய்திகளை அரங்கிற்குக் கொண்டுவர வேண்டா, அறையினுட் பூட்டிவைத்தல் நலமென்னும், நாத்திகப் பெரியாரின் உரைகளை நோக்கினால் அவ்விதமிருக்குமென்ற சிந்தனையெழுதலும் இயற்கையேயெனில், ஆவியுலகச் செய்திகளையும் அம்பலத்திற்குக் கொண்டுவரல் அவசியமென எழும் சிந்தனையும் இயற்கை தானே?

இவ்விரு எழுச்சிகளுக்கும் காரணமாவன அறிவெனவேயுரைத்தலே சாலப் பொருந்துமோவெனின் இயற்கையே யளித்ததோர் உருக்கொண்ட மானிடர்கள் கருத்திலெழும் பலதிறப்பட்ட சிந்தனைகளுக்காய காரணமென்னை? ஆராய்தல் நலம். மேலும் ஒரு தாய் பெற்ற மக்களிலே ஒருவன் தீர்க்க வுருப்பெற்றவனும், ஒருவன் முடவனாகவும், ஒருவன் ஒருறுப்புக் கூடினவனும், பிறத்தற்குக் காரணமென்னை? நாத்திகவாதிகளுரைக்கவரின், மருவுதலின்கண் ஏற்பட்ட குறைவே காரணமெனக் காட்டலாமென்ற கருத்தும் நம்முள் எழுவதே. இன்னும் ஒன்றினைக் குறிக்கின்றேம். ஒரு தாய் பெற்ற மக்களிலே ஒருவன் கல்விமானாகவும், ஒருவன் கல்வியற்றவனாகவும் வாழ வழிவகுத்ததென்னை? நம் நாட்டில் பதிவிரதாமணிகள், தம் கணவருடனே கூடி மருவி அவர்கள் தம் மருவுதலிற் பெற்ற இரு புதல்வர்களே, யாம் மேற்குறிப்பிட்ட ஒரு தாயின்வழி உலகில் வந்த செல்வர்கள். காரணமென்னை? இருவரையுமே கல்விச் சாலைக்குக் கல்வி புகட்டுவான் அனுப்பியும், அவர் தம்முள் ஒருவர் கல்வியிற் சிறந்தவராகவும் மற்றவர் குறைந்தவராகவுமிருத்தலையும் காண்கின்றோ மல்லமோ? காரணமென்னை? இயற்கையே உருவாக்கிய ஒன்றிலே இந்தப் பாகுபாடு எய்தியதென்னை? இயற்கையின் படைப்புக்கு இவ்வித வேற்றுமையளிக்க இயலுமோவெனச் சிந்தித்து மெய்ம்மை காணலை வாசகர்களாகிய நுங்களாய்வுக்கே விட்டுவிட்டனமென்பதையும் உரைத்தும். இயற்கையை இயக்கும் சத்தி கடவுளென ஒரு சிற்பிக்கேயல்லாது, இயற்கைக்கல்ல என்பதுடன் விடுகின்றனம்.

# இந்திரப் புரட்சி

[வித்துவான், அ. பாலசுந்தர குருக்கள்]

திருக்குறள் சைனரால் இயற்றப்பட்டதென்று கருதியவர்கள் பலராவர். அவர்களுள் ஒருவரும் சைன சமயத்துள் கூறப்படும் தத்துவம், ஒழுக்கம் ஆகியவற்றுடன் திருக்குறளைப் பொருத்திக் காட்டவில்லை. திருக்குறள் ஏளாச்சாரியால் இயற்றப்பட்டதெனப் பிற்காலத்தில் யாராலோ திரிபுணர்ச்சியாலும், பற்றுள்ளத்தாலும் கூறப்பட்டதையே சான்றாகக்கொண்டு முன்னுக்குப்பின் முரணாக எழுத முற்படுகின்றனர். திருக்குறள் சைனரால் இயற்றப்பட்டதன் றென்பதைப் பல காரணங்களுடன் 'திருவள்ளுவர் சமணரா?' என்ற தலைப்பில் செல்வியில் முன்னர் எழுதியுள்ளேன். இந்திரன் பற்றிச் சைன சமயக் கொள்கையை அடிப்படையாகக்கொண்டு 'திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்'* என்ற நூலாசிரியர் கூறும் கருத்தை மட்டில் இங்குக் காண்போம்.

> "ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
> இந்திரனே சாலுங் கரி."

என்னும் இக்குறளுக்குப் பரிமேலழகர், "புலன்களில் செல்கின்ற அவா ஐந்தினையும் அடக்கினனது வலிக்கு அகன்ற வானத்துள்ளார் இறைவன் ஆகிய இந்திரனே அமையும் சான்று. தான் ஐந்து அவியாது சாபம் எய்தி நின்று, அவித்தானது ஆற்றல் உணர்த்தினன் ஆகலின், 'இந்திரனே சாலுங் கரி' என்று கூறினார்" என்று உரை கண்டுள்ளார். பரிமேலழகர் இக் குறளுக்கு இந்திரன் அகலிகையிடம் மோகங்கொண்டு அவளை வஞ்சகமாகக் கூடியதை உணர்ந்த கௌதமர், இந்திரனுக்கு உடல் எல்லாம் பெண்குறியாகுமாறு சபித்துப், பின்னர் அவன் வேண்டுகோளுக் கிரங்கி அப் பெண்குறிகள் யாவும் பிறருக்குக் கண்ணாகத் தோன்றும்படி சாபவிமோசனம் செய்த வரலாற்றையே மேற்கோளாகத் தந்து உரையெழுதியுள்ளார்.

இந்திரனுக்கு ஆயிரங்கண்ணன் (சகசிராட்சன்) என்ற ஒரு பெயருண்டு. இப்பெயரை விளக்குவதற்குப் பல கதைகள் புராணங்களில் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒரு கதையே பரிமேலழகர் குறிப்பிட்டதாகும்.

சைன சமயத்திலும் இந்திரனுக்கு ஆயிரங் கண்கள் உண்டென்றே கூறப்படுகின்றது. ஆனால், ஆயிரங் கண்ணை இந்திரன்

* 'திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்'—ஆசிரியர் T.S. ஸ்ரீபால்.

பெற்றதற்கு அறிவிற்குப் பொருந்தாத கதையொன்றையே சைன புராணமும் கூறுகின்றது. இக் கதைக்கும் மேற்குறித்த குறளுக்கும் சிறிதும் தொடர்பில்லை.

சைன சமயத்துள் 'இடபநாதர் முதல் மகாவீரர் வரையுள்ள இருபத்து நால்வரும் அருகந்தர் எனப்படுவர். இவர்கள் ஒவ்வொருவரும் உலகத்தில் தோன்றும்போது இந்திரன் தனது அறிவாலுணர்ந்து அவர்களை வானுலகிற் கெடுத்துச்சென்று வழிபடுவான். இவ்வழிபாட்டில் பல இந்திரர்கள் கலந்துகொள்ளுவார்கள்' என்று கூறப்படுகின்றது. சைன சமயத்தில் கூறப்படும் இவ்வரகந்தர்கள் ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும் ஆகிய தவவலி இல்லாதவர்கள் ஆவர்.

'இறைவனே! நினது உருவழகினைத் தனது இருகண்களால் நோக்கியும் அமையாத இந்திரன் ஆயிரங் கண்களால் கண்டு மகிழ்கின்றான்'–(ஆதிபுராணம்). ஆதிபுராணத்துள் காணப்படும் இந்த மேற்கோளால் ஐந்தவித்த அரகந்தரின் ஆற்றல் புலப்படவில்லை இந்திரன் அரகந்தரை வணங்குவதால் அவர்களின் பெருமையே புலனாகின்றது. இந்திரன் தானே ஆயிரங் கண்களை உண்டாக்கிக்கொண்டு நோக்கினான் என்று கூறுவதில் உள்ள தத்துவ நுட்பத்தை நாம் நன்கு நோக்குதல் வேண்டும். எடுத்துக்காட்டிய சுலோகமும் இந்திரன் தானே தனக்கு ஆயிரங் கண்களை உண்டாக்கிக்கொண்டான் என்றும் குறிக்கவில்லை. அரகந்தர்கள் இந்திரர்களால் வணங்கப்படும் பெருமைவாய்ந்தவர்கள் என்பதையே சைன சமய நூல்கள் கூறும்.

"இந்திரர் தொழப்படும் இறைவனெம் மிறைவன்."
—மணிமேகலை.

"மந்திர வாய்மொழி மறுவில் மாதவர்
இந்திரர் தொழுமடி யினிதி னெய்தினான்."
—சிந்தாமணி, கஉ௩௯.

எனவரும் செய்யுள்களால் சைன சமயத்துள் இந்திரர் பலர் என்று கூறப்படுவதையும், அரகந்தர்கள் இந்திரரால் வணங்கப்படும் பெருமை வாய்ந்தவர்கள் என்பதையும் அறியலாம்.

"ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி."

என்னுங் குறளுக்குப் பரிமேலழகர் செய்த உரையால் ஐந்தவித்துயர்ந்தோரின் தூய தவநெறியும், அவர்களை வழிபடும் இந்திரனது எழில்நிலையும் மாசடைகின்றன. இக்குறள் அரகந்தரை இந்திரன் வழிபடுவதையே குறிக்கின்றது என்றெழுதியுள்ளார்.*

* 'திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்' பக்கம், 16.

சைன சமயத்துள் அரகந்தர்களும், இந்திரர்களும் பலராவர். இவர் குறிப்பிடுவதுபோல் இக்குறள் அரகந்தரை இந்திரர் வழிபடுவதைக் குறிக்கவேண்டுமானால்,

"ஐந்தவித்தா ராற்றல் அகல்விசும் புளார்கோமா
னிந்திரரே சால்வர் கரி."

என்றாற்போல் பன்மையாக இருத்தல் வேண்டும். வள்ளுவர் 'ஐந்தவித்தான்' என்றும், 'இந்திரன்' என்றும் ஒருமையாகவே குறித்துள்ளார். மேலும் 'ஆற்றல்' என்ற சொல்லை வள்ளுவர் எப்பொருளில் எடுத்தாளுகின்றார் என்று காணவேண்டும். 'ஆற்றுவா ராற்றல் பசியாற்றல்' என்பதுபோல் செய்தல், வலிமை ஆகிய பொருளிலேயே பலவிடத்தும எடுத்தாளுகின்றார். ஐந்தவித்தல் என்று வள்ளுவர் இக்குறளில் குறிப்பிட்டது தவத்துறுப்பாகிய புலனடக்கமேயாகும். இப் புலனடக்கத்தால் உண்டாகும் ஆற்றல் அனைத்தும் இயற்றவல்லதாகும்.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்."

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்தல் அரிது."

"ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்."

எனவரும் குறள்களால் தவவலியுடையோர் தீயோரைக் கடிந்து ஒறுத்தும், நல்லோரை ஆக்கியும் நலம்பல புரிவர் என்பதை வள்ளுவர் குறிப்பிடுகின்றார் என்பதை அறியலாம். திருக்குறளில் புராணக் கதைகள் பல அமைந்துள்ளன வென்பதையும் மறுக்க முடியாது. இவற்றையெல்லாம் மறந்து பரிமேலழகரைக் குறை கூற முற்பட்டது பொருத்தமாகத் தோன்றவில்லை. 'திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்' என்ற நூலின் ஆசிரியர் கூறும் உரையால் அரகந்தரின் பெருமையும் இந்திரனது ஆற்றலும் ஆகியவையே வெளியாகும். மேலும் அரகந்தரைப் பல இந்திரரும் வழிபாடு செய்யும்போது ஒரு இந்திரன் மட்டும் அவருடைய அழகைக்காண இருகண் போதாமையால் ஆயிரங் கண்களை உண்டாக்கிக்கொண்டு காண விழைந்ததேன்? மற்றவர்கள் அவ்வாறு செய்யாததேன்? என்பன போன்ற ஐயங்கள் உண்டாகின்றன.

தவறிழைப்போன் இந்திரனானால் என்ன? சந்திரனானால் என்ன? அத்தவற்றிற்குரிய தண்டனையை அடைந்தே தீர்வர் என்பதையே புராணங்கள் உணர்த்துகின்றன. இவற்றைச்

கொண்டு இவர்களைப் புராணங்கள் இழிவுபடுத்துகின்றன எனக் கூறுதல் அறிவுடைமையாகாது. அவர்களைப் புராணங்கள் போற்றும் இடங்களிலும் நாட்டத்தைச் செலுத்த வேண்டும். ஒரு புராணக் கதை இழிவுபடுத்துவதாகக் கூறிக்கொண்டே கற்பனையே மிகுந்த மற்றொரு புராணத்தைக் கொணர்ந்து குறளுக்கு வலிந்து பொருள்காண முற்படுதல் எவ்வாறு பொருந்தும்? பரிமேலழகரால் மட்டும் இந்திரன் எழில்நிலை மாசடைந்தது எனக் கூறமுடியுமா?

இளங்கோவடிகள் தவத்தின் ஆற்றல் எவ்வாறு புலப்படும் என்பதைக் கவுந்தியடிகள் வாயிலாக விளக்குகின்றார். கோவலன், கண்ணகியுடன் மதுரைக்குச் செல்லும்போது கவுந்தியடிகள் அவர்களுக் குறுதுணையாகச் செல்கின்றார். மூவரும் ஒரு பொழிலில் தங்கி இருக்கையில் கல்வியறிவில்லா ஒருவன் தன் காதலியுடன் அங்கு வருகின்றான். வந்தவன் அழகிற் சிறந்த கோவலன் கண்ணகி ஆகியோரைக் கண்டு கவுந்தியடிகளை நோக்கி, இவர்கள் யார்? என வினவுகின்றான். அதற்கு அடிகள் 'இவர்கள் என் மக்கள்' என்று விடையிறுக்கின்றார். அடிகளின் விடை அவனுக்கு மேலும் ஐயத்தை யுண்டாக்கவே, 'ஒரு தாய் வயிற்றில் பிறந்தோர் கணவனும் மனைவியும் ஆவார்களோ!' எனக் கூறித் தன் காதலியுடன் சேர்ந்து நகைக்கின்றான். கவுந்தியடிகள் 'இவ்வாறு நகைக்கின்ற நீவிர் முள்ளுடைய காட்டில் முதுநரிகளாகித் துன்புறுக' எனச் சபிக்கின்றார். "வம்பப் பரத்தை....... தவந்தரு சாபம்" (சிலம்பு, நாடுகாண்.) இளங்கோவடிகள் இங்கு கவுந்தியின் தவவொழுக்கத்துக்கு மாசுண்டாக்கினார் என்று கூற முடியுமா? இத்தகைய ஆற்றலையே 'ஐந்தவித்தான் ஆற்றல்' என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். இளங்கோவும் தவந்தரு சாபம் என்றே குறிப்பிடுவது அறிந்தின்புறத்தக்கதாகும்.

பரிமேலழகராயினும் பிறராயினும் யாராயினும் தவறுண்டேல் பொருத்தமான உரை கூறி மறுப்பதே அறிவுடைமையாகும். தங்கள் சமயத்துக்கு மாறான ஒரு நூலுக்கு உரையெழுத முற்பட்டதோடல்லாமல் வைதிக சமயக்கூற்றால் ஐந்தவித்துயர்ந்தோரின் தூய தவநெறி மாசடைகின்றது என்றும், இந்திரனது எழில்நிலை மாசடைகின்றதென்றும் எழுத முற்பட்டது அறிவுடைமையாகத் தோன்றவில்லை

வைதிக சமயத்தினரைவிட இந்திரன் எந்த சைன சமயத்துக்கு நெருங்கிய தொடர்புடையவனாகான். வைதிக சமயத்தினரே இந்திரனைப் பழித்தார்கள் என்றும் கொள்ள முடியாது. வைதிக சமயத்துக்கு மாறானவர்களும் இந்திரன் மீது பல குற்றங்களைச் சுமத்தியுள்ளனர். மணிமேகலை பௌத்த

சமயத் தத்துவங்களையும் ஒழுக்கங்களையும் உணர்த்தவே சாத்தனாரால் இயற்றப்பட்ட தமிழ் மூலநூலாகும். மணிமேகலை பௌத்த நூலென்று ஐயத்துக்கு இடமின்றி யாரும் கூறலாம். சிலப்பதிகாரம் சமணரால் இயற்றப்பட்டதன்று. மணிமேகலையில் சாத்தனார் இந்திரனைப்பற்றி விரிவாகக் கூறியுள்ளார்.

இந்திரன் என்பது தேவர்கள் தலைவனுக்குரிய பட்டப் பெயராகும். இப்பதவி நல்வினை முதிர்வால் உண்டாவதாகும். நல்வினைப்பயன் நீங்கின் இப்பதவியும் நீங்கிவிடும். இந்திரப் பதவியைப் பெற்றோர் தம் பதவி நீக்கத்தை விரும்புவார்களா? இக்காலத்தில் சிறிய பதவிகளையே விடாமல் அவற்றில் அட்டை போல் ஒட்டிக்கொள்ளுகின்றார்களே! இந்திர பதவிபற்றிக் கூறவும் வேண்டுமா? பதவியில் உள்ள இந்திரன் பிறரொருவரும் நல்வினை செய்து அப்பதவிக்கு வாராமல் தடுப்பான். இதனை விசுவாமித்திரன் தவமியற்றியபோது இந்திரன் மேனகையை அனுப்பி அவனது தவத்தைக் கலைத்த வரலாற்றாலும் உணரலாம்.

ஆற்றா மக்கள் அரும்பசி களைந்த ஆபுத்திரனது நல்வினைப் பெருக்கம் இந்திரனது வெண்கம்பளியை நடுங்குமாறு செய்கின்றது. இக் கருவியின் வாயிலாக உலகில் ஒருவன் இந்திர பதவிக்கு வரத்தக்க நல்வினை புரிகின்றான் என்பதை யுணர்ந்த இந்திரன் உடனே புறப்பட்டு ஆபுத்திரன் முன்தோன்றி அவனை மயக்கி வேறுவழியில் திருப்ப முயல்கின்றான் என்பதை,

“ஈண்டுநீர் ஞாலத் திவன்செயல் இந்திரன்
பாண்டு கம்பளம் துளக்கிய தாகலின்
தளர்ந்த நடையின் தண்டுகால் ஊன்றி
வளைந்த யாக்கையோர் மறையோ னாகி
மாயிரு ஞாலத்து மன்னுயிர் ஓம்பும்
ஆருயிர் முதல்வன் தன்முன் தோன்றி
இந்திரன் வந்தேன் யாது நின்கருத்து
உன்பெருந் தானத்து உறுபயன் கொள்கென.”

—மணிமேகலை, பாத்-மர-காதை.

எனவரும் பகுதியை நோக்குக. இதையெல்லாம் மறைத்து ஒரு சாராரை மட்டும் மறுக்கத் துணிந்ததேன்? சாத்தனாரும் வைதிக நோக்குடையவரா? இவற்றையெல்லாம் நினைத்துப் பார்க்கின் ஏதோ இந்திரப் புரட்சி செய்வதாகத் தோன்றுமேயன்றி அறிவுக்கு ஆக்கந் தரும் செய்தி ஒன்றும் இவ்வாசிரியர் கூற வில்லையென்பது புலனாகும்.

# அறக்கொடை வடிவினர்

[கழகப் புலவர், திரு. ப. இராமநாத

"செல்வன் கழலேத்தும் செல்வம்" சிறப்புறப் பெற்ற சிவத் திருவாளர் அருணந்தித் தம்பிரானடிகள் ஆவர். செந்தமிழும் சிவ னெறியும் முந்துறப்பேணும் மூத்த திருநகர் நெல்லை மாவட்ட மாகும். ஈண்டுத் "தென்றல் வந்துலவுவது" யாண்டுமில்லாத் தனிச் சிறப்பாகும். இத் தென்றல் உடலையும் உயிரையும் குளிர்ப் பிக்கும் சிரமிழ்தமாகும். அதன்கண் பொருநை என்னும் வாழ் யாறு என்றும் பொருவின்றி நின்று வளஞ் செய்கின்றது. அம் மட்டோ? தெய்வத் தீந்தமிழ் ஆருயிர்களின் உணர்வையும் உயிரையும் சிவமணம் செழிக்கச் செய்கின்றது. சிவபெருமான் திருக்குற்றாலத்தை யடுத்ததும் "தமிழ் திருச்செவி மாந்திட" என்பதன்றோ? திருவிளையாடல்.

அத்தகைய பெருமாவட்டத்தில் அரியநாயகிபுரம் என்னும் திருவூரில் மண்டு புகழ்சேர் தொண்டைமண்டல வேளாண் விழுக்குலத்தில் இருமுதுகுரவரும் இயற்றிய அருந்தவப் பேற்றால் செந்திலாண்டவன் திருவருளால் நம் அடிகளார் இற்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன் ஆவணி மூல நன்னாளில் தோன்றி யருளினர். இவர்கள் பிறத்தற்கு வேண்டும் தவம் செய்துள்ள அத் திருவூர் 'குமரகுருபர அடிகளார்க்கு மன்னர் திருமலைநாயக்கரால் அளிக்கப்பெற்ற முற்றூட்டாகும்.' முற்றூட்டு-சருவமானியம். அதன்கண் தோன்றக்கூடிய முற்றவப் பேறுடைய நம் அடிகள், அக் குமரகுருபர முனிவரனின் திருமட முதல்வராயது சாலப் பொருத்தமல்லவா? நம்மடிகளார்க்கு இயல்பாகவே செந்தமிழி னிடத்தும், சிவனெறியினிடத்தும், சிவமுருகனிடத்தும் மட்டி லாக் காதல் வளர்ந்தோங்கியது. இளமைக் கல்வியினைத் திருநெல் வேலி, இந்துக் கல்லூரியின்கண் திறம்படக் கற்றனர். கற்குங் காலத்தும் காதலுள்ளம் கடவுளின் பாலே மிக்கிருந்தது. பின் சில பல அலுவல்களிற் சேர்ந்து பணி செய்தனர். உள்ளம் உண்மைத் துறவை நாடிற்று; உலகியற்பற்று அற்றது; உடை யான் பற்று உற்றது. நற்றுறவினை எய்தி நலம் பெற வுன்னிய வடிகள் திருத்தருமபுரத் திருமடத்தை யண்மினர்.

அந்நன்னாளில் அத் திருமடத்து முதல்வராய் ... அருளாட்சி நிகழ்த்தியவர் சிவத்திரு சுப்பிரமணிய தேசிகஞான சம்பந்த பரமாசாரிய சாமிகளாவர். இவர்கள் அம் மடத்தின்

இருபத்து மூன்றாவது முதல்வராவர். இவர்பால் சைவப் பெருந் துறவும் சிவஞான தீக்கையும் பெற்றுச் சிறந்தனர். இங்குச் சைவசித்தாந்தப் பொருள் நூல்கள், திருமுறைகள், மற்றும் பல சமய நூல்கள் முதலியவற்றை நன்கு கற்றுத் தெளிந்தனர். மேலும் 'ஞானாவரணம்' 'முத்தி நிச்சயம்' முதலிய பண்டார சாத் திரங்களைப் பழைய சுவடிகளிலிருந்து பெயர்த்தெழுதும் பேறும் பெற்றனர் தருமை ஆளுகையின் உரிமையான பல திருக் கோயில்களை மேற்பார்க்கும் திருப்பணியையும் திறம்படப் புரிந் தனர். சமய மாநாடுகள் பலவற்றிற்குத் தலைமை பூண்டு அணி பெற நடத்தினர். தருமையில் நிகழ்ந்த 'மெய்கண்ட சாத்திர மாநாட்டி'லும் இருபத்து நான்காவது குருமகா சந்நிதானம் சிவத்திரு சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சாமிகளின் பத்தாவதாண்டு ஆட்சி விழாவிலும் பெரும் பங்கு பெற்று வரவேற்பு, வாழ்த்து, நன்றி முதலிய நன்மொழிகளை நயம் பெற நவின்று சிறப்பித்தனர். அடிகளாரின் தேனினும் இனிய தீங்குரல் திருமுறைச் செழும் பாலமுதுடன் கலந்து கேட்பார் ஊனினையுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா இன்பவுணர் வினை எழுப்பி உவகையூட்டும் இயல்பிற்று. அத்தகைய இன் குரலில் புகழ்நூல்களாம் திருமுறைச் செழும் பாடல்களை யோதிப் பலர்க்கும் பயன் பெரிதளித்தனர்.

அந்நாளில் திருப்பனந்தாளில் எழுந்தருளியிருந்தவர்கள் காசிவாசி சிவத்திரு சாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் ஆவார் கள். இவர்கள் பத்தொன்பதாம் முதல்வராவர். இவர்கள் அடிக ளாரின் அன்பருள், அறிவு ஆற்றல் அரும்பணி முதலிய திறமை களைக் கண்டுங் கேட்டும் உளங்கொண்டுவந்து இவர்களையே தம் பிற்றோன்றலராய் அமர்த்த ஆர்வங்கொண்டனர். கொண்டு 1944 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 26 ஆம் நாள் அடிகளாரைத் திருமடத்தின் முதல்வராக்கினர். அம்முறையில் நம்மடிகளார் இப்பொழுது இருபதாவது முதல்வராக வீற்றிருந்து அருளாட்சி புரிந்து வருகின்றார்கள். இவர்களின் ஆட்சித்திறனும், அருளுள மும், பொருள்வளமும், சிவன் திருவாணைத் துணையும் நாளும் வளர்ந்து பன்னூற்றுக் கணக்கான பயனார் அறங்களாகப் பல்கி வருகின்றன. அவை இதுகாறும் ஏறத்தாழ வெண் பொன் ஐம்பத்திரண்டரை நூறாயிரத்திற்குரிய இருநூற்று எண்பத் தொன்றின் மேலாம் பேரறக் கட்டளைகளாகும். விரிவஞ்சிச் சுருக்கமாகக் குறிப்பிக்கின்றோம்.

"சொல்லாற் சாற்றிச் சோறிடும்" பேரறம், பன்னிரு முறை களையும் நல்ல முறையாக அச்சிடுவித்து மலிவாக வழங்கி வருதல், சிறந்த சிவப்பதிகளில் தேவாரம் ஓதும் திருப்பணி நிகழ்வித்தல்,

எண்ணிறை பண்ணுடன் ஓதும் ஓதுவார் பலரைப் பல திருக்கோவில்களில் அமைத்துத் தொண்டாற்றுவித்தல், கல்வி நிலையங்களில் பயிலும் இளம் மாணவர்கள் திருமுறைகளை நெட்டுருப்பண்ணிப் பயன்பெறப் பரிசுத்திட்டங்கள் அமைத்தல், சிவப்பதிகளில் வனப்புறு வெண்கல்லில் தேவாரத் திருப்பதிகங்களை எழுதுவித்துப் பதித்தல் முதலிய சிவத்தொண்டுகளாகும்.

மாறு மெய்ப்பொருளுண்மை விளங்கத் தேற்றும் சைவ சித்தாந்த நுண்ணூல்கள் நாடெங்கும் பரவி நற்றமிழும் நான்மை நன்னெறியும் மேன்மையுறப் பல பரிசுத் திட்டங்கள் அமைத்துள்ளார்கள். இந் நூல்கள் இவர்களியற்றும் இணையிலாப் பேரறப் பெருங்கட்டளையால் இந்நாளில் வட இந்தியப் பல்கலைக் கழகங்களிலும் பயிற்றப் பெற்று வருகின்றன. பிறமொழியாளர்க்குத் துணையாகச் சிந்தாந்த நூல்கள் இந்தி ஆங்கிலம் முதலிய மொழிகளில் வெளியிடப்பெற்று வருகின்றன.

கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகள், தொடக்கப் பள்ளிகள், முதலிய கல்வி நிலையங்களுக்குப் பெரிய அளவில் நன்கொடை வழங்கியுள்ளார்கள். தம்மாட்சியில் செந்தமிழ்க் கல்லூரி, உயர்நிலைப் பள்ளிகள், தொடக்கப் பள்ளிகள் பற்பல நடத்தி வருகின்றனர்.

குமரகுருபர முனிவரனார் திருவருளால் திருத்தோற்றம் எய்தி, சீவைகுண்டத்தின்கண் பார்க்குமிடமெங்கும் அவர்தம் திருப்பெயரும் நாட்டமும் மாந்தருள்ளத்து உருப்பெற்றெழச் செய்துள்ள அறங்கள் அளப்பில. அவற்றுள் சில வருமாறு: "குமரகுருபரன் என்ற மாதவிதழ், அத்திருப் பெயராலேயே திகழும் அச்சகம், உயர்நிலைப் பள்ளிகள், நூலகங்கள், மன்றங்கள்" போன்ற பலவாம்.

நன்கொடையாக ஏழை மக்கள் பலர் மருத்துவம் பெறுகிறார்கள் நீராடுவதற்கு வேண்டிய பல தீர்த்தக் கட்டங்கள் அமைத்து வழங்கப்பட்டுள்ளன. புலவர்கட்குப் பொருவரு நன்கொடைகளும், பட்டங்களும், பரிசில்களும் ஆற்ற வழங்கி வருகின்றனர். சிறந்த ஆனினங்களை வளர்ப்பதற்கென்று பரிசுத் திட்டங்கள் அமைத்துள்ளார்கள்.

பொன்னம்பலத்தும், வெள்ளியம்பலத்தும், தேவாரத் திருப்பதிகங்களின் கல்வெட்டுகள், நாள்வழி ஓதுதற்குவேண்டும் துணைகள், சொற்பெருக்கு நிகழ்ச்சிகள், சிவவொளிசிறக்கும் காட்சிகள் அமைத்துள்ளார்கள். ஏறத்தாழ இருபத்தைந்துக்கு மேற்பட்ட திருவூர்களில் 'சிவ சிவ' ஒளிவளர் விளக்குகள் அணி செய்கின்றன. தில்லை, காஞ்சி, காசி, மதுரை, இராமேசுரம், திருக்

குற்றாலம், சென்னையைச் சார்ந்த கபாலீச்சுரம், [illegible] திருக்கோவில், திருவேட்டீசுரன் பேட்டை முதலிய இடங்களில் நன்கொடையாக ஒலிபெருக்கிகளை அமைத்துள்ளார்கள். திருமுறை ஓதும் திருவிழாக்கள் பல திருவூர்களில் நிகழச் செய்துள்ளார்கள். சிறப்பாகத் திருவாரூர், தில்லை, மதுரை, திருக்குற்றாலம், திருவிடைமருதூர் முதலிய திருவூர்களில் குறிப்பிட்ட சில முதன்மை நாட்களிலும், திருவிழாக்காலங்களிலும் திருமுறை வாணர்கள் பண்ணுடன் ஓதும் தேவாரச் சிவப்பணி புரிய வேண்டுவன அமைத்துள்ளார்கள். செந்தமிழ்ப் பொதுமறையாம் ஆயிரத்து முந்நூற்று முப்பதருங் குறளும் மதுரைத் திருக்கோவிலின்கண் கல்லெழுத்தில் பதிப்பித்துள்ளார்கள். இவ்வகையாகச் செய்தருளியுள்ளவற்றைத் தொகுத்துக் காணுமிடத்து வருமாறு காண்க.

| | | |
|---|---|---|
| க. | சைவசித்தாந்தம், திருவாசகம், பெரியபுராணம், கந்தபுராணம் முதலிய திருவருணூற் சொற்பொழிவுகளுக்கு | 55000 |
| உ. | சைவசித்தாந்தப் பயிற்சி பரப்புதற் பணிகட்கு | 76000 |
| ௩. | திருமுறை வெளியீடுகளுக்கு | 112975 |
| ச. | மாணவர்கட்கு வழங்கும் உதவிப்படி | 725000 |
| ரு. | உயர்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள், மாணவருறையுள் முதலியவற்றிற்கு | 455700 |
| சு. | பார்ப்பனர்க்கும் ஏழைகட்கும் உணவளிக்க | 2296800 |
| எ. | மாணவர்கட்குப் பரிசு வழங்கல் முதலியன | 226500 |
| அ. | மருத்துவமனைகள், நலவிடுதிகள், குடிநீர் வாய்ப்புக்கள் முதலியன | 234445 |
| கூ. | பல திருக்கோவில்களில் பண்ணொடு பாடும் ஓதுவார்களை அமைத்தல் | 524500 |
| க0. | தேவாரத் திருப்பாடல்களைக் கல்லெழுத்திற் பதித்தல் | 57000 |
| கக. | வழிபாட்டு மண்டபங்கள், நூல்நிலையங்கள், அப்பர் அகத்தியர் திருமடங்கள் முதலியன | 142725 |
| கஉ. | நெய்விளக்கிடுதல், பழுது பார்த்தல், பசுக்காத்தல் முதலியன | 332100 |
| | | 52,38,745 |

" தண்ணார் அருள்நந்தித் தம்பிரான் சால்கொடையால்
[illegible]
[illegible]
ஓங்குவபோல் ஆறுபத் தொன்றின்மேற் பல்லூழி
[illegible]க வாழ்க உகந்து."

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி சிலம்பு ௩ச, பரல் க, ௩எ-ஆம் பக்கத்தொடர்ச்சி)

ஒதிபன்: என்னுடைய மக்காள், உங்களுக்காக வருந்துகிறேன். என்னை நம்புங்கள். உங்கள் துன்பங்களை உணர்ந்து துன்பப் படுகிறேன். உங்கள் துன்பங்களையெல்லாம் சேர்த்து ஒருங்கேயிருந்தாலென வருந்துகிறேன். நான் தூங்க வில்லை, துக்கப்படுகிறேன். எவ்வாறு இத் துன்பத்தினைப் போக்கலாம் என்று எண்ணி வருந்துகிறேன், சோம்பலாகக் காலம் கழிக்கவில்லை. என் உறவினன் கிரியனை அப்பால் லோவின் புதிய இல்லத்திற்கு அனுப்பியுள்ளேன். இன்று தான் அவன் வரவேண்டிய நாள். இன்னும் அவன் வந்து சேரவில்லையே என்று மனக்கலக்கமாக இருக்கிறேன். அவன் வந்து தெய்வம் எதைச் செய்யச் சொன்னாலும், அதைச் செய்து முடிப்பேன்.

பூசாரி: நல்லது சொன்னீர். (தொலைவிலிருந்து யாரோ வருவதைக் காண்கிறான்) அதோ பாருங்கள் கிரியன் வருவதுபோலிருக் கிறது. ஆம், அவரேதான், இதோ வருகிறார்.

ஒதிபன்: (பார்த்த வண்ணம்) சிரித்த முகத்துடன் காணப்படு கிறான் கிரியன். அவன் கொண்டுவருவது நல்ல செய்தியாக இருக்கட்டும்.

பூசாரி: அவர் கொண்டுவருவது நல்ல செய்தியாகத்தான் இருக்கவேண்டும். முகமே காட்டுகிறதே.

ஒதிபன்: விரைவில் அறிந்துகொள்வோம். நாம் சொல்வது அவனுக்கும் தொலைவில் வந்துவிட்டான்....வருக சோதர, தெய்வ வாக்கிலிருந்த செய்தி என்னவோ.

[கிரியன் வருகிறான்]

கிரியன்: நல்ல செய்திதான். துன்ப நிகழ்ச்சியிலும் நல்லது கிடைக்கும்.

ஒதிபன்: தெய்வம் என்ன சொல்லிற்று? அச்சத்திற்கும் நம்பிக்கைக்கும் இடையே நிறுத்தி வைக்காதே. சொல் சீக்கிரம்.

கிரியன்: இவரனைவர் முன்னிலையிலும் சொல்லவேண்டுமாயின் சொல்கிறேன். உள்ளே சென்று பேசுவது நன்று.

ஒதிபன்: இவர்கள் முன்னேயே சொல். அவர்கள் துன்பம் என்னைச் சார்ந்தது. என் உயிரினும் மேலாக நினைக்கச் செய்யத்தக்கது.

கிரியன்: நம் நாட்டில் பிறந்து வளர்ந்துள்ள தூய்மையற்ற ஒன்று நாட்டைப் பாழ்படுத்துகிறதாம். அதனை ஒட்ட வேண்டும். நம்மை அழிப்பதற்கென்று உள்ள அதனை வைத்திருக்கக் கூடாதாம்.

ஒதிபன்: தூய்மையற்ற ஒன்று என்பது எது? தூய்மைப் படுத்துதற்கு என்ன செய்யவேண்டும்?

கிரியன்: தூய்மையற்ற அவனை வெளிக்கடத்த வேண்டும். அல்லாக்கால் இரத்தத்திற்கு இரத்தம் கொடுக்கவேண்டும்.

ஒதிபன்: எந்த இரத்தம்? யார் இறந்தது? பழிக்குப்பழி யாரை வாங்கவேண்டும்?

கிரியன்: தாங்கள் வருமுன் இருந்த அரசர் இலேயர்.

ஒதிபன்: யான் அறிவேன். ஆயின் அவரைப் பார்த்தல்லே.

கிரியன்: அவர் இனந்தெரியா ஒருவனால் கொல்லப்பெற்றார். எனவே கொன்றவனைக் கண்டுபிடித்துப் பழிவாங்க வேண்டும் என்பது தெய்வ கட்டளையின் கருத்தாகும்.

ஒதிபன்: அவன் எங்கிருப்பான்? பல்லாண்டுகளுக்கு முன் நேர்ந்த அக் கொடுமையினைச் செய்தவனை எப்படிக் காண்பது?

கிரியன்: அதனைத் தெரிந்து கொள்ளவேண்டுமாயின் தேடிக் கண்டுபிடிப்பாய் என்பதே தெய்வம் சொன்னது.

ஒதிபன்: வீட்டிலா, திறந்த வெளியிலா, வெளிநாட்டிலா இலேயர் இக் கொடுவினைக் காளாகியது.

கிரியன்: யாத்திரை சென்று வருவதாகச் சொல்லிச் சென்றார். அந்த நாளைக்குப் பின் நாங்கள் அவரைப் பார்க்கவில்லை.

ஒதிபன்: அவருடன் சென்றோர் யாருமில்லையா? என்ன நடந்தது என்று தெரிந்துகொள்ள இயலவில்லையா? தெரிந்தால் கொலைக்காரனைக் கண்டுபிடிக்க இயலுமே!

கிரியன்: எல்லோரும் இறந்து விட்டனர். ஒருவன்தான் மீண்டான். அவன் அஞ்சி ஓடிவிட்டான். அவனால் ஒன்றுதான் சொல்ல முடிந்தது.

ஓதிபன்: அது என்னவாம்? அவ் வொன்றே மற்றவற்றைக் காட்ட உதவுமன்றோ?

கிரியன்: அவன் சொன்ன கதை, பல திருடர்கள் வழிமறித்துக் கொன்றுவிட்டார்கள் என்பது.

ஓதிபன்: வழிப்பறிக்காரர்கள் அவ்வாறு கொடூரமாக நடந்து கொண்டிருக்கமாட்டார்கள். அவ்வாறு செய்வதற்குப் பொருள் கொடுத்து யாரேனும் ஏவியிருக்கவேண்டும்.

கிரியன்: அப்படியுந்தான் நடைபெற்றது. ஆனால் பின் வந்த இன்னல்களில் கொலைகாரர்களைப் பழிதீர்க்க ஒருவனும் முன் வரவில்லை.

ஓதிபன்: என்ன இன்னல்களாம்? ஒரு அரசன் மரணத்தைப் பற்றி ஆராய்தற்குத் தடையாக வந்த பெருந்தடை யொன்றுங் காணேமே!

கிரியன்: விடுவிக்க இயலாத மாயத்தை ஆய்தலினும் மிக அவசரமானவற்றைக் கருதிச் செய்யுமாறு ஸ்பிங்க்ஸ் தன் சொற்களால் வற்புறுத்தப்பட்டோம்.

ஓதிபன்: அப்படியாயின், நான் அக் கொலையை ஆய முற்படுவேனுக. முற்பட்டு அனைத்தையும் வெளிச்சமாக்குவேனுக. இறந்தாருக்குச் செய்யும் கடமையைக் காட்டிய உனக்கு நன்றி. இலேயனைக் கொன்ற அக்கையே நாளை என்னையும் கொல்லும்; எனவே அக் கொலையாளியைக் கண்டுபிடிப்பது என் கடமையாகும். மக்களே எழுந்து செல்லுங்கள். தெய்வத்தின் அருளால் அனைத்தையும் அறிந்து ஆவன செய்வோம் என்பதை மற்றவர்கட்கும் அறிவியுங்கள்.

[ஓதிபன் அரண்மனைக்குள் செல்கிறான். செய்தி சொல்லி வெளியே பொதுமக்களுக்குச் சொல்ல வேண்டுவனவற்றைச் சொல்லப் போகின்றான். அங்கிருந்த மக்களைக் கலைந்து செல்லுமாறு பூசாரி சொல்லுகிறான்.]

பூசாரி: எழுந்திருங்கள் குழந்தைகளே! அரசன் நாம் வந்து கேட்டதைச் செய்வதாகச் சொல்லியுள்ளான். செய்தி சொல்லியனுப்பிய சந்திரத் தெய்வம் நம்மை இத் துன்பத்தினின்றும் காப்பாற்றும்!

[அனைவரும் பிரிந்து செல்கின்றனர்.]

(தீப நாட்டு முதுமக்கள் குழு வருகிறது)

குழு

நிலவொளியின் திருவிளங்கும் நெடியபுகழ்த் தீபநகரத்
துலவுபுகழ் வான்வெளிநின் றொருகுரலும் வருவதுகேள்
கலகமொழி மனமயங்கும் கவினுடைய தெய்வதமே
நலமெனக்கு வருகவென நனிவணங்கி வாழ்த்துதுமே.

அஞ்சுமெமக் கருளுகவே அதினனெனும் தெய்வதமே
செஞ்சொலிளஞ் செல்விநின தருள்தங்கை அத்தமியாள்
விஞ்சுபுகழ்த் தெய்வதங்கள் மீட்கவெமைக் கொடுநோயும்
பஞ்சுபடு தீயுமெனப் பலப்பலவாந் தீங்கினின்றே.

சொல்லொணுத் துன்பம் சூழ்ந்திடு மீண்டே
இல்லமும் வெளியும் எங்கணும் சாதலே
மக்களை இழந்த தாயும் பிறரும்
திக்கெல்லாம கிடந்து திருவினை வணங்கி
மரணப் பகைவனை மாய்க்கவென் றேங்கி
வாழ்த்துவம் பெரிதே வாழ்த்துவம் பெரிதே.

[அரண்மனையினின்றும் ஒதிபன் வெளிவருகிறுன்.]

ஒதிபன்: நீங்களெல்லோரும் கடவுளை வணங்கினீர்கள். நீங்கள் என் ஆணைக்கடங்கி உங்களுடைய துன்பினைப் போக்க என்னை நம்பினுல் நல்லது கிடைக்கும். தீப நாட்டு மக்களே, உங்களிடம் யான் தெரிவிப்பதாவது, இலபுடகன் மகன் இலேயனைக் கொன்றது யாரென்று உங்களில் யாருக்கேனும் தெரியுமாயின் என்னிடம் சொல்லுக.

[அனைவரும் அடங்கிநிற்கின்றனர்.]

அன்றி, யாரேனும் கொன்றிருப்பின் அவன் உண்மையை உரைப்பீர். அவனுக்குத் துன்பம் ஒன்றும் செய்யேன். நாடுகடத்தப்படுவான் என்பது ஒன்றே.

[அதைக் கேட்டோர் வாய்திறவாதிருக்கின்றனர்.]

இங்குள்ளோர் வாய்திறவாதிருப்பின், பின்னர் கொலைக் காரனை மறைத்து வைத்திருந்த குற்றத்திற்குத் தலையினை வெட்டி வீழ்த்தும் கட்டளையிடுவேன். தெய்வங்களின் சாபம் இக் கட்டளையை மீறுவோர்க்காகுக. அவர்கள் நிலங்கள் விளையாதொழிக. மனைவிமார் பிள்ளைப் பேறற்றுக் கிடக்க. இன்று நிலவும் நோய் அவர்களைப்பற்றி அடியோடு ஒழிக்க.

முதியோன்: } அரசே போபசு சொல்லிய அதனைத் திறனுடன்
(கோரஸ்) } விளிசெய்வதும் அவனே.

ஒதிபன் : தெய்வம் சொல்லாத ஒன்றைத் தெரிவித்தல் என்பது மனிதரால் ஆவதில்லை.

கோரஸ் : ஆயின், யான் சொல்வதொன்றுண்டு.

சொல், கேட்போம்.

கோரஸ் : போபசுத் தெய்வத்திற் கடுத்திருப்பது திரேசியத் தெய்வம். அது இதுபற்றித் தெளிவுபடுத்தக் கூடும்.

ஒதிபன் : அது எனக்குத் தெரியாததொன்றன்று. இருமுறை கேட்டும் தெரிந்தபாடில்லை.

கோரஸ் : யான் செவிவழிச் செய்தி யொன்று கேட்டேன். அது கட்டுக்கதையோ என்று அஞ்சுகிறேன்.

ஒதிபன் : கட்டுக் கதையா? வெளியிடு ; கேட்போம்.

கோரஸ் : இலேயனை வழியில் எதிர்ப்பட்டோர் கொன்றனர் என்றனர்.

ஒதிபன் : யானும் கேட்டேன். தெரிந்தவர்கள் யாரேனும் இருப்பரேல் சொல்லுக.

கோரஸ் : தெரிந்த ஒருவனை இப்போது அழைத்து வருகின்றனர். அவன் வருவதுரைக்கும் வாய்மையாளன்.

[திரிசியன் வருகிறான். அவன் குருடனாதலின் ஒருவன் அழைத்து வருகிறான்.]

ஒதிபன் : திரிசிய, உனக்குத் தெரியாததில்லை என்பது யாங்கள் அறிந்ததே. உன் உள்ளொளியினால் எங்களுக்கு அருளுக. கொன்றவன் யாவன் என்று எங்களுக்குச் சொல்லுக.

திரிசியன் : நல்ல சொற்கள் தாம். அறிவுந்திறனும் நல்லது செய்யா ஆயின் சொல்லாதிருந்து அதனால் நேரும் பொல்லாங்கினைப் பெறுவதே நல்லதாம். இங்கு யான் வாரா திருந்தேனாயின் நன்றாம்.

ஒதிபன் : தீப நாட்டுக்குத் தீங்கினை விளைக்கும் நீ யார்? உன் தந்தைதான் யாவன்?

திரிசியன் : யான் சொல்வேனாயின் நினக்குத்தான் தீமை விளையும்.

ஒதிபன் : உனக்குத் தெரிந்தால் மறைக்காமல் சொல்லென்று வேண்டுகிறோம்.

திரீசியன் : நீ மயக்கங் கொண்டுள்ளாய். இம் மறை பொருள் என்னிடமே இருக்கக் கடவது.

ஒதிபன் : உனக்குத் தெரிந்த ஒன்றை வெளியிடுவதில் தடை யென்ன? உன் நகரம் பாழ்படுவதை அறிந்திலையா?

திரீசியன் : உன்னையும் என்னையும் காப்பாற்றுதற்குத்தான் உண்மையை வெளியிட அஞ்சுகிறேன்.

ஒதிபன் : உண்மையை உரைப்பதற்கு அஞ்சுவானேன்? வீணாக முடிவுவரை முரட்டுத்தனத்துடன் இருக்க எண்ணமா?

திரீசியன் : என்னைக் குறை கூறாதே. உன் வீட்டைச் செப்பம் செய்துகொள்.

ஒதிபன் : கேட்டீர்களா, அரசனைக் கீழ்மைப்படுத்திய சொற்கள் முனிவனையும் முனியச் செய்வன.

திரீசியன் : நடக்கவேண்டுவது நடந்தே தீரும்.

ஒதிபன் : உறுவதுரைப்பது உன் கடமை.

திரீசியன் : இனி ஒன்றும் சொல்லேன். யாது வேண்டுமாயினும் செய்து கொள்.

ஒதிபன் : யான் என் மனத்தில் பட்டதைச் சொல்லவேண்டியவனாக விருக்கிறேன். நீ இச் சூழ்ச்சியில் கலந்துள்ளவனாக நினைக்கிறேன். இக் கொலை உன் கையால் செய்யப்பட்டது என்றும் சொல்கிறேன்.

(தொடரும்)

## நன்கு வாழ்வீர்!

[நாஞ்சில், கா. கணபதி]

தெய்வ மொழியாம் தமிழினிலே
தேங்கிக் கிடக்கும் அருள்வழிகள்
உய்வைத் தருமென் றுணராமல்
உலகில் சுழலும் மதியிலிகாள்!
நைவைத் தருந்தீ நெறிசேரும்
நாத்திகர் வழியை நணுகாமல்
தெய்வ அருள்சேர் தமிழ்வழியில்
தெரிந்து நன்கு வாழ்வீரே.

# திருக்கயிலை சென்று திரும்பிய அடிகள்

திருக்கயிலாய பரம்பரைத் திருத் தருமபுர ஆதீனத்து இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானம் சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சாமிகள் அவர்கள் மெய்யன்பர்களும் திருமடச் சுற்றமாகிய பரிவாரங்களும் தம்மைப் புடைசூழச் செலற்கரிய கயிலையினைத் திருவருளால் சென்று கண்ணாரக் கண்டு வழிபட்டு மீண்டருளினர். இத்தகைய திருவருள் வழிச் செலவு பொருவரு சிவ புண்ணியமும் போற்றரு விழுத்தவமு மாகும். இக் கயிலை வழிச் செலவுக்கு அடிகள் மேற்கொண்டருளிய அருட்பணிகள் அளப்பில. அவைகளுள் தலைசிறந்ததும் உயிர்நிலை யாயதும் எது எனின்? திருமுறை யோதும் திருப்பணியேயாம். பண்டுபோல் இந்நாளிலும் திருமுறை யோதுதல் பிறவற்றான் எய்த முடியாத பெரும்பயனை எய்துவிக்கின்றதென்பதனை உலகோர் கண்டு கைக்கொண்டு அதனை ஓதியுய்ய உறுதுணையா வது அடிகளார் மீட்சியின் அருங்காட்சியாகும்.

அடிகளார் முன்னர் பல திருவூர்களை வழிபட்டுப்பண்பட்ட வர்கள். திருக்கேதாரம், பசுபதிநாதம், அமரநாதம் என்னும் முப்பெருந் திருவூர்களை வழிபட்டு வணங்கிய குணஞ்சால்சீலர். ஆண்டொன்றாக அருங்கயிலை செல்லுதல் வேண்டுமென்னும் திருவுள்ளத்தால் ஆதீனச் சொக்கலிங்கப் பெருமான் திருமுன் "திருக்கயிலைத் திருப்பதிகம்" ஒல்லும் வகை ஓவாது உளங்கனிந் தோதியும் ஓதுவித்தும் திருமுறைத் திருத்தொண்டாற்றி வந்தனர்.

1959 ஜூன் திங்கள், 19 ஆம் நாள் திருக்கயிலை வழிநடை திருவருட்டுணையால் துவங்கப்பெற்றது. அப்பர் பெருமானுக்கு ஆண்டருளிய சிவபெருமான் திருக்கயிலைத் திருக்காட்சியினை நல்கி யருளிய திருவையாற்றிறைவற்குத் திருமுறையோதிச் சிறப்பு வழிபாடியற்றிப் புறப்பட்டருளினர். பின் திருக் காசி யினை எய்தினர். உடனழைத்துச் சென்ற தென்றமிழ்நாட்டு அந்தணர்களைக் கொண்டு ஆகம முறைப்படி காசிச் சிவபெருமா னுக்கு வழிபாடியற்றினர். பின் பல திருவூர்களையும் வழிபட்டு 'நைநிடால்' வந்து சார்ந்தனர். அங்குக் "கீதா சங்கத் தலைவர் திரு. வித்தியானந்த சரசுவதி அடிகளா"ல் வரவேற்கப்பட்டனர். இப் பெரியார் பன்னூலாசிரியர்; பன்மொழிவல்லார். பண்டு மைசூர் மாநிலத்தைச் சார்ந்தவர். இருபதுமுறை திருக்கயிலை

சென்று திரும்பிய செம்மலார். மானசசரோவரப் பகுதிகளில் தங்கி நல்ல பழக்கமுடையவர். அவர் வழித் துணையாக்கொண்டு வழிநடை தொடங்கப்பட்டது. அப் பகுதி ஆளுநர் தென்றமிழ் நாட்டுத் திருவினர் வி. வி. கிரியாவர். இவர்தம் அணுக்கச் செயலர் வாலையானந்தர், நீலகண்டன் முதலியோராவர். ஆளுநர் அடிகளை நன்கு வரவேற்றனர். நல்விருந்தாற்றினர். ஆட்சி எல்லையிலும், புறத்திலும் வேண்டுந் துணைபுரிய வேண்டுவ செய்தமைத்தனர்.

உந்து வண்டியில் புறப்பட்டனர். அல்மோரா வழிச் சாகேசுவரம் அல்மோரா, சோமேசுரம், வைத்தியநாதம், கௌசானி, பாகேசுரம் சென்று வழிபட்டனர். பாகேசுரத்தில் கருட கங்கையும், சரயு நதியும் கூடுகின்றன. வழியில் தேவ்பகோர் அடைந்தனர். இராம கங்கை ஆறு கடந்தனர். கிர்காமைக் கிட்டினர். டிக்சனை யொட்டிக் காலாமுனி என்ற பெருஞ் சிகரம் இருக்கிறது. இங்கில்லாத மூலிகைகள் எங்குமில்லை. இங்கு ஆட்சித் துறையினர் "சித்த மருத்துவ ஆராய்ச்சி நிலையம்" ஒன்று ஏற்படுத்தியுள்ளார்கள். நிலைத்திணை இன ஆராய்ச்சி யாளர்கள் பலர் இங்கே வந்து நல்ல பயன் பெறுகின்றார்கள்.

மிலம், புகுதியார் என்னும் இடங்களில் குகைகளில் இரவுகளைக் கழித்தனர். பின் மர்த்தோலி வந்தனர். இங்கு நந்தா தேவி, நந்தகோட், திருசூலி முதலிய புனித சிகரங்கள் காட்சி யளிக்கும். பின் 'மிலம்' என்னும் இந்தியநாட்டுக் கடைசிச் சிற்றூரை வந்தடைந்தனர். இவ்வூர் உலகப் பெரும்பனியுறை விடங்களிலெல்லாம் மிகப் பெரியதாகும். இவ்வூரில் வணிகர்கள் பலர் திபேத்துநாட்டு வாணிகத்தின் பொருட்டுத் தங்கியுள்ளனர். இவ்வூரில் சோதனை இடங்களும், அடையாளச் சீட்டு நல்கு மிடங்களுமுள்ளன.

உண்டாதூர, செயந்தி, குங்கிரி, பிங்கிரி முதலிய கணவாய்களைக் கடந்து மாலாசிலாங்கை யடைந்தனர். இதற்கு மேல் திபேத்தியநாட்டு மொழி கற்றாரின் துணை இன்றியமையாததி யாவர்க்கும். அத்தகைய வழிகாட்டி இருவரின் துணையுடன் புறப்பட்டனர். 'துங்'கென்னும் பகுதியில் தங்கினர். சயந்திக் கணவாயின் முடிவிடத்தில் தேநீர்க்கடை யொன்றுண்டு. அங்குத் தேநீர் அருந்திப் புறப்பட்டனர். பிங்கிரிக் கணவாயின் உச்சிப் பகுதியில் அமரநாதனைப் போலப் பனிப் படிவாலே அமைந்த சிவலிங்கத் திருமேனி காணலாம். அதற்குமேல் மயன்படைப்போ என்றையுறும் மாண்பினதாய கோட்டை மதில், கோவில் விமானங்கள், மண்டபங்கள், கோபுரங்கள்

போன்ற அமைப்புடைய மலைச் சிகரங்கள் பலவும் காட்சியளிக்கின்றன. மூவாயிரவடிச் செங்குத்தான உயரம் ஏறியதும் கயிலாயநாதன் காட்சியைத் தொலைவாகக் கண்குளிரக் காணலாம். கயிலாயத்தின் முன் கோபுரம் போன்று காணப்படுவது இக் கணவாய். இதனைக் கடந்து சிர்ச்சின் பகுதியை வந்தடைந்தனர்.

இங்கிருந்து பத்துக்கல் அளவுக்கு இந்திய எல்லை. இதற்கு மேல் திபேத்தியப் பகுதி. பின் தசாங், சுகாடு, கிருக்கியம் முதலிய பகுதிகளைக் கடந்து தீர்த்தபுரி வந்தடைந்தனர். இதனைப் பஸ்மாசுர சம்ஹாரம் நிகழ்ந்த இடம் என்ப. இங்கு வெந்நீர் ஊற்றுத்தீர்த்த முள்ளது. இங்கிருந்து புறப்பட்டு நான்காவது நாளில் திருக்கயிலையின் மேற்கு வாயிலை வந்தடைந்தனர். திருக்கயிலைத் திருமுறைத் திருப்பதிகம் ஓதினர். இம் மேற்கு வாயிலுக்குத் திபேத்து மொழியில் 'நியான்றி' எனவும், செந்தமிழ் மொழியில் 'நந்திமுகம்' எனவும் வழங்கப்படுகின்றது.

திருக்கயிலைச் சிவபெருமானின் திருத்தோற்றம் அனைத்துலக அன்னையத்தன் (விராட்லிங்கம்) வடிவமாகும். இத் தோற்றம் பனி உறைவு பெற்றதாக முன்னே உள்நந்தி, பல மண்டபங்கள், நிருத்த சபை அமைப்புக்கள், கொடிமரம், பலி பீடம் முதலியவற்றுடன் இயற்கையாக எழிலோங்கித் திகழ்கின்றது. கயிலைப் பனியுறைவுகளிலிருந்து அங்கங்கும் பல சிற்றருவிகள் விழுந்த வண்ணமாகவே யிருக்கின்றன. திருக்கயிலையின் மேற்கு வடக்குக் கிழக்கு ஆகிய முப்புலங்களிலும் யாறுகள் சூழ்ந்து ஓடுகின்றன. இவை தென்பால் வந்து ஒன்று கூடி இராட்சதத் தடாகத்தைச் சென்றடைகின்றன. சிவபெருமான் மேற்குத் திருமுகமாகத் தோற்றம் அளித்தருளுகின்றனன். வடகிழக்கு மூலையில் கௌரிகுண்டம் அமைந்துள்ளது. நான்கு திருச் சுற்றுக்களும் முப்பத்திரண்டுகல் தொலைவுள்ளன. உள் சுற்றும் ஒன்றுண்டு. வெளிச்சுற்று - வெளிப்பரிக்கிரமம். உட்பரிக்கிரமம் - உட்சுற்று. வெளிச் சுற்றினைப் பன்னிருமுறை வலம் வந்தவர்களையே உட்சுற்றினுட் புக இசைகின்றனர். கயிலைப் பகுதிமட்டும் பூடானிய ஆட்சியுளிருக்கின்றது. நான்கு திருமுகங்களுக்கும் நான்கு திருமடங்களும் தெற்கு முகத்தில் உட்சுற்றுத் தொடங்குமிடத்தில் ஐந்தாவது திருமடமும் உள்ளன. இவ்வைந்து திருமடங்களும் பௌத்த மடங்களாகும். இங்குள்ளவர்கள் திருக்கயிலைச் சிவபெருமானை முறைவைத்து வழிபாடு செய்து வருகின்றனர். பௌத்தமும் வைதிகமும் கலந்த ஒரு சமயம் லாமா மதம். வைதிகக்கிரியைகள் மிகுதியாகவுள்ளன என்ப. திருக்கயிலை சிவசத்தியாக வழிபடப்படுகின்றது. வெளிச் சுற்றுச் சுற்றிவர நம்மனோர்க்கு நான்கு நாள் செல்லும் என்ப.

பேத்திய அன்பர்கள் காலால் நடந்து வலம் வருகின்றனர். உருண்டு வலம் வருகின்றனர். வீழ்ந்தெழுந்து வீழ்ந்தெழுந்து வலம் வருகின்றனர். அருந்தவப் பெருமைசால் முனிவர்கள் பலர் ஒரே நாளில் நான்கு சுற்றுக்களையும் வலம் வந்து விடுகின்

குருமகா சன்னிதானமவர்களும் உடன் செல்லும் பேறு பெற்ற மெய்யன்பர்களும் செப்டெம்பர்த் திங்கள் துவக்கத்தில் திருக்கயிலை வழிபாட்டினைத் திருவருட் பெருந்துணையால் நிறைவேற்றிக் கொண்டு நல்ல நலத்துடன் சென்னைக்கு எழுந்தருளினர். அப்பொழுது சென்னையின் மைய நிலையத்தில் உயர் மன்றநடுவர் உயர்திரு, என். சோமசுந்தரம் அவர்கள், உயர்மன்ற நடுவர் உயர்திரு, சுப்பிரமணிய நாடாரவர்கள், உயர்திரு எஸ். சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் முதலிய மெய்யன்பர்கள் பலரும் பெருமக்கள் திரளும் ஒருங்கு குழுமி வாழ்த்தி வணங்கி வரவேற்றனர். அடிகளும் ஆசிமொழிந்தருளினர்.

வாழ்க அடிகள்! வாழ்க தருமையாதீனம்! வாழ்க தமிழ் மொழி! வாழ்க சிவனெறி!

---

## தமிழகப்புலவர்குழு மூன்றுவது கூட்டம்

நிகழும் புரட்டாசித் திங்கள் கஅ ஆம் நாள் (5-10-59) ஞாயிற்றுக் கிழமை முற்பகல் க மணிக்குச் சங்கம் வளர்ந்த தனிநகர் ஆகிய மதுரையில் தமிழ்ச் சங்கக் கட்டடத்தில் தமிழகப் புலவர்குழுக் கூடியது. உயர்திரு கருமுத்து. தியாகராசச் செட்டியாரவர்களைத் தலைமை தாங்கும்படி அக்குழு அமைப்பாளர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் வேண்டினர். அவர்கள் தலைமைதாங்கி வரவேற்புக்கூறி முதலில் நாவலர், கணக்காயர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் எண்பத்தொன்றும் ஆண்டு விழா வாழ்த்துரை வழங்கினர். புலவர் குழுவிற் பலர் வாழ்த்துரை கூறினர். அவ்வாழ்த்துரைகட்கு, நாவலர் பாரதியார் நன்றியும் வாழ்த்தும் கூறினர். பின்னர் அந்நாளில் நிகழக் குறித்திருந்த தமிழ்மொழிச் சீர்திருத்தங்கள் பல ஆய்ந்து முடிவுசெய்யப்பட்டன. நடுப்பகல் கருமுத்து தி. அவர்கள் தம் இல்லத்திற்குப் புலவர் குழுவினரை அழைத்து விருந்தளித்துப் பொன்னுடை போர்த்திச் சிறப்புச் செய்தனர். பின் மீண்டும் வந்துகூடி எஞ்சியிருந்த திருத்தங்களை முடிவுசெய்தது அக்குழு. மாலை ஐந்து மணிக்கு அந்நகர் இளைஞர் கூட்டம் வந்த புலவர் அனைவரையும் திறந்த ஊர்தியில் ஏற்றி ஊர்வலமாக அழைத்துச் சென்றது. நகரவையோர் கூட்டம் தமது கட்டடத்திற்கு அழைத்து வரவேற்பிதழ் வாசித்து அளித்தது. பின் திலகர் திடலில் நகரமக்கள்கூடி வரவேற்பிதழ் வாசித்து வழங்கினர். அவ்வரவேற்புக்கு நன்றியும் வாழ்த்தும் புலவர் குழுவினர் கூறிப் பின் பத்துமணிக்குக் கூட்டம் கலைந்தது. தமிழகம் வாழ்க! தமிழகப் புலவர் குழுவாழ்க!!

# கள்வனும் களவனும்

[வித்துவான், ஆ. சிவலிங்கனுர், மயிலம்]

"யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீ ராரல் பார்க்கும்
குருகு முண்டுதான் மணந்த ஞான்றே." (குறுந். உ௫

இது 'வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது' என்னும் துறைப் பொருளது.

"தலைவன் என்னொடு கலந்த காலத்தில் வேறொருவரு மில்லை; என் உளம்கவர் கள்வனாகிய தானே அங்கிருந்த வன்; தான், அன்று, 'பிரியேன்; பிரியின் ஆற்றேன்' என்று ஆணையுடன் கூறிய அச் சூள் பொய்ப்பானாயின் யான் யாது செய்ய வல்லேன்; தினைத்தாள் போன்ற சிறு பசுங் கால்களுடைய குருகும் அன்று இருந்தது."

என்பது இப் பாடலின் பொருளாம். இப் பாடலில் 'கள்வன்' என்பதற்குப் பதிலாகக் 'களவன்' என்ற பாடம் கொண்டார்கள் மகாவித்துவான், திரு. இரா. இராகவ அய்யங்கார் அவர்கள். 'களவன்' என்பதற்குச் 'செய்தி நிகழ்ந்த களத்திருந்த சான்றாயினான்' எனப் பொருள் கொண்டு,

"களவன் நடுச் சொல்வோன் என்பது திவாகரத்தினும் காணலாம்; கள்வன் பொய்ப்பின் யானெவன் செய்கோ வென்பது இயைபுடைத்தன்று, கள்வன் பொய்த்தல் இயல்பாகலால். பல்லோர்க்கு நடுச் சொல்லும் களவனான தலைவன் என்பாற் பொய்ப்பின் யானெவன் செய்கோ என்பதே இயல்புடையதாதல் நன்கு நோக்கிக் கொள்க."

(குறுந்தொகை விளக்கம் பாடல் உ௫)

என்று சிறப்புரையும் எழுதினார்கள். கள்வன் பொய்த்தல் இயல்பாதலால் 'களவன்' என்ற பாடம் சிறக்கும் என்பது அமைதியாகவே தோன்றுகின்றது. திரு. டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார் M.A., Ph. D. அவர்களும் இப் பாடம் சிறக்கும் எனப் போற்றினார்கள். 'கள்வன்' என்ற பாடமும் சிறக்கும் என்று எண்ணுகின்றோம்.

தலைவி, கள்வன் இயல்பில் தலைவனைக் கூறவில்லை. தலைவன் கள்வனாயினும் பொய்க்கமாட்டான் என்ற கருத்துப் படவே 'தானது பொய்ப்பின்' என்றாள். 'பொய்ப்பின்' என்ற சொல் 'பொய்க்கமாட்டான்' என்றதை உட்கொண்டதாம். கள்வன் இயல்பிலேயே கூறினாள் எனின் 'தானது பொய்ப்ப யானெவன் செய்கோ' என்று கூறியிருப்பாள். யாருமில்லா விடத்தில் மணந்தவனாதலின் தலைவனைக் கள்வன் என்ற சொல்லால் குறித்தாள். என்றாலும் அவன் பொய்க்கமாட்டான் என்பதற்காகப் 'பொய்ப்பின்' என்றாள். தன் மனம் கவர்ந்த அளவிலும் யாருமில் ஒரு சிறையில் மணந்த அளவிலும் கள்வன் ஆவான் என்பது தலைவியின் எண்ணம் என்பதை 'மணந்த ஞான்று' என்ற சொற்கள் தெளிவுபடுத்தும். மணத்தல் இரண்டறக் கலத்தல். அதனால் பொய்யைக் குணமாகக் கொண்ட கள்வன் என்று கூறவில்லை அவள். அவன் பொய்க்கமாட்டான் என்பதற்கு மணந்த செயல் தன்னுடையதாகக் கூறாமல் 'தான் மணந்த ஞான்று' என அவனுடையதாகக் கூறினாள். வரைவு நீட்டித்தலின் தலைவன்பால் தனக்குத் தோன்றிய வருத்தம் வெளிப்பட அவனைக் கள்வன் என்றாள். 'களவன்' என்று கூறின் அவ் வருத்தம்—தலைவனைப்பற்றிய வருத்தம் வெளிப்படாது.

'ஒழுகுநீர் ஆரல் பார்க்கும் குருகுமுண்டு' என்பதும் 'கள்வன்' என்ற பாடத்துக்குத் துணை செய்யும். தான் மணந்த ஞான்று குருகுமிருந்தது. அக்குருகும் "ஒழுகு நீரில் ஆரல் பார்த்த நிலையில் இருந்ததாதலின் தான் மணந்ததை யறியாது. ஒரு வேளை யறிந்ததாயினும் என் பக்கமாகச் சான்று கூறாது. ஏன் எனின் ஆரலை அதன் வருத்தம் அறியாது உண்ணும் இயல் பினதாதலின் என் வருத்தமும் அறியாமல் வரைவு நீட்டித்த தலைவன் பக்கமே சான்று பகரக்கூடும். தன்னொத்த இயல்பின ரோடே சார்தல் உலகியல்." இவ்வாறு தலைவி கூறுவது போன் றமைந்துளது "தினைத்தாள்........குருகுமுண்டு" என்ற கருத்து.

'குருகும் உண்டு' என்று கூறவந்தவள் குருகின் காலைப் பற்றிக் கூறினாள். தினைத்தாள் ஒப்ப நீண்ட மெல்லிய கால்கள் குருகுக் குண்டு. அதனால் தினைத்தாளன்ன சிறு பசுங்கால் என்றாள். குருகு ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடி யிருக்கும் இயல்பினது. எவ்வளவு காலமாயினும் பெரிய மீன் வருமளவும் நின்றுகொண்டிருந்து வந்தபின் அம் மீனைக் கொத்தி யுண்ணும். அதுபோலத் தலைவனும் இயற்கைப் புணர்ச்சியில் தகுதியுடைய தன்னைக் காலம் வரும் துணையும் இருந்து கூடி னான். பின்னரும் களவிற் கூட்டத்துக்கெல்லாம் தன் கால் கடுக்க நடந்து வந்து கூடினான். வரவை மட்டும் நீட்டினான்,

தன் காரியம் ஒன்றையே கருதியவனாய் இருத்தலின் அவன் கள்வன் என்றாள். இவற்றால் 'களவன்' என்ற பாடத்தினும் 'கள்வன்' என்ற பாடம் சிறக்கும் என்னலாம்.

இனிக் குருகுபற்றித் திரு. அய்யங்கார் அவர்கள் கூறுவது காண்போம்.

> "குருகு ஆரல் மீனைப் பார்த்தலால் எம்மைப் பார்த்த தென்று சொல்லேன். யாரும் பார்த்தலுண்டோ வென யான் பார்த்தபோது குருகு உண்மையை யான் கண்டேன். குருகு பாராதாயினும் அக்களத்தின் அவன் சூளுரைத்தது கேட்டதேயாம் என்று 'குருகு முண்டு தான் மணந்த ஞான்றே' என்றாள்."

இவ்வாறு அவர்கள் கூறினார்கள். குருகு தலைவன் கூறிய சூள் உரையைக் கேட்டது என்றது பொருந்துவதில்லை; ஒழுகு நீரில் ஆரல் பார்த்திருந்த அதன் மனம் காதுவழிச் செல்லாது கண் வழிச் சென்றதாதலின் என்க. தலைவன் சூளுரைத்தது கேட்டிருப்பின் அது ஆரல் பார்ப்பதைவிட்டு அஞ்சிப் பறந்திருக்கும். அது கேளாமையினால் தான்—மனம் காதுவழியின்றிக் கண்வழி நின்றமையினால்தான் ஒழுகு நீரில் ஆரல் பார்த்திருந்தது.

குருகு ஒழுகு நீரில் ஆரலைப் பார்த்தது. நிற்கு நீரிலாயின் ஆரல் வந்து தப்புமாயின் மீண்டும் வரலாம் ஒழுகு நீரிலாயின் அவ்வாரல் நீருடனே ஒழுகித் தப்பும். மீண்டும் தன் கண் காணு மளவில் வரும் என்பது உறுதியில்லை. ஆதலின் தன் பார்வையில் மனதை ஊன்றிச் செலுத்தவேண்டும். ஐந்து பொறிவும் கண்களே கொள்ளும்படி யிருக்கவேண்டும். அதனால் அது சூள் கேட்டிராது என்னவேண்டும். குருகும் உண்டு என்னுமிடத்தில் உம்மையானது, 'கள்வன் உண்டு' என்பதைத் தழுவிய எச்ச உம்மையாயினும், வெறுப்புக்குரிய அல்லது பயனற்ற ஒருவனை உண்டு என்னும்போது 'அவனும் உண்டு' என்று கூறுவதுபோல இழிவு நிலையை உணர்த்துவதாகவும் உள்ளது.

இனிக் 'களவன்' என்ற பாடம் கொள்வதில் வரும் வேறு பொருளைக் காண்போம். 'களவன்' என்பதற்கு 'நண்டு என்பதும் ஒரு பொருள்.

> "களவன் குளிர் ஞெண்டு கற்கடகம் அட்டை
> செளுகம் கறையான் சிதல்." (உரி. நிகண்டு. விலங்கு 26)

என்பது உரிச்சொல் நிகண்டு. அதற்கேற்பவும் பொருள் கூறலாம்.

"தலைவன் என்னோடு கலந்த காலத்தில் யாருமில்லை. களவன் (நண்டு) தானே யிருந்தது. அக் களவன் தலைவன் கூறிய சூளுரையைத் தான் கேட்டபடி கூறாது பொய்ப் பின் யான் யாது செய்யவல்லேன் அக்களவன் மட்டுமன்றிக் குருகும் ஆங்கிருந்தது."

இவ்வாறும் பொருள் கொள்ளலாம். "அரும்பற மலர்ந்த" என்னும் குறுந்தொகைப் பாடலில், தோழி அறத்தொடு நின்ற போது, "கடுவனும் அறியும் அக் கொடியோ னையே, தன் கண் கண்டது பொய்க்குவ தன்றே" எனக் கூறியதைக் காணின் அஃறிணைப் பொருள்கள் சான்று கூறுவனவாகக் கூறும் மரபு அகப்பாக்களில் உண்டென்பது பெறப்படும். "கதிர்மூக் காரல் களவனொடு" (அகம் உசசு) என்பது அகப்பாட்டில் உள்ளது. அவ் வகையில் தலைவி தோழியிடம், 'தான் மணந்த ஞான்று களவன் (நண்டு) இருந்தது; அக் களவன் பொய்ப்பின் யான் எவன் செய்கோ' என்றாள். சான்று பகர்வதற்கு ஒருவரினும் இருவர் இருத்தல் சிறப்புடையதாம். அதற்கேற்ப இரண்டாவது சான் றாகக் 'குருகும் உண்டு' என்றாள்.

இதுவரை கூறியவாற்றால் 'களவன்' என்ற பாடம் அமைதி யுடையதே எனினும் 'கள்வன்' என்ற பாடம் சிறக்கும் என்பதும் 'களவன்' என்பதற்கு 'நண்டு' என்பதும் ஒரு பொருளாதலின் அதற்கேற்பவும் பொருளுரைக்கலாம் என்பதும் போதரும்.

## தமிழ் கற்றவை

[மேட்டூர்—தேன்மழை]

### 1. தாமரை

"திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்" என்
றெங்கள் சிலம்படியை ஏற்றுணர்ந்து—அங்ஙனமே
காமருகை கூப்பிக் கலைநிலவைப் போற்றுவதாம்
தாமரையாள் கற்ற தமிழ்.

### 2. ஆவினம்

எங்குப் பிறக்கினும்என்? இன்சுவைப் பால்சுரக்கும்
தங்குபுகழ் ஆவினமே! செல்வமே!!—அங்கம்
முழுதுங் குலுங்கிட "அம் மா"வென்பீர்! சொல்லீர்,
தொழுதெங்குக் கற்றீர் தமிழ்?



திருநெல்வேலி, திரு. இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை

(ஆவியுலகத் தொடர்பாளர்) (Auto writer)

## ஆவியுலகத் தொடர்பாளர் (Medium)

# திருவாளர் இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை

இவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் நாங்குநேரிக் கூற்றத்திலுள்ள இராதாபுரம் என்னுஞ் சிற்றூரில் பிறந்தவர். இவருக்கு இப்போது அகவை மூப்பத்தெட்டாகும். இவர் பள்ளி இறுதி வகுப்புவரையிலுங் கற்றவர். இவர் திருநெல்வேலிக் கீழத் தேர்த் தெருவில் சிறிய மளிகைக் கடையொன்றை நடத்தி வருகின்றனர்.

இவர் நண்பர் திரு. கந்தையா பிள்ளைவழி இவருக்கு ஆவிகளோடு தொடர்பு கொள்ளும் வாய்ப்புக் கிடைக்கப்பெற்று ஏறக்குறையப் பத்துத் திங்களாயிற்று. இவர் ஒருநாள் மறைத்திரு மறைமலையடிகளார் எழுதிய 'தொலைவிலுணர்தல்' என்ற நூலைப் படித்துக் கொண்டிருந்தபோது ஆவியுலகவாணராம் அம்மறைமலையடிகளோடு தொடர்பு கொள்ளும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. இவர் சிவ வணக்கஞ் செய்து ஆவியுலகுத் தலைவரை வேண்டி எந்த ஆவியை நினைப்பினும் அந்த ஆவி இவரிடம் வந்து பேசுகிறது. அவ்வாவி தம்முள் நின்றுணர்த்துவதை அப்படியே தாளில் எழுதிவரும் ஆற்றல் (Auto writing) இவருக்குத் திருவருளால் ஏற்பட்டுள்ளது.

செந்தமிழ்ச் செல்வி ஆசிரியரும் கழக ஆட்சியாளருமாகிய திரு. வ. சுப்பையா பிள்ளை திருநெல்வேலிக்குச் சென்றிருந்த போது 12-5-59இல் திருவாளர் குற்றாலலிங்கம் பிள்ளை அவர்கள் வழி மறைத்திரு மறைமலையடிகளாரோடும், தம் அருமை அண்ணார், அண்ணியாரோடும் பேசினர். அதன் பின்னர் ஆகஸ்டுத் திங்களில் திருநெல்வேலிக்கும், திருக்குற்றாலத்துக்கும் சென்றிருந்தபோதும் அடிகளாரோடு பேசியுள்ளனர். அதோடு அடிகளாரே திரு. குற்றாலலிங்கம் பிள்ளையவர்களை இயக்கித் தாமாகவே திரு. சுப்பையா பிள்ளைக்குச் செய்திகள் அனுப்பி வருகின்றனர். மேலும், ஆவியுலகில் வாழும் அடிகளாரும், கழக முன்னாள் அமைச்சர் திருவரங்கனாரும், அவர் தம் இல்லக் கிழத்தி நீலாம்பிகையாரும், மறைத்திரு ஞானியாரடிகள், திரு. வி. க., கவி சுப்பிரமணிய பாரதியார், கவிமணி தேசிகவிநாயகம்

பிள்ளை, திராவிடக் கவிமணி வே. முத்துசாமி ஐயர் ஆகியோரும் 13-9-59இல் சென்னையில் நடைபெற்ற மறைமலையடிகளார் நூல் நிலையத்தின் முதலாண்டு விழாவுக்கு வாழ்த்துரைகள் வழங்கி யுள்ளனர். மேலும், அடிகளாரின் ஆசிரியர் சோமசுந்தர நாயகர், மேதை பா. வே. மாணிக்க நாயக்கர், பல்கலைப் புலவர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை, அருட்டிரு இராமகிருட்டிண பரமஅம்சரின் மாணவர் மறைத்திரு அபேதானந்தரடிகள் ஆகியோர் அறிவுரை கள் அனுப்பியுள்ளனர். ஆவியுலகு பற்றித் திரு. வ. சுப்பையா பிள்ளை கேட்ட பத்தொன்பது கேள்விகளில் முதல் நான்கு கேள்விகட்கு மட்டும் 44 பக்க அளவில் மறைமலையடிகளார் விடை எழுதி அனுப்பி யிருக்கின்றனர். எஞ்சிய கேள்விகட்கும் விடைகள் எழுதப்படுகின்றனவாம். மேலும் அடிகளார் உல கோர்க்கு வேண்டும் பல அரிய செய்திகளை அனுப்பி வருகின்றனர்.

இத்தனையும் பெறுதற்குத் திரு. குற்றாலலிங்கம் பிள்ளை யவர்களிடம் திருவருளால் அமைந்துள்ள சத்தியே காரண மாகும். அத்தகைய சத்தி பெற்றவர்கள் எங்கிருப்பினும் மறைத் திரு மறைமலையடிகளார் தாம் தொடர்புகொள்ள விரும்புவதா யுரைக்கின்றார்கள்.

அடிகளார் இப் பூவுலகில் வாழ்ந்த காலை எழுதிய 'மரணத் தின் பின் மனிதர்நிலை,' 'தொலைவிலுணர்தல்' என்ற நூல்களா லும், மதுரை ஆதீனம் எழுதிய 'இறந்தவர்கள் வாழும் நிலை' என்ற நூலாலும் ஆவியுலகுபற்றி நன்குணரலாம். மேலை நாட் டறிஞர் சிலர் ஆவியுலகுபற்றிப் பல நூல்கள் எழுதி வெளி யிட்டிருக்கின்றனர். நம் பழந்தமிழ் நூல்களிலேயும் இலை மறை போல அரிய குறிப்புக்கள் பல இருக்கின்றன.

ஆவியுலகுச் செய்திகள்பற்றி ஐயுறுதற்கோ வியப்புறு தற்கோ ஒன்றுமில்லை.

மறைத்திரு மறைமலையடிகளார் அம்மை அம்பலவாணர் ஆணைகொண்டு அரிய பல அறிவுரைகளையும் அறவுரைகளையும் இப்பூவுலகிற்கு வழங்கி மக்கள் நல்வாழ்வு வாழ வழிகாட்டுவார்கள் என்று நம்புகிறோம்.

# மோக்கணீசுரன் கதை

. சு. அ. இராமசாமிப் புலவர்]

கொங்குவள நாட்டிலே ஒருகாலத்தில் இருவர் வழிப் பயணஞ் சென்றுகொண்டிருந்தனர். அவர்கள் அத்தானும் மைத்துனனுமான உறவுடையவர்கள். அத்தான் சிறந்த சிவநேசச் செல்வர். இறைவழிபாடு செய்தன்றி உணவுகொள்ளார்.

வழிப்பயணஞ் செய்த அவர்களிடங் கட்டுச்சோறு இருந்தது. மைத்துனனுக்குப் பசி அதிகமாகவே "சாப்பிட வேண்டும்" என்றனன். சிவநேசரோ, "நான் இறைவழிபாடு செய்ய வேண்டுமே, ஈண்டுத் திருக்கோயில்கள் இல்லையே", என்றனர். அவர்கள் இருவரும் குதிரைமீது சென்றுகொண்டிருந்தனர்.

ஒரு சூழ்ச்சியைத் தன்னுடைய உள்ளத்தில் எண்ணிய மைத்துனன், "ஈண்டு ஒரு சிவலிங்கம் இருக்கின்றது. நீர் அக் குளத்தில் நீராடி நாட்கடன்களை முடித்துக்கொண்டு வாரும். அதனை நான் உமக்குக் காட்டுகிறேன்," என்றனன். மைத்துனன் கூறியவைகளைக்கேட்ட சிவநேசர் மெய்யென நம்பி நாட்கடனைச் செய்துகொண்டிருந்தார்.

மைத்துனன் தன்னுடைய குதிரைக்குக் கொள் கட்டும் பையில் மணலை நிரப்பிக் கட்டிச் சிவலிங்கம்போல மண்ணில் நட்டுப் பக்கத்தில் கிடைத்த மலர்களைப் பறித்து மாலையாகத் தொடுத்து அவ்விலங்கத்தின்மேற் சார்த்தினன். தன் மைத்துனர் வந்தவுடன், "சிவலிங்கம் அதோ இருக்கிறது; வழிபட்டு வாரும்," என்று கூறினன்.

சிவநேசர் சிவலிங்கம் இருந்த இடத்திற்குப் போய், "என்னை ஆட்கொண்டருள ஈண்டெழுந்தருளிய எம்பெருமானே! எனக்கருள் புரிவீராக," என்று வேண்டிப் பல புகழ்ப் பாடல்களைப் பாடி மீண்டார். இருவரும் ஓரிடத்தில் உட்கார்ந்து உண்ணத் தொடங்கினர். மைத்துனன் தன் அத்தானாகிய சிவநேசரைப் பார்த்து, "நீர் தொழுது வந்தீரே சிவலிங்கம் அது நல்ல சிவலிங்கம்" என்று கூறி நகைத்தனன். சிவநேசச் செல்வர், "செய்தி என்ன?" என்று உசாவினர். அதற்கு மைத்துனன், "அது சிவலிங்கம் அன்று. குதிரையின் கொள்ளுப் பை. இங்கே வாரும், உமக்குக் காட்டுகிறேன்," என்று கூறி; அழைத்துக்கொண்டுபோய்த் தான் நட்டுவைத்த கொள்ளுப் பையைத் தூக்கினன். அது மேலெழும்பவில்லை. மண்ணைப்

பறிக்கப் பறிக்க அடியுங் காணப்படவில்லை. சுயம்புமூர்த்தியாகப் பாதாளம் வரையில் ஊடுருவி நின்றது. சிவநேசச் செல்வர் வியப்புக் கடலுள் ஆழ்ந்தனர். பலரும் இந்தப் புதுமையை வந்து பார்த்து வியந்தனர். இதனால் அக்கடவுளுக்கு "மொக்கணீசுரர்" என்று காரணப்பெயர் உண்டாயிற்று.

[இவ்வரலாறு கொங்கு மண்டல சதக உரைகாரரால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.]

"ஏத்து சிவபத்தி யாளொரு செட்டிமுன் ஈசுரனைத்
தோய்த்து முழுகித் தொழவெழ ஆங்கொரு சூழ்ச்சி கற்றோன்
பூத்த வனக்குடக் கோட்டிரில் மொக்கணி யைப்புதைக்க
வாய்த்த சிவலிங்கம் ஆனது வுங்கொங்கு மண்டலமே."

"மொக்கணி யருளிய முழுத்தழன் மேனி
சொக்கதாகக் காட்டிய தொன்மையும்."

என்பது திருவாசகம்.

---

## தேனின்பம் அடைந்திடுமே!

[வெண்பாவூர், திரு. பொ. திருஞானம்]

கருங்கடல்நீர்ப் பரப்பின்மேல் கதிரொளிதான் உமிழ்ந்திடுமேல்
மருணீக்கும் மாட்சியதால் மனமதனில் லயித்திடுமேல்
புத்தெழிலாங் காட்சியினால் பூரிப்புத் தோன்றிடுமே!
எத்திசையும் ஒளியதனால் இன்பமிகப் பொங்கிடுமே! (1)

மருளூட்டும் கடலின்மேல் மலர்மதிதான் உதித்திடுமேல்
மருளகற்றும் தன்மையதால் மனமூன்றி நோக்கிடுமேல்
அல்லல்பல அகன்றதனால் அன்புமிகத் தோன்றிடுமே!
எல்லாமச் சக்தியினால் எழுந்துமிகத் தோன்றிடுமே! (2)

நீலநிற விண்ணின்மேல் நிறைமீன்தான் மினுக்கெனுமேல்
கோலநகை உதிர்ப்பதனால் கொடுமனமுங் கரைந்திடுமேல்
களிப்பருளுந் தன்மையினால் களங்கமிக அகன்றிடுமே!
தெளிப்புமிகு சிந்தையினால் தேனின்பம் அடைந்திடுமே! (3)

# செய்திகளும் குறிப்புக்களும்

## க. அஞ்சல்தலைகளில் திருவள்ளுவர் படம்

இந்திய அஞ்சல்துறை அமைச்சர் டாக்டர். பி. சுப்பராயன் அவர்கள், திருவள்ளுவர் படத்தையும் தேசிய கவி பாரதியாரின் படத்தையும் அஞ்சல் தலைகளில் பொறிக்க மைய அரசினர் திட்டமிட்டிருப்பதாகவும், பணவிடைத்தாள் (Money order), அஞ்சல் தாள்கள் ஆகியவற்றைத் தமிழிலும் பிறவட்டார மொழிகளிலும் அச்சிட ஏற்பாடு செய்திருப்பதாகவும் அண்மையில் தெரிவித்துள்ளார்

குறிப்பு: தமிழுக்கும், தமிழ்நாட்டிற்கும் ஆக்கந்தரும் இத்தகைய நல்லமுயற்சியைச் செய்யும் அமைச்சர் டாக்டர் சுப்பராயன் அவர்களைப் பாராட்டுகிறோம்.

## உ. இயற்கைத்திங்களை அடைந்த செயற்கைத் திங்கள்

உருசியாவின் செயற்கைத் திங்களான லூனிக் 2, கடந்த 14-9-59 அதிகாலை 2-32 மணிக்குத் திங்கள் மண்டிலத்தை அடைந்தது. இது மணிக்கு 7 ஆயிரம் மைல் விரைவில் சென்று, இந்நிலவுலகிலிருந்து 2, 33, 600 மைல் தொலை இயற்கைத் திங்களை அடைந்தது. இச் செய்தியை மாஸ்கோ கோள்ஆய்வுநிலையத் தலைமை அதிகாரி அறிவித்தார்.

குறிப்பு: திங்கள் மண்டிலத்தை அடைய உருசியா செய்த முயற்சியும், அதில் அடைந்திருக்கும் முதல்வெற்றியும் உலகமக்களுக்கு மகிழ்ச்சியூட்டுவதாகும். உருசியரின் முயற்சி பெரிதும் பாராட்டத்தக்கது. இவ்வகையில் அவர்கள் மேலும் முயன்று பல வெற்றிகள் காண்பார்களென்று நம்புகிறோம்.

## ங. குருசேவ் அமெரிக்காச் செலவு

கடந்த 15-9-59 இல் உருசிய தலைமை அமைச்சர் திரு. குருசேவ், அமெரிக்கக் குடியரசின் தலைவர் ஐசனோவரின் அழைப்பிற் கிணங்க அமெரிக்கத் தலைநகரான வாசிங்டனில் வந்திறங்கினார். திரு. ஐசனோவர் அவரை வரவேற்றார். திரு. குருசேவ் அமெரிக்காவில் சில நாட்கள் சுற்றுப்பயணம் செய்து பின் சீனநாட்டிற்குச் சென்றார். அமெரிக்கத் தலைவரும் உருசியத் தலைவரும் சந்தித்து உரையாடியதன் விளைவாக உலகப்போர் மீண்டும் ஏற்படா வண்ணம் அமைதி காக்கப்படும் என்று சொல்லப்படுகிறது.

குறிப்பு: இதனால் உலகின் இருபெரு வல்லரசுகளுக்குமிடையே இருந்துவரும் ஐயப்பாடுகளும் அச்சமும் நீங்கி அமைதிநிலவ வழியேற்படும் என நம்புகிறோம்.

ச. பிறஉலகங்களிலும் மக்கள்வாழக்கூடும்

நம்மைச் சூழஉள்ள வானவெளியில் ஏறக்குறைய 150, 000 கோள்கள் உள்ளன என்றும், அக்கோள்களில் மக்கள் குடியிருக்கக் கூடும் என்றும், அம்மக்கள் சாதாரண மனிதர்களைவிடச் சற்று உயர்நிலை அடைந்தவர்களாக இருக்கக் கூடுமென்றும் சோவியத் வானநூலறிஞரான பெலிக்ஸ் சேகால் என்பவர் நம்புகிறார். இச்செய்தியை மாஸ்கோ வானொலி அண்மையில் அறிவித்தது. திரு. சேகாலின் கருத்துப்படி அண்மையில் திங்கள் மண்டிலத்தை அடைந்ததுபோல் பிற உலகங்களையும் மனிதன் அடையக்கூடுமென்றும் சொல்லப்படுகிறது. இன்னும் சில ஆண்டுகளில் திங்கள்மண்டிலத்திற்குப் போக்குவரத்து ஏற்படக் கூடுமென்று மேலும் அந்த வானொலி அறிவித்தது.

குறிப்பு: உருசிய வானநூலறிஞர் திரு. சேகால் அவர்களின் முயற்சி அரிய முயற்சி. அம்முயற்சி வெற்றிபெற்று நம்பிக்கை செயல் முறையாக மாறும் நாள் வரும் என நம்புகிறோம்.

ரு. இலங்கை முதலமைச்சர் மறைவு

கடந்த 25-9-59 காலை இலங்கை முதலமைச்சர் திரு. சாலமன் பண்டார நாயகா அவர்களை யாரோ ஒருவன் துப்பாக்கியால் சுட்டதன் விளைவாக மறுநாள் காலை மருத்துவவிடுதியில் அவர் காலமானார். சுட்டவன் சோமராம தேரோ என்பவன் என்று பின்னர் தெரியவந்தது. அவன் தற்போது காவலில் வைக்கப்பட்டுள்ளான். கொலை முயற்சி, கொலைக்குக் காரணம் முதலியன காவல்துறையினரால் ஆராயப்பட்டு வருகின்றன. மறைந்த முதலமைச்சருக்கு அகவை 60. அவருக்குப் பின் கல்வி அமைச்சரான விசயானந்தா தகநாயகா என்பவர் தலைமை அமைச்சராகப் பதவியேற்றுள்ளார். திரு. பண்டார நாயகாவின் பிரிவால் இலங்கை மக்கள் பெரிதும் வருந்துகின்றனர். உலகின் பல்வேறு நாட்டுத் தலைவர்களும், இந்திய அரசியல் தலைவர்களும் தங்கள் இரங்கலைத் தெரிவித்துள்ளனர்.

குறிப்பு: இலங்கை முதலமைச்சரின் மறைவு பெரிதும் வருந்தத் தக்கது. அன்னார் குடும்பத்தார்க்கும், இலங்கை மக்கட்கும் நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மணிவிழா மாண்பு

உயர்திரு. சீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் அவர்களின் அறுபதாம் ஆண்டு மணிவிழா 9-10-59 இல் சென்னை செயின்ட் மேரி மண்டபத்தில் நனிமிகச் சிறப்பாக நடந்தது.

திரு. பால் அவர்கள் சமயப் பெருந்தொண்டருடன் தமிழ்த் தொண்டருமாவர். சிற்றுயிர்க்குற்ற பேருறவினருமாவர். அவர்தம் விரிவான வரலாறும் நிழலுருவும் அடுத்த செல்வியில் வெளிவரும். மணிவிழாப் பெருமாண்பார் ஸ்ரீபாலவர்களை மனமார வாழ்த்துகின்றோம்.

# மதிப்புரை

"முருகன்"

இந்நூல் பழம்பெருந்தொன்மைத் தமிழகத் தனிமுதற் றெய்வமாம் திருமுருகனின் மூவாத் திருவரலாற்றினையும், அவன் திருக்கோவில் கொண்டெழுந்தருளியுறையும் திருவூர்களையும், அவன் திருவடியினைத் தொழுது வழிபட்டு இம்மை, உம்மை, அம்மையாகிய முத்திறப்பேறு களையும் முறையுறப் பெற்றுய்ந்த மூதறிவாளர்களின் வரலாறுகளையும் தென்மொழி வடமொழி நூற்களின் துணைகொண்டு செவ்விதின் விளக்குகின்றன. மேலும் அப்பெருமானின் பலவகைத் திருப்படிமங் களின் அமைப்பும் திருக்கோவில்கள் கட்டவேண்டிய ஆகம நூன்முறை யமைப்பும், கடவுண்மங்கலம் செய்யவேண்டிய முறைகளும், நாள்விழா, சிறப்பு விழா முதலியவற்றைச் செய்யத்தக்க முறைமைகளும், அப்பெரு மானின் திருமந்திரங்கள் பலவும், அவற்றிற்குரிய பொருளுண்மைகளும், அவைகளை அழகுற அடைக்கப்பெற்ற பலவேறு சக்கரங்களும், சீருறக் காணப்படுகின்றன. புராணங்களை முழுக்கமுழுக்க அங்ஙனமே முற்றும் நம்புவாரும், ஒன்றுகூட உண்மையில்லை முற்றும் பொய்யென்பாரும் ஆகிய இருதிறத்தாருங் கொண்டுள்ள பெருமயக்கினை நூலாசிரிய ரவர்கள் தம் நுண்மாண் நுழைபுலத்திறத்தால் "கந்தபுராண தத்துவம்" என்னும் தலைப்பின்கீழ் மலைவற விரித்து விளக்கி அகற்றியுள்ளார்கள். இவ்விளக்கம் பொதுவாக உலகமாந்தர்க்கும் சிறப்பாக மாணவ ஆசிரிய ருலகத்துக்கும் மட்டிலாப் பெருந்துணையாம் என்பதுறுதி. இதன்கண் காணப்படும் திருமுருகன் திருவுருவங்கள் முற்றும் அப்பெருமானின் திருவருட்காட்சி நேரில் அளிப்பதுபோ லமைந்துள்ளமை பெரிதும் போற்றற்குரியது. இக்காட்சி "முரணின ருட்க முருகாற்றுப் படுத்"தது போன்று தெய்வவுண்மையினைத் தேற்றுந் திருக்காட்சியாகும். இந்நூல் பொதுவாகச் செந்தமிழன்பர்களுக்கும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர் கட்கும் ஆதீனத்தாரால் வழங்கப்படுந் திருவருட் செல்வமாகும்.

"நவமணிகள்"

இந்நூல் ஆசிரியர் திரு. T. S. வைத்திய நாதன் அவர்கள் ஆவர். ஓங்கிய ஒன்பான் ஒளிமணிக் கற்கள் தாங்குவார் தமக்கெலாம் பலப்பல நன்மைகளைத் தந்து வருகின்றன என்பது யாவருங் கைகண்ட வுண்மை யாகும். ஆனால் அம்மணிகளைப் பற்றிய தெளிவான வரலாற்று மெய்ம்மைகளை யாவர்களும் எளிதினுணரத் தக்க பெருநூல் ஒன்று இது வரையும் வெளிவாராக் குறையினை இந்நூல் அகற்றியுள்ளது.

இதன்கண் தமிழ் நூல்கள், வடமொழிநூல்கள், ஆங்கில நூல்கள் முதலிய பல நூல்களினும் காணப்படும் உண்மைகளைப் பிழிந்தெடுத்துத் தொகுப்பாகத் தரப்பட்டுள்ளன. மேலும் இவ்வாசிரியர் அத்துறையின் வல்ல வணிகராகவும் விளங்குகின்றமையான் இந்நூல் தனிமாண் புள்ள தாக அமைந்து திகழ்கின்றது. இந்நூலுக்குச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர், சர். ஏ. எல். முதலியாரவர்களின் ஆங் கில மதிப்புரை அணிசெய்து ஆக்கந்தருகின்றது.

இந்நூல் இரண்டும் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம் இருபத்தொன்றாவது குருமகா சந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ. சுப்பிர

மணிய தேசிக பரமாசாரிய சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி வெளி வருகின்றன. இவையிரண்டும் முறையே 123, 128 ஆகிய வெளியீட்டெண்களைக் கொண்டு திகழ்கின்றன. நூல்கள் அழகிய கட்டடமும் பதிப்பும் வாய்ந்தன. உள்ளுறை பொருள்களின் எழில்போன்று எல்லா வகையான புறவனப்புக்களும் ஒருங்கியைந்து ஒளிதிகழ்கின்றன. இவை இல்லங்களிலும் நூலகங்களிலும், திருக்கோவில்களிலும், திருமடங்களிலும் என்றும் நிலவவேண்டிய செல்வங்களாகும்.

"தென்மொழி"

இஃதோர் சிறந்த தனித்தமிழ்த்திங்கள் வெளியீடு. ஆசிரியர் **பெருஞ்சித்திரன்.** இதழ் ஒன்றுக்குக் காசுகள் இருபத்தைந்து. நெல்லிக்குப்பம், தெ. ஆ. மாவட்டம் (தமிழ்நாடு). இவ்வெளியீடு பல சான்றோர்களின் சீரிய கட்டுரைகளைக்கொண்டு திகழ்கின்றது. ஆழ்ந்த துயிலிற் கிடக்கும் தமிழ் மக்களைத் தட்டியெழுப்பி உணர்ச்சியூட்டுந் தகைமையில் தனக்குத்தானே நிகரானது. மேலைநாட்டு மெய்யுணர்வுப் பெரியார் 'சாகரடீசு' போன்றார் வரலாறு நன்முறையில் மொழிபெயர்த்து மிளிர்கின்றது. அம்முறையில் நம் பண்டைச் சங்கநூற் பாட்டுக்கள் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அழகுறத் திகழ்கின்றது. ஊக்கமும் உணர்ச்சியும், உரனும் ஊட்டும் ஆக்கத்தமிழ்ப் பாட்டுக்கள் புதிதாக வமைத்துப் புலனுயரப் புகட்டுமாறு காணப்படுகின்றன. எல்லாவகையானும் சாலச் சிறந்த இதனை வரவேற்கின்றோம். வளர்ந்து பயன்நல்க வாழ்த்துகின்றோம். செந்தமிழ் அன்பர்கள் இதனை வாங்கியும் வாங்குவித்தும் வண் பயன் எய்துவார்களாக. ஆசிரியரை ஊக்கி உறுதுணை செய்வார்களாக.

"பரமகுரு"

ஆசிரியர் S. T. இரத்தினம், நாசரேத், திருநெல்வேலி மாவட்டம்' விலை அணு மூன்று. இந்நூல் கடவுள் ஒருவனே என்பதும் அவன் குருவாய் எழுந்தருளி ஆட்கொண்டருளுவன் என்பதும் பண்டைத் தமிழ்நூல் மேற்கோள்களுடன் நன்கு விளக்குகின்றது. ஆசிரியர் எல்லா நெறிகளின் மெய்ந்நூல்களையும் கற்றுள்ளவரென்பது காட்டும் மேற்கோளகளால் தெரியவருகின்றது. குருவின் இன்றியமையாமையை உணர்த்தும் இந்நூல் எல்லார்கையிலும் இருத்தற்குரிய தொன்றாகும்

இவ்வாசிரியரவர்கள் "நகையணிவது சரியா?" என்பது பற்றியும் ஒரு சிறுநூல் வெளியிட்டுள்ளார்கள். விலை அணு ஒன்று. இந்நூலின்கண் காந்தியடிகள் முதல் விவிலியநூற் பெரியார் ஈறாகவுள்ள பலருடைய அறிவுரைகளும் நகையணிவது தீமையென்பதை விளக்குவன காட்டப்பட்டுள்ளன. மேலும் கடவுள் நம்பிக்கை, நல்லுளம், நல்லொழுக்கம், இயற்கையழகு இவைகளே தீங்கிலா அழகென வலியுறுத்தப்பட்டுள்ளன. இதனைக் கற்றுக் கைக்கொண்டு பெரும்பயன் எய்துவார்களாக.

குறிப்பு: எங்கும் கடவுளொன்றே ஈண்டும் பரமகுரு
அங்கங்கும் வெவ்வே றறி. —ஆசிரியர்.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௦, ஐப்பசி | பரல் |
|---|---|---|
| ௩௪ | நவம்பர், 1959 | ௩ |

திருச்சிற்றம்பலம்

# திருவருள் பெற்றார் செயலனைத்தும் சிவன் செயலே

“ திருமலர்க் கொன்றையான் நின்றியூர் மேயான்
தேவர்கள் தலைமகன் திருக்கழிப் பாலை
நிருமலன் எனதுரை தனதுரை யாக
நீறணிந் தேறுகந் தேறிய நிமலன்
கருமலர்க் கமழ்சுனை நீள்மலர்க் குவளை
கதிர்முலை யிளையவர் மதிமுகத் துலவும்
இருமலர்த் தண்பொய்கை இலம்பையங் கோட்டூர்
இருக்கையாப் பேணிஎன் எழில்கொள்வ தியல்பே.”

—௧. ௭௬-௨.

“ ஒழுகலரி தழிகலியில் உழியுலகு பழிபெருகு
வழியை நினையா
முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி குழுவினொடு
கெழுவு சிவனைத்
தொழுதுலகில் இழுகுமலம் அழியும்வகை கழுவுமுரை
கழும லநகர்ப்
பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகள்
மொழித கையவே.”

—௩. ௬௮-௧௨.

“ பாலைநெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனையன் றேவிக் கராங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தம்
காரணம்போல் அல்லாமை காண்.” —திருக்களிற்றுப்படியார், ௧௨.

"செங்கண் விடையார் திருமலர்க்கை தீண்டப் பெற்ற சிறுவனார்
அங்கண் மாயை யாக்கையின்மேல் அளவின் றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கி எழுந்த திருவருளின் மூழ்கிப் பூமேல் அயன்முதலாம்
துங்க அமரர் துதிசெய்யச் சூழ்ந்த ஒளியில் தோன்றினார்."

—கஉ. சண்டேசுரர், ௫௫.

உயிர்க்குயிராம் உடையவன் ஒருவனே. அவனே இன்பவடிவினன்; இயற்கையுணர்வினன்; துன்பமகற்றும் துணைவன்; இன்பமூட்டும் இறைவன்; முடிவிலாற்றலன்; பேரருளினன்; முத்திறப்புணர்ப்பால் எத்திறத்துயிர்களையும் தன் இணையடிக்கண் ஈடேற்றுபவன்; பிழைபொறுக்கும் விழைதகு விழுமியோன்; சார்ந்தாரைக் காக்கும் தலைவன்; அடியார்க்கு எளியன்; கடியார்க்கு அரியன்; கண்ணுதலோன்; காதல் மங்கையின் ஒருகூறன்; ஓதலுறுவார்க்கு உள்ளொளியன்; தில்லைத் திருச்சிற்றம்பலவன்; எல்லையில் புகழோன்; திருவைந்தெழுத்தாய்த் திகழ்பவன்; பொருவரும் "தென்னாடுடைய சிவன்; எந்நாட்டவர்க்கும் இறைவன்" எம்மை அடிமைகொள்ளும் ஆண்டான்.

ஆருயிர்கள் பண்டே புல்லிய மலநோயின் வயப்பட்டுத், தம் அன்பு அறிவு ஆற்றல்கள் விளங்குதற்கு வாயிலின்றி, இருள்சார் கண்போல் இயக்கமும் செயலுமின்றி மயக்குற்றுக் கிடந்தன. வேறுகாரணமின்றி அவ்வுயிர்களைப் பற்றிய மலவாற்றல்களும் பலதிறத்தனவாகும். பெருந்தண்ணளி வாய்ந்த விழுமிய முழுமுதல், அவ்வுயிர்களைத் துன்பத்தினின்றும் விடுவித்துத், தன் திருவடிப் பேரின்பத்தினை நுகர்வித்து ஆட்கொண்டருளத் திருவுளங் கொண்டருளினன். அதன்பொருட்டு மாயாகாரியங்களாகிய உடல், கருவி, உலகம், ஊண் முதலியவற்றைத் திருவருளாற்றலாற் படைப்பித்தருளினன். படைப்பித்த இவற்றுடன் பல்லுயிர்களையும் முறையுற இயைவித்தருளினன். இத் திருவருட் செயலினையே ஏற்றுரையாக உலகோர் உயிர்களைப் படைத்தருளினன் என்பர். உயிர்களும், உயிர்களைப்பற்றிய மலமும், அம் மலப் பிணிப்பை அகற்ற அருந்துணை புரியும் உடையானும், அத் துணைக்கு உதவியாம் காரணமாயை வினைகளும் என்றுமுள்ள பொன்றாப் பொருள்களேயாம். இவை எவராலும் படைக்கப்பட்டனவல்ல.

இவ்வுண்மை வரும் தமிழாகமமாகிய திருமந்திரத்தான் உணரலாம்:

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காபசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே."

—கO. கடுக.

மும்மலப் பிணிப்புடைய ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறாகவுள்ள உலகியற் படைப்பும், அத்தகைய மும்மலப் பிணிப்புடைய வானுலகத் தெய்வப் படைப்பும், அதற்கு மேலுள்ள சிவவுலக வாழ்வினராகிய இருமல ஒருமலப் பிணிப்புடைய சிவப் படைப்பும் எனச் சிவபெருமான் செய்தருளும் படைப்புப் பலவாகும். அனைத்துயிர்கட்கும் மலங்காரணமாக நுண்ணுடல்களும், வினை காரணமாகப் பருவுடல்களும் அமைகின்றன. இவற்றை வருமாறு நினைவு கூர்க.

மலச்சார்பால் நுண்ணுடலும் மற்றுவினைச் சார்பால்
உலவு பருவுடலும் உண்டு.

இவ்வுண்மையினையே செந்தமிழ்ப் பொதுமறையாம் திருக்குறள் வருமாறு ஓதுகின்றது :

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்." —௯எ௨.

நுண்ணுடற்குக் கருவிகள் எட்டு அவை பூதமுதலாகிய தன் மாத்திரைகள் ஐந்தும், மனம், எழுச்சி, இறப்பு என்னும் மூன்றுமாம். இந்நுண்ணுடலமைப்பு அனைத்துயிர்க்கும் ஒன்றே. படைப்புக் காலந்தொட்டு ஊழி முடிவுவரையும் எவ்வகை மாறுதலுமின்றி இருப்பதும் இவ்வுடலே. இவ்வுடல் ஊழி முடிவில் மாயையின்கண் ஒடுக்கப்படும். இடையே வீடுபேறெய்தும் உயிர்கட்குரிய நுண்ணுடலும் மாயையின்கண் ஒடுக்கப்படும். இந் நுண்ணுடலைப் பிறப்புடலெனவுங் கூறலாம். இவ்வுடல் இருவினை இயற்றத் தகுதியாய் அதற்குக் கருவியாம் பருவுடலை அவாவி நிற்கின்றது. பருவுடலோடு கூடிச் செய்யும் செயல்களால் சிறப்பும் சிறப்பின்மையும் காணப்படும். எடுத்துக்காட்டாக, கையுள்ள நாம் உண்டல் பருகல் முதலியவற்றைக் கையின் துணையாலேயே செய்கின்றோம். யானை, மந்தி முதலிய கையுள்ள விலங்குகளும் கையின் துணையினாலேயே அவற்றைச் செய்கின்றன. இவற்றையொழிந்த ஏனையவுயிர்கள் வாயினாலேயே உண்டல் பருகல்களைச் செய்கின்றன. உண்ணும் செய்கை இரண்டற்கும் ஒத்ததே. ஆயின் இத்தகைய சிறப்பும் சிறப்பின்மையும் பருவுடல்களால் நிகழ்வன. எனவே பருவுடற் பிறப்பைச் சிறப்புப் பிறப்பெனவுங் கூறலாம்.

ஆருயிர்கள் பண்டே இருளோடு புல்லிக் கிடந்த நிலைமையினைப் பேதைமை என்ப. பின்பு இறைவன் தண்ணளியால் மாயையினின்று உடல், கருவி, உலகம், ஊண் முதலியவற்றைப் படைத்துப் பொருத்தியருளினன். அதன்பின் அவ்வுயிர்கட்கு அச் சார்பினால் சிறிது அறிவு விளங்குவதாயிற்று. அவ்வறிவு

ளுள்ள அருகர் திருக்கோவிலில் நடைபெறும் பத்துநாள் திரு விழாவில் சமணப்பண்டிதர் பலரையும் வருவித்துச் சொற் பொழிவு ஆற்றச்செய்வர்; தாமும் அரியதொரு விரிவுரையாற்று வர். 1922 ஆம் ஆண்டில் காங்கிரசில் சேர்ந்து கடமையாற்றினர். கட்டிளமைப் பருவத்துக் காங்கிரசில் சேர்ந்தமைமட்டுமன்றி அஞ்சா நெஞ்சினராய்ப் பணியும் புரிந்தனர். அது வருமாறு: "ஒரு நாள் மாலை வடஆற்காடு மாவட்டம் செய்யாற்றுக் கோட் டம் தண்டலாளர் (தாசில்தார்) காங்கிரசுக்கு எதிராக ஒரு கூட்டம் கூட்டிச் சொற்பொழிவாற்றினர். அச் சொற்பொழிவில் வெள்ளையரால் நேர்ந்த வியத்தகு பயன்கள் பலவெனப் பாராட் டிப் பகர்ந்தனர். அம்மட்டோடமையாது, காந்தியடிகளைக் குறைகூறவும் தொடங்கினர். தொடங்கிக் 'காந்தி அவர் பேசுவ தெல்லாம் வாந்தி' என வுரைத்தனர். உடனே நம் பாலவர்கள் சிறிதும் அஞ்சாது மறுத்துக் 'காந்தி அவர் பேசுவதெல்லாம் சாந்தி' என மொழிந்தனர். இதுபோன்ற நிகழ்ச்சிகள் பல.

1923இல் சென்னையில் நடந்துவந்த "தருமசீலன்" என்னும் சைனப் பத்திரிகைக்கு வித்துவான் ஆறுமுகம் சேர்வையவர்கள் ஆசிரியராகவிருந்து நடத்திவந்தனர். நம் பாலவர்கள் அப் பத் திரிகைக்கு ஒரு வாழ்த்துக் கும்மி பாடி விடுத்தனர். அதன் வாயிலாக இவர்தம் பெரும்புகழ் புலனாயிற்று. புலனாகவே இவரை அழைப்பித்துத் துணையாசிரியராக அமர்த்திக் கொண்டனர்.

திருப்பறம்பூருக்கு அண்மையிலுள்ள சித்தாத்தூர் என்னும் சிற்றூரில் பாரத விரிவுரை தொடர்ந்து நடக்கும். அதைக் கேட்டுணர நம் பாலவர்களும், அப்பாவு ஆச்சாரி அவர்களும் போவது வழக்கம். இவ் அப்பாவு ஆச்சாரியவர்கள் திரு. நல்ல அகத்தியப்ப நயினாரவர்களிடமும், சாமி நயினார் என்னும் மற்றொரு பெரும் புலவரிடமும் முறையாகத் தமிழ் பயின்றவர். இருவரும் பாரத விரிவுரை கேட்டதன் பயனாகச் சிந்தாமணி விரிவுரையாற்றல் வேண்டும் என்னும் எண்ணம் தோன்றிற்று. சீபால் அவர்கள் சிந்தாமணியினைத் தொடர்ந்து விரிவுரையாக ஆற்றி வந்தனர். மக்களும் ஏராளமாகக் கூடி மகிழ்ந்தனர். தொடர் விரிவுரை—புராண படனம். நம் பாலவர்கள் தந்தையா ருக்குக் கடன்கொடுத்த பலருக்கும் நம்பகக் கேடு உண்டுபண் ணக்கூடிய நேர்மையற்ற வழியில் வழக்குத் தொடர மறுத்துவிட் டனர். அதனை நாட்டவர் கேட்டுப் பெரிதும் போற்றினர். ஆனால் அவர்தம் தந்தையாருக்குமட்டும் சிறிது மனத்தாங்கல் ஏற்பட்டது. அதனையும் நம் பாலவர்கள் பொருட்படுத்தவில்லை

திருப்பறம்பூரையடுத்த நெல்லிக் கிராமத்தில் பஞ்சாயத்துப் போர்டு பள்ளியில் பள்ளியாசிரியராகப் பணிபுரிந்தனர். குஜராத்தி

ளுள்ள பாலிடானு என்னும் ஊரிலிருந்து ஸ்ரீகம்பீரவிஜயராஜ் முனிவர் நான்கு மாணவர்களுடன் சென்னைக்கு வந்தனர். அவர் தூண்டுதலின்மேல் 1926 இல் "தென்னிந்திய சீவரட்சக பிரசார சபை" தொடங்கப்பெற்றது. நம் பாலவர்கள் அதில் சேர்ந்து தொண்டாற்றினர். சிற்றுயிர்ப் பலியை நிறுத்துவதே அச்சபை யின் பெருநோக்கம். அதற்கே பலரும் பாடுபட்டனர்.

நம் பாலவர்கள் பலித்தடையின் பொருட்டுத் தமிழக முற்றிலுமுள்ள சிற்றூர் பேரூர் நகரம் எல்லாவற்றிற்கும் பன்முறை சென்று எல்லா மக்களும் இனிதுற இணங்குமாறு தம் இன்முகப் புன்சிரிப்புடன் எளிய இனிய தெளிவு நடையில் சொற்பொழிவுகள் ஆற்றி மக்களை வயப்படுத்தி நிறுத்துவித் தனர். அவ்வரிய பெருந் தொண்டால் இவர்தம் நெடும்புகழ் குன் றின் மேலிட்ட விளக்கென மிளிர்கின்றது. சென்னையை யடுத்த திருவொற்றியூரில் நிகழ்ந்துவந்த எருமைச்கடாப் பலியை நிறுத் தும் பொருட்டு நம் பாலவர்கள் உண்ணு நோன்பிருந்தனர். பலி யும் நிறுத்தப்பட்டது. இதுபோல் எருமைக்கடாப்பலி நிகழ்ந்து வந்த பாளையங்கோட்டை முதலிய பலவூர்களுக்கும் சென்று ஆற்றிய தொண்டினால் ஆங்காங்கு அப்பலியும் பிறபலியும் நிறுத்தப்பட்டன.

இப் பலிக் கொடுமையினைத் தடைப்படுத்துதற்பொருட்டு நம் பாலவர்கள் சிறந்ததொரு நாடகம் இயற்றித் தக்க துணைவர் களுடன் நடித்துப் பலருடைய பாராட்டையும் பணமுடிப்பையும் பெற்றனர். இப்பெருந் தொண்டின்பொருட்டு 1930 முதல் 1950 முடிய எண்ணிலாச் சிற்றூர்களுக்கும் நாற்பதுக்கு மேற்பட்ட பேரூர்களுக்கும் நலிவையும் மெலிவையும் ஒரு சிறிதும் நாடாது சென்று சென்று தொண்டாற்றியுள்ளனர். இவரும் இவர் போன்ற சிற்றுயிரிரக்கப் பெற்றியரும் செய்த பெருமுயற்சியால் 1951 இல் பலித்தடைச் சட்டம் நடைமுறைக்கு வந்தது.

சிந்தாமணி முதலிய இலக்கியத் தொண்டும் தாமாக நுண்ணி திணுய்ந்து நூலாக்கி வெளிப்படுத்திவரும் நூற்றெண்டும் நம் பாலவர்களின் நற்றவத் தொண்டாக மிளிர்கின்றன. இவர்கள் இறையருளால் இப்பொழுது எய்தியுள்ள மணிவிழாப்போன்று முத்து வயிர முதலிய பன்மணிவிழாக்கள் பெற்றுப் பயனுர் பணி பலபுரிந்து பல்லாண்டுவாழத் திருவருள் புரியுமாறு சிறப்பருளும் செம்பொருளின் திருவடியை வழுத்துகின்றேம்.

வாழ்க சீபால்! வளர்க வண்டமிழ்! வாழ்க நல்லறம்!

# இயற்கை*

(செல்வி, சிலம்பு ௩௪ - பரல் - ௨, ௬௫ ஆம் பக்கத்தொடர்ச்சி)

கடவுளுக்கே இயற்கையை இயக்கும் திறனுண்டென்று யாமாகிய, காணுவுலகவாசி, மறைமலையடிகள், இயக்குநர்வழி யுரைத்து எழுதின வென்பதே, எம் முன்சிந்தனையின் ஊற்றெனத் தெரிவித்துவிட்ட கருத்தினை மீண்டும் துவங்கலாமெனத் திருவருளை யுன்னி உரைக்கின்றனம், வரைகின்றனம், எம்மியக்குநராம் இளைஞன்வழி.

இயற்கை யென்பதென்னை? அவ்வியற்கைக்கொரு திரிபு உண்டா? இயற்கையென வுரைக்கும் எல்லாக் காணும்பொருட்களும் தம் நிலை பிறழாது இயல்பாகவே என்றுமே ஒரே தன்மையிலே, நிலையிலே, காட்சியிலே, கனபரிமாணத்திலே அமைந்திருக்கின்றனவா? இல்லையேல் எங்ஙனை யதனின் நிலையெனவுள கருத்துக்களை ஆய்தல் நலமென யாமாகிய மறைமலை விருப்புடன் வாசகர்களாய தங்களை வேண்டிச் சிந்தித்தாயத் தூண்டுகின்றனம் முதற்கண் ஒன்றினை ஆய்தல் நலம். உவமைக் கொன்றினை மறைமலை யுரைக்குதும். அஃதென்னை? இயற்கையென்பதின் புறத்து அதனை இயக்கும் சத்தியென ஒன்றுண்டென்பதைத் தடுத்துரைக்கும் தன்மையாளர் நிறைந்து வருகின்றனரென்பதுவும் தாங்களறிந்ததே. இவ்விதம் இயற்கையே படைத்த படைப்பின்கண் ஒரு சாரார், கடவுளுண்டென்றும், ஒரு சாரார் கடவுளில்லையென்றும் உரைக்கும் கூற்றினை உற்றுநோக்குழி இயற்கையே! நீ இயல்பாகவே அமைந்தியக்கும் திறனில் இவ்வித வேறுபட்ட விழைவுகளைத் தோற்றுவிக்க முயலுவதென்னை? மாந்தர்தம் மனத்து, நீ இவ்வித மாறுபட்ட உணர்வுகளை ஊக்

---

* அடிகளார் காணுவுலகத்துறைந்தும் தமிழ்த்தாயின் மாட்டும், அவள்தன் அருமை மக்களாம் நம்மனோர் மாட்டும் கொண்டுள்ள கழி பெருங்காதலால் இயற்கை எனவொன்றேயுள்ளது; கடவுள் எனவேறொன்று இல்லையெனமயங்கிக் கூறுவார் மயக்கம் முற்று மகன்று உண்மை தெளிந்துய்ய இதற்கு முன்னுள்ள கட்டுரையையும், இதனையும் விடுத்துள்ளார்கள். மேலும் தொடர்ந்து கட்டுரைகள் வருமெனவும் வாய்மொழிந்துள்ளார்கள்.

இயற்கைக்குத் தனித்த முறையில் எவ்வகை அறிவாற்றலும் யெனவும், இயைந்தியக்கும் கடவுளின் திருவருளாற்றலாற்றான் இங்ஙனம் நிகழ்கின்றதெனவும் விரித்து விளக்கித் தெளிவித்துள்ளார்கள். இவற்றைக்கூர்ந்து கற்றுப் பயனெய்துவதுடன் அடிகளார்க்கு வாழ்த்தும் வணக்கமும் என்றும் மறவாது புரியவேண்டி நன்றிக் கடப்பாடுடையோம் என்பதையும் நாம் கைக்கொள்ளுதல்வேண்டும்.

குந் திறன் உனக்குத் தோன்றியதெங்ஙனே? உரை; அறியட்டும் இவ்வுலகு. இயற்கையே உன் திறமெங்ஙனே? இன்னும் உன்னை வினவுகின்றனம். இயற்கையே நின் திறனை ஒரு கவிஞன் எவ்வித முணர்கின்றான்? உரைக்குதும். "நான் இயல்பிலே யமைந்த வானளாவிய சோலைக்குட் புகுந்தேன்; கண்டேன்; வியந்தேன்; வியக்கின்றேன். நெடுமரமே! உன்னருகு வந்து உன்நிழலிலே வந்தமர்ந்தால் நீ களைப்பினைப் போக்குகின்றாய். செவிக்கோர் இன்னிசையை அளிக்கின்றாய். என் சிந்தனை நிலைதிரிந்தலைந் ததை ஒருமுகப்படுத்தி என்னுள்ளத்துள் ஓர் உணர்வினை ஊட்டுகின்றாய். என் பசியினைப் போக்கச் சுவைமிகு கனிகளைத் தருகின்றாய். கதிரவனின் வெப்பா லுன்னிடம் வந்தால் நீ எனக்குத் தண்மையினை யளிக்கின்றாய். உன் நிழலிலே யமர்ந்து தனித்திருந்து உன்னுங்கால் என்கருத்தில் ஓர் ஊற்றினை நீ தோற்றுவிக்க முயல்கின்றாய். என் தடை பெற்ற கருத்தெல்லாம், என்னிதயத்தோர் ஊற்றாய் நனிவளம் சுரக்கக் காண்கின்றேன். உன்னை என்னையென உரைப்பதெனக் கவிஞனும் என்கருத் திலே தோற்றுவிக்கவில்லையே! நீ என்னை வா வா என விளிக்க, உன் தளிரிலைகளையே கையெனக்கொண்டு, தென்ற லென்ற வொன்றுட னியைந்தழைக்கும் திறனை நோக்குழி, என் அக மெலாம் இனம் புரியா எழுச்சி எழுகின்றதே. நீ தென்றலுடன் இசைத்துப் பாடும் உன் ஓதை என் செவிமடுத்து இன்பக் கருத்தை என்பா லெழச் செய்கின்றதே! காதலின்பம் என் கருத் தைத் துளைத்து என் நிலை பிறழ்கின்றதே! உன்னை என்னையென நினைய? நாவாலுரைக்குந் திறனுமற்று, இனம்புரியா எழுச்சிக ளென்னை எங்கோ இழுத்துச் செல்கின்றதே! நெடுமரமே! உன்னை என்னையென அழைக்க? இயற்கை யென்றுரைக்க உன்னினும் அங்குமோர் தடை யெழுகின்றதே, உணர்கின் றேன் என்னையென; உனக்குச் சிறிது அப்பாலே உன்னினமே நெடியதோரொன்றாய் நிற்கின்றதே! அதிலெனக்கோர் தூண்டு தல் எழாததென்னை? முட்களையே தன்னகத்துக் கொண்டும், அதிற்றோன்றும் இலைகளும் முட்களே கொண்டும், கனிகளைக் காணாது, கருநிறங்கொண்ட காய்களேயென ஒன்றே தோன்று கின்றதே, கதிரவனொளி அங்கு நிலைக்கின்றதே, அண்மையிலே செல்ல எம் கருத்தெழத் தடைப்பட்டதெங்ஙனே? இங்கு மலை யிடையே உங்களைப் பேணுதற்கென எவருமில்லையே, நீர்பாய்ச்சி, நிலம் வெட்டி, உரமிட்டு உன்ன உரித்தார் இங்கில்லையே. என்னை யெனப் பொருள் கொள? உரை, நீயே உரை. ஏன் வாளா விருக்கின்றனை? சிந்திக்கின்றாயா? சிந்திக்கும் திறனற்றுத்தா னிருக்கின்றனையே! நான் வினவுகின்றேன், நீ வாளா விருக் கின்றாய், ஏன்? மாந்தர்தமக்குப் பகுத்தறிவொன்றனைக் கூட்டி

இயைத்தது, உன் இனத்திற்கு மட்டிலும் ஓரறிவைக் குறைத்தேனென்ற சினமா? விந்தையிலும் இது விந்தையே! எது எங்ஙனையானும், நானொரு தீர்வினுக்கு வந்தனன், உரைக்கின்றேன், கேள்.

நெடுமரமே! நீ கலங்காதே, குணக்குன்றும் கோமகனே தன் நிலைபிறழ்தலில்லையோ, தரணிதன்னில் மாந்தர்தம் மாண்பு இழத்தலில்லையோ, மக்களிலே வேற்றுருவுகொண்டு வாழ்வாருமில்லையோ, இயற்கையென வொன்றிது ஈவதில்லை. இயற்கையென ஒன்றிற்கு இத்திறனில்லை. நெடுமரமே! தண் நிழலாம் உன் நிழலிலிருந்து உற்று நோக்குகின்றேன் தொலையதிலே, காண்டலென்ற ஒன்றினுக்காய் நீ இவ்விதம் கானகத்துக் காண்கின்றனையோ? தென்றலென ஒன்று சுமந்துவரும் நறுமணமொன்றிலே நான் கருத்திழந்து அளப்பரிய இன்பத்தினை, மணத்தினை நுகர்கின்றேன். நுவல்கின்றேன், கானகத்துக் கவினுறு காரிகையா இங்குத் தோன்றினளோ, காதலின்பம் ஈந்து களைப்பினைப் போக்கி, எண்ணாத எண்ணமெல்லாம் நினைந்து அமைதி நாடி வந்தவனும் என்னை, வாரியிழுத்தணைத்து எனக்குமோர் இன்பம் நல்குகின்றனளோவென எண்ணுகின்றேன். என் கருத்தினிலோரின்பம் இன்று தோன்றியதுபோல், என்றுந் தோன்றியதில்லையே! பொறு, நுவல்கின்றேன். இயற்கையோவென எண்ணினும் அதுதானில்லையென எண்ணுமோர் சூழலும் இங்குறைகின்றதே. அமைதியெனவொன்று எனக்கீந்த அன்னையெனவும் உன்னுகின்றேன். ஏன்? கானகமே, ஓர் அன்னையெனவும், அதன்கண் உறைகின்றதெல்லாம் அன்னை வாரி யளித்த வளமெனவும், வையத்து நிலப்பரப்பை வளமுற்றதாக்கித் தன் கருணையெல்லாம் உன்னகத்தே வைத்துக் களைத்துவரும் கவிஞனும் எனக்கு மட்டுமில்லை. நாடு துறந்து காடோடி வரும் கோமகனும் துறவுகொண்டு தனிமைவெளி எங்கென விரைந்துன்னையே நோக்கிவரும் துறந்தார்க்கும், திருடலென்ற தன்மையிலே வாழ்ந்துவரும் ஒரு மகற்கும், தொழிலற்றுத்திரிவார்க்கும் நிலப்பரப்பில் பயனீயும் கழனிக்கெல்லாம் உன்னகத்தே உயிரென்ற நீரொன்றைத் தன்னுட்கொண்டு, உலகிற்கெல்லாம் ஓர் அன்னையேயென வாழ்த்துகின்றேன். அன்னையே, உனக்கித் திறன் அளித்ததெவர்? இயற்கையா? உரை, உன்னு, உன் சிந்தனைக்கே விட்டுவிட்டேம். உலகத்து மாந்தரே! சிந்திமின், சிந்தித்தாய்வு காணுமின், சிறக்கவாயுமின் சிந்தனையாளரே!

கவிஞனும், என் மனத்து நீ அன்னையெனவும், ஆறுதலளிக்குமோர் நண்பனெனவும், நாட்டிற்கெல்லாம் நன்மையளிக்குமோர் வள்ளலெனவும் கருத்திற்கெல்லாம் ஊக்கிவரும் உறுதுணைவ

னிற் சிறந்தவனெனவும், காதலுக்கோர் உறைவிடமெனவும், சிந்தைக்கோர் செவிலியெனவும், சீர்பெற்ற திருக்கண்ணினுக் கோர் கன்னியெனவும், திண்மைகொண்ட தோள்களுக்கோர் நாத னெனவும் நினைந்தாலும் உன்னை இயற்கையெனக் கருத்துட் கொளச் சிந்தனை தடைப்படுகின்றதே. உன்னை இவ்விதமெல்லாம் இயக்கவைத்த தென்னை? உரை. நீ இயல்பிலே யமைந்திருந்தால், கால வேறுபாட்டினால் நீ உன் கனையிழந்தும், கவின்கொண்டும், இருப்பதேன்? உன்னகத்தே மாந்தர்க்குக் கொடுந்துன்பம் இழைத்துவரும் விலங்கினங்களும் உன்னிடமுறைவதேன்? உரை. உன்னை அன்னையெனவும், நண்பனெனவும், கருத்திற்கோர் ஊற் றளித்து உன்னை வியக்கத் துணையளித்த துணையெனவும், காதல் நல்லாளெனவும் கருத்துட்கொண்டு உன்னைப் போற்றினாலும், உன்னகத்துக்கொண்டிருக்கும் விலங்கினங்களைக் காணுழி, உன் னைப் பகைவனெனவுங் கொண்டால் என்னையெனவும் எம்முள்ளி லோர் ஒளி வீசுகின்றதே. என்னை இவ்விதமெல்லாம் நினைய வைத்து நிலைபிறழச் செய்யும் தன்மை இயல்பிலே அமைந் திருந்ததென்பது உண்மையானால் நீ ஒரு குறிக்கோளுடன் இயக் குதலே திறனன்றி, உன்சிறு செய்கைகளைக் கருத்துட்கொண் டால், இயற்கையே, உன்னையுமோர் சக்தி உன் புறத்திருந்து இயக்குவதால்தான் நீ இத்துணை நாடகமாடி வருகின்றனை; இல்லையே லுனக்கிவை அமையா பொறு, இன்னும் ஒன்றுரைக் கின்றேன். தொழிலற்றுத் திரிவார்க்கும் வணிகப் பெருமக்க ளுக்கும் வளமுறு தொழில்வளமும், பொருள்தரு பொன்மணி களும் நின்னகத்தே கொண்டுறைவதை யுன்னினால், இயற்கை யென உன்னை இவ்வுலகுக்கு அளித்தவன் எம்மிறையே. கடவுளே இவ்விதமெல்லாம் உன்னை இயக்குகின்றன னென்பதை, எளி யனும் கவிஞன் வாழ்த்துகின்றேன். உன் திறனென்னையென நோக்குழி, உன்புறத்திருந்தியக்கும் அரியதோராற்றலே, கடவுள். அன்னவரே மாந்தராம் நம் இனத்திற்கு அன்னவரின் வியத்தகு செயல்களை அறிவிப்பான் வேண்டியே, இயற்கையென வொன்றினைக் காட்டி அருளளிக்கின்றனன். அவனன்றி ஓர ணுவுமசையாதெனும் கருத்தை வலுவிலே அறிவிக்கும் கருத் துட்கொண்டு, இங்ஙனைத் தோற்றுவித்தனனென அவனை வணங்குதும் யாமாகிய மறைமலை.

இயல்பிலே அமைந்ததொன்றும் இயற்கையினைக் கடவுளின் **கலை** யெனவும், **கலை** யென்பது இயற்கையின் முழுமையே யெனவும், இயற்கை யென்றுமே பொய்யினை ஒப்புதலில்லை யெனவும், இயற்கை உண்மையின் தோழனெனவும், இயற்கை ஆண்டவனொருவனால் ஆட்டிவைக்கப்படுகிற தெனவும், இயற்கை உலகினைத் தோற்றுவிக்கும் திறனுள்ளதும், ஒழுங்கு படுத்தும்

பெண்ணினத்தின் பெருமைக்கோர் எடுத்துக்காட்டு. தான் பெற்ற செல்வங்களைக் கண்ணை இமை காப்பதுபோற் காத்தும், அவர்கள் ஏதேனும் நோய்வாய்ப்பட்டு இன்னலுறுங்காலை, பக்கலி லிருந்து ஒக்கலையிலேற்றிக் கண்விழித்துக் கவலையுடனிருந்து வேண்டுவன புரிபவள் பெண்ணே. தங்கள் கணவர்களைத் தங்கள் குழவிகளுக்கு முதலில் அறிமுகப்படுத்துபவளும், பார்! அப்பா என முதல் "அ"காரத்தினை தோற்றுவிப்பவளும், பெண்ணே. இப்பெருமை பெண்ணினத்தையே முழுமையுஞ் சாருமென்பதனை, ஆணினம் அமைதியுடன் ஏற்கும் என்ப தென்ற பெருமையுடையவளும் பெண்ணே. அம்மக்கள் தம் உடம்பைத் தன்னுடம்பினுடன், இறுகப்பற்றி மெய்யுணர்ச்சி அவர்களைத் தொடுவதால் ஏற்படுவதை இன்புடன் நுகர்ந்து தன்னிலை மறந்திருப்பவளும் பெண்ணன்றோ? தம் மககளின் மழலைச் சொற்கேட்டு இன்புறும் தாய் தந்தையரில், தனியுரிமை கொண்டு தன் மகன் அல்லது தன் மகள் உரைக்கும் புதுமொழி யைப்—புரியா மொழியை, இனிது! எதனினும் இனிது!! என்று தன் கணவன் அருகிற் கொண்டிருத்தி, காண்க! "என் குழந்தை, என் செல்வம் பேசும் பொருளைச் செவிமடுங்கள், என் பிள்ளையே, பிள்ளை"யென முதற் பங்கு கொண்டுரைக்கும் பெருமை பெண்ணினத்திற்கன்றோ? தம் மக்களை நல்வழியில் அன்னவர்தம் கருத்துச்செல்ல, தகப்பனே உரியனென எண்ணி னும், அக்கருத்தில் அவர்களை ஈடுபடச் செய்து நல்வழிப் படுத்தல், நன்னயம்கொண்டே, என்ற கருத்தைப் புரிந்து செயற் படுந் திறனமைந்தவள் பெண்ணன்றோ? தன்மகன் நற்பண்பு நிறைந்து, நல்லதொரு நாயகனாய் வாழ்கின்றான் என்பதைக் கேள்வியுறுந் தந்தையைவிட, தானாகிய பெண் அவனைப் பெற்ற காலத்துக் கொண்ட மகிழ்வினைவிட, பெருமகிழ்ச்சியில் ஈடு பட்டுத் தன்னிலை மறந்து அன்புக்கண்ணீருகுப்பவள் அன்னை யாம், பெண்ணன்றோ? இதனையே வள்ளுவப் பெருந்தகையார்,

> "ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
> சான்றோன் எனக்கேட்ட தாய்."

என்று ஈரடியிற் பெருமைப்பட உரைத்த சான்றோன்றே போதும், பெண்ணின் பெருமைக்கு. இதுமட்டுமா! இல்லத்து ஒளியாய் விளங்குபவளும் பெண்ணன்றோ? தன் கணவர் கை நிரம்பப் பொருளீட்டி வந்தாலும், அதை வெளியுலகுக்கு அறி விப்பவள் பெண்ணன்றோ? எவ்விதம்? தன் கணவர் கொண்டு வரும் பொருளைத் தன் மக்களுக்கும் தமக்கும் பிற்காலத்துப் பயனுறு துறைகளில் பயன்படுத்தி இல்லறத்தை நல்லறமாக்கும் தன்மையும் உனக்கன்றோ? பெண்ணே! தன் கணவர் சோர்ந்து

வரும் பொழுது நோக்கி அன்னவரின் குறிப்பறிந்து அவர் களைப் பிணைப் போக்கும் திறனும் உனக்கன்றோ? பெண்ணே! உனது இல்லினைத் திருமகள் நின்றிலங்க வைக்குந் திறனும் உனக்கன்றோ? பெண்ணே! தன் கணவனின் வருவாய் தெரிந்து அதற்குத் தகுந்தபடி இல்வாழ்க்கையை நடத்திக் குடும்பத்தினை மகிழ் வினுள் ஆழ்த்தும் அருந்திறல் உனக்கன்றோ? பெண்ணே! தன் மக்களை நல்வழியில் அவர் கருத்தைச் செலுத்த முயல்வதுடன் வீரமென்ற ஒன்றை அதனுடன் இயைத்தெடுத்து உரைத்து வீரர்களாய் விளங்க வைக்கும் பெருமையும் உனக்கன்றோ? பெண்ணே! இல்லறமாம் நல்லறத்தில் "அன்பு" என்ற ஒன்றி னாலே, அதை விளங்கவைக்கும் பெரும் பொறுப்பும் உன் னிடமே இருக்கிறதென்பதனை உணர்ந்து ஒழுகினால் அவ் வில்லறம், நல்லறமாய் விளங்கும் உரிமை பெற்றவள் நீயன்றோ? பெண்ணே! உன் இல்லிற்கு வரும் விருந்தினரை முகமலர்ந்து வரவேற்று அவர்கட்கு வேண்டுவன புரிந்து, அவர் தம்மை மகிழ வைத்தனுப்பும் மாண்பு, உன் கணவரைப் பெருமைப்படுத்தும் பொறுப்பு, உனக்கன்றோ? பெண்ணே! உனது இல்லறப் பண் பினைக் கண்டு, உன் கணவனின் பெற்றோரும், உடன்பிறந்தாரும். உற்றாரும் உன்னை இல்லத்துத் திருமகள் எனப் போற்றி உரைக்குந் தன்மையினைத் தன்னுட் கொண்டவளும் நீயன்றோ? பெண்ணே! உன் திறன் கண்டு, இல்லற வாழ்வினைக் கண்டு பிறர் நாண, நடத்திக்காட்டுந் திறனும் உனக்கன்றோ, பெண்ணே! தெருவெல்லாம் திரண்டெழுந்து வந்து, என்ன இவர்கள் இல்லில் கூக்குரல், கணவன், மனைவியை நையப் புடைக்கின் றனனே, அவளும் வேங்கையெனச் சீறுகின்றனளே, என்ற நகைப்பிற்கிடங்கொடாது, நன்னயம் கொண்டு நல்வாழ்வு வாழ்த லென்பதுவும், உன் கருத்தில் இடம்பெற்று, இல்லறத்தை நல்லறமாக இயக்கும் திறனும் உனக்கன்றோ? பெண்ணே! உன் கணவன் தீயவொழுக்கங்களில் ஆழ்ந்தவனாய் அமைந்து உன்னைப் பேணாது உன் அணிகலன்களெல்லாம் அகற்றி நையப் புடைத்தாலும், உன் குழவிகள் முகம் நோக்கி, அன்னவ னைத் தெய்வமென நினைந்து, அவனுக்குரிய தொண்டினைச் செய்து, அகமகிழ்ந்து, ஆண்டவனை நோக்கி, என் குறை தீரெனக் கூப்பிய கரங்களும் அழுத கண்ணுமாய்ப், பொறுமையென்ற அணிகலனைக் கைக்கொண்டு வாழ்பவள் நீயன்றோ? பெண்ணே! கணவன் இறந்தவுடன் கைம்மைக்கோலம் பூண்டு அன்னவரை நினைந்துருகிக் கண்ணீருகுத்துக் கலங்கும் தன்மையைத் தலையாய கடனெனக்கொண்டு வாழ்பவள் நீயன்றோ? பெண்ணே! உன் மைந்தர்கள், அவர்தம் அருமைக் கிழத்தியர்பால் காதலென்ற புது மோகத்தில் மூழ்கி உன்னை வெறுத்தாலும், என் மக்க

ளெனத் தாயன்பு கொண்டொழுகும் தன்மை உன்னிடத்தியல்பிலே உறைந்ததென்னவெனப், பெண்ணாகிய உன்னையே, பெண்ணாகிய திருவரங்க நீலாம்பிகை வினவுகின்றேன். பெண்ணின் பெருமையே பெரிதென எடுத்துரைக்கும் சான்று நிரம்ப இருக்கின்றது. இருப்பினும் பெண்ணிடம் காணுங் குறைகளை அடுத்து வெளியிட விரும்பித் திருவருளை வணங்கி எம்முறையில், பெண்ணினம். வாழ்ந்தால், பெண் பெருமை அழியாததொன்றாய் நின்றிலங்கும் என்பதனையும் இயைத்தே உரைப்பேன் இயக்கி. ஆண் மக்களுக்கும் இஃது ஓர் ஆறுதலளிக்கும் என்ற கருத்துமியைந்ததே. தாய்க்குலமே! உலகம் போற்றும் உயர்ந்தோர்களை ஈன்றவள் நீயே என இறுதியில் எடுத்தியம்பி இத்துடன் முடித்துக்கொள்ள விரும்பி விடைபெறுகின்றேன்.

திரு. நீலாம்பிகை,
திருவரங்கம் பிள்ளை இல்லக்கிழத்தி,
காணுவுலகவாசி. (நெல்லை)

ஆங்கில நாள்,
8—10—59.

---

## தோழி தந்த வாழ்வு

[திரு. மருதூர் இளங்கண்ணன், M. O. L.,]

மறைந்தனள் எனினும் மகிழ்வுகூர் பொழுதில்
எண்ணற் குரியள்மன் இன்னுயிர்த் தோழி ;
ஆளுநர்ப் பெறாஅ அணிதீஞ் சொல்போல்
தனித்தனிக் கிடந்தோம் ; நனிபல உதவிப்
புணர்த்தனள் பண்டுநற் புலவோர் போல ;
மாமழை பொழிந்துழி வான்போல் நெஞ்சத்து
மாசின்று அகல்பே ரன்புநன் குடைமையின்,
விறலுறப் புனைவோன் விழுமிய நெஞ்சினுட்
பாட்டியல் உணர்ச்சி பழுநிய பொழுதில்
தனிப்படு சொற்புணர் தகைமாண் பாட்டென
விளியா இன்பம் விளைக்குமன் வாழ்க்கை ;
அறம்,பே ரன்பிவை சிறந்தஎம் வாழ்வை
நயம்பொதி பாட்டின் நலன்வியந் தியம்பும்
தகைசால் நாவலர் போல்நனி
மாண்புறுத் தவர்நம் வயிறுவாய்த் தோரே.

# தொல்காப்பியத்தில் ஓரறிவுயிர்

[திரு. மு. அரங்கராமாநுசம்]

தமிழரின் மொழிக் கருவூலம் தொல்காப்பியம். இக்காப்பியம் கலையையும், நாகரிகத்தையும், பண்பையும், அன்பையும், காதலையும், வீரத்தையும், தமிழரின் நிலையையும் அழகுற எடுத்துக் காட்டும் ஓவியம். தமிழ் மொழிக்குத் தலைமையாம் மணி முடியாகத் திகழ்வதும், பொங்கு கடல்கொண்ட இலக்கிய இலக்கணங்களில் எஞ்சியதும் ஆகும். பண்டைத் தமிழரின் அக வாழ்வும் புற வாழ்வும் தகைவுறக் காட்டும் இத்தண்டமிழ் இலக்கண நூலில், அறிவியல் முத்துக்கள் அகப்படுவதை மூழ்கி முத்தெடுப்போர் காணலாம். தமிழரின், தமிழின் ஒப்பற்ற உயிர் நாடியாகவும் அமைந்துள்ளது இந்நூல்.

தொல்காப்பியர் தந்த முத்துக் குவியலில் அறிவியல் ஒளி வீசும் முத்துக்களைத் தொகுப்பின், புல் முதல் மக்கள் வரை உயிரினங்களை ஓரறிவுயிர் முதல் ஆறறிவு வரை காட்டியுள்ளார். ஓரறிவுயிர் எவ்வாற்றான் அறியும் என்பதையும், அதுபோல் மற்றைய, ஆறறிவுயிர்கள் அறியும் தன்மையையும் அழகுற நவின்றுள்ளார். அவற்றைக் கூறுமிடத்தும் தாமே இவ்வாறு பகுக்கவில்லை என்றும்; அறிவுமிக்க ஆன்றவிந் தடங்கிய கொள்கையுடைய சான்றோர் அவ்வாறு செய்தனர் என்றுங் கூறுகின்றார். அதனால் மூவா முதல் முத்தமிழின் அளப்பரும் புகழையும், பழைமையையும், நாம் ஒருவாற்றான் அறியமுடியும்.

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறிவதுவே அதனொடு நாவே
மூன்றறிவதுவே அவற்றொடு மூக்கே
நான்கறிவதுவே அவற்றொடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்றொடு செவியே
ஆறறிவதுவே அவற்றொடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தனரே."

(தொல்-மர-௨௭௨)

இவ்வாறு கூறிய வகைகொண்டு, மக்கள் ஈறாக உள்ள உயிர்த் தொகுதிகளை அறிவின் அடிப்படையில் ஆறாகப் பிரித்துள்ளதை அறியலாம். மேல்,

'ஒன்றறி வதுவே உற்றறி வதுவே'

என உடம்பினால் அறியக்கூடியது எனத் தொல்காப்பியர் கூறி,

'புல்லும் மரனும் ஓரறி வினவே' (மரபு-௫௭௨)

என விளக்கினர். மரங்களைப் புல் எனவும் மரமெனவும் வகுத்தார். உற்றறிவது வெம்மை, தண்மை, வன்மை மென்மை இவற்றை உணர்ந்துகொள்ளும் தன்மையாம். இன்று மரவகையில் 'தூங்குமூஞ்சி' மரம் என்பது மாலையில் இலைகள் சுருங்கி வாடியதுபோல் காட்சி யளிக்கும் தன்மை காணலாம். இவ்வாறு காப்பியர் புல்லும் மரனும் என வகுத்தவைகளில்,

'புறக்கா ழனவே புல்லெனப் படுமே'
'அகக்கா ழனவே மரமெனப் படுமே'

என்று காழ் - வயிரிப்பு, அல்லது உறுதி, அல்லது வைரம் பாய்ந்தது என்று பொருள்படும் மேல் நல்ல உறுதியும் உள்ளே மரச் சோறும் கூடும் கொண்டுள்ளவைகளைப் புல்லென வகுத்தார். அவை தெங்கு, பனை, மூங்கில் போன்றவைகளாம். இவ்வாறு இல்லாது உள்ளும் புறனும் வயிர்ப்பு உடையவை மரங்களாம் பொதுவாக, புல்லொழிந்தன மரங்களாம்— "புறத்தும் அகத்தும் கொடி முதலாயின காழ்ப்பின்றியும் அகில் மரம் போல்வன இடையிடை பொய்ப்பட்டுப் புல்லும் மரனும் என வருவன உள" இவ்வாறு வேறுபாடு தோன்ற வரையறை கூறிப் போந்தார்.

தொல்காப்பியர் புல்லெனக் கூறியன, இன்று மக்கள் வழக்கிடை மூங்கில் மரம் தென்னை மரம் பனை மரம், என்றே கூறுகின்றனர். உள்வயிர்ப்பு உடையவை பலவகைகட்கும் மக்கட்குப் பயன்படும் மரங்களாகும். உள்ளும், புறனும் வயிர்ப்பின்றி உள்ளவைகள் வாழை, ஈந்து (ஈச்சை), கைதை (தாழை) மரம் என்றும் வழக்கிடை உள்ளன. தாமரை கழுநீர் முதலியனவும் இதன் கூறுபாட்டில் அடங்குவன ஆகும். இவ்வாறு புல்லும் மரனும் எனக் கூறுபடுத்தப்பட்ட, மரங்களின் உறுப்புக்களாக,

"தோடே மடலே ஓலை என்றா
ஏடே இதழே பாளை என்றா
ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்." (மர-௬௩௪)

இவ்வாறு தம் முன்னோர் குறித்ததாகக் கூறும் தொல்காப்பியர் வழக்கு இன்றும் மாய்ந்து விடவில்லை. மக்களின் வாயில் தமிழ் மணம் அரும்புகளாக ஒவ்வொரு வகை மணத்துடன் கமழ்ந்து கொண்டிருக்கிறது. இன்றும் தென்னை மடல் பனையோலை, என்று வழங்குகின்றன. அவைபோல அகக்காழ் உள்ள மரங்கட்கும்,

"இலையே தளிரே முறியே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனையே உள்ளுறுத் தனையவை யெல்லாம்
மரனொடு வரூஉம் கிளவி யென்ப" (மர-அசஉ)

என மரபு கூறினர். அம்மரபாக மாவிலை, மாந்தளிர், புன்னை இலை, மாங்குழை, மாஞ்சினை, மாம்பூ என்றும் வழங்குகின்றன. சிற்சில புல்லென்றது மரமென இன்றைய வழக்குலகில் வந்தது போல், சில சொற்கள் இலக்கியத்தில் பண்டுள்ளவை புகைப் படம்போல் காட்டுவனவும் உண்டு. இன்று வழக்கிடைச் சில இல்லை, ஆனால் அவற்றை இலக்கணக் கண்கொண்டு நோக்கின் வழூவேயாம். இவ்விரு புல்லும் மரனும் கொண்டுள்ள,

"காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றாங் கவையும் அன்ன." (மர-அங்ச)

இச் சொற்களை உடைய பெயர்களில் இன்று வழக்கிடை, தேங்காய், பனம்பழம், வாழைத் தோல், மாஞ்செதில் என வழங் கப்படுகின்றன. காய் பழம் என வேறுவேறு கூறினும் புல்லி னத்தின் ஒரு கூறாகிய பனையை; பனம்பழம், பனங்காய் என்று வருவதுபோல தென்னையின் காய் தேங்காய் என்றே வழங்கு கிறார்கள்.

இவ்வாறு இயற்கையோடு ஒன்றி இல்வாழ்வு நடாத்தி அதற்கு இலக்கியமும் இலக்கணமும் கண்ட தமிழன், அறிவின் திறமை கொண்டு, மக்களின் பண்பு வாழ்க்கையை அடிப்படை யாகக் கொண்டு யாத்த பொற்கோயில் தொல்காப்பியம். இடு குறியாகவும் காரணமாகவும் மரபாகவும் வழங்கிய பெயர்கள் பல உள்ளன. தொல்காப்பியர் காலத்தில் இருந்த மரங்கள் இனம் இன்றும் வாழ்கின்றன. ஆனால் அவற்றின் பெயர்கள், தமிழரின் முன்னோர் இறந்தபிறகும் அவர்தம் கிளைஞரின் வாழ்க்கை கிளைக்க முன்னோர் பெயர் மறந்ததுபோல், அன்று அப்பெயரால் அழைக் கப்பட்ட மரங்கள் இன்று வழக்கில் மாறுபட்டிருக்கின்றன. பண்டு திருமறைக்காடு என்பது வேதாரணியம் என்றும், (மயில் ஆடும் துறை) மயிலாடுதுறை என்பது மயூரம் என்றும் இன்று மாறியதுபோல், சொல் மாறியிருக்கலாம். அவ்வாறு காப்பியர் கூறும் ஓரறிவுயிர்கள் என்று சொல்லப்படுகின்ற மரங்களில்,

"யாமரக் கிளவியும் பிடாவுந் தளவும்
ஆமுப் பெயரும் மெல்லெழுத்து மிகுமே." (எழுத்-உ௩0)

இம் மரங்கள் சில இடங்களில் வழக்கில் இருப்பனவாகத் தெரிகின்றன. இலக்கியத்தில் அன்றுபோல் இன்றும் உள்ளன.

'கருங்கால் யாத்துப் பருந்து வந்து இறக்கும்.' (அகம் ௩௧௭)

"சேயின் வரூஉம் மதவலி! யாஉயர்ந்து
ஓமை நீடிய கான் இடை அத்தம்." (நற்-ககஅ)

'கருங்கால் யாத்து வரிநிழல் இரீஇ.' (ஐங்-௩அஅ)

'சிறுகரும் பிடவின் வெண்தலைக் குறும்புதல்.' (அகம்-௩௪)

'வண்டு வாய்திறப்ப விண்ட பிடவம்.' (நற்-உ௩அ)

'பொலன் அணி கொன்றையும் பிடவமும் உடைத்தே.'
(ஐங்-௪௩௫)

"படுமழை பொழிந்த பாறை மருங்கில்
சிரல்வாய் உற்ற தளவின்." (நற்-௬க)

'புதல் இவர் தளவம் பூங்கொடி அவிழ.' (நற்-உ௪உ)

'யாவிரி நிழல் துஞ்சும்.' (குறுந்-உ௫௫)

'பூ அமல் தளவ மொடு.' (குறுந்-௩அஉ)

யாமரம் பாலை நிலங்களிலும் காணப்படும் என்பதும், பிடவு வெண்மலர் பூக்கும் என்பதும், தளவம் கொடி யென்பதும், யாமரக் கிளைகள் கருமையாய் இருக்கும் என்பதும், தலைவிக்குத் தலைவன் முல்லையொடு தளவமும் சூட்ட வருவான் எனத் தோழி கூறுவதால் இது விரும்பக்கூடிய பூக்களில் ஒன்று என்பதும் அறியலாம்.

'மாமரக் கிளவியும் ஆவும் மாவும்.' (எழுத்-உ௩உ)

மாமரம் என்றே இன்றும் வழக்காற்றில் உள்ளது. மாவின் தளிர், மாவடு இவைகள் இலக்கியத்தில் உவமையாக உடலழகிற்கும் கண்ணிற்கும் எடுத்தாளப்படுகின்றன.

'நன்னன்-நறுமா கொன்று நாட்டில் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல.' (குறு-எ௩)

'எவ்வத்து ஒவ்வா மாமுதல் தடிந்து.' (பரி-உக)

'அலங்குசினை மாஅத்து அணிமயில் இருக்கும்.' (ஐங்-அ)

'தேம்பாய் மாஅத்து ஓங்குசினை விளிக்கும்.' (அகம்-௩௪க)

இவ்வாறு இலக்கியத்தில் வழக்கில் பயின்றுவரும் மாமர இலையைக்குயில் விரும்பி உண்ணும். கார் காலத்தும் சில பூத்துக் காய்க்கும். பெரும்பான்மை வேனிற் காலத்திலே பூத்துக் காய்க்கும். இம்மரம் பலவகையாக இன்றே வழக்கில் காணப் படுகின்றன.

'உதிமரக் கிளவி மெல்லெழுத்து மிகுமே'

இம்மரம் உதி பயனபது இக்காலே ஒதி, அதாவது ஒதிய மரம் என்று வழங்கப்படுகிறது. (இதன்கோடு மணநாளில் நடப் படுகிறது) இது பலகை, நுகத்தடி முதலியன செய்யப் பயன் படுகிறது.

'புளிமரக் கிளவிக்கு அம்மே சாரியை.'　　　(எழுத்-உசங)

சுவை யொன்றின்கூறு புளி; அதனால் ஈண்டு சுவைப்புளி யைக் கூறவில்லை. மரமான புளிய மரத்தைக் கூறுகிறார்.

'எகின் மரமாயின் ஆண்மர இயற்றே.'　　　(எழுத்-௩௩௭)

எகின் என்பது அன்னத்தையும் குறிக்கும் சொல், அதனால் மரமாயின் என்று விதந்து கூறினர். அவ்வாறாயின் இன்று மக்கள் எகின் என்று வழங்குவதில்லை. புளியமரம் என்றே குறிப்பிடுகின்றனர்.

'களரிப் புளியின் காய்பசி பெயர்ப்ப.'　　　(நற்-௩௭௪)

'இன்புளிக் கலந்து மாமோர் ஆக.'　　　(மலே-௧௭௧)

உதிமரம்போல அதிகமாக இலக்கியத்தில் பயின்று வரவில்லை.

'ஒடுமரக் கிளவி உதிமர இயற்றே.'　　　(எழுத்-உ௬௩)

'சேயென் மரப்பெயர் ஒடுமர இயற்றே.'　　　(எழுத்-உ௭௧)

ஒடுவங்காடு என்றும் உள்ளது, சேய் என்பது மூங்கில்.

'செயலேஅம் தளிரேய்க்கும் எழில்நலம்.'　　　(கலி-௧௪)

"விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
அவைமுப் பெயருஞ் சேமர இயல."　　　(எழுத்-உ௬௩)

விசை, ஞெமை, நமை இலக்கியத்தில் காணப்படுகின்றன. வழக்கில் சிறுபான்மை வருகின்றன.

'அலந்தலே ஞெமையத்து இருந்த குடிஞை.'　　　(நற்-௩௯௪)

'நுண்ணிதின் நிவக்கும் வெண்ஞெமை வியன்காட்டு.'"　　　(அகம்-௧௪௫)

விசை, ஞெமை இருப்பனவாகத் தெரியவில்லை.

"பனையும் அரையும் ஆவிரைக் கிளவியும்
நினையுங்காலே அம்மொடு சிவணும்."　　　(எழுத்-உ௮௪)

பனை, பெண்ணை, போந்தை ஒருபொருள் குறித்தன. இவை பனை யென வழக்கில் உள்ளமை அறியத்தக்கது. பெண்ணை போந்தை என்பன இலக்கியத்தில் பயின்று வரும் சொற்களாம். அரை அரசமரம் என இன்று வழக்கில் உள்ள மரமாக இருக்க

லாம். வழக்காற்றில் அரை பிறகு அரைசு, அரசாக மாறியிருக்க லாம். ஆவிரை என்பது மணந்தரும் மரமாக இருக்கலாம். விரை என்பது மணத்தைக் குறிப்பதும் ஆகும்.

'பனைத்தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாய.' (குறுந்-௩௭௨)

'குருகு பறியா நீள்இரும் பனைமிசை.' (பரி-௨)

'நாரையொடு பனைமிசை
அன்றில் சேக்கும் முன்றில் என.' (அகம்-௩௬0)

'வேனில் அரையத்து இலைஒலி வெரீஇ.' (ஐங்-௩௨௫)

'பொன்னேர் ஆவிரைப் புதுமலர் மிடைந்த.' (குறுந்-௧௭௩)

'பூளை பொலமலர் ஆவிரை - வேய்வென்ற.' (கலி-௧௩௮)

ஆவிரை, ஆவாரை ஆவாரம்பூ என்று வழக்கில் உள்ளமையும் அறியத்தக்கது.

'ஆண்மரக் கிளவி அரை மரஇயற்றே.' (எழுத்-௩0௫)

மாந்தீம் தளிரொடு வாழைஇலை மயக்கி.' (பரி-௧0)

'இல்ல மரப்பெயர் ஆண்மர இயற்றே.' (எழுத்-௩௧௪)

ஆண் என்பது எந்த மரம் எங்கு வழக்கில் உள்ளது என்பதும் தெரியவில்லை.

(தொடரும்)

---

## உறக்கத்தின் பொருள் என்ன?

[கூடலூர், பெரு. இராமச்சந்திரன்]

தமிழைப் பழிக்கும் சில்லோரைச்
சாடும் திறல்நாம் பெற்றிலமோ?
தமிழை வளர்க்கும் எண்ணம்நாம்
சற்றும் மனதில் கொண்டிலமோ?
தமிழைப் போற்றி வணங்கிடும்நற்
றமிழர் பண்பை இழந்தனமோ?
தமிழை 'மந்தி' அழிக்கையிலே.
தமிழர் தூங்கின் பொருளென்ன?

# கலைமகன்

[திரு. பி. எல். சாமி, பி. எஸ்ஸி.]

பழந்தமிழிலக்கியத்தில் அரிதாகக் காணப்படும் செய்திகள் பல. அவற்றில் குறுந்தொகையில் வரும் கலைமகன் பற்றிய செய்தி மிக அரிய செய்தியாகும். உரையாசிரியர்களும், பிற் காலப் புலவர்களும் இச் செய்தியைப் பற்றித் தெளிவான, பொருத்தமான விளக்கம் தரவில்லை.

'அரிதரிது மானிடராய்ப் பிறத்தலரிது' என்று சொல்வர். ஆனால் அந்த அரிய மானிடப் பிறப்பிலும் குறை தோன்றிவிடுவதுண்டு. அத்தகைய குறைகளை எண்பேரெச்சமென்று பழந் தமிழர் வகைப்படுத்தினர். 'சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமுங் கூனுங்குறளும், ஊமும் செவிடும் மாவும் மருளும்' என்று எண்வகைக் குறைப்பிறப்புகளை எண்பேரெச்ச மென்று புறநானூறு கூறும். இந்த எண்வகைப் பிறப்புகளில் எளிதாகக் காணப்படுவன செவிடும் ஊமும் கூனுங் குறளுமாகும். சிறப்பில் சிதடு என்பது அறிவு குறைந்து மூளை சிறியதாய்ப் பிறக்கும் பிறப்பு. சிதட்டுக்காய்போல் தலையில் உள்ளீடு இல்லாத பிறப்பு. துஞ்சிய புலி இடறிய சிதடன் சங்கநூலில் வருபவன். இத்தகைய பிறப்பை ஆங்கிலத்தில் 'Cretin' என்பர். கண், மூக்கு முதலிய உறுப்புகள் இல்லாமல் பிறக்கும் மணைக்கட்டைப் பிறவியை உறுப்பில் பிண்டம் என்றனர். 'குழவி யிறப்பினும் ஊன்றடி பிறப்பினும்' என்னும் புறத்தில் 'ஊன்தடி' என்று இஃது அழைக்கப்படுகின்றது. 'Paper thin mummy' என்று ஆங்கிலத்தில் அழைக்கப்படும். இவைகளை விட மிகவும் அரிதான பிறவிகள் மாவும் மருளும் 'கையில் ஊமனும்,' 'கூனுங் குறளும்' குறுந்தொகையிலும் கலித்தொகையிலும் வருகின்றார்கள். மானிடப் பிறப்பில் எத்தனை குறையுண்டோ அத்தனையும் பழந் தமிழர் அறிந்திருந்தவையே என்று தெரிகின்றது.

பழந்தமிழர் குறைப்பிறப்புகளை மட்டுமன்றி மிகமிக அரிதாக நிகழ்ந்த வியப்புக்குரிய பிறப்புச் செய்திகளையும் அறிந்திருந்தனர் என்பது 'கலைமகன்' செய்தியிலிருந்து உணருகிறோம். இரட்டைப் பிறவியைப் பற்றியும் தமிழர் சில கருத்துக்களைக் கொண்டிருந்தனர். தொல்காப்பியத்தில், 'இரட்டைக் கிளவி இரட்டிற் பிரிந்திசையா' என்ற சூத்திரத்தை விளக்க வந்த சேனாவரையர் 'ஈண்டிரட்டைக் கிளவியென்றது மக்களிரட்டை, விலங்கிரட்டைபோல வேற்றுமையுடையனவற்றையன்றி, இலையிரட்டையும் பூவிரட்டையும்போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையனவற்றை யென்றுணர்க' என்று கூறு

கிறார். மக்களிரட்டையில் வேற்றுமையுண்டு; அதுபோல் விலங்கிரட்டையும். இதனால் இரட்டைப் பிறவியாய்ப் பிறக்கும் மக்கள் வேற்றுமையுடனிருப்பர் என்பது சேனாவரையர் கருத்து. இயற்கையில் பெரும்பாலும் இரட்டைப் பிறவிகள் வேற்றுமையாகவே இருப்பர். ஒரே பிறப்பில் பிறக்கும் இருகுழந்தைகள் ஆணாகவும் பெண்ணாகவும், அல்லது அடையாளங்கள் மாறுபட்ட இரு ஆண்களாகவோ பெண்களாகவோ பிறப்பதுண்டு. இவ்விரட்டையை "உடன் பிறப்பிரட்டைகள் (Fraternal twins) என்று கூறுவர். ஒருதாய்க்குப் பலமுறை பிறந்த பிள்ளைகள் போலவே இவ்விரட்டையரும் வேற்றுமையோடிருப்பர்.

இலையிரட்டை என்பது தனித்தனியாகக் காணப்படும் இரண்டு இலைகளைக் குறிக்காது. ஆனால் தென்னை, புளியன், வேம்பு முதலிய மரங்களின் கூட்டிலைகளில் காணப்படும் இரட்டை இலைகளையே (Bipinnate) குறிக்குமென்று கருதுகிறேன். இவ்விலைகள் தாம் ஒற்றுமையுடையனவாகவும், எதிரெதிராக இருப்பதால் வேற்றுமையுடையனவாகவும் உள்ளன. இத்தகைய கூட்டிலைகளைச் செடிநூற்படி ஓரிலையாகவே கருதுவர். ஓரிலையே பிரிந்து இரண்டாகிய தென்று கருதலாம். இவ்விலைகளை இரண்டு வேறு வேறு இலைகளாகக் கருதுவதில்லை ஓர் இலையிற் பிறந்த இரட்டை இலையாகவே கருதுவர். இதைக் கண்டுபிடிக்கச் செடிநூற்படி சில காரணங்கள் கூறுவர். ஆதலின், இரட்டைக் கிளவிக்கு இலையிரட்டையை உவமித்துக் கூறியது மிகவும் பொருத்தம்; நுட்பமான திட்பமான உவமானம். கூட்டிலை போலவே கூட்டுப்பூவும் உண்டு நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையிலும் 'மக்களிரட்டையாய் மாறினம் பிறந்தியாம்' என்று வரும் மேற்கோள் செய்யுள்வரி மக்களிரட்டை மாறி யிருக்குமென்று பழந்தமிழர் கருதியதைக் காட்டுகின்றது. இது பெரும்பாலும் நிகழும் செய்தியை அடிப்படையாகக் கொண்டெழுந்த கருத்து. இக் கருத்துக்கு எதிர்மாறாக மக்களிரட்டை ஒற்றுமையாகப் பிறப்பதுமுண்டு. இவைகளை ஒற்றுமை யிரட்டைகளென்று (Identical twins) கூறுவர். தாயின் கருப்பையிலிருக்கும் ஒரு முட்டை கருவுற்று இருபகுதியாகப் பிரிந்து வளர்ந்து உருவும் அதன் நிழலும்போல் ஒற்றுமையாக இருக்கும். வேற்றுமையுடைய உடன்பிறப் பிரட்டைகள் தாயின் கருப்பையிலிருந்து ஒரே சமயத்தில் இருமுட்டைகள் கருவுற்று வளர்வதால் பிறப்பவை. இவை இருமுட்டைகளிலிருந்து தோன்றுவதால் வேற்றுமையுடையன. ஒற்றுமை யிரட்டைகள் ஒரே அடையாளங்களுடன் இருப்பதுமின்றி, ஒரே உணர்ச்சியுடையனவாக இருக்கும். ஆனால் பழந்தமிழர் பெரும்பாலும் வேற்றுமை யிரட்டைகளையே கண்டதால் இரட்டைக் கிளவிக்கு மக்களிரட்

டையை உவமையாகக் கூறுமல் இலையிரட்டையை உவமையாகக் கூறினர். இலையிரட்டை உருவும், கண்ணுடியில் காணும் எதிர் உருவும் (Image)போல் ஒற்றுமை மிகுந்து இருக்கிறது. அது போன்றே இரட்டைக் கிளவியும் சொல்லுக்குச்சொல் யாதொரு வேற்றுமையின்றி இருக்கிறது. உருவின்றேல் எதிர் உரு இல்லை. இரட்டைக் கிளவியில் ஒருசொல்லைப் பிரித்து எடுத்துவிட்டால் இரண்டாவது சொல்லுக்குப் பொருளில்லை. ஒலியின்றேல் எதிர் ஒலி ஏது? ஆனல் அடுக்குச்சொல் இரட்டைக் கிளவிபோ லின்றி பிரிந்திசைக்கும்; மற்றும் சொல்லடுத்து வரும்போது மிகுதியை யுணர்த்தும். இரட்டைக் கிளவியோ உருவும் ஆடியிற் காணும் அதன் நிழலும்போல் யாதொரு மாற்றமுமின்றி, பொருளில் ஆக்கமும் கேடுமின்றி இரட்டையாக வரும்போது மட்டும் பொருள்தந்து உருபிரிந்தால் நிழல் அழிவதுபோல், பிரிக்கும்போது பொருளிழந்து விடுகின்றது.

*இரட்டைப் பிள்ளைப்பேறு எண்பத்தாறு தடவைகளுக்கு ஒருமுறையாக மக்களினத்தில் நிகழ்வதாக அறிவியற்படி கணக்கிட்டிருக்கின்றூர்கள். அதிலும் ஒற்றுமை யிரட்டை மிக அரிதாகவே பிறக்கின்றன. ஆனல் மிக மிக அரிதாக, தாயின் கருவில் வளரும் ஒரு முட்டையின் பிரிந்த இருபகுதிகள் முற்றிலும் பிரியாமல் ஒட்டிக்கொண்டே பிறப்பதுண்டு. இத்தகைய ஒட்டிய ஒற்றுமை யிரட்டை ஏறக்குறையப் பத்து இலக்கத்திற்கு ஒரு தடவை நிகழ்வதாகக்கூறுகின்றனர். இந்த இரட்டைப் பிள்ளைகள் மார்ப்பகுதியிலோ முதுகிலேயோ ஒட்டிக்கொண்டு பிறப்பதுண்டு. இந்த இரட்டைப் பிறவியைச் சீயத்து இரட்டை (Siamese twins) என்றழைப்பர். குறுந்தொகையில் வரும் கவைமகன் என்பது இத்தகைய ஒட்டிப்பிறக்கும் இரட்டைப் பிறவியே என்பதை நுண்ணிதிணுய்ந்தால் தெளிந்து கொள்ளலாம்.

> "கொடுங்கால் முதலைக் கோள்வல் ஏற்றை
> வழிவழக்கு அறுக்கும் கானலம் பெருந்துறை
> இனமீன் இருங்கழி நீந்தி, நீநின்
> நயனுடை மையின் வருதி இவள்தன்
> மடனுடை மையின் உயங்கும் யான்அது
> கவைமக நஞ்சுண் டாஅங்கு
> அஞ்சுவல் பெரும! என் நெஞ்சத்தானே."

என்ற குறுந்தொகை நஉச ஆம் பாட்டில் 'கவைமகன் நஞ்சுண்டாங்கு' என்ற வரிக்குப் பொருத்தமாக உரை கூறப்படவில்லை.

---

* மாந்தரினத்தில் எண்பத்தாறு வெவ்வேறு பிள்ளைப் பேற்றுக் கொருமுறை இரட்டைப் பிள்ளையும், முப்பிள்ளைகள் 7396-க் கொருமுறையும், நான்கு பிள்ளைகள் 635956-க் கொருமுறையும், ஒட்டிய விரட்டைப் பிள்ளை பத்திலக்கத்திற் கொருமுறையுமாகப் பிறக்கும்.

இரட்டைக் குழந்தைகளையுடைய தாய் இருகுழந்தைகளும் நஞ்சுண்டால் எதை முதலில் கவனிப்பது என்ற துயரநிலையை உவமையாக்கி யிருப்பதாகக் கூறுவர். ஆனால் 'கவைமகன்' என்ற சொற்கு இவ்வுரை பொருத்தமான விளக்கம் கூறவில்லை. இப் பாட்டில் 'கவைமகன்' என்ற சொல் மிக இன்றியமையாத சொல். இருகுழந்தைகளும் ஒரே சமயம் நஞ்சுண்பது நம்பக் கூடியதாக இல்லை. மற்றும் உடனுக்குடன் இரு குழந்தைகளுக் கும் மருந்து தருவது எளிதில் செய்யக்கூடியதாகும். தலைவனும் தலைவியும் கவைமகவு போன்றவர்கள். 'இருதலைப் புள்ளின் ஓர் உயிரம்' என்று சொல்லும்படி அவ்வளவு அன்புடையவர்கள். தோழி தாய் போன்றவள். கவைமகவில் ஒன்று நஞ்சுண்டால் உடனே மறுமகவும் நஞ்சின் கொடுமையை உணர்கின்றது. கவைமகவில் இரண்டும் ஒட்டிக்கொண்டு பிறப்பதால் உடனே உடனே ஒருமகவுண்ட நஞ்சு மறுமகவையும் வருத்துகிறது. அதுபோலவே, தலைமகனுக்கு வருந்துன்பம் உடனே தலைவியை யும் தலைவிக்கு வருந்துன்பம் தலைவனையும் உடனே வருத்து கிறது. மடனுடைமையின் உயங்கும் என்று தலைவனைத் தடுத் தால் தலைவன் வருந்துவான். அவன் துன்பம் தலைவியையும் வருத்தும். தலைவன் நயனுடைமையின் வந்தாலோ அலர் எழவே தலைவி வருந்துவாள். தலைவனும் அதனால் வருந்துவான். எப்படிப் பார்க்கினும் இருவரில் ஒருவருக்குத் துன்பமுண்டாகும். அத் துன்பமே உடனே இருவரையும் வருத்தப்படுத்தும். ஆதலால் தோழி கவைமகவு நஞ்சுண்டதினால் வருந்தும் தாய்போல் வருந்துகிறாள். வாரேல் என்றால் தலைவனுக்கு அதுநஞ்சு. வருக என்று விட்டால் அது தலைவிக்கு நஞ்சு. இதுவே பொருத்த மான விளக்கமாகும். சங்க நூல்களில் 'கவை' என்ற சொல் லாட்சியினை நன்றாக உணர்ந்தவர்கள் இதற்கு வெறுமனே இரட்டை என்ற பொருள் மட்டும் கொண்டிரார். "கவைமுறி யாஅத்து நாறுரை மருங்கின்." (அகம்-உ௬௯) "கவையிலை யாரி னங்குழை கறிக்கும்." (அகம் - க0௪) "கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்தி." (புறம்-௩உஉ) என்ற சங்கநூற் பாடல் வரிகளில் 'கவை' என்ற சொல்லாட்சி இதை வலியுறுத்தும். ஆத்தியின் இலை ஒன்றாகத் தொடங்கி பின்னர் இரண்டாகப் பிரிகிறது. பாதி ஒன்றியும் பாதிபிரிந்தும் காணப்படுவதாலே 'கவையிலை ஆர்' என்று அழைக்கப்படுகிறது. ஆதலால் 'கவை மகன்' என்ற சொல்லும் ஒன்றிய இரட்டைப் பிறவியையே குறிக்கும். இத்தகைய மிக அரிய செய்தியை அழகிய பொருத்த மான உவமையாகக் கையாண்டதால் பாடிய புலவர் கவைமகனார் என்றழைக்கப்பட்டார். 'கவைமகன்' எனச் சொல்லே அவருக் குப் பெயருமாயிற்று.

# நக்கீரர்*

[திரு. சோ. ந. கந்தசாமி, பி.ஏ. (ஆனர்சு)]

கடந்த நூற்றாண்டின் முக்காற்பகுதிகாறும் நக்கீரர் நாவீறு படைத்த பாவலருள் ஒருவராகவே கருதப்பட்டார். நாற்ப தாண்டுகட்கு முன்னர் நாட்டார் ஐயா அவர்கள் நக்கீரரைப் பற்றி முதன்மையாக ஆய்ந்தறிந்து தமது விழுமிய கருத்தைக் கி பி. 1919 இல் நூல்வடிவில் காட்டினார்கள். அஞ்ஞான்றே நக்கீரர் இருவராதல் வேண்டும் என்னும் கருத்து எழுச்சியுற்று இலங்குவதாயிற்று. அவ் விருவரையும் ஒருவராக்கிக் காட்ட நாட்டார் ஐயா அவர்கள் வேட்டார்கள். பின், முற்றக்கற்றார் முதலாகக் கற்றுச் சொல்லிகள் ஈறாகத் தாம்தாம் கண்ட கருத்தே தக்கதெனப் பன்னாட்கள் போந்தன. காலம் கறங் கெனச் சுழறலும் கருத்துச் சகடெனத் திறம்புதலும் கண்கூடு. †கி. பி. 1940 இல் பேராசிரியர் அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் நக்கீரர் இருவராவர் என்னுங் கோட்பாட்டைச் சொல் மரபுகள் சிலவற்றின் துணைகொண்டு நிறுவினர். கி.பி. 1943இல் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் நக்கீரர் நால்வராவர் என்னுங் கருத்தை வெளியிட்டனர். கி. பி. 1952 இல் பேராசிரியர் பிள்ளை அவர்களே நக்கீரர் நால்வரல்லர் மூவரே என்று மொழிந்தனர்; ஒருவர் மறைவிற்கு ஒரு காரணமும் கூறிற்றிலர். கி. பி. 1955 இல் பேராசிரியர் மா. இராசமாணிக்கம் பிள்ளையவர்கள் "செந்தமிழ்" அக்டோபர் இதழில் "நக்கீரர்" என்னும் கட்டுரை வெளியிட்டனர். நக்கீரனாரின் பெயர் பொறிக்கப்பெற்ற நூல்களும் பாக்களும் யாத்த புலவர் ஒருவரே என்னும் பொருளுற எழுதிச்செல் கின்றார். காரணகாரியத் தொடர்பின்றி இயங்கும் இக் கட்டுரை யினைப் பற்றி ஈண்டு எழுதுவதற்கு நான் துணியவில்லை.

இக் கட்டுரையின் நோக்கம்: நெடுநல்வாடை எழுதிய நக்கீரரும் திருமுருகாற்றுப்படை எழுதிய நக்கீரரும் ஒருவரா என்பதைக் காண்பதாம். இவ் விரு நூல்களையும் இருவேறு நக்கீரர்கள் எழுதினார்கள் என்னும் திரு. வையாபுரிப் பிள்ளை

---

* பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் 15-2-1956 இல் ஆனர்சு சிறப்புக் கழகத்தில் (Honours club) கட்டுரையாளரால் படிக்கப்பெற்ற கட்டுரை.

† 1940 இல் திருப்பதியில் நடந்த கீழ்த்திசைக் கலை மாநாட்டில் டாக்டர் அ. சி. அவர்கள் படித்த "நக்கீரர்-சொல்" (The language of Nakkirar) என்ற கட்டுரை காண்க.

அவர்கள் கட்டுரையின் வன்மை மென்மைகளை நோக்கு முகத்தான் எனது உள்ளக்கிடக்கையை உணர்த்தற்குத் துணி கின்றேன்.

நக்கீரர் யாத்தனவாகக் கிடைப்பன: குறுந்தொகையில் எட்டுப் பாக்களும், நற்றிணையில் ஏழும், அகநானூற்றில் பதினேழும், புறநானூற்றில் மூன்றும், பத்துப்பாட்டில் இரண்டும், களவியல் உரையும், அடிநூலும், நக்கீரர் நாலடி நானூற்று வண்ணமும், 11 ஆம் திருமுறையில் ஒன்பது நூல் களும் பிறவுமாம். இவற்றை ஆய்ந்த பிள்ளை அவர்கள் நக்கீரரைப் பற்றித் தம் முடிபைக் கீழ்க்காணுமாறு காட்டுகின்றார்:

| நக்கீரர் | காலம் | நூல்கள் | சமயம் |
|---|---|---|---|
| 1. சங்ககால நக்கீரர் | கி. பி. 250 | நெடுநல்வாடை தொகைநூல் பாக்கள் | ? |
| 2. முருகு நக்கீரர் | கி. பி. 450 | திருமுருகாற்றுப்படை | சைவம் |
| 3. இலக்கண நக்கீரர் | கி. பி. 650 | அடிநூல், களவியல் உரை, நாலடி நானூறு | சைவம் |

திரு பிள்ளை அவர்களின் ஆராய்ச்சி உலகத்தில் ஏற்றத் தாழ்வின்றி இருநூறு ஆண்டுகட்கு ஒருமுறையாக நக்கீரர் நால்வரும் பிறக்கின்றனர்! சங்க நக்கீரர் கி. பி. 3 ஆம் நூற் றாண்டினர் என்னற்கு அவர்கள் கூறும் விளக்கம் இதுவாம்:

"விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்பு
ஒருதிறஞ் சாரா அரைநாள் அமயத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்தனர்."
(நெடுநல்: எ௩-அ)

"கருவொடு பெயரிய காண்பின் நல்இல்." (நெடுநல்: கக௪)

"புதுவ தியன்ற மெழுகுசெய் படமிசைத்
திண்ணிலை மருப்பின் ஆடுதலை யாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய
உரோகிணி." (நெடுநல்: கருக-௬௩)

"மேற்காட்டிய அடிகளிலே மனையமைப்பிற்கு உரிய வட மொழிப் பெயர்க்குறிப்புக்கள் வந்துள்ளன. மேஷராசியில் இருந்து தொடங்கிப் பன்னிரு ராசிகளிலும் சூரியன் செல்

இன்றமை குறிக்கப்பட்டிருக்கின்றது. உரோகிணி நட்சத்திரம் கூறப்பட்டுள்ளது. கிரேக்கர்களிடமிருந்து ராசியைப்பற்றிய அறிவு சுமார் கி. பி. 200 இல் தமிழ்நாட்டில் புகுந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர் இதற்கேற்ப, யவனரும் நக்கீரரால் குறிப்பிடப்படுகின்றனர். எனவே, சுமார் கி. பி. 250 இல் நக்கீரரால் நெடுநல்வாடை இயற்றப்பட்டிருக்கலாம். கபிலர், பாரி, கரிகாலன் முதலியோர்கள் எல்லாம் இந் நக்கீரருக்கு ஒரு நூற்றாண்டிற்கு முற்பட்டவராகலாம். மதுரைக் கணக்காயனார் மகனார் இவராக இருக்கலாம். சங்ககாலப் புலவர் இவரேயாதல் வேண்டும்.''

இனி, நெடுநல்வாடையில் மனையமைப்பிற்குரிய வடமொழிப் பெயர்க்குறிப்புக்கள் வந்துள்ளனவாகக் கூறுதலான், தமிழர்கள் இராசியைப் பற்றிய அறிவை வடவர்களிடமிருந்து பெற்றனர் என்று இயம்பியிருப்பின் ஓரளவேனும் ஒவ்வலாம். ஆயின், "கிரேக்கர்களிடமிருந்து ராசியைப்பற்றிய அறிவு சுமார் கி. பி. 200இல் தமிழ்நாட்டில் புகுந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்'' என்னும் ஐயம் நிறைந்த ஆய்வாளர்தம் கருத்தைக்கொண்டு ஒரு முடிபிற்கு வருதல் உகந்ததா? யவனரிடம் தமிழர் கோள்நிலைப் புலமை எய்தினர் என்னற்கு ஏற்ற சான்றுகள் சாற்றி வலியுறுக்காமல் "வடமொழிக் குறிப்புக்கள் வந்துள்ளன'' என்னும் வேண்டா கூறல் கடம்பூருக்குச் செல்ல வழிகடாயினார்க்கு இடம்பூண்ட மேதி எழில்கடா ஈன்றதென்னு மாற்றை ஒக்கும். இனி, உரோகிணியைக் குறிக்கும் "சகடு'' என்னும் தமிழ்ச்சொல் அகநானூறு 136ஆம் பாவில் வருதல் அறிதல் வேண்டும். யவனர் நெடுநல்வாடையில் குறிப்பிடப்பெறுதலான் கோள்நிலை அறிவு அவரிடமிருந்து தமிழர் கற்றுக் கொண்டனர் என்னும் குறிப்புத் தோன்றப், பிள்ளை அவர்கள் எழுதுகின்றனர். இவர்தம் கருத்துப்படியே கி. பி. 2ஆம் நூற்றாண்டில் தோன்றிய பெரும்பாணாற்றுப் படையில்,

> "யவனர் ஓதிம விளக்கின் உயர்மிசைக் கொண்ட." (௩௧௬-௭)

> "மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
> வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்."
> (முல்லைப் பாட்டு: ௬0-௬௧)

> "யவனர் தந்த வினைமாண் நன்கலம்." (அகம்: ௧௪௯)

என்று யவனர் குறிப்பிடப்பெறுகின்றனர். தமிழர்கள் யவனர் நாட்டிற் செய்த பண்டங்களையே கொண்டனர் என்னும் செய்தியன்றி, அவரிடம் கோள்நூல் புலமைகொண்ட திறத்தைச் சங்கப் பனுவல்கள் சாற்றுவனவல்ல.

இனி, பிள்ளை அவர்கள் கூற்றுப்படியே இராசி பற்றிய அறிவை கி. பி. 200இல் தமிழர்கள் அறிந்தனர் என்றே கொள் வோம்.* ஆயின், அவர் கொள்கைப்படியே கி பி. 150-ல் வாழ்ந்த கபிலர்,

"மைம்மீன் புகையினும் தூமம் தோன்றினும்
தென்றிசை மருங்கின் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறைய." (புறம்: ககஎ)

என்ற புறப்பாவில் கோள்நிலைக் குறிப்புக்கள் இருத்தலை எண் ணுங்கால் கி. பி. 200இல் கோள்நிலைப் புலமையினை யவனரிடம் தமிழர் கற்றுக்கொண்டனர் என்னும் கருத்துப் பொருத்தமற்ற தெனப் புலனாகும். கபிலர் காலத்தவராகிய ஆவூர் மூலங்கிழார்,

"ஆடியல் அழற்குட்டத்து
ஆரிருள் அரையிரவில்
முடப்பனையத்து வேர்முதலாக்
கடைக்குளத்துக் கயங்காயப்
பங்குனியுயர் அழுவத்துத்
தலைநாண்மீன் நிலைதிரிய
நிலைநாண்மீன் துறைபடிய......
ஒருமீன் விழுந்தன்றால் விசும்பினானே." (புறம் உஉக)

எனப புறநானூற்றில் புகன்றிருப்பதைப் பொறுமையாகப் பயின்று பார்த்தால் தமிழர் இராசிகளைப் பற்றியும், கோள்நிலை பற்றியும் கி. பி. 200-க்கு முன்னரே தெரிந்திருந்தனர் என்பது புலனாம். இங்குக் காட்டிய பகுதிகளில் ஆடு, அழற்குட்டம், முடப்பனை, குளம், நாண்மீன், மைம்மீன், வெள்ளி முதலிய சொற்கள் தனித்தமிழ்ச் சொற்கள் என்பது அவர்களுக்கே தெரியும்! கோள்மீன்களும் நாள்மீன்களும் மழை பொழிதற் குரிய மனைகளில் உலாவ, சையமலையில் புயலுருக்க வையையாறு நீர்மல்கி ஓடியதெனப் பரிபாடலில் மதுரையாசிரியர் நல்லந்துவ னார் நவின்றுள்ளார். அறிவியல் அறிஞர்கள் தாம் கண்ட புதுப் பொருட்குத் தம் பெயர் சூட்டுதல் இக்கால மரபு. பரிபாடலில் "பொதியில் முனிவன்" என்றொரு மீனைப் புலவர் புகல்கின்றார்; இதனை அகத்திய மீன் என்று அறிஞர் அழைப்பர். இம்மீன் பற்றிய நிலையைத் தெளிவாக ஆய்ந்தவர் அகத்தியனார் ஆதல் கூடும். பதிற்றுப்பத்து, பட்டினப்பாலை, அகநானூறு, புற நானூறு, மதுரைக்காஞ்சி, பெரும்பாணாற்றுப்படை, நற்றிணை முதலிய சங்கத்துச் சான்றோர் பனுவல்களில் கோள்நிலை பற்றிய குறிப்புக்கள் பொறிக்கப்பெற்றிருத்தலைக் கூர்ந்தெண்ணுங்கால், பண்டைத் தமிழர்க்கும் வானநூற் புலமையில் பங்கு உண்டு

* பக்கம் கஉ௧, 5, 6, 7 ஆம் வரிகள் காண்க.

என்னும் உண்மை உறுதியாகும். எனவே, கி. பி. 200 இல் யவனரிடம் தமிழர் கோள்நிலைப் புலமை கொண்டனர் என்று கூறுதல் நேரிதாகத் தோன்றவில்லை. எனவே, நக்கீரர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டினர் என்றே இயம்பலாம்.

இனி, பத்துப் பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படையைத் திருவாய் மலர்ந்த நக்கீரர் சங்ககால நக்கீரர் அல்லர் என்றும்; அவர் கி. பி. 5ஆம் நூற்றாண்டினர் என்றும் பிள்ளை அவர்கள் சொல்லுதற்கு உரிய காரணங்கள் இவையாம் :—

1. திருமுருகாற்றுப்படை தொல்காப்பியத்திற்குப் பொருந்துமாறில்லை.

2. மாரைக்கிளவி தொல்காப்பியத்திற்குப் பொருந்திச் சங்க இலக்கியங்களுட் பயின்றுவருதல் போலாது திருமுருகாற்றுப்படையில் ஒரோவோரிடத்துப் பொருந்தாப் பயிற்சி காணப்படுதல்.

3. ஒரோவோரிடத்தில் "பெறிஇயர்" என்னும் சொல் எச்சமாயாதல், வியங்கோளாயாதல் வாராமை.

4. 'மதி' இடைச்சொல் ஒரோவோரிடத்தில் படர்க்கையில் வருதல்.

5. தொகைநூல் பாக்களைப் பாடிய நக்கீரர் உலகமும் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் உலகமும் வேறுபடுதல்.

6. புராணச் செய்திகள் திருமுருகாற்றுப்படையிற் காணப்பெறுதல்.

இவர்கள் கூறும் காரணங்களை முதலில் ஏற்றுக்கொள்வோம். இவர்தம் கொள்கைப்படியே கி. பி. 2ஆம் நூற்றாண்டில் எழுந்த சங்கப் பாக்கள் தொல்காப்பியத்திற்குப் பொருந்துகின்றன என்று புகல்வதால், சங்கப் பாக்களுக்கு முற்பட்டே தொல்காப்பியம் யாக்கப்பெற்ற உண்மை உணரலாம். என்றாலும், தம் "தமிழ்ச்சுடர் மணிகள்" என்ற நூலில் தொல்காப்பியர் கி. பி. 5ஆம் நூற்றாண்டினர் என்று கூறுதல் ஏற்றதாகத் தோற்ற

இனி, திருமுருகாற்றுப்படை கி. பி. 5ஆம் நூற்றாண்டில் எழுந்த நூல் என்னற்கு இவர்கள் காட்டும் காரணங்களின் வலிவு மெலிவுகளை ஆராய்வோம்.

**1. திருமுருகாற்றுப்படை தொல்காப்பியத்திற்குப் பொருந்தாமை**

திருமுருகாற்றுப்படை தொல்காப்பியத்திற் கூறப்பெறும் ஆற்றுப்படை இலக்கணத்திற்குப் பொருந்துமாற்றை நச்சினார்க்

இனியர் காட்டியுள்ளார். இவ்வுரையாசிரியர் தாம் கொண்ட மாட்டிலக்கணப்படி சூத்திரங்களைக் கூட்டிக் கொணர்ந்து கூறும் விளக்கம் விழுமியது அன்றெனப் பிள்ளையவர்கள் வெறுக்கின் றனர். இவர்கள் கொள்கைப்படியே தொல்காப்பியர் கூறும் ஆற்றுப்படை இலக்கணத்திற்கு முருகாற்றுப்படை பொருந்தா தென்றே கொள்வோம். அதற்காக அதனைச் சங்கப்பனுவல் அன்றெனச் சாற்றுதல் சரிதானா? சங்க இலக்கியங்கள் எல்லாம் தொல்காப்பியத்திற்கு முழுமையும் ஒத்துள்ளனவா? தொல் காப்பியர் கூத்தர், பாணர், பொருநர், விறலியாற்றுப்படைகட்கே இலக்கணம் கூறினர். புலவராற்றுப்படைக்கு இலக்கணம் தொல்காப்பியத்தில் இல்லை ஆயின், பரணர் பாடிய புறம் 141ஆம் பாடலும் பொய்கையார் பாடிய புறம் 48, 49ஆம் பாக்களும் புலவராற்றுப் படைகளாகத் திகழ்கின்றன. எனவே, தொல் காப்பியர் கூறியவாறுதான் ஆற்றுப்படை அமைவுறல் வேண்டும் என்பது ஆகாது; தொல்காப்பிய விதிவகையானும் அமையலாம்; அவ்விதியின் நீங்கிப் புதுநெறியிற் போந்து இலக்கியம் செய்ய வும் செந்நாப் புலவர்க்கு உரிமை உண்டு. 'சசரக்கிளவியும் ஞகரக் கிளவியும் யகரக்கிளவியும் மொழிக்கு முதலில் வாரா' என்பர் தொல்காப்பியர்; சங்கப் பாக்களில் மொழி முதலாக வருமிடங் கள் பல. வியங்கோள் முன்னிலையில் கூடாதென்னும் தொல் காப்பியம்; சங்கப்பாக்களில் முன்னிலையில் வருமிடங்கள் பல. அன்விகுதி ஆண்பாற் படர்க்கைக்கே உரியதென்பர் தொல்காப் பியர். சங்கப் பாக்களில், "உதவியோ உடையன்" (அகம் கஅகூ) "கொண்டு வந்தனன்" (புறம் கபிலர்), "பாடுவன்" (புறம் ருகூ) எனத் தன்மையில் வருதல் உண்டு. இங்ஙனம் தொல்காப்பிய மரபுகள் பல சங்க காலத்தில் மாறியுள்ளன. தொல்காப்பியர் காலத்திற்குப்பின் எத்துணையோ புது மரபுகள் பிறந்துள்ளன. அவற்றிற்கெல்லாம் அவரே இடமளித்துப் போந்தனர். இலக்க ணம் பகவரிய பரல்போல்வதன்று; அது விரிந்துகொண்டே செல்லும்; இலக்கணத்தின் விரிவு இலக்கியத்தின் மிகுதியைக் காட்டும்.

(தொடரும்)

# தொடர் மொழி

[வித்துவான். திரு. வே. சிவசுப்பிரமணியன்]
(விரிவுரையாளர், தமிழ்க் கல்லூரி, மயிலம்)

அறிவுடை ஒருவன் பொருளை உணர்தற்குச் சொல்லைக் கருவியாகப் பயன்படுத்துகிறான். எழுத்துக்கள் தம்மை உணர்த்தாமல் பொருளை உணர்த்தித் தனித்து வந்தாலும் இரண்டு மூன்று எனப் பொருளை உணர்த்தும் வகையில் கூடிவந்தாலும் அவை மொழியாகும்.

எழுத்து தனித்து வந்ததால் அது மொழியல்ல என்றாகாது. கூடி வந்ததால் அது மொழி என்றும் ஆகாது. எங்கும் பொருளை உணர்த்தினால் அது மொழி ஆகும். பொருள் உணர்த்தாதது மொழி ஆகாது. இங்ஙனம் வரும் மொழிகளைத் தொல்காப்பியர் மூவகையாகப் பிரிப்பர்.

"ஓரெழுத் தொருமொழி ஈரெழுத்தொரு மொழி
இரண்டிறந் திசைக்கும் தொடர்மொழி உளப்பட
மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே."

(தொல். மொழி மரபு - கஉ)

என்பது தொல்காப்பியர் கொண்ட முறையாகும். ஒன்று இரண்டு, பல என்னும் முறைபற்றி இங்கே மொழிகள் மூன்றாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு இரண்டு, பல என்று கூறும் முறையைத் தொல்காப்பியர்பால் பிற இடங்களில் கூடக் காணலாம். உம்மைத்தொகைச் சூத்திரத்தின் கண்ணும் "இரு பெயர் பல்பெயர்" என்று இருவகையாகப் பிரித்தார்.

இனி மொழிகளை மூவகையாகப் பாகுபாடு செய்து காட்டிய தொல்காப்பியச் சூத்திரத்துக்கு உரை செய்த பெருமக்கள் இருவர். இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் ஆவர். இவ்விருவருள் நச்சினார்க்கினியர் செய்யுளியற் கருத்தை உட்கொண்டு ஒற்றும், ஆய்தமும், குற்றியலுகரமும் எழுத்து எண்ணப்படா என்று கொண்டு கணக்கிட்டு மணி, வரகு, கொற்றன் என்பனவற்றை ஈரெழுத்தொருமொழி என்று கூறுவர். இவர் ஒற்றும் குற்றியலுகரமும் எழுத்து என்று கொண்டு, மணி ஈரெழுத்தொருமொழி என்றும், வரகு மூவெழுத்தால் ஆகிய தொடர் மொழி என்றும், கொற்றன் நான்கெழுத்தால் ஆகிய தொடர் மொழி என்றும் உதாரணம் கூறுவார். பால் மாறுகொளக் கூறல் என்னும் குற்றம் தங்கும் என்று காட்டி மறுப்பர். அவர் கூற்று பொருத்தம் இல்லாமையை முதலில் காண்போம்.

ஒற்று, குற்றியலுகரம் முதலியவற்றை எழுத்தாகக் கொள்ளாது தள்ளி ஈரெழுத்தொருமொழிக்கும், தொடர்மொழிக்கும் உதாரணம் காட்டிய நச்சினார்க்கினியரே,

"அவற்றுள்,
மெல்லெழுத் தியற்கை உறழினும் வரையார்
சொல்லிய தொடர்மொழி இறுதி யான."
(தொல். தொகைமரபு-௩)

என்னும் சூத்திர வுரையில், "வருமொழி முற்கூறியவதனால் ஓரெழுத்தொருமொழி ஈரெழுத்தொருமொழிகளுள்ளும் சில உறழ்ச்சி பெற்று முடிதல் கொள்க. பூஞெரி, பூஞ்ஞெரி, நுனி, முரி, காய்ஞெரி காய்ஞ்ஞெரி நுனி முரி என வரும்" என்று எழுதுவர். இங்கு, பூ என்பது ஓரெழுத்தொருமொழி என்றும், காய் என்பது ஈரெழுத்தொருமொழி என்றும் காட்டப்படுகிறது. இது நச்சினார்க்கினியர்க்கே மாறு கொளக் கூறல் என்னும் குற்றத்தை ஏற்றுவதாகிறது. அன்றியும்,

"தொடரல் இறுதி தம்முன் தாம்வரின்
லகரம் றகரவொற்று ஆகலும் உரித்தே."

என்னும் உயிர் மயங்கியல் பன்னிரண்டாம் சூத்திரத்துத் 'தொடரல் இறுதி' என்பது பல சில என்பவற்றையே குறிக்கும் என்பர். தொடர்மொழி அல்லாதவற்றின் அகர இறுதி என்பது அதன் பொருள் ஆகும். தொடர்மொழி அல்லாதன ஓரெழுத்தொருமொழியும், ஈரெழுத்தொருமொழியும் ஆம். ஓரெழுத்தொருமொழியுள் அகர ஈறாய் வருவது சுட்டு அன்றி வேறில்லை. சுட்டின் முன்னர் நாற்கணமும் புணருமாறு முன்னர்க் கூறிவிட்டபடியால் அது இச் சூத்திரத்துக் கொள்ளப்படவில்லை. எனவே ஈரெழுத்தொருமொழியுள் அகர ஈற்றைக் குறிப்பதாயிற்று 'தொடரல் இறுதி' என்பது; அது பல, சில என்பதாம். நச்சினார்க்கினியர் கொள்கைப்படி கொள்ளின் தொடரல் இறுதி என்பது பல, சில என்பவற்றையே வரைந்து சுட்டாது. பல்ல, சில்ல, உள்ள, இல்ல என்றவற்றுள்ளும் மெய்யைத் தள்ளிக் கணக்கிட்டவழி அவையும் ஈரெழுத்தொருமொழியுள் அகர வீறு ஆகலாம் அன்றோ?

அன்றியும் குற்றியலுகரப் புணரியலில் ஈரெழுத்தொருமொழி என்று கூறிய பல இடங்களிலும் நெடிற்றொடர்க் குற்றியலுகரத்தையே உதாரணம் காட்டலும் நச்சினார்க்கினியர் கருத்துக்குப் பொருந்தாததாம். 'நாடு' என்னும் நெடிற்றொடர்க் குற்றியலுகரம் அவர் கருத்துப்படி குற்றியலுகரம் தள்ளிக்

கணக்கிடப்பட்டு ஓரெழுத்தொரு மொழியாகுமே அன்றி ஈரெழுத்தொரு மொழியாதல் எவ்வாறு?

எனவே இத்தகைய பல காரணங்களாலும் மாறுகொளக் கூறலாய் உரை செய்தவர் நச்சினார்க்கினியரே என்பது தேற்ற மாதலால் இப்பகுதிக்கு நேரிய பொருள் கொண்ட இளம்பூரணர் உரையை ஒட்டித் தொல்காப்பியரது தொடர்மொழிக் கருத்தினை ஆராய்வோம். ஈரெழுத் தொருமொழி, தொடர்மொழி என்னும் இரண்டு பாகுபாடுகளை அமைத்துக்கொண்ட தொல்காப்பியர் தாம் கொண்ட அப் பாகுபாட்டைக் குற்றியலுகரப் புணரியலிற் பல இடங்களிலும் கையாளுவர். நெடிற்றொடர்க் குற்றிய லுகரத்தை ஈரெழுத்தொருமொழி என்றும், மற்றவற்றை உயிர்த் தொடர், இடைத்தொடர், மென்றொடர், வன்றொடர், ஆய்தத் தொடர் என்றும் ஆளுதலை அவ்வியலில் பரக்கக் காணலாம்.

ஈரெழுத் தொருமொழி, தொடர்மொழி என்று வகை பிரித்த தொல்காப்பியர் ஈரெழுத் தொருமொழிகளைத் தொடர் மொழி என்று கொண்டாரா? தொடரா மொழி என்று கொண் டாரா? இரண்டு எழுத்தும் தம்முள் தொடராவிடில் மொழியா மாறு எங்ஙனம் என்னும் ஐயம் தோன்றுகிறது.

மொழி வகையில் அவை மூன்றாய் இருப்பினும் தனித்து வருதல், தொடர்ந்து வருதல் என்று பண்பு நிலையில் அவை இரண்டாய் அடங்கும் என்று கண்டவர் நன்னூல் ஆசிரியர். அதனால் அவர் தனித்து வருதல், தொடர்ந்து வருதல் என்னும் பண்பு பற்றியே பாகுபாடு அமைத்தார். ஈரெழுத் தொருமொழி, தொடர்மொழி என்று பிரித்ததனாலேயே தொல் காப்பியர் ஈரெழுத் தொருமொழி தொடர்மொழி அல்ல என்னும் கருத்துடையவர் என்று கூறிவிட முடியாது. ஏன் எனில் ஈரெழுத் தொருமொழி தொடர்மொழி அல்லவாயின், அவ் இரண்டெழுத்துக்களும் தம்முள் ஒன்றை ஒன்று தொட ராது பிரிந்திசைக்குமாயின் அவை மொழியாய் ஒரு பொருளைச் சுட்டுமாறு எவ்வாறு? எழுத்துக்கள் தம்முள் தொடர்ந்து வரும் மொழிகளையே ஈரெழுத்தொருமொழி என்றும், இரண் டிறந்து இசைக்கும் தொடர்மொழி என்றும் இருவகையாகப் பிரித்தார். அதற்கு அவர் தொடர்மொழி என வாளா கூறாது இரண்டு இறந்து இசைக்கும் என அடைமொழி கொடுத்துக் கூறியதே சான்றாவது காண்க. இரண்டு எழுத்துக்களுக்கு மேற்பட்டு வருவதுதான் தொடர்மொழி என்ற கருத்து அவருக்கு இருக்குமாயின் தொடர்மொழி என்று வாளா கூறி னும் போதும். அவ்வாறு இன்றிச் சில்வகை எழுத்தில் பல்வகைப்

பொருளைச் செவ்வன் ஆடியிற் செறித்து இனிது விளக்கும் சூத்திர யாப்புள் வேண்டா கூறலாய் இரண்டு இறந்து இசைக்கும் என்று கூறியிரார் அன்றே? ஆதலின் இரண்டாய் இசைப்பதும் தொடர்மொழி, இரண்டு இறந்து இசைப்பதும் தொடர்மொழி என்பது அவர் கருத்தாகும் என்பது தேற்றம். இரண்டாய் இசைப்பதை 'ஈரெழுத்தொருமொழி' என்னும் பெயரால் குறிப் பிட்டார் ஆதலின் அதற்கு மேற்பட்டதைத் 'தொடர்மொழி' என்னும் பெயரால் குறிப்பிட்டார். தொடர்மொழி என்னும் பெயர், காரணம் கருதியவழி ஈரெழுத் தொருமொழியையும் குறிக்கும் ஆயினும் தொல்காப்பியர் அதைக் காரண விடுகுறிப் பெயராக இரண்டெழுத்துக்களுக்கு மேற்பட்ட எழுத்துக்களான் ஆகிய மொழிகளைக் குறிக்க வழங்கினர் என்று கொள்க.

"தொடர் அல் இறுதி" என்னும் சூத்திரத்துத் தொடர் என்பது மேற்காட்டிய காரண விடுகுறிப் பெயராகிய தொடர் மொழியைக் காட்டி நிற்றலின் 'தொடர்மொழி அல்லாத ஈரெழுத் தொருமொழியாகிய பல, சில என்னும் அகர ஈற்றுச் சொல்' என்று இளம்பூரணர் உரை கண்டார். 'தொடர்' என்பது தொடரும் தன்மையைக் குறிப்பிடுவதாகப் பொருள் செய்யப் படாமல் 'தொடர் மொழி' என்று உரை செய்யப்பட்டிருப்பதை நோக்குக.

ஈரெழுத்தொருமொழிகளைத் தொடர்தல் தன்மை உடை யது என்று தொல்காப்பியர் கொண்ட வேறு இடங்களும் சில காண்போம்.

"நெட்டெழுத் திம்பரும் தொடர்மொழி ஈற்றும்
குற்றிய லுகரம் வல்லாறு ஊர்ந்தே." (தொல். மொழி மரபு-கூ)

என்பது குற்றியலுகர இலக்கணம் கூறும் நூற்பா. குற்றிய லுகரம் (உ) வல்லெழுத்துக்கள் ஆறினையும் ஊர்ந்து (கு, சு, டு, து, பு, று) நெட்டெழுத்தின் பின்னும், ஐவகைத் தொடர் மொழிகளின் இறுதியிலும் வரும், என்பது இதன் பொருள். நெட்டெழுத்தின் பின் வருவது 'நாடு' என்பது. நா என்பது நெட்டெழுத்து. அதன்பின் 'டு' என்னும் குற்றியலுகரம் வருகிறது. தொடர்மொழி இறுதியில் வருவது 'வரகு' என்பது. 'வர' என்பது தொடர்மொழி. அத் தொடர்மொழியின் இறுதி யில் 'கு' என்னும் குற்றியலுகரம் வருகிறது. இவ்வாறு விளக்கம் காண்புழி 'வர' என்னும் ஈரெழுத்தொருமொழியைத் தொடர் மொழி என்றே கொள்ளவேண்டியதாகிறது. ஈண்டுத் தொடர் மொழி என்பது தொடரும் தன்மையுடைய மொழி என்ற பொருளில் நிற்கிறது.

"குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத் தியல."
(தொல். மொழி மரபு - கஎ)

"தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத்து இயல—தொடர் மொழிக்கீழ் நின்ற ரகார ழகாரங்கள் எல்லாம் நெடிற்கீழ் நின்ற ரகார ழகாரங்களின் இயல்பை உடைய" என்பது இளம்பூரணர் உரை. இதற்கு எடுத்துக்காட்டு அகர், புகர், அகழ், புகழ் என்பது. இவற்றுள் தொடர்மொழி அக, புக என்பவை. அவற்றின் கீழ் ரகார, ழகாரம் வருகிறது. இவ்வாறு வரும் பல விடங்களிலும் தொல்காப்பியர் கருத்து அறிந்து இளம்பூரணர் உரை செய்தல் அறியத்தக்கது.

ஈரெழுத் தொருமொழிகளும் தம்முள் தொடர்ந்தனவே, அம் முறையில் அவையும் தொடர்மொழிகளே என்று கொண்ட தொல்காப்பியர் அவ்வாறு அவற்றைத் தொடர்மொழிக்கண் அடக்கி மொழிகளை இருவகையாகப் பிரிக்காமல் மூன்றாகப் பிரித்தார். தொல்காப்பியர் பெருக விரித்துக் கூறியனவற்றை நன்னூலார் அவற்றிடையே காணும் பொதுப் பண்புகளை ஆய்ந்து மேலும் சுருக்கி வகைப்படுத்துதலைப் பல விடங்களிலும் காணலாம்.

தொல்காப்பியர் புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என்று பிரித்துச் செய்தனவற்றை நன்னூலார் உயிரீற்றுப் புணரியல், மெய்யீற்றுப் புணரியல், உருபு புணரியல் என்று வகைப்படுத்திய தும், அவற்றுள்ளும் பல இலக்கணங்களைத் தொகுத்துச் சுருக் கியதும் காண்க. "இரு பெயர் பல் பெயர் அளவின் பெயரே" என்னும் எச்சவியல் சூத்திரத்துத் தொல்காப்பியர் பலவாறு பிரித்த உம்மைத் தொகையைப் பொதுமை கண்டு சுருக்கி,

"எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனும்நான்கு அளவையுள் உம்இலது அத்தொகை."

என்று நன்னூலார் கூறியதும் காண்க.

இம்முறை பற்றியே நன்னூலார்,

"எழுத்தே தனித்தும் தொடர்ந்தும்."

என்னும் பதவியல் முதற் சூத்திரத்தே தனித்து வருதலும், தொடர்ந்து வருதலும் ஆகிய பண்பு பற்றி எழுத்தாலும் மொழியை இருவகையாகப் பிரித்தார். இதனுள் மறைந்து கிடக்கும் பல பொருள்களையும் விரித்துக்காட்டித் தொல்காப் பியரது கருத்தை விளக்கிய பெருமை நன்னூல் உரை ஆசிரியர் களுடையதாகும்.

ஈரெழுத்தொரு மொழிகளையும் தொடரும் மொழிகள் என்று கருதிய தொல்காப்பியர் அவற்றைத் தொடர்மொழிக்கண் அடக்கி மொழிகளை இருவகையாகப் பிரிக்காத தன்மையைச் சுட்டுகிறது நன்னூற் பதவியல் முதற் சூத்திரத்துள் உள்ள "தொடர்ந்தும்" என்னும் பகுதி ஆதலின் "இச் சூத்திரத்துள் தொடர்ந்தும் என்பது பிறர் நூல் குற்றம் காட்டல் என்னும் மதம்" என்று உரை யெழுதிப் போந்தனர் நன்னூல் உரையாசிரியர்கள். 'குற்றம் காட்டல்' என்றே ஒழியாது "குற்றங் காட்டல் என்னும் மதம்" என்று எழுதியுள்ளமையும் கருதுக.

இவற்றால் தொல்காப்பியரது தொடர்மொழி பற்றிய கருத்தும், தொல்காப்பியர் கருத்தை அறிந்து எழுதிய நன்னூல் உரையாசிரியர்கள் உரை முன்னொடு பின் மலையாமையும் விளக்க மாதல் காண்க.

---

# பொருள் தலைப்புக்கள்

அண்மையில் மேலை நாடுகளுக்குச் சென்று திரும்பிய பத்மஸ்ரீ டாக்டர், எஸ். ஆர். அரங்கநாதன், எம். ஏ., டி. லிட். அவர்கள் அக்டோபர்த் திங்கள் பதினைந்தாம் நாளன்று மாலை 6-30 மணிக்கு மறைமலையடிகள் நூல்நிலையத்தில் "தமிழில் பொருள் தலைப்புக்களை எவ்வாறு பெருக்குவது" என்ற பொருள்பற்றிச் சொற்பொழிவாற்றினர். கழக ஆட்சியாளர், திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் வரவேற்புரையுடன் சொற்பொழிவு தொடங்கியது.

"நூல்களை வகைப்படுத்தும்போது சரியான முறையில் வகைப்படுத்தி அதற்குரிய பொருட் டலைப்பின் கீழ் அவற்றைக் கொணரல் வேண்டும். நூலகத்தில் படிக்க வருவோரும் தங்களுக்குத் தேவையான கருத்தின் பொருட் டலைப்பைச் சரியாகக் கூறவேண்டும் என்று கூறினார். மேலும் "புதிய புதிய துறைகளில் தமிழ் மொழியில் நூல்கள் இயற்றப்படுமேயானால் பொருட் டலைப்புக்கள் பெருகும்" என்று குறிப்பிட்டார்.

அமெரிக்காவினின்று திரும்பிவரும் வழியில் ஜெர்மனிக்கும் போலந்திற்கும் ரஷ்யாவிற்கும் சென்றதைக் குறிப்பிட்டார். அந்நாட்டு நூலகத் துறையில் பணிபுரிவோர் இவர்தம் சொற்பொழிவுகளுக்குப் பெருந் திரளாகக் கூடிவந்து பயன்பெற்றனராம். சென்ற விடங்களிலெல்லாம் நூலகத்துறை அறிஞர் என்ற முறையில் இவர்க்குப் பெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி சிலம்பு ௩௪, பரல் ௨, ௮௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

திரிசியன்: அப்படியும் சொல்லுவையோ? ஆயின் கேள். நீ சூள் உரைத்தது உன் தலைக்கே வந்து முடிந்தது. இந்த நாட்டை மாசுபடுத்தியவன் நீயேதான்.

ஒதிபன்: உனக்குச் சொல்லவும் துணிவு பிறந்ததா? வெட்க மற்றவனே! இதன் பயனைப்பெறுமல் மீண்டுவிடுவாய் என்று நினைக்கிருயா?

திரிசியன்: நான் தப்பினேன்; உண்மை யென்பக்கம் இருக்கிறது.

ஒதிபன்: யாருடைய வேலை இது? இதுதான் வருபொருள் உரைத்தலா!

திரிசியன்: நீ சொல்லிக்கொடுத்தாய்; நீதான் என் விருப்பத்திற்கு மாருகச் சொல்லவேண்டுமென்று விரும்பினுய்.

ஒதிபன்: மறுமுறையும் சொல்; குற்றமில்லாதிருக்கட்டும்.

திரிசியன்: நான் சொல்லியது விளக்கமாக இல்லையா? ஏன் என்னை மேலும் சொல்லச் சொல்கிருய்?

ஒதிபன்: ஐயத்திற்கிடமின்றி அறிய விரும்புகிறேன். மறுமுறையும் சொல்.

திரிசியன்: கொன்றவன் யாரென்று அறிய விரும்பும் நீயே கொன்றவன்.

ஒதிபன்: இரண்டாம்முறையும் சொல்; பின் வருந்தாதே!

திரிசியன்: உன் சினத்தைத் தூண்ட இன்னும் சொல்ல வேண்டுமோ?

ஒதிபன்: ஆம்; மேலும் சொல். உனக்குத் தெரிந்தவை யெல்லாவற்றையும் சொல்.

திரிசியன்: உனக்குத் தெரியாதன எனக்குத் தெரியும். நீ அன்புடன் வாழும் இல்லக்கிழத்தி உனக்கேற்றவளல்லள். அவளுடன் கூடியிருப்பது பழியும் பாவமும் ஆகும்.

ஓதிபன்: இவ்வாறு பழிச்சொற்களைச் சொல்லியும் தண்டனை யின்றிச் செல்லவும் கூடுமா?

திரிசியன்: உண்மை என்பதற்குக் காப்பாற்றும் சக்தியிருக்கு மாயின், இவற்றைச் சொல்கிறேன்.

ஓதிபன்: உண்மைக்கு அச்சக்தியுண்டு. ஆனால், வெட்கமற்ற வனே! ஏ மூளை கெட்டவனே! கண்ணற்றவனே! அறி வற்ற இழிஞனே! உனக்கல்ல; உனக்கல்ல.

திரிசியன்: உனக்காக இரக்கப்படுகிறேன். இவ்வாறான வசை மொழிகளைக் கூறாதே! இவ்வாறே ஒருநாள் உன்னையும் மக்கள் வாய் தூற்றும்.

ஓதிபன்: பகலென்று அறியாமல் குருட்டுத்தன்மையால் இருள் சூழ்ந்த உன்னால் எனக்குத் தீமை செய்ய இயலாது. கண் ணிருக்கும் பிறராலும் தீங்கு செய்ய இயலாது.

திரிசியன்: உன்னை இழி நிலைக்குக் கொண்டு வரவேண்டு மென்பது என் கருத்தல்ல. ஆயின் அது தெய்வத்தின் கையிலிருக்கிறது. அது செய்தே தீரும்.

ஓதிபன்: (கிரியன், கோயிலுக்கனுப்பிச் செய்தி தெரிந்துவந்ததை நினைவு கூர்ந்து) கிரியன்; அவனுடைய சூழ்ச்சியாகத்தா னிருக்கும், உனதாக இல்லையானால்!

திரிசியன்: அவனதும் அல்ல; நீ உனக்குப் பகைவன்.

ஓதிபன்: (ஏதோ தனக்குள் நினைத்தவனாய்) ஆ, பொருளும், அர சும், அறிவும், வாழ்க்கை ஓட்டத்தில், பொறாமைக்கு ஆட்படவேண்டுமோ? என்னுடன் இத்தனை காலமாக நட்புடன் இருந்த கிரியன், என் நம்பிக்கைக்கு ஏற்ற நண்பன், என்னை மறைவிலிருந்து குத்த வேண்டுமோ? இந்நகர் எனக்களித்த உரிமையினின்றும் கழிக்கப் பாடுபட வேண்டுமோ? யான் கேளாமலேயே எனக்கு இவ்வரசை அளித்தனர். இந்த எளியன் வருவது உரைப்பதாகப் பேர் சொல்லி இப்போது இவனை எனக்கு எதிராக அனுப்பி யுள்ளான். (திரிசியனைப் பார்த்து) இப்படி வருவதுரைப்ப தற்குக் கூலி என்னவோ? நம் மக்கள் நன்கு வாழ்வதற்கு நீ சொல்லும் உபாயந்தான் என்ன? பாமர மக்களுக்குப் புரியும்படி சொல்.

கோரஸ்: ஐயா, நீங்கள் இருவரும் கோபத்தால் பேசிவிட் டீர்கள்! இது நல்லதல்ல; தெய்வத்தின் கட்டளையை

எவ்வாறு நிறைவேற்றுவது என்பதில் நம் கருத்தைச் செலுத்தவேண்டுவதுதான் இப்போது செய்யவேண்டியது.

திரிசியன் : அரசே! நாமெல்லோரும் நீதியின்முன் சமமானவர்களே! அதை நான் உரிமையாகக் கேட்கிறேன். நான் உன் ஏவலாளல்லன். லோகியனின் அடிமை. கிரியன் எனக்கு இது செய்வான் என்று ஏதும் செய்ய நான் கடமைப்பட்டவனும் அல்லன். என் குருட்டுத்தனம் உனக்குச் சிரிப்பை விளைவித்து நகையாடச் செய்து விட்டது. உனக்குக் கண்ணிருக்கிறதா? உனக்கு நேர்ந்துள்ள தீமையை அறிய முடிகிறதா? உன் தந்தை தாய் யாவர்? உனக்குச் சொல்லுகிறேன் கேள். நீ பாபம் செய்துவிட்டாய். படுகுழியில் கிடக்கிறாய். உன்னைப் பழிவாங்க இரு பக்கமும் கூர்மையான சக்தி வந்துள்ளது. உன் தாய் தந்தையர் சாபம் இந்த நாட்டினின்றும் உன்னை ஓட்டிவிடும். நன்றாய் அனைத்தையும் பார்க்கும் நின் கண்கள் இருண்டுவிடும். உன் திருமணத்தின்போது வரவேற்ற இன்னிசை முதலியன மாய்ந்துபோகும். உன்னை இந்த நாட்டின் தந்தையென்போர் உன்னை யார் என்றறிந்து இழிவு படுத்துவர். கிரியனை எவ்வளவு வேண்டுமாயினும் எள்ளி நகையாடு; என்னையும் இழிவு படுத்து. ஆயின் மனிதனுக்கு நேர்ந்திராத இழிநிலை நினக்குக் கிட்டுவது திண்ணம்.

ஒதிபன் : நீ சொல்வதையெல்லாம் பொறுத்துக்கொள்ளவேண்டுமா? என்முன் நில்லாதே! போ! செல், ஓடு; எங்கிருந்து வந்தாயோ அங்கேயே செல்! போ.

திரிசியன் : செல்கிறேன்; உன் கட்டளையால் இங்கு வந்தேன்; உன் விருப்பத்தாலன்று.

ஒதிபன் : பித்தனின் சொல்லம்புகளைத் தாங்கவேண்டுமென்று தெரிந்திருந்தால் அதனைத் தடுத்திருப்பேன்.

உனகது யான பிததனகபபடலாம. உன தாய தந்தையர் அவ்வாறு நினைத்தார்களில்லை.

ஒதிபன் : என்ன சொல்கிறாய்? என் பெற்றோர்களா? என்னை ஈன்றவர் யார்?

திரிசியன் : இன்று நீ பிறந்த வரலாற்றினை அறிவாய்! இன்றே உனக்கு அழிவு காலமும் கிட்டும்.

ஒதிபன் : அற்பனே! இன்னும் இரண்டுபட மொழிய வேண்டுமோ!

திரிசியன்: இருபொருள் படுஞ்சொல்லின் சிக்கறுக்க வல்லனல்லவா நீ!

ஒதிபன்: என்னைக் குத்திக் காட்டாதே.

திரிசியன்: நான் செல்கிறேன். பையா, உன் கையைக் கொடு. என்னை வீட்டுக்கு அழைத்துச் செல்.

ஒதிபன்: உன்னை ஒன்றும் செய்யமாட்டோம். அவன் உன்னை அழைத்துச் செல்லட்டும்.

திரிசியன்: நான் சொல்லவேண்டியதைச் சொல்லிய பிறகு செல்கிறேன். எனக்குத் தீங்கு செய்வதைப் பற்றி அஞ்சாமல் உன் முகத்துக்கு எதிரே சொல்கிறேன். இலேயனைக் கொன்றவன் எவன் என்று அறிந்துகொள்ளக் கூச்சலும் குழப்பமும் செய்தாய். இலேயனைக் கொன்றவன் இங்கேதான் இருக்கிறான். வேற்றவன் போலிருக்கிறான். நம்மிடையேதான் இருக்கிறான். தீப நாட்டிற் பிறந்தவன்தான். கண்ணோடு வந்தான், குருடனாகப் போகிறான். இப்போது செல்வன்; பின்னர் பிச்சைக்காரன். கையில் தடி! வழி தெரியாது தவித்து வேற்று நாட்டிற்குச் செல்கிறான். பிறந்தவர்களுக்கு உடன்பிறந்தான், தந்தையுமானான்; தாய்க்கு மகன், அத்தாய்க்குக் கணவனுமானான்; தந்தையைக் கொன்றான். அத் தந்தையின் இடத்தைப் பற்றிக் கொண்டான். இவற்றை எண்ணிப்பார். என்னைப் பிழைபடச் சொன்னவன் என்று துணிந்தாயாயின் பின் என்னைக் குருடன் என்று சொல்.

கோரஸ்: தெலுவியத்து வருவதொரு தெய்வமொழி பழிப்பதுகேள்
கொலுவதற்குத் துணிந்தவனார் கொடுமையினர் ஓடுகவே.
பலவிதமாய் வருத்துமிந்தப் பலநோய்க்குங் காரணன்யார்
உலவுமவன் எங்கிருப்பன் உணர்ந்தவனை ஓட்டுவமே.
மறைபொருளை அறியுமவர் வான்சியனும் அபலனுமே
அறையுமிந்த அழிசொல்லுக் கரசனிவன் ஓதிபனுமோ
குறையிலிபல் குணத்திவனைக் குறைகூறும் வழியுளதோ
நிறையறிவின் திறனுடைய தெய்வங்காள் வழிசெய்வீர்.

[கிரியன் வருகிறான்]

கிரியன்: நாட்டு மக்களே! அரசன் ஒதிபன் என்னைக் குறைகூறினன் என்கின்றனர். சொல்லாலோ, அன்றிச் செயலாலோ அவனுக்குத் தீங்கு செய்திலேன். அவ்வாறு செய்திருப்பேனாயின், இத் தீ நாளில் இறந்தொழிவேன். இப்பழிச் சொல்லுக்கு யான் ஆளாவேனோ!

கோரஸ் : அவன் சொல்லிய சொற்கள், வெகுண்டெழுந்தபோது வெளிவந்தவை. நன்கு தேர்ந்து சொல்லப்பெற்றன அல்ல.

கிரியன் : வருவதுரைத்தவன் யான் சொல்லிக் கொடுத்ததன் மேல் வெளியிட்டவைகள் என்ருனு?

கோரஸ் : அவ்வாறுதான் சொன்னன். எக்கருத்துடன் சொன்னன் என்பது எனக்குத் தெரியாது.

கிரியன் : என்ன தைரியம்! என்னை எதிர்த்தா இவ்வளவும் சொன்னன்?

கோரஸ் : என் தலைவன் சொன்னதை யான் ஆராய்வதில்லை. இதோ வருகிருன்.

[ஒதிபன் வருகிருன்]

ஒதிபன் : நல்லது ; இங்கு வந்ததேன்? என் வீட்டின் முன் நின்று பேசவும் முகமுண்டா? என் உயிருக்கு உலை வைக்கச் சூழ்ச்சி செய்பவனே! என் முடியினைத் திருடப் பார்ப்பவனே! என்னைக் கோழையென்று நினைத்தாயா? அல்லது முட்டாள் என்று நினைத்தாயா? எனக்கு எதிராக நடக்கும் சூழ்ச்சியினைப் பார்க்க எனக்கிரு கண்ணில்லையா? பணமும் நட்புமின்றி அரசு பறிக்கச் செய்கிருயே! மக்களும் மாண்பொருளும் உண்டாயின் மன்னனுகலாமே!

கிரியன் : யான் சொல்வதைக் கேள். அறிந்தபின் தீர்ப்புக் கூறு.

ஒதிபன் : உன் பேச்சு நயம் என் மனத்தை மாற்றிவிடும் என்று நான் நினைக்கவில்லை. நீ என் கடும் பகைவன் என்பது மட்டும் அறிவேன்.

கிரியன் : முதலில் நான் சொல்லிவிடுகிறேன்.

ஒதிபன் : நீ எது வேண்டுமாயினும் சொல்; குற்ற மற்றவன் என்று மட்டும் சொல்லாதே!

கிரியன் : இவ்வாறு முரட்டுப் பிடிவாதமாக இருப்பது உனக்கு நல்லதாகுமா?

ஒதிபன் : உன் வீட்டுக்கு எதிரே சூழ்ச்சி செய்து தப்பித்துக் கொள்ளக் கருதுகிருயா?

கிரியன் : அவ்வாறு நம்பினுல் மூடனுவேன். இருக்கட்டும்; நான் உனக்கு என்ன தீங்கு செய்தேன் என்று மட்டும் சொல்.

ஒதிபன் : நீதானே அக்குருட்டுப் புலவனை வரவழைக்கச் செய்தது?

கிரியன் : ஆம் ; மறுமுறையும் அழைப்பிப்பேன்.

ஒதிபன் : ஆயின் சொல்......இலேயன் இறந்து எவ்வளவு காலமாயிற்று?

கிரியன் : இலேயன் !.......என்ன சொல்கிறாய் ?

ஒதிபன் : இலேயன் மறைந்து எவ்வளவு காலமாயிற்று ?

கிரியன் : எவ்வளவோ காலமாயிற்று, நினைவு இல்லை.

ஒதிபன் : அக்குருட்டுப் புலவன் அன்றும் இவ்வாறுதான் இருந்தானா ?

கிரியன் : ஆம்; இப்போது போலவே அப்போதும் மக்கள் மதித்து வந்தனர்.

ஒதிபன் : அப்போது என் பெயரைச் சொல்லியதுண்டோ ?

கிரியன் : உன் பெயரைச் சொல்லிக் கேட்டதில்லை.

ஒதிபன் : இலேயன் இறந்தது பற்றி ஆய்ந்து பார்த்ததில்லையா ?

கிரியன் : ஆய்ந்து பார்த்ததுண்டு. ஆயின் புலன் தரவில்லை.

ஒதிபன் : அப்புலவன் ஏன் அன்று வாளாவிருந்தான்?

கிரியன் : எனக்குத் தெரியாதவற்றை எவ்வாறு சொல்ல இயலும்?

ஒதிபன் : ஒன்று மட்டும் நீ அறிவாய். அதைச் சொல்வது உத்தமம் என்று நினைக்கிறேன்.

கிரியன் : எனக்குத் தெரிந்ததை உண்மையில் சொல், ஏற்றுக் றுக்கொள்வேன். எனக்குத் தெரிந்தது என்னவோ ?

ஒதிபன் : உன் உதவியின்றி அவன் இலேயனைக் கொன்றவன் நான் என்று சொல்லியிரான்.

கிரியன் : அவ்வாறாயின் என்ன செய்வது என்று உனக்குத் தெரியும். நீ என்னை வினவியது போன்று யானும் சில கேட்கிறேன்.

ஒதிபன் : கேள் ; நான் கொலைஞன் என்று உன்னால் உணர்த்த இயலாது.

(தொடரும்)

(க) வட்டார மொழிகள் வளரவேண்டும்

"இந்தி நம்முடைய தேசிய மொழியாக இருப்பினும் மற்ற மொழி களும் வளர்வதற்கு ஊக்கமளிக்கவேண்டும். வடநாட்டிலுள்ள மக்கள் தென்னாட்டு மொழிகளையும், தென்னாட்டிலுள்ளவர்கள் வடநாட்டு மொழிகளையும் கற்றுக்கொண்டால் இந்தியாவின் ஒற்றுமை பலப்படும். விஞ்ஞானத் தொழில் நுணுக்கக் கல்வி ஆகியவற்றிற்கு ஆங்கிலமொழி இன்றியமையாததொன்றாகும். ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது கூடாது" என்று 21-10-59 இல் அலகாபாத் பல்கலைக்கழகத்தில் வங்காள இலக் கியக் கழகத்தைத் துவக்கி வைத்துப் பேசிய உத்தரப் பிரதேச ஆளுநர் திரு. வி. வி. கிரி அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

குறிப்பு: வட்டார மொழிகளின் வளர்ச்சிக்கு இடந்தரும் வகை யிலும், ஆங்கிலத்தின் இன்றியமையாமையை வலியுறுத்தியும் பேசிய திரு. கிரி அவர்களின் பொறுப்புணர்ச்சி பாராட்டத் தக்கதே.

(உ) 'ஸ்ரீ' யைத் 'திரு' ஆக்குவதுபற்றி அமைச்சர் கருத்து

"ஸ்ரீ"யைத் "திரு" ஆக மாற்ற நடக்கும் முயற்சிகள் தேவையற் றவை. இதுபோன்ற நடவடிக்கைகளில் மக்கள் தம் நேரத்தைச் செல விடுவது இன்றியமையாததென்று நான் கருதவில்லை. ஒரு மொழி உயி ருடன் இருக்க - வளர்ச்சியுற பிற மொழிகளினின்றும் இன்றியமையாத சொற்களைத் தமிழாக்கிக் கொள்ளுதல் தவிர்க்க முடியாதது," என்று குடந்தை இராமசாமித் திருக்கோயிலில் நடைபெற்ற பட்டாபிடேக விழாவில், சென்னை உள்துறை அமைச்சர் திரு. எம். பக்தவத்சலம் அவர்கள் பேசியுள்ளார்கள்.

குறிப்பு: 'ஸ்ரீயைத் திரு' ஆக்குவதும், தமிழில் பிற மொழி கலவா திருக்கச்செய்வதும்போன்ற முயற்சிகள் இன்று நேற்றுத்தோன்றியவை யல்ல. இஃது ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்னர் மறைமலையடிகளார் போன்ற தமிழ் அறிஞர்கள் கண்ட இயக்கம். பிற மொழியின் துணையின்றியே தமிழ் தனித்து வாழக்கூடும் என்பது அவர்கள் கண்ட முடிபு. எனவே மொழிபற்றி அமைச்சரவர்கள் கொண்டுள்ள கருத்துப் பொருத்தமற்றதென்றே சொல்லவேண்டியதா

(ங) அரசாங்கமும் பாடநூல்களும்

" ஆரம்ப வகுப்புகளுக்கான பாட நூல்களை அரசாங்கம் வெளியிடு வது தவறானது. நூல்கள் வெளியிடுவதில் போட்டி இல்லையெனில் நல்ல நூல்கள் வெளிவர வாய்ப்பில்லாமற் போகும். எந்த நூலை ஆரம்ப வகுப்புகளுக்குப் பாட நூலாக வைக்கலாம் எனத் தேர்ந்தெடுக்கும் உரிமை ஆசிரியர்களுக்கே இருக்கவேண்டும். அரசாங்கம் ஒரு குறிப்பிட்ட நூலை வெளியிட்டு, இதையே எல்லாப் பள்ளிகளிலும் ஆரம்ப வகுப்புக் களுக்குப் பாட நூலாக வைக்கவேண்டும் எனக் கூறுமானால் அதன் விளைவு பயனளிக்கக் கூடியதாக இருக்காது. எனவே, அரசியலார் தம் போக்கைத் திருத்திக்கொள்வர் என நம்புகிறேன்" என்று 24-10-59 இல் புரசை முத்தையச் செட்டியார் உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியர் சங்கச்

சார்பில் நடைபெற்ற கூட்டத்தில், சென்னைச் சட்டமன்ற மேல்சபை உறுப்பினர் டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள் கூறினார்கள்.

குறிப்பு: திரு. செட்டியாரவர்களின் கருத்துரை மிகமிக இன்றியமையாதது. அரசியலார் இதனைக் கருத்திற்கொண்டு தம் போக்கினை மாற்றுதல் வேண்டும். பாட நூல் வெளியீடுகள் பல வெளிவர ஆக்கமளித்தல் வேண்டும். அங்ஙனமின்றி இதில் அரசியலார் குறுக்கிடுவது அறிவுக்கே தளை பூட்டுவது போலாகும்.

### (ச) சென்னை அரசினரின் 'இந்தி' எதிர்ப்பு!

பஞ்சாயத்துத் தலைவர்கள், துணைத் தலைவர்கள் பெயர்களுக்கு இந்திப் பெயர்கள் கொடுத்து இந்தியா முழுவதும் ஒரேமாதிரியான ஏற்பாட்டை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும் என்று அண்மையில் இந்திய அரசினர் ஒரு திட்டம் வகுத்து அதனைச் சென்னைமாநில அரசக்கும் அறிவித்தனர். சென்னை அரசினர் இதனை ஏற்றுக்கொள்ள மறுத்துத் தற்போதுள்ள பெயர்களே அனைவருக்கும் புரியக்கூடியதென்றும், வேண்டுமானால் இந்தியா முழுமைக்கும் ஒரு மொழி வருங்காலத்தில் பார்த்துக்கொள்ளலாம் என்றும் கூறிவிட்டனர். இச் செய்தியை உள்ளாட்சி அமைச்சர் திருவாட்டி லூர்து அம்மையாரவர்கள் 27-10-59 இல் செய்தி எழுத்தர்களிடம் அறிவித்தார்.

குறிப்பு: இந்த அளவில் இந்தியை எதிர்த்த சென்னை அரசினரைப் பாராட்டுகின்றோம். இத்தகைய எதிர்ப்புணர்ச்சியும் மொழிப்பற்றும் மேலும் வளர வேண்டுமென விழைகிறோம்.

### (ரு) திரு. எம். கே. தியாகராச பாகவதர் மறைவு

ஏழிசை வேந்தர் எனப் புகழப்பட்டவரும், தமிழ் நாடக, திரைப்பட உலகில் புகழ்பெற்றவருமான திரு. எம். கே. தியாகராச பாகவதரவர்கள் தமது ஐம்பதாவது அகவையில் சென்னை மருத்துவ மனையில் 1 - 11 - 59 இல் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகின்றோம். திரு. பாகவதர் அவர்களின் மறைவு தமிழ் இசையுலகிற்கு ஒரு நட்டமாகும். அவரைப் பிரிந்து வருந்தும் அவர்தம் குடும்பத்தார்க்கும் இசையுலக அன்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவருடைய ஆன்மா இறையடி நீழலில் இன்புறுவதாக.

### (சு) இந்திய மொழிகளின் வளர்ச்சிக்குப் புதியதிட்டம்

இந்தியாவில் வழங்கும் பல்வேறு வட்டார மொழிகளுக்கும் ஆதரவு அளிக்கும் வகையில், அவற்றின் வளர்ச்சிக்கென இந்திய மைய அரசினர் ஒரு திட்டம் வகுத்துள்ளனர். அதன்படி இதுவரையில் 3, 81,000 ரூபாய் கொடைப்பொருளாக வழங்கப்பட்டுள்ளது.

இந்தக் கொடை, கலைக்களஞ்சியங்கள், பழைய கையெழுத்துப் படிகள், அரிய நூல்கள், இருமொழி அகராதிகள், அறிவியல் பண்பாடு தொடர்பான நூல்கள், இந்திய மொழிகளில் காணப்படும் இலக்கணம், சொற்றொடர் அமைப்பு அல்லது சிறப்புச் சொற்கள் ஆகியவைகளில் காணப்படும் ஒற்றுமைபற்றிய ஆராய்ச்சி நூல்களைத் தயாரித்து வெளியிடுதல், இலக்கிய மாநாடுகள் நடத்தல் ஆகியவற்றுக்காக வழங்கப்பட்டுள்ளது.

இந்தத் திட்டத்தின்படி 1959-60 ஆம் ஆண்டுக்கு மொத்தம் 7 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இத் தொகையில் சென்னை மாநிலத்தில் தமிழுக்கு 13,500 ரூபாய் கிடைத்திருக்கிறது. பொதுவாக ஒவ்வொரு மொழிவளர்ச்சிக்கும் ஏறக்குறைய 50,000 ரூபாய் கிடைக்கும். ஆனால் இந்தியும் சமக்கிருதமும் இதில் சேர்க்கப்படவில்லை. அவற்றின் வளர்ச்சித் திட்டத்தை மைய அரசினர் தனியாகக் கவனித்து வருகின்றனர்.

இந்த மொழி வளர்ச்சித் திட்டப்படி மாநில அரசினர் எந்த மொழியையும் வளர்க்கலாம். அப் பணியில் ஏற்படும் செலவில் நூற்றுக்கு 50 விழுக்காடு மைய அரசினர் உதவுவர். மொழி வளர்ச்சியில் ஈடுபட்டிருக்கும் தனிப்பட்ட நிலையங்களுக்கு உதவும்படி மாநில அரசினர் மைய அரசினர்க்குப் பரிவுரை வழங்கலாம்.

குறிப்பு: இந்திய அரசினர் மொழி வளர்ச்சிக்கு இத்துணை ஆதரவு தர முன்வந்திருப்பது போற்றத்தக்கதே. ஆனால் ஆதரவுதரும் முறையில் எல்லா மொழிகளையும் ஒரே நிலையில் வைத்து நோக்குதல் வேண்டும். இந்திய மொழிகளில் தமிழ் மிகத் தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது. எனவே தமிழுக்கு அதிகமான ஆதரவு நல்கல் வேண்டும். அஃதின்றேல் சமக்கிருதம் இந்தி ஆகியவற்றுக்குக் காட்டப்படுவது போன்றே இதற்கும் ஆதரவு காட்டுதல் வேண்டும். அதுவே சால்புடைத்து.

(எ) முன்னாள் நிதி அமைச்சர் ஜான் மத்தாய் மறைவு

விடுதலை பெற்ற இந்தியாவின் இரண்டாவது முன்னாள் நிதி அமைச்சர் டாக்டர், திரு. ஜான் மத்தாய் அவர்கள், கடந்த 2-11-59 இல், தமது 73 ஆம் அகவையில் பம்பாயில் காலமானர் என்ற செய்திகேட்டு வருந்துகிறோம். டாக்டர் மத்தாய் அவர்கள் சிறந்த பொருள் துறை வல்லுநர். ஒரு வழக்கறிஞராக வாழ்க்கை தொடங்கிய இவர், 1918 முதல் அரசாங்கப் பணிகளில் ஈடுபட்டார். சிலகாலம் சென்னைப் பல்கலைக் கழகத்தில் பொருளாதாரப் பேராசிரியராகப் பணியாற்றினர். டாக்டர் சண்முகஞ் செட்டியாரவர்கள் நிதியமைச்சர் பதவியிலிருந்து விலகிய பின்னர், இவர் பதவி ஏற்றுச் சிலகாலம் நிதி அமைச்சராகப் பணியாற்றினர். இவரது மறைவு பொருளாதார உலகிற்கு ஒரு நட்டமேயாகும்.

(அ) பண்டித நேரு அவர்களின் சமயக் கொள்கை

"எனக்குச் சமயச் சடங்குகளில் நம்பிக்கை இல்லை என்பதை நான் பலதடவை கூறியுள்ளேன். எனது சமயக் கருத்து எதுவாக இருந்தாலும் சரி, என்னையே நான் அறிந்து கொள்ளவில்லை. ஆனால், விஞ்ஞானத் துறையில் இயல் நூல், இரசாயனம் முதலியவற்றில் எங்ஙனம் சில சட்டங்கள் உள்ளனவோ, அங்ஙனமே வாழ்க்கையில் நல்லது செய்வோர் நற்பயனையும், தீயது செய்வோர் தீய பயனையும் அடைவர் என்ற ஒரு சட்டம் அமைந்துள்ளது என்பதை நான் அறிவேன் ஆனால் எப்பெயரிட்டு அதனை அழைப்பது என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. அஃதொரு இயற்கைச் சட்டம் என்பேன்"* என்று 5-11-59 இல் புதுதில்லியில் நடைபெற்ற செய்தி எழுத்தர் மாநாட்டில் பேசிய போது இந்தியாவின் முதல் அமைச்சர் பண்டித நேரு அவர்கள் குறிப்பிட்டார்கள்.

_ . ..ரில் வரும் "இயற்கை" என்னும் கட்டுரை விடையாகும்.

# மதிப்புரை

"ஏட்டில் எழுதாக் கவிதைகள்"

[தொகுப்பு விளக்கம்: திரு. சே. அன்னகாமு, பி. ஏ, எல். டி., அவர்களால் தொகுக்கப்பெற்றது. விலை ரூபா. 2—00. கிடைக்குமிடம், ஆதாரக்கல்வி ஆசிரியப் பயிற்சிப்பள்ளி, காந்திக் கிராமம், மதுரை மாவட்டம்] ஒரு நாட்டின் உண்மையான உணர்ச்சிப் பாடல்களும், ஒழுக்க மேம்பாடும், கடவுட்பற்றும், காதலும் காவ(வீரம்)லும், ஈதலும் இசையும், உழைப்பும் உதவியும், வளமையும் வாழ்க்கையும், ஒற்றுமையும் உரமும், அந்நாட்டினிடையே வாழும் பாட்டாளி மக்களிடையே தொன்றுதொட்டு இன்றுகாறும் பொன்றாது ஒன்றுபோல் நின்று நிலவுகின்றன.

அப்பாடல்கள் "ஏட்டில் எழுதாக் கவிதைகள்" என்ற முறையில் நாட்டில் நடமாடுகின்றன. அம்மட்டோ? அவற்றை மேற்கொண்டொழுகும் மாந்தரிடையே உணர்ச்சிப் பெருக்கையும் உழைப்பூக்கத்தையும் அவைகள் ஓவாது நல்குகின்றன. களியாட்டம், கரகம், சாமியழைத்தல், இறந்த ஆவியின் வழிபாடு, தெய்வபத்தி, தூய்மை முதலியவற்றிற்கு அப்பாடல்கள் போன்று அவர்கட்குத் துணைசெய்வன வேறு ஏதுமின்று. வாழ்க்கையின்பத்தினும், தாலாட்டு முதலிய செயலினும் அப்பாடல்கள் பெருந்துணையாகின்றன. மேலும் அப்பாடல்கள் தமக்கென வமைந்த பண், தாளம், பாவமைப்பு முதலியவற்றைக்கொண்டு திகழ்கின்றன. எதுகை மோனைச்சிறப்பும் இசையினிமையும் எளிமையும், உவமை, உருவகம், உள்ளுறை முதலியனவுங் கொண்டு திகழ்கின்றன.

இத்துணைச் சிறந்த பாடல்களை இந் நூலாசிரியரவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் பெருமுயற்சிகொண்டு ஆங்காங்குச் சென்று அம் மக்களுடன் அளவளாவி அவர்தம் உணர்ச்சி வெளிப்பாட்டான் இயல்பாக வருவித்து எழுதித் தொகுத்துள்ளார்கள். இப் பாடல்களைனத்தும் அழகுற அமைவதற்கேற்ற குழைவு நம் செந்தமிழ் மொழிக்கமைந்த சீரிய இயல்பாகும்.

இதன்கண் "பாடிப் பரவசமடைவோம்" என்பது முதலாகப் பதினைந்து தலைப்புக்கள் காணப்படுகின்றன. ஆதிவாசிகளின் வாழ்க்கை வரலாறுகளும் பிறவும் விளக்கப்பட்டுள்ளன. பாட்டுக்களைச் செவ்விய முறையில் தொன்மை விளங்குமாறு அம் மக்கள் பயிலும் இயற்சொல்லால் அமைத்துள்ளனர். இவ்வாற்றால் இந்நூல் பெரியதோர் பழைமைக் கருவூலத்தொகுப்பாகும். சிறந்த அட்டைப்படத்துடன் கூடியது.

இதனைப் பொதுவாகச் செந்தமிழன்பர்களும், ஆசிரிய மாணவர்களும், பண்ணிசை வல்லார்களும் வாங்கியும் வாங்குவித்தும் போற்றுவார்களாக. இதன் வாயிலாக எஞ்சிய தொகுப்புக்களையும் ஆசிரியர் வெளியிடத் துணைபுரிவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு கககூ0, கார்த்திகை | பரல் |
| --- | --- | --- |
| ௩௪ | திசம்பர், 1959 | ௪ |

திருச்சிற்றம்பலம்

# திருவருள் பெற்றார் செயலனைத்தும் சிவன் செயலே

(செல்வி சிலம்பு ௩௪-பரல் ௩, க00 ஆம் பக்கத் தொடர்ச்சி)

"இவனுலகி லிதமகிதஞ் செய்த வெல்லாம்
இதமகித மிவனுக்குச் செய்தார்பா லிசையும்
அவனிவனாய் நின்றமுறை யேகனாகி
அரன்பணியி னின்றிடவு மகலுங் குற்றம்
சிவனுமிவன் செய்தியெல்லா மென்செய்தி யென்றும்
செய்ததெனக் கிவனுக்குச் செய்த தென்றும்
பவமகல வுடனாகி நின்றுகொள்வன் பரிவாற்
பாதகத்தைச் செய்திடினும் பணியாக்கி விடுமே."

—சிவஞான சித்தியார், க0.

இவற்றான் மெய்யடியார்பால் நிகழும் நிகழ்ச்சிகள் மெய்ப் பொருளாம் சிவபெருமானின் திருவருண் நிகழ்ச்சிகளே என்பது தேற்றம். திருமுறைக்கண் காணப்படும் தொல்பெரும் முத லாசிரியராகிய திருமூல நாயனார் இறைவன் தம்மை "நன்றாகத் தமிழ் செய்யுமாறு" படைத்தருளினன் என ஓதியருளுகின் றனர். அது வருமாறு:

"பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே." —க0. கஉ.

தமிழ் - தமிழாகமம். திருமுறை எனினும் ஆகமம் எனினும் ஒன்றே.

ஆளுடைய பிள்ளையார் உலகன்னையின் திருமுலைப்பால் உண்டருளியபோதே "தோடுடைய செவியன்" எனத் தொடங்கிச் சிவபெருமான் "தம்மை யடையாளங்களுடன் சாற்றி" யருளினர். இந்நிகழ்வு ஓதுவார்தம் வேண்டுகோளின்றி இறைவன் உண்ணின்றெழுப்பி உணர்த்தியருளிய திருவாணையான் நிகழ்ந்ததாகும். இவ்வுண்மை வரும் செந்தமிழ்த் திருமாமறையான் உணரலாம்:

"போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே."

—ந. உச - உ.

ஆளுடையவரசரும் தம் தமக்கையார் திலகவதியம்மையாரின் திருவடியைத் தொழுதனர். அம்மையாரும் 'திருவாளன் திருநீற்றைத் திருவைந்தெழுத் தோதி'க் கொடுத்தருளினர். இதுவே சிவதீக்கை என்னும் சிறப்புப்பிறப்பாம் என்ப. அரசரும் அத் திருநீற்றைப் பெருவாழ்வெனப் பணிந்தேற்று உருவார அணிந்தருளினர். அணிந்து அம்மையாருடன் திருவதிகை வீரட்டானத் திருக்கோவிலுக்குச் சென்றனர். சென்று திருக்கோவில் தொழுது, வலஞ்செய்து வணங்கிச் சிவபெருமான் திருவடிக்கீழ் நிலமிசை வீழ்ந்தெழுந்தனர். எழலும் சிவபெருமான் திருவருளால் திருமாமறை பாடியருளும் உணர்வு உள்ளத்தெழுந்தது. எழலும் திருவாணை வழிநின்று திருமுறை ஓதியருளினர். இம்முறையால் அரசர் திருவாய்மொழியும் ஆண்டவன் திருவாய்மொழியே. இவ்வுண்மை வரும் சேக்கிழாரடிகள் ஓதியருளியவாற்றானுணரலாம்:

"திரைக்கெடில வீரட்டா னத்திருந்த செங்கனக
வரைச்சிலையார் பெருங்கோயில் தொழுதுவலங் கொண்டிறைஞ்சித்
தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் திருவருளால்
உரைத்தமிழ்மா லைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார்."

—கஉ. திருநாவுக்கரசர், சுக.

சிவபெருமான் மெய்யடியார்பால் உயிர்க்குயிராய் உண்ணின்று உணர்வின்கண் எழுப்புவதே திருமாமறை என்ப. இதனையே எழுதுமறை என்ப. எழுதுதல் - எழுப்புதல். இம்மறையினை வழிமொழிவதே மெய்யடியார்பால் விளங்குவது. 'வழிமொழிவ' தன்னுண்மை முதற்கண் எடுத்துக்காட்டியுள்ள

"ஒழுகலரி" தென்னும் தமிழ்மறையான் உணரலாம். மறை: மொழிக்குக் கருவாம் உணர்வு. இதனைச் சொற்பிரிவிலா மறையென்பர். சொற்பிரிவிலா மறையெனினும், நினைவோசையெனினும் ஒன்றே. நினைவோசை - பைசந்தி. இவ்வுண்மைகள் வரும் தனித்தமிழ் மறைகளான் உணரலாம்:

"சொற்பிரிவி லாதமறை பாடிநட மாடுவர்தொ லானையுரிவை
மற்புரிபு யத்தினிது மேவுவரெந் நாளும்வளர் வானவர்தொழத்
துற்பரிய நஞ்சமுத மாகமுன யின்றவரி யன்றதொகுசீர்
வெற்பரையன் மங்கையொரு பங்கர்நக ரென்பர்திரு வேதிகுடியே."
—௩. ௭௮ - ௨.

"எல்லையிலா மறைமுதன்மெய் யுடனெடுத்த எழுதுமறை
மல்லனெடுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குரைசிறப்ப
பல்லுயிருங் களிகூரத் தம்பாடல் பரமர்பாற்
செல்லுமுறை பெறுவதற்குத் திருச்செவியைச் சிறப்பித்து."
—௧௨. சம்பந்தர் - ௭௫.

"பதிக நாண்மலர் கொண்டுதம் பிரான்கழல் பரவி
அதிக நண்பினை நீலநக் கருக்களித் தருளி
எதிர்கொ ளும்பதி களிலெழுந் தருளினு ரென்றும்
புதிய செந்தமிழ்ப் பழமறை மொழிந்தபூ சுரனார்."
—௧௨. நீலநக்கர் - ௩௪.

ஈண்டு ஓதப்பெறும் 'செந்தமிழ்ப் பழமறை, என்பது பண்டு தமிழகத்தில் வழங்கிவந்து இடைக்காலத்து மறைந்துள்ள தமிழ் நான்மறையேயாம். இங்ஙனம் மறைந்தவுண்மைதான் திருமறைக் காட்டில் "தொல்லை வேதந் திருக்காப்புச் செய்த வாயில்" என வழங்குவதாயிற்று. அவ்வாயிலின் தொடர்வகற்ற இருபெரு முதல்வர் தம்மால் பாடியருளிய செந்தமிழ் மறையே பழந்தமிழ் மறையின் தொடர்புடைய தென்க. இவ்வுண்மையுணராச் சில்லோர் அஞ்ஞான்றும் இன்றும் சில்லோர் வழக்கில் காணப்படும் அயலதாகிய ஆரியமறை எனக் கூறுகின்றனர். அங்ஙனமாயின் இருவரும் ஆரிய மறையினைப் பாடியன்றோ திறப்பித் திருத்தல் வேண்டும். அங்ஙனம் நிகழாமையான் முன் திருக் காப்பிட்ட மறை தமிழ் நான்மறையே என்பது தானே போதரும்.

அம்மயலினர் அம்மட்டோ மொழிகின்றனர்? ஆரிய மறைக்குத் தமிழ்மறை ஒப்பெனக் காட்ட அங்ஙனம் நிகழ்ந்த தென்கின்றனர். அவர்கள் ஒன்றை மறந்து உரைக்கின்றனர். வழக்கத்திலிருந்துவரும் மறைக்கு ஒப்பாகப் பிறிதோர் மறை தோன்றுவது எங்ஙனம் ஏற்புடைத்தாகும்? ஆரியமறை செந்

தமிழோர்க்குப் புரியாமொழியிலிருப்பதால் அங்ஙனம் நிகழ்ந்ததெனக் கூறுவராயின், புரியும் தமிழ்மறை வந்த பின்னும் ஆரிய மறைக்குத் தமிழகத்தில் இடமிருப்பதேன் என வினுயினுர்க்கு அவர் தாம் இறுக்கும் விடை யாது? அவ்வாரிய மறையைப் புரிந்துகொள்ளும் தமிழகத்து வாழும் தமிழறியாத ஆரியர் தாம் யாவர்? இவையொன்றுக்கும் நேர்மையான விடையின்மையால் அவர் கூறுவன மயக்கே என்க.

ஆளுடைய பிள்ளையார் தமிழ் வழங்கா வேற்று நாட்டிலுள்ள சிவபெருமான் திருக்கோவில்களுக்குத் தமிழ்நாட்டிலிருந்தே பாடியருளினர். இதன் உண்மை திருக்கோவில் வழிபாடு அவ்வந் நாட்டுமொழியினுலேயே நடத்தல் வேண்டும் என்பதேயாம். அதனை வலியுறுத்தவே வரும் தேவாரத் திருமாமறைகளைக் கட்டளையிட்டருளினர் :

"அந்தண் சோற்றுத் துறையெம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின் அடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே." —க. உஅ - கக.

"நல்ல புனற்புகலித் தமிழ்ஞான சம்பந்தன் நல்ல
அல்லி மலர்க்கழனி ஆரு ரமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினுல் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே."
—க. கOரு - கக.

"வீடு ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் னுவது மெந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன செந்தமிழ் கொண்டிசை
பாடு ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே." —உ. உ-கக.

தமிழ் மாமறைக்கண் ஒப்பில் முழுமுதலாம் சிவபெருமான் வழிபாடே சிறப்பு. ஆரிய மறைக்கண் பலதெய்வ வழிபாடும், விரத வேள்விகளுமே சிறப்புடையன. அதனுலேயே அவ்வாரிய மறை தமிழ்மறைக்கு எத்துணையோ தாழ்ந்த நிலையினையுடையதென்பது போதரும். அவ்வுண்மை யுணர்த்துவதே "விரதமேபர மாகவே தியருஞ், சரத மாகவே சாத்திரங் காட்டினர்" என்னும் திருவாசகச் செழுமறைத் தொடர். மேலும் விரத வேள்விகளை வலியுறுத்தும் ஆரிய மறைவல்லார் சிவவழிபாட்டினை விலக்கவும் செய்வர் என்பது சண்டேசுர நாயனுர் தந்தையின் தகாச்செயலான் உணரலாம். அதனைக் காட்டுவதே வரும் தமிழ்த் திருமாமறை யென்க:

"ஏத நன்னில மீரறு வேலி
ஏயர்கோ னுற்ற விரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற வெறிந்த சண்டிக்குன்
சடைமி சைமல ரருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழிற்றிருப் புன்கூ ருளானே."  —எ. ருரு - ௩.

ஆளுடைய பிள்ளையார் பாடியருளிய தமிழ்த் திருமாமறை இறைவன் வழிபாட்டு மறையேயாம் என்னும் உண்மை வருமாறு உணர்க:

"ஆறதே றுஞ்சடை யானருண் மேவ அவனியர்க்கு
வீறதே றுந்தமி ழால்வழி கண்டவன் மென்கிளிமாந்
தேறல்கோ தித்துா று சண்பகந் தாவிச் செழுங்கமுகின்
தாறதே றும்பொழிற் சண்பையர் காவலன் சம்பந்தனே."
—௧௧. நம்பியாண்டார் நம்பி, திருச்சண்பை - ௫.

மேலும் ஆளுடைய பிள்ளையாரால் துறக்கப்பட்டவர் தமிழ்த் திருமாமறையினை அறியாப் பயனற்ற புல்லரே என்னும் உண்மையினை வருமாறு காண்க:

"...   ...   ... நீத்தது
அமிழ்ச்சுவை யேயறிந் தானடி பரவுந்
தமிழ்ச்சுவை யறியாத் தம்பங் களையே."
—௧௧. நம்பி, பிள்ளையார் திருமும் - ௪.

அரனடிபரவுந்தமிழ் - தமிழ்த் திருமாமறைகள்.

இவ்வுண்மையினை வருந் தமிழ்மாமறை யானுமுணரலாம்:

"வாயி ருந்தமி ழேபடித் தாளுரு
ஆயி ரஞ்சம ணும்மழி வாக்கினன்
பாயி ரும்புன லாறை வடதளி
மேய வன்னென வல்வினை வீடுமே."  —ஒ. ௫அ - ௬.

சமணர்கள், தமிழ்ச் சான்றோரால் புத்த, சமண, ஆரியக் கோட்பாட்டினர் வருவதற்குப் பல ஆயிரயாண்டுகளுக்கு முன்னிருந்தே தமிழ்மொழியான் வழிபட்டுவந்த சிவனெறியினை அறிந்திலர். அதனால் அவர்கள் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றும் சிவனுக்கு அடிமையாயிலர். இலக்கண நூல் வாயிலாகவும் தமிழகத்துத் தோன்றி வழங்கிவரும் தொன்மைத் தெய்வ நெறியினையும், தெய்வத்தினையும் நன்குணர்தல் கூடும். பின்னர் அத் தெய்வ வழிபாட்டினுக்குரிய செந்தமிழ் மாமறை

எது என ஆய்ந்து மேற்கோடலும் நேரும். இவை ஏதுமின்மையால் உண்மை இயற்கைத் தமிழான் எளிதாக எய்தப்பெறும் சிவனுக்கடிமையாம் ஏற்றத்தினை யிழந்தனர். சிவனுக்கு உவப்பாந் தமிழ்மொழியினைப் புறக்கணிப்போர் தமிழ்த் தெய்வமாம் சிவனையும் புறக்கணித்தோராவர். சிவன் திருக்கோவில்களில் செந்தமிழ்த் திருமாமறையாம் தேவார திருவாசகங்களின் வழி அருச்சனை புரிவதை மறுப்போர் எங்ஙனம் புறக்கணியாதவராவர்? சிவபெருமானுக்குச் செந்தமிழ்த் திருமாமறை நனி மிக வுகப்புடைய தென்பதனை வரும் திருமுறைகளான் உணரலாம் :

“நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானைத்
தொண்ட னேனறி யாமை யறிந்து
கல்வி யன்மனத் தைக்கசி வித்துக்
கழலடி காட்டியென் களைகளை யறுக்கும்
வல்லியல் வானவர் வணங்கநின் றானை
வலிவ லந்தனில் வந்துகண் டேனே.” —எ. சுஎ - ரு.

“பரந்தபாரிட மூரிடைப்பலி பற்றிப்பார்த்துணுஞ் சுற்றமாயினீர்
தெரிந்த நான்மறையோர்க் கிடமாய திருமிழலை
இருந்துநீர்தமி ழோடிசைகேட்கு மிச்சையாற்காசு நித்தநல்கினீர்
அருந்தண் வீழிகொண் டீரடியேற்கு மருளுதிரே.” —எ. அஅ - அ.

மேலும் இம் முதல்வர்களாகிய நம் சமயாசிரியர்களை நோக்கி நம்மைப் பாடுக என்றும், பாட மறந்தனையோ என்றும், சிவபெருமான் வெளிப்படையாகத் தூண்டிப் பாடுவித்துக் கொண்ட இடங்களும் எண்ணில. பாடுதற்கு அடியெடுத்துக் கொடுத்தருளிய இடங்களும் பல. தானே மணிமொழிப் பெருமான்பால் எழுந்தருளி வந்து திருவாசகம் திருக்கோவையார்களைத் தன் திருக்கையினும் எழுதிக்கொண்டருளினன். அம மட்டோ? சேரவேந்தனுக்கு “மதிமலி புரிசை” என்னும் செந்தமிழ்த் திருமுகப்பாசுரம் பாணபத்திரர்பால் எழுதி விடுத்தருளினன். உமாபதி சிவனார்க்கும் “அடியார்க்கெளியன்” என்னும் செந்தமிழ்ச் சீட்டொன்று பெத்தான் சாம்பானார்பால் விடுத்தருளினன். இவையனைத்தும் செந்தமிழின்பால் சிவபெருமானுக்குரிய உகப்பினையே புலப்படுத்துவன என்க. உகப்பு - உயர்வு.

திருக்கயிலைக்குச் சென்றருளிய காரைக்காலம்மையார்பால் சிவபெருமான் உரையாடியதும் “அம்மையே” என அழைத்ததும் செநதமிழிலேயே. ஆண்டுச் சென்றுள்ள சேரமான்

பெருமாள் நாயனார் விண்ணப்பித்துக் கேட்பித்ததும் "செந் தமிழ்த் திருவுலாப்புறமே". இவைபோன்ற நிகழ்ச்சிகள் இன்னும் எண்ணில. ஒருவர் தமக்குகப்பான மொழியிற்றான் வரைவர் என்பதனை வரும் சிலப்பதிகார வரிகளான் உணரலாம் :

"எள்ளிய மனையோள் இனைந்துபின் செல்ல
வடதிசைப் பெயரு மாமறை யாளன்
கடவ தன்றுநின் கைத்தாண் வாழ்க்கை
வடமொழி வாசகஞ் செய்தநல் லேடு."

—சிலப். கடு. அடைக். ௫௫ - ௬.

நம்பிரான் திருமூலர் செய்தருளிய திருமந்திரமும் சிவ பெருமான் திருமொழியே; அவர் நாடொறும் இறைவனை நாடி முறையுற ஓதியருளினமையான் என்க. இவ்வுண்மை வருமாறு காண்க :

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை அரனடி நாடொறும்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே."

மேலும் திருமந்திரம் "சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேதம்" என ஓதுவதனால் தமிழ் வேதாகமங்கள் அத் தத்துவம் தோன்றிய நாள் தொட்டு உள்ளன என்பது துணிபு. இவ் வுண்மை வருமாறு காண்க :

"சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேதம்
மிதாசனி யாதிருந் தேனின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மன நீங்கி
உதாசனி யாதுட னேயுணர்ந் தோமால்."　　—௧0. ௧௪௬.

மேலதனை வலியுறுத்தும் திருமாமறைகள் வருமாறு :

"தேம்பனுண்ணிடை யாள்செழுஞ்சேலன
கண்ணியோடண்ணல் சேர்விடந்தேனமர்
பூம்பொழிறிகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமென்
றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை
ஞானசம்பந்த னொண்டமிழ்மாலைகொண்
டாம்படியிவை யேத்தவல்லார்க்கடை யாவினையே."

—உ. ௧ - ௧௧.

"மூலநோய் தீர்க்கு முதல்வன் கண்டாய்
முத்தமிழு நான்மறையு மானான் கண்டாய்
ஆலின்கீழ் நால்வர்க் கறத்தான் கண்டாய்
ஆதியும் அந்தமும் ஆனான் கண்டாய்

பால விருத்தனும் ஆனான் கண்டாய்
பவளத் தடவரையே போல்வான் கண்டாய்
மாலைசேர் கொன்றை மலிந்தான் கண்டாய்
மறைக்காட்டுறையும் மணாளன்றானே." —சு. உ௩-கூ.

இதுகாறுங் கூறியவாற்றால் மூவர் அருளிய 'திருமா மறைகள்' தமிழ் வேதம் என்பது தெளிந்து துணியப்பட்டதாகும். இதுபோல் மணிவாசகப் பெருமானாருளிய 'திருவாசகம்' தமிழ் வேத முடிபாகும் என்பதுங் காண்க. திருமூலர் 'திருமந்திரம்' தமிழாகமமாகும் என்பதுந் துணிபு.

ஆரிய வேதமும் தமிழ் வேதமும் வெவ்வேறென்னும் உண்மையினை வருமாறு காண்க:

"பங்கமேறு மதிசேர்சடையார் விடையார் பலவேதம்
அங்கமாறு மறைநான்கவையு மானார்மீனாரும்
வங்கமேவு கடல்வாழ்பரதர் மனைக்கே நுனைமூக்கின்
சங்கமேறி முத்தமீனுஞ் சண்பை நகராரே." —க. சுசு-க.

"மைம்மலர்க்கோதை மார்பினரெனவு
மலைமகளவளொடு மருவினரெனவும்
செம்மலர்ப்பிறையுஞ் சிறையணிபுனலும்
சென்னிமேலுடையரெஞ் சென்னிமேலுறைவார்
தம்மலரடியொன் றடியவர்பரவத்
தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற்சேர
அம்மலர்க்கொன்றை யணிந்தவெம்மடிகள்
அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே.' —க. எஎ-ச.

"பந்தணவு மெல்விரலாள் பாகன் றன்னைப்
பாடலோ டாடல் பயின்றான் றன்னைக்
கொந்தணவு நறுங்கொன்றை மாலை யானைக்
கோலமா நீல மிடற்றான் றன்னைச்
செந்தமிழோ டாரியனைச் சீரி யானைத்
திருமார்பிற் புரிவெண்ணூ றிகழப் பூண்ட
அந்தணனை யாவடுதண் டுறையுண் மேய
அரனடியே யடிநாயேன் அடைந்துய்ந் தேனே."
—சு. சுசு-க0.

"மூரி முழங்கொலிநீ ரானான் கண்டாய்
முழுத்தழல் போன்மேனி முதல்வன் கண்டாய்
ஏரி நிறைந்தனைய செல்வன் கண்டாய்
இன்னடியார்க் கின்பம் விளைப்பான் கண்டாய்
ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்
அண்ணா மலையுறையெம் மண்ணல் கண்டாய்
வாரி மதகளிறே போல்வான் கண்டாய்
மறைக்காட் டுறையு மணாளன் தானே." —சு. உ௩-இ.

நடுநின்று உண்மையான் நோக்குவோர்க்கு ஆரிய வேதத்தினும் தமிழ் வேதம் நனிமிகு சிறப்புடைய தென்பதைக் காரணத்துடன் விளக்கும் திருமுறைகண்ட புராணத் திருப் பாட்டுகளான் உணரலாம்:

"கொண்டுகுல சேகரனுங் கோன்பால் வந்து
குஞ்சரத்தோ னருள்செய்த கொள்கை யெல்லா
மண்டுபெருங் காதலுடன் சொல்லி யந்த
வண்டமிழின் பெருமைதனை வகுத்துச் சொல்வார்
கண்டபெரு மந்திரமே மூவர் பாடல்
கைகாணு மந்திரங்கண் ணுதலோன் கூறல்
எண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற் காக
இம்மொழியின் பெருமையையான் இயம்பக் கேள்நீ."

"அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத் தேடு
மதுபோலன் றிதுவென்று முளதா முண்மைப்
பரபதமும் தற்பரமும் பரனே யன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல் பாரின்
எரியினிடை வேவாதாற் றெதிரே யோடும்
என்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ் சாற்றுங்
கரியைவளை விக்குங்கன் மிதக்கப் பண்ணுங்
கராமதலை கரையிலுறக் காற்றுங் காணே."

—திருமுறை கண்டபுராணம், கஙு, கள.

சிவபெருமான் தமிழ் முழுதும் ஆனான் என்பதனை வரும் திருமாமறையான் உணர்க:

"பண்ணும்பத மேழும்பல வோசைத்தமிழவையும்
உண்ணின்றதொர் சுவையும்முறு தாளத்தொலிபலவும்
மண்ணும்புன லுயிரும்வரு காற்றுஞ்சுடர்மூன்றும்
விண்ணும்முழு தானானிடம் வீழிம்மிழலையே."  —க. கக-௨.

நால்வர் நம் மூலர் முதலிய ஐங்குரவர்தம் திருவருட் பெற்றியினைத் 'தாயுமானச் செல்வர்' உளங்குளிரக் கிளந்தெடுத்தோதும் முறை எல்லாருள்ளத்தும் ஒவாதுள்கி உணர்ந்து ஓவா இன்பம் உறவேண்டிய தொன்றாகும். அது வருமாறு:

"தேவரெலாந் தொழச்சிவந்த செந்தாள் முக்கட்
செங்கரும்பே மொழிக்குமொழி தித்திப்பாக
மூவர்சொலுந் தமிழ்கேட்குந் திருச்செவிக்கு
மூடனேன் புலம்பியசொல் முற்று மோதான்."

"வெம்பந்தந் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான
சம்பந் தனையருளாற் சாருநாள் எந்நாளோ."

"ஏரின் சிவபோகம் இங்கிவற்கே என்னஉழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ."

"பித்தரிறை என்றறிந்து பேதைபால் தூதனுப்பு
வித்த தமிழ்ச்சமர்த்தர் மெய்புகழ்வ தெந்நாளோ."

"போதவூர் நாடறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூர் ஐயன்அன்பை வாஞ்சிப்ப தெந்நாளோ."

—நூ. அடியார், ௩ - ௬

"சக்கர வர்த்தி தவராச யோகியெனும்
மிக்கதிரு மூலனருள் மேவுநாள் எந்நாளோ."

—நூ. அடியார், எ.

சிவபெருமான் 'கண்ணுதலோன்' என்ற காரணத்திருப் பெயரான் அழைக்கப்படுகின்றனன். அது 'நெற்றிக்கண்ணையுடையவன்' எனப் பொருள்படும். இத் திருப்பெயரையே வேறொரு வகையான் நோக்குவோமாயின் 'கருதுதலையுடையவன்' எனப் பொருள்படும். கண்ணுதல் - கருதுதல். சிவபெருமான் அனைத்துச் செய்கைகளையும் ஏனையார் போன்று கைகருவி கொண்டு கடவுள் படையாமல், வையமெலாங் கண்ணுதலால் வாழ்விற்கும் மெய்யவனைக், கண்ணுதலோன் என்றே கனிந்துரைத்தார் செந்தமிழோர், கண்ணுமறி வுக்கண்ணுங் காண் எனப் படைத்தருள்வன்.

தேவார திருவாசக திருமந்திரங்களைப் பாடியருளிய திருவருள் பெற்ற மெய்யடியார்கள் ஐவரும் "சிவயசிவ" என்னும் திருவைந்தெழுத்தின் திருமாமறை போல்வர். அவர்தம் மறைகளே செந்தமிழர்க்குத் தெய்வமறையாகும். இவற்றின் வழியாகவே செந்நெறிச் செல்வர்கள் வீட்டிலும், கூடங்களிலும், திருமடங்களிலும், திருக்கோவில்களிலும் நாள் வழிபாடு சிறப்பு வழிபாடுகள் அனைத்தும் நிகழ்த்தி வரவேண்டுவது இன்றியமையாத தலைக்கடனாகும். இதுபோலவே திருமண முதலிய எல்லாச் சடங்குகளும் இத் தமிழ்மறைவழியாகவே நடத்திவருதல் வேண்டும். இங்ஙனமின்றி ஆரியமொழியால் நடத்த வுன்னுவது தந்தாயினைச் சிறப்புச் செய்யாச் சேயினர் செயலே.

மெய்யடியார் செய்கையெலாம் மெய்ப்பொருளின் செய்கையென
உய்யவுளங் கொண்டொழுகல் ஓம்பு.
செந்தமிழ்வெண் ணீறும் சிவமணியும் மெய்யடியார்
தந்தவையும் வாழ்க தழைத்து.

திருச்சிற்றம்பலம்.

# இயற்கை

(செல்வி, சிலம்பு ௩௪ - பரல் - ௩, ௧௦௯ ஆம் பக்கத்தொடர்ச்சி)

'இயற்கை' யென்ற ஒன்றினை உலகுக் கீந்தவன் கடவுளே, என்ற எம் கருத்தினை விரித்துரைத்திருந்தேம் யாமாகிய, மறைமலையடிகள். வாசகர்கள் எம் "இயற்கை" என்ற தலைப் பின்கீழ் வரைந்த கட்டுரையை அவர்தம் கருத்துட்கொண்டால் எம்பக்கமே சார்வரென்ற எண்ணுடன் மீண்டும் திருவருளை யுன்னி இயக்குநர்வழி வரைகின்றனம். எம் கருத்தை ஒப்புத லென்ற தன்மை உங்கட்கேற்படத் திருவருளை மீண்டும் போற்று கின்றனம்.

இயற்கையை எவ்வாறு ஒரு கவிஞன் கண்டு களித்து அன்னவன் உள்ளக் கிடக்கையை வெளியிடுகின்றனனென்பதை எம் சிற்றறிவுக்கெட்டியவரை வரைந்தேம். இருப்பினும் இயற் கையே உலகத்தோற்றத்தைத் தன்னுட்கொண்டிருந்தால் இவ் வாறு மாறுபட்ட கருத்துக்களை மானிடரின் சிந்தையைக் குழப்பி, அவரவர் தம் ஆற்றல்வழிச் செல்லவே உதவியதோ என்றுன்னவும் இடம் ஏற்படுகின்றது. ஒரு மகன் காடு துறந்து நாடு நோக்கி வருவதும், நாடு துறந்து காடு நோக்கிப் போவது முண்டோ என்பதே இற்றையக்கூற்று. நாடு துறந்து காடு நோக்கிச் செல்பவன், தன் நாட்டினிலே தன்னால் பொறுக்க இயலா மனவருத்தங்கொண்டு மதியிழக்கச்செய்யும் நிலை அன் னவனுக்குச் சூழுங்கால், எவர் நோக்கிலும் அகப்படாது காடே தனக்குகந்ததெனத் தம்முட்கொண்டு காடுநோக்கிச் செல்வ னென்ற கருத்தை எவரும் புரிதல் எளிதே. காடு துறந்து நாடு நோக்கி வருபவரின் எண்ணிக்கை முற்றிலுமிராதெனவே, யாம் உன்னுகின்றனம். நாட்டினில் வாழும் வாழ்க்கையும், கானகத்து வாழும் வாழ்க்கையும் பெருமளவில் தம்முள் கருத்து வேற்றுமை கொண்டதாகவே இருக்கும். நாகரிகம், பண்பாடு, உணவு, இல்லறவின்பம், கல்வி முதலிய துறைகளிலும், ஏன், கடவுள் வழிபாடு என்ற இயல்பான முறையிலுங்கூடப் பெருமளவு கற்பனைக்கெட்டா வொன்றாகவே அமையுமென்பதை எவரும் மறுக்கத் துணியார்.

இவ்வாறு இயற்கையே, இயல்பிலே தன்னிலை பிறழாதிருத் தலே, அது தோற்றுவித்ததென வுரைக்கும் குழாத்தினரின் கூற்றுப்படி அன்னையின் வயிற்றினிலே கருத்தரித்து அவனியி லவதரித்த மானிட இனம், இத்தகைய வேற்றுமைகளைக்

கொண்டு வாழ வழிவகுத்ததென்னே? சிந்திமின்! மேலும், நாட்டினிலே செல்வச் சிறப்புடன் சீர்பெறு மன்னனாய் வாழ்ந்தவன் மணிமுடி துறந்து காடுநோக்கிச் சென்றனன், என்ற கருத்தின் பொருளென்னே? அன்னவன் கானகத்து மரநிழலில் அமர்ந்து, தன்னிடம் நன்னம்பிக்கைகொண்டு தன்னுடன் வந்த குழுவினை நோக்கி, "அன்பர்களே! இவண் இனி நமக்கின்னல் இல்லை. அமைதியே, நம் கருத்தினைத் தம்முள் ஈர்க்கும் ஆற்றல் படைத்ததாய புள்ளினங்களின் இனிமைகொண்ட குரலினைச் செவிமடுங்கள், அமைதியுறுங்கள். நமக்கெதிர் எவருமிங்கில்லை. அவை தம் இனிய குரல் நம்மை இன்பப் பெருக்கிலாழ்த்தி நம் மனத்துறையும் மாசுபோக்கி அமைதியை அளிக்கும். நமக்கு இங்கு எதிரிகள் இருக்கின்றனர். அவர் எவரென நினைந்தால், குளிரும், அதனாலேற்படும் காலநிலையுமே. வாழ்க்கையில் பேரவா, புகழ் விரும்பாத ஒவ்வொரு மனிதனுக்கும் கானகமே உகந்ததெனை எம் சிந்தையுட் செல்கின்ற கருத்தினை ஏற்கவே எம் மனமுன்னுகின்றது. நம் சிந்தையுட் கடவுட்டன்மை எத்தகையதென்பதை யுன்ன எழில்பெற்ற ஏற்றமுள்ள சிகரங்கள் தம்முள்ளே பலப்பல வகையிற் பயனுறு பணிகளாம், பசியினைத் தீர்த்தல், மனதினை நிறைத்தல், மதியினை விரித்தல் என்ற தன்மைகளை எடுத்து வாரி வழங்குகின்றன. அமைதி, ஒய்வு, தூய்மை எங்கும் மிளிர்கின்றன. பிணைமின் நும் கருத்தை, இத்துடனென," உரைத்தனன். இஃதிவ்வாறாக, இம்மன்னனை நாடு துறந்து காடு நோக்கிச் செல்ல வழிவகுத்த இவன் இளையவனின் நிலை என்னவென் றுய்வாம். "எம் மூத்தவனின் அரசுரிமையைப் பெற யான் வகுத்த வழியே சாலச் சிறந்தது. எம் அண்ணன் மணிமுடி தரித்து மன்னனாய் வீற்றிருந்த அரியணையில் அழகுற, மலர்க்கடவுளென வுரைக்கும் கூற்றுக்களின்படி, மாறனாய் வீற்றிருந்து தெங்குலவு சோலையாம் இத் திருநாட்டில் பொன்னொத்த பூண்முலையாருடனும், குலமஞ்ஞைபோன்ற அன்ன நடையுடைய மகளிருடனும், நீள்மணிமாடம் நிலாவுங் கோல உருவில் திகழும் கொடிமங்கைகளுடனும், மாவடு வகிரன்ன கண்ணியருடனும், வாருருவப் பூண்முலையருடனும், ஒள்நித்தில நகையும், வண்ணக்கிளிமொழியு மியைந்த வார்குழல் வனிதைகளுடனும் கேளிக்கை நடாத்தி இன்பமுண்டு இறுமாந்திருப்பேன். என் அண்ணனோ பேதை, அவன் என்றுமே கற்பெனப் படுவது ஆடவர்க்கும் பெண்டிர்க்கும் இயைந்ததேயென்று தம்போலென்னையும் ஒழுக்கத்துடன் வாழ்தலே சிறந்ததென உரைத்தமைக்கு, யானுகிய இற்றைய பார்புகழும் மன்னனளித்த பரிசு காடு நோக்கிக் கடுகுகவென்பதே. உலகத்திலே ஆடவன் தோன்றியதே பெண்டிரைக் காதலித்து அவர் தம்மிடமிருக்கும்

கலைப்பொருட்களைக் கண்டுகளித்து அதனை நுகர என்றுமே தம்மைத் தகுதியுடையோனு யாக்கிக்கொளல் நமக்கென இயற்கையளித்ததென வுணராது பேதைபோல், வலியிழந்து, தம் மனைவி இருக்கப் பிற பெண்டிரைக் காணலே தவறு; தாயெனவே கொளல் வேண்டுமென்றுரைத்த அறிவிலியின் உரையை நம்மனத்துட் கொண்டால் அதைப்போன்ற புன்சொல் வேறில்லை. அதற்குரிய பரிசை அவன் கானகத்தில் அறிய முயல்கின்றான். சூதும் வாதுமே நமக்கு இத்தகைய உயர் நிலையை யளித்தது, வெற்றி நமதே"யென வீறுடன் அமர்ந்திருக் கின்றனன். வாசகர்களே, இங்குத்தான் நமக்குச் சிந்தனைத் திறன் தேவை. ஆய்மின்! ஓர் அன்னையின் வயிற்றிலே தோன்றிய இருவேறு கோணங்களை நோக்குக. இயற்கையே உன்னையே வினவுகின்றேன். உன் ஆற்றலே உலகை இயக்கு கின்றதென வுரைக்கும் கூற்று உண்மையானல், இரு மகாரையும், ஓர் அன்னையின் வயிற்றில், ஓர் தலை சிறந்த ஆடவனும் அவள் தம் கணவனுடன் மருவியே கிட்டிய, உன் நியதிக்கேற்ப, பத்துத் திங்கள் பாரறியச் சுமந்துபெற்ற மக்களின் மனத்தில் இத்தகைய வேறுபட்ட கருத்தினை ஏன் அமைத்தாய்? அத்தகைய மாறு பட்ட கருத்தினை அவர்தம்முள் அமைக்க உனக்கு வலியுண்டோ? அல்லையேல் உன்னினும் மேம்பட்ட ஆற்றல் ஒன்றிருந்து உன்னை இப்படி இயக்கச் செய்ததா? உரை. உலகறியட்டும். உனக்கதனை எடுத்தியம்பும் ஆற்றல் இல்லையெனத் துணிந்துரைக்குதும் யாம்.

இயற்கையே! உன் மெய்ம்மையைப் புரியவைக்க உனக்கு வலியில்லையென மீண்டும் உரைக்கின்றேம். இன்னும் கேள். கானகத்துறையும் மன்னனின் மணிமொழி கேள். மண்ணிற் பிறந்து மண்ணிலழியும் மனித இனமுள்பட எல்லா இனங்களும் வாழ வழிவகுத்த வல்லானொருவனுளன். அதையே திருவாசக முரைத்த மணிவாசகப் பெருமானர்,

"ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை, நாய்சிவிகை ஏற்றுவித்த
என்தாதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ."

எனத் தீட்டியுள்ளார்.

[illegible]ிய இறைவனே பின் கலை களையும், மெய்ம்மைகளையும், உலகங்களையும், பின்னும் விரித்து உயிர் புணர்ப்புநிலை (சகலாவத்தைகளை) யுறுதற்குரிய கருவி, கரணங்களைத் தோற்றுவித்தனன். அத் தோற்றத்தை அழிக்கவும் ஆக்கவும் ஆற்றல் உடையவன் எவனே அவனே

இயற்கையைத் தோற்றுவித்தவன். அதனையே மெய்கண்டதேவர் சிவஞானபோதத்தின் முதற்சூத்திரத்தின்கண் மொழிந்துள்ளார்.

"அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்
தோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதாம்
அந்தமாதி யென்மனார் புலவர்."

என்றார்.

மணிவாசகப் பெருமானார் தம் மணிவாசகத்து,

"விண்ணிறைந்து(ம்) மண்ணிறைந்து(ம்) மிக்காய் விளங்கொளியாய்
எண் இறந்து எல்லை யிலாதானே."

என்று குறித்த பொருளை, நீள்கடலுலகில் வாழும் மக்களே நோக்குக! சிந்தித்தாய்வு காண்க!! இயற்கையென்பதென்னை யென மொழிந்த துரைமகனின் கூற்றைக் காண்க "Nature is the art of god (Browne)," கடவுளென்ற சிற்பியின் கலையே இயற்கை. அவ்வியற்கையை அழிக்கவும் மீண்டும் தோற்றுவிக்கவும் திறனுடையது திருவருளே.

அத் திருவருள், ஆதி இறை எத்தன்மை கொண்டவன் எனத் திருவண்டப் பகுதியில் திறம்படத் தீட்டுகின்றார் மணிவாசகப்பெருமான். நோக்குக:

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இல்நுழை கதிரின் துன்அணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன்."

இதற்கு விரிபொருள் யாம் வரைந்த 'திருவாசக விரிவுரை' யிற் காண்க. நம்மொழியாம் தாய்மொழிக்கண் இயற்கையென்பதென்னை? அதனைப் படைத்தவனெவன்? அவன் தன்மையின் நியதியென்ன? என உரைக்கும் நூற்கள் நிரம்ப இருக்கின்றன. வாசகர்களே! ஓய்வு கிட்டும்போதெல்லாம் தம் சிந்தனையை ஏவி அறிதல் நன்றெனக் கருத்துட்கொண்டால் எப்பொருளுக்கும், எவருரைக்கும் எதிர்க் கூற்றுக்கும் சான்றுடன் பதிலிறுக்கலாமென்பதே யாம் கண்ட கருத்து.

மேலும், இயற்கையின் எழில்களைக் கண்டுகளிக்கும் தன்மையைப் பாரறியச் செய்தவன் கவிஞன்.

உவமைக் கொன்றினை உரைக்கின்றோம். "நான் மலையின் அடிவாரத்திற்குக் காலை வேளையில், கதிரவன் தன் கதிர்களைப்

பரப்பி வானளாவ வெளிப்படுந் தருணத்து, இளந்தென்றலின் இன்னமுதைப் பருக, என்னுள்ள வெழுச்சிகள் அமைதியுற, எவரும் என்னை நோக்கா திருக்க விருப்புடன் உலாவினேன். இவ்வுலவுதல் இடையறாது நடந்தது. இதற்கிடையிற்றான் கண்டேன் அங்கு ஓர் காட்சியினை. என் நெஞ்சத்தோருணர்வை எழுப்பியது. அஃதென்னை? புதர்நிறைந்த கானகத்து மட்குவியலினருகில் மலர்ச்செறிவுள்ள முட்கள் நிறைந்த ஞாயிற்றின் ஒளியால் அதனைப் பொன்வண்டுகள் மொய்த்ததோ றுறைவிடமோ, இல்லை; குறுஞ்செடிகளின் செழுமை மிகுந்த மலர்களே, மலர்க் குவியல்களைத் தன்னுட்கொண்ட தாவரமேயெனக் கண்டேன். தாவரமேயெனத் தம்முட்கொண்டாலும், அதனருகிருந்து பாடுங் குருவியொன்று தன் இன்னிசையை எழுப்பியது; அவ் இன்னிசை என் நெஞ்சினை ஈர்த்தது. யான் அருகிற் சென்றாலோ அது அங்கிருந்து விண்வெளிச் சென்றுவிடுமேயெனக் கண்டு, அதன் குரலினிசையில் என் மனதைப் பறிகொடுத்து, வாள்தடங்கண் வனிதையின் வாழ்த்தொலியோ, முத்தன்ன வெண்நகையின் வாய்மொழியோ, மையார் தடங்கண் மடந்தையின் தேன்மொழியோ, கொங்கைகள் பொங்கக் குழையும் செல்வியின் செம்மொழியோ, கொங்குண் கருங்குழலியின் குரலோ, இல்லை, இல்லை, இல்லை. அதனினும் மேம்பட்ட தொன்றாய்த் திகழ்கின்றதே! கிளி வந்த மென்மொழியாள் இன்குரலோ, இல்லை. மின்னிடைச் செந்துவர் வாய்க் கருங்கண் வெண்நகைப் பண்அமர் மென்மொழியாள் மென்குரலோ, இல்லை. எல்லாவற்றினும் மேம்பட்டதாயமைந்து என் அகம் நெகப் புகுந்து அமுதூறச் செய்யும் ஆற்றல மிக்குள்ளதாயிருக்கின்றதே. மானிடப் பிறவியெனப் பாரினில் தோற்றுவித்து, அப் பிறவியில் பெண்ணினத்திற்கே குரலினிமை தனியுரிமையென ஈந்தது இயற்கையெனப் பிறருரைக்குந் திறனு? இப் புள்ளினத்திற்கு அளித்தது, இல்லை. ஆறறிவு நமக்கேயெனவுரைக்கும் மானிட இனத்திற்கும், குறைந்த அறிவாகிய ஐயறிவுடைய இனத்தின்பால் தனியொரு விருப்புடன் இவ் இன்னிசை அமைத்தது எது? இயற்கையா? இல்லை. இயற்கையென்ற கலையினை உலகத்தோர் கண்டுகளிக்க ஈந்தது எம்மிறையின் அருளே. அதனை அறியவே இவ்வாறு படைத்தனன் என்ற முடிவிற்கே வருகின்றேன். அப்பாடுங் குருவியின் இன்னிசையை அழையா விருந்தாகப் பருகினேன். அதன்பா லெண்ணம் என்னையும் அறியாது ஈர்த்தது என்றுரைத்தல் வியப்பில்லை. அதன் செய்கைகளைக் கண்ணுற்றேன், உரைக்கின்றேன்.

அதன் செய்கைகளைக் காண முயன்றாலும், அஃதிசைத்த இன்குரலே என்னை, மயக்குகின்றது. மயக்கமெனிற் காதல்

மயக்கமா? இல்லை. "என்னைப் படைத்த எழிலார் இறையே உன்னையும் படைத்தனன். நீ அதனை யறியாது இயற்கையின் இனிய கீதமென்று உன்னுகின்றனையா? பேதையே! தவறு. உன் சிந்தனைக்கரிய செல்வனும் கடவுளே எனக்கிக்குரலை யளித்து உன்போன்றவரை அவன் திறனறியச் செய்ததே அறி; அவனையறி. 'அவனன்றி அணுவும் அசையா.' இதனை நீ உலகுக் கெடுத்துரை", என்றன்றோ ஒலிக்கின்றது. என் நெஞ்சத்து நீங்காததொன்றாய் நின்றிலங்குகின்றதே. உரைக்கின்றேன், உலகுக்குப் பொறு. உன் செய்கையினை நாளும் நாளுங் கவனித்து ஒருங்கு சேர்த்து உலகுக்குரைப்பேன். நாளை மீண்டும் வருவேன்.

இன்றுமுதல் உன் தொழிலென்ன? நீ செய்யும் வகைகளென்ன? என்று கண்காணித்து அதனை உலகறியச் செய்வதே என் குறிக்கோள். பாடுங்குருவி காலையில் தன் இன்குரலால் ஞாயிற்றின் வரவை வாழ்த்தியது. பின் அருகிருந்த நீர் நிறைந்த கேணியிற் சென்று தன் உடலை அதில் ஆழ்த்தித் தன்னைத் தூய்மைப்படுத்தி இளஞாயிற்றின் வெண்கதிரொளியில் தன் சிறகடித்துத் தன் உடலிலுள்ள ஈரத்தினைப் போக்கியது. பின் தன் கூரிய அலகினால் கேணியின் கரையில் ஒதுங்கியுள்ள பாசியைக் கொத்தி எடுத்துப் பன்முறை புதரின் நடுவிற் செடிகளினூடுகொண்டு சேர்த்தது. பின் பிறவியிலே தொழிலாளிபோல் தன்றொழிலைத் தொடங்கியது. கேணியினின்று கொண்டு சென்ற பாசியை ஒரு கூட்டின் வடிவுபோல உருப்பிடித்தது. பின் கானகத்தினூடு பறந்துசென்று சிறிது நேரத்திற் காய்ந்த சுள்ளிகளைக்கொண்டு அக் கூட்டினுள் உருப்பிடித்த கூடு உறுதி குலையாவண்ணம் நிற்பதற்கேற்பச் சுள்ளிகளை வரிசைப்படுத்தியது. இம்மட்டா? அருகினிலுள்ள கேணியின் கண்ணுள்ள இறுகிய தொளியைக்கொண்டு அக் கூட்டின் உட்புறமும் வெளிப்புறமும், கைதேர்ந்த தொழில் வல்லுநன்போல் தன் அலகாலும், காலாலும், பின் சிறகாலும் மெருகிட்டது. பின் அருகில் நிலப்பரப்பிலிருந்த புற்களின் பூக்களால் அக்கூட்டினை அழகுபடுத்தியது. அப்பாடுங் குருவி தன்னை மறந்தநிலையிற்றான் அதன் வினையினில் ஈடுபட்டது. இல்லையேல் என்போன்றவன் அதன் செயல்களைக் கண்ணுற்றதைக் கருத்துட்கொண்டதாயிருந்தால், என் கருவிழிகளினின்றும் எங்கோ சென்றிருக்கும். அச் செயல் முடிந்ததும் விண்வெளியில் விண்ணெனச் சென்றது; யானும் என்னுறைவிடம் நோக்கிச் சென்றேன். மறுநாள் எம் கால்கள் எம்மை அங்கிழுத்துச் சென்றன. செவிமடுத்தேன் இன்குரலை, அன்றைய இசைக்குரலில் ஏதோ துன்பத்தின் சாயல் ஒலிப்பதுபோல்

எனக்குரைத்தது. இன்று பாடுங் குருவியே உனக்குற்ற இன்ன லென்னை? உன் குரலில் துயரமே தோன்றுகின்றதே! பொறு. அறிந்துரைக்கின்றேன். கண்டேன். சிறிதுநேரத்தில் தன் கூட்டை நோக்கி அதனுட் சென்று மறைந்தது. எத்தகைய ஒலியும் என் செவிகளில் விழவில்லை. அப்புதரின் அருகிருந்த மரத்தின் உச்சிக் கிளையொன்றில் ஏறி அங்கு நோக்கினேன். அழகான முட்டைகளை இட்டு, அதனையே நோக்கிக்கொண் டிருந்தது. அம் முட்டைகளின் அழகினை எடுத்துரைக்க இயல வில்லை. கதிரவனின் ஒளியில் துலக்கமுற்று அம் முட்டைகளின் வடிவு எடுத்துரைக்கவொன்ருய் இலங்கவில்லை. கற்பனைக்கும் மேம்பட்டது. பின் நான் என் வீடுநோக்கிச் சென்றேன். சில நாட்கள் சென்று திரும்பவும் சென்று மரத்தின் உச்சியி லேறி உற்றுநோக்கினேன். பாடுங் குருவி தன் குஞ்சுகள் புடைசூழ அவைகளின் கீச்சுக்குரலைக் கேட்டேன். என்னை மறந்த நிலையிலிருந்தேன். சிறிது நேரத்திற்குள் விண்வெளிச் சென்று, தன் அலகினுல் கனியொன்றைக் கொத்தித் தன் கூடு நோக்கி வந்து, தன் குஞ்சுகளைத் தண்ணளியுடன் கண்காணித்து உணவை ஊட்டியது. அக் குஞ்சுகள் தாய்க் குருவியளித்த இரையை அன்புடன் ஏற்றுத் தத்தித்தத்திக் கிள்ளைமொழி பேசிப் பறக்க முயன்றது. சிந்தித்தேன். ஐயறிவு கொண்ட பாடுங் குருவியே! உன் நிலை கண்ணுற்ருல் என்னவென எடுத் துரைக்க? இத்தகைய ஆற்றலை உனக்களித்தது யார்? இயற்கை யென உரைக்கின்றனரே! இதனை ஒருசாரார். எங்ஙனை ஒப்பு வேன்? இல்லை. இயற்கையை ஆட்டிப் படைக்கும் அரியதோர் ஆற்றலே இவ்வாறு உன்னைப் படைத்து, உன்னிடமிருந்து ஆறறிவுடைய மானிட இனம் அறிந்தொழுக ஆக்கியதேயென அறிகின்றேன். உன்னிடமிருந்து எனக்குக் கிடைத்தவை, கடமையைத் தவருது செய்தல், சோம்பலகற்றல், எல்லாம் படைத்தவனும் இறையைப் போற்றல். இத்தகைய தன்மையை உனக்களித்தவன், எல்லாவுயிர்கட்கும் இத்தகைய திறனளித் திருந்தும் அதனைப் புரிந்துகொள்ளும் தன்மையிலராய், புரிந்தும் எதிர்த்துக் கூறினுலே, தமக்கும் ஒரு தனிஇடமுண்டென்ப தைத் தம் கருத்துட்செலுத்திச் செயற்படுவதை எண்ணுங்கால் வள்ளுவருரைத்த வாய்மொழியாகிய,

"ய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்."

என்ற திருக்குறளை ஆய்ந்து நோக்கினுல், ஒருவன் நுட்பமான நூல்பல கற்ருலும், ஊழிற்கேற்றவாறே அவனுக்கு உள்ள தாகும் அறிவே மேற்பட்டுத் தோன்றுமென்ற உண்மையே

புலனுகின்றது. (இயற்கையென்பது, ஆண்டவனின் கலையே. இயற்கைக்குத் தனித்தியங்கும் ஆற்றல் இல்லை. அதனை இயக்குபவனே கடவுள்) மேலும், இயற்கைக்கு மேற்பட்ட வொன்றும் இல்லை. மக்களைக் குழப்பத்திலாழ்த்தி அவரவர்கள் வயிறு வளர்க்கச் செய்த வழி... 'கடவுளில்லை, கற்பனையே' என்று கூறி வரும் என் உடன்பிறந்தோரின் கருத்துக்களைக் கருத்துட் கொண்டால், வள்ளுவரின் உரையே முன்வந்து நிற்கின்றது. அஃதென்னை? ஆய்மின்!

"நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு."

செல்வப் பொருளினை ஈட்டுதற்கு, அவ் ஈட்டு முயற்சிக்கு ஊழ்வகையால் நல்லவை எல்லாம் தீயவை ஆதலும், தீயவையெல்லாம் நல்லவை ஆதலுமுண்டென்றே சிந்தையிற் றரித்தல் சாலச்சிறந்ததே. மேலும் இதற்குமுன் குறளையும் ஆய்ந்து சொளலறிவே.

"இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு."

திறப்படச் சிந்தித்தாய்வு காணல் நன்று. வாசகர்களே, கருத்தினை ஊன்றி நோக்குங்கள். பொருள் தெரியும். மேலும் தங்கள் கருத்திலோர் நினைவெழலாம். இவ்வாறு இயற்கையே தம்மூட்கொண்டியக்கி வருகின்றதென்ற கருத்தை வலியுறுத்திக் கடவுளாரென்பது கற்பனையே என்றுரைப்பவருக்கு அக்கடவுளார் உண்மையிலிருப்பரேல், அவரளித்த தண்டனை என்னவென்று தருகின்றேம் நோக்குக.

"தெய்வமுள தென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க்கு இல்லைத்தம் இன்புதல்வர்க்கு அன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்?" (நீதிநெறி விளக்கம்)

இதற்குப் பொருளைத் துரைமகனும் திரு. ஜி. யு. போப் (G. U. Pope) அழகுறச் சித்திரிக்கின்றார், காண்க. (God punishes those who acknowledge Him when they go astray—and not others. Men correct their own sons.)

"தீயசெயற் செய்வார் ஆக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல—தீயன
நல்லன ஆகாவாம் நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமாப் போல்." (நீதிநெறி விளக்கம்)

இதற்குப் பொருளை எளிய நடையில் இயம்புகின்றார் திரு. ஜி யு. போப் (G. U. Pope) Evil is evil even when it prospers. Evil Can't become good) (கவயமா - காட்டுப்பசு).

உடன் பிறந்தோரே! உற்றுப்பொருள் கொள்க. இயற்கை என்பது வானுலகளவும் நிறைந்து மண்ணுலகளவும் நிறைந்து இவற்றிற்கு அப்பாலுமாய் நிறைந்தவனுகிய, எண்ணிக்கையின் அளவினையும் கடந்து வாய்ப்பு இன்றி விரிந்தவனுகிய இயற்கையைத் தன்னுள் வைத்தியக்கி உலகறியச் செய்துவருபவனுகிய, எம்மை இவ்வாறு எடுத்துரைக்க அளித்தவனுகிய முழுமுதற் கடவுளின் கலையே. இயற்கையின் தலைவன் இறையே. இயற்கைக்குத் தனித்தியங்கும் வலி இல்லை. இதனையே ஒரு பெருமகன் ஆங்கிலத்தில் அழகுறச் சித்தரிக்கின்றான்.

"Nature is a source of great attraction to those whose souls are attuned with God. Artists and poets especially adore nature. It does not necessarily mean that they are all nature mystics. Nature is a nurse, an asylum, a soother to men like Byron, highly strung in nerves, with a mind vivid and active and heart throbbing to imbibe the Juice of Nature, to soothe, and curse the overwrought body, wounded by the tempests of passion. To poets like Wordsworth, nature is a teachar, a harmoniser, a beautifier and an inspirer. Nature is a grand mirror reflecting God's beauty to those who are in tune with God. The green trees and the chirping birds, the grey mountains with their snowy tops and the gliding rivers, the deep ravines and sunlit meadows, the flowers that throw their fragrance in the air and the bushes that shine with lustre of rising sun, are all God's massengers, embodiments of truths scattered all round, breathing an atmosphere of harmony and music and creating that resplendent Beauty, which is God. Nature creates a sense of joy and beauty and from one vision of beauty we pass on to another till we reach the vision of God Himself,—the flight of the Alone to the Alone."

(Joyous Mysticism, to lighten man-kind into the worship of God. Part II by Minocher K. Spencer.)

**வாசகர்களே! உடன் பிறந்தோரே!! சிந்தித்தாய்வு காண்மின்! பிணையின் கருத்தை எம் கருத்துடன்! காண்மின்!**

நுவல்மின்! இயற்கையின் எழிலைக் கண்டு களித்து, அதனைப் படைத்தாட்டும் இறையை ஏத்துமின்! இதனை மனத்துட் கொண்டால் யாமுரைத்த கூற்றுச் சரியெனக் கொள்வீர்களென எண்ணுகின்றேன். எல்லாம் வல்ல இறைவனை ஏத்துமின்! மணிவாசகப்பெருமானின் மணிமொழியைக் கருத்துட்கொண்டு "எல்லாம்வல்ல இறைவனே தலைவன்," என்று வணங்குதல் நன்று. நோக்குமின், கீழ்தரும் பாவினை.

"போற்றி,இப் புவனம் நீர்தீக் காலொடு வானம் ஆனாய்
போற்றி,எவ் வுயிர்க்குந் தோற்றம் ஆகிநீ தோற்றம் இல்லாய்
போற்றி,எல் லாவு யிர்க்கும் ஈறாய்ஈ றின்மை ஆனாய்
போற்றி,ஐம் புலன்கள் நின்னைப் புணர்கிலாப் புணர்க்கை யானே."

—திருவாசகம்.

இத் திருவாசக மணிமொழிகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த தன்மையினைக் காண்க.

Hail! Thou who art earth, water, fire, wind, ether too!
Hail! Thou, all life's phenomena,—Thyself invisible
Hail, All living beings' End,—Thyself without an end!
Thyself reaching through all, by senses five unreached!

(G. U. Pope.)

இதனைச் சிந்தித்தாய்வுகாணல் நன்றென யாம் வேண்டி விரும்பி, எல்லாம் வல்ல இறைவனை வணங்குதல் நன்றென வேண்டுகோள் விடுத்து, இயற்கையை உலகுக்களித்தவன் கடவுளே என்ற கருத்தை வலியுறுத்தித் திருவருளைத் திறம்பட வணங்கி விடைகொள்கின்றனம். விருப்பிருப்பின் தொடரும்.

மறைமலை.

---

## ஊதடா, சங்கு!

[திரு. ஆ. துரைக்கண்ணு]

சூதடா இந்தி நமையாளல்; இந்நிலையுந்
தீதடா நீடித்தல்; நீ, எனவே—ஊதடா
உந்தும் தமிழுணர்வா லூழியெனுங் காலக்கே(டு)
இந்திக்கிங் குற்றதெனச் சங்கு!

---

# *திரு. வி. க. அவர்களின் கடிதம்

திருநெல்வேலி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆணையர் திரு. சுப்பையாபிள்ளைக்குத் திரு. வி கலியாணசுந்தரன் விரும்பி வரைய இயக்கி வரைவது.

செல்வரே! இன்று நம் தமிழ்மகன், தமிழன்னையின் அருந்தவப் புதல்வன், நாட்டினிலோர் நன்னயம் கொண்டு வாழ்ந்த நல்லோன், நாட்டினிலே அன்னையின் வளத்தை யள்ளி வழங்கிய வள்ளல், செந்தமிழ்க் காவலன், செவ்வேளினருள் கொண்டோன், தென்னகத்துத் திலகம், சிவநேசச் செல்வன், பல நூலும் கற்றோன், பாரிலே தனக்குநிகர் எவருமில்லையென வாழ்ந்தோன், தமிழாம் தாய்மொழிக்கு என்றுமே இனிமை யுண்டென வெடுத்துரைத்த இளையோன், கற்றறிந்த நூற்களை இல்லையென வுரையாது, எக்கருத்திற்கும் நூற்சான் றெடுத் துரைக்கும் அறிஞன், திராவிடமே தூங்காதே, தமிழை நோக்கு, தமிழ் வளத்தை நோக்கு, இனிமையை யெண்ணு, எம்மொழி யின் இனிமை எம்மொழிக்குமில்லை, தித்திக்கப் பேசிச் செந் தமிழின் சுவையையறி நாடே யென்றுரைத்த தோழன், வேதத் தின் அசலமெனப் பேர்கொண்ட பேரறிஞன், வேதத்தின் பொருட்கள் என்னையெனத் தமிழிலே எடுத்துரைத்த மறையே! மக்கள் தம் மனத்து உணர்வினை யூட்டிய கோவே! மறைமலையே! உன்னைக் குறை கூறுதலென்றதோர் கொள்கை யுருவாவது, மறைமலையென்ற வொன்று மறையவில்லை, மறையாமலையாக வளர்கின்றதெனக் காட்டவே. மறைமலையே! நீ மண்ணுலகி லிருந்து போந்த நாளாம் இந்நாளில் நீ மறையாமலையாக இருக் கின்றனை யென்பதை எடுத்துரைக்கத்தான் இயக்குநர்வழி யுரை யாடி வருகின்றுயென்பதனை உலகு உணர்ந்துதான் வருகிறது. இன்று நீ இப்பூவுலகினின்று மறைந்தனையே யல்லாது, காணு வுலகிலோர் சோதியாய் நீ வாழ்கின்று யென்பதனை யறியட்டும திராவிடம்.

தமிழணங்கே! தமிழ் மகனே! மறைமலையை மறவாதே. தென்னகமே நீ உறங்காதே, கற்றறி, கருத்தாம் மறைமலை மொழியினை, நூற்களை. எம்முலகில் வாழ்கின்றுன், இறக்க வில்லை; இருக்கின்றுன். அறி, கற்றறி, ஆய்ந்தறி, சுவையறி, தெவிட்டா இன்பமாம் நூற்களாமவன் வரைந்ததை, தென்ன கத்துத் திலகமவன் வரைந்ததை. செந்தமிழ்ச் செல்வியே! நீ அவன் திறனை நாடறிய வை, உறங்காதே, விழித்தெழு.

ஆங்கில நாள் }
15 - 9 - 59 }

காணுவுலகவாசி
திரு. வி. க.

* இயக்குநர்வழி மறைமலையடிகளைப் பாராட்டி வரைந்தனுப்பியது.

# *கலைமகள் வணக்கம்

தொழுவார்க்கிரங்கித் துணைபுரியும் அன்னையே! வாணியே! வீணையேந்திய வளைக்கை விளங்க வீறுகொண்டு அருளளிக்கும் தாயே! விதியென்ற ஒன்றைத் தடுத்தல் மதிகொண்டென உரைக்கும் மாண்பீந்த தலைவியே! மதிதனைத் தரத் தனிய தோராற்றல் கொண்டிரங்குவார்க் கருளும் தலைவியே! தலைவா என அழைத்தாலும், தலைவியாம் நீயுமுடனிருந்தருள் செய்யு மன்னையே! மறையே யென விண்டாலும், மறையை யுணர அறிவளிக்கும் அன்னையே! விதிதான் வினைப்பயனாய் வந்துதித் ததோவென நினைந்தாலும், விதியல்ல, மதியே, வினைப்பயனாய் வந்துதித்ததென உணரும் ஆற்றலளிக்கவல்ல தலைவியே! உன் கலையாம், மொழியி னினிமை தன் செவி மடுத்து இனிது, இனிது, எதனினும் இனிது, அமிழ்தினும் இனிய தமிழ் மொழியெனத் தன்னுட்கொள்ளும் ஆற்றலும் உன் கருணை கொண்டல்லவோ? இறைவியே! கொத்திக்கொத்திக் குருக்கு முளைக்க வைத்தாலும், குருக்கே நீ ஏன் வளர்ந்தாய், கொள்ளன்றோ நாம் விதைத்தோ மெனப் பகுத்தறியப் பண்பீந்த பாவையே! நாளெல்லாம் உனை நினைந்தே வரும் அன்பர்க்கும், வறுமையே நீயளிக்கும் அருளோ வெனத் தமிழினம் நினைக்கவைக்கும் நீதிதான் கொடுத்தனையோ வெனக் குறைபடும், தெரிவிக்கும் தோன்றுதலுக்கும் மதி யெனப் பெயரிட்டு மானிடர் மகிழாது, தொல்லை கொடுக்க வந்ததே என நினைத்து ஒட்டத் தன்மையும் ஈந்த தாயே! தொழுதால் அருள் செய்வேன், தொல்லைவிட்டொழியென உரைக்கும் கருத்தியும், கருமம் நீ கொண்ட வண்ணமென்னே? வாணியே! நாவாலுன்னைப் புகழ்ந்தாலும், நீள்நிலத்து எதிருரைக்க எவரெவருளர் என வாதிடத்து துணையளித்த தோகை வேலனே துணைக்கொண்டு செந்தமிழை எடுத்துரைக்கத் திறனளித்த தலைவியே! தோற்றத்தில் வாணியென அழைத்தாலும், அறிவுக்கோர் அருங்கடலா யமைந்து உன் அருளீந்து அவர்க்கெனத் தனியொரு கருத்தீந்து, கலக்கமென்னும் அலையினையும் இயைத்தளித்து, அறிவென்னும் கருவி கைக் கொடுத்து, அறியாமற் றிகைக்கவைக்கும் ஆற்றலும் அளித்து வரும் அன்னையே! வேற்றுமையென்ற ஒன்றையளித்து, விலங்கினம், புள்ளினம் என்பதைப் பகுத்தறிவென்ற ஒன்றினால் அறிய வைத்து, வேடுவனே யான், விலங்கினமே! புள்ளினமே! உன்னை வெருட்டுதலே என்திறனெனக் கருத்துட்கொள வைக்கும்

---

* இயக்குநர்வழிக் கலைமகள் விழாவன்று வரையப்பெற்றது.

அறிவினையுமீன்ற அன்னையே! பாரினிலே, நமக்கெதிரெவருளர், நாம் விடுக்கும் வினாவினுக்கு விடையளிக்க எவருளரென்ற இறுமாப்பும் அளித்த வாணியே! கலையென்ற ஓவியத்திலுன்னைத் தீட்டிக் கவினுறு கன்னியாம், கலைமகள், நாமகள், கல்வியினை அளிக்கவல்ல அரசியே! எனக் கருத்துட்டோன்றக் கருத் தளித்த கருணைபொழி வாரிதியே! தலைவியே! இறைவியே! வாணியே! கலைமகளே! நாமகளே! உனக்கெனக் கொண்டாடும் திருநாளாம் இந்நாளில் நீ செய்வதென்னையென, இனியென, எளியனும் மறைமலையின் கருத்துட் கொண்ட கருத்தினைக் கைகூப்பிச் செம்பொற் குதிதாளில் பொருத்திப் புகலுகின் றேன். வாணியே! உன் வளமெல்லாம் வையத்து வளங் கொழிக்க அருளளித்து, வேற்றுமை யென்ற வேழத்தை, உன் கைக்கொண்ட வீணையென்ற அங்குசத்தால் அகற்றிவிடு. கலை மகளே! கருத்திலே, நற்கருத்தே எழவைத்து, நாமென்றகம் களையக் கருணைசெய். நாமகளே! கருத்துக்கள் தன்னகத்தே கொண்டு, எடுத்துரைக்கத் திறமற்ற எளியராம், எம்மனோரை, எடுத்தியம்பத் திறனளியே, தாயே என வணங்குகின்றேன். எக்கருத்து எங்கட்குதித்தாலும், நற்கருத்தாயுதித்து, நாவால் எடுத்துரைத்தாலும் நாட்டோர்க்கு நலனெனக் கொள்ளும் திறனுமீயே யெனப் போற்றுகின்றேன் குவலயத்துக்குற்ற கல்வி என்னும் தனித்திறனை எவருக்கும் அறிய ஆற்றலில்லை யெனக் கூறும் மொழியினைத் தகர்த்தெறிந்து, குவலயத்துக் கற்றோரேயுளரென்னக் கல்வியினை எவர்க்கும் கொடுத்தருளிக் கல்வியே எப்பொருளினும் சிறந்ததென அறியவைக்கும் அறிவினை அளி, அன்னையே என மறைமலை வணங்குகின்றேன்.

நின் வளமில்லை யெனில், நீணிலத்து நின்றெதிர்த்துரை யாடும் ஆற்றலே அற்றுவிடுமென அஞ்சுகின்றேன். அன்னையே! கல்விக்கடலே! கருணை பொழி வாரிதியே! நின்னருள் நீள் நிலத்தென்றுமே நின்றிலங்கத் துணைசெய், வணங்குகின்றேன்.

வாழி! அன்னையே! உன் கல்விவளம் சிறக்கக் கொழிக்க.
வாழி! வாணியே! உன் கானவளம் சிறக்கக் கொழிக்க.
வாழி! கலைமகளே! உன் கலைவளம் சிறக்கக் கொழிக்க.
வாழி! நாமகளே! உன் நாவளம் சிறக்கக் கொழிக்க.
வாழி! வையகஞ் சிறக்க வாழி! எவ்வுலகும் சிறக்கவாழி,
ஏந்திழையே!

காணுவுலகவாசி
நெல்லை, மறைமலை.

# *பண்டிதமணியவர்கள் முடங்கல்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவமைச்சரே, சென்னையம்பதியுறை சீலரே, திரு. திருவரங்கத்தினிலையரே, சைவ சித்தாந்தத்தையே யென்னையென ஆராயப் புகுந்ததோர் குழுவினை ஆட்டி வைக்கும் அண்ணலே, (ஆவியுலகை ஆட்டிப் படைக்க எண்ணினர் மறைமலையடிகளார், அவர்க்கென எங்கிருந்து கிடைத்தனனோ இவ்விளைஞன் ஆட்டி வைக்கின்றான், தாம் வரைந்திருக்கின்றீரென. எம்மை நேர் முகத்தான் அழைத்தால், நாம் என்ன முடியாதென உரைப் போமோ என்னவோ எனக் கருதி மறைமலையடிகளாரைக் கூப்பிட்டு, அண்ணா, திரு. சுப்பையா பிள்ளையவர்கள் வரைந்துள்ளபடி இன்று எவரை அழைப்பதெனக் கேட்டு, தம்பி பண்டிதமணி கதிரேசச் செட்டியாருக்கு இன்று முதலிடம் கொடுவென ஆணையிட, பண்டிதமணி கதிரேசச் செட்டியார் வரவேண்டும் என, இயக்குநர் விளிக்க, விரைந்தோடி வந்தேன். யாமே கதிரேசச் செட்டியார் என்று உரைக்கவும், இயக்குநர் நம்மிடமே வினாத்தொடுக்க விழைந்து, உம்பெயர் மு. கதிரேசச் செட்டியாரா? அல்லையேல் கதிரேசஞ்செட்டியாரா? பின்னும் கதிரேசன் செட்டியாரா? சொல்லும். திரு. சுப்பையாபிள்ளை அவர்கள் கதிரேசன் செட்டியாரென வரைந்துள்ளனரே கூறுக, நும் இயற்பெயரை யென வெருட்டத் தொடங்கிவிட்டான்.) எளியனும் எம்மை மறவாது எம்மிடமும் குற்றமில்லாத தனித் தமிழ் நடையிலே கட்டுரை வேண்டுமென விருப்புக் கொண்டோரே, திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்களே! அடியனும் நகரத்தார் குழுவினன், இன்று இயக்குநர் கையாட்டுப் பாவை, நும் அன்புத்தளைக்குக் கட்டுப்பட்டவன், இயல்பிலே எளிய நடையிற் சொற்பொழிவாற்றுபவனும், பண்டிதமணி, (இவ்விருது நாமாக வைத்துக்கொள்ளவில்லை ஐயா, நீங்களாகத் தந்ததே) மு. கதிரேசச் செட்டியார் திருவருளை வேண்டிச் செலுத்தும் சிரந்தாழ்த்தும் நும் கண்ணுக்குப் புலனாகா முறையில், வணக்கம், வணக்கம், வணக்கம்.

நல்லோய், இன்று நாமாகிய கதிரேசச் செட்டியார் என்ன தலைப்பில் கட்டுரை வரைதல் நன்றென நினைந்த காலை "தமிழன்னை" என்ற தலைப்பில் கட்டுரை வரைதல் நன்று. கதிரேசா! நீ அன்னையின் தன்மை, மொழி வளம் இயைத்து நீ எது விரும்புகின்றாயோ, அதை வரையென மறைமலையடிகளார் மனமுவந்துரைக்கப் பெரு விருப்புடன் நாமும் அதைக் கருத்துட்கொண்டு வரைய விரும்பித் திருவருளை, செவ்வேளை

---

* நெல்லை இயக்குநர்வழி வரப்பெற்றது.

துணைபுரியென வணங்கித் தலைப்பட்டனம். நாம் வரையுங் கட்டுரையின்கண் பிழை, வடமொழி, சந்தி பிரிப்பு, குறியிடல் ஆகிய தவறிருப்பின் இவ்வினைஞனைக் குறைகூறாது, தாமாகிய, சழகவமைச்சரே அதற்குரியரென, நாமாகிய கதிரேசச் செட்டியார் வரைகின்றோம்.

திரு. சுப்பையாபிள்ளை திருவேளினருளால் பலகாலம் பாரினில் சிறக்க வாழ்ந்து கழகத்தை நன்முறையில் செயலணியின் துணைகொண்டு, சிறக்க நடாத்த சிவவேளே அருள் புரியென வணங்குகின்றேம்.

மு. கதிரேசச் செட்டியார்.
கானுவுலகவாசி,
செல்லையப்பருறையும் செல்லையம்பதி.

ஆங்கில நாள், 16-10-59

# தமிழன்னை

[பண்டிதமணி]

தமிழன்னை என்பவள் எவள்? நம் அன்னையும் தமிழன்னை தானே. தமிழ் மொழி பேசும் அன்னைகள் யாவருமே தமிழன்னைகள் தாமே! இதற்கெனத் தனித் தலைப்பிடுதல் ஏனோவென ஐயமெழுதல் இயற்கையே. இருப்பினும், வாசகர்களாகிய நீங்கள் கானுவுலகிலுறைந்து வரும் பண்டிதமணி. மு. கதிரேசச் செட்டியார் உரைக்கும் முறையே வேறு. அஃதென்னை, நம் முலகத்து (நம் பூவுலகத்து) அன்னைகளுக்கெல்லாம் மொழி பயிற்றுவித்த தமிழ் என்னும் இனிமையைத் தன்னுட் கொண்டவளாம், அன்னையாம் தமிழன்னையே யாமெடுத்துக்கொண்ட பொருள். எம்மொழிக்கீடு எம்மொழியுமில்லை யென எம்மொழி மொழிபவரும் உரைக்கலாம். ஆனால், எம் அன்னையாம், இயற்கை மொழியாம் தமிழுக்கீடு எம்மொழியுமில்லையென, யாமாகிய கதிரேசச் செட்டியார் உரைக்கின்றேம். ஏன்? செட்டியார் தமிழ் மகனைப் பிறந்து, தமிழிலோர் தனி விருப்புக் கொண்டு பயின்றதின் விளைவா? அல்ல தமிழ் மகனும் செட்டியார், தமிழன்னையாம் தமிழ்மொழிக்குச் செய்யும் தொண்டா? என்னையெனப் பிறமொழித் தொடர்பாளரும், ஏன், நம் தமிழன்னையின் தவப் புதல்வர்களென வாழுந் தன்மையாளர்களும், நம் தமிழன்னையின் சீரிளமைத் திறம் அறிய இயலாத் தன்மையாளர்களும், தம் முள்ளுமல்லாது, அரங்கிலேறி ஆரவாரத்துடன் பெருமுழக்கஞ் செய்வதுந் தமிழர்கள் கண்டு வருதலில்லையோ? இருப்பினும் தமிழன்னையின் தனித்திறன் என்ன? அவள் கோலமென்ன? அவளின் அற்றைய நிலை என்ன? இடைக்காலத்து நிலை என்ன?

இற்றைய நிலை என்ன? என்றுமே நம் தமிழன்னையின் தன்மை என்ன? அவள் தன்னிலை திரியும் இயல்புடையளா? இல்லையேல் தன்னிலை திரிய முயலும் தன் இனத்தின் தொழிலுக்கு இசைவுள்ளவளா? அவ்வாறு அன்னை இசைவுகொண்டவளாயின், நாமாகிய நம் தமிழினம், தமிழன்னை, எம் அன்னை என்றுமே தன்நிலை திரியாளென்று உரைக்கும் வழக்கென்ன? சிந்தியுங்கள்; சிறக்கச் சிந்தனையை ஆராய்தல் நன்று. எம் அறிவுக்கெட்டிய மட்டும் விரித்துரைக்க அஞ்சுகின்றேம். ஏன் நம் உடன் பிறந்தாராய தமிழினத்தின் இற்றைய நிலை கண்டே. இற்றைய நிலையில் வந்துற்ற கேடென்னை? உரையுஞ் செட்டியாரே என்றால் யாம் எம் மூலகுக்கேகுவோம். இருப்பினுஞ் சான்றுடன் பகர வரலாற்றின் வளத்தினை வாயுரையா யுரைக்கத் திறம் எமக்கில்லையே, என எண்ணினும், இயக்குநராம் இளைஞன்வழிச் சிறிது உரைக்கின்றேம். திருவருளை, செவ்வேளை உன்னி.

தமிழன்னை என்றுமே தன்னிலை திரிய விழைந்தவளல்லள். என்றுமே கன்னியாய்க் கவினுறு பொலிவுடன், கருத்திலே இனிமையும், மனத்திலே மணமும், தன்னதரத்துச் செந்தமிழின் சொற்சுவையும் நின்றிலங்க, இளையளாய், என்றுமே தன் கோலத்தைக் காண்போருக்குக் கவினுறு கன்னியாய்க், கருங்கூந்தலையுடையளாய்த், தன் நெடுங் கூந்தலிலே தனியதோர் கருமையே கொண்டவளாய்ப், பிறைநுதலிற் புருவ இடையில் வெண்ணீற்றுச் சிறு கோடிட்டு அதனருகில் செஞ்சாந்துப் பொட்டிட்டுப் பால்போன்ற வெண்மை கொண்ட முகத்தினளாய்க், குனித்த புருவமும், குழையுஞ்சுருள் தோடும் அணிந்து, அத்தோட்டின்கண் ஒன்பது மணிகளாம் சுவைகளைப் பொருத்தி வள்ளையின் தண்டென்னுஞ் செவிகளிலணிந்து, தன் திருமுகத்து முழுமதியோவென ஒளிமிளிரத், தன்னிதயத்துக் கருத்தெல்லாம் தன்னிதயத்துறும் தமிழ்மொழியின் வளமெல்லாம் தன் முகத்துத் தோன்றப் பொலிவுடன் விளங்கும், என்றுமே நின்றிலங்குந் தன்மையுடன், என்றுமே கன்னியாய், 'அகத்தினழகு முகத்திற்றெரியும்' என்ற மூதுரைப்படி, கவினுறு, மெல்லியளாய், மல்லிகைக்கொடிபோற்றான் விளங்குகின்றாள். தன் சீரிளமைத்திறன் குறையாதெனை யாமாகிய கதிரேசச்செட்டியார் உரைக்கின்றேம். எம்மனத்து எழுந்து வரைந்த அன்னையின் கோலத்தில், தவறிருக்குமெனத் தாங்கள் குறைகூறினால், யாமுரைக்கின்றேம்: யாம் கம்பரல்லம், வில்லிபுத்தூரரல்லம், நக்கீரரல்லம், உணர்ச்சி வசப்பட்ட உம்போன்ற ஓர் உடல் நீத்த ஒருமகனேயென உரைக்கின்றேம். அவ்வாறு தாங்கள் எம் கருத்துச் சரியல்லவெனத், தெற்றெனப் பொருள் கொளின், யாமதற்குரியரல்லம், எம் உணர்வின் உந்தலே யெனக் கூறுவேம்,

மேலும் அன்னையின் முகத்தினை முழுமதியென மொழிந்தும், அம் முழுமதியிற் றோன்றும் களங்கம்போல், அன்னையின் பிறை நுதலிற் பொலியும் செஞ்சாந்துப் பொட்டெனப் பொருள் கொளினும், அன்னையின் தோற்றம் உலகுக்கு எடுத்துக்காட்டுந் திறனுடைத்தாய்க் கருணை பொழி கன்னியெனத் தோற்றுவிக்கும் கயல் விழிக் கண்களின் கலை என்ன? அக் கயற்கண்களிலே பரிவு, அன்பு, கருணை, ஈகையே மிகுந்து தோன்றும். அன்னையின் அணிகலனும் அவள் நெஞ்சத்தணிவதென்னை? முத்தமிழையே (இயல்இசைநாடகம்) அணிகலன்களென அணிந்திருக்கின்றனள். அதற்குமேல் வரைய, இயக்க எளியேமுக்குத் திறனில்லை. சிற்றறிவுக் கெட்டியவரை வரைந்தேம். தமிழன்னையின் தோற்றம் இவ்வாறு இருப்பதைக் கண்டுகொண்டான் பழந்தமிழன். அன்னையின் புதல்வரும் புதல்வியரும் இயற்கையில் தாய்மொழியாம் தமிழ்மொழியே தம் மொழியெனக் கருத்துட்கொண்டே வாழ்ந்தனர் அக் காலத்து. இதற்கிடையிற்றான் புற்றீசல்போற் புகுந்தனன் இனம்புரியா மொழிபுரியா இனத்தினன் நம் தமிழகத்து. நம் தமிழகமென்பது அக்காலை அகண்ட இந்திய நாடே. இங்ஙனம் இடைக்காலத்துக் குடிபுகுந்தோரினத்தின்பால், பண்டைத்தமிழ் மக்கள், தம் தமிழன்னையின்பாற் றோன்றும், பரிவு, அன்பு, கருணை, ஈகை என்ற தன்மைகளைத் தம்மகத்தே கொண்டவர்கள், வரும் விருந்தோம்புதலிற் றனித் திறம்கொண்டு வாழ்ந்த பண்டைத் தமிழர்கள் இடைப் புகுந்த இனத்திற் காதரவு அளித்த முறைதான் அன்னையாம், நம் தமிழன்னையின் தன்மைகளை மறக்கத் தொடங்கினர். அதன் விளைவே, நம் தமிழன்னையின் சீரிளமைத்திறத்தினை இயக்குந் திறனற்றுப் பிற இனத்தினரின் புரியா மொழியிலே தம் கருத்தைச் செலுத்தினர். அம்மட்டுமா, பெண்களின் தனிக்கவர்ச்சியாம் அழகினுக்கும் அழிவுறு வழியாம், அவ்வினத் தொடர்பினால் விளைந்த நன்மையென்ன?

பழந்தமிழ்நாட்டு மங்கையரின் தன்மைகளை எடுத்துரைக்கப் புகுந்தால் அவ்வினத்தின் பெருமை வரைதலில் அடங்கா; வாயினால் எடுத்துரைக்கவும் இயலா. கற்பென்பதே கன்னியர்க்கணிகலம், மங்கையர்க் கணிகலம் என்பதை எடுத்துரைக்கத் தேவையில்லை. "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்ற மூதுரையை மெய்ப்பித்த பெருமை தமிழகத்திற்கேயென வீறு கொண்டிருக்குங்காலை இன்றல்ல, அன்றே. தமிழணங்கின் தனிக் கோலமென்ன? இளம்பருவங் கடந்து பூப்பெய்தும் பருவமடையுந் தறுவாயிலிருக்கும் கன்னியைக் கண்ணிமைபோற் காத்துக் கருவூலமெனக் கருத்துட்கொண்டு, காலையிற் குளிப்பித்து, முகத்திற்கு மஞ்சள் பூசி இறைவணக்கம், திருமகள் வணக்கம், கலைவாணி வணக்கம், திருவிளக்கு வணக்கம் பயிற்றுவித்து, வீடு

மெழுகுதல், கோலமிடல், உணவு சமைத்தல், இடைவேளையிற் கல்வியறிவூட்டல், பெரியோர்களிடம் எம்முறையிற் பழக லென்பன போன்ற அருங்கலைகளைப் பயிற்றுவித்துக், கட்டிளங்காளைகளின் கண்ணிற்படாது, கற்பெனவொன்றை எடுத்தியம்பித் திருமகளாய் விளங்கவைக்குங் கலையினை அன்றே கண்டனர் தமிழ்ப் பெருமகளிர்; தமிழன்னை, தன் மொழியாம் தண் தமிழைப் புகட்டிய கன்னியர்கள். அக் கன்னியர்கள் முகப்பொலிவு முழுமதி நிகர்த்திருக்கும். செஞ்சாந்துப் பொட்டிட்டு, பூப்பெய்தியதும் நாணமென்ற ஒன்று இயல்பிலே அமைந்திருந்தும் மீக்கூரப்பட்டு இல்லத்துத் திருமகளாய் இலங்கிவந்தனர். அஞ்ஞான்று, அக் கன்னியர்கள் இல்லின்கண் அமர்ந்து குடும்பக்கலைகள் குவலயத்தோர் நாணப் பயின்று, இடைவேளைகளில் அவரவர் மனதுக்கியைந்தபடி இறைவணக்கமும், பழந்தமிழ்நாட்டுப் பெண் திலகங்கள் வரலாற்றினையும் கற்று அறிவிற்சிறந்தாராதற்குரிய பழம் பெருந் தமிழ்நூற்களையும் கற்று அறிவிற்சிறந்தவராயும், மொழிப் பற்றுடையராயும், இனப்பற்று உடையராயும், தமிழ் மொழியின் அன்னையாம், தமிழன்னைபாற் பெருவிருப்புக் கொண்டு கன்னிகையர் கன்னித் தமிழைக் கற்று, கற்பெனப் படுவது தனியதோரிலக்கணமாய்த் திகழ வாழ்ந்தனர். கற்பெனப் படுவது பண்டைக் காலத்திலிருந்தே, தமிழ்மொழி என்று தோன்றியதோ அன்றிருந்தே எந்நாட்டிலுமில்லாக் கற்பெனப் படுவதைத் தன் சிறந்த அணிகலனாய்க் கொண்டு வாழ்ந்தவர்கள் தமிழன்னையின் தவப்புதல்வியராம், தலைசிறந்த பெண்ணினம். நாட்டின் பெருமைக்கும், தமிழன்னையின் பெருமைக்கும் சான்றாய்த் திகழ்ந்தனரென்பது மிகையாகாது. பெண்ணினத்தின் பெருமை இத்தகைத்தெனின், ஆணினத்தின் பெருமை அதற்குக் குறைந்ததோ என யாமாகிய கதிரேசச்செட்டியார் வினவுகின்றேம். அக்காலை பெண்ணினத்தின் பெருமையை எடுத்து வரைந்தகாலை, ஆணினம், எங்ஙனம் வாழ்ந்ததென விரித்தல் நலமெனக் கருத்துட்கொளினும் விரிவுரை, பெருவுரையாகப் பெருகிக் காண்போர்க்கு வெறுப்பினை யளிக்குமென நினைந்தே, என் சிற்றறிவுக்கெட்டியவரை, சுருங்கச்சொல்லி விளங்கவைத்தல் சாலச் சிறந்ததென நினைந்து திருவருளை நினைந்தே வரைகின்றேம். ஆணினத்தின் தோற்றமெங்ஙனம்? காண்போர் குறைகூறாத் தோற்றமும், முகத்திலோர் தனிப்பொலிவும், கோழையல்லாத கோமகனுக்குரிய தோற்றமும், வீரப் பொலிவும், காண்போரைத் தன்பாலிழுக்கும் தனியதோர் கவர்ச்சியளிக்கும் கருவிழிகளும், பரந்த நெற்றியும் அந்நெற்றி நிறைய நீற்றுப் பொலிவும், பசுஞ்சாந்துப்பொட்டும், அழகென்ன அரும்பு மீசையும், தனித்ததோர் பொலிவுடன் ஆண்மகன், மள்ளனெனத்

தனிப்பண்புடன் அருளும், இரக்கமும், ஆண்மையுடன் இயைந்து பெண்ணினமே கண்டு பெருமை கொள்ளும் பொலி வுடன் கருமையோ, கருவண்டோவென உரைக்கும் கைக்கடங் காக் குடுமியுடன் கைவீரக் களிறுகளாய்க் காளைகளாய்க் கல்வி கேள்விகளிற் சிறந்தவராய்க் கற்பெனப்படுவது இருதிறத்தா ருக்கும் இயைந்ததேயெனக் கருத்துட்பொருத்தித் தத்தமக்குத் தகுதியெனக் கண்ட வினையினுட் புகுந்து, கிட்டுமோர் இடைப் பொழுதிற் றமிழ் நூற்களைக் கூடி ஆய்ந்தும், நாட்டிற்கு நன்மை பயக்கும் வழிகள் எவையெவென ஆய்ந்து, நாட்டுத் தலைவனுக்கு எடுத்துரைந்தும், வரும் விருந்தோம்பியும், இறை வணக்கத்தினை அதனதன் காலத்து நெறிபிறழாத் தன்மையுடன் கடவுட் டன் மையின்கண் பெருவிருப்புச் செலுத்திப் பெருமையுடன் வாழ்ந் தனர். தமிழன்னையின் தவப்புதல்வர்கள், ஆண்மை நிறைந்த ஆணினம், கூட்டுறவே அவர்தம் தலையாயதோர் கடனெனக் கொண்டும், கலை வல்லுநர்களாயும், நாட்டுப் பற்று, மொழிப் பற்று மிகுந்தவராயும் வாழ்ந்து தமிழன்னையின் பெருமையைத் தம் பெருமையெனக்கொண்டு வையத்து வீறுடன் வாழ்ந்தனர்.

இவ்வாறு தமிழன்னையின் செல்வரும் செல்வியரும், தனித் தமிழிலோர் அவாக் கொண்டு வாழ்ந்த காலைதான் புற்றீசலெனப் புகுந்த பிற இனம், விருந்தோம்பலென்ற தன்மையுடன் தனித்ததோர் தலையாய கடனெனக் கொண்டு வாழ்ந்த தமி ழன்னையின் தவப் புதல்வர் புதல்வியரைத் தம்நிலை திரியச் செய்து, தம் மனையுறை தமிழன்னைக் கோர் குறையினுக்கு, தாமே வழி வகுக்கின்றோம் என்ற தன்மையை உணராதவராய், விரித்த கண்ணியிற் கருத்திழந்த கருமத்தினும் வலிகுறைந்து வாழத் தொடங்கினரென்று வரலாற்றிலே வரையப் பட்ட தெனப் பகர்ந்தாலும் இதை இயக்கும் காணுவுலகவாசி கதிரேசச் செட்டியார் கழறும் முறையே தனி, தமிழ் மக்கள், தமி ழன்னையின் தவச்செல்வங்கள் கன்னித் தமிழின் பெண்மையைப் பேணுதொழிந்தனரே, இஃது அவர்தம் குறையல்ல, தமிழன் னையே! இஃது எம் தமிழினமாய், நின்ற உன் குழவிகளின் குறையல்ல, உன் குறையே; ஏன் அருள், பரிவு அவர்க்குப் பயிற்றுவித்தனை? உரை; உனக்கு உன்னினத்தாரால் ஏற்படு மிழுக்கையும் ஓர் அணிகலனென அணிய அருள்கொண்டனையோ? இக் குற்றத்திற்குரியர் யாமல்லம், தமிழன்னையே நீ தான்.

இவ்வாறு உன்னைக் குறை கூறினதற்காக நீ வருந்து வையோ வெனில் வருந்தாய்! தெரியும் எனக்கு. உன் குழவிகள் இழைத்த குறையினைப் பொறுக்க, நீதான் பொறுமை யென்ற அணிகலனை இயற்கையிலே அணிந்திருக்கின்றனையே! தமிழன்

னையே, நீயே உன் தமிழ்ச் செல்வங்களை இத்தகைய தன்மையி லீடுபடுத்திய தன்மையே தவறு. அன்னையே உன் குழவிகளை உன்பாலாக்குந் திறனுனக்குண்டு. பெற்ற தாயே, பிள்ளைகளின் பிழை பொறுத்தற்குரியளென்பதுவும் எமக்குத் தெரியும். தாயே தயவிற்சிறந்தவளே தனக்கு நிகர், தன் மொழிக்கு நிகர் தானெனத் தனித்திறன் கொண்டு வாழ்பவளே உன்தாள் வணங்குதும் உன் மகன், கதிரேசன்.

அன்னையே! உன் திறன் எடுத்தியம்பல் எளிதன்று. உன் இனமாம் பெண்ணினத்தின் பெருமையே நின்றிலங்கல் என் றுமே நன்றெனக் கொண்டுதான் அவர்தம் குழவியருக்கு முதன் முதலில் உன் முதலெழுத்தாம் அகரமே அம்மா, அப்பா, அண்ணன், அக்காள் அவர்தம் வாய்வழிப் பயிற்றுவித்தனையோ? இவ்வாறு நீ அளித்த தாய் மொழியாம் தமிழ் மொழி தாய் வழித் தோன்றித் தன் புகழ்சிறக்க ஓங்கித் திகழ்ந்தகாலை வேற்று மொழியினரின் இடைச் சார்பால் உன் வளங் குறைந்து, உன்னை வேற்றணிகலன்களால் அணிவிக்கத் தொடங்கினர் உன் வழிச் செல்வங்கள். உன்னதரத்துத் தோன்றும் மொழிக்கு மட்டும் உன் வழித் தோன்றலார் ஊறு இழைக்கவில்லை, அவர் தம் பழமைக்கே வேற்றுருக்கொடுத்து, அவர்தம்மையே மாற் றுருவாக்கினர். இக்காலை, உன்பால் அன்பு கொண்ட உரிமை யாளர் பலர் தோன்றி, உன்னை ஓர் பழந்தமிழ், செந்தமிழ்ச் செல்வியாய் நோக்க விழைந்தனர். அவர்தம் மாண்பும், மறலி யென்ற மறுமொழியாற் சிதைவுறத் தொடங்கி, நாட்டுப் பற்று மிழந்து, பிறமொழிப் பற்றுவைத்துப் பாராளத் தலைப்படத் தொடங்கினரோ! அன்றே, தம் அன்னையாம் தமிழன்னையை நினைவு கூர்வதையே புறங்கொண்டனர். நாகரீக அரக்கவரக்கியர் தம் நடனமும் தமிழன்னைதன் தவப் புதல்வர் புதல்வியர் பாற் றன் கோலினை ஓச்சத் தொடங்கினர். அன்றே அன்னையே உன் இனம் உன்னை முற்றிலும் மறந்தது. அவ்வாறு அவர் தாயினை மறப்பினுந் தாய் தன் குழவிகளை மறப்பளோ? இவ்வாறு நீ உன் குழவிகள் நிலை குறித்து வருந்தி வாளா இருத்தல் நன்றல்ல என்று நினைந்தனையோ எனத்தா னெண்ணவேண்டும். அவ்வாறு நினைத்திலை யெனின், இஞ்ஞான்று உன் குழவிகள் உன்னை உணர்ந்து தமக்குத் தமிழன்னையின் தவமொழியே தேவை, நாடாள்வோர் எம்மொழி நாட்டுமொழியென உரைத்தாலும் உன் குழவிகள், தன்னையே தன்பரப்பையே தன்னினம் தன்மை யிழந்து குறைத்து, உன்னை ஓர் எல்லைக்குட் கொண்டு நிறுத்தி எம்மகத்து எம் மொழியாம் செந்தமிழ்த் தாய்மொழியே தனித் தமிழ் மொழியே, ஆளும் மொழியாக வேண்டுமென எண்ணுந் திறனும் அளித்தவள் அன்னையே! தமிழன்னையே! நீ யெனவே

உரைக்கின்றேம். தமிழன்னையே! இன்னும் ஒன்றினை மட்டும் மொழிய விழைகின்றேம். அன்னையே எம்முலகல்ல, உன் தமிழ் மொழியே தேவையென உரைத்து வரும் தமிழகத்து, உன் இனத்தினரின் இற்றைய நிலை நீ கண்ணுற்றால் வாளாவிராயென எண்ணினும், இன்னுமுன் மனத்துள் ஓர் மறுமலர்ச்சி இல்லையோ மறை மலர்ச்சி தான் உறைகின்றதோவென எண்ணி வருந்து கின்றேம். அன்னையே உன் இனம் அவர்தம் உடன்பிறந்தா ரையே, அரங்கேறி அவர்தம் இனத்தையே புன் சொலால் புடைக் கின்றன ரெனில் என்னவெனக் கூற? உரை. தமிழ்த்தாயே! உன்னை வணங்குகின்றேன்.

தமிழன்னையே! உன் இனம் உன் பெருமை அறிந்து செயல் படச் சிறந்தது ஒற்றுமையென ஒன்றே; எடுத்தறைந்து உன் இனத்தெழும் விழைவெல்லாம், அன்னையாம் உனக்கு அவ ராற்றுந் தொண்டெனவும், உன்னைக் கன்னித்தமிழை இன்றைய இனம் பலப்பல வகையில் மெருகிட்டு, அவரவருரைப்பதிலே எவர் கருத்தும் இயைய வேண்டுமென்ற பேரவாவினைக் களைந்து, அவர்தம்முள் ஒற்றுமை, உடன்பிறந்தாராம் அவர்தம் பிணைப் பினை இறுக்கி எம் அன்னையாம் தனித்தமிழ் மொழிக்கு எம் மொழியும் ஈடில்லை என்ற உணர்வினை யூட்டி, உன் எழிலை, உன் இனம், ஏன் உலகே அறியவைக்க அருள்புரிவாய் அன்னையே என வாழ்த்திக் கடையில் என் இனமாம், தமிழினமே! தமி ழன்னையின் வளமே உன் வளம். ஒற்றுமை யென்ற ஒன்றி னுற்றான் உன்னினம் உயரும், உன் புகழ் எங்கும் துலங்கும். என்ற எளியனும் காணுவுலகவாசி கதிரேசன் எடுத்துரைக்குந் தன்மை, நன்மையெனக் கண்டு, அதற்கு வழிவகுத்தால் உன் நிலை எந்நாட்டிலும், தனியதோரொன்றாய், நின்றிலங்கி, நின் பெருமை நிலை பெற்று வாழும். உன் விருப்பு எங்ஙனையோ அறியேன்! அன்னையே! தமிழன்னையே! தமிழ்த்தாயே! நீ என் றுமே தன்னிலை திரியாது, கன்னியாய்ச் சிறக்க வாழ்வாய்! வணங்குகின்றேன், உன் மகன். வாழ்த்து, உன்னினம் ஓரின மாய்த் திரண்டெழுந்து உன் பொலிவை மிளிரச்செய். அன் னையே! ஒற்றுமையென்ற ஒன்றினை எடுத்து உணர்விக்குந் திறன் உனக்கின்றி வேறெவர்க்குமில்லை.

வாழ்க சிறக்க வாழ்கசெந் தமிழே
வாழ்க சிறக்க வாழ்கஉன் இனமே
வாழ்க சிறக்க வாழ்கஉன் நலமே
வாழ்க சிறக்க வாழ்கஇன் தமிழே
வாழ்க சிறக்க வாழ்கவை யகமே!

# பதவிப் பித்தர்!

[வித்துவான். திரு. சொ. சிங்காரவேலனார்]
*தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்*

*பதவிஎன் பதுவோ பாரினிற் செய்திடும்*
*உதவிகள் பலப்பல; உரைப்பக் கேண்மோ!*
*நெஞ்சிற் கபடம் நிலவிடச் செய்யும்;*
*வஞ்ச மனத்தை வளர்த்திடல் புரியும்;*
*உற்ற தோழரை உதறிடச் செய்து*
*முற்றவும் வெறுப்த் திரித்திடும்; ஐயகோ!*
*விண்ணவர் போல வியந்து நோக்குவர்;*
*கண்ணினிற் செருக்கு நண்ணியே நிற்கும்;*
*பன்னாள் பழகிய நண்பரே யாயினும்*
*முன்னாய் வந்திடின் யார்நீ என்பர்;*
*அறியேன் என்பர்; அகற்றவும் செய்வர்;*
*மற்றவர் தம்மை மனத்தினிற் பொருளாய்*
*உற்றிடல் தனையும் உலர்ந்து நீக்குவர்;*
*ஒவ்வோர் செயலிலும் அவ்வியம் ஒளிரும்;*
*கவ்விடும் நாய்போல் சீற்றம் கால்கொளும்;*
*எதிர்ப்பவர் யாரும் இருத்த லாகாது;*
*அதிர்ப்பர்; விழியால் அகன்று நோக்குவர்;*
*நிமிர்ந்து நடப்பர்; நீட்டுவர் சொற்றுவை;*
*அடங்கிக் கிடந்து ஆமையாய் அடிமையாய்*
*முடங்கிடல் வேண்டும், முடிவிது என்பர்;*
*இரண்டொரு வார்த்தை இயம்புதல் கூட*
*முரண்என நினைக்கும் பேதைமை முகிழ்க்கும்;*
*உருட்டுவர்; மிரட்டுவர்; ஓங்கி முழக்குவர்;*
*சுருட்டுவர் பிறர்பொருள் சோர்வேது மின்றி;*
*இறுதியில் கவிழ்வர்; உறுதி இழப்பர்;*
*அறுதியும் எய்துவர்; அந்தோ அளியர்!*
*பதவிப் பித்தினால் மதம்கொண் டோரின்*
*முதலும் இறுதியும் இவையென லாமே!*

# தொல்காப்பியத்தில் ஓரறிவுயிர்

[திரு. மு. அரங்கராமாநுசம்]

(செல்வி சிலம்பு ௩௪-பரல் ௩, ௧௧௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

‘முள்அரை இலவத்து ஒள்இணர் வான்பூ’ (ஐங்-௩௨0)

‘முல்லை இல்லமொடு மலர’ (அகம்-௩௬௪)

‘இல்லமொடு மிடைந்த ஈர்ந்தார்க் கண்ணியன்’ (நற்-௩௭௬)

“ஆரும் வெதிருஞ் சாரும் பீரும்
மெல்லெழுத்து மிகுதல் மெய்பெறத் தோன்றும்”
(எழுத்-௩௬௪)

‘பீரென்கிளவி அம்மொடு சிவணும்” (எழுத்-௩௬௬)

‘நெடுந்தண் ஆரத்து அலங்குசினை பயந்த’ (நற்-௨௩௨)

‘எரிஉகு அகிலொடு ஆரமும் கமழும்’ (பரி-௧௮)

‘வேர்பிணி வெதிரத்துக் கல்பொரு நரல்இசை’ (நற்-௬௨)

‘சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்’ (ஐங்-௨௭௮)

‘நுண்கொடிப் பீரத்தின் ஊழ்உறு பூ என’ (நற்-௩௨௬)

‘ஊர் எழுந்து உலறிய பீர் எழு முதுபாழ்’ (அகம்-௧௬௭)

‘இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்’ (ஐங்-௪௬௪)

‘இருவெதிர்ப் பைந்தூறு கூர்எரி நைப்ப’ (மது-௩0௩)

இம்மரங்கள் இலக்கியத்தில் உள்ளன. இவைகளில் பீர் இன்றுள்ள பீர்க்கு அல்லது வேறு கொடி வகையாக இருக்கலாம். அகிலொடு ஆரமும் என்பதனால் மணம் தரும் மரவகையில் ஒன்றாகலாம். அத்தியாகவும் இருக்கக்கூடும்.

“பூல்வேலென்றா ஆலென் கிளவியொடு
ஆமுப் பெயர்க்கும் அம்மிடை வருமே” (எழுத்-௩௭௬

இம் மூன்று மரங்களில்,

‘கடவுள் ஆலத்து தடவுசினைப் பல்பழம்’ (புறம்-௧௯௯)

‘புதுக் கலத்தன்ன கனிய ஆலம்’ (ஐங்-௩0௩)

‘பிணிவீழ் ஆலத்து அலங்குசினை ஏறி’ (அகம்-௩௧௧)

‘ஆலும் கடம்பும் அணிமார் இலங்கிட்ட
மாலைபோல் தூங்கும் சினை’ (கலி-௧0௬)

ஆலமரம் அதிகமாக இலக்கியத்தில் எடுத்தாளப்படுகிறது. வேலமரம் அவ்வளவாக இல்லை. 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி' என்பதும் அறியத் தக்கது.

'முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே.'

இவைகள் மரங்களாலும் செடிகளாலும் பெயர் இடப்பட்டதாக இலக்கியச் சான்றுகள் ஆசிரியர்கள் தந்துள்ளனர். அவர்கள் எடுத்துக்காட்டும் மரங்கள் :

கொன்றை, குருந்து, புதல், வேங்கை, கோங்கு, பாலை, கள்ளி, இருப்பை, சூரை, மருது, காஞ்சி, புன்னை, கைதை, தெங்கு, வேய், தேக்கு, நெல்லி, விள, பலா மரங்களும் எடுத்தாளப்பட்டுள்ளன. ஒரு சிலவற்றிற்கு மட்டும் விதி கூறி இலக்கணம் தந்தார், தொல்காப்பியர். மற்றையன உரையாசிரியர்கள் கொண்டனர்.

'நாறு இணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர்' (பதிற்-கூஎ)
'சுடர்வீ வேங்கைப் - பூவுடைப் பெருஞ்சினை' (பதிற்-சக)
'கருங்கால் வேங்கை மலரின் ஆளும்' (புறம்-க௩எ)
'புன்னை - இணர்ப்படு சினைக் குருகு இறைகொள்ளும்' (பதிற்-௩0)
'குருந்து அவிழ்குறும் பொறை பயிற்று' (நற்-௩உச)
'பல்பூங் கோங்கம் அணிந்த காடே' (நற்-உ0உ)
'இருப்பைத் - தேம்பால் செற்ற தீம்பழம் நசைஇ'
'வாங்குசினை மருதத் தூங்கு துணர் உதிரும்' (நற்-௩௫0)
'முறுவல் கொள்பவை போலமுகை அவிழ் புதல்நந்த' (கலி-கககூ)
'மருதமரநிழல் எருதொடு வதியும்' (அகம்-௩எ)
'செவி அமைதீரத் தேக்கிலை பகுக்கும்' (அகம்-௩கக)
'நெடுவரை அடுக்கத்து வேய் போன்றனவே' (பரி-கச)
'பைதுஅற வெந்த பாலை வெங்காட்டு' (ஐங்-௩கக)
'பைங்காய் நெல்லி பல உடன் மிடைந்து' (ஐங்-௩கஅ)
'வண்தோட்டுத் தெங்கின் வாடுமடல் வேய்ந்த' (பெரும்-௩௫க)
'கள்ளியம் பறந்தலை ஒருசிறை அல்கி' (புறம்-உச0)
'தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி' (குறிஞ்-கூ௩)
'குறுங்காற் காஞ்சி சுற்றிய பூங்கொடி' (பெரும்-௩எ௫)

இம் மரங்களில் சில தவிர மற்றவைகள் இப் பெயராலேயே அழைக்கப்படுகின்றன. இவைகள் ஐவகை நிலங்களிலும் ஆங்காங்கு உள்ளவையாம்.

'வெட்சிதானே குறிஞ்சியது புறனே' (தொல் பொருள்-டுக)

ஒரு நாட்டில் உள்ள போரெனில் புகலும் புனைகழல் மறவர்கள் இப் பூவணிந்து பகை வேந்தர் நாட்டிற் சென்று ஆனிரைகளைக் கவர்ந்து வருவது வழக்கம். அகத்திணையியல் புறத்திணையியல் என்று வகுத்த தொல்காப்பியர் புறத்திணையின் கண் போர் செய்யும் முறை, அறம் திறம்பாப் போர் செய்து ஆட்சி செய்த அன்னைத் தமிழ்நாட்டரசர்கள் கொண்ட போர் முறையில் முதலாவதாகப் பகை வேந்தர் ஆனிரை கவர்வது வழக்கம். ஆண்டு வெட்சிப்பூச் சூடி வீரர்கள் செல்லும் முறை கூறப்பட்டுள்ளது.

'தண்கயக் குவளை குறிஞ்சி வெட்சி' (குறி-௬௩)

'இதல்முள் ஒப்பின் முகைமுதிர்வெட்சி' (அகம்-க௩௩)

'புல்இலை வெட்சியும் பிடவுந் தளவும்' (கலி-க0௩)

இவ்வாறு இலக்கியங்களில் காணப்படுகின்றன.

'போந்தை வேம்பே ஆரென வரூஉம்
மாபெரும் தானையர் மலைந்த பூவும்'' (பொரு-௬௩)

போந்தை என்பது பனை, பெண்ணை மரத்தைக் குறிக்கும் ஒரு பொருள் பல சொல். வேம்பு இன்று வேப்பமரம் என்றும் ஆர் ஆத்தி என்றும் அகத்தி என்றும் வழக்கில் உள்ளது. இம் மரங்களின் பூக்கள் மும்மன்னர்கள், (சேர, சோழ, பாண்டியர்) தங்கள் குலமுறை வழாது வழிவழி கொண்ட பூவாகும். போர்க்கு மன்னர்கள் செல்லுங்கால் சூடிச் செல்வது வழக்கம்.

'சினையலர் வேம்பின் பொருப்பன் பொருத
முனையரண் போல' (கலி-கக௨)

'வேம்பின் - வெறிகொள் பாசிலை நீலமொடுசூடி' (அகம்-கக௮)

'குறுஞ்சினை வேம்பின் நறும்பழம் உணீஇ' (ஐங்-௩௩க)

'குடுமிகளைந்த நுதல், வேம்பின் ஒண்டளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மலைந்து' (புறம்,-எஎ)

'வெண்மணற் பொதுளிய பைங்கால் கருக்கின்
கொம்மைப் போந்தைக் குடுமி வெண்தோட்டு
அத்த வேம்பின் அமலை வான்பூச்
சுரிஆர் உளைத்தலை பொலியச் சூடி' (குறுந்-உ௮க

இவ்வாறு இலக்கியங்களில் பயின்று வருதலும் காணலாம்

'உடல்வேந்து அடுக்கிய உன்ன நிலையும்' (பொருள்-௬௩)

உன்னமரம் என்பது மரவகைகளில் ஒன்றென்பது இலக்கியத்தால் அறியலாம். இது நாட்டிற்குக் கேடு வருங்கால் வாடியும் நன்மை வருங்கால் தளிர்த்தும் காணப்படும் என்று கூறப்படுகிறது இது காவல் மரமாகவும் மன்னர்கள் கொண்டதாகவும் அறியலாம். அதனால் ஒரு நாட்டைப் பிடிக்க அந்நாட்டின் காவல் மரத்தை வெட்டினால் அந்நாட்டைப் பிடித்தது போலாகும், ஆகையினால் மன்னர்கள் மரத்தைக் காவல் புரிந்து கண்ணெனக் காப்பாற்றினர்கள்.

'அலந்தலை உன்னத்து அம்கவடு பொருந்திச்
சிதடி கரைய' (பதி-௨௩)

'புன்கால் உன்னம் சாய' (பதி-௪0)

'புன்கால் உன்னத்துப் பகைவன் எங்கோ' (பதி-௬௧)

இலக்கியங்களினுலும் நாம் மேற்கண்டவற்றை அறியலாம்.

'வஞ்சிதானே முல்லையது புறனே' (௬௪-பொருள்)

பிறமன்னரின் நாடு கைக்கொள்ள நாட்டம் கொண்ட அரசனும் படைவீரர்களும் வஞ்சிப்பூச் சூடிச் செல்வது வழக்கம். வஞ்சிக்கொடி யென்றும் சொல்லப்படுகிறது.

'நெடுவெண் மருதொரு வஞ்சி சாஅய்'
விடியல் வந்த பெருநீர்க் காவிரி' (அகம்-௨௨௬)

'வஞ்சி பித்திகம் சிந்து வாரம்' (குறு-௬0)

'உழிஞைதானே மருதத்துப் புறனே' (பொருள்)

தன்னை எதிர்த்து வருகின்ற வீரர்களுடன் பொருகின்ற வீரர்கள் 'எயில் காத்தல் நொச்சி அது வளைத்தல் உழிஞை' (புறப்-வெண்) எதிர்த்து போரிடுவார்கள் இவர்கள் உழிஞைப் பூச்சூடிப் போரிடுவர்.

'பூ அல்ல பூளை உழிஞையொடு யாத்த
புனைவளர் இட்ட வயங்குதார்ப்பீலி' (கலி-க௪0)

'சிறியிலை உழிஞைத் தெரியல் சூடிக்
கொண்டி மிகைபடத் தண்டமிழ் செறித்து' (பதி-௬௩)

'குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண்டளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து' (புறம்-எஎ)

'தும்பை தானே நெய்தலது புறனே' (பொருள்-எ0)

இருபெரு வேந்தரும் தும்பை மலைந்து ஒரு களத்துபொரு தல் ஆகும். இது தும்பைச் செடி எனப்படும். வெண்ணிற மலர் ஆகும்.

'வாடாத் தும்பை வயவர் பெருமகன்
ஓடாத் தானை ஒண்டொழிற் கழற்கால்
செவ்வரை நாடன்'' (பெரும்பாண்-க0க)

'வாகை தானே பாலையது புறனே'

வெற்றிக்கு அறிகுறியாக, வாகை சூடிய மன்னர்கள் வீரர்கள், வென்ற நிலை அறியச் சூடுவது வகைப்பூ ஆகும். இன்றும் வழக்கில் வாகை என்று உள்ளது. மஞ்சள் நிற மலர் இதன் கிளைகளில் மலரும்.

'குமரி வாகைக் கோலுடை நறுவீ' (குறு-நூசஎ)

'வாகை ஒண்பூ புரையும் உச்சிய' (பதி-கச)

'கடவுள் வாகைத் தூவீய் எய்ப்ப' (பதி-கசு)

'மென்பூ வாகை மென்புறக் கவட்டிலை' (அகம்-கநசு)

என்றவை பதிற்றுப்பத்து அகநானூறு இலக்கியங்களில் காணலாம்.

'காஞ்சி தானே பெருந்திணைப் புறனே'

'வட்கார் மேல் செல்வது வஞ்சி உட்கார் எதிரூன்றல் காஞ்சி' என்பதனுன் வஞ்சியாரை எதிர்த்துப் போர்புரியும் மறவர்கள் மன்னர்கள் சூடும் பூ காஞ்சிப் பூ ஆகும். இத்திணை பொதுவாகப் புறத்திணையியல் யாவற்றிற்கும் பொருந்துவது. இது நிலையாமையை அறிவுறுத்துவதும் ஆகும். இது தொல்காப்பியம் நன்கு எடுத்தியம்பும்.

'கழனியம் படப்பைக் காஞ்சி ஊர' (குறுந்)

'கொய்குழை அகை காஞ்சித் துறை அணிநல் ஊர' (கலி,-எச)

'புல்அறைக் காஞ்சிப்புனல்பொரு புதவின்' (மலைபடு-சசக)

'காஞ்சிப் - போது அவிழ் நறுந்தாது அளிந்த கூந்தல்'
(அகம், உகசு)

இவ்வாறு எழுத்ததிகாரத்தில் கூறப்பட்ட சூத்திரங்களாலும், பொருளதிகாரத்திலும் கூறப்பட்டுள்ளவைகளை ஆராய்ந்து பல அரியதொரு மணிகளைப் பெறலாம். இதுவரை அதில் பொதிந்த சில முத்துக்கள் இவைகள் ஆம் பொதுவாக 'புல்லும் மரனும் ஓரறிவினவே' என்ற ஓரறிவுயிர்களை ஓராற்றன் அறிய

முடிந்தது. இம் மரங்களாலேயே இன்றும் அன்றும் ஊரின் பெயர்கள் வழங்கி அழைக்கப்பபட்டன. அன்று திருமறைக் காடு என்பது வேதாரணியம் என்பதுபோல் திரிந்து, மக்கள் வழக்கில், நாகரிகத்திற்கு ஒப்பச் செந்தமிழ் மொழி திரிந்ததும் சான்று காட்டலாம். இன்றும் ஒடுங்காடு, வெண்காடு, மறைக் காடு, சாய்க்காடு, காஞ்சிபுரம், மதுரை (மருதை) குருக்கத்தி, முதலிய ஊர்கள் இருப்பன நாம் அறியலாம். தமிழகத்தில் பல மரங்கள் இருந்தன, இருக்கின்றன. அது இன்று வழக்கில் மாறியது அறிஞர்கள் கூற்றால் அறியலாம். தொல்காப்பியத்தில் கூறப்படும் மரவகைகள் பத்துப்பாட்டுள் குறிஞ்சிப்பாட்டில் பூக்களைப் பறித்துப் பாறையில் குவிக்கின்றபோது, கூறப்படு கின்ற மரங்கள் நாம் அப் பாடலால் அறியலாம்.

## தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக அறநிலையங்களின் தேர்வுகளின் அறிக்கை

### I. தென்னிந்திய தமிழ்ச்சங்கம்

#### தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

இது சென்னைமாநிலத்திலுள்ள புலவர் கல்லூரிகளிலும், குறிப் பிட்ட சில நகர்களிலும் 1960 சனவரித் திங்கள் 22உ முதல் 30உ வரை நடைபெறும். தேர்வுகட்குரிய விண்ணப்பங்கள் யாவும் குறித்த கட்டணங்களுடன் 1959 திசம்பர் 15உக்குள் அடியிற்கண்ட முகவரிக்கு அனுப்பப்படவேண்டும்.

### II. தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம்

#### சித்தாந்த சைவத் தேர்வு

இது செல்வியில் முன் குறித்த பாட அட்டவணைப்படி 1960 அக்டோபர் திங்களில் நடைபெறும். விண்ணப்பங்கள் 1960 சூலை இறுதிக்குள் அனுப்பப்படவேண்டும்.

அன்புள்ள.

பு. சி. புன்னைவனநாதன்
புலவர் குழுத்தலைவர்.

# *தமிழர் நாகரிகம்

[திரு. ஹுமாயூன் கபீர்.]

அறிவிலும் சிந்தனையிலும் நாம் எப்பொழுதெல்லாம் குறைந்திருந்தோமோ அப்பொழுதெல்லாம் நம்முடைய முன்னேற்றத்திலும் வளத்திலும் பின்தங்கிவிட்டோம் என்பதை நம்முடைய வரலாறே நமக்குக் கற்பிக்கின்றது. இவ்வுலகறிந்த மிகப்பழைய நாகரிகங்களுள் ஒன்று மலர்வதை இந்தியாவே கண்டிருக்கின்றது. இன்னும் குறிப்பிடத்தக்கது யாதெனில் இந்திய நாகரிகம் பல சூழ்நிலைகளிலும் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு மேல் தொடர்ந்து வருகின்றது. இந்திய நாகரிகத்துக்குச் சம காலத்தில் பல நாகரிகங்கள் இருந்துள்ளன. அவை மனித இனத்தின் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் பெரும்பணி புரிந்துள்ளன. ஆனால் இந்த நாகரிகங்கள் பரவிய நாடுகளில் இன்று புதிய வாழ்க்கை தொடங்கிவிட்டது. இந்தியாவில் மட்டும் வேறு எந்த நாடுகளிலும் காணாதவகையில் அதனுடைய பழம்பெரும் நாகரிகம் தொடர்ந்து வருகின்றது.

நாகரிகத்தின் உச்சநிலையை இந்தியா 6000 ஆண்டுகட்கு முன்னரே அடைந்துவிட்டது. அதன் முதற்குறி மொகஞ்சோதாரோவிலும் ஹரப்பாவிலும் கண்டுபிடிக்கப்பட்டது. ஆனால் அந்த நாகரிகம் இந்தியா முழுமையும் பரவியிருந்தது என்பதை நாம் அறிவோம். அதன் மேல்பக்க எல்லை இன்னும் குறிக்கப் படாவிட்டாலும் அது தெற்கே தபதி வரையிலும் கிழக்கில் கங்கை வரையிலும் அன்றைய உலகின் போட்டியிடக்கூடிய ஒருசில நாகரிகங்களுக்கு எதிராக ஒரு பண்பாட்டைப் பரப்பி வந்தது. மொகஞ்சோதாரோவிலும் ஹரப்பாவிலும் வாழ்ந்து வந்த மக்கள் யாவர் என்பதை நாம் அறியோம். அவர்கள் மத்தியதரை வகுப்பினர் என்றும், மேலை ஆசிய நாடுகளிடையும் சுமேரியா விடமும் தொடர்பு கொண்டவர்கள் என்றும் ஒரு சிலர் கருதுகின்றனர். பிறர் அவர்கள் முற்கால எகிப்தில் வாழ்ந்த மக்களுடன் தொடர்புகொண்டவர் என்று கருதுகின்றனர். இன்னும் பிறர் அவர்கள் இந்தியாவின் உட்பகுதியிலேயே தோன்றிய திராவிட நாகரிகத்தின் முன்னோடிகள் என்று

---

* இக் கட்டுரை திரு. ஹுமாயூன் கபீர் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா (21-10-59)வில் ஆற்றிய சிறப்புச் சொற்பொழிவில் சில பகுதிகளின் மொழிபெயர்ப்பு.

எண்ணுகின்றனர். உண்மையில் அவர்கள் பேசிய மொழி இன்று பேசப்படும் தமிழோடு உறவுடையது என்று ஓர் அறிஞர் குறிப்பிட்டுள்ளார்.

உலகின் பெரும்பகுதி அறியாமையிலும் மூடநம்பிக்கையிலும் மூழ்கியிருந்தபோதே இந்தியா நாகரிகத்தின் உச்சியை அடைந்துவிட்டது. அறிவுத் துறைகளையும் தொழில் துறைகளையும் இந்தியா மற்றையோரைவிட முதலிலேயே தொடங்கிவிட்டது. எனினும் வாழ்க்கைப் போட்டியில் நாம் இன்று பின்தங்கிவிட்டோம். இதற்குரிய காரணத்தை நாம் இந்திய வரலாற்றின் துணைகொண்டு ஆராய்ந்து நோக்கின் நம்மிடை உள்ள இருபெருங் குறைகள் புலப்படும். அறிவின் பயனை உணராததொன்று. ஒற்றுமையும் ஒத்துழைப்பும் இல்லாதது மற்றொன்று. இக் குறைகளை இந்தியா உணராத நேரங்களிலெல்லாம் அதன் மதிப்பிற்குரிய இருப்பிடத்தினின்றும் விழுந்துவிட்டது. பொது, பொருளாதார அரசியல் வாழ்க்கைகளில் பெரும் இடர் உற்றிருக்கின்றது.

தமிழ்நாட்டில் தோன்றிய தலைசிறந்த நாகரிகம் தமிழருடன் தொடர்பு கொண்ட முதல் ஆரியர்களைத் திகைக்கச் செய்தது என்ற குறிப்பை இந்தியப் பழங்காலக் காப்பியங்கள் உணர்த்துகின்றன. வரலாற்றில் பலகாலங்களில் கடல் தாண்டி வந்த பல நாகரிகங்கள் கூடும் இடமாக அமைந்திருந்தது. கிறித்துவ ஊழி தொடங்குவதற்கு முன்னரே மேற்கில் கிரேக்க ரோம நாடுகளுக்கிடையும் கிழக்கில் சீன ஜப்பான் நாடுகளுக்கிடையும் கடல் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தது. இந்தியாவில் தெற்கில்தான் முதன்முதல் உலகின் முப்பெரு மதங்களான யூதமதம், கிறித்துவம், இஸ்லாமியமதம் ஆகியவை ஆதரவும் மதிப்பும் பெற்றன. நாராயணர்-வாசுதேவர்-கிருஷ்ணர் மூவரும் ஒருவரே என்ற சமய வழக்கு வேறு எந்த நூல்களைவிடத் தமிழ்த் தொகை நூற்களில் மிக விரிந்த முறையில் விளக்கப்பட்டுள்ளது. பாகவதத்தில் காணப்படும் ராதை பெரும்பாலும் சங்க நூற்களில் காணப்படும் நப்பின்னையைப் பின்பற்றிய ஒரு படைப்பேயாம். புதிய வைணவம் தெற்கிலிருந்து வடக்கிற்குப் பரவியது என்பது உறுதி. தமிழ்நாட்டில் தோன்றிய சைவசித்தாந்தக் கொள்கை வெகு விரைவில் இந்தியாவின் மற்றப் பகுதிகளில் பரவிப் பெரும்பணி செய்ததை யாரும் மறக்கமுடியாது. மதுரையிலும் காஞ்சியிலும் திகம்பர சமணம் பெருமளவில் பரவியது. வடஇந்தியாவில் புத்தமதம் செல்வாக்கை இழந்த நிலையில் தமிழ்நாட்டில் தேரவாட புத்த மதம் பெருகியது.

இந்திய இலக்கிய மரபிற்குத் தமிழ்நாடு ஆற்றியுள்ள பணி குறிப்பிடற்குரிய தொன்றும். இடைவிடாது தொடர்ந்த இலக்கியப்பணி தமிழில் உள்ளதுபோல் இவ்வுலகில் வேறெந்தமொழியிலும் கிடையாது. வடக்கிருந்து தெற்கும், தெற்கிலிருந்து வடக்கும் மக்கள் அடிக்கடி சென்றதைக் குறிப்பிடும் பாடல்களும், சைவ, வைணவ பக்திப்பாடல்களும், திருக்குறளும், கம்பன் காப்பியமும் இந்திய இலக்கியச் செல்வத்தின் பகுதியாகும். அவை உலகின் பொதுச் சொத்தாக மாறல்வேண்டும். சிறப்பாகக் குறிக்கப்படவேண்டிய ஒன்று யாதெனில் கிறித்துவ, இஸ்லாமிய மதங்களையொட்டி எழுந்த பாடல்களும் காப்பியங்களுமே. இவ்வளவு உண்மைகளை இந்த அளவு சிறந்த நடையில் காண்பதுபோல் வேறு எந்த இந்திய மொழியிலும் நாம் காண முடியாது

மெய்யறிவுத் துறையில் இந்திய மெய்யறிவில் குறிப்பிடத் தக்க இருபெரும் முறைகளான அத்வைதமும் விசிஷ்டாத்வைதமும் தமிழ்நாட்டில்தான் முறையே சங்கராச்சாரியாராலும் இராமானுசராலும் நிறுவப்பட்டன. இந்த இலக்கிய, மெய்யறிவுப் பெருமரபுகள் இன்னும் அழியாது வாழ்வது மகிழ்தற்குரியது. இத் துறைகளில் வல்லவர்களும் மதிப்பிற்குரியவர்களும் பலர் தென்னகத்தில் உள்ளனர்.

சமயம், மெய்யறிவு, இலக்கியம் ஆகிய துறைகளில் மட்டும் தெற்கு வடக்கைத் தூண்டியது என்பதில்லை. தென்னிந்தியக் கோயில் இவ்வுலகு கண்டு வியந்த சிற்ப வேலைப்பாடுடையது. தென்னிந்திய நடனக்கலையும் இசைக்கலையும் பல நூற்றாண்டுகளாக வடக்கின் ஒப்புதலையும் மதிப்பையும் பெற்றிருக்கின்றன. அலாவுதீன் கில்ஜியின் அரசவைக்குக் கோபால் நாயகா வந்தபொழுது தென்னிந்திய இசை, நாட்டியக் கலைஞர்களின் வல்லமையை உலகின் ஒவ்வொரு மூலைக்கும் பரப்பினான். ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் இந்திய மெய்யறிவு சங்கரரின் புலனுணுக்க ஆராய்ச்சியால் வெளிப்பட்டதுபோல் இன்று மேலை நாடுகளில் இந்திய நடனம் பரதநாட்டியத்தையும் இணைத்துக் கொண்டது.

தமிழ்நாடு தன் நீர்வளத்தை இந்தியாவின் வேறெப்பகுதியிலும் காணாத முறையில் பயன்படுத்தி வருகிறது. காவேரியின் துளி நீர்கூட வீணாவதில்லை என்று பெருமையுடன் கூறப்படுவதை நாம் கேட்டிருக்கிறோம். இந்தியாவின் மற்ற நதிகளைப் பற்றியும் இவ்வாறு கூறப்படவேண்டும் என்பது நம் அவா. இந்தியக் கூட்டுறவு இயக்கத்திலும் தமிழ்நாடு ஒரு முக்கியப் பகுதியை நிரப்பியிருக்கின்றது. ஆயிரம் ஆண்டுகட்கு மேற்

பட்ட தமிழ்க் கல்வெட்டுக்களில் உள்ளூர் அவைகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதைப்பற்றிய விளக்கம் காணப்படுகின்றது. தன்ஆட்சி உடைய பல உள்ளூர் அவைகளைத் தென்னிந்தியா இந்தியாவின் வேறெந்தப் பகுதியைவிடச் சிறந்த முறையில் நடத்தியது என்பது வியக்கத்தக்கதொன்று. சோழர் கல்வெட்டுக்களில் சிற்றூர், பேரூர், கோட்டம் போன்றவை எவ்வாறு ஆளப்பட்டன என்பது விளக்கப்பட்டுள்ளன. தற்காலத்தில் மக்கள் ஆட்சியை எவ்வாறு அடிப்படையிலிருந்து நிறுவுவது என்பதை அவற்றின் மூலம் அறிந்துகொள்ளலாம்.

இம்முறையில் தெற்கு இந்திய வரலாற்றில் மிக முக்கியப் பகுதியைச் சிறந்த முறையில் நிரப்பியுள்ளது.

---

சிற்றுயிர்க்குற்ற அன்னையாய்ப் பலியினை நீக்கித்
துணைபுரிந்த பற்றற்ற பண்பர்



அண்மையில் மணிவிழாக்கொண்ட மாண்பினர்
திரு. ஜீவபந்து ஸ்ரீபால் அவர்கள்
இவர்தம் வரலாற்றுக் குறிப்பும், பிறவும் செல்வி
சிலம்பு கூச, பரல் கூ, பக்கம் ௧0௧ இல் வெளிவந்துள்ளன.

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி சிலம்பு, ௩௪, பரல் ௩, ௧௪0ஆம் பக்கத் தொடர்ச்சி)

கிரியன்: என் தங்கையின் கணவன்தானே நீ?

ஓதிபன்: ஆம்.

கிரியன்: அவள் உன்னுடனிருந்து ஆட்சிபுரிபவளல்லளோ?

ஓதிபன்: அவள் விரும்பியதெல்லாம் உரிமையால் பெறுதற்குரியவளாவள்.

கிரியன்: எனக்கு அடுத்தபடியாகப் பெருமை உண்டன்றோ?

ஓதிபன்: உனக்கு அவ்வுரிமையுண்டு. உன் குற்றத்திற்கு அது பன்மடங்கு பெரிதுதான்.

கிரியன்: அவ்வாறு குற்றஞ்சாட்டாதே! உனக்குள்ளே எண்ணிப்பார்! நிம்மதியான வாழ்க்கை, அரசபெருமை, இவற்றையெல்லாம் விட்டு நின் அரசுக்கு ஆசைப்படுவது யார் செய்வது? பெயரளவில் அரசனாகவிருப்பது எனக்கு என்றும் வேண்டுவதில்லை. அரச வாழ்வு ஒன்றேபோதும் என்பவன் நான். என்னைப்போன்றவன் வேறு என்னதான் எண்ணக்கூடும். நான் கேட்டவற்றையெல்லாம் நன்கு செய்துதர நீயுள்ளாய். உன் இடத்தை யான் ஏற்றுக் கொண்டால் நாட்டுக்குரிய பெரியபெரிய கடமைகளைச் செய்தாகவேண்டும். துன்பமின்றி அரசை நடத்த இயலுமா? எனக்கு இருக்கவேண்டியதற்கு மேலாக இருக்கவேண்டும் என்று ஆசைப்படமாட்டேன். எனக்கு எல்லோருடைய உறவும் வேண்டும். அனைவரும் என் நண்பர்களே! உன்னைப் பார்க்கவேண்டும் என்போர் என்னை முதலில் பார்க்க விரும்புவது உன்னிடமிருந்து நன்மை பெறுவதில் வெற்றியுறுவார்கள் என்ற எண்ணத்திலேதான். இத்தகைய வாழ்க்கையை மாற்றி அமைத்துக்கொள்ள விழைவேனா? மூடனே! அவ்வாறு நன்றியற்றவனா நான்? நாட்டுக்குத் தீங்கு விளைவிக்கவேண்டும் என்ற கருத்து எனக்கு என்றும் இருந்ததில்லை. என்னை நன்கு ஆராய்ந்து தெரிந்துகொள்ளவேண்டுமாயின், பிதியன் கோவிலுக்கு முதலில் செல். சென்று நான் வேண்டிய வரம் உண்மையா

என்று தெரிந்துகொள். பின் அப்புலவனுடன் உறவு வைத்துக்கொண்டேனா என்று ஆய்ந்து பார். பின் என்னைக் கொன்றுவிடு. நீ செய்யும் தீர்ப்பு நேர்மையானது என்று ஏற்றுக்கொள்கிறேன். அவ்வாறன்றி, என் பின்னால் என்னைப்பற்றிக் குறை கூறுவது தவறாகும். நல்லவன் ஒருவன் பெயரைக் கெடுப்பதும், கெட்டவர்களை நல்லவர்கள் என்று கொள்வதும் பெருங்குற்றங்களாம். நல்ல நண்பனைத் தள்ளிவிடுவது உன் உயிரையே போக்கிக்கொள்வதாகும். உன் செல்வத்தைப் பறிகொடுத்ததாகும். காலம் என்பது உண்மை என்பதை உணர்த்தும். காலம் என்பதே நல்லவனை உணர்த்தும். அதுவே ஒரு நாள் யார் பழிகாரன் என்பதை வெளிப்படுத்தும்.

கோரஸ்: நல்ல சொற்கள் நல்லவன் கேட்டு அதன்படி நடக்கத் தக்கன. விரைவில் எண்ணி முடிப்பது தீங்கற்றதல்ல.

ஒதிபன்: சூழ்ச்சியாளன் மிக விரைவில் முன்சென்று செயலாற்றும்போது, நண்பனே எதிர் நின்று செயலாற்றுவதே நல்லதாம். அன்றி, அவன் செய்யும் சூழ்ச்சியைத் தெரிந்தும் உட்கார்ந்து தீது வருமளவும் பார்த்திருப்பதா ?

கிரியன்: என்ன செய்ய விரும்புகிறாய்? என்னை நாடு கடத்தப் போகிறாயா ?

ஒதிபன்: உன்னை நாடு கடத்தப்போவதில்லை. கொலைத்தண்டம் [illegible]

கிரியன்: எவ்வழியில் உனக்குத் தீமை செய்தேன் என்று உணர்த்திய பின்பே அவ்வாறு செய்யக்கடவாய்.

ஒதிபன்: இன்னும் உன் முரட்டுப் பேச்சைப் பற்றிக்கொண்டிருக்கிறாயா ?

கிரியன்: நீ தீய வழியில் செல்கிறாய் என்பது அறிந்துதான்.

ஒதிபன்: நான் நல்ல வழிதான் செல்கிறேன் என்பது அறிவேன்.

கிரியன்: உன் கண்ணுக்கு அவ்வாறு படலாம்; எனக்குப் படவில்லை.

ஒதிபன்: நீ கோழை.

கிரியன்: நீ எண்ணுவது தவறு என்று தெரிந்தால்,

ஒதிபன்: அரசர்கள் ஆளவேண்டியவர்கள்.

கிரியன் : அறநெறியிலிருந்து பிறழ்ந்து ஆள்வது கூடாது.

ஒதிபன் : தீபநாட்டு என் மக்களே, கேளுங்கள்.

கிரியன் : உன் மக்கள் மட்டுமா, என் மக்களுந்தான்.

கோரஸ் : ஐயன்மீர் மேலே ஒன்றும் பேசிக்கொள்ளாதீர்கள். அரசி, யோகத்தாள் வருகிறாள். உங்கள் கலக்கத்தைப் போக்குவாள்.

[யோகத்தாள் அரண்மனையிலிருந்து வருகிறாள்.]

யோகத்தாள் : ஏன் இவ்வளவு உரத்த குரலில் பேசிச் சண்டையிட்டுக் கொள்கிறீர்கள். உங்களுக்குள்ளே தனிப்பட்ட முறையில் இருக்கும் சிக்கல்களைப்பற்றிப் பேசித் தீர்க்க இதுவோ தக்க சமயம்? நாட்டில் தாண்டவமாடும் துன்பத்தைப் போக்க முற்பட வேண்டிய உங்களுக்கு இப்படிப் பேசிக்கொள்ள வெட்கமில்லையா? கணவரே! உள்ளே வாருங்கள். கிரியே! வீட்டுக்குப்போ ஏதோ முக்கிய மற்ற ஒன்றைப் பெரிதாக்கிக் கொண்டிருக்கிறாய்!

கிரியன் : அப்படியன்றி உன் கணவர் என்னை நாடு கடத்தவோ அன்றிக் கொலை செய்யவோ உறுதி கொண்டுள்ளார்.

ஒதிபன் : ஆம்; என் உயிருக்குத் தீங்கு செய்யும் முறையில் சூழ்ச்சி செய்துள்ளான்.

கிரியன் : தெய்வங்களின் சாபம் என்மீது விழுக, அப்படி நான் அவ்வாறு ஏதும் தீங்கு நினைத்திருந்தால்.

யோகத்தாள் : ஒதிபரே, கடவுளின் பேரால் அவன் சொல்லும் சூளுரையை நம்புங்கள். எனக்காகவும் இங்குள்ளாருக்காகவும் இது செய்யுங்கள்.

கோரஸ் : ஆம், அரசே! கருணை காட்டுங்கள்; விட்டுக்கொடுக்க விரும்புங்கள்.

ஒதிபன் : ஏனோ!

கோரஸ் : இதற்குமுன் தங்களுக்குத் தீமை செய்யாதவர், தங்கள் முன்னிலையில் ஆணையிட்டுச் சொல்லியதே அவருக்குத் தற்காப்பாகும்.

ஒதிபன் : உங்களுக்கு இதன் விளைவு தெரியுமா?

கோரஸ் : நாங்கள் அறிவோம்.

(தொடரும்)

# செய்திகளும்

## (க) படிக்கும் பழக்கம்பற்றிப் பண்டித நேருவின் கருத்துரை

"கடந்த சில ஆண்டுகளாக நம்முடைய தாய்மொழியில் குழந்தைகளுக்குத் தேவையான புத்தகங்களை வெளியிடும் முயற்சியில் நாம் ஓரளவு முன்னேறியிருக்கிறோம். எனினும் குழந்தைகள் விரும்பத் தக்க சிறந்த புத்தகங்களையும் இதழ்களையும் மற்ற நாடுகள் வெளியிடுவது போல் வெளியிடாமல் மிகமிகப் பின் தங்கியிருக்கிறோம். விளக்கமாகச் சொல்லப்போனால், நம் மக்களுக்குப் படிக்கும் பழக்கம் இல்லையென்றே சொல்லவேண்டும். நம்நாட்டில் புத்தகங்களையும் இதழ்களையும் படிப்போர் தொகை மிகக் குறைவு. இதற்குக் காரணம் படிப்பின்மையல்ல. இங்குக் கோடிக் கணக்கில் படித்தவர்கள் இருக்கின்றனர். ஆனால் படிக்கும் பழக்கமுடைய பொதுமக்களின் தொகை ஒரு குறிப்பிட்ட அளவிலேயே இருக்கிறது. இந்தத் தொகை நாளும் வளரும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இது, நயமானதும், தகுதியுள்ளதுமான புத்தகங்கள் வெளிவருவதைப் பொறுத்திருக்கிறது.

படிக்கும் பழக்கம் வளருதற்கு ஏற்ற பருவம் குழந்தைப் பருவமே. எனவே, குழந்தைகளைப் படிக்கும்படி ஊக்குவித்தலே சாலச் சிறந்தது. அவர்களுக்குப் பிடித்தமானதும், சுவையானதுமான புத்தகங்கள் இருக்குமாயின் அவர்களெல்லோரும் படிப்பார்கள். குழந்தையின் உள்ளம் விரிவடையக் கூடியதும், அறியும் அவா உடையதுமாகும். இத்தகைய உள்ளத்தில் பொருந்தும் ஆற்றல் வாய்ந்த புத்தகங்கள் கிடைக்குமானால், அவற்றைக் குழந்தைகள் படிப்பர். ஆனால் குழந்தைகள் எதை விரும்பும் என்பதை அறிந்து புத்தகம் எழுதுவோர்தாம் நம் நாட்டில் அரிதாக இருக்கின்றனர்"—என்று, நவம்பர் 14 முதல் 21 வரை நடைபெற்ற 'குழந்தைகள் புத்தக வார' விழாவையொட்டி அனைத் திந்திய இந்தி நூல் வெளியீட்டாளர் கழகத்திற்குப் பண்டித நேரு அவர்கள் தாம் அனுப்பிய செய்தியில் குறிப்பிட்டுள்ளார்கள்.

குறிப்பு: பண்டித நேரு அவர்களின் கருத்துரை படித்தவர்கள் எனப்படுவோர் அனைவரும் கருத்தில் கொள்ளவேண்டிய சிறந்த உரை. அதிலும் குழந்தைகளைப் படிக்கச் செய்தலில் பெற்றோர்களும், ஆசிரியர்களும் கருத்தைச் செலுத்தி ஆயிரக்கணக்கில் குழந்தை இலக்கியங்களும், இதழ்களும் வெளிவர வழிவகை காண்பார்களாக.

## (உ) குழந்தை இலக்கியங்களுக்கு ஆதரவு தருக!

கடந்த 14-11-59 இல் குழந்தைகள் வாரத்தை முன்னிட்டு மயிலை சீனிவாசசாத்திரியார் மண்டபத்தில் நடைபெற்ற விழாவில் குழந்தைகட்கான நூல்கள் வெளியிடப்பட்டன. அந் நூல்களை வெளியிட்டுப் பேசிய உள்நாட்டு அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் குழந்தைகள் மனத்தில் சீரிய எண்ணங்கள் தோன்றப் புத்தகங்கள் சிறந்த வழியாகும் என்று கூறினார். அடுத்துப் பல பெருமக்கள் பேசினர். அவருள் திரு. சந்தானம் என்பார் பேசுகையில், "குழந்தைகட்கான நூல்களை வெளியிட அரசினர் போதுமான பொருள் உதவி அளித்தல் வேண்டும்." என்று கூறியுள்ளார்.

**குறிப்பு:** திரு. சந்தானம் அவர்களின் கருத்து மிகமிக வரவேற்கத் தக்கது. நூல்கள் இப்படித்தான் அமையவேண்டும் என அறிவுரை கூறும் அரசியலார் அதற்கேற்ப வெளியீட்டாளர்கட்குப் போதிய பொருளுதவி அளித்தல் வேண்டுமன்றோ? எனவே இக் கருத்தினை அரசினரும் கருத்தில் கொள்வார்களாக.

(ந) **பாராட்டுகிறோம்**

கடந்த 21-11-59 இல் சென்னை இராசாசி மண்டபத்தில் முதலாவது குழந்தைகள் மாநாட்டைச் சென்னை ஆளுநர் மாண்புறு விட்ணுராம் மேதியவர்கள் துவக்கிவைத்தார்கள். அது காலை சிறந்த குழந்தை இலக்கியத்தை ஆக்கித்தந்த பேராசிரியர், மயிலை சிவமுத்து அவர் கட்கும் திரு. தி. ஜ. ரங்கநாதன் அவர்கட்கும் கேடயங்கள் வழங்கினர். கேடயம் பெற்ற ஆசிரியர்களைப் பாராட்டி டாக்டர். மு. வரதராசனர், அவர்களும், புலவர் கி. வா. ஜகந்நாதன் அவர்களும் பேசினர்.

**குறிப்பு:** பரிசுபெற்ற ஆசிரியர்கட்கு நமது மகிழ்ச்சியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். அவர்களின் பணி மேலும் சிறப்பதாக.

(ச) **ஒரு கையெழுத்துப் படிக்கு $8\frac{1}{2}$ லட்ச ரூபாய் விலை மதிப்பு!**

ஏசுநாதரின் சீடரான ஜான் என்பவரின் கையெழுத்துப்படி நூலொன்றை லண்டனில் எச். பி. கிராஸ் என்னும் நியூயார்க் வணிகர் ஒருவர் 65 ஆயிரம் ஸ்டர்லிங் (அஃதாவது ரூ. 8,67,000) விலை கொடுத்து வாங்கினர். இதுவரையில் எந்தப் புத்தகத்திற்கும் இவ்வளவு விலை கொடுக்கப்பட்டதில்லை. சென்ற ஆண்டு 39 ஆயிரம் ஸ்டர்லிங் (ரூ. 5,20,000) விலை கொடுத்து ஒரு புத்தகம் வாங்கப்பட்டது அதை யும் இதே வணிகர் எச். பி. கிராஸ்தான் வாங்கினர்.

**குறிப்பு:** மேனாட்டார் வரலாற்று நூல்களை வெளியிடுதலில் எத்துணை அக்கறை காட்டுகின்றனர் என்பதற்கு இஃதொரு நல்ல எடுத்துக்காட்டு. ஏட்டின் சிறப்பே நாட்டின் சிறப்பு என்பதை அவர்கள் அறிந்துள்ளனர் போலும்.

---

## 'செல்வி' கட்டுரையாளர்கட்கு

'செந்தமிழ்ச் செல்வி' திங்கள் வெளியீடாகையால் மிக நீண்ட கட்டுரைகளையும் கவிதைகளையும் வெளியிடுதற்கில்லை. அங்ஙனம் வெளியிடின் வேறு பல இன்றியமையாக் கட்டுரைகட்கு இடமளிக்க முடியாமற் போகிறது. இதனுல் பல கட்டுரைகள், வெளிவராமலேயே தேங்கிக் கிடக்கின்றன. எனவே இனி, செல்விக்குக் கட்டுரை கவிதை முதலியன அனுப்பும் அன்பர்கள் செல்வியில் நான்கு பக்கங் கட்கு மேற்படாத அளவில் கட்டுரைகளையும், ஒரு பக்கத்திற்கு மேற்படாத அளவில் கவிதைகளையும் எழுதி அனுப்பி இந்த இடர்ப் பாட்டினைத் தவிர்க்குமாறு வேண்டுகின்றோம்.

ஆசிரியர்

டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன்

# சொற்பொழிவுகள்

மறைமலையடிகள் நூல் நிலையத்தில் 15-11-59 ஞாயிறன்று மாலை டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள், "நூல்களுக்கும் படிப்போர்க்கும் திருமணம்" என்ற பொருள்பற்றிச் சுவையான சொற்பொழிவொன்றை ஆற்றினர்.

9-12-59 புதனன்று மாலை சென்னை அமெரிக்க அறிவிப்பு அலுவலக நூலக இயக்குநர் திருமதி சி. எப். ஜான்சன் தலைமையில் டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள், "பொது நூலகப் பணியில் மனிதப் பங்கு" என்னும் தலைப்பில் பயன்தரும் சொற்பொழிவொன்றை நிகழ்த்தினர்.

டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் சென்னைக்கு வரும் சமயம் அனைத்திலும் முன்னதாகவே கடிதம் எழுதி சொற்பொழிவுக்கு இணங்குவதற்கும், சென்னைக்கு ஒவ்வொரு முறை வரும்பொழுதும் இந்நூலகத்தில் முதல் சொற்பொழிவை ஆற்ற இணங்குவதற்கும் நூலகம் தன் நன்றியை அறிவித்துக் கொள்கிறது.

---

# மதிப்புரை

"சிதம்பரம் தில்லைக் காளியம்மன் திருப்பதிகம்"

[இதன் ஆசிரியர் திருவாசகமணி, கே. எம் பாலசுப்பிரமணியம், பி. ஏ., பி. எல்., கிடைக்குமிடங்கள்: தில்லையம்மன் தேவத்தானம், சிதம்பரம்; மார்டன் ரேடியோ கீழவீதி, சிதம்பரம்,]

செந்தமிழ்த் திருமாமறை முடிபாம் 'திருவாசகத்தை'ச் செவ்விய முறையில் ஆங்கிலயாப்பான் மொழி பெயர்த்து உரைசால் ஓங்கு புகழெய்திய ஒண்மையர் இவ்வாசிரியர். நீங்கில் செந்தமிழால் தெய்வத்தைப் பராவுதல் சீரியோர் தலைக்கடன் என்பதைத் தேயமெலாங் கண்டுய்ய இப் புகழ்ப்பாமாலையை யாத்துள்ளார். செய்யுட்கள் எளிய இனிய நடையும் ஆற்றொழுக்கும் அமைந்துள்ளன. முத்தமிழ்ச் சிறப்பினை மூன்றிடங்களிற் சுட்டியுள்ளார். இப் பாமாலையினை அன்புடன் எவலாரும் அம்மை திருமுன் ஓதி வழிபட்டுய்வார்களாக. ஆசிரியரவர்கள் இதுபோல் தமிழ்த் தெய்வப்பாமாலை யாத்துத் தமிழ் வழிபாடு தழைத்தோங்கச் செய்வார்களாக. இந்நூல் 'தில்லையம்மன் தேவத்தான' வெளியீடு.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு கக௯௰, மார்கழி | பரல் |
|---|---|---|
| ௩௪ | சனவரி, 1960 | ரு |

## கடவுட் கழலிணை எய்திய நாவலர்
# ச. சோமசுந்தர பாரதியார்

"எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே" என்பது பண்டைச் சான்றோர் ஒப்பாரும் மிக்காருமின்றித் தாமே தனிமாண்பினராய் வாழ்ந்து கண்ட வாய்மொழியாகும். அம் முதுமொழி நாட்டுக்கு மட்டுமன்று, விழியெனக்கொள்ளும் மொழிக்கும், வழியெனப் பற்றும் விழுத்துணை நெறிக்கும் ஏற்புடைத்தேயாம். அகவிழியாம் மொழியின் தகவுகொண்டே ஒரு நாட்டின் நலத்தினை நல்லோர் நாளும் நவில்வர். மொழியின் வளமனைத்தும் கணக்காயர், பாவலர், நாவலர், புலவோர், ஆசிரியர் முதலியோர் நுண்மாண் நுழைபுல வளத்தாலாவன. இத்தகைய மூதறிஞர்களை வள்ளுவப் பெருந்தகையார் 'தக்கார்' என்னும் ஒரு சொல்லான் மொழிந்து அவரே 'மிக்கார்' என்னும் மெய்ம்மையினைக் குறிப்பிற் புலப்படுத்துவார் நடுவணதாகப் பெய்து நாட்டினர். அத் திருக்குறள் வருமாறு :

" தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு" —எ௩௧.

அம்முறையில் நம் நாவலர் எல்லாமாய்த் திகழ்ந்து பொன்றாப் புகழெய்திய வல்லார். செந்தமிழன்னை அவ்வப்போது வந்துறும் இடையூறுகளை மடிதற்றுத் தாமுந்துறும் ஆண்மை மிக்க மைந்தர்களைக்கொண்டு நீக்கிக்கொள்ளும் நீர்மையளாய்த் திகழ்கின்றனள். இந்நிலைமை கடைச்சங்கப்புலவர் தலைமணி நக்கீரனார் காலந்தொட்டு நிகழ்ந்து வருகின்றது. அந் நக்கீரனார் போன்று ஆக்கவும் அழிக்கவும் வல்ல நோக்கமும், நொடிப்பும், நூன்

முறைச் செயலும் ஊக்கமும் உழைப்பு மிக்காராய் நம்நாவலர் ஒருவரே இந்நாள் திகழ்ந்தனர்.

அவர்தம் உருவும் திருவும், நடையும் கொடையும், மொழியும் எழுத்தும், வழிகள் வகுக்கும் வண்மை விழியும், பழியொடு படாப் பண்பமை உரனும், அடையலரடங்க ஆற்றும் மறனும், நடையவர் விளங்க நாட்டும் அறனும், செந்தமிழன்னையின் சீர்மை காக்க முந்துறநிற்கும் முதன்மையும், உலகத்துயர்மொழி பலவற்றுள்ளும் தொன்மையும் நன்மையும் தூய்மையும் தனித்தியங்குந் தன்மையும், குறையாநிறைவும், இனிமையும் எளிமையும், இறையுணர்வுடைமையும், இலக்கண வரம்பும், நிரம்பும் இலக்கிய வளமும், அவ்வப்போது வேண்டும் சொற்களை ஆக்கிக் கொள் மாண்பும் ஒருங்கமைந்த தாய்மொழியாம் தமிழ்மொழியின் தனிப்பெரும் சீர் சிறப்பு அமிழ்தினுமினிய தமிழகமட்டுமன்றி இமிழ்திரையுலகம் எங்கணும் திகழத் தம் பெரும் புலமையால் பழம்பெருநூல் ஆய்வும், புதுப் பலநூல் யாப்பும் தமிழில் செய்தமைபோன்று ஆங்கிலத்திலும் செய்தமைத்த செயற்போராண்மையும் கண்டார் உள்ளங் கவர்வனவாய்க் கேட்டாருள்ளம் நாட்டங்கொள்வனவாயுள்ளன.

இப் பெருந்தகையார் வரலாறு யாவரும் படித்துணர்வது அவர்தம் முன்னேற்ற வாழ்விற்குப் பெருந்துணைப் பெருவிளக்கமாக நிற்கும் பெற்றி வாய்ந்தது. அத்தகைய விரிந்த வரலாறு நம் கழகப்பதிப்பாக வெளிவந்துள்ளது. முழுவதும் அதன்கண் காணவிடுத்து ஒரு சிறிதுமட்டும் ஈண்டு வரையுதும்.

செல்வர்தாம் உறையும் திருநெல்வேலி மாவட்டத்து எட்டையபுரம் என்று ஓர் ஊர் உளது. அவ்வூர் அறிவும் ஆற்றலும், மாற்றொணா ஆண்மையும், உருவும் திருவும், உரனும் உண்மையும், அருளும் பொருளும் ஒருங்கு அமைந்த குறுநிலமன்னரால் ஆளப்பட்ட திருவூர். அவருள் பல்லாற்றானும் சிறந்த நல்லார் முத்துசாமி எட்டப்ப நாயக்க ஐயன் ஆவர். இவர் சென்னைக்கு வருங்கால் அறிமுகமாகி இவர்தம் நட்பைப்பெற்றவர் சுப்பிரமணிய நாயகராவர். இவர்கள் அந்நாளில் செந்தமிழ்ச் சித்தாந்தச் சைவச் சண்டமாருதமாகத் திகழ்ந்த சோமசுந்தர நாயகரின் உறவினராவர்.

சுப்பிரமணிய நாயகர் எட்டையபுரம் வந்து சார்ந்தார். மன்னரின் உள்படுகருமத் தலைவராகப் பணிபுரிந்தனர். இப்பணியின் பின் மன்னரின் ஒப்புதலின்மேல் தம்பெயரை எட்டப்ப பிள்ளை என வைத்துக்கொண்டனர். இவர்க்குப் போாதரவுபுரிந்த மன்னரின் வளர்ப்புப் பெண்மகவொன்று அரண்மனையில் வளர்ந்து

வந்தது. அம்மகவின் பெயர் முத்தம்மை எட்டப்பபிள்ளைக்கு முன்னமே திருமணம் முடிந்திருந்தது. எனினும் மகப்பேறில்லாக் குறையொன்றிருந்தது. அதனை நீக்குதற்பொருட்டு அரண்மனை முத்தம்மையை மணந்துகொண்டனர். அந்நங்கை அரண்மனையில் வளர்ந்தமையால் மன்னற்குரிய உருவுந் திருவும், ஊக்கமும் உரனும், வளனும் வண்மையும் வாய்க்கப்பெற்றிருந்தனள். மனை வாழ்க்கையும் அத்தகு சிறப்புடன் நிகழ்ந்து வந்தது. அந்நங்கை கருவுற்றுக் கி. பி. 1879 ஜூலை 27 ஆம் நாள் நல்லதோர் ஆண் மகவை ஈன்றனள். அம்மகவே நம் பாரதியாராவர். அவருக்குத் தந்தையார் தம் அருமை மகனார்க்குத் தம் நெருங்கிய உறவின ரும் ஒருங்கியவுள்ளஞ்சேர் சித்தாந்தச் செல்வருமாகிய 'சோம சுந்தர நாயகரின்' திருப்பெயரையே சூட்டினர். அத்துடன் 'சச்சிதானந்தன்' என்னும் அடைமொழியும் சேர்ந்து 'சச்சிதா னந்த சோமசுந்தரன்' என வழங்குவதாயிற்று. பின்பு சுருக்கத் தின் பொருட்டு 'ச. சோ பாரதியார்' என வழங்கலாயினர்.

நாவலர் முப்பதுநாள் குழந்தையாக விருக்கும்போது அரசியார் 'இலக்குமி அம்மையாரின்' விழைவின்படி அவ்வம்மை பார்பால் ஒப்புவிக்கப்பட்டனர். அவ்வம்மையாரால் சீர் சிறப் புடன் வளர்க்கப்பட்டனர். நாவலர் அரசர் திருவுடன் வளர்ந்து வந்தனர். அதனால் அவர் பிற்காலத்து அனைத்துத் துறை யிலும் அரியேறெனத் திகழ்வாராயினர். ஐந்தாம் அகவையில் பள்ளிக்கு வைத்தனர். அரண்மனை ஆசிரியர் சங்கர சாத்திரி யாரைக்கொண்டு எழுத்தறிவித்தனர். எழுத்தறிவிக்குங்கால் தமிழ்மொழி வடமொழி இரண்டினையும் அறிவித்தனர். தெய்வ சிகாமணி ஐயங்கார் பள்ளியில் சேர்த்தனர். நாவலர் பள்ளியிற் சேர்ந்தவன்று அவ்வாசிரியர் வேறொரு மாணவனைக் குருதி சொட்ட அடித்தனர். அது கண்டஞ்சிய நாவலர் அப்பள்ளிக்குப் போக மறுத்துவிட்டனர். அரசியாரும் அதற்கிணங்கி அரண் மனையிலேயே நிறுத்திக்கொண்டனர். பின் அவ்வரசியார் இறையடி எய்தினர். நாவலர் பெற்றோரில்லம் புகுந்து வளர் வாராயினர் அப்பொழுது நாவலருக்கு அகவை பதினொன்று. பெற்றோரின் பெருவிருப்புக்கு ஏற்பப் பள்ளி செல்வாராயினர். தந்தையாரின் தனிப்பெருஞ் சைவப்பற்று மைந்தனார்பாலும் விளங்குவதாயிற்று. நாவலர்பால் திருவெண்ணீற்றுப் பொலிவும் சிவமணிப்பொற்பும் என்றும் விளங்கின.

எட்டையபுரத்தில் நம நாவலர் எட்டாம் வகுப்புவரை கற்றனர். கற்றுவருங்கால் அரண்மனைக்கு வந்து மீளும் புலவர் பலரின் சார்பால் தமிழின்மாட்டுத் தண்டாக்காதல் கொண்டு தனித்துக் கற்று வல்லராய்ப் பாடவும் திறம்பெற்றனர். இங்

னைக் கற்ற தமிழ்க் கல்விக்குத் துணையாக உடன் பயின்றவர் நாட்டுக் கவிஞர் சுப்பிரமணிய பாரதியாராவர். அகவை பதினைந்துக்குள் எட்டையபுரப் படிப்பு நிறைவுற்றது. பெற்றோர் பெரு விருப்பத்தின்படி திருமணமும் நிகழ்ந்தது. திருமண நிகழ்ச்சியில் தெய்வத் தமிழ்மண மாட்சியும் கால்கொண்டது. அஃதாவது திருமுறைவல்ல ஓதுவாரடிகள் ஆசிரியராய்த் திகழ்ந்து திருமுறையோதிச் சடங்கினையியற்றத் திருமணம் நிகழ்ந்தது.

நாவலர் திருநெல்வேலிக்கு உயர்தரக் கல்வியின் பொருட்டு வந்தனர். சர்ச் மிசன் உயர்நிலைப் பள்ளியில் ஊக்கமுடன் படித்தனர். இப் பள்ளியோடு கல்லூரியும் இணைந்திருந்தமையால் இடைக் கலை வகுப்பு (F. A.) முடியப் பயின்றனர். கல்லூரியில் அறிவியற் பேராசிரியர் ஒருவர் சமயச் செருக்குக் கொண்டு இலக்கலத்துண்ணும் ஏற்றமுடைய ஒழுக்கத்தை இழித்துரைத்தனர் இதனை நாவலர் அஞ்சாது மறுத்து இலக்கலத்தாலேற்படும் மேலாம் நன்மையினை எடுத்து மொழிந்தனர். இதனை உணர்ந்த கல்லூரி முதல்வர் நாவலரை வியந்து பாராட்டினர். இந்நனம் பிற்காலத்து அரசியல் அலுவலகத்தும், முறைமன்றத்து விளங்கும் நடுவரகத்தும், முறைமன்றுக்கு வரும் அரசியல் முதன்மையாகத்தும் காணப்படும் நேர்மைக் குறைகளையும் முறைகேடுகளையும் அவ்வவர் உணர்ந்து திருந்துமாறு தம் ஆற்றல்மிக்க சொல்லாலும், செயலாலும் அஞ்சாது வெளிப்படுத்துக் காட்டிய நிகழ்ச்சிகளும் பலவாகும்.

இடைக்கலைத் தேர்வை இனிதுறத் தேறிய நம் நாவலர் சென்னைக் கோநகரில் வந்து மேற்கலை பயில விழைந்தனர். நெல்லைக் கல்லூரி முதல்வர் சாஃப்டரின் பரிவுரைக் கடிதத்துடன் சென்னை வந்தனர். வந்து கிறித்துவக் கல்லூரி முதல்வர் மறைத்திரு. வில்லியம் மில்லர் துரைமகனாரைக் கண்டு கடிதத்தை நல்கி விழைவை மொழிந்தனர். அந்நாளில் மில்லர் துரைமகனார் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகவுமிருந்தனர். அவர் இவரை அன்புடன் ஏற்றுக் கல்லூரியில் சேர்த்துக்கொண்டனர். அவர்க்கு நெல்லையில் நிகழ்ந்ததுபோல் கல்லூரிப்படி வசதி முதலியனவும் செய்தளித்தனர். ஆங்கு இவர்க்குத் தமிழ்ப் பேராசிரியர்களாகத் திகழ்ந்தவர்கள் பரிதிமாற் கலைஞரும் மறைமலையடிகளாருமாவர். இவர்தம் சார்பால் நம் நாவலருக்குத் தனித்தமிழ்ப் பற்றும் நாவீறுகொண்டு முழக்கும் முழக்கமும் நன்கு வளர்வவாயின. கிறித்துவக் கல்லூரியில் இளங்கலைப் பட்டம் (B. A.) பெற்றனர். பின் சட்டக் கல்லூரியில் பயின்றனர். படிப்பிற்கிடையில் தந்தையார் மறைந்தனர். இளமையில் மணம் செய்துகொண்டனர். மக்களும் மூவர் பிறந்தனர்.

பணமுட்டும் நேர்ந்தது. உலக மாதாவாகிய இலக்குமி அம்மையாரால் அளிக்கப்பட்டிருந்த பன்னிரண்டு ஏக்கர் நிலத்தையும் விற்றுப் படித்தனர்.

1905 இல் சட்டக் கலையில் தேறினர். சின்னாள் அரசியலில் ஓர் எழுத்தராக அலுவல் பார்த்தனர். பின்னர்த் தூத்துக்குடி வந்து வழக்கறிஞர்த் தொழிலையேற்று வளமுற வாழ்ந்தனர். இவர் செய்யும் வழக்காய்வும், வழக்காடுதலும் நேரிய முறையும் சீரிய பாங்குமாகவிருந்தன. நகரத்தார் வழக்குகள் மிகுதியாக வந்தன. பெரும்பாலும் இவர் மேற்கொள்ளும் வழக்குகள் அனைத்தும் வெற்றியேயாம். 1913 இல் முதுகலை (M. A.)ப் பட்டம் பெற்றனர்.

அந்நாளில் அஞ்சாநெஞ்சுடன் நாட்டுப் பணிபுரிந்து, கப்பலோட்டிப் பெருந்தலைமை எய்திய வீரர் வ. உ. சி. அவர்களுடன் நாட்டுப் பணிபுரிந்து பெரும்புகழ் பெற்றனர். 1919 இல் மாநிலக் காங்கிரசு மாநாடொன்றினை நம் நாவலர் நெல்லையில் கூட்டினர். அக்காலத்துப் பெருந்தலைவர்களாகத் திகழ்ந்த சீனிவாச சாத்திரியார், சத்தியமூர்த்தி, எஃச். சீனிவாசய்யங்கார், அன்னிபெசண்டு அம்மையார் முதலியோரும் கலந்துகொண்டனர்.

காந்தியடிகள் 'ரௌலட் சட்டம்' என்னும் கொடுங்கோன்மையை அகற்றச் சுற்றுப்புறப்பாடு புரிந்தனர். அப்பொழுது தமிழ்நாட்டில் சென்னைக்கு வந்தனர். தமிழ்நாட்டில் வேறு எங்கும் காந்தியடிகள் போகும் திட்டம் ஏற்படுத்தவில்லை. அப்படிக்கிருந்தும் நாவலருடைய பேரன்பிற்கும் பெருவிருப்பிற்கும் வற்புறுத்தலுக்கும் இணங்கி அடிகள் தூத்துக்குடிக்கு வந்து சொற்பொழிவாற்றினர்.

1920 ஆம் ஆண்டில் வழக்காளர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி மதுரைக்கு வந்து வழக்கறிஞர்த் தொழிலை நடத்தி வந்தனர். சுயராச்சியக் கட்சியில் சேர்ந்த சி. ஆர். தாசை 1926 இல் மதுரைக்கு வரவழைத்து மாபெருங் கூட்டம் கூட்டிப் பேசுவித்தனர். அப் பேச்சினைத் தாமே மொழிபெயர்த்துரைத்தனர். 1930 ஆம் ஆண்டில் நிகழ்ந்த சட்ட எதிர்ப்புக்கு நம் நாவலர் பணந்திரட்டித் தாமும் பெரும்பொருள் வழங்கிப் பணிபுரிந்தனர். கற்பும் பொற்பும் ஒருங்கமைந்த நாவலரின் மனைவியார் மீனாட்சியம்மையாரும் நாட்டுப்பணி பல புரிந்ததுடன் சிறப்பாகத் தாழ்த்தப்பட்டவர்க்குச் செய்த நலத்தொண்டுகள் அளப்பில. 1937 இலும், 1948 இலும் நடந்த மாபெரும் இந்தி எதிர்ப்புக் கூட்டங்கள் பலவற்றிலும் பேச்சாளராகவும் தலைவரா

கவும் விளங்கிப் புரிந்த ஆண்மைச் செயல்கள் அளப்பில. அந்நாள் முதலமைச்சராகவிருந்த ராசாசியார்க்கு விடுத்த ஆங்கிலத் திறவுக் கடிதம் ஓர் ஒப்பற்ற அறவுரைக் கடிதமாய் அனைத்துலகும் போற்றும் சிறப்பினதாய்த் திகழ்கின்றது. 1933 முதல் 1938 வரை அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவராக வீற்றிருந்து எல்லையில் தமிழ்ப் பணிகள் வல்லவாறு புரிந்தனர். தமிழகம், கடல் கடந்த நிலங்களில் தமிழர்கள் வாழும் தமிழகம் முதலிய எல்லா இடங்களிலும் தலைவராய் நம் நாவலர் புரிந்த தமிழ்த் தொண்டு எண்ணில. பெற்ற பட்டங்களும் அளப்பில. அவற்றுள் ஒன்று யாழ்ப்பா ணத்துப் பெருமக்கள் 1944 இல் வழங்கிய 'நாவலர்' என்னும் பட்டம். 1954 இல் மதுரைத் திருவள்ளுவர் கழகத்தார் 'கணக்காயர்' என்னும் பட்டம் வழங்கினர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தாரால் 'டாக்டர்' பட்டம் வழங்கப்பட்டது.

1958 இல் நாவலர் இல்லத்துத் துவங்கிய 'தமிழகப்புலவர் குழுவுக்கு' நாவலரே நிலைமுதல்வராய்ப் பணிபுரிந்தனர். 1959-ஜூலை-27 இல் நாவலர்க்கு எண்பதாம் ஆண்டு நிறைவு விழா மிகவும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. இயற்றிய நூல் களுட் சில, "திருவள்ளுவர், பண்டைச் சேரர், தமிழிலக்கிய மும் தமிழகமும், தொல்காப்பியத்தைப் பற்றிய கட்டுரைகள்" ஆங்கிலத்தில் வெளிவந்தன. "திருவள்ளுவர், தசரதன் குறையும் கைகேயி நிறையும், சேரர் பேரூர், சேரர் தாயமுறை, மாரிவாயில், மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி, தொல்காப்பியப் பொருட் படலப் புத்துரை" முதலியன தமிழில் வெளிவந்தன.

நம் பெருந்தலைவராய் வழிகாட்டியாய் நம்மிடையே வாழ்ந்து உறுதுணையாய்த் திகழ்ந்த டாக்டர் பாரதியார் பத்து நாட் களுக்கு முன் நோய்வாய்ப்பட்டு மருத்துவமனையில் சேர்க்கப் பட்டனர். அந்நாளிலிருந்து பேச்சு நின்றுவிட்டது. உயர்ந்த மருத்துவங்கள் புரிந்தனர். புரிந்தும் 14-12-1959 இரவு 8-45 மணிக்கு மூச்சு நின்று முன்னேன் திருவடி சேர்ந்தனர். அவர் தமக்குத் திருவடி சேர்ந்தார்க்குச் செய்யும் சிறப்பனைத்தும் வேந்தரும் விழையும் வியப்புடன் நிகழ்ந்தன. அவற்றின் விரி வனைத்தும் இச் செல்வியின் மற்றொரு பகுதியில் காண்க. பாங்கார் பாரதியாரின் பண்பமையாவி கடவுள் திருவடியிற் கலந்தின்புறுக. கழகத்தாரின் ஆழ்ந்த பரிவும் ஆறுதலும் அவர்தம் குடும்பத் தார்க்குச் சேர்வதாக. ஈடு செய்யவொண்ணுப் பேரிழப்பெனி னும் நாடுமவர் தொண்டை நயந்து மேற்கொண்டு புரிதலே நம் பெருங்கடனும்.

# *நாவலர் பாரதியார் மறைவுக்கு இரங்கல்

## இரங்கற்பாக்கள்

பிணக்காய வல்ல பேரறிஞர் டாக்டர்
கணக்காயர் நாவலர் காணின்—வணக்கமிலாத்
தூய தமிழ்த்தலைவர் சோமசுந்த ரப்பேரால்
மேயார் மறைந்தடைந்தார் விண்

பாரதியா ரோமறைந்தார் பண்பார் தமிழினத்துள்
யாரவர்தம் நற்புலமைக் கீடாவர்—சீர்மிக்க
ஆய்வால் அறிவினால் அஞ்சா வுரைநலத்தால்
தேயா மனத்தால் சிறந்து.

—பேராசிரியர் ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, மதுரை.

இந்திமொழி வந்துபுக எண்ணியவர் இடிந்திடவே
முந்திவந்து தமிழ்காத்த மூதறிஞ! பாரதியே!
சிந்தனையின் சிகரமெனத் திகழ்ந்திருந்த பாரதியே
அந்தகனும் நினதுயிரை அஞ்சாது கவர்ந்தனனே!

கடமைசெயா மடமையர்கள் காசினியில் மிகவிருக்கத்
திடமிகுந்த பாரதியே! நீதானே செயற்குரிய
கடமைகளைத் தவறாது கண்டறிந்து முடித்துவிட்டாய்
உடலின்று மறைந்திடினும் உனதுபுகழ் மறைவரிதே!

—பேராசிரியர், அ. கி. பரந்தாமனார், மதுரை.

நாவலரேத்துஞ் சிங்கம்! நயனுளார் போற்றுந் தந்தை!
பாவலார் பரவும் வேந்து! பண்புளார் கருதும் அண்ணல்
மேவலார் தமிழ்ப்ப கைஞர் விதிர்ப்புற்று வீழச் சாடுங்
காவலார் டாக்டர் சோம சுந்தரா! காண்ப தென்றோ?

‘வாழ்வாங்கு வாழ்ந்தார் தம்மை வானுறை தெய்வ’ மென்ற
வாழ்வாங்கு வாழ்ந்த வள்ளல் வாழ்க்கையை வடித்துத் தந்தாய்
வாழ்வாங்கு வாழ்ந்த சோம சுந்தரா! மறைந்த மாயம்
வாழ்வாங்கு வாழும் தெய்வத் தமிழ்மொழி எனத்து ணிந்தோ?

—வித்துவான், அ. இராசகோட்டியப்பன், விருதை

---

*நாவலர் பாரதியார் மறைவு குறித்துத் தமிழகப்பெருமக்கள், புலவர்கள், அன்பர்கள் ஆகியோரிடமிருந்து வந்துள்ள இரங்கற்செய்திகள் பல. இடமின்மை கருதி அவற்றின் சுருக்கமே ஈண்டுத் தரப்பட்டுள்ளன.

நாவலவா! நற்சோம சுந்தரனே! நாடிமிக
ஆவலாய் உன்னை அழைத்ததேவன்—ஏவல்
விதியென்று சொல்லி விண்மறலி கொள்ளச்
சதிதவறு செய்தானோ தான்.

பாவலனே! ஈண்டு பரிவுட னின்றேங்கக்
காவலற னின்றிக் கடந்தனையே—மேவிநீ
எங்குற்றாய் ஐயா! இனிவரவும் உண்டாமோ?
இங்குற்ற கோதென் இயம்பு.

செந்தமிழின் செங்கோல்நற் சீர்செறிந்தே
இவ்வுலகிற் சிறக்க வேண்டிச்
சுந்தரனே நீயடைந்த தொல்லைபல
ஆறுலுந் துளிபோல் எண்ணிச்
சிந்தைமிக நீயிருக்கும் இக்காலை
அக்காலன் சீர்த்தி நோக்கி
வந்தபெரு மடமைதனை மறப்பாரோ
இவ்வுலகில் மாண்புள் ளாரே.

—பலவான்குடி, திரு. மெ. வெ. வேலப்ப செட்டியார்.

தமிழருக்கு வீரமுண்டு என்றுபல
தமிழ்ப்புலவர் அவையிற் சொல்வார்
தமிழ்மொழிக்கு இடையூறு செய்வாரைத்
தாமென்றும் சார்ந்தே வாழ்வார்
தமிழருக்கு உரியதொரு தனிப்பண்பு
வீரமெனச் சாற்றல் அன்றித்
தமிழ்மொழியைக் குறைகூறும் தகவிலரைத்
தானடக்கும் தகைவு எங்கே!
தொல்காப்பியத்திலுள தூயபொருள்
அறியாமல் தோன்றி யாங்கே
அல்லபொருள் உரைத்திட்டார் அதைமறுத்து
நல்லுரையை அளித்தாய் அந்தோ!
பல்லோரும் துயர்க்கடலுள் மூழ்கிடவே
விண்ணுலகு பறந்தா யேனும்
எல்லோரும் தொழுஞ்சோம சுந்தரனே!
நின்புகழ்தான் என்றும் வாழி!

—தலைவர், மயிலம் தமிழ்க் கல்லூரி சி. துரைசாமி.

தெய்வப் புலமைத் திருவள் ளுவனார்தம்
பொய்மைக் கதையைப் பொசுக்கிய—ஐயனே !
நெஞ்சாலிவ் வாய்மை நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ ஏனை யவர்.

இற்றைநாள் யாமறிந்த புலவர் தம்முள்
இவரொப்பார் இந்நிலத்தில் இல்லையென்றும்
அற்றைநக் கீரனார் வந்து தித்த
அறிவுமுதிர் ஆசிரியர் இவரென்றும்
பிற்றைநாட் பெரும்புலவர் பேசு மாறு
பெருநிலத்தில் வாழ்ந்திட்ட பெருமை சான்றோய் !
கற்றவர்யாம் கனிந்துருகக் காலன் உன்னைக்
கவர்ந்திட்டான் கடுந்துயரம் எய்தி னோமே!

—பண்டித, ச. சாம்பசிவம், பசுமலை.

கட்டாயம நுழைந்திடுவேன் எனவந்த
இந்தியினைக் கண்டு சீறி
'விட்டேனா பார் !'எனவே விரட்டியடித்
திடமுனைந்த வீரன் எங்கே?
தொட்டாலே மணக்குந்தொல் காப்பியம்வள்
ளுவர்கம்பர் துருவித் தேர்ந்து
தட்டாமல் பெரும்புலவோர் தாம்போற்று
முறைநூல்கள் சமைத்தோன் எங்கே?
இருந்தமிழே யுனக்காக இருக்கின்றேன்
எனக்கிந்நாள் எண்பத் தொன்று
பொருந்துவய தாயிடினும் உணர்வினிலே
இளமைநலம் பொதியச் செய்யும்
மருந்தெனநீ வயங்குகிறாய்' எனவுரைக்கும்
வகையிலுயர் வாழ்வு சூழ்ந்த
பெருந்தகையோன் தமிழகத்துப் புலவர்குழுத்
தலைவனவன் பிரிந்தா னந்தோ !

—சி. இராமசாமி, வத்தலக்குண்டு.

பாரதியா ரென்றால் பயனார் பசுமலைப்
பாரதியா ரென்றே பகர்வேமால்—பாரதியார்
ஏற்ற உடல்மறைந்த தேனும் தமிழ்வடிவுத்
தோற்றம் நமக்குத் துணை.   —ஆ. சிவலிங்கனார், மயிலம்.

ஆய்வறிவின் கனிபழுத்த அரசே! நல்
லமுதளித்த முகிலே கல்வித்
தாய்மகிழ்ந்த மகவே! செந் தமிழ்வளர்த்த
பேராறே! தருக்கி வந்தோர்
வாய்மடக்கிச் செந்தமிழ்த்தாய் வாகைகொளப்
பணிபுரிந்த வாள்வீ ராநீ
போய்மறைந்தாய் அந்தோஉன் பொன்னுளம்போல்
தமிழ்ப்பணியே புரிவோம் ஐயா!

—ச. பாலசுந்தரம், கரந்தைப்புலவர் கல்லூரி.

மாமதுரைச் சங்கமது மனங்குமுறி நின்றழூஉம்
ஏமமிகு புலவர்குழு ஏங்கிநின்று நின்றழூஉம்
சூழ்மதுரைச் சொக்கனழூம் சுந்தரனே நின்பிரிவால்
தேமதுரத் தமிழழூஉம் தென்னாடு தானழூஉம்!

—நல்லிசைக்கவி, அ. இளங்கோவன், சீராவிகரிசல்குளம்.

ஆணழகன் சிங்கமென அறைதற்கேற்ற
அன்புதவழ் முகப்பொலிவும் அருளும் உண்டே
மாணெழிலாள் தமிழன்னை வளர்த்த மன்னர்
வையகத்தில் புகழ்நாட்டி மறைந்தா ரந்தோ!
தமிழகத்தில் இவரறியாத் தமிழர் உண்டோ?
தன்னிகரில் புலவரிவர் தமிழே வாழ்வு
தமிழ்மொழியும் ஆங்கிலமும் அறிந்த அன்பர்
தமிழகத்தே இவரிடத்தைப் பெறுவாருண்டோ!

—வித்துவான், வி. ப. நடராசன், பசுமலை.

அஞ்சாத நெஞ்சுரமும் ஆழ்ந்த நோக்கும்
அரியதமிழ்ப் பற்றுளமும் இன்ப அன்பும்
எஞ்சாத தமிழ்நடையும் ஏய்ந்த பண்பும்
எத்திசையும் தமிழ்வீரம் ஏத்தும் வாயும்
நெஞ்சாரத் தமிழ்ப்பகையை நீக்கும் சால்பும்
நிகரிலாத் தமிழ்வாழ்வு நீடுவாழச்
செஞ்சொல்உரை பாரதியார் மறைந்தா ரிந்நாட்
செந்தமிழ்நா டினிஎன்ன செய்யும் ஐயோ!

—வித்துவான், தி. கி. சுந்தரமூர்த்தி, மதுரை.

ஆங்கில மாரியம் பாங்கொடு பயின்றே
எம்ஏ பீஎல் என்னும் பட்டம்
பெற்ற நற்றவ! பெருமிதத் தோடும்
தண்டமிழ்க் குழைத்த ஒண்டிறற் பாரதி!
பாவலர் போற்று நாவல ரேறே!
சோம சுந்தர தூரிசிலாத் திருப்பெயர்
பூண்ட பெரிய! புவிபுகழ் பாப்பி
எண்பதின் மேலும் இயலுற வாழ்ந்தனை!
பசுமலை யகத்தே பரிவொடு முற்றனை!
நற்றிருப் புதல்வரைப் பெற்று முகந்தனை
தொல்காப் பியவுரை தோமறக் கண்டனை
மாரி வாயில் வளமொடு மியாத்தனை!
செந்தமிழ்ச் சங்கம் செழிப்புற வளர்த்தனை
தமிழுக் கிழுக்குச் சாற்றிடுங் கயவரை
முகத்து மீசையை முறுக்கி வீறொடும்
மருட்டி வெருட்டி மாழ்குறச் செய்தனை!
பாரதி பேச்சினைப் பரிவுறக் கேட்டோர்
வேறோ ருரையினை விரும்பிக் கேட்பரோ!
அத்திரு வுடைய ஐயரீ பூத
உடம்பினை யொருவி உமையொரு கூறன்
றிருவடி சேர்ந்தனை மருவுறு சுற்றம்
நட்பினர் நற்றமிழ் வாணர் கலங்குறப்
பிரிந்தனை யந்தோபெரிது மாற்றேம்
எங்ஙன மாற்றுவம் எந்தா யந்தோ!
விகாரி யாண்டு விருச்சிகத் திங்கள்
நாலேழ் திகதி நவிலுருஞ் சோம
வாரந் தன்னில் மருவினை கயிலை
என்பதைக் கேட்டே யிரங்கின மந்தோ!

—பண்டித, வித்துவான், இராம. கோவிந்தசாமிப்பிள்ளை, தஞ்சை.

செஞ்சொற் புலவ! செழுந்தமிழின் காவல!
துஞ்சினையோ தூய தமிழ்ப்பகையை—எஞ்சாது
வெல்லும் துணிவோடு வேறுலகம் சென்றனையோ?
அல்லல் எமக்கே அளித்து.

—பேராசிரியர், சி. இலக்குவனார், மதுரை.

கமழ்துறை தோறும் எங்கள் கனிதமிழ் ஆட்சி யோங்கத்
தமிழகப் புலவர் கூட்டத் தனிப்பெருந் தலைவ னாகி
இமிழ்கடல் வரைப்பில் எந்தாய் மொழிக்கிலை ஈடென் றார்வம்
முகிழ்தரக் கூறிநின்ற மொய்ம்பனே! அந்தோ அந்தோ!

வஞ்சனை வழக்குப் பொய்ம்மை வன்செயல் சூழ்ச்சி யாவும்
அஞ்சிமுன் னழிய நல்ல ஆய்வுரை தமிழிற் கீந்து
நெஞ்சினி லுறையும் சான்றோய்! நிறைதமிழ் அறிஞ ரேறே!
துஞ்சுதல் முறையோ எங்கள் துயர்களைந் தருள்வார் யாரே?

பகுத்தறிந் தாய்ந்து சொல்லும் பண்புடைப் புலவ! உன்போல்
மிகத்தெளி வாய்விளங்க மெய்த்தொல்காப் பியத்தி னுக்குத்
தொகுத்துரை செய்வார் யார்? நீ தோற்றுவாய் செய்தாய்; அந்தோ!
அகத்தொளிர் விளக்கே எந்தம் அண்ணலே ஐயா அந்தோ!

முத்தமிழ்ச் சங்கம் போற்ற முதுதமிழ் ஆசா னாகி
நித்திலப் பவழக் கோவை நிகர்எழுத் தாள னாகி
புத்தமு தளித்த மேலோய் புலவர்தம் புலனே அந்தோ!
இத்தரை புலம்பச் சென்றாய் என்றினிக் காண்போம் ஐயா!

—தமிழகப் புலவர் குழுவினர்.

வளளுவயாா எனவ்னவ், வழங்கி வந்த
வாயல்லா வறுமொழியாம் கதைகள் யாவும்
வெள்ளமுறு துரும்பாகி விரைந்து மாய
விரித்துரைசெய் தறிஞரெலாம் வியக்கச் செய்தாய்!
உள்ளபடி தமிழ்உயர்வை உணரார் ஒப்பார்
உரைத்ததமிழ் நூலுரைகள் ஒவ்வா என்றே
ஒள்ளியதொல் காப்பியனூற் குரைவ ரைந்த
ஓங்குபுகழ் நாவலனே! ஒளிந்தாய் அந்தோ!
தருமனிடம் தருமமிலை என்றுகண் டாய்
தயரதனின் குறைகண்டாய் தகுதி யின்றி
அருமையுறும் அகத்தியனே இல்லை என்றாய்
அகலிகைபாற் குறைசிறிதும் காணேன் என்றாய்
இருமையிலும் ஈடுதமிழ்க் கில்லை மேலாம்
இயல்நெறியில் முதிர்ந்துநறுஞ் செய்யுள் சான்ற
பெருமைநம தன்னைமொழிக் குரிமை என்னப்
பேசியபோ ராசிரிய! மறைந்தாய் அந்தோ!

—இலக்கியக் கழகம், தஞ்சை.

சொன்மறவர் நற்சோம சுந்தரனார் பாரதியார்
இந்நிலத்தோர் போற்ற இனிதுறைந்தே—மென்மைமிகு
நற்றமிழைப் பேணி நயமாய்ப் பலநூல்கள்
கற்றெழுதி யாத்தார் கனிந்து.

அத்தகைய மேலோர் அருமைத் தமிழகத்தின்
வித்தகர்கள் யாரும் விதிர்விதிர்த்துச்—சித்தம்
கலங்கிடவே விண்ணடைந்தார் கன்னித் தமிழை
இலங்கிடயார் செய்வார் இனி.

—வித்துவான், நா. சிவராம மூத்துக்குமாரவேல், தேனி.

செந்தமிழ்த் தலைவ னாகித் திறம்பொலி சிந்தையோடு
சிந்தனைச் செம்ம லாகத் திகழ்ந்துயர்ந் திலகு சோம
சுந்தர பார திப்பேர் தூயவ தமிழ்த்தாய் வாட
எந்தமைப் பிரிந்தாய் எந்தாய் இனியெவர் தலைமை ஏற்பார்!

திறங்கொண்ட தமிழர் பண்பும் சிந்தனை வளமும் மாண்பு
பிறங்கிடும் ஒழுக்க வாழ்வும் பீடுறக் கொண்டே நாளும்
அறங்கரை நாவின் ஓங்கி அவிர்தரு நாவ லாரின்
நிறங்கிளர் வடிவு காணேம் நிலையுயர்ந் துயிர்தான் வாழி!

—பேராசிரியர், இராமசாமியடிகள், பேரூர்.

சிங்கத் தமிழர் திறமெல்லாம் சேர்ந்தோர் உருவாய்த் திகழ்ந்தோனே!
சங்கத் தமிழின் தகவெல்லாம் சலியா துரைத்துத் தகவாகத்
துங்கத் தொண்டு செய்திடவே சுரர்தம் நாடு சென்றனையோ!
எங்குற் றாய்என் றறியாமல் ஏக்கங் கொண்டோம் பாரதியே!

இந்தியை முந்தி எதிர்த்தாயே! எந்தாய் மானம் காத்தாயே!
அந்திய காலம் வரைவீணாய் அயரா துழைத்து அலுத்தாயே!
செந்தமிழ் மொழியின் காவலனே! சீர்மிக வுற்ற நாவலனே!
சுந்தர சச்சி தானந்த சோம சுந்தர பாரதியே!

—கோம்பை, சுருளியாண்டிப் பாவலர்.

காமு றத்தமிழ் காத்தபண் டாரகன்
சோம சுந்தர பாரதி சூருடல்
ஈம மெய்தினும் இந்நிலம் நிற்பனே
ஏம நல்லுரை ஏறென வென்றுமே.

—புலவர், ஞா. தேவநேயப் பாவாணர், அண்ணாமலைநகர்,

என்செய்வோம் அந்தோ! எமது குழுத்தலைவர்
முன்செய்த நல்வினையை முற்றுணர்வான்—பொன்செய்த
மேலுலகம் சென்றனரோ? வீரத் தமிழ்உலகம்
சாலத் தயங்கத் தளர்ந்து

—கவிஞர், எம். பி. மசுகரேனசு, தூத்துக்குடி.

தாரணி மொழிகள் தம்முள் தமிழ்மொழி சிறந்த தென்பர்
பார்தனில் கொடையோர் தம்முள் பாரியே பெரியோ னென்பர்
சாரதி தம்முள் மேலோன் சுமந்திர னென்று சொல்வர்
பாரதி பலருள் ச. சோ. பாரதி பெரியோ னென்பார்.

புலவராற் பாடப் பெற்றாய் புலவனு நீயே யானாய்
கலைவலார் தங்கட் கெல்லாங் காட்டெனத் திகழு கின்றாய்
நலமலி தமிழ்நாட் டார்தம் நன்றியை நவிலு கின்றார்
அலகில்சீர் நின்னான் மாவும் அமைதிபெற் றுய்க மாதோ.

—திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தார்.

கீரனின் வழித்தோன்றல் கேடயமாம் தமிழ்மொழிக்கு
தீரமுடன் வாதாடித் திறமையுடன் வெற்றிகாணும்
வீரமுள்ள நெஞ்சினராம் மிகநல்ல பண்பாளர்
பாரதியார் உருவையினிப் பார்ப்போமோ பாரினிலே!

பொன்னுடை கழகமதிற் போர்த்தியுமே கணக்காயர்
என்றழைத்தும் மகிழ்ந்தோமே: இன்றிலையே அப்பெரியார்;
"என்செய்வோம் பாரதிக்கே" என்றுநமை ஏங்கவிட்டுத்
தென்னகத்தின் தமிழ்த்தலைவர் சென்றனரே அமைதியுற!

—கி. பழநியப்பன் மதுரை.

தனித்தமிழை இழித்துப்பலர் பேசியதைத்
தன்மான உணர்ச்சியினால் திருத்திவந்த
கனித்தமிழைப் பரப்பிவந்த கணக்காயர்
காலத்தின் கோலத்தால் மறைந்தாரே!
இனியிந்தத் தமிழகத்தில் இவர்போன்ற
இனியதமிழ்ச் சொல்லறிஞர் பிறப்பதென்றோ?
கனியுறுக திருவடியின் நிழலினிலே
நல்லார்தம் ஆவிமிக இன்புறவே!

—வெண்பாவூர் பொ. திருஞானம்.

செந்தமிழே மூச்சென்று சீர்பலவும்
மிகக்கொண்டு சிறந்த தான
முந்தையர்தம் வழிநின்று அறிவுரைகள்
மக்களுய முயன்று தேடி
எந்தவிடத் தும்தமிழ்நா டினிதேறப்
பாடுபடும் எங்கள் சோம
சுந்தரனே! நின்பிரிவு எந்தமக்கோர்
ஆற்றவொண்ணுத் துயர மன்றோ?
வீரமிகு பேச்செங்கே? வியன் தமிழ்ச்சொல்
வாயெங்கே? மீசை எங்கே?
ஈரமிகு மனமெங்கே? மெய்ப்பொருள்காண்
அறிவெங்கே? இனிமை தோய்ந்த
வாரமிகு கனிவெங்கே? வண்டமிழைக்
காக்கவரும் வளமார் பெங்கே?
கோரமிகு கூற்றுவன்றன் பசிக்குணவாச்
சென்றனவே! குணமிக் கோனே!
மண்ணுலகிற் கற்றுணர்ந்து மக்களுளம்
மகிழவுரை வழங்கி, இந்நாள்
விண்ணுலகம் சென்றுதமிழ் விரிவுரைகள்
ஆற்றுதற்கு விரைவுற் ருயோ?
பண்ணுடன்சேர் தமிழ்ஆய்வோர் குழுத்தலைவ!
பாரினுனைப் பார்ப்ப துண்டோ?
கண்ணுளவிர் மணிஒளிபோல் தமிழ்த்தாயின்
மலரடியிற் கலந்து வாழி!

—வித்துவான், தி. மு. சங்கரலிங்கம், திருவாமாத்தூர்.

உலகமெலாம் புகழ்சோம சுந்தரபா
ரதியேநின் னுரையைக் கேட்க
வலவரிலர் புவிக்கணென மதித்தனையோ
புலவர்குழு வானி னுண்டே
நிலமுறுசெந் தமிழையினி யவண்பரப்பு
வாமென்ன நினைந்தாய் கொல்லோ
புலவர்குழுத் தலைமையண்மை பூண்டநீ
யெமைப் பிரிந்த பொருளென்னேயோ.

பண்டித வித்துவான், தி. சங்குப்புலவர், சென்னை.

எட்டைய புரந்தந்த இளஞ்சிங்கப் பாரதியே!
சொட்டுதமிழ் ஈழத்தார் தொடுத்தசீர் நாவலனே!
கட்டுபுகழ் மாமதுரைக் கணக்காய! மூதறிஞ!
விட்டெமைநீ பிரிந்துவிட்டாய்; வேந்தவனைக் காண்பதெங்கே?
இந்திவெறி அரசுக்கோர் இருப்பாணி வைத்தடித்துப்
புந்தியறும் இச்செயலில் போகாதீர் போவீரேல்
நொந்தழிவீர் திண்ணமெனை நுவன்றவனும் சீர்ச்சோம
சுந்தரனைக் காண்பதெங்கே? சொன்மழையைக் காண்பதெங்கே?
மேவுபெரும் நிறையுடையாள் கைகேயி மிகுகுறையன்
காவலருள் காவலனும் தயரதனே எனக்காட்டி
ஏவுகணை விடுவோர் போற்சொற் போரினெதிர்வென்ற
நாவலனைக் காண்பதெங்கே? நனியாய்வைக் காண்பதெங்கே?
தண்டேந்து கரமெங்கே? தமிழ்காக்கும் உரமெங்கே!
விண்டேந்து மொழியெங்கே? விறல்மீசைத் துடிப்பெங்கே?
கண்டேந்தும் அழகெங்கே? கழியிளமை வளமெங்கே?
கொண்டேந்து சிறப்பெங்கே? குறிப்பெங்கே? குணமெங்கே!

—தமிழாசிரியர், வித்துவான், இரா. இளங்குமரன், பரங்குன்றம்.

மலைபோலும் நிலையான கொள்கை வீரா!
மண்டிவிட்ட கொடுமைக்கு நீயே கூற்றம்,
அலைகாற்றில் பறக்கின்ற இலவம் பஞ்சாய்,
ஆற்றிடையே அகப்பட்ட நாணற் புல்லாய்
அலைகின்றோம்! தமிழ்ச்சுடரே! உயிரே!! உள்ளே
அமைந்திட்ட இதயத்தை உனக்கே தந்தோம்!
விளைகின்ற தமிழ்ப்பயிர்க்குச் செம்மை யூட்ட
வியன்சொல்லே ருழவரினி எவரே உள்ளார்?
நிலவிழந்த வானம்போல் நிலைகு லைந்து,
நீரற்ற கானலாய்ப் பொலிவி ழந்து,
கலமிழந்த வீரன்போல் கைகள் சோர்ந்து,
நிலமிழந்த உழவன்போல் நெஞ்சம் வெந்து,
வளமிழந்த "கோவை"போல் வனப்பி ழந்து,
குளம்பிரிந்த மீனைப்போல் உயிர்து டித்தோம்!
உலவிவந்த பேரேடே! தமிழின் பேறே!
உமக்குற்ற மறைவினிலே நொந்து! நொந்து!!

—வெ. வேதாசலம், மயிலம்,

வீரத் தமிழினத்தின் மேன்மைக் குழைத்ததமிழ்ச்
சூரப் புலிசோம சுந்தர—பாரதியின்
மீசைக்கஞ் சாதே விரைந்துயிர்கொள் கூற்றுவனின்
ஆசைக் களவில்லை யா?

—பண்டித, அ. முத்துசாமிப் புலவர், மதுரை.

நாடு துணையிழக்க நாங்கள் வலியிழக்கப்
பீடு பெறுதமிழும் பேச்சிழக்க—நீடுநின்
சால்பு நிறைமக்கள் தந்தை யிழக்கயாம்
மால்புகவே நின்னிழந்தோ மால்.

—பண்டித, மீ. கந்தசாமிப் புலவர், மதுரை.

அமிழ்தாம் தமிழ்மொழி யள்ளி மாந்தி
தமிழ்மொழி யிலக்கணம் தன்னுட் சிறந்த
தொல்காப் பியரெனும் தூயோர் இயற்றிய
நல்காப் பியத்தை நானிலம் போற்ற
உரையொரு மூன்றே யியலுக் கெழுதித்
தரையினில் தந்த தக்கோர் பாரதி
நாவலர் என்றே நானிலம் புகழ்ந்தது
பாவலர் என்றே பாரோர் ஏத்தினர்
கணக்காயர் என்றே கற்றோர் புகன்றனர்
பிணக்கறுத் தாய்ந்த பெரியார் என்றே
டாக்டர் பட்டம் தானே வந்ததே
எல்லாம் வந்தபின் எம்மைத் துறப்பதோ?
மெய்யாய் வானவர் விரும்பினர் போலும்!
ஆவன செய்ய ஆங்கே சென்ற
செய்தி யெமக்கே உய்தியாய் இல்லை
கையா றெய்திக் கலங்கித் தவித்துச்
சுழலும் எமக்குத் துணிவுரை யாதோ?
முதுமையிற் பிறந்த குழந்தையைத் தந்தையர்
அன்பாய்ச் செல்வமாய் அணைத்து வளர்ப்பர்
அதுபோல் என்னையும் கற்பித்த அந்நாள்
என்று காண்பேன் இனியந் நிலையை
நன்றியும் வணக்கமும் நவிலுவன் இன்றே.

—தமிழாசிரியர், வித்துவான் நா. இராமையாபிள்ளை, எம். ஏ., மதுரை.

# நாவலர் பாரதியார் மறைவுக்கு

## இரங்கல் உரைகள்

பல்புகழ் நிறைந்த பாரதியார் தொல்காப்பிய உரையாலும் மாரிவாயிலாலும், மங்கல வாழ்த்தாலும், திருவள்ளுவராலும், கைகேயி நிறையாலும், நற்றமிழாலும் வாழ்வார். டாக்டரின் அரிய நூல்கள் என்றும் கிடைத்து வருமாறு நூற்பணி செய்தல் மக்களின் கடமை.

—டாக்டர், வ. சுப. மாணிக்கம், காரைக்குடி.

தமிழன்னை, தன் தனிப்பெரும் புதல்வனை யிழந்தாள் தமிழ் நாடு ஈடுசெய்ய முடியாத நட்டத்திற்குள்ளாகியது. அப் பெரியாரின் பூதவுடல் அழியினும் புகழுடல் என்றும் நிலைபெற் றிருக்கும்.

—பேராசிரியை ஆர். இராசாமணி அம்மையார், சென்னை.

டாக்டர். சோமசுந்தர பாரதியார், கற்றுத்துறைபோய பெரிய அறிஞர். தமிழ் இலக்கியத்திற்கும், தமிழ்க்கலைக்கும், தமிழ் இசைக்கும் அவர் செய்த செயல்களும், தமிழக நன்மைக்கு அவர் ஆற்றிய பணிகளும் என்றும் மனத்தில் நிறுத்தத் தக்கன. தமிழ்த்துறையிலும், தமிழிசைத்துறையிலும், அவரது வழி காட்டியைப் பெற்றது உண்மையிலேயே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு நல்வாய்ப்புக்கிட்டியது எனலாம்.

—டாக்டர். இராசா. சர். எம். ஏ. முத்தையாச் செட்டியார், சென்னை

இறுதி மூச்சுவரை, தமிழ்—தமிழ்—தமிழ் என முழக்கிய அஞ்சா நெஞ்சர், தீரர், வீரர்—சோமசுந்தரபாரதியாரவர்கள் நக்கீரரின் மறுபதிப்பு. அவர்கள் வீரர் மட்டுமன்று, எத்தனை எத்தனையோ வீர உள்ளங்களையும் படைத்துவிட்டார்கள்.

—வீரசிவம், திருவாவடுதுறை ஆதீன வித்துவான்.

திரு. சோ. அவர்கள் மறைந்துவிட்ட செய்தியைப் படித் ததும் சில நாட்களுக்குமுன் நான் அவர்களைச் சந்தித்தது—பல நாட்களுக்குப்பின் சந்தித்தது—நினைவுக்கு வந்து மனத்தை வருத்திற்று. 'ஆறுதல்' எழுத்துக்களில் ஒன்றும் பொருளில்லை. என் வயதுக்குக் கிட்டத்தட்ட இருப்பவர்கள் ஒருவர்பின் ஒருவர் மறைந்து போவதைப் பார்த்துக்கொண்டு வருகிறேன். எனக்கு ஒரு மாதிரியான வெட்கம் ஏற்படுகிறது.

—இந்திய முன்னாள் ஆளுநர், சக்கரவர்த்தி
இராசகோபாலாச்சாரியார், சென்னை.

திரு. சோமசுந்தர பாரதியாரவர்கள் மறைந்தமையறிந்து மிக வருந்துகிறேன். தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக்கு எத்துணையளவு அவர் பணிபுரிந்துள்ளாரென்பதை நான் அறிவேன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப்பேராசிரியப் பணி ஏற்பதற்காக, மிக வருவாயையுடைய தமது வழக்கறிஞர் தொழிலையும் விட்டார்; தமிழ்வளர்ச்சிக்கு நிறையப் பாடுபட்டார்; அதேபோன்று தமிழாராய்ச்சியிலும் ஈடுபட்டார். சென்னையில் ஒரு வரவேற்பின்போது அவரைச் சந்தித்தேன். அவரது இழப்பிற்கு எனது உண்மையான வருத்தத்தைத் தெரிவிக்கிறேன்.

—டாக்டர். பி. சுப்பராயன், புதுதில்லி.

உடல் மண்ணுக்கு, உயிர் தமிழுக்கு என்ற உறுதிகொண்டு, கற்ற தொழிலைவிடக் கவின்மிகும் கன்னித் தமிழுக்கே என் பணி என்ற சூளுரையுடன் தன் வாழ்நாள் முழுமையும் தமிழ்ப் பணிக்கே செலவிட்ட திரு. சோமசுந்தர பாரதியார் அவர்களின் மறைவு தமிழகத்திற்கே ஏற்பட்ட பேரிழப்பு.

—இராசேந்திரன் நாடக மன்றம், சென்னை.

சென்னை மாநிலத் தமிழாசிரியர் கழகத்தின் சார்பில் 20-12-59 ஞாயிறு காலை 10 மணிக்குச் சென்னை பச்சையப்பன் உயர்பள்ளி மண்டபத்தில் பேராசிரிய நாவலர் டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் மறைவு குறித்த இரங்கற் கூட்டம் டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் M.A., M.L.C., அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, அன்பு கணபதி, சிறுவை மோகனசுந்தரம், P. குருசாமி கோவை, C. தனக்கோடி, நாரா. நாச்சியப்பன், M. சண்முகம், புலவர் தனபாலன், அம்பை சங்கரன், புலவர் குருசாமி ஆகியோர்கள் திரு. பாரதியார் அவர்களின் தொண்டுகளையும், எழுத்தாற்றல், உண்மையை உரைப்பதில் அஞ்சாமை முதலிய பண்புகளையும்கூறி இரங்கினர். பின்னர்க் கீழ்க்காணும் முடிவுகள் ஒருமுகமாக நிறைவேற்றப்பட்டன.

1. திரு. பாரதியார் அவர்களுக்குத் தக்க நினைவுச் சின்னங்கள் சென்னையிலும் மதுரையிலும் அண்ணாமலைநகரிலும் எழுப்பப்படுதற்கு அரசாங்கமும் செல்வர்களும் அறிஞர்களும் பல்கலைக் கழகங்களும் தமிழாசிரியர்களும் மாணவர்களும் முன் வரவேண்டும் என இக்கழகத்தார் கேட்டுக்கொள்கின்றனர்.

2. திரு. பாரதியார் ஆன்மா அமைதியுறும் வகையில் தமிழ்மக்கள் தொடர்ந்து பணிபுரிதல் வேண்டும் என இக் கழகத்தார் கேட்டுக்கொள்கின்றனர்.

—சென்னை மாநிலத் தமிழாசிரியர்கள் கழகம்.

நிலத்தில் யார்க்கும் அஞ்சாப் பெருநெறியும் நிமிர்ந்த ஞானச் செருக்கும் கொண்டொளிர்ந்த நாவலர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் தம் அருங்குணமும் பேரறி வாற்றலும் அமைந்த உயர்திரு. இராசாராம் பாரதி அவர்களே! உயர்திரு. இலக்குமிரதன் பாரதி அவர்களே! நாவலரின் பேரன்புக்குரிய அருமைச் செல்வியரே!

தமிழ்ப் பெருங்குடிமக்களின் முடிசூடா மன்னராய்த் திகழ்ந்த தங்கள் அரும்பெறல் தந்தையார் மறைந்தார் என்ற பேரவலச் செய்தி கேட்டுத் திடுக்கிட்டுத் துன்பக் கடலில் ஆழ்ந்துவிட்டோம். தமிழ் மக்கள் வெள்ளமெனத் திரண்டு வந்து பங்குகொண்ட மன்றத்தின் வெள்ளிவிழாவிற்குத், தன்னிகரற்ற தமிழ்ப்பெருந் தலைவராய்த் திகழ்ந்த தங்கள் தந்தையார் சென்னை நகர வீதிகளில் அடலேறென வலம்வந்து விழாத் தலைவராய் அமர்ந்து பெருமுழக்கம் செய்து பேருரை யாற்றிய காட்சி எங்கள் உள்ளத்தில் தோன்றவும் செயலிழந்து, நிலைமறந்து கண்ணீர் உகுக்கின்றோம்.

“தொல்காப்பியப் புத்துரை, திருவள்ளுவர்” என்னும் நூல்களால் தம் நுண்ணிய ஆய்வினையும், ‘மாரி வாயில்’ ‘மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி’ என்ற நூலால் பாநலனையும் வெளிப்படுத்திச் சிறந்த தமிழ்ப்பணி புரிந்த டாக்டர் பாரதியார் அவர்கள் புகழ் தமிழ்மொழி வளருந்தோறும் பரவிவிரவி நிற்றல் உறுதி.

அன்புக்கு உரியவர்களே! தங்கள் வாழ்வில் ஏற்பட்ட இப் பெருந் துன்பத்தில் நாங்களும் பங்குகொண்டு எங்கள் உளங் கனிந்த வருத்தத்தினையும், பரிவுமிக்க ஆறுதலையும் மீண்டும் மீண்டும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நாவலர் டாக்டர் சோமசுந்தர பாரதியார் அவர்கள் திருப் பெயர் வாழ்க!

—சென்னை மாணவர் மன்றத்தினர்.

மற்றும் கீழ்க்கண்ட பெருமக்களிடமிருந்தும் இரங்கலுரைகள் வந்துள்ளன:

ஆட்சிச்சொல் காவலர், கீ. இராமலிங்கனார், பேராசிரியர், ச. ஆறுமுக முதலியார், வித்துவான், மு. அருணாசலம் பிள்ளை, பேராசிரியை, ஆர். இராசரத்தினம் அம்மையார், டி. ஏ. வி. நாதன், பேராசிரியர், ரா. விசுவநாதன், புலவர், கீ. வா. சகந்நாதன், பேராசிரியர், பூ ஆலாலசுந்தரஞ்செட்டியார், பாலி. சு. நெல்லையப்பர், ந. பார்த்தசாரதி, புலவர், முத்து. சு மாணிக்கவாசக முதலியார், முகவை இராசமாணிக்கம், கவிஞர், பெ. தூரன். நக்கீரர் கழகத்தார், டாக்டர். தருமாம்பாள் நினைவுப் படிப்பகத்தார்.

ஓம்

# *வேலிக்கு வெளியே

## (Life beyond death)

திரு. வ. சுப்பையா, (ஆசிரியர், செந்தமிழ்ச் செல்வி, சென்னை) அவர்கட்கு, ஆங்கில நாள் 7-10-59 இல் எம்முலக வாசியும், முன்னால் இராமகிருட்டிணமடத்துத் தொடர்பாளரும், வெளிநாடு சென்று இந்து சமயம், கீதை முதலானவைகளைப்பற்றி அரும்பெருஞ் சொற்பொழிவாற்றியவரும், மேலை நாட்டினில் "Life beyond death" (மரணத்தின்பின் வாழ்க்கை) யென்ற நூல் தொகுப்பாளரும், எம்முலகில் பெரும் பேறுடன் மகிழ்ந்து விருப்புடன் எம் போன்றவர்கட்கு, வேண்டு முதவியளித்து வருபவருமாய சுவாமி அபேதானந்தா அவர்கள் திருவருள் துணைகொண்டு எம் இளையனும் இயக்குநர் திருவளர் இரா. ந. குற்றாலலிங்கம்வழி நாட்டிற்கோர் நல்லுரை வழங்க விழைந்ததை, இளைஞனின் அறிவுத்திறன் ஆங்கிலத்தில் அன்னவரைப் பின்பற்ற இயலவுள்ளதாக எமக்குத் தோன்றவில்லையாதலாலும், அன்னவர் இளைஞனின் அறிவு போதுமெனவும், தாம் வேண்டுவன செய்துகொள்வதாயு முரைத்தும், யாமாகிய தம்மன்பர் தமிழ்மொழியிலே "செந்தமிழ்ச் செல்வி"யிலே வெளியிடல் முதன்மையெனத் திருவருளை வேண்டி அவரையும் வேண்டி அன்னவரும் இயைந்து அருள் கொண்டதினால் யாமாகிய மறைமலை, அன்னவருரைப்பதை மொழிபெயர்த்தியக்கி வரைவது.

உடன்பிறந்தார்களே!

நாமாகிய இராமகிருட்டிண பரம அம்சரின் மாணாக்கராம் சுவாமி அபேதானந்தாவென உங்களால் அழைக்கப்பட்டவரும் அபேதானந்தராகிய யாம் இன்று உலகத்து மக்களுக்கு ஒரு செய்தியினை யளிக்க விருப்புக்கொண்டு, எம்முலகத்தாரோடு சிலநாட்களாகத் தொடர்புகொண்டும், மேலும் எம்முலகு நண்பராகிய வேதாசலமென்ற மறைமலையடிகளின் இளையனும் திரு. குற்றாலலிங்கம் எமது Life beyond death (Abhedanda Memorial Series No 1.) என்ற நூலைப் (All rights reserved, Published by Bramachari Amar Chaitanya, Ramakrishna Vedanta Math, 19-B. Raja Rajakrishna St. and Printed by Paramananda Sinha Roy, Sreekali Press, 65, 67 Sitaram Ghose St, Calcutta-9.) படித்துக்கொள்ள விரும்பிப் படிக்கும்போது, இதை நல்ல

* மறைமலையடிகளாரால் மொழிபெயர்க்கப்பட்டு இயக்குநர் வழி வந்ததிது.

முறையில் தமிழில் வெளியிட்டிருந்தால், மக்களுக்குப் பயன் படுமே என்று எண்ணி, இந்த அபேதானந்தா இருக்கிறோ வென, தலைவர் வழியும் அவர் குருவழியும் வேண்டி அழைத் ததில் யாம் இருக்கின்றோமெனக் குறிப்புடன் காட்டியும், ஆங்கி லத்தில் அன்னவனுக்கு அறிவு போதுமளவிலிருப்பதால் அன்ன வனை ஆங்கிலத்திலே இயக்கிச் செய்திவிடுக்க முயன்றபோது, தோழர் மறைமலையென்ற வேதாசலம் தமிழ்மொழியில், தாம் மொழிபெயர்ப்பதாயும் விரும்பிய வண்ணம், யாமாகிய அபேதா னந்தா உடன்பட்டு ஆங்கிலத்தில் மொழிந்தும், தோழர் வேதா சலமென்ற மறைமலை எமது மொழிபெயர்ப்பாளராக இருந்து மொழிபெயர்த்து இளைஞனை இயக்குகின்றார்.

உலகத்தின்கண் நாம் வாழ்ந்தபோது, மரணத்திற்குப்பின் மனிதர்களுக்குப் பிறவி உண்டா? மனிதன் மரணம் அடைந்த வுடன் அவன் உயிரென்ற ஆன்மாவும் அவனுடன் அழிந்து விடுகின்றதாவெனவுள கருத்துக்களைப் பிறநாட்டு மேதைகளுடன் விவாதித்து அவர்களுக்கு வேண்டும் ஆதாரங்களுடன் சொற் பொழிவுகளும் ஆற்றியிருக்கின்றேம். இதை விஞ்ஞானரீதியாக ஆராய்ந்த வல்லுநர்களும் இதற்கு ஓர் எல்லையென வகுக்க இயலாது, நமது சிந்தனைத்திறனற்று விடுகிறதே என எவ்வித முடிவிற்கும் வராது விட்டு விட்டனரென்ற கருத்தை எடுத் துரைக்க விரும்புகின்றேம். யாம் எமது தூல உடலைவிட்டு இங்கு வந்தபோது தெரிந்து கொண்டவையென்ன என்பது குறித்துச் சொற்பொழிவாற்றவே விரும்பி அதற்கு ஆங்கிலத்தில் "Life limit beyond death" என்ற தலைப்புக் *கொடுத்ததைத் தோழர் மறைமலை "வேலிக்கு வெளியே" (Velikku Veliyae) என்று மொழிபெயர்த்திருக்கிறார்.

நான் எனது தூல உடலைவிட்டு இங்கு வருவதற்கு முன்னால் நான் இறக்குந்தறுவாயில் இருந்தபோது எனக்குத் தோன்றிய உருவம் சோதியினடுவில் தெளிவாகத் தோன்றிய என் குரு இராமகிருட்டிணப் பரமாம்சப் பொலிவே. என்னை அவர் இன்முகத்துடன் தம் இரு பொன்னொளி வாய்ந்த கரங் களை நீட்டி மகனே வாவென அழைத்தார். நான் இறப்பின் இறுதியிற்றான் அறிவைத் தன்வயமிழந்து சிறிது நேரமிருந் தேன். எனது மனதினுள் நான் அன்னவரையே நினைந்து கொண்டிருந்தேன். ஈற்றிலே, என்னுடைய விருப்பு நெடுநாளைய விருப்பு ஈடேற அவர் அருள்செய்தார். என்றுமே, மனிதர் களுக்குப் புரியாத வொன்றினை யடைய அதற்குகந்த ஆசிரியன் தேவை. நாம் பிற்காலத்தில் நம் ஆசிரியனைப் பாராது, அவன் வகுத்த வழிவகைகளைப் பின்பற்ற விரும்பும்போது, அவனை

உள் கருத்துள் ஆசிரியனாக நினைந்து, 'அவன் வழிகளைப் பின்பற்றுவோமானால் மட்டிலுமே, எதனையும் கடைவரை கொண்டு செலுத்த முடியுமென, நானாகிய அபேதானந்தா எச்சரிக்கிறேன். அவ்விதமில்லாது, ஒவ்வொரு தத்துவங்களிலும் மனிதன் தனது மூளையைத் தவறான கருத்துக்களிற் செலுத்தி எதையும் முடிவு காணாத நிலையையே அடைகின்றான். மேலும், ஒவ்வொரு மதத்தின் தத்துவங்களையும், ஆராய்தல் அவசியமே. ஆராய்ந்தறிந்தாலே என்னவெனப் புரிய இயலும். அவ்விதமாராய்தலின்றி ஒருவர்க்கொருவர் அவரவர்தம் மதமே பெரிதென நினைந்தும் அதன் விளைவாக ஒருவர்க்கொருவர் கருத்து வேற்றுமை ஏற்பட்டு, இழிதொழிலாம் கொலையிற் கொண்டு விடுதலை நோக்கி வருந்துகின்றேன். நம் குரு இராமகிருட்டிணரின் அறிவுரைகளை நன்றாகக் கவனித்துக் கருத்துக்குள் செலுத்தி ஆய்ந்தால், இவ்விதப் பூசல்கள் எழுவதற்கிடமேயில்லை. பகவான் இராமகிருட்டிணருரைத்ததென்ன? மக்களே! வீணாக நீங்கள் உங்களை, நீங்களாகவே குழப்பத்திற் கொண்டு செல்கின்றீர்கள். ஆண்டவன் எச் சமயத்திற்கும் பொதுவானவனே, அவனை ஒவ்வொரு வகுப்பினரும் ஒவ்வொரு முறையில் வணங்குகிறார்கள். உவமைக்காக ஒன்றைக் குறிப்பிடுகின்றேன். நமது தாய் நாட்டிலே அகண்ட இந்தியாவிலே, எத்தனை மொழி பேசும் மக்கள் வாழ்கின்றனர்? தண்ணீரை எடுத்துக்கொள்வோம். ஆங்கிலேயன் அவன் மொழியில் "வாட்டர்" என்றுரைக்கின்றான். தமிழன் "தண்ணீர்" என்றுரைக்கின்றான். ஒருமகன் "ஜல்" என்றுரைக்கின்றான். ஒருமகன் "பாணி" என்றுரைக்கின்றான். ஒவ்வொரு மொழி பேசும் மக்களும் அவரவர் மொழியிலே தண்ணீர் என்ற பெயரை மாற்றுவகையில் உரைக்கின்றார்கள். அதுபோல் கடவுளை எந்த முறையில் வணங்கினாலும், அது அவனையே சாரும். இதற்காக, எமது மதம்தான் பெரியதென்ற வீணுரைகள் தேவையில்லை.

நான் (அபேதானந்தா) முதலிலுரைத்தபடி என் குருதேவர் என்னை வாவென்றழைத்துத் தம்முடன் ஒரு வெண்மை நிறமே விளங்கி நின்ற உலகிற்கழைத்துச் சென்றார். நான், எனது உடலில் - தூல உடலில் கொண்ட ஆசை குறையாது, அன்னவரிடம் எனதுடல் இருக்கும் இடத்திற்கு என்னைக் கூட்டிக் கொண்டு போக விரும்பி வேண்டினேன். அதற்கு அவர் 'மகனே! நீ எவ்வளவு கற்றறிந்திருந்தும் இன்னும் மாயை என்றவொன்று உன்னைவிடவில்லையே' என்று கூறி, எனது தலையைத் தன் பொன்னிறக் கரத்தால் தடவினார். எனக்கு அப்போதுதான் உண்மை புலப்பட்டது. என்னை அறிய முடிந்தது. எனக்கு வேண்டுவன செய்தார். நான் இருப்பது இருளல்ல,

சைதன்ய வலிபெற்ற வெண்மைகொண்ட உலகு. எம்முடன் அநேகர் இருக்கின்றனர். உண்மைகொண்டு வாழ்பவன் எவனுக்கும் இங்கு இடமுண்டு. எம்முலகில் இருளே கிடையாது; ஒளிதான். வெண்மையொளிதான்; எங்களுடனும் வெண்மைதான். எங்களுக்குப் பசி கிடையாது; உறக்கமே கிடையாது. ஆண்டவன் அருள் ஒளியில் ஆழ்ந்திருக்கின்றோம். இதற்கு மேல் விவரித்துச்சொல்ல இன்று ஆணையில்லை. இன்னொரு முறை ஆணைபெற் றுரைப்பேன். இச் செய்தியை எங்கள் இராமகிருட்டிண மடத்துத் தலைவர்களுக்கு அனுப்பவேண்டி, (I request the editor of Sentamil-Selvi to send my message to our Swamiji's Mutt, Bless the editor.) இந்தச் செந்தமிழ்ச் செல்வி ஆசிரியரை வேண்டுகின்றேன். அவர்களுக்குத் தெரியும், என்னைக் கூப்பிட்டுப் பேச விரும்புவார்களானால் என் குருவினருடன் பேசுவேன் குருவும் பேசுவார். நாங்கள் சூக்கும உடலுடன் இருக்கின்றோம்.

ஓம் தத் சத். (Om Thath Sath)

குறிப்பு: "வேலிக்கு வெளியே" என்பதின் பொருள் உலகத்து மாந்தர்களாகிய நீங்கள் உங்கள் காணுடல்கள் நான்கினை, தூல உடலென்ற வேலியினுள் காத்து வருவதாக எண்ணுவதொன்றையே யாமாகிய மறைமலை வேலி என்று குறிப்பிட்டேம். அந்நான்கு உடல்களும் வேலி என்ற தூல உடலைவிட்டு உங்களை யறியாதே சென்று விடுகின்றன. ஆகவே, "வேலிக்கு வெளியே", யென மொழி பெயர்த்தேம்.

மறைமலை
மொழிபெயர்ப்பாளர், நெல்லை.

---

## ஆவியுலகத் தொடர்பாளர்
## நெல்லை, இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை

இவர் முதன் முதலில் ஆவிகளுடன் எழுத்துப் பலகை (Ouija board) வழிப் பேசும் வாய்ப்பைப் பெற்றனர். பின்னர் ஆவிகள் இவர்க்குணர்த்த உணர்ந்தெழுதும் வாய்ப்பும், ஆவிகளே இவர் கை பிடித்து எழுதும் வாய்ப்பும் பெற்றனர். இதனை மேலை நாட்டினர் ஆட்டோ ரைட்டிங் ((Auto-writing) என்று கூறுவர். இப்போது இரண்டு திங்களாக இவர்தம் சொந்தக் குரலை அடைத்து ஆவிகள் தம் இயற்குரலில் இவர்வழிப் பாடுகின்றனர், பேசுகின்றனர். இதனை மேலை நாட்டினர் எக்டோபிளாசம் (Ecto-plasam) என்பர்.

கழக ஆட்சியாளர் நெல்லைக்குச் சென்றிருந்தபோது 20, 22-12-59 ஞாயிறு, செவ்வாய் இரவுகளில் மறைத்திரு மறை

மலையடிகளார், ஜி யு. போப் துரைமகனார், திரு.வி.க., திருவரங்க நீலாம்பிகையார், காந்தியடிகள், செல்வன் கா. சு. வள்ளுவன் ஆகியோர் தத்தம் இயற்குரலில் பேசிய பேச்சுக்கள் இயக்குநர் நாடா வழிப் பதிவுப் பொறி (Tape Recorder)யில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

இவர் இந்தியாவிலே தனித்திறமை கொண்ட ஆவியுலகத் தொடர்பாளர் (Medium) எனப் போற்றப்பெறுகின்றனர். இவருக்கு ஆவியுலகில் வாழும் மறைத்திரு மறைமலையடிகளார் காப்பாளராகவும் வழிகாட்டுபவராகவும் (Guardian and guiding spirit) அமைந்திருக்கின்றனர்.

## *திரு. பா. வே. மாணிக்க நாயகர் கடிதம்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகப் பொறுப்பாளரும், சென்னைக் கிளைநிலையத்தைத் தன் இருப்பிடமாய்க் கொண்டுறைப்பவரும், திருவரங்கத்தினிளையரும் செவ்வேளருளாளருமாகிய திரு. சுப்பையாவிற்கு, என்னை எவரெனப் புரிந்திருப்பீரென எண்ணியும் எம்முலகென்றதோர் (நும்போன்றோர் காண்டற்கும், எண்ணுதற்கு முடியாததும், சற்பனையெனக் காணுதல், உரைத்தல், செவிவழி செய்தியுரைத்தல், வெளியிலுரைத்துப் பிறரை மயக்கலென்றதோர் பொருளேயன்றி வேறில்லையென வெண்ணும் தரத்திலேயுளது) தாம் காணுவுலகின்கண் வாழும் ஆவிக்கூட்டங்களில் சில பிரிவுகளிலொரு பிரிவில் வாழ்ந்து வருபவனும் தம்முலகின்கண் P. V. Manicka Naicker B. E., M. C. I. ஆக வாழ்ந்து ஊனுடல் கழித்துப் போந்தபின் வேறு பிறவி இல்லையென எண்ணி எள்ளி நகையாடியவனுமாகிய நான் இன்று ஆங்கில நாள் 23-9-59 இல் திருநெல்வேலியின்கண் உறைகின்ற ஓர் எம்முலகத்தொடர்பாளனும் இளைஞன்வழி, இன்றே எம்மை அழைக்க ஆவல் கொண்டு விளித்தல் செய்தவன் விருப்பிற் கிணங்கித் தமிழகத் தலைவன் “திரு. மறைமலையடிகளின் திறன்” என்ற கட்டுரை வரைய யாமே பணித்தியக்கி வரைவது. விருப்பிருப்பின் கொளல் நலம். இல்லையேல் எம்மியக்குநர்க்கனுப்புதல் நலம் என்ற வேண்டுதலுடன் மறு நாளில் முனைந்தன மென்பதை அறிவிக்கின்றேன்.

மாணிக்க நாயகர்

---

* இயக்குநர்வழி எழுதியது.

# *திரு. மறைமலையடிகளின் திறன்

[திரு. பா. வே. மாணிக்க நாயகர்]

திரு. மறைமலையடிகளென்று வாழ்ந்தவர், தம் வழி தனி யென வாழ்ந்தா ரென்பதே எம் கொள்கை. யாம் அவணிருக்குங் காலை, பின்னாட்களில் அவருடன் நெருங்கித் தொடர்பு கொண்டு அவரை, அவர் திறனை ஆய்ந்தவன். ஒவ்வொருவர் ஒவ்வொரு துறையில் தனியாற்றல் கொண்டவராயிருத்தலை, எவருமறியக் கூடியதே. ஆனால் நானாகிய மாணிக்க நாயகர் அன்னவரைத் துருவி ஆய்ந்ததின் பயனாய்க் கண்டதென்னை? அஃதென்னை யென இவண் விரித்துரைக்கக் கருத்துட் கொண்டாலும், விரிவுரை சொற்சுவை, ஒலிச்சுவை யுடையதாய் நிகழ்தலே நலமெனக்கொண்டு ஒரு சிறுவுரையாகக் கூறுகின்றோம்.

தமிழிலே தனித்ததோர் ஆர்வம் கொண்டோன். தமிழ் மொழியே எம்மொழியினும் இனிமை மிக்குள்ளது, தமிழ் மொழியே தனித்ததொரு மொழி, எம்மொழிச்சார்பும் அதற் குடன் வேண்டா, செந்தமிழ் மொழியே தித்திக்கும் தீஞ்சுவை மிக்குள்ளது, அம்மொழியின் அழகை, ஒலியைப் பிறமொழி களாலியைத்துரைத்துக் கன்னித் தமிழின் கற்பைச் சீர்குலையச் செய்துவிட்டனரேயென வுரைத்து உருகும் மாண்பினன். எம் மொழியும், நம்மொழியாம் தமிழ்மொழிக் கீடில்லை, இன்பத் திலே எடுத்துரைத்தால் இன்பமே தோற்றுவாய்; துன்பத்திலே யெடுத்தியம்பினால் சோகமே தோற்றுவாய்; ஆண்மையுட னெடுத்தறைந்தால் ஆணவமே தோற்றுவாய்; தாழ்மையிலே யெடுத்துரைத்தால் பணிவே தோற்றுவாய்; எக் கொள்கை யினைக் கருத்துக் கொண்டுரைக்க விழைந்தால் அக்கொள்கையே தோற்றுவிக்கு மென்பதில் அசையா நன்னம்பிக்கை கொண் டவன். இஃதேயோவெனில் இஃதல்ல. மதமென்றால் மன்ப தைக்கொரு மணம். மதமென்ற ஒன்றினால்தான் மக்கள் தம் மனத்துச் சிவமென்ற ஒன்றே, தனிப் பெருங்கருணை யளிக்க வல்லதென நூற்சான்றுடன் எடுத்துரைக்கத் தயங்காத உறுதிகொண்டவுள்ளத்தினன். இயற்கையென்று உன்னுதல் திறனெனில், அவ்வியற்கையை இயக்கத் தனிய தோராற்றல் கொண்ட சத்தியே சிவம், சிவமே அன்பு, அன்பே கடவுளென உரைக்கத் தயங்காதோர் உள்ளத்தினன். தாம்கொண்ட கொள்கையினை வலியுறுத்திச் சான்றுடனுரைக்கத் தயங்கா

---

* இயக்குநர்வழி வரைந்தனுப்பியது.

நன் மனத்தினன். தனியொரு தலைவன் எவனெனல் சிவமே, அம்பலவாணனே யென்றும், எவரெதிருரைத்தாலும் இழித்துரைத்தாலும், மனம் மருளா மாண்பினன். மண்ணிலுதித்த காலை தொட்டு மதியினையொரு பொறியெனக்கொண்டு அதனை அறிவெனும் ஒரு கருவியாலியக்கி மாண்புற மகிழ்ந்து வாழ்ந்தனன்.

பொறிஇயலுக்கு மேற்பட்டதொரு காரண இயலென்றவொன்றே உலகை இயக்குகின்றது. அக் காரண இயலே, பொறியியலை, அறிவென்னும் ஆணையால் இயக்கத் தலைப்பட்டதெனச் சான்றுடன் எடுத்துரைப்பதில் தனியாற்றல் கொண்டோன். செல்வத்துளெல்லாம் சிறந்தது கல்விச் செல்வமே. அதனையறிய முயல்க வென வுரைப்பன். தாம் பெற்ற பேற்றினை இவ் வையகம் பெறுகவென எண்ணியே வாழ்ந்தனன். தான் ஆய்ந்த நூற்களின் கருத்தைத் தாய்மொழியாம் தமிழ்மொழியில், தனித்ததொரு நடையில் அழகுறச் சித்திரிக்கும் இயல்பினன். எழுத்து வல்லுநன், உரை வல்லுநன். அழகிலும் மிகுந்தவன். எக் கருத்தை எவர் வாய்க் கேட்பினும் அதனைச் சிந்தித்தாய்வு காணலில் தனித்ததோர் ஆர்வமிக்குள்ளான். யாமறிந்த மட்டிலே, தமிழகத்திலே, பலமொழி பயின்று, அம் மொழியினுள்ளுறைந்த பொருட்களை யுன்னி ஆய்தலில் அவர்க்கு நிகரவரேயென வாழ்ந்தவன். எத் துறையினுள் புகுந்தாலும், அத் துறையினைக்கண்டறியத் தனியதோராற்றல்மிக்குள்ளான். அவன் கொள்கைகளில் திறனுடைத்தாயது எதுவென வாய்ந்தால், "அவனன்றி எதுவுமசையா, நம்மாலாவதொன்றில்லை, இருப்பினும் முயற்சி திருவினை யாக்குமென்றே இதயத்துட்கொண்டு வாழ்தலே". மேலுமொன்றினை அறைகின்றேன். அழகிலே ஏன்? எத் திறத்தாரும் கண்டு வியக்குமோருருக்கொண்டு வாழ்ந்தனன். குரலிலோ குவலயத்தோர் நாண, நோக்க, மங்கை தன்னின் சொல்லோவென எவரையும் ஈர்க்கும் ஒலிகொண்டனன்.

இஃதோ இவணிருந்ததை எடுத்தியம்பல்தானே யென்றெண்ணலாம். மறைமலையடிகளென மாற்றுப் பெயர் தனித்தமிழிலே புனைந்து வாழ்ந்த தலைவன், எம்முலகிலுமோர் தனிப்பெருந் தலைவனாகத் திகழ்கின்றான். மேலுரைக்க ஆணை வரை செய்யப்பட்டு விட்டதே. இயற்கைக்கு மேற்பட்ட ஒன்றிருப்பதாலே, இவ்வாறு தொடர்பு கொண்டுரைக்க முடிந்ததென்பதனை மட்டும் மொழிந்துவிட்டுச் செல்கின்றோம்.

## *திருவாட்டி ஈ. த. இராசேசுவரி அம்மையார்

# கடிதம்

பேரன்புடைய பெருமகனும், போற்றுதற் குரியராம், சென்னையம்பதியுறை சீர்பெருகும் திருவருளைச் சிந்திக்கத் தொடங்கி அவனருளடைந்து வருபவராம், தமிழியக்கத் தந்தையாய்த் தரணிதன்னில் வாழ்ந்த மறைத்திரு மறைமலையடிகளாரின் செல்வியின் சிந்தைக்கினிய கணவராம் திருவரங்கம்பிள்ளையினிளையவராம், திருவருள் என்றுமே துணைசெய்யத் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் கண்காணிப்பாளராய்க் கருத்துடனுழைத்து அக்கழகத்தின் பெயரை அவனியில் அறியச் செய்துவரும் அன்பராம், செந்தமிழ்ச்செல்வியின் ஆசிரியர், திரு. சுப்பையா பிள்ளை அவர்களே, வணக்கம். என் மறைவு குறித்துச் செந்தமிழ்ச்செல்வியில் "விஞ்ஞானச் செல்வியென"வோர் கட்டுரையை வெளியிட்டு என் வாழ்க்கையைச் சித்திரித்த செந்தமிழ் வள்ளலே வணக்கம்.

சில நாட்களாக மறைமலையடிகளார் இந்த உடன் பிறந்தோன் வழித் தங்களுக்கு முடங்கல் வரைவதும் கட்டுரைகள் வரைந்து வருவதும் எனக்குத் தெரியும். எனக்கும் ஏதாவது ஒரு கட்டுரை வரைய விரும்பிய விருப்பு இன்றுதான் ஈடேறியது. அம்பை வழக்கறிஞர் திரு. சிவஞானம் பிள்ளை அவர்களின் புகைப்படத்தையடுத்துச் செந்தமிழ்ச்செல்வியில் என் படமும் வெளிவந்திருக்கிறது. அடிகளாரிடம் கூறி நானும் ஒரு கட்டுரை வரையவேண்டுமென்று விரும்பியதற்கு, அவர் எனக்கு வரைய இடமளித்தும், இந்தத் தம்பிக்கு (இயக்குநருக்கு) எனது நடை ஏதோ பிடித்தமில்லாத வகையில் தோன்றுவதாக எனக்கு ஓர் உணர்ச்சி தோன்றுகின்றது. அடிகள் போன்ற நடை இல்லையே என்ற எண்ணமே காரணம். நானும் எனது அறிவுக்கெட்டியவரை "பெண்ணின் கடமை" என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வரைந்து இத்துடனனுப்பியிருக்கின்றேன். தாங்கள் செல்வியில் வெளியிடத் தயங்கீர்களென்பது எனக்குத் தெரியும். நல்லமுறையில் கட்டுரைகள் வரையக் காத்திருக்கின்றேன்.

"தாங்கள் நீடிய ஆயுளுடன் நீள்நிலத்தில் வாழச் செந்துவர் வாயுமைபங்கன் அருள்புரிய அவனை வணக்கம் செலுத்தி விடைபெறுகின்றேன். வணக்கம்!

ஆங்கிலநாள்
20—11—59

அன்புள்ள,
இராசேசுவரி

---

* இயக்குநர் வழி வரைந்தனுப்பியது.

# பெண்ணின் கடமை

[திருவாட்டி இராசேசுவரி அம்மையார்]

தமிழகத்துத் தனித்திறன்கொண்டு தனியாட்சி புரிந்தவர்களில் பெரும் பங்கெடுத்துப் பெருமைப்படுத்திய பெருமை, பெண்ணினத்திற்கே எவ்வாறெனில் பண்டைத் தமிழகத்து அரசு செலுத்திய அரசர்களுக்கு அவர்தம் பட்டத்துத் தலைவியர்கள் அமைச்சராயிருந்து, அவரை ஊக்கிக் காலமறிந்து வேண்டுவனவற்றை யெடுத்தறைந்து இன்முகத்தான் இயம்பி, அவர் தம்மை வெற்றிகொண்ட வேந்தராய் விளங்கவைத்த பெருமை பெண்ணினத்தையே பெருமைக்குள் ஆழ்த்தியதனை எவரும் அறிய இயலுவதே. பெண்ணின் கடமையெனக் கருத்துட்கொண்டேயல்லாது பெண்ணின் பெருமையெனப் பறைசாற்றத் தன்னகத்துக்கொண்டு புரிந்ததல்ல. அவர்தம் கடனெனக் கண்டே, நாட்டிற்கும், மக்களின் வளர்ச்சிக்கும், அறிவுக்கும், திறத்திற்கும், மணிமுடிபுனையும் மன்னனே தலைவன். தலைவன் எவ்வழியோ, அவ்வழியே அவனைப் பின்பற்றுவோருமென்ற கருத்தைத் தாய்மைக்குலம் தன் கருத்துட்கொண்டே பணியினைப் பண்புடனாற்றியது. மேலும் பெண்ணின் கடனென்ன? அவள்தன் அருங்தொண்டென்ன? அவள்தன் கருத்தென்ன, அவள்தன் அற்றைய நிலை என்ன, இற்றைய நிலை என்ன என்பதனைப் பெண்ணினம் சரிவரப் புரிந்துகொண்டால், பெண்ணினமே பெருமையுடைத்தாய் நாட்டில் நன்னயமாய் வாழ வழி வகுக்குமோர் அரிய பணியா யமையுமெனக்கொண்டே, "பெண்ணின் கடமை" என்ற தலைப்பில் இதனை என் சிறிய அறிவிற்கெட்டியவரை வரைய, இயக்கத் திருவருளைத் தீர்க்கமுடன் சிந்தித்து முற்பட்டேன், இராசேசுவரி என்ற தமிழ்ப்பெண்.

பெண்ணினம் பெருமையுற வாழவேண்டுமானால், பெண்ணினம் கல்வியிற் சிறந்து திகழ்தல் முதன்மை.

அவ்வாறு பெண்ணினம் முழுமையும் உயர்தரக் கல்லூரிகளில் சென்று பயின்று பட்டம் பெற்று வாழ்க்கையை வளமுறச்செய்ய இயலுமாவெனக் கருத்துட்கொண்டால், இயலா. நாட்டின் பொருளாதார வளம் பொறுத்தே, அத்தகைய துறையில் ஆணினத்திற்குச் சரிநிகராகப் பெண்ணினம் கல்வித்துறையில் முன்னேற இயலுமேயல்லாது பிறிதொன்றில்லை. காரணம் என்ன? ஒரு நடுத்தரக் குடும்பத்தை உவமைக்கு எடுத்துக்கொள்வோம். அக்குடும்பத்து இரு ஆண்மக்களும், இரு பெண்மக்களுமிருந்தால், தாய் தந்தையர்கள் விரும்புவது, ஆண்

மக்களிருவரும் கல்லூரி சென்று பட்டம் பெற்று நிதி குவிக்கும் துறையிலீடுபடின் அவர்தம் வறுமையகன்று பெருவாழ்வு வாழலாமென்ற கருத்துட்கொண்டே அதற்கேற்றவழி துறையிற் செல்ல விரும்புகின்றனரே தவிர, பெண்ணினத்தின் கல்வித் துறையிலோரளவாவது கருத்துச்செலுத்துகின்றனரோவெனில், அதுதானில்லை. பெண்மக்கள் குடும்பக் கலையை மட்டும், பயின்றால் போதும். கற்றுத் தேர்ந்து இவராற்றும் பணியென்ன? கிடைப்பது கெட்ட பெயரே. தவிர நமக்கு நன் மதிப்பல்லவென்றே பெரும்பாலும் எண்ணி வாளாவிருக்கின்றனரே தவிர, அவர்தம் நல்வாழ்வுக்கு உகந்த பணியாற்றுகின்றனரோவெனின், அதுதானில்லை. பெற்றோர்கள் கருத்திவ்வாறு எழுதல் பெண்ணினம் தம் இயல்பிலேயமைந்த அறிவை வளப்படுத்த வாய்ப்பில்லாது வாளாவிருத்தலையே தம் கடனெனக்கொண்டு வாழ்கின்றனரோவெனில், அதுதானில்லை. இயற்கையிலே பெண்ணினத்திற்குரிய, தாய்மைக்குலத்தின் தனிப்பண்பாம் பெருமையென உரைக்கும் தம் கடனும் குடும்பக் கலையில் ஈடுபடுத்தி வருங்கால உலகத்துச் சிற்பிகளை வாரி வையத்து வழங்கத்தக்கதாயதோர் நிலையாம் வானொலிப் பெட்டியின் தன்மையையே அவர்களடைகின்றனரென்பதை எவரும் எதிர்த்துரையார். அவ்வாறு அவர்கள் வழங்கும் சிற்பிகளை அறிவிற் சிறந்தவராக ஆக்கத் தலைப்படுபவரும் பெண்ணே எனத் துணிந்துரைத்தும் அவர்தம் கடனெனவுமுரைக்கின்றேன். இவ்வாறு அறிவு புகட்டி வருங்காலச் சிற்பிகளை வளமுடன் வளர்க்கப் பெண்ணிற்கும் போதிய அறிவு இருந்தாலே, பொருந்துமேயல்லாது பிறவகையில் பொருந்தா. இதனைப் பெற்றோர்கள் அவர்தம் கருத்துட்கொண்டால், பெண்மக்களுக்கும் பெரும் பட்டக் கல்வி தேவையில்லை. ஓரளவாவது, பெண்ணினம் தம்மையறியவும், அறிந்து நற்பணிகளில் அவர்தம் சிந்தை செல்லவும் வழிவகுத்தல் நலமெனக் கொள்வாரேயன்றித் தவறெனத் தம்முட்கொளார். அத்தகைய கருத்தை வலியுறுத்தப் பெண்ணினம் ஒருங்கு சேர்ந்து முயற்சி செய்தால் அம்முயற்சி திருவினையாக்கும். அது அவர்தம் கடனெனக் கொண்டொழுகுதல் சாலச் சிறந்ததென, நான் உரைக்கின்றேன்.

மேலும் பெண்ணினம் உலகிலே மிகச் சிறந்த செயலை நிலைநாட்டுகின்றது. அச்செயல் எத்தகையதெனின், பிள்ளைப் பேறு என்பதே. ஆணினம் மருவுதலொன்றிலே பெருவிருப்புக் கொண்டு பெண்ணினத்தைச் சுமைதாங்கியென்ற கருத்திலே அவர்களை நினைந்து இழிவு படுத்திப் பெரும் இன்னலுக்காளாக்கி அவர்களைத் தம் கற்புநிலை பிறழச்செய்யப் பெருங்கேடு செய்கின்றார்களென்பதை நானெடுத்துரைத்தல் நன்றல்லவெனினும்,

எடுத்துரைக்கவேண்டிய நிலையில் இன்றைய சமுதாயச் சிற்பிகளாம் ஆணினம் செய்து வருகின்றனரென்பதனை எவரும் மறுத்துரையார். பெண்ணினம் தம் மதிபிழந்து ஆணினத்தின் பேருரைகளாற்படும் துன்பங்களைக் கண்ணுற்றால் பொறுமை யென்பதே அணிகலனெனக்கொண்டதோர் தாய்க்குலமென்று அவரைப் போற்றல் அறிவுச் செயலாம்.

இத்தகைய ஆணினத்தின் மொழிகளை மெய்யென்று நம்பி அவர்தம் நலத்திற்காய் இவர்தம் கற்பினைக் கெடுத்து, ஆணினத் தவரால் ஒதுக்கப்பட்டு, அவர்தம் பரிசுப்பொருளைத் தாங்கி, அவனியில் தலைநீட்டத் தயங்கிப் பெண்ணினத்தின் பெருமை இப்படிப் பாழ்பட்டதே யென எண்ணி அகத்தில் நினைந்து நினைந்து பிறரறியாவண்ணம் தம் பெற்றோர் சுற்றத்தைவிட்டு எவர் கண்ணிலும் படாது ஆதரவின்றித் திரிந்தும் இயல்பான இறப்பையடைந்தும் வருவது இற்றைய மக்கட்குழுவிலே சமு தாயத்தில் மலிந்து கிடக்கின்றதென்பதனை எவருமறியலாம். இத்தகைய போக்குக் கொள்கைகளை வெருட்டிஅடிக்கத் துணி வுடையவளாயிருப்பதற்கு முதலில் கல்வியறிவு தேவை. சில ருரைக்கலாம், கற்றபெண்களே அவர்தம் குடும்பப்பெருமை யெல்லாம் விட்டுக் காதலனுடன் ஊர் சுற்றத் தயங்காரென்றும், குடும்பக் கலைமட்டும் ஓரளவு நன்றாகத்தெரிந்தால் போதும், கற்பு நிலைகெட வழியேற்படாதென வுரைக்கும் பெருமையுள்ள வர்களும் இந்நானிலத்தில்லையென எவருரைக்க இயலும்? கற்ற பெண்கள் தம்மோடொத்த கற்ற ஆண் மக்களுடன் நண்ப ரென்ற முறையில் நட்புக்கொண்டு உரையாடி வருவதைக் காணும் திண்ணைத் தூங்கிகள் கயிறுதிரித்து அவர்தம் கற்பி னுக்கு இழிவு ஏற்படுத்தி அவர்களை அவர்கள்தம் ஒழுக்கத்தி லிருந்து தவற அடிகோலுகின்றனர். ஒத்த வயதுடைய ஆணும் பெண்ணும் பழகுவதை ஓரளவு கட்டுப்படுத்தவேண்டிய பொறுப்பு அவர்தம் பெற்றோரைச் சார்ந்தது. தம்மகள் செல்வ ரொருவரின் செல்வனுடன் சேர்ந்தொழுகுதலைப் பெரும் பேறெனக் கருதும் பெற்றோர்களாலே இத்தகைய இழிநிலை ஏற்படுகின்றது எது எவ்வாறிருப்பினும் பெண்ணினத்திற் கென, அவர்தம் கடனென வழிவகுத்த, உலகம் உய்விக்கப் பிள்ளைப் பேறென்பதை இவர் தமக்கே உரியதென ஒதுக்கிய வல்லானைக் குறைகூறலே சாலப்பொருந்தும்.

ஆண்டவன் கற்பெனப்படுவது இருசாரார்க்கும் இயைந்ததே யெனக் கருத்துட்கொண்டமைத்தாலும், ஆணினத்திற்கும் ஒரு நியதியை அமைத்திருந்தால் இருசாராரும் கற்பில் வல்லுநராய் வாழ இயலுமென்பது எளியளாம் என் கருத்து. இருப்பினும் பெண்ணினம் எவ்வகையிலும் ஆணினத்தால் இழிக்கப்படுவதும்,

அவரை அடிமைகள், விலங்குகளெனக் கருதப்படுவதும் தம்மை யொத்தவர்களென்று எண்ணி மதிக்கப்படாததும் வருந்தத் தக்கதே.

இவ்வாறு ஆணினத்தால் இழிக்கப்பட்டாலும், தங்கடமை யெனக் கருத்துக்கொண்டுழைத்துவரும் பெண்ணினத்தின் பெருமையை எடுத்துரைப்பது எளிதன்று. தன் கணவன் தீக்குணமுடையவனுயினும், அவனைத் தன் கண்ணெனப் போற்றி, அவனுக்கு வேண்டிய பணிகள் புரிந்து அவனுல் கிடைத்த பரிசுப்பொருள்களை, தான் வயிற்றுக்கில்லாது வாடியும், அப்பொருள்களாற் குழந்தைகளைப் போற்றி வளர்க்குந் திறனைக் கருத்துட்கொண்டால் கடமையெனக் கூறுது வேறென்னவென்றுரைப்பது. தன் கணவன் கொண்டுவரும் வருவாய் போதாதெனினும், பெண்மகள் தன்மெய் சோர உழைத்துக் குழவிகளைப் போற்றி வருதல் எவருமறிந்ததே. அவள் தன் கடனெனக்கொண்டே செய்கின்றுள். தன் குழந்தைகளுக்கு உடல்நலங் குறைந்ததெனக் கண்டால், இரவு பகல் விழித்திருந்து அவர்களைப் பேணும் பெருந் தொண்டிலே, தன் நலமெல்லாம் இழக்கின்றுள். தன் கணவன் வேருெரு பெண்ணுடன் கூடிக் காதல் புரிந்து, தன்னைப் புறக் கணித்தாலும், இவளோ அவன் தன் கணவன், அவன் கட்டிய தாலி தன் கழுத்திலணிந்திருப்பதே தனக்குப் பெருமை, காலம் வரும்போது தன்னையுணர்ந்து தன்னை நோக்கித் திரும்புவான், என்று கற்புடன் வாழ்ந்து கண்ணகிக்கு ஏற்பட்ட நிலை பெண்ணினத்திற்கேற்படலென்பது வல்லான் வகுத்த வழியோவென எண்ணித் தன் கடமையாம், அவனுக்கு வேண்டும் பணிபுரியக் காத்திருக்கின்றுள் எது எங்ஙனமாயினும் பெண்ணினத்தின் கடமை இன்னதென அவர்கள் அறிதல் வேண்டும். அறிந்து அதன்படி ஒழுகவேண்டாமென எவருமுரையார்? பெண்மகள் முதலில் கடவுள் வழிபாடுடையவளாயிருத்தல் இன்றியமையாதது. அத்தகைய கடவுள் வழிபாட்டிற்கு முதன்மையானது கல்வி. பெண்மகள் முதன்முதலில் தன் குழந்தைகளைக் கல்வி யறிவிற் சிறந்தவரா யிருக்கச்செய்தல் நன்று. அவ்வாறு கல்வி யறிவு ஊட்டும்போது கடவுள் வழிபாடும் அவர்கள் அறியும்படி செய்யவேண்டும் வீட்டின் தலைவி எப்படியோ அப்படியே அவள் பெற்ற செல்வங்களும். ஆகையால் பெண்மகள் எவ்வளவுக்கெவ்வளவு எல்லாக் கலைகளிலும் தன்னை மேம்பட்டவளாய்ச் சிறந்து வாழ்ந்து காண்பிக்கின்றனளோ அதுபோலவே அவள் பிள்ளைகளும் விளங்குமென்பதைக் கருத்தில் கொள்ளவேண்டும். என்றுமே பெண் அவர்தம் கணவர்களின் போக்கையொட்டி அவர்கள் நல்வழியிற் செல்வரேல் அவர்களைப் பின்பற்றியும்,

அவர்கள் தவறான வழியிற்செல்லுவரேல் அவரை நல்வழிப்படுத்தும் அமைச்சராக அமைதல் வேண்டும். தம் குடும்ப நிலையை யறிந்து வருவாய்க்குத் தகுந்த முறையில் வாழ்க்கைச் செலவைச் சிக்கனத்துடன் நடத்தி மீத்து வருதல் நன்று. தம்முடைய இல்லங்களைக் கூடியவரை தூய்மையாக வைத்துக்கொள்ளுதல் நன்று. கூடியவரை தம் வீட்டுத்தேவைகளைத் தாமே நிறைவு செய்தும் வாங்கும் பொருட்களை வீணாக்காமல் பாதுகாத்தல் நன்று. தம் குடும்பத்திலுள்ளவர்களுடன் நன்முறையிற் பழகி அவ்வீட்டுக்குத் தாமே தலைவியர் என்பதை நற்கருத்துடன் கொண்டு வாழ்தல் நன்று. தம் குழந்தைகள், தம் கணவர் இவர்களின் உடல் நலன்களை உன்னிப்பாய்க் கவனித்தும், தம் உடல் நலத்தையும் கருதி வேண்டுவன புரிதல் வேண்டும். இவ்வாறு மேற்கூறியவை தம் கடனென நினைத்துப் பெண்ணினம் கடமைபுரியுமானால் வள்ளுவர்பெருமான் வாய்மொழியாம்,

> "பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
> புத்தேளிர் வாழும் உலகு."

என்ற தன்மையை அடைவர். கன்னிப்பருவத்திலிருப்பவர்களாம், காரிகைகளுக்கு எளியளாம் இராசேசுவரி அவர்தம் கடமையை எடுத்துரைத்தல் நன்றெனக் கருதுகின்றேன். கன்னிப்பருவப் பெண்கள் என்றுமே அவர்தம் கற்பைக் காத்தலென்பதில் கருத்துடையவர்களாயிருத்தல் முதன்மை. அறிவு வளர வளரக் கற்பை நாகரீகத்தின் சின்னமெனவெண்ணுதல் தவறு. அவர்தம் பழக்கவாயிலாகவும், கற்றறிந்த பெண்கள் தம்பெற்றோர் உரைக்கும் கருத்தைச் செவி சாய்க்காது அவர்தம் விருப்பம்போல் கட்டிளங்காளையருடன் சுற்றித்திரிதலும், அவர்தம் மொழிகளால் தம் கருத்திழந்து, கற்பிழந்து, துன்ப நிலையடைந்து தம் வாழ்நாளையே பாழாக்கிக்கொண்டு வருந்துகின்றனரென்பதை அறிதல் நன்று. நாகரீகத்தின் சின்னமென்பது, பண்டைத் தமிழகத்தின் தனி உரிமையாம் கற்பின் கொள்கைகளைக் காற்றிலே பறக்கவிடாது, பழந்தமிழ்க் கன்னியருக்குரிய பரம்பரை வழிவந்த பொருள். பழந்தமிழ்ப்பெண்கள் எவ்வாறு அவர்தம் கற்பைக் காத்துப் போற்றிவந்தனரோ, அந்நிலை மேலை நாட்டினரின் நாகரீக மோகத்தில் மூழ்கி, பொழுதுக்கோர் வகை தன்னிலை பிறழும் நாகரீகக் கோலத்தின் சின்னமென்பதே. கூடியவரை பெண்கள், குறிப்பாகக் கன்னியர்கள் கல்லூரிப் படிப்பிற்கு அவர்தமக்காய்த் தனித்தியங்கும் கல்லூரிக்குச் செல்லல் நன்று. அவர்தம கருத்தினைக் கல்வியிலே செலுத்தி ஆணினத்திற்குச் சரி நிகராய்த் தாமும் தம்மறிவாற்றலால் அரசியற்றுறையிலும், குடும்பத்துறையிலும் வல்லுனர்களாய்த்

திகழ்தல் சாலச்சிறந்தது. கன்னியர்தம் ஒழுகலாறுகளைக் கண்டு கட்டிளங்காளைகள் அவர்தம்மை உணர்ந்து தம்முடன்பிறந்தோ ளென எண்ணும்வகையில் நடந்து காட்டுதல் பெண்ணினத்தின் கடமையும் பெருமையுமாகும். மேலும் கற்றறிந்த கன்னியர்கள் காதல் வழிச்சென்று தம்விருப்பம்போல் காதலர்களை, வருங் கால வாழ்க்கையை வளப்படுத்தும் ஆணினத்தைத் தேர்ந் தெடுத்து அவர்தம் பெற்றோரை இவர்தம் கருத்துக்குட்புக வலி யுறுத்தல் தவறென யானுகிய தமிழ்மகளுரைக்கின்றேன். தம் கற்றறிந்த அறிவாலும், தம் பெற்றோரின் அறிவாலும், தமக்கு வேண்டிய நல்லுரை பகரும் பெரியோர்களின் அறிவாலும், இவற்றைச் சமன்செய்து வாழ்க்கைத்துணைக்குகந்தவன் எவ னெனத் தேர்ந்தெடுத்தலே சாலச்சிறந்தது. விளக்கொளி கண்டு வீழும் விட்டிலின் தன்மையை ஒப்ப நடப்பரேல் அதன் தன்மையே தமக்குக்கிட்டும் பரிசெனக் கொளல் நன்று மேலுமொன்றினை மொழிகின்றேன். கன்னியொருத்தி எண்ண லாம், காதல் கொண்டு எவனை எண்ணினளோ அவனே தனக்கு அரியதோர் பொருளாயகன்றனன். இனி என் வாழ்நாள் முழுமையும் எவரையும் கடிமணம் புரியாது வாழ்வேன் என்ற கொள்கையுடன் வாழ்தல் தவறென உரைக்கின்றேன். பெண் ஒருத்தி சிறிதளவு தன் கற்புநிலை பிறழ்வளேல், அதற்குரிய பரிசை அவளடையவேண்டுமென வல்லான் வழிவகுத்துள்ளா னென்பதைக் கன்னி, தன்கருத்துட்கொண்டவளாகித் தனக் குகந்தவனுடன் இல்லறம் புரிவதே பொருந்தும்.

பெண்ணினம் நாட்டிற்குத் தொண்டாற்ற வந்ததோருய ரினம் என்பதைக் கருத்துட்கொண்டு, அவர்தம் கற்புநிலை தவறாது, அணிகலனகக்கொண்டு நாட்டிலே வாழ்வரேல், அவர் தம்மை எதிரிகளாம் பிற்போக்குடைய ஆணினம், (அனைவரு மல்ல) நெருங்குதற்கே அஞ்சுவரென்ற உண்மையை அறிந் தொழுகல் அவர்தம் கடனெனக் கொளல் வேண்டுமென்று விரும்பி வள்ளுவர் தம் பொய்யாமொழியினைக் கருத்திற்கொண்டு என்றுமே வாழ்ந்தால் பெண்ணினம் பெருமையுடன் வாழும்.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்." —(திருக்குறள்)

என்பதை என்றுமே நினைந்து, கல்வியறிவில்லாக் கன்னியர்க்கும் இதன் பொருளைக் கல்வியறிவிற் சிறந்த காரிகையர் பெண்ணினத் திற்காற்றுந் தம் பெருங்கடனெனக் கருத்துட்கொண்டு உரைத்து, வாழ வழிவகுத்தும், தாமும் வாழ்ந்து காட்டியும் வருவரேல் அதனினும் சிறந்தது வேறில்லை. வணக்கம்!

# நக்கீரர்

[திரு. சோ. கந்தசாமி, பி. ஏ. (ஆனர்சு)]

(செல்வி சிலம்பு ௩௪-பரல் ௫, ௧௧௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இனி, *திருமுருகாற்றுப் படைக்கும் பிற சங்க ஆற்றுப் படைகட்கும் வேறுபாடுகள் உள்ளன. பிற ஆற்றுப்படைகள் இரண்டாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும். இம் முருகாற்றுப்படை ஏழாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகும். பிற சங்க ஆற்றுப் படைகள் ஆற்றுப்படுத்தப் பெற்றோர் பெயர் பெறுதலும் இந்நூல் பாட்டுடைத்தலைவன் பெயர்த்தாகலும் காண்க. பிற ஆற்றுப் படைகள் பொருட்பரிசை நாடும்; இஃது அருட்பரிசின் குறிப்பிற்று. எனவே, நக்கீரர் செய்த புரட்சியே திருமுருகாற்றுப்படையின் தோற்றம் என்னலாம். புது முறையில் பிறக்கும் இலக்கியத்தை,

புதுவது புனைந்த யாப்பின் மேற்றே.''

எனத் தொல்காப்பியம் சுட்டுதலானும்; இளம்பூரண அடிகள், "புதிதாகப் புனைதலாவது ஒருவன் சொன்ன நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல்'' என்னும் உரைவிளக்கத்தானும் உணர்தல் வேண்டும். இவ்விதியை நோக்கின், திருமுருகாற்றுப்படை தொல்காப்பியர் செய்யும் "விருந்திற்''குப் பொருந்துவதாக உள்ளது.

இனி, முருகாற்றுப்படை "புலவராற்றுப்படை'' என்று பண்டுதொட்டுப் பயின்று வந்தமை நச்சினார்க்கினியர்தம் உரையால் அறியலாம். இவ்வாறு கொள்ளின், இஃதும் இரண்டாம் வேற்றுமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகும். அருட்பரிசைப் பெற்றான் ஒருவன் அது பெறுதற்கு அவாவும் புலவன் ஒருவனை முருகனிடத்து ஆற்றுப்படுத்தலைப் "புலவராற்றுப் படை''யில் காணலாம். இந்நூல் 284ஆம் அடியில், "முதுவாய் இரவலன்'' என்று கூறப்பெறுதலான், ஆற்றுப்

---

* செல்வி, சிலம்பு ௩௪, பரல் ௫,—பக்கம் ௧௨௪இல் நக்கீரர் கால முதலியவற்றைக் காட்டும் பகுதியில்'' உ. இலக்கண நக்கீரர் காலம்-கி. பி. 650, சமயம் - சமணம் 3. திருமுறை நக்கீரர் காலம் கி. பி. 850, நூல் 11-ஆம் திருமுறையால் ஒன்பது நூல் என திருத்திக்கொண்டு மேலுள்ளவற்றை ஆய்க.

படுக்கப்பெறுவோர் புலவர் என்பது போதரும். பொய்கையார் பாடிய புலவராற்றுப்படை யுள்ளும் "முதுவாய் இரவலன்" என்றே புலவர் குறிக்கப்பெறுகின்றார். இனி, முருகவேளின் இயல்புகளை முதல் 61 அடிகளில் மொழிகின்ற நக்கீரர்,

"எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையும்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுடன்
நன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே."

என்று இயம்புமாற்றான் உள்ளத் தூய்மை ஓம்பி இயவுள் அடியிணையே ஏத்துதல் வல்லாரை முன்னியவை எல்லாம் முட்டின்றி எய்தப் பெறுவார் என அறிவுறுத்துப் பின், முருகனின் இருக்கையை மொழியத் துவங்கி, கூடற் குடக்கில் பீடுறத் திகழும் பரங்குன்றிலும், காரலைக்கும் சீரலைவாயிலும், ஒருவாப் பெருமை சேர் திருவாவினன் குடியிலும், சீரகங் கொண்ட ஏரகக் குன்றிலும், மால்வரை நிலத்தும், ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும், ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும், வெறியாட்டயரும் இடத்தும், இயற்கைத் தோற்றத்தும், பழமுதிர் சோலையிலும் முருகப்பெருமான் முகிழ்த்துத் திகழ்வான் என்றெடுத்துரைத்துப் பின்னர், 'முதுவாயிரவல! நீ எவ்விடத்து முருகைக் காணினும் அவ்விடத்தே முகமும் அகமும் மலரக் கைகூப்பித் திருவடி முடிமிசைப் படிய வணக்கமுற்றுச் செல்வ! புதல்வ! மகனே! கூற்றே! சிறுவ! குழவி! தலைவ! மார்ப! புலவ! ஒருவ! மள்ள! வெறுக்கை! சொன்மலை! ஏறே! கிழவ! முருக! ஆள! நெடுவேள்! இயவுள்! மதவலி! குரிசில்! எனப் பலவாறு பரவுக; "நின் இயல்பினை அளந்தறிதல் சிற்றறிவும் சிறுதொழிலும் உடைய உயிரினங்களுக்கு அரியதாம்; ஒப்புமை யில்லாத ஒருவனே" என்று மொழிந்த அளவையில் முருகன் இளநலம் காட்டி முன்னர்ப் போந்து 'அஞ்சல் ஓம்புமின்' என நல்லுரை நவின்று பெறலரும் பரிசில் நல்கும்" என்று விதந்தெடுத்து விளம்பி ஆற்றுப்படையை அழகுற அமைத்துள்ளார்.

2. இனி, பிள்ளை அவர்கள் வாதிக்கும் இரண்டாவது காரணத்தின் தன்மையை ஆராய்வோம்.

மாரைக் கிளவி வினையொடுதான் முடியவேண்டும்; இதனை,

"மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப." (சொல்-உ0எ)

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். மாரைக்கிளவி வினையொடு புணரும் மரபு சங்கப் பாக்களில் உள்ளன. ஆயின் திருமுருகாற்றுப்படையில், "தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்" என்னுமிடத்து, முடிமார்=முடித்தவர் என்று பொருள் பட்டு "மனன்" என்னும் பெயர்ச்சொல் கொண்டு முடிந்தது. இங்ஙனம் ஒரோவோரிடத்துப் பெயரோடு இற்று நிற்றலைப் பற்றிக்கொண்டு அந்நூல் பிற்காலத்துப் பிறந்ததெனத் துணிதல் அறந்தாஞம் என்னில் அற்றன்று: நற்றிணையுள் கூசஆம் பாவில், "காமம் படரட வருந்தி, நோய்மலி வருத்தம் காணன்மார் எமரே" என்புழி மாரைக்கிளவி 'எமர்' என்ற பெயர் கொண்டு முடிதலைக் காண்க. அதுவேயுமன்றி, "மார்வினையொடும் முடிமே" (நன்னூல், ஙஉஎ) என்புழி மயிலைநாதர் "வினையொடும் முடிமே" என்ற உம்மைச் சிறப்பாற் பெயரொடும் முடிமே எனக்கொண்டு, "பீடின்று பெருகிய திருவிற் பாடின் மன்னரைப் பாடன்மார் எமரே" என்னும் புறநானூற்றுப் பாவை மேற் கோள் காட்டல் அறிதற்பாற்று. ஆகலான், சங்க காலத்து இலக்கியங்களில் தொல்காப்பியவிதி நெகிழ்ச்சியுற்ற உண்மை உணரப்படும். இதனை எண்ணிப்பாராராய்த் திருமுருகாற்றுப்படையில் மாரைக்கிளவி பெயரொடு முடிதல் பிற்பட்ட வழக்கு; சங்க கால வழக்கன்று என்று துணிதல் தகஞற்ற கருத்தாம்.

இனி, பாடன்மார், காணன்மார் என்பன பாடுவோர் காண்பார் என்னும் ஆர்ற்று முற்றுச் சொல்லின் எதிர்மறையாய் ஒரு மொழிப் புணர்ச்சியான் மகரம் பெற்று நின்றன; எனவே இவையிரண்டும் மாரைக்கிளவியாகா; மகரம் பெற்ற ஆர்ற்றுச் சொற்களே என்று சேஞவரையர் நிகழ்த்திய விளக்கத்தைக் கடைப்பிடித்து மேற்காட்டிய பாடல்கள் நிரம்பா மேற்கோள் என்னிற் பிறிது கூறுவேன். புறநானூறு ஙசுஉஆம்பாவில், "உடம்பொடும் சென்மார் உயர்ந்தோர் நாட்டே" என்புழியும், அகநானூறு சுஎஆம் பாவில் "அரம்போழ் நுதிய வாளியம்பின் நிரம்பா நோக்கின் நிரையம் கொண்மார்...மறவர்" என்புழியும் 'சென்மார்' 'கொண்மார்' வினைப்பெயர்ச்சொற்களாய்ப் பெயர் கொண்டு முடிதலான் மாரைக்கிளவியின் மரபுப் பிறழ்ச்சி புணரப்படும். அகநானூற்றின் பழைய உரைகாரர் "நிரையம் கொண்மார்=நரகம் புகுவார்" என்றே எழுதிச் சென்றனர். அன்றியும் பெயர் மேல் விகுதியாகவும் சங்ககாலத்தில் மாரைக்கிளவி வழங்கிய உண்மை, "தோழிமாரும் யானும்" (அகம். கரு) "மலிபூஞ்சாரல் என் தோழிமார்" (அகம் சஅ: இ) என்பவற்றால் அறியப்படும். எனவே, 'மாரை' வழக்குப்பற்றிப் பிள்ளை அவர்கள் உரைப்பது போலியுரை என்பது போதரும்.

3. இனி, "பெறீஇயர்" என்னும் சொல் எச்சமாயாதல் வியங்கோளாயாதல் வருதல்வேண்டும். ஆயின், "ஒன்பதிற் றிரட்டி உயர்நிலை பெறீஇயர்" என்புழிப் பெற்றவர் என்ற பொருளில் பெயராய் வருதலான் திருமுருகாற்றுப்படை பிற்காலத்தது என்கிறார். ஈங்குப் 'பெறீஇயர்' என்ற சொல் 'பெறீஇயோர்' என்ற சொல்லின் திரிபாகவே வந்துள்ளது. "மரீஇயோர் அறியாது மைந்து பட்டன்றே" என்ற புறநானூற்றுப்பாவில் வரும் 'மரீஇயோர்' மருங்குள்ளோர் என்னும் பொருள்தரும் பெயர்ச் சொல்லாம். அங்ஙனமே 'பெறீஇயோர் பெற்றவர் என்னும் பொருளில் பெயர்ச்சொல்லாய் வந்துள்ளது. 'பெறீஇயோர்' என்பதில் யகரமூர்ந்த ஓகாரம் "பெறீஇயர்" என்பதில் உள்ள யகர மூர்ந்த அகரமாதல் இயல்பே; 'கூறுவம்—கூறுவோம்' என்புழிப் போலக்கொள்க. "பெறீயர்" தொழிற் பெயர் என்று நச்சினார்க்கினியர் உரைகூறி யிருத்தலை உன்னிப் பார்க்கின் பிள்ளை அவர்கள் கருத்துத் தள்ளற்பாலதாம்.

4. 'மதி' இடைச்சொல் ஒரோவோரிடத்துப் படர்க்கையில் ஆளப் பெறுதலான் முருகாற்றுப்படை பிற்காலமாகும் என்பர் பிள்ளை அவர்கள். நக்கீரர் "விழுமிய, பெறலரும் பரிசில் நல்கும் மதிபலவுடன்" என்று அருளுமிடத்து மதியை இடைச் சொல் லாகக் கொள்ளவேண்டாம்; பெயர்ச்சொல்லாகவே கொண்டு "இனி, மதிபலவுடன் எனக்கூட்டி அறிவுகள் பலவுடனே பரிசில் நல்கும் என்று கூறுவாரும் உளர்" என்று நச்சினார்க் கினியர் நவில்வதை ஏற்றுக்கொள்ளலாம். அவர்க்கு முற்பட்ட உரைகாரர் மதியினைப் பெயர்ச்சொல்லாய்க் கொண்ட உண்மை ஒருதலையாக; இடைச்சொல் எனக்கொண்டு படர்க்கையில் வந்தது என்று கூறுதல் நேரிதாக இல்லை. இனி, மதியினை இடைச் சொல்லெனக் கொண்ட பரிமேலழகர், "மதி படர்க்கை யில் வருதலைப் புறனடையாற் கொள்க" என்று கழறுதலும் காண்க.

5. தொகை நூல் பாக்களைப் பாடிய நக்கீரர் உலகமும் திருமுருகாற்றுப்படை பாடிய நக்கீரர் உலகமும் வேறுபடுதலால் இவ்விரு நக்கீரரும் ஒருவர் அல்லர்; இருவேறு காலத்தினர் என்பர் பிள்ளை அவர்கள். இக்கருத்து ஆய்வதற்கு உரியது.

நக்கீரர் யாத்த புறம் ருசுஆம் பாடலைத் திருமுருகாற்றுப் படையுடன் ஒப்புமை கூர்ந்த பிள்ளையவர்கள், "தாம் வழிபடும் தெய்வத்தோடு மக்கட் பிறப்பினன் ஒருவனை இந்நக்கீரர் ஒப்புக் கூறுவாரா? தெய்வபத்தியிற் சிறந்த இப்புலவர் மதுவைப் பொற்கலத்தேந்தி மகளிர் ஊட்ட மகிழ்ச்சியோடு ஒழுகுவாயாக என வாழ்த்துவாரா? என்று இரண்டு கேள்விகளை நம்முன்னர்க்

கோணர்கின்றார். ஈண்டைக்கு, "மக்கட் பிறப்பினன் ஒருவன்" என்று எழுதும் அளவிற்கு அரசன் எளியன் என்று சங்ககால மக்கள் கருதினரல்லர். இருபதாம் நூற்றாண்டில் வாழும் பலருக்கு அரசன் "மக்கட் பிறப்பினருள் ஒருவன்" என்ற அளவில்தான் தென்படுவான். இந் நூற்றாண்டில் கூடப் பலதுறைகளிலும் முன்னேறிய ஜப்பானிய மக்கள் அரசனைக் கடவுளாக மதிக்கின்றனர். மேலைநாட்டிலும் கூட (The Devine right thery) அரசரின் கடவுளம்சக் கருத்து நிலவிய காலம் உண்டு. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்னும் பண்பு பழகிய பண்டைத் தமிழர் அரசனை இறைவனாக எண்ணினர். கடவுள் வாழ்த்துப் பாடி, தமது அறநூலை அருளிய வள்ளுவப் பெருந்தகையும்,

> "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்(கு)
> இறை யென்று வைக்கப் படும்."

என்று அறமுரைத்தார். அல்லாமலும், இயவுளருடன் ஏந்தலை ஒப்புமை கூர்ந்து கவிபுனைதல் பழந்தமிழ் மரபாகும். தொல்காப்பியனாரும் "பூவைநிலை" என்று துறையும் அமைத்துள்ளார். இறைவன் அரசனையும் குறிக்கும் கிளவியாகும்; இறைவன் ஐம்பெருங்குரவராக இலங்குகின்றான் என்பது ஆன்றோர் துணிபு. அவ்வைவருள் அரசனும் ஒருவனாவான். சமயத்தைக் கண்எனக் காத்தற்காகத் தம் வாழ்நாட்களைப் போக்கிய நம்மாழ்வார் "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்" என்றும்; சிவநேயச் செல்வராய குமரகுருபரர், "அனைவோர்க்கும் தெய்வம், இலைமுகப் பைம்பூண் இறை" என்றும் அறிவுறுத்தலை எண்ணுங்கால், சமயக் கருத்துக்கள் அரும்பிக்கொண்டிருந்த சங்ககால நக்கீரர் முருகனைப் பாடிய வாயால் வேந்தனைப் பாடுதல் கூடாது என்றுதல், வேந்தனை இறைவனுடன் ஒப்பிடல் ஒவ்வாது என்றுதல் இயம்புதல் வேண்டாம். இக்காரணத்திற்காக நக்கீரர் இருவரானால், திருமங்கை மன்னனும், குமரகுருபரரும் தனித்தனியே இருபோரவர்!

"தெய்வபத்தியிற் சிறந்த இப்புலவர், மதுவைப் பொற்கலத்தேந்தி மகளிர் ஊட்ட மகிழ்ச்சியோடு இனிது ஒழுகுவாயாக என வாழ்த்துவாரா?" என்று விடுக்கும் பிள்ளை அவர்கள் வினவிற்கு விடைகூறத் துணிகின்றேன். முருகனுக்கே மதுவிட்டுப் படைத்தலைச் சங்கப்பாக்கள் சாற்றுங்கால், அரசனை மதுவருந்துமாறு நக்கீரர் பாடினர் என்பதில் என்ன தவறு காணமுடியும்? அங்ஙனம் பாடிய காரணத்திற்காக மதுவருந்தப் பாடிய புலவரும் தெய்வத்தைப் பாடிய

புலவரும் இருவராவர் என்பது பொருந்துமாறில்லை. இவ்வாறு வாழ்த்துதல் சங்ககாலப் புலவர்தம் வழக்கம். உயிர், யாக்கை, செல்வம், இளமை—நிலையாமையினை அறிவுறுத்தத் துவங்கிய மாங்குடி மருதனார்,

"விளங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
மணங்கமழ் தேறல் மடுப்ப நாளும்
மகிழ்ந்தினி துறைமதி பெரும."

என மதுரைக் காஞ்சியில் வாழ்த்துகின்றார். மதுரைக் காஞ்சித் தலைவற்கு நிலையாமையினை உணர்த்தி நன்னெறியில் நடத்தலை நவிலும் பொருண்மொழிக் காஞ்சி பாடும் மாங்குடிகிழார்,

"ஒண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய
தண்கமழ் தேறல் மடுப்ப மகிழ்சிறந்து
ஆங்கினி தொழுகுமதி." (புறம்)

என்று இயம்பியுள்ளார். ஔவைப் பிராட்டியும்,

"பாசிழை மகளிர் பொலங்கலத் தேந்திய
நாரரி தேறல் மாந்தி மகிழ்சிறந்து
......வாழ்தல் வேண்டும்." (புறம். நசுஎ)

என்று வாழ்த்துகின்றார்!

இனி, சங்கத்து நக்கீரர் தொகைநூற் பாக்களையும் பத்துப் பாட்டுள் காணப்பெறும் திருமுருகாற்றுப்படையினையும் நெடுநல் வாடையினையும் ஒரே காலத்தில் யாத்தனராகக் கொள்ளுதற்கு இல்லை. அவர்தம் தொகைநூற் பாக்களும், நெடுநல் வாடையும் இளமைப் பிராயத்தில் யாக்கப் பெற்றனவாதல் வேண்டும். இல்லறத்தைச் செவ்வையுற நடத்துதற்குப் பொருள்வேண்டும். "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்பது பொன்மொழியாகும். சங்கப் புலவருட் பலர் புலமைச் செல்வத்தைக் கொடுத்துப் பொருட் செல்வம் பெற்று வாழ்ந்தனர். இம்மையின்பங்களைத் துய்க்காமல் மறுமையின்பம் நாடுதல் பீடாகாது. சமயத்திற்காகவே தம் வாழ்வைச் செலுத்திய ஆளுடைய அரசரும் இல்லற இன்பம் துய்க்காமை கருதிப் பாடினர்.

தளையவிழ் கோதை நல்லார் தங்களோ டின்பம் துய்க்க
இளையனும் அல்லேன் எந்தாய் என்செய்வான் தோன்றினேனே."

என்பது அவர் திருப்பாசுரம்.

(தொடரும்)

# சைவசமயர் சீர்திருத்தம்

[பண்டித. திரு. கா. பொ. இரத்தினம், எம். ஏ, இலங்கை]

"சைவசமயம் பழம்பெருஞ்சமயம்; தமிழர் சமயம் ஆரியர்கள் இந்தியாவிற்குள் புகுதற்குமுன் அரப்பா-மொகஞ்சதாரோ நாகரிக காலத்திலேயே கி. மு. 3500 ஆண்டுகளுக்கு முன்னரே சிறந்து விளங்கிய சமயம். இதனை இந்து சமயத்துள் அடக்கி வழங்குதல் முறையான செயலன்று" எனப் பண்டிதர் கா பொ. இரத்தினம் அவர்கள் கொழும்பு விவேகானந்த சபையில் நடைபெற்ற இந்து வாலிபர் சங்கத்தின் ஆண்டு விழாவிற் பேசும்பொழுது குறிப்பிட்டார். பண்டிதர் இரத்தினம் தொடர்ந்து பேசியதாவது: இந்தியாவின் வைதிக சமயங்களை எல்லாம் இந்து சமயம் என்று வழங்கத் தொடங்கியவர்கள் மேனாட்டவரும் ஆங்கிலப் புலமை பெற்ற கீழ்நாட்டவருமே யாவர். நாவலர் காலம்வரையும் சைவம் தனித்து வாழ்ந்தது. சைவபரிபாலன சபை, சைவப்பிரகாச வித்தியாசாலை முதலியன காண்க. ஆங்கிலம் கற்றவர்களின் தொடர்பாலேதான் இந்து சாதனம் இந்துக் கல்லூரி எனும் பெயர்கள் இடம் பெற்றன. இந்து சமயத்துள்ளே சைவத்தை அடக்கியதால் தமிழின் சிறப்பும், தமிழரின் பண்பும், சைவத்தின் பழமையும் உயர்வும் மங்கிவிட்டன. கத்தோலிக்க சமயம், புறட்டத்தாந்து சமயம் என்று வழங்குதல் போல இந்து சமயம் என்றும், சைவசமயம் என்றும் வழங்குதல் நன்று."

"சைவ சமயத்தை வளர்ப்பதற்கு இலங்கையில் மூன்று வகையான நிலையங்கள் இன்று உள. கோயில்கள், கல்வி நிலையங்கள், சைவசமய சங்கங்கள் என்பனவே அவையாகும். இவை ஒன்றுபட்டுச் சமயத்தொண்டு செய்யவில்லை. இவற்றின் சமயப்பணிகள் இயைபுபடுத்தப்பட்டால் சைவசமயம் தான் இழந்த பழம்பெருமையைப் பெற்றிருக்கும்; சைவத்தின் உயர் நிலைக்கு மாறான அநாகரிகச் செயல்கள் சைவர்களிடையே எப்பொழுதோ ஒழிக்கப்பட்டிருக்கும். சைவத்தின் பெயரால் உயிர்ப்பலி இடுதல், கையிலுள்ள பணத்துக்குத் தகத் துண்டு வாங்கி அருச்சனை செய்வித்தல், வானவிளையாட்டு, சதுர்க்கச் சேரி போன்ற களியாட்டங்களைத் திருவிழாக்களுடன் நடத்தல் முதலியன சைவத்தை மாசுபடுத்துகின்றன. இவற்றை நீக்குதற்கு இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேனும் நம் சைவர்களும் சைவ நிலையங்களும் முற்படவில்லை. முற்படுஞ்

சிலருக்குப் போதிய ஆதரவுமில்லை. வயது வந்தவர்களினும் வாலிபர்களே முற்போக்கு உடையவர்கள், உணர்ச்சியுடன் முயலத் தக்கவர்கள். ஆகவே இந்து வாலிபர் சங்கத்தினர் ஏனைய வாலிபர் சங்கங்களுடன் சேர்ந்து இந்தக் குறைகளை நீக்கிச் சைவ நீதியை உலகமெலாம் விளங்கச் செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்."

"தமிழர் கண்ட நெறி சிவநெறி, தமிழர்பேசும் மொழி தமிழ் மொழி எனவே சிவநெறிக்குத் தமிழோடு உள்ள தொடர்பு பண்டு தொட்டு உண்டானது பிறமொழிகளோடு உள்ள தொடர்பு இடையில் உண்டானது. இடையில் உண்டான தொடர்புகளாற் பழந் தொடர்பு பாதிக்கப்பட்ட காலங்களில் தமிழ்ப்பெருமக்கள் பலர் தோன்றிப் பழந்தொடர்பை நிலை நாட்டியுளர். தேவார திருவாசகங்களைப் பாடியருளிய நாயன்மார் களும் அணிமைக்காலத்தில் வாழ்ந்த நாவலரும் சைவத்தையும் தமிழையுந் தளராமற் பிணைத்து வைத்தார்கள். இந்த நூற் றூண்டிலே தமிழின் தனிச் சிறப்பையும் ஒப்பிலாப் பழமை யையும் தமிழ்மக்கள் நன்கு அறியத் தொடங்கிவிட்டார்கள். இவற்றை வேண்டுமென்றே சிலர் மூடி மறைத்துவைத்தார்கள் என்பதையும் உணரத் தொடங்கிவிட்டார்கள். தமிழ் நாடும், ஈழமும் அரசியற் சுதந்திரத்தையும் பெறறுவிட்டன. எனவே உணர்ச்சியுடைய—உண்மை காணும் ஆற்றலுடைய— தமிழறிஞர் கள் பலர் இன்று சைவ சமய வழிபாடுகள் யாவும் தமிழிலேதான் நடைபெறல் வேண்டும் என்று வற்புறுத்தத் தொடங்கியுளர். இந்தத் தலைமுறையிலேயே இன்னும் இருபதாண்டுகளுக்குள்ளே தமிழ் சைவ சமயத்துறையிலே தான் இழந்த முதன்மையைப் பெற்றுவிடும் என்பதிற் சந்தேகமில்லை. பகுத்தறிவைச் சிதைத்து மானத்தைக் கெடுத்து இன்றும் தமிழரைப் பிற மொழிகளுக்கு அடிமைப்படுத்தும் போலித் தமிழருக்கு இனித் தமிழ் நாட்டில் இடமில்லை. மக்களின் விழிப்பையும், இயற்கை நியதியையும் பண்டை வரலாற்றையும் உணர்ந்து தமிழைப் போற்ற வெட்கப்படாமல் வீரத்துடன் வருமாறு இவர்களை இளைஞர்கள் அழைக்கவேண்டும்."

"யாவர்க்கு மாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம் உண்ணும்போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே."

இந்தத் திருமந்திரம் சைவத்தின் உட்பொருளை இரத்தினச் சுருக்கமாக எடுத்துக் காட்டுகிறது. இதிற் குறிப்பிடப்பட்ட

வற்றை மிக எளிதில் யாவரும் செய்யலாம். சாதி, குலம், பிறப்பு, செல்வம், வறுமை, பட்டம், பதவி முதலிய வேறுபாடு களை எல்லாம் தகர்த்துச் சமத்துவத்தை நிலைநாட்டுவது சைவம். அன்பு அருள் அறம்—இந்த மூன்றும் தமிழன் வாழ்ந்து கண்ட உயர் பண்புகள். இவற்றின் கருத்தழுத்தத்தை உலகிலுள்ள எந்த மொழியிலும் மொழிபெயர்த்துக் கூறல்முடியாது. அன்பிற் றொடங்கி அருளில் முடியும் வாழ்வுநெறிதான் தமிழன் கண்ட அறநெறி. இதுதான் சைவநெறி; சிவநெறி; தமிழ்நெறி; அன்பினைந்திணைக் களவுநெறி. அன்பும் சிவமும் ஒன்று. தமிழும் சிவமும் ஒன்று. எனவே அன்புக்கும் அருளுக்கும் மாறுபட்டனவற்றை யெல்லாம் சைவம் என்று போற்றும் மடமை ஒழிதல் வேண்டும்.

# மறைமலையடிகள் நூல்நிலையம்

[சொற்பொழிவுகள்]

3-1-60 ஞாயிறன்று டாக்டர். S. R. ரங்கநாதன் அவர்கள் 'தமிழ் நூல்களைப் பெருக்குவது எப்படி?' என்ற பொருள்பற்றிச் சுவைமிக்க சொற்பொழிவொன்றை நிகழ்த்தினர். "இதற்கு முன்னர் வெளியிட்ட புத்தகங்கள் அனைத்தையும் தொகுக்க வேண்டும். அவற்றைப் பற்றியும் அவற்றின் ஆசிரியர்களைப் பற்றியும் குறிப்புக்கள் திரட்டவேண்டும். புத்தகங்களின் தேவை அதிகரித்துவிட்டது. பல துறைகளிலும் புத்தகங்கள் எழுதுவதற்கு எழுத்தாளர்களும் பெருகிவிட்டனர். எத் துறையில் புத்தகங்கள் இனித் தேவைப்படும் என்பதற்குப் புள்ளி விவரங்கள் எடுத்து அதைப் பதிப்பாளர்கள் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். எழுத்தாளர்கள், ஓவியர்கள், நூலகப் பொறுப்பாளர்கள், புத்தகம் வெளியிடுவோர் இவரிடையே ஒத்துழைப்புவேண்டும்" என்று தம் உரையில் டாக்டர். ரங்கநாதன் குறிப்பிட்டார்.

6-1-60 புதனன்று மாலை டாக்டர். ரங்கநாதன் தலைமையில் சென்னை யு. எஸ். ஐ. எஸ். நூலக இயங்குநர் திருமதி சி. எப். ஜான்சன் சொற்பொழிவாற்றினர். அமெரிக்காவில் எவ்வாறு நூலகங்கள் இயங்குகின்றன என்பதை ஜான்சன் தம் உரையில் விளக்கினர்.

# பொங்கற் புதுநாளில்!

[வித்துவான், சொ. சிங்காரவேலனார்]
[தருமையாதீனப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்]

பொங்குந் தமிழ்த்தாயே! புதுமை வளர்மதியே!
பொங்கற் புதுநாளில் பொன்னடிகள் போற்றுதுமே! (1)
பெற்றெடுத்த மக்களெமைப் பித்தந் தழுவாமல்
உற்றெடுத்துத் தழுவியின்ப ஊற்றெடுக்க வைப்பாயே!
சங்கப் புலவர்மடித் தவழ்ந்தசீர் இளங்குழவி
பொங்கி யெழுந்தின்று புத்திளமைப் பெண்ணானாய்!
என்றும் இளையவளே! என்னருமைச் செந்தமிழே!
பொன்றும் பொழுதுமுனைப் போற்றிசெய வேண்டுவனே.
இந்தி மொழிபேணி இன்பஞ்சேர் அன்னையுனைச்
சிந்தித் திடலின்றிச் சேயர்சிலர் வாழ்கின்றார்! (5)
அன்னவரும் உன்னடிகள் அன்புடனே ஏத்திசைக்கத்
தண்ணருளை வேண்டுகின்றேன்; தாராயோ தண்மடந்தாய்!
எழுத்துத் துறைபலவும் எங்கும் நினதருமை
வழுத்துந் திறமுடையோர் வாழவருள் செய்குவையே!
தனித்துத் தொழுதுன்னைத் தவழவிடுங் கொள்கைதனை
‘இனிப்பில்லை’ என்பாரை எடுத்துத் திருத்துவையே!
கலப்பற்ற செந்தமிழால் கதைகட் டுரையெழுதி
நிலத்துன்றன் மொழித்தொண்டில் நிலைக்கவெனைச் செய்குவையே
சாதிப் பிணக்காலும் சமயப் பிணக்காலும்
மோதிக் கலங்காத மோனநிலை யருளுவையே! (10)
ஆட்சிமொழி யாக்கி அன்னையுனை முன்னிடத்தில்
காட்சி பெறவைக்குங் காலமிது நற்காலம்!
கருத்தில் புலவரெனக் காட்சிதரின் அன்னாரைப்
‘பொருத்தமிலை; போம்’என்னுங் காலமிது பொற்காலம்!
வாழ்த்துவையே தாயே! வணங்குகின்றோம் சேயரெலாம்!
வீழ்த்தித் துயர்துடைத்து வெல்கவென்று பாடுதுமே!
பொங்கற் புதுநாளில் பொன்னடிகள் போற்றுதுமே!
எங்கள் குலவிளக்கே! எழுக! எனப் போற்றுதுமே! (14)

# முதற்பாவலரும் பெருநாவலரும்

[மதுரைச்சிவம்]

முதற் பாவலர் என முத்தமிழறிஞர் முறையிட்டழைக்கும் திருவள்ளுவப் பெருந்தகையார், இவ்வுலக மக்கள் வாழ்வாங்கு வாழும் வழிமுறைகளைத் தமது ஒப்புயர்வற்ற திருக்குறளில் வகுத்துள்ளார். அம் முறைகளின்படி நந்தம் தமிழகத்தில் வாழ்ந்து சென்றவர் பலர்; அவருள் நாவலர்—கணக்காயர்—டாக்டர் என முப்பெரும் பட்டங்கள் பெற்ற ச. சோமசுந்தர பாரதியாரும் ஒருவர். இவரை, முதற்பாவலரின் பொருளுரையைப் பின்பற்றி வாழ்ந்த மூதறிஞர் எனலாம்!

'இறைமாட்சி' இயம்ப வந்த முதற்பாவலர், "அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும், எஞ்சாமை வேந்தற் கியல்பு" என்றார். மனத்திண்மையும், கொடையும், அறிவும், ஊக்கமும் ஆகிய இந்நான்கு குணங்களும் நாடாளும் வேந்தனுக்குரியவை என்பது பொய்யில் புலவர் கருத்து. தமிழ்மொழியின் வேந்தராய் விளங்கிய நாவலர் பாரதியாரிடத்து இந்த நான்கு பண்புகளும் இயல்பாய் இருந்தன என்றால் மிகையாகாது.

நாவலர், தமது வழக்கறிஞர் பட்டத் தேர்வை (பி. எல்.) எழுதி முடித்தவுடன், சென்னையிலுள்ள அரசினர் அலுவலகமொன்றில் சில காலம் பணி புரிந்தார். அவ்வலுவலகத்தில் இந்தியர், ஆங்கிலேயர். ஆங்கிலேய-இந்தியர் பணி புரிந்தனர். இந்தியர்கள் தலைப்பாகையுடனும், ஏனையோர் தொப்பியுடனும் வருவது வழக்கம். வெள்ளையர்களுடைய தொப்பிகளைக் கழற்றிவைப்பதற்கெனத் தனியாகத் 'தாங்கி' ஒன்று இருந்தது; ஆனால் அதில் இந்தியர் எவரும் தமது தலைப்பாகையைக் கழற்றி வைத்தல் கூடாது என்பது அவ்வலுவலகத்தில் நெடுநாட் பழக்கமாகக் கையாளப்பட்டு வந்தது. நாவலரோ, தாம் பணிபுரிய வந்த மறுநாளே, அத் 'தாங்கி'யில் தமது தலைப்பாகையைக் கழற்றி வைத்தார்; அது கண்டு வெள்ளையர் வெருண்டனர்; மிரட்டினர்; அச்சுறுத்தினர். நாவலர் அஞ்சினாரில்லை! இவ் வேறுபாடு தகாது எனக் கருதியவராய்த் தலைப்பாகையை அதே 'தாங்கி'யில் கழற்றி வைப்பதில் பின்வாங்கினாரில்லை. இச் செய்தி, அவ்வலுவலக உயர் அலுவலரான துரைக்கு எட்டியது. அவரோ, நாவலரின் அஞ்சாமையைப் பாராட்டினார்; அன்று முதல் வெள்ளையருக்கும் இந்தியருக்குமிடையே காட்டப்பட்ட இவ் வேறுபாடு நீங்கியது!

காங்கிரசுக் கட்சியில் பெரும் பங்கு கொண்டவரான நாவலர், உப்புச் சத்தியாக்கிரக காலத்தில், தென்னகத்திலிருந்து நன்கொடை திரட்டித் தந்ததுடன், தாமும் திங்கள்தோறும் பெருத்த தொகையை அன்பளிப்பாகத் தந்துதவினர். அன்றியும், தமிழ்ச்சங்கக் கழகங்கட்கு அவ்வப்போது நன்கொடை தந்தும், தமிழாசிரியர்கட்குத் தம் நூல்களை அன்பளிப்பாகக் கொடுத்தும் உதவி புரிந்துள்ளார். ஏழை மாணவர்கள் கல்வியறிவு பெறும்பொருட்டுத் தமது சொந்தப் பணத்தில் உசிலங்குளம் என்ற ஊரில் பள்ளி ஒன்றையும் நிறுவியுள்ளார். இவையனைத்தும் நாவலரின் ஈகைத் தன்மையைக் காட்டுவனவாம்.

நாவலர், தமிழ்மொழியில் மட்டுமின்றி ஆங்கிலத்திலும் அளவிறந்த புலமை உடையவர் என்பதை இவர் இயற்றிய நூல்களின் வாயிலாக அறியலாம். 'திருவள்ளுவர்', 'பண்டைச் சேரரைப் பற்றிய சில ஆராய்ச்சிகள்', 'தமிழ் இலக்கியமும் தமிழகமும்' என்ற ஆங்கில நூல்கள், 'தொல்காப்பியத்'தைப் பற்றிய ஆங்கிலக் கட்டுரைகள், இந்திமொழி பற்றித் திரு. இராச கோபாலாச்சாரியாருக்கு எழுதிய ஆங்கிலக் கடிதம்—இவை நாவலரின் ஆங்கிலப் புலமையை அறிவிப்பன. 'திருவள்ளுவர்', 'தசரசன் குறையும் கைகேயி நிறையும்', 'சேரர் பேரூர்', 'சேரர் தாயமுறை', 'மாரிவாயில்' 'மங்கலக் குறிச்சிப் பொங்கல் நிகழ்ச்சி', 'தொல்காப்பியர் பொருட் படலமும் புத்துரையும்', 'நற்றமிழ்'—இவை நாவலரின் தமிழ்மொழிப் புலமையை அறிவிப்பன.

நாவலரின் ஊக்கமுடைமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு, இவரால் தொடங்கப்பட்ட கட்டாய இந்தி எதிர்ப்புப் போராகும். இப் போராட்டத்தில் இவர் பட்ட இன்னல்கள் எண்ணிறந்தன. தாம் பிறந்த எட்டையபுரத்திலேயே, இந்தியை எதிர்த்துப் பேசியதற்காகக் கல்லால் எறியப்பட்டார்; பலரது தூற்றுதலுக்கு உள்ளானர். எனினும் தமது ஊக்கத்தைக் கைவிட்டாரில்லை நாவலர். தொடர்ந்து போராடினர்; வெற்றியும் பெற்றர்!

"அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார், குன்றுவ செய்தல் இலர்" என்பது 'குடிமை' என்ற தலைப்பில் வந்துள்ள குறட்பாவாகும். இதற்கேற்ப வாழ்வு நடாத்தியவர் நாவலர்.

செக்கிழுத்த செம்மல் சிதம்பரனர் தொடங்கிய கப்பற் கம்பெனியின் ஆட்சிப் பொறுப்பைச் சிலகாலம் ஏற்று நடத்தினர் நாவலர். கப்பற் கம்பெனியின் வளர்ச்சிக்குப் பெரு முயற்சி எடுத்துக்கொண்ட நாவலரை அடக்கி ஒடுக்க ஆவன செய்தனர் ஆங்கிலேயர். ஆயினும் சட்ட நுணுக்கமறிந்த

நாவலரை, ஆங்கிலேயரின் அடக்குமுறை எதுவுஞ் செய்ய இயலாது போயிற்று. எனவே சூழ்ச்சியில் வல்ல ஆங்கிலேயர், கப்பல் கம்பெனிப் பொறுப்பினின்றும் விலகிவிட்டால் பெரிய அரசுப் பதவியைத் தருவதாக நயமுடன் வேண்டினர். இத் தகாத செயலுக்கு நாவலர் ஒருப்படுவரோ? அவ்வாறு வேண்டின வரை, வேண்டிய மட்டும் இழித்துரைத்து வெறுத்தொதுக்கினர் நாவலர்!

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்ற முதற்பாவலர் கூற்றை, வாழ்வின் எப்பகுதியிலும் கொண்டவர் பெருநாவலர் எனப் பெருமையுடன் கூறலாம். இவரெழுதிய நூல்களனைத்தும் இக் கருத்துப் பற்றியே எழுந்தவையாகும். "எந்தப் பெரியார் எதைப் பற்றிக் கூறினும் அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை; என் மனதிற்கு எது உண்மை என்று படுகிறதோ, அதைச் சொல்வதில் என்றும் நான் தயங்கியதேயில்லை!" என்பது நாவலர் கூற்று!

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற குறட்பாவை உள்ளத்துட் கொண்ட நாவலர், தமக்குப் பல்லாற்றானும் உறுதுணை புரிந்த எட்டப்ப அரசர், அண்ணாமலை அரசர், சேதுநாட்டு வேந்தர் ஆகியோர்க்குத் தமது நூல்கள் சிலவற்றை உரிமையுரையாக்கித் தமது நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொண்டார். மேலும், தமது முதல் மனைவி மீனாட்சியின் நினைவுக்கும், நன்றிக்கும் அறிகுறியாகத் தம் இரண்டாம் மனைவியினிடத்துப் பிறந்த பெண்ணிற்கு 'மீனாட்சி' என்ற பெயரை இட்டுள்ளார்.

"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை, எல்லாரும் செய்வர் சிறப்பு" என்ற திருக்குறள், 'பொருள் செயல் வகை'யில் வந்துள்ளது. இக் குறளுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாக நாவலரின் வாழ்க்கையைக் கூறலாம். பொருளில்லாத காரணத்தால், படிக்கின்ற காலத்தில் நாவலர் பட்ட தொல்லைகள் பல. அதனால், தாமே அரிதின் முயன்று, அரும்பாடுபட்டுப் பொருளைச் சேர்த்தார். 'புலவர்க்கும் வறுமைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு' என்பர் அறிஞர். ஆனால் இக்கூற்று இவரளவில் பொய்யாயிற்று!

"உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார், உள்ளத்துள் எல்லாம் உளன்" என்ற பொருளுரையின்படி வாழ்ந்தவர் நாவலர். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் புன்மை நாவலரிடத்தே காணுதல் இயலாது. அவ்வாறு

உண்மையை உள்ள உறுதியோடு உரைக்கின்றபோது, அதனால் எத்தகைய எதிர்ப்புவரினும் ஏற்றுக்கொள்ளுவார். உண்மைக்காகப் போராடிய உரவோருள் நாவலரை முதல்வராகக் கொள்ளலாம்.

"ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லால், பொன்றுது நிற்ப தொன் றில்" என்ற வள்ளுவர் வாய்மொழியை நன்குணர்ந்த நாவலர், தாம் உயிரோடிருக்குங் காலத்தே நிலைத்த புகழினைப் பெற்றுவிட்டார் தமது இளமைக் காலத்திலேயே 'பாரதி' என்ற பட்டத்தையும், வேற்று நாட்டவர் சார்பில் 'நாவலர்' பட்டத்தையும், தமிழ்ப் புலவர் சார்பில் 'கணக்காயர்' பட்டத்தையும், பல்கலைக் கழகச் சார்பில் 'டாக்டர்' பட்டத்தையும் பெற்ற பெருமைக்குரியவர் நம் நாவலர் ஒருவரே!

"மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்" என்ற முதற்பாவலரின் முதுமொழிக் கிணங்கப் பெரு நாவலர், எல்லாம் வல்ல முழுமுதற் பொருளைத் தம் உள்ளத்தே கொண்டு வழிபட்டவர் என்ற உண்மையை இவரின் நூல்களில் காணலாம். அன்றியும், இவரது வாயானது இடைவிடாமல் 'அட கடவுளே, அட கடவுளே!' என்று சொல்லிக்கொண்டே இருக்கும் இயல்பையும், நேரிற் பழகுவோர் அறிந்திருப்பர். எனவே கடவுட் பற்றுக் கொண்டவர் கணக்காயர் என்பதில் ஐயமில்லை.

இவ்வாறு முதற்பாவலரின் பொருளுரைப்படி வாழ்ந்து காட்டிய பெருநாவலராம் பாரதியார் மறைந்துபோனாராயினும் இவர்தம் புகழ் இந்நிலவுலகத்து என்றும் நின்று நிலவும் என்பது உறுதி.

---

## பாரதியாரின் உள்ளாற்றல்

[நாஞ்சில், கா. கணபதி]

நாவன்மை தங்கியுள நெஞ்சம்
நன்னெறிக் குறையுளான நெஞ்சம்
பாவன்மை பதிந்துநிற்கும் நெஞ்சம்
பலகலைகள் தேர்ந்தாய்ந்த நெஞ்சம்
ஆவன்மை தமிழில்நிற்கும் நெஞ்சம்
அருந்தமிழில் இறுகிறுத்த நெஞ்சம்
கோவன்மை யாலெங்கும் வென்ற
கோமானும் பாரதியார் நெஞ்சே!

# குறள் தந்த வள்ளுவர் குந்த குந்தரா?

[வித்துவான், அ. பாலசுந்தர குருக்கள்]

தெய்வத்திரு மறையாம் திருக்குறளை இயற்றிய ஆசிரியர் பற்றி ஒருவகையான குழப்பநிலை நீண்ட நாளாக நிலவி வருவதாகக் காணப்படினும் அக்குழப்ப நிலை உண்டாகிய காலம் மிகவும் பிற்பட்டதாகும். திருக்குறள் இயற்றப்பட்ட காலத்தில் இல்லாத குழப்பம் வள்ளுவமாலையை அடிப்படையாகக் கொண்டு அதற்குப் பிற்காலத்தில் உண்டானதாக இருக்கலாம். திருக்குறள் ஆசிரியரின் வாழ்க்கை வரலாறு உள்ளவாறு கிடைத்திலதேனும் வள்ளுவமாலையால் திருக்குறள் ஆசிரியரின் பெயர் 'வள்ளுவர்' என்பதை நன்குணரலாம். பிற பெயர்களுள் 'வள்ளுவர்' என்ற பெயரே பலராலும் வழங்கப்பட்டுள்ளது.

வாழ்க்கை வரலாறே உள்ளவாறு அறியப்படாத வள்ளுவர் பெருமானின் சமயம் யாது? என்ற வினாவிற்கு விடை காண முற்பட்டோர் பலராவர். திருவள்ளுவர் சைவரா? அல்லது வைணவரா? என்று ஆராயப் புகுவோருக்கு அவர் இரண்டிற்கும் பொதுவாக வைதிக சமயச் சார்புடையவராகவே திருக்குறளை வைத்து நோக்கின் காணப்படுவார். சைவரும் வைணவரும் திருவள்ளுவர் பற்றி வாதிக்க உரிமையுண்டு; ஆகையால், வாதிக்கலாம். ஏனெனில், வைதிக சமயங்களின் தத்துவங்களையும் ஒழுக்கங்களையும் பெரும்பாலும் ஒட்டியே திருக்குறள் அமைந்துள்ளது. ஆகையால் வைதிக சமயங்களுக்குப் புறம்பான சமயத்தைச் சார்ந்தவர்கள் திருக்குறள் எம்முடைய சமயச் சார்புடைய நூல் என்றோ அன்றி அதன் ஆசிரியர் எம்முடைய சமயத்தைச் சார்ந்தவர் என்றோ வாதிக்கத் திருக்குறளில் ஒரு சான்றேனும் இல்லை. உண்மை இவ்வாறிருக்கவும் சைனர்கள் சிலரும், சைன சமயத்தையும் பிற சமயத்தையும் ஒப்புநோக்கி உணராது மயங்கிய அறிஞர்கள் பலரும் திருக்குறள் ஆசிரியர் சைனர் என்றும் சைனராக இருக்கலாம் என்றும் கருதினர். மயக்க உணர்வால் உண்டாகிய இக் கருத்தையே உண்மை எனச் சாதிக்க இப்போது சிலர் முனைந்துள்ளனர்.

திருக்குறளில் காணப்படும் பாகதச் சொற்களையும் கடவுள் வாழ்த்தில் காணப்படும் 'ஆதிபகவன்' முதலிய சொற்றொடர்களையும் நோக்கித் திருக்குறள் ஆசிரியர் சைனராக இருக்கலாம் என்று கூறிய கருத்துத் தவறானதென்பதை உள்ளங்கைநெல்லிக் கனிபோல் யாவரும் உணர்ந்துள்ளனர். பாகதச் சொற்களைச் சைனர்களே யன்றிப் பிறரும் ஏற்று வழங்கி யுள்ளனர். பாகத

மொழி சைனருக்கே உரியதன்று. கடவுள் வாழ்த்தில் காணப் படும் சொற்றொடர்கள் சைன சமயத்திற்கும் பொருந்துவனவாகக் காணப்படினும் பொருள் முடிபு சைனசமயத் தத்துவ மரபுக்கு முற்றிலும் மாறுகவே அமைந்துள்ளது. ஆகையால் திருக்குறள் சைனரால் இயற்றப்பட்டதெனக் கூறியவர்கள் யாவரும் திரிபுணர்ச்சியால் அங்ஙனம் கூறினர் என்பதை உணரலாம். இவர்கள் ஒரு புறம் இருக்கத் திரிபுணர்ச்சியும் பற்றுள்ளமுங் கொண்டு விதண்டை என்னும் வீண்வாதம் நிறைந்த நூலெழுத முற்பட்டதோடன்றித் திருவள்ளுவர் என்ற பெயரை நீக்கிக் 'குந்தகுந்தர் குறள்' என்று இனி வழங்குதல் வேண்டும் என்னும் பொருள் தோன்ற வரைந்துள்ளனர். 'தேவர் குறள்'* என்ற நூலில் அதன் ஆசிரியர் இல்லதை உள்ளதாக எவ்வாறு புனைந்துரைக்கின்றார் என்பதை உணருமாறு சிலவற்றைக் காண்போம்.

திருவள்ளுவர் வாழ்க்கையானது பலவகையாகப் புனைந் துரைக்கப்பட்டதற்குக் காரணமாக அமைந்தது 'ஏளாச்சாரியார் குறள் இயற்றினார்' என்பதேயாகும். இவ் வேளாச்சாரியார் குறளியற்றினார் என்பதும் உண்மையாக இருக்கலாம். ஏளாச் சாரியார் குறட் பாவினால் சைனசமயச் சார்புடையதாக இயற்றிய நூலை விடுத்துத் திருவள்ளுவர் இயற்றிய நூலே இவரால் இயற்றப்பட்டதென மயங்கியதால் உண்டான குழப்பம் வள்ளுவர் பெருமானின் பெயரையும் மாற்றவேண்டும் என்ற வரை வளர்ந்துவிட்டது. வள்ளுவர் பெருமானின் வான் மறை யானது அமைந்துள்ள சிறப்பே ஆராய்ச்சியாளர்கள் அனை வரையும் பிற நூல்களைக் கருதா வண்ணம் தன்பா லீர்த்து விட்டது. நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்ற மூன்றையும் அருங்கலங்களாகக் கொண்டு அநேகாந்த வாதி களாகப் பிற சமயத்தினரை வென்றதாக நீலகேசித் தெருட்டு முதலிய நூல்களை இயற்றித் தனித்தியங்கிவரும் சைனர்களையும் வள்ளுவர் குறள் கவர்ந்துவிட்டது. திருக்குறளில் உண்டான கவர்ச்சியால் சைனர்கள் தங்கள் நூல்கள் (சைன நூல்கள்) யாவும் பொய்ந் நூல்கள் எனக் கூறுவாரைப் போலத் தம்முடைய சமயம் கூறும் தத்துவம், ஒழுக்கம் ஆகியவற்றை மறந்து வாதிக்க முற்பட்டுள்ளனர். சைன சமயத்துக்குரிய தத்துவம், ஒழுக்கம் ஆகியவற்றைத் திருக்குறளுடன் பொருத்திக் காட்டி னோர் ஒருவரும் இல்லை. தம்முடைய சமயத்துக்குத் திரு வள்ளுவர் திருக்குறள் முற்றிலும் முரணானது என்பதை

* தேவர் குறள் என்ற நூல் திரு. A. சக்கிரவர்த்தி நயினாரால் இயற்றப்பட்டது.

யுணராமல் சைனர்கள் நேர்மையின்றிப் பற்றுள்ளத்தால் வாதிக்க முற்பட்டுள்ளனர்.

ஏளாச்சாரியார் என்பவர் குறட்பாவினால் ஒரு நூலை இயற்றினார் என்றதையே அடிப்படையாகக் கொண்டு இவரால் இயற்றப்பட்ட நூலியாது என்பதை யாராயாமல் வள்ளுவர் இயற்றிய குறளை இவரால் இயற்றப்பட்டதென்ற பொய்க் கருத்தை அறிந்தோ அறியாமலோ பரவுமாறு செய்தவர் 'தேவர் குறள்' என்ற நூலின் ஆசிரியராவார். இவர் 'தேவர் குறள்' என்ற நூலில் சைனசமயத் தத்துவங்களையும், ஒழுக்கங்களையும் வள்ளுவர் குறளுடன் பொருத்திக் காட்டாமல் வள்ளுவமாலைச் செய்யுட்கள் பலவற்றை எடுத்துக் காட்டி அவற்றிற்கு வலிந்தும் நலிந்தும் பொருள்கொண்டு இடர்ப்படுகின்றார். இவரால் இயற்றப்பட்ட 'தேவர் குறள்' என்ற நூல் முழுவதும் மறுக்கத் தக்கதே எனினும் விரிவஞ்சிச் சிலவற்றை மட்டிலும் இங்குக் கூறின் அமையும் என நினைக்கின்றேன்.

"ஏளாச்சாரியார் என்றவர் சைனத் துறவி. இவருக்குக் குந்த குந்தர் என்ற பெயரும் உண்டு. இவர் கி. மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவ் வேளாச்சாரியாரும் வருசியும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள். இவர்கள் இருவரும் ஓர் ஆசிரியரிடம் சேர்ந்து கல்வி பயின்றனர். இவ்வேளாச்சாரியாரின் மாணவர் வள்ளுவர். ஆசிரியர் இயற்றிய நூலை வள்ளுவர் அரங் கேற்றினார். ஆகையால் குறள் ஆசிரியரை வள்ளுவர் என்று வசதிக்காகக் கூறினும் குந்த குந்தர் என்றே நாம் கொள்ளுதல் வேண்டும். இவ் வேளாச்சாரியார் சமயசாரம், பிரவசனசாரம், பஞ்சாத்திகாயம் என்ற மூன்று நூல்களை இயற்றியுள்ளார். இவை மூன்றுமே முப்பாலாக விரிவடைந்தன. ஆகையால் குறள் ஆசிரியர் குந்த குந்தரேயாவார்" என்று வள்ளுவமாலைச் செய்யுட்களை எடுத்துக் காட்டி வரைந்துள்ளார்.*

'தேவர் குறள்' என்ற நூலில் காணப்படும் மேற்கூறிய முடிபுக்கு வள்ளுவமாலைச் செய்யுள்களுள் ஒன்றும் உதவுவதாகக் காணப்படவில்லை. ஆசிரியர் அவைகளுக்கு வலிந்து பொருள் காண்கின்றார் என்பது அந்நூலை நோக்கின் நன்கு புலனாகும். இவ்வாசிரியர் கூறும் செய்திகள் யாவும் கற்பனையாக அமைந் தவைகள். திருக்குறள் தமிழ்மொழியில் தோன்றிய முதல் நூல் அன்றென்பதையே வலியுறுத்துங் கருத்துக்கள். திருக்குறள் ஆசிரியருக்கு 'வள்ளுவர்' என்ற தமிழ்ப் பெயரும் வேண்டாம் என்பதை விந்தையான முறையில் விளக்கும் கருத்துக்கள்.

---

* தேவர் குறள் என்ற நூலில்.

ஏளாச்சாரியாருக்குப் பதுமநந்தி, குந்த குந்தர் முதலிய பல பெயர்கள் உண்டென்பர். இவ் வேளாச்சாரியின் மாணவர் வள்ளுவர் என்பதற்குச் சான்றில்லை. வள்ளுவரின் மாணவர் குந்த குந்தர் என்று கூறினுல் அது மிகையாகாது. இதைப் பற்றிப் பின்னர்க் காண்போம்.

குந்த குந்தர் ஆந்திர இராச்சியத்தில் அனந்தப்பூர் மாவட்டத்தில் உள்ள 'கொளகொண்ட' என்ற ஊரிற் பிறந்தவர். இவருடைய காலம் கி. பி. பத்தாம் நூற்றுண்டைச் சார்ந்ததாக இருக்கலாம் என்று துணியப் போதிய சான்றிருக்கின்றது.

வடமொழி வாணராகிய வரருசி வாழ்ந்த காலம் கி. மு. நான்காம் நூற்றுண்டு என்பதைப் பல சான்றுகளுடன் திரு. சயசங்கரப் பிரசாத் அவர்கள் நிறுவியுள்ளார்கள். ஆகையால் குந்த குந்தரும் வரருசியும் சமகாலத்தவர் என்றது தவறுன கருத்தாகும்.

குந்த குந்தர் காலம் கிறித்து சகாப்தத்தின் தொடக்கம் அதாவது கி. பி. முதலிரு நூற்றுண்டுகளாக இருக்கலாம் என்று புரபசர். திரு. உபாத்தியாயே என்பவர் கருதுகின்றுர். இவருடைய கருத்தும் துணிவில்லாததாகவே காணப்படுகின்றது. இதனுல் நாம் குந்த குந்தர் கி. மு. முதல் நூற்றுண்டில் வாழ்ந்தவர் என்ற கருத்துத் தவறுனதென்பதை உணரலாம்.

மகாவீரர் கி. மு. 527 இல் வாழ்ந்தவர். இவரது காலத்துக்குப் பின் 683 ஆண்டுகள்வரை அங்காகம ஞானிகள் வாழ்ந்தனர். எனவே அங்காகம ஞானிகள் காலம் கி. பி. 156 வரையாகும். அங்காகம ஞானிகளுக்குப் பின் பத்திரபாகு முனிவர் வாழ்ந்தார். அவருடைய மாணவர் தரசேனர் என்பவர். தரசேனருடைய மாணவர்கள் பூதபலி, புட்பதந்தர் என்போராவர். இவர்களுடைய காலத்துக்குப்பின் நேமிசந்திரர் காலம். மகாவீரர் காலத்திலிருந்து நேமிசந்திரர் வரையுள்ளோர் காலங்களைக் கணக்கிடின் கி. பி. நான்காம் நூற்றுண்டுவரை கொள்ளலாம். இக் காலவரையறையில் தோன்றிய சைன நூல்கள் யாவும் பிரதம சுருத கிரந்தங்கள் எனப்படும்.

மேற்கூறிய பிரதம சுருதகிரந்தங்கள் தோன்றிய காலத்துக்கு மிக்வும் பிற்பட்ட காலத்தவர் குந்த குந்தராவார். இக் குந்த குந்தர் பற்றிக் கூறும் கல்வெட்டுக்கள் கி. பி. பத்தாம் நூற்றுண்டுக்குப் பிற்பட்டவைகளே. யாது காரணத்தாலோ சைனர்கள் இவரை முற்பட்ட காலத்தவர் என்று எழுதி வருகின்றனர். இக் குந்த குந்தர் இயற்றிய நூல்கள் பாகத மொழியில் உள்ளன. இவரை அம் மொழியாராய்ச்சியினர்

வீரகாதா காலத்தைச் சேர்ந்தவராகவும் கொள்ளுகின்றனர் என்பதை நாம் உணர்தல் வேண்டும்.

'வீரகாதா' காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டு முதல் கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் முற்பகுதிவரை யென்பர். குந்த குந்தரால் இயற்றப்பட்ட நூல்கள் வீரகாதா காலத்தைச் சார்ந்தவைகளாகும். இவற்றையெல்லாம் ஒப்புநோக்கிக் காண்போருக்குக் குந்தகுந்தர் கி. பி. பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது ஐயத்துக்கிடமின்றித் தெரியவரும். இத்தகைய பிற்பட்ட காலத்தைச் சார்ந்த ஒருவரின் மாணவர் வள்ளுவர் என்று கூறப் புகுந்தது அறிவின்மையாகும்.

'தேவர் குறள்' என்ற நூலின் ஆசிரியர் திருவள்ளுவர் காலம் கி. மு. முதல் நூற்றாண்டு என்பதை அடிப்படையாகக் கொண்டு அதற்கேற்றவாறு குந்த குந்தர் காலத்தையும் பிணைத்துவிட்டார். இக்குந்த குந்தரின் காலத்தை ஆய்தல் நமது குறிக்கோளன்று. ஆயினும் 'தேவர் குறள்' என்ற நூலின் ஆசிரியர் எவ்வாறு இல்லதை உள்ளதாகப் புனைகின்றார் என்பதற்கு எடுத்துக்காட்டாகவே இதனை இங்குச் சுருக்கமாக வரைய நேர்ந்தது.

இக் குந்த குந்தர் எந்தக் காலத்தில் வாழ்ந்தவராக வேண்டுமானாலும் இருக்கட்டும். இவரியற்றிய நூல்களுக்கும் குறளுக்கும் எவ்வகையான ஒற்றுமையும் இல்லை. இவரால் இயற்றப்பட்ட நூல்களுக்கும் திருக்குறளுக்கும் ஒற்றுமையுண்டென்றால், அவ்வொற்றுமை கோகுலாட்டமிக்கும் துலாம்காதருக்கும் உள்ளதைப் போலவே காணப்படுகின்றது. ஆகையால், 'தேவர் குறள்' என்ற நூலின் ஆசிரியர் கூறும் யாவும் தவறானவை என்பதையறியலாம். இந்த ஆசிரியர் எதை வைத்துக்கொண்டு இவ்வளவையும் புனைந்துரைக்கின்றார் என்பதை நோக்கின் உண்மை வெளியாகலாம். ஏளாச்சாரியார் என்பவர் குறளியற்றினார் என்ற செய்தியையே வைத்துக்கொண்டு இவர் நூலை இயற்றி இருப்பது வெளிப்படை.

வள்ளுவர் பெருமான் முப்பாலாக விரித்துக் கூறிய அறம் பொருள், இன்பம் போல் சைனர்கள் கொண்ட முப்பொருள்கள் நற்காட்சி, நன்ஞானம், நல்லொழுக்கம் என்பவைகளாம். இவற்றையே சைனர்கள் 'திரிரத்தினம்' அதாவது மும்மணிகள் என வழங்குவர். தமிழில் அருங்கலச் செப்பென்றொரு சைன நூல் உள்ளது. இந்நூல் மொழி பெயர்ப்பாகும். குறட்பாவினால் ஆனது. வள்ளுவர் பெருமானின் திருக்குறளில் சிலவற்றை ஆசிரிய வசனமாக வைத்துப் பிற்காலத்தில் ஒருவரால் செய்யப்

பட்டது. இந்நூல் ஆசிரியர் யாரென்பது தெரியவில்லை. ஆகையால் இந்த நூலே ஏளாச்சாரியால் செய்யப்பட்ட நூலாதல் வேண்டும். வள்ளுவர் பெருமானின் குறளை நோக்கிக் குறட்பாவினுல் இவர் நூலியற்றியதோடு அமையாமல் சில குறள்களையும் ஆசிரிய வசனமாக அமைத்த இவர் நூலை விடுத்து வள்ளுவர் குறளையே ஏளாச்சாரி இயற்றினர் என்றும், ஏளாச்சாரியின் மாணவர் வள்ளுவர் என்றும் கூற முற்பட்டது விந்தையினும் விந்தையாகத் தோற்றுகின்றது.

இதுகாறும் கூறியவாற்ருல் 'தேவர் குறள்' என்ற நூலின் ஆசிரியர் கூறும் குந்த குந்தர் கி. பி. பத்தாம் நூற்றுண்டைச் சார்ந்தவராக வேண்டும் என்றும், இக் குந்த குந்தர் குறட்பாவினுல் முப்பாலாக ஒரு நூல் இயற்றியிருப்பின் அது அருங்கலச் செப்பாக இருக்கலாம் என்றும், குந்த குந்தர் நூலுக்கும் வள்ளுவர் குறளுக்கும் யாதொரு ஒற்றுமையும் இல்லை என்றும் ஒருவாறு உணரலாம்.

---

## சிவனடி சேர்ந்த சுப்பையதாசு

தென்றலும் மன்றமும் தெண்ணீர்ப் பொருநையும் தொன்றியல் தமிழும் நன்றறி செல்வர்களும் என்றும் தழைக்கும் இயல்சேர் திருநெல்வேலி மாவட்டத்துச் சீரலைவாயினை யடுத்துள்ள கடையனேடை என்னும் சிற்றூரில் திருவருளால் தோன்றியவர். இவர்தம் குடும்பம் செல்வவளமிக்கது; ஆயர்குலம்; அகவை ஐம்பத்திரண்டு; முதுகலைஞர் என்னும் எம். ஏ. பட்டம் பெற்றவர்; தமிழ்ப்புலமையு மிக்கவர்; மணம் புரிந்துகொள்ளாதவர். இவர்தம் தந்தையார் வில்லிமுத்துத் தாசாவர். தாயார் நாராயண வடிவம்மையார். 1947 ஆம் ஆண்டில் திருக்கழுக்குன்றம் வந்தெய்தினர். அந்நாள் தொட்டு மலைக்குகையிலுறைந்து பெருந்தவம் புரிந்து வந்தனர். குகைக்கு வெளியில் வருவதில்லை. வாய்வாளா நோன்பும் மேற்கொண்டிருந்தனர். குகை தேவமலையில் பட்சிப் பாறைக்கு மேல்பாலுள்ளது. மெய்யன்பர்கள் பல்லோர் நாளும் வழிபட்டுச் செல்வர். இத் திங்கள் மூன்றும்நாள் இறையடி நீழலை எய்தினர். மிக்க சிறப்புடன் ஊர்வலஞ் செய்து திருமேனியினைக் கற்கோவிற்படுத்தினர். கற்கோவில் - சமாதி.

சிவனடிசேர் சுப்பைய தாசுபுகழ் வாழ்க
தவமுதல்வர் தாளிணைவாழ் க.

# "சைவசித்தாந்த சமாசத்தின்"

# மாநாடு

வாலாசாபாத் 'இந்துமதபாடசாலை'யின்கண் 1959 திசம்பர் 25, 26, 27 மூன்று நாட்களும் சமாசத்தின் ஐம்பத்து நான்காவதாண்டு நிறைவு விழா மிக்க சிறப்பாக நிகழ்ந்தன. பன்னூற்றுக்கணக்கான விருந்தினர் வந்து விழாவிற் பங்கு கொண்டின்புற்றனர். பல்புகழ்பெற்ற அப் பாடசாலையின் தந்தையாம் உயர்திருவாளர் மாசிலாமணி முதலியாரவர்களின் பெருமுயற்சியால் இவ்விழா என்றுங் காணா எழின்மிகு சிறப்பொடு நிகழ்ந்தது.

இம் மாநாட்டைச் சென்னை அறநிலையத்துறை ஆணையாளர் உயர்திருவாளர், அ. உத்தண்டராம பிள்ளை ஐ. ஏ. எஸ்., அவர்கள் திறந்து வைத்து அரியதொரு விரிவுரையாற்றினார்கள்.

சைவக்கொடியை இவ்வூர் ஊராட்சி மன்றத்தலைவர் திரு. வா. து. நடராசன் ஏற்றுவித்தனர். வரவேற்புரையை இந்துமத பாடசாலைத் தலைவர் திரு. மாணிக்கம் செட்டியார் நிகழ்த்தினர். சமாசத்தின் ஆண்டறிக்கையினைச் சமாசச் செயலாளர் திரு. கீ. இராமலிங்கனார் படித்தளித்தார். சமாசச் செயலாளர் திரு. மா. ப. தியாகராச முதலியார் சமாசத்தின் கொள்கைகளையும் அவை எங்கும் பரவிப் பயன்படுதற்காம் வழிவகைகளையும் வகுத்துக் கூறினர்.

தவத்திரு. வித்துவான் சோமசுந்தரத் தம்பிரானடிகள் (தருமையாதீன சமயப் பிரசார நிலையம், சென்னை) தலைமை பூண்டனர். அரியதொரு முன்னுரை நிகழ்த்தி அவையினை அணிபெற நடத்தினர். பெரும் புலவர், பேராசிரியர், பெரும் பதவியினர் பல்லோர் இருபாலாரினுமுள்ளார் எழில்பெறச் சொற்பொழிவாற்றினர். 'கந்தரனுபூதி' வெளியீட்டு விழாவும் நிகழ்ந்தது. டாக்டர் இராசமாணிக்கனார் அவர்கட்குப் பொன்னாடை போர்த்திச் 'சைவநெறிக் காவலர்' என்னும் மெய்வகைப் பட்டமும் வழங்கி மேன்மைப்படுத்தினர்.

வழிநாட்களில் உறுப்பினர் பொதுக்கூட்டம், செயற்குழுக் கூட்டம் நிகழ்ந்தன. "சைவ மங்கையர் மாநாடு," திருவாட்டி நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்களால் துவக்கி வைக்கப்பட்டு, திருமதி சௌந்தரம் கைலாசம் அவர்களால் தலைமை தாங்கப் பெற்று, புலமை சான்ற பல்பெருமங்கைமாரால் விரிவுரையாற்றப் பட்டு மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. இதுபோல் "சைவ இளைஞர் மாநாடு" திருவாளர் மணலி சீனி. இராமகிருட்டிணன் (மணலி அறநிலையங்களின் தலைவர்) அவர்களால் துவக்கி வைக்கப்பட்டு

திருவாளர் ந. சஞ்சீவி (சாஞ்சி, பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்) அவர்களால் தலைமை தாங்கப்பெற்றுப் பல பேராசிரியரால் சொற்பொழி வாற்றப்பட்டுச் சிறப்புற நிகழ்ந்தது.

இந்துமத பாடசாலைத் தந்தையரான உயர்திரு. வா. தி· மாசிலாமணி முதலியாரவர்களைத் தலைவர் தம்பிரானடிகள் நனி மிகப் பாராட்டினர். மாயூரம் ஓரியண்டல் கல்லூரி முதல்வர் திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், மாசிலாமணி முதலியாரவர்கட்குப் பொன்னாடை போர்த்துப் பாராட்டினர். இந்துமத பாடசாலையின் ஒத்துழைப்புப் பெரும் பொறுப்பாளரும் அண்ணாவென்றழைக்கப்படும் அறிவாற்றல் மிக்காருமாகிய புலவர் திரு. நா. ப. தணிகையரனார்க்கு மாசந்நிதானம் அளித்த சிவமணிமாலையினைத் தம்பிரானடிகள் வழங்கி வாழ்த்தினர்.

மாநாட்டு முடிவில் செயலாளரால் அனைவர்கட்கும் நன்றியும் வாழ்த்தும் நவிலப்பட்டுக் கூட்டமினிது நிறைவுற்றது.

---

## அருளோன் அடிசார் அண்ணல்

# சதாசிவப்பண்டாரத்தார்

பண்டாரத்தாரவர்கள் "அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துத் தமிழ் ஆராய்ச்சித்துறை" விரிவுரையாளராக விளங்கி வியத்தகு பணிபுரிந்த விழுமியார். அவர்கள் 2-1-1960 காலை அண்ணாமலை நகரில் தம் இல்லத்தில் இறையடி எய்தினர். இவர்கள் திருவந்தியத்தில் பிறந்து கும்பகோணம் பாணாதுறை உயர்நிலைப் பள்ளியில் இருபத்தைந்தாண்டுகள் அலுவல்பார்த்து அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1942 முதல் இறுதிக் காலம்வரை பணிபுரிந்து வந்தனர். 'சோழர் வரலாறு, இருண்ட காலம், (மூன்று பகுதிகள்) முதலிய பல அரிய வரலாற்று ஆராய்ச்சி நூல்கள் வரைந்து வெளிப்படுத்தியுள்ளார்கள். இளமையிலிருந்தே திருக்கோவிற் கல்வெட்டுக்களைப் படியெடுத்து மொழிபெயர்ப்பதில் மிக்க வேட்கையுடையவர். இவர்தம் அரும்பெரும் வரலாற்றை அடுத்த செல்வியில் இவர்தம் உருவப்படத்துடன் விரிவாக வெளியிடக் கருதியுள்ளோம். நம்மால் ஈடுசெய்யவொண்ணாத பேரிழப்பாய் நம்மைவிட்டுப் பிரிந்த பண்டாரத்தாரின் நல்லாவி இறையடியில்என்றும் இன்புற்று வாழுமாக.

அவர்தம் குடும்பத்தாருக்குக் கழகத்தாரின் பரிவும் ஆறுதலும் உரியவாகுக.

# பால் பொங்குகவே!

[புலவர் 'அரசு']

பால்பொங் குகவே! பால்பொங் குகவே!
நால்வள நிலத்தினும் நற்பால் பொங்குக!
பழகிய கழனியிற் பண்புற வுழைத்துச்
செந்நெலுங் கரும்பும் இஞ்சியும் மஞ்சளும்
வாழையுந் தெங்கும் மாவும் பலாவும்
வாழிய நிலமகள் வளம்பெற விளைத்து
நம்முயி ரோம்பும் செம்மைசால் சான்றோர்
உழவர் மனையெலாம் உலப்பிலா ஆநிரை
மழலை மக்கள் வளவிய நிதியம்
எங்கும் எங்கும் இயலுறப் பொங்குக!
எல்லாக் கலைகளும் இதனிடத் துள; இதில்
இல்லாக் கலைமற் றெங்கும் இலையென
வியந்துல கெங்கும் நயந்து புகழக்
கலையெலாந் தமிழிற் பலநெறி பொங்குக!
வள்ளுவன் தந்த வளம்பெறு நல்லான்
தெள்ளுறப் பொழியுந் தீஞ்சுவை முப்பால்
உலகுறு மக்கள் உளமெலாம் நிறைந்து
நலமெலாம் விளைத்து நிலவுறப் பொங்குக!
செந்தமி ழன்னையின் திருவரு ளாலே
எந்த நெறியினும் இயல்வளம் பெற்றும்
நன்றி மறந்து வென்றிசேர் தமிழிற்
களைபல வளர்க்குங் கயமைக் கூட்டம்
உளைவுறப் பணிபுரி உண்மைச் சான்றோர்
செய்பணி வளர்ந்து சீர்பெறப் பொலிக!
வாழிய செந்தமிழ் நாடு!
வாழிய பாரத மாண்புறு நாடே!

# தமிழிசை விழா

தமிழிசைச்சங்கத்தின் பதினேழாம் ஆண்டுவிழா 24-12-59 இல் இராசா அண்ணாமலை மன்றத்தில் துவங்கிற்று. விழாவுக்குச் சென்னை உயர்நீதிமன்ற நடுவர் திரு. கணபதியாப் பிள்ளையவர்கள் தலைமை தாங்கினார்கள். மைய அரசின் போக்குவரத்துத் துறை அமைச்சர் டாக்டர் பி. சுப்பராயன் அவர்கள் விழாவைத் துவக்கி வைத்தார்கள். தமது துவக்க உரையில் டாக்டர் சுப்பராயனவர்கள் வழங்கிய கருத்துக்கள் பின் வருமாறு:

"தமிழின் சிறப்பைப் பற்றி மட்டும் பேசிக்கொண்டிருப்பதில் பயனில்லை. அதனை மேலும் வளரச் செய்யத் தமிழிலுள்ள காவியங்களையும் கட்டுரைகளையும் பிற மொழிகளில் மொழி பெயர்த்து மக்களிடையே பரப்பவேண்டும்."

"நாயன்மார்களும் ஆழ்வார்களும் பாடியுள்ள தேவாரம், திருவாசகம், திருவாய்மொழிப் பிரபந்தங்கள், தாயுமானவர் பாடல்கள், திருவருட்பா முதலியவை உள்ளத்தைத் தொடுவனவாகும். இவை தெய்வ வழிபாட்டுப் பாடல்களாக மட்டுமன்றி நீதி புகட்டும் பாடல்களுமாகும்."

ஆற்றல் படைத்த இசையைப் பொழுதுபோக்குக்கு மட்டுமின்றி நாட்டு முன்னேற்றத்துக்கும் சமுதாய முன்னேற்றத்துக்கும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்."

விழாத் தலைவர் திரு. கணபதியாப் பிள்ளையவர்கள் தமது தலைமையுரையில் வழங்கிய கருத்துக்கள் பின்வருமாறு:

இசையின் நோக்கம் அறிவுக்கும் இதயத்துக்கும் இன்பமூட்டுவது. தாய்மொழியில் சாகித்தியங்கள் அமைந்தால்தான் இதய இன்பம் கிட்டும். ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்தில் பத்தி வெள்ளம் பெருகியிருந்தமைக்குக் காரணம் அவர்களுடைய பாடல்களெல்லாம் தமிழில் இயற்றப்பெற்றதுதான்."

**பண் ஆராய்ச்சி:** தமிழிசைச் சங்கத்தின் சார்பில் பண் ஆராய்ச்சி மாநாடு 28-12-59 இல் வித்துவான் பி. எஸ். வீருசாமிப் பிள்ளையவர்கள் தலைமையில் நடைபெற்றது. நடனமும், தேவார இசையரங்கும் நடைபெற்றன. பின்னர் கொல்லி, கொல்லிக் கௌவாணம், காந்தாரம், பியந்தைக் காந்தாரம் ஆகிய நான்கு பண்கள் பற்றி ஓதுவார்கள் தீர்மானம் கொண்டு வந்து பேசினர். கோவை நாதமுனிப் பண்டிதர், எஸ். ஆர். குப்புசாமி ஆகியோர் பாலையும் பண்ணும் என்பது பற்றிப் பேசினர். அனைத்திந்திய வானொலி நிலையத்தில் தேவாரப் பாடல்களை மிகுதியாகப் பாட ஓதுவார்களுக்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்னும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள் நன்றியுரை வழங்கினர். 'வாழ்க அந்தணர்' என்னும் வாழ்த்திசையோடு மாநாடு இனிது முடிந்தது.

# அமெரிக்கத் தலைவர் ஐசனோவர்

# இந்தியா வருகை

பண்டைய மூதுரை 'மன்னர்க்குத் தந்தேசமல்லாற் சிறப்பில்லை' என்பது. இஞ்ஞான்றை நிலைமை அங்ஙனமன்று. உலக முழுவதும் உயிருக்கு உடல்போன்று உறுப்பும் உறுப்பியுமாய் ஒற்றுமையுற்றுத் திகழ்கின்றது. ஆங்காங்குள்ள குடியாட்சித் தலைவர்களும், சிற்சில கோனாட்சி மன்னர்களும் எங்கணும் சென்று அவ்வந்நாட்டுத் தலைவர், முதலமைச்சர், பெருந்தலைவர், பெருமக்கள் அனைவர்களும் அகம்புறமொத்து ஒருமனப்பட்டு ஒருங்கியைந்து மிக்க உவகையுடன் வரவேற்கப்பட்டுச் சிறப்புறுகின்றனர்.

அம்முறையில் 19 நாட்களில் 22,370கல் சுற்றுச் செலவில் 11 நாடுகளைச் சுற்றிப்பார்த்துச் சொல்லொணு நல்லெண்ணத்தையும் தூயநட்புறவையும் அனைத்துலக அமைதியையும் தினைத்தனையும் வழுவாது நாளும் நாட்டற்கு நற்றுணையாக நம்மிந்திய நாட்டுக்குப் போந்தவர் ஐசனோவராவர். அவரை நல்வரவேற்க நம் குடியரசுத் தலைவரும் குணம்சார் முதலமைச்சரும் பிறரும் எழிலுறச்செய்த ஒப்பனையும் வரவேற்பு வனப்பும் புலவர்பெருமக்கள் கற்பனைக்காவியங்களில் புனைந்துரை வகையாற் புகலப்பட்ட அத்தனையும் நினைந்து நினைந்து மகிழக் கண்ணாரக் காணும்படி வெளியுறச் செய்தமைத்தமை மெய்ம்மையாக இந்திய நாகரிகத்தின் தொன்மைப் பண்பாட்டினையும், தூய உளப்பாங்கினையும், சோர்விலா ஆர்வப்பெருக்கினையும் ஓரிடத்து ஒருசேரக் காணும் வியப்பினவாயிருந்தன. விமான நிலையத்தினின்றும் இறங்குங்கால் ஐசனோவர் மலர்ந்த முகத்துடன் புன்முறுவல் பூப்பப் பொலிந்து விளங்கினர். இரண்டாயிரம் சான்றோருக்கு மேல் எதிர்நோக்கி நின்றனர். இருபத்தொரு பீரங்கி முழங்கிப் பெருமதிப்புணர்த்தின.

புதுதில்லியின்கண் திசம்பர் ஒன்பதாம் நாள் என்றுங் கண்டறியாதவகையாகப் பாரதத் தலைநகரில் பத்திலக்கத்துக்கு மேற்பட்ட மக்கள் வெள்ளம் குழுமி ஆர்வமிக்க கூட்டத்தினிடை அமெரிக்க மாந்தர் தலைவர் அமர்ந்திருக்க இந்தியமக்கட்டலைவர் இராசேந்திரப்பிரசாதும், முதலமைச்சர் பண்டித நேருவும் இருபுறமும் அமர்ந்திருக்கத் திறந்த தமியியங்கு வனப்பமை தேரின் மீது வரவேற்கப்பட்டனர். விமானநிலையத்திலிருந்து ராஷ்டிரபதி பவனத்திற்குச் சென்றனர். ஐசனோவர், பதினெட்டுக்கல்

நெடுவழி இருமருங்கிலும் எள்ளிட இடமின்றி மாந்தரனைவரும் வாழ்த்தி வணங்கிப் போற்றிப் புகழ்ந்து புகலவொண்ணுப் பேரின்பத்தில் திளைத்தனர். தலைநகர் ஐக்வயமாய்த் திகழ்ந்தது. ஐக் மெய்ம்மறந்து மக்களின் அன்பிலும் பரிவிலும் தோன்றிய இன்பப் பெருங்கடலின் மூழ்கிச் செய்தியாளர்களிடம் தம்மை மறந்து இத்துணைப் பெருங்கூட்டத்தை யாண்டும் கண்டறிந்திலேமெனப் பெருமகிழ்வுடன் கூறினர்.

பலவகையான அணிவகுப்புக்கள், வேடிக்கைக் காட்சிகள், மேளதாளங்கள், பண்ணிசை வண்ணங்கள் பலவும் இடமிடந்தோறும் இன்புற நிகழ்ந்தன. நிழலுருவப்படங்கள் எடுக்கப்பட்டவை பன்னூற்றுக் கணக்காகும்.

திசம்பர் பத்தாம்நாள் காலை 10-30 மணிக்கு இராஷ்டிரபதி பவனில் அமெரிக்கத் தலைவரைச் சந்தித்து முதலமைச்சர் நேரு தொண்ணூறு நிமிடங்கள் உலகநிலை குறித்து மனங்கலந்து உரையாடினர். முதலமைச்சர் நேரு தம்மில்லத்துச் சிறந்ததொரு விருந்து நடத்தினர். விருந்திற்குப் பின்னரும் உரையாடினர்.

இந்தியாவின் சிறப்பான இடங்களை ஐசனேவர் பார்வையிட்டார். பின்னர் 14-12-59 இல் புதுதில்லியிலிருந்து புறப்பட்டு ஈரான் சென்ருர். ஐசனேவர் வருகையால் இந்தியாவுக்கும் உலகிற்கும் நற்பயன் விளையுமாக.

## தமிழ்த் திருநாள்

[C. பத்மாவதி, எம். ஏ.]

‘சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனல்
உழந்தும் உழவே தலை’எனும் தமிழ்மறை
மொழியினைத் தமிழகம் வழிவழிப் போற்றும்
விழுமிய நாளே தமிழ்த்திரு நாளாம்.
மொழிமனம் செயல்முற்று நலமே செழிக்கப்
பழக்க வழக்கத் தல்லவை ஒழித்து
விழுமிய ஏற்றுநல் அன்புஅருள் போற்றும்
எழிலின்ப நாளே தமிழ்த்திரு நாளாம்.

# வாழ்விசைப்பா *

[தமிழாக்கம் : கு. பரமசிவன், எம். ஏ.]

வாழ்வுவெறும் கனவென்று புலம்பற் பாக்கள்
வகுத்தென்பால் சொல்லாதிர் ! சோம்பும் ஆன்மா
மாள்வடையும்; வெளித்தோற்றம் உண்மை யன்று;
மன்னுபொருள் வடிவெல்லாம் கண்ணில் தோன்ரு. (க)
வாழ்வுண்மை; வாழுதற்கே இந்த வாழ்வு;
மயானம்நம் வாழ்க்கையின் பயனும் அன்று.
“ பாழ்மண்ணில் பிறந்தாய்,மண் தனக்கே மீள்வாய் ”—
பண்டையுரை யீதுயிர்க்குப் பொருத்தம் ஆமோ? (உ)
விதித்தவழி, விதித்தபயன் கழித்தல் அன்று;
வருந்தலன்று; செயல்புரிதல் ஒன்றே யாகும்;
குதித்தோடும் நாளொன்றும் முன்னேற் றத்தைக்
கூட்டும்வகை செய்திடலே விதித்த தாகும். (ந)
கலைநெடிது; காலமது பறந்து போகும்.
கனத்தென்ன, துணிந்தென்ன, நமது நெஞ்சம்—
புலைநெஞ்சம் கணந்தோறும் அடிப்ப தெல்லாம்
புன்காடு செல்லும்படை முரசின் ஓசை. (ச)
வாய்த்த பெரும் உலகப்போர்க் களத்தும், இந்த
வாழ்வென்னும் இளைப்பாறும் வேளை யுள்ளும்,
மேய்த்தலுறும் மந்தைபோல் ஊமை யாக
மேவாதே ! பூசல்தனில் மறவ னாகு ! (ரு)
நன்மைபல வருமேனும் வருங்கா லத்தை
நம்பாதே ! இறந்ததெல்லாம் இறந்து போக !
உன்வாழ்வு நிகழ்காலம்; செயல்கள் செய்வாய் !
உள்ளுக்குள் நெஞ்சுண்டு; தலைமேல் ஈசன் ! (சு)
பெருந்தக்க வாழ்வும்நாம் நடாத்தல் கூடும்;
பெரியோர்கள் வாழ்வெல்லாம் இதனைக் காட்டும்.
பிரிந்திட்ட காலத்தும் நமக்குப் பின்னல் (எ)
பெருங்கால மணற்பரப்பில் சுவடு நிற்கும்.
பிறவியெனும் கடல் செலுத்திக், கலமு டைந்து,
பேதலித்துக் கரையேறும் ஒருவன், முன்னுள்
திறமாக நாம்விடுத்த சுவடு காண்பான் ;
தேறிடுவான்; முன்னேற ஊக்கங் கொள்வான். (அ)
எழுந்திடுவோம்; செயல்புரிவோம் ! எதையும் தாங்கும்
இதயமுண்டு; பயன்பற்றிக் கவலை யில்லை.
உழைத்திடவும் பொறுத்திடவும் கற்றுக் கொள்வோம் !
ஓயாமல் தொழில் புரிவோம் ! பெறுவோம் வெற்றி! (கூ)

---

* “ A Psalm of life ” : H. W. Longfellow.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) பண்டித நேருவின் சமயக் கருத்து

"மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டதோர் உயிராற்றலிடம் எனக்கு ஏதோ ஒரு நம்பிக்கை இருக்கிறது. ஆனால் சமயவாதிகளை மனமாற்ற மடையச் செய்வது போன்ற நிகழ்ச்சிகளால் நான் மனமாற்றம் அடைபவனல்ல. இப்போது உங்களிடையே நான் பேசுவது சமயக் கருத்துடன் அல்ல. ஒவ்வொரு சமயங்களின் சார்பிலும் வழிபாடுகள் செய்யப் பட்டதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் இங்ஙனம் பல திறப்பட்ட மனித சமயங்களில் நான் எதையும் சார்ந்தவனல்லன். பின்னர், என் உள்ளத்தைக் கவர்ந்ததுதான் என்னையெனின் காந்தியடிகளும் அவர் ஆற்றிய பணிகளுமேயாகும்" என்று இந்திய முதல் அமைச்சர் பண்டித நேரு அவர்கள், தில்லி பல்கலைக்கழகத்தைச் சார்ந்த இடத்தில் நிறுவப்பட்ட காந்தி பவனத்திற்கு அடிப்படைக் கல் நாட்டிய காலை குறிப்பிட்டுள்ளார்கள்.

**குறிப்பு:** பண்டித நேரு அவர்களின் இக் கருத்தினால் தனித்து நின்றியங்கும் ஓர் உயிராற்றல் உளது என்னுமோர் உண்மை புலனாவது ஈண்டு நோக்கற்பாலது.

## (உ) நாளிதழ் வெளியீட்டில் இந்தியாவுக்கு 3-ஆவது இடம்

ஒவ்வொரு நாட்டிலும் வெளியிடப்பெறும் நாளிதழ் வெளியீடுகளின் எண்ணிக்கை அடிப்படையில் இந்தியா உலகில் மூன்றாவது இடத்தைப் பெற்றிருக்கிறது என்று ஐ. நா. கல்வி, கலாசார அறிவியல் கழகத்தினர் வெளியிட்டுள்ள புத்தகக் குறிப்புக் கூறுகிறது.

[அமெரிக்காவில் 1820 இதழ்களும், மேற்கு செருமனியில் 481 இதழ்களும், இந்தியாவில் 476 இதழ்களும் வெளியிடப் பெறுகின்றன. அஃதாவது 146 நாடுகளில் அமெரிக்கா முதலிடத்தையும், மேற்கு செருமனி இரண்டாவது இடத்தையும், இந்தியா மூன்றாவது இடத்தையும் பெற்றிருக்கிறது.

**குறிப்பு:** நாளிதழ் வெளியீட்டில் இந்தியா பொதுவாக மூன்றாவது இடத்தைப் பெற்றிருப்பினும் தென்னகத்தைப் பற்றிய வரையில் நாளிதழ்கள் குறைவே. மக்களின் கல்வியறிவை அளவிட நாளிதழ்களின் எண்ணிக்கை நல்லதோர் அளவுகோலாகும்.

## (ங) வாழ்த்துகிறோம்—பாராட்டுகிறோம்

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் புதிய தலைவராகப் பன்மொழிப் புலவர், திரு. கா. அப்பாத்துரையவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்கள்

என்னும் செய்தி யறிந்து மகிழ்ச்சியடைகிறோம். திரு. அப்பாத்துரை அவர்கள் பல்லாற்றானும் அப் பதவிக்குத் தகுதியுடையவர். அவர்தம் தலைமையில் தமிழ் எழுத்தாளர் சங்கம் நற்றமிழ்ப்பணி புரியும் என நம்புகிறோம். அவருக்கு நமது வாழ்த்தினைத் தெரிவித்துக்கொள்வதோடு, இங்ஙனம் தக்கார் ஒருவரைத் தேர்ந்தெடுத்த தமிழ் எழுத்தாளர்களையும் பாராட்டுகிறோம்.

## திருப்பனந்தாள் காசிமடத்தாரின் திருமுறைக் கொடைப் பொருள்

நாடோறும் திருமுறை விண்ணப்பித்தற்கெனத் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் சிவத்திரு காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் அடிகள் அவர்களால் ஓதுவார்கள் அமர்த்தப்பட்டுத் தேவார வைப்பும் நிறுவப்பெற்றுள்ளது. அங்ஙனந் திருமுறை ஓதப்பெறும் திருவூர்களும், ஓதுக்கப்பட்டிருக்கும் வைப்பும் பற்றிய விவரம் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு திருமுறை நிதி | ரூ. | 4,00,000 |
| 2. | காஞ்சிபுரத்தில் திருக்கச்சியேகம்பன் உருத்திராக்கத் தேவார நிதி | ரூ. | 50,000 |
| 3. | திருவண்ணாமலையில் தேவார நிதி | ரூ. | 24,000 |
| 4. | தில்லையில் இராஜராஜ அபயகுலசேகர சோழன் நினைவுத் தேவாரவைப்பு நிதி | ரூ. | 16,000 |
| 5. | திருநாரையூரில் நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி | ரூ. | 35,000 |
| 6. | மதுரையில் தேவார நிதி | ரூ. | 50,000 |
| 7. | திருக்குற்றால நாதர் தேவார நிதி | ரூ. | 26,500 |
| 8. | கன்னியாகுமரி ஆச்சிராமம் வகையறு தலங்களில் அன்னம் பாலிப்பு திருமுறை வகையறு நிதி (சுசீந்திரத்தில்) | ரூ. | 2,50,000 |
| 9. | பாபநாசத்தில் அகத்தியர் தேவார நிதி | ரூ. | 25,000 |
| 10. | ஸ்ரீவைகுண்டத்தில் தேவாரபாராயணம் | | ... |
| 11. | இராமேசுவரத்தில் தேவார நிதி | ரூ. | 51,000 |
| 12. | திருக்கேதார யாத்திரை, திருச்சிராப்பள்ளியில் திருமுறை வகையறு நிதி | ரூ. | 1, 00,000 |

# மதிப்புரை

"வேலன் சிந்தனைப் பூங்கொத்து"

இதன் ஆசிரியர் : திரு. புலவர். வி. போ. பழனிவேலன், பி. ஓ. எல்., தலைமைத் தமிழாசிரியர், கழக உயர்நிலைப்பள்ளி, அரண்தாங்கி. வெளியீடு: தமிழ்ப் பாதுகாப்புக் கழகம், அரண்தாங்கி, விலை ஒரு வெள்ளி. இந்நூலின்கண் "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பதுமுதல் "தப்பாதே" என்பது ஈறாகப் பதினொன்கு தலைப்புக்கள் காணப்படுகின்றன. கற்பார் நாடிநலனுணர்ந்து வாழ்வதற்கு வேண்டிய இன்றியமையாப் பொருள் பலவும் நூலாசிரியரவர்களால் இதன்கண் நன்கு விளக்கப்பட்டுள்ளன. புகலிடம் நாடிவந்த ஆரியர் ஒவ்வாப் புனைவு பலகூட்டிப் புராணமென்னும் பெயரான் மக்களிடையே மயலூட்டித் தொன்மையை மறைப்பித்து மறக்கச் செய்தனர். அவ் வுண்மையை இவ்வாசிரியர் அகப்புறச்சான்றுகளான் விளக்கியுள்ளனர். தமிழர்தம் தனிப் பண்பாடும் ஒழுக்கமும் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

நம் முன்னோராகிய பழந்தமிழ்ச் சான்றோர் தெய்வத் திருவருளால் தம் நுண்ணுணர்வினூற் கண்டு வழிபட்டு அமைத்த திருக்கோவில், திருவுருவவழிபாடு, திருமணச் சடங்கு முதலியவற்றையும் ஆரியர்களால் வந்த வரவுகளே என ஆசிரியர் கருதும் கருத்து நம் முன்னோர்க்குப் பெருமை தருவதும் நாட்டு நல்வாழ்வுக்கு அரண் செய்வது மாகாதென்பதைச் சிந்தித்தல் வேண்டும்.

இவைகளை யமைத்துக்கொண்டு, எஞ்சியவற்றுள் கொள்ளத்தக்கவைகளைக் கைக்கொண்டு செந்தமிழ் அன்பர்கள் கற்றுப் பயன் எய்துவார்களாக.

"திருமாதேசுரர் வரலாறு என்னும் மாதேசுரன்மலை வழிநடைக் கும்மி"

ஆக்கியோர் ஆலாம்பாளையம் தமிழ்த்தொண்டன் ஆ. அரங்கநாதன் அவர்கள். கிடைக்குமிடம் 'சதானந்த விலாஸ், சவுளி வியாபாரம் சேலம்-1. விலை காசு 37. ஆசிரியரவர்கள் தெய்வப்பெற்றியாளர், அருள்நலங்கனிந்த கும்மி, அனைவரும் ஓதி வழிபடுதற்கேற்ற அருமை வாய்ந்தது.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



ஆராய்ச்சிப் பேரறிஞர்

திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார்

தோற்றம்: 1892 மறைவு: 1960





| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, தை | பரல் |
| --- | --- | --- |
| ௩௪ | பிப்ரவரி, 1960 | ௬ |


## திரு. தி. வை. சதாசிவபண்டாரத்தாரவர்கள்

# கடவுள் திருவடி எய்துதல்

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராகிய ஆராய்ச்சிப் பேரறிஞர் பண்டாரத்தாரவர்கள் 2-1-1960இல் கடவுட்கழலிணை எய்தினர். அக்குறிப்புச் சென்ற 'செல்வி'யில் வெளியிடப்பட்டுள்ளது. அவர்தம் விரிவான வரலாறு இச்செல்வியின் (உ௭௫) பக்கத்தில் காணலாம். இவர்தம் இழப்பு ஈடுசெய்யவொண்ணாப் பேரிழப்பே என்பதில் எவர்க்கும் யாண்டும் எட்டுணையும் ஐயமில் மெய்ம்மையேயாம். யாங்களும் நனிமிக வருந்துகின்றோம். அவர்தம் பிரிவால் ஆற்றொணா வருத்தங்கொள்ளும் பெருந்தகையின் குடும்பத்தார்க்கு எங்கள் பரிவும் ஆறுதலுரையும் உரியவாகுக. நம் ஆராய்ச்சிப் பேராசிரியப் பேரறிஞரவர்கள் தம் பெருந் தமிழ்ப் புலமையினையும், கல்வெட்டாராய்ச்சித் துறையின் நுண்திறலினையும் ஒவா உழைப்பினாலும் பெரும் புலவர்களின் கூட்டுறவாலும் தாமே நிரப்பிக்கொண்டமை நனி மிகப் பாராட்டற்குரியதும் ஏனையார் கைக்கொண்டொழுகற்காம் வழிகாட்டியாய் இலங்கற்குரியதுமாகும். அம்மட்டுமன்று; 'செந்தமிழ், தமிழ்ப்பொழில்' போன்ற அரிய திங்கள் வெளியீடுகளில் இடையறாது எழுதி வெளிப்படுத்திய ஏற்றஞ்சால் திட்ப நுட்பச் செறிவுடைய ஆராய்ச்சிக் கட்டுரைகளால் அவர்கள் நிலையுயர்ந்தன. உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழ் ஆசிரியராக விளங்கினர். "முதற் குலோத்துங்கசோழன் வரலாறு, பாண்டியர் வரலாறு" முதலியவைகளை நடுநிலைவழாது தக்க அகப்புறச் சான்றுகளுடன் வரைந்து அச்சிட்டுப் பன்முறை வெளிப்படுத்தினர். 'அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில்' ஆராய்ச்சித் துறை

யில் அரும்பேராராய்ச்சிப் பணியும் புரிந்தனர். 'பிற்காலச் சோழர் வரலாறு' ஒன்றிரண்டு பகுதிகளை ஒண்மையுடன் வெளிப்படுத் துலகுக் களித்தனர்.

அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆய்வுத்திணைக்கள வாயிலாக வெளிப்போந்த 'தமிழிலக்கிய வரலாறு' மிகமிக நுண்மை வாய்ந்த தொன்றாகும். கி. பி. 300—600 காலங்கள் தமிழிலக்கியத்தின் இருண்டகாலப் பகுதியென்று எல்லாராலும் ஒதுக்கப்பட்டதாகும். அக்காலத்தினை நம் பேராசிரியரவர்கள் நுண்ணிதின் ஆய்ந்து வெளிப்பட வரைந்தமை தமிழுலகுக்கொரு புத்தமிழ்தப் பெருவிருந்தாகும் அந்நூல் அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடாக இருமுறை வெளிவந்துள்ளது. "பிற்காலச் சோழர் வரலாறு" அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆய்வுத் துறையில் முடியுநிலையில் எழுதி யமைத்துள்ளார்கள். முற்றுப் பெறுத நிலையில் சோழர் அரசியலிருக்கின்றது. நம் பேராசிரியரவர்களின் அருந்தொண்டினைப் பெருவிருப்புடன் பாராட்டிக் கழகங்கள், மன்றங்கள் வழங்கியுள்ள பட்டங்களும், பொன்னுடை முதலிய பரிசுகளும் பலவாம். தொன்மைவாய்ந்த நம் தென்றமிழ் நாட்டின் தனிப்பெரும் வரலாறுகள் பெரும்பாலும் கல்வெட்டுத் துணைகொண்டே அமைக்கவேண்டியனவாயிருக்கின்றன. சங்கத்தொகைநூல்களிலும், பிற்கால இலக்கியங்களிலும் வரலாற்றுக்கு வேண்டிய சிற்சில குறிப்புக்களே காணப்படும். அவைகளும் கல்வெட்டாராய்ச்சியின் துணைகொண்டே துணிவுபெறத்தக்கனவாயுள்ளன.

இத்தகைய இன்றியமையாது வேண்டத்தக்க சிறந்த ஆராய்ச்சித் துறைக்குச் "சென்னைப் பல்கலைக் கழகமும், அண்ணாமலைப் பல்கலைக் கழகமும்" தனித்தொகுதி யமைத்து மாணவர்களுக்குப் பாடம் பயிற்றிப் பட்டமும் வழங்குதல் வேண்டும். தமிழ் மாநில அரசியலாரும படி எடுக்கவேண்டிய கல்வெட்டுக்களைத் தக்கார் பலரைக்கொண்டு படியெடுப்பித்தும், முன்னமே படி எடுத்து வெளிப்படுத்தாமலிருப்பனவற்றை வெளிப்படுத்தியும, வெளிப்படுத்திய நூல்கள மீட்டும் அச்சிடவேண்டியதிருந்தால் அச்சிடுவித்தும், தமிழக வரலாற்றினை ஓம்புதல் வேண்டும். தமிழகத்துத் திருக்கோவில்களில் கல்லெழுத்தில்லாத பழங் கோவில்களே கிடையா. அவைகளே வரலாற்றுக் கருவூலங்களாகும். அவைகளைப் படியெடுத்து அச்சிட்டுவெளியிட வேண்டுவது மிகமிக இன்றியமையாததாகும். அதற்குத் துணைபுரிந்தால் நாம் நம் பேராசிரியர் பண்டாரத்தாரவர்களுக்குச் செய்யவேண்டிய நன்றியுங் கடப்பாடும் புரிந்தவர்களாவோம். அவர்தம் இன்னுயிர் இறை நிறைவில் என்றும் இன்புறுமாக!

# * "பெண்ணினத்திற்கொரு நல்லுரை"

காணுவுலகவாசியெனக் கட்டுரை வரைய விருப்புற்று வரும் குழுவிலே, திருவரங்க நீலாம்பிகையென நம் பூவுலகின்கண் வாழ்ந்து உயிர்நீத்த பெண்மகள், முன் என் தம்பி, திரு இரா. ந. கு. வழி. எம்முலகுவாழ் ஆவிகள் இயக்குநரெனப் பெயரிட்டு வருபவர்வழி, முன் "பெண்ணின் பெருமை" யென்ற தலைப்பிட்டு வரைந்த கட்டுரையில், பெண்ணிடம் காணுங் குறைகளை அடுத்து வெளியிட விரும்புவேனென்றுரைத் ததைச் செந்தமிழ்ச் செல்வி ஆசிரியரவர்களின் வேண்டுகோளுக் கிணங்கி, வரையத் திருவினை வேண்டி என்னியக்குநர் வழி வரை வதே இக்கட்டுரை.

பெண்ணின் பெருமை யென்று வரைந்த பெண்ணே, பெண்ணின் சிறுமை யென்ற தலைப்பிலல்லவா கட்டுரை வரைதல்திறன். அவ்வாறின்றிப் பெண்ணினத்திற்கொரு நல்லுரை யெனத் தலைப்பிட்டு வரைதலென்பது முறையோவென வினவும் வினவு மெழுதல் இயற்கையே. பெண்ணின் பெருமையை நிலை நிறுத்தி என்றுமே நிலைபெறு மொன்றாய் இயங்கவைத்தல் பெண்ணிற்குமட்டுமன்று. ஆடவற்குமுண்டென்று முதலிலே கூறினல், என் தலைப்பிற்கோர் எதிருரை எழாதென எண்ணு கின்றேன். பெண் ஒருத்தி எம்முறையில் வாழ்ந்தால் அவள் தன் பெருமையை நிலைபெறச் செய்யத் தகுதியுடையவளாய் இருக்கின்றுளென்பதை முதலிலறிதல் நன்றெனப் பெண்ணி னத்தைப் பெருவிருப்புடன் வினவுகின்றேன். பெண்ணொருத்தி முதலில் தன் குழவிப் பருவங் கடந்ததும், பெண்மைத் தன்மை எய்துகின்றுள். பெண்மைத் தன்மையென்பது பூப் பெய்தலென்பதே. பெண்ணொருத்தி பூப்பெய்தல் அடையு முன்னரே கல்வியறிவு அடையவேண்டுவது முதன்மை. அவ் வாறு அவள் கல்வியறிவு அடையுந் தருணத்து அவள்தன் பெற் றோர்கள் அவளை நல்வழியிற் கொண்டு செல்லமுயலுதல் நன்று. ஆடவர் அவர்தம் வினையின் பொருட்டுப் பொருளீட்டப் போவதும் அதற்குறு வழிதுறை ஆய்தலுக்குமே அவர்க்குப் பொழுதிருக்குமே தவிர, பிறவினைகளை - குடும்பப் பொறுப்புக் களைத் தாங்கி நடத்தி, அவரை ஊக்குவித் தவர்தம் வினைக் கனுப்புதல் பெண்ணேயென நீ புரிந்து ஒழுகினல் எவ்வாறு உன் வாழ்வு மலருமென்பதை நீ யறியாயோ? அவ்வாறிருக்க, அந்நல்வழி தவிர்த்துத் தன் கணவன் ஈட்டும் பொருட்களைப்

---

* நெல்லை இயக்குநர்வழி வரைந்தனுப்பிய கட்டுரை.

பேண வகையறியாது, பொருளைப் பாழ்படுத்தி, அவரைக் கடிந்து, தாம் கொணரும் பொருளைக் கொண்டு எவ்வாறு குடும்பம் நடத்துதலியலும்? என் பெற்றோர் வீட்டில் சிந்திச் சிதறும் பொருட்களுக்கு உமது வருமானம் எம்மட்டு? என் றிடித்துரைக்கும் ஏந்திழைகளுமில்லையென உரைக்கலாமோ? இருக்கின்றனர்.

இவ்வாறு அவர்தம் கணவரை மதியாது தான் பிறந்த வீட்டுப் பெருமையையே எதற்கெடுப்பினும் சான்று காட்டிக் கணவன் மனம் வருந்தச் செய்து, கூறுரைக்கும் நம் இனமாம் பெண்ணினமும் நிறைந்திருக்கின்ற தென்பதைப் பெண்ணினமே! நீ மறுக்க வியலுமோ, இயலாது. அத்தகைய முறையில் நீ ஒழுகுவது பெருந்தவறு என்று, நீ உன் பெற்றோரினில்லம் விட்டு, மணவினை நிகழ்ந்து, மணமகன் கைப் பிடிக்கின்றனையோ, அன்றே நீ அவனுடைமை; அவனே உனக்கு உற்றான், உறவினன் என்று கொண்டொழுகல் நன்று. அவனுக்கு வரும் குறை உனக்கு வருவது. அவனுக்கு வரும் நிறைவு உனக்கு உரித்து என்று நீ முதலில் அறிதல் நன்று. அவன் நலனே உன் நலன். அவனை ஓர் அரசனென நினைந்து நீ ஓர் அமைச்சனென வழிவகுத்து, உன் இல்லறத்தை வள முறச் செய்தால் அதைவிடப் பெண்ணினத்தின் பெருமைக்குச் சான்றேது? சாந்தம் என்னும் கருவியை நீ கைக்கொண்டு உன் இல்லறம் என்ற பொறியை நீ நடத்தினால் நல்வாழ்வு நாட்டோர் வியக்க, வாழலாமென்பதை நீ அறிய இயலுமே. என்றுமே, ஒருமுறைதவிர, ஒரு பெண் வேறு எவரையும் எம்முறையினும் அழைக்கலாம். அண்ணன், தம்பி. அத்தான், மாமா, தாத்தா, கொழுந்தர் (அத்தான்-தன்கணவனின் மூத்தவர்); (கொழுந்தர்-தன் கணவனின் இளையவர்) என்று பிற ஆடவரை அழைக்க லாம். கணவன் என்று மாற்றாெருவனை அழைக்கத் துணிவாளோ, நந்தமிழ்நாட்டு நங்கை. பெண்ணே! நீ இதைக் கருத்துட்கொண்டால், உன் கணவனின் தன்மையென்ன வென்பதை அறியலாமன்றோ? இதனையே சிலப்பதிகாரம் மதுரைக் காண்டம், வழக்குரைகாதையில் கற்பிற்சிறந்த கண்ணகியினுரையைச் செவியுற்ற தென்னவனின் மனைவி கோப் பெருந்தேவியின் உள்ளுணர்வை வெளிக்கொணர்ந்திருக்கும், இளங்கோவடிகளின் இன்மொழியாம்,

"யானோ அரசன் யானே கள்வன்
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் ஆயு ளென
மன்னவன் மயங்கி வீழ்ந்தனனே தென்னவன்

கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கிக்
கணவனை இழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்று
இணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி."

என்பதைப் பெண்ணே, நீ புரிந்தால் கற்புடைமகளிர்க்குக் கணவனே கண்கண்ட தெய்வமென்பது தெற்றெனத் தெரியு மன்றோ? மேலும் சிலப்பதிகாரம் புகார்க்காண்டம், கனாத்திற முரைத்த காதையில், கற்பிற்சிறந்த கண்ணகிக்கு, அவள்தன் தோழியாகிய தேவந்தி என்பாள் உரைத்த உரையும் அதற்குக் கண்ணகியின் மறுமொழியும் தருகின்றேன்.

"பொற்றொடீஇ
கைத்தாயு மல்லை கணவற் கொருநோன்பு
பொய்த்தாய் பழம்பிறப்பிற் போய்க்கெடுக வுய்த்துக்
கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றில்
மடலவிழ் நெய்தலங் கானல் தடமுள
சோமகுண்டஞ் சூரியகுண் டந்துறை மூழ்கிக்
காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொருநாள்
ஆடுது மென்ற அணி யிழைக்கவ் வாயிழையாள்
பீடன் றென விருந்த பின்னரே."

(இ - ள்.) "பொன்னாலாய வளையணிந்த வளைக்கையளே! (கண்ணகி) உன் கணவனால் நீ வெறுக்கப்படவுமில்லை. நீயோ முற்பிறப்பில் உன் கணவன் பொருட்டுக் காக்கவேண்டுமொரு நோன்பினை விடுத்தாய். அதன்பயனே, உனக்கு இவ்வாறு கணவனைப் பரத்தையொருத்திக்குப் பணயம் வைக்கும் நிலை வந்தது. ஆகையால் கண்ணகி! காவிரி சங்கமத்தருகிருக்கும், நெய்தனிலத்துக் கானலிடத்தே இருக்கும் சோமகுண்டம், சூரியகுண்டமென்ற நீர்ச்சுனைகளில் நீராடி, காமவேள் கோவிலை வணங்கினால், மகளிர் இவ்வுலகத்திலே அவர்தம் கணவரோடிணைந்து, நகமுஞ்சதையும்போல் நீங்காதிருந் தின்புறுவர்; மேலும் மறுமையிலும் தம் கணவருடன் பிரியாதிருந் தின்புறுவர். நாமும் ஒருநாள் அக்குண்டத்திற்போய் நீராடி மலர்க்கணைவேளை வணங்கினால் நலம் பெறலாம்", என்றாள். கற்பிற் சிறந்த கண்ணகியின் பதிலை, பெண்ணினமே! நீ புரிந்தால் உன் கணவனின் தன்மையை அறிவாய். "தேவந்தி, அங்ஙனம் துறை மூழ்கித் தெய்வந்தொழல் எங்கட்கு இயல்பன்று. கணவனே கற்புடை மகளிருக்குக் கடவுள்என அறி" என்றாள்.

பெண்ணே! கற்பிற் சிறந்த கண்ணகியின் மறுமொழியை நீ கருத்துட்கொண்டே வாழ்தல் சிறந்ததன்றோ! அவ்வாறில்லாது

நின் கணவனை மதித்தொழுகாது நீ வாழ்ந்தால் உன்னை ஊரார் ஒப்புவரோ ! சிந்தி ! அடங்காப்பிடாரியெனப் பெயரிட்டு, உன்னை உன்னினமும் உடனியைந்து நீ செல்லுங்கால் உன்னையே பற்றி உரையாடுவதும், உற்றுநோக்குவதும் உணர்ந்தால் உன்குறையை நீ அறியலாமல்லவா ? உன்னுடன் அவ்விழுக்கு நின்றுவிடு கின்றதா ? உன் போன்ற பெண்மகளிருக்குத் தனியொரு விரு தல்லவா கிடைக்கின்றது. "நூலைப்போல் சேலை; தாயைப்போல் பிள்ளை", பென ஊரார் உரைக்கத் தயங்குவரோ? நீயே சிந்தித் தறி. உன் பழக்கவழக்கங்களைப்பின்பற்றித்தானே உன் சந்ததியும் செயலாற்றும். இதை நீ மனத்துட்கொண்டால், உன் கணவனை நீ மதியாதொழுகுதல் தீதெனக்காணலாமல்லவா? உன் கணவனை நீ மதித்து நடந்தாலே ஊராரும் போற்றுவர். உன் இனமும் போற்றும்.

பெண்ணே ! உன் இல்லறம், அன்பும் அறமும் உடையதாக விளங்கினுல் அந்த வாழ்க்கையின் பண்பும் பயனும் நல்லறமாகு மென அறிந்தும், தன் கணவனையும், தன் இனத்தையும் நல்லறத் திலே நடக்கச் செய்து, தானும் அறநெறி தவறாது வாழ்கின்ற இல்வாழ்வாம் நல்வாழ்வே தவம் செய்வார் நிலையைவிடப் பெரிய தொன்றாயமையுமெனக் கண்டு அதன்படி நீ நடந்தும், இல் வாழ்க்கைக் கேற்ற மாண்புடையவளாகி, தன் கணவனின் வருவாய் தெரிந்து, அதற்குத் தகுந்த முறையில் வாழ்க்கையை வழிவகுத்து நடத்துகின்ற நங்கையே இல்வாழ்வென்பதற் கேற்ற துணையாவா ளென்பதை யறிந்து அதன்படி ஒழுகியும், இல்வாழ்க்கைக்கேற்ற துணைவி நானே, நற்பண்புடையவள் நானே, என் இல்வாழ்க்கையை என் கணவனுடன் கருத் தொருமித்து, வேறு தெய்வம் தொழாது, கற்புடைமகளிருக் குத் தன் கணவனே தெய்வம் என்ற உண்மை நாடிய வள்ளுவ ருரைத்த மொழிக்கோ ரிலக்கியமாய், வாழ்ந்து காட்டியும்,

"பெற்றான் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு."

என்ற மாதானுபங்கியின் மணிமொழியைப் பின்பற்றி என் கணவனைப் போற்றிக் கடமை செய்யத் தயங்கேன், என் றியம்பி நடந்து காட்டியும் வையத்து நீ வாழ்ந்தால் உன் சிறுமை யொழிந்து பெருமைக்கோ ரெடுத்துக் காட்டாய், உரைகல்லாய், "நீ வாழவே விரும்புகின்றேன்," வாழ்வாய். மேலும்,

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

என்ற செந்நாப்போதாரின் செம்மொழியை நீ புரிந்து அதன்படி நீ ஒழுகுதல் நன்றெனை மீண்டும் வேண்டுகின்றேன். பொருளும் தருகின்றேன். பெண்மைக்கே உரித்தான உறு பொருளாம் கற்பைக் காத்து, தன் கணவனையும் போற்றி, தகுமுறையிற் பேணி, பெண்ணினத்திற்கே இம்மகள் ஓர் எடுத்துக்காட்டு என்ற பெருமை நிறைந்த புகழைக் காப்பாற்றி என்றுமே மேற்குறித்த நிலையில் நின்றொழுகி, உறுதி குலையாது, உள்ளத் தென்றுமே தன் கணவனைக் கடவுளென நினைந்து வாழ்கின்ற வளே பெண் என்பதே.

என் இனமே! எனது உரையை நீ நன்கு ஆராய்ந்து அதன் வழி நடக்கத் துணைபுரியத் திருவருளை வணங்கி, இயக்குநர் வழி வரைந்த என் சிற்றுரையை முடித்து விடைபெறுகின்றேன். விருப்பிருப்பின் தொடருவேனென்ற உறுதியுமளித்தே மறை கின்றேன், வணக்கம். காலம் வரையறுக்கப்பட்டுவிட்டது.

திருவரங்க நீலாம்பிகை,
காணுவுலகவாசி.
(திருவரங்கம்பிள்ளை இல்லக்கிழத்தி)

ஆங்கிலநாள்
1-1-60

# *பொங்கல் வாழ்த்து

தொல்லுலகில் தென்பாண்டி நாடதிலே, தென்னவன் கோயில் கொண்ட தமிழகத் திருநாளாம், தமிழனின் திரு நாளாம், பொங்கல் திருநாளாம், தமிழன்னை தன வளத்தை வாரியிறைத்து வையத்துப் பொலிவுகொண்டு மக்கள் தம் மனத் திலே மறுமலர்ச்சி ஊட்டுகின்ற உறுநாளாம் தைத்திருநாளில், தமிழரின் தன் குறைகள் நீக்க வரும் நிறை நாளாம் திருநாளில், உழவரின் உழைப்பின் பயனைப் பலரறியப் பயன்படுத்தும் பெரு நாளாம் இந்நாளில், கன்னியர் தம் கவலைகள் போக்குதற்குரிய வழிதுறைகள் வகுப்பதற்கென வந்ததோர் மணநாளாம் இந் நாளில், தைபிறந்தால் வழிபிறக்குமென மாதர் மனத்தொரு மகிழ்வெய்துவிக்கும் மணநாளாம இந்நாளில், தொன்மை கொண்ட திருநாளாம் இந்நாளில், எவருள்ளும் எக்களிப்பு ஏறு கின்ற நன்னாளாம் இந்நாளில், பொங்குமிதயத்துப் பொங்கி வரும் களிப்புடைய களிநாளாம் இந்நாளில், அலகுடை நீழலர் நிறைநாளாம் இத்திருநாளில், கன்னியவள் கைப்பிடித்த காளை யவன் இல்லமதில் ஏற்றமுடன் பொங்கல் வைக்கப் புத்தாடை

* நெல்லை இயக்குநர்வழி பொங்கல் விழாவன்று வந்தது.

சலசலக்க, கூந்தலது பூங்குழாத்தால் பொலிவு பெற, மஞ்சளது தான் துலங்கும் மதியன்ன முகத்தாளாய்க் குரவையிட்டுக் களி யெய்திக் கருத்தொக்கும் காளையவன் நிலை கலங்கும் களிநாளாம் இந்நாளில், பொங்கலோ பொங்கலெனப் போற்று மிந்நாளில், பொங்கிற்றூ உம்மில்லில்! பொங்கிற்றூ உம்மில்லில்! எனத் தமிழர் தம இனமுறையாற் குலாவுதலும் கூடியதொரு திருநாளா மித் திருநாளில், தைத்திருநாளில், எண்டிசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கின் திருநாளாம் இந்நாளில், ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதுமெனப் புகலுமித் தைத் திருநாளில், குவலயமே கூடிக் களிபுரியும் கருநாளாம் பெருநாளில் முதல் நாளில், சென்னையம்பதியுறை திருநெல்லைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகவமைச்சராம், திறன் கொண்ட திருவரங்கத்தின்ளைஞரே! திருமகன் சுப்பையா பிள்ளையே!

நும்தம் இல்லிலே பொங்குக பால்! பொங்குக பால்! பொங்குக பொங்கல்! போற்றுது மிறையினை என மனமொரு மித்து இல்லாளும், இல்லத்துக் கிழவோனும் இயைந்து, புத் தாடை சலசலக்கப் பெண்ணரசி பொங்கலிட, ஆணழகன் தானுமருகிருந்து கண்டு மனங்களித்து, எந்நாளும் இத்திருநாள் போல் இனிது வாழ்ந்து, இல்லறத்தை நல்லறமா யியக்கி வைக்க, கதிரேசன், கருத்திற்கெளியன், காணுவுலகைவாசி ஈசனே! எந்தாய் எந்தை பெருமானே! நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை ஆண்டானே! செந்தாமரைக் காடனைய மேனித் தனிச்சுடரே! அருளளியெனப் போற்றுகின்றூம்.

விகாரி, }
தைத்திங்கள், க }

மு. கதிரேசன்,
காணுவுலகவாசி, நெல்லை.

## இரங்கற் கூட்டம்

மாண்புறு புலவர்களான நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், ஆராய்ச்சிப்பேராறிஞர் தி. வை. சதாசிவ பண்டாரத்தார் ஆகியோரின் மறைவு குறித்து ஓர் இரங்கற் கூட்டம் 17-2-60 இல், இராசாசி மண்டபத்தில் மாலை 6 மணியளவில், அமைச்சர் திரு. சி. சுப்பிர மணியம் அவர்கள் தலைமையில் நடைபெறும். இராசா சர். முத்தை யாச்செட்டியார் அவர்களும் மற்றும் பல பெருமக்களும், தமிழறி ஞர்களும் கலந்துகொண்டு உரை வழங்குவர்.

தென்னிந்திய தமிழ்ச் சங்கம், சென்னை.

# * தைப் பொங்கல் வாழ்த்து

தேன் பழச்சோலை பயிலுஞ் சிறுகுயிலே!

தோலினால் தோற்றுவித்ததோர் திருக்கூட்டத் திருநாளாம், ஆறறிவு கொண்டுவந்த அரிதெனவே இப்பிறவியென வுரைக்கும் உறுஇனத்தின் பெருநாளாம் இத் திருநாளில், கோனுனின் திருநாளாம், குவலயத்துத் தமிழகத்துப் பெருநாளாம், சூழ்சுடர் ஞாயிற்றின் திருநாளாம், கோதைதம் மனம் மகிழும் மணநாளாம் இத் திருநாளில், தேவன்தன் திருநாளில்,

கீதமினிய குயிலே!

நீள்மணிமாடம் நிலாவும் சென்னையம்பதியுறை சிலன், திருமகள் மங்கைதன் மன்னன், திருவரங்கத்தினோன், திருச்செந்திலம்பதியுறை திருக்குமரவேளன்பன், சுந்தரத்தம்மையரீன்ற திருக்குமரன் சுப்பையாவென அழைக்கும் அறிவுடையன், பணிவுடையன், இன்சொலன், நன்றியுடையன், தன்னில்லில் என்மகள் மங்கை தன்னுடனியைந்து தமிழர்தம் திருநாளில், தைப்பொங்கற் பெருநாளில் விகாரி தை முதல் நாளில், பால் பொங்கப் பணியாற்றும் பொழுதினிலே,

கொந்தணவும் பொழிற்சோலைக் கூங்குயிலே!

பொங்குக பால்! பொங்குக பொங்கல்! பொங்குக புதுவாழ்வென அன்பன் மறைமலை, அன்பன் அமுதளித்தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன் நன்பொன் மணிச்சுவடொத்த நற்பரிமேல் வருவான் தாள் வணங்கி, அம்மை அம்பலவாணனை அகத்திருத்தி உரைத்தனனென, சென்னை சென்று சீரியவாயாற் சிறக்கக் கூவாய்!

நீல வுருவிற் குயிலே!

உன்னை உகப்பன், உன் துணைத் தோழனுமாவன்.

விகாரி ஆண்டு தை-க }
14—1—'60 }

மறைமலை,
காணுவுலகவாசி, நெல்லை.

குறிப்பு: தோலினால் தோற்றுவித்ததோர் திருக்கூட்டத் திருநாள், கோனுனின் திருநாள் என்ற தொடர்கட்கு விளக்கங்கேட்டெழுதியதற்கு வரப்பெற்ற அருட்டிரு அடிகளாரது விளக்கம் அடுத்த இதழில் வெளிவரும்.

---

* நெல்லை இயக்குநர்வழி தைப்பொங்கலன்று வந்தது.

# * பாரதத்தின் பண்பாட்டு வளர்ச்சிக்குத்

# தென்னாடு தந்திருக்கும் உதவிப்பங்கு

[ கோவைகிழார் ]

இந்தத்தலைப்பில் பாரதவானொலி நிலையத்தார் ஏழு சொற்பொழிவுகளை வகுத்து நாளது தேதி முதல் இரண்டு திங்கள்வரை ஏழு அறிஞர்களைக்கொண்டு நடத்துவதாக ஏற்பாடு செய்து விளம்பரப்படுத்தி உள்ளார்கள். இந்த ஏற்பாட்டின் கருத்து மிக உயரியதாகும். சென்னாட்டிற்குத் தகுந்த இடத்தைப்பாரத வானொலி கொடுக்கவில்லை என்பது பொது மக்கள் கருத்து. அந்தக் குறைவை நிறைவுபடுத்த இந்த ஏற்பாடு செய்திருக்கக்கூடும். ஆனால் அக்குறைவு நிவர்த்தி ஆகுமா என்பது தென்னாட்டார் நெஞ்சில் தோன்றும் கேள்வி. தென்னாடு செய்திருக்கும் உதவி தென்னாட்டாருக்கு அன்றோ தெரிந்திருக்கும்? அந்த முறையில் எது வரையில் வானொலித்திட்டம் நிறைவேற்றியிருக்கிறது என்று ஒரு சிறிது ஆராய்வோம்.

தென்னாட்டில் நான்கு மொழிகள் சிறப்பாக இருந்த போதிலும் அவைகளில் தமிழ்மொழிதான் மிகச்சிறந்த பண்பாடு உற்றிருக்கிறது என்பது உலகமறிந்த செய்தி. மிகமிகப் பண்டைய மொழியாதலால் அது செய்திருக்கும் உதவி அளத்தற்கியலாது. அப்படி இருக்க ஏழுசொற்பொழிவாளர்களில் குறைந்தது நான்கு சொற்பொழிவாளர்கள் தமிழர்களாக இருத்தல்வேண்டும். மற்ற மொழிகளுக்குப் பங்குவீதமாக ஒவ்வொன்று கொடுத்திருக்கலாம் ஆனால் வானொலி நிலையத்தார் வகுத்துள்ள திட்டம் எப்படி என்று காணலாம்.

1. எண்ணமும் தத்துவமும்: Thought and philosophy—Dr. T. M. P. மகாதேவன்.
2. கலையும் சிற்பமும்: Art and Architecture—Dr. C. L. Fabri.
3. இலக்கியம்: Literature—M. சத்திய நாராயண.
4. இன்னிசையும் ஆடலும்—திருவாட்டி. ருக்மணி அருண்டேல்.
5. சமூக வழக்கங்களும் நிலையங்களும்: Social Customs and Institutions—K. K. பிள்ளை.

---

* பாரத வானொலிப் பேச்சு.

6. தென்னாட்டுப் புராணிகம்: Mythology of the south—Dr. R. N. தண்டேகர்.
7. அரசியல் நோக்கமும் நிலையங்களும்: Politic concepts and Institution—K. M. பணிக்கர்.

1. இவர்களில் டி. எம். பி. மகாதேவன்—சென்னை அந்தணர், தத்துவ ஆராய்ச்சியாளர், அத்துவைதி. 2. C. L. Fabri—இவர் வெளி நாட்டார், தென்னாட்டாருக்கு அறிமுகம் ஆகாதவர். 3. சத்திய நாராயண—ஆந்திரர், 4. ருக்குமணி அருண்டேல்—தமிழ் அந்தணர், ஓர் ஆங்கிலரை மணந்தவர். கே. கே. பிள்ளை. திருவாங்கூர்த் தமிழர். 6. தண்டேகர்—மராட்டியர். 7. பணிக்கர்—மலையாளர்.

இவர்களில் தென்னாட்டு எண்ணப் போக்கையோ தத்துவ வரலாற்றையோ விளக்க ஒரு தமிழர் தென்னாட்டிற்குச் சிறப்பாக உள்ள சைவ, வைணவ சித்தாந்தத்தை அறிந்த அறிஞர், ஒருவரும் நிலையத்தார்க்குக் கிடைக்கவில்லை எனத் தோன்றுகிறது. தென்னாட்டுச் சிறப்பத்தைச் சொல்ல வெளி நாட்டார் தான் வேண்டுமோ? இலக்கியத்திற்கு ஓர் ஆந்திரர்தான் பிரதிநிதி போலும்! இன்னிசையைப் பற்றியும் ஆடலைப் பற்றியும் குறை சொல்வதற்கில்லை. சமூக வழக்கங்களைப் பற்றியும், நிலையங்களைப் பற்றியும் தமிழ் நாட்டில் பிறந்த மக்களில் ஒருவரும் கிடைக்கவில்லை போலும்! பௌராணிகத்திற்கு ஒரு மராட்டியர்தான் வேண்டும்போலும்! தமிழில் புராணங்களே இல்லை போலும்! அரசியலுக்குப் பணிக்கர் இருக்கலாம். தமிழரசு இன்னமும் வெற்றியடைய வில்லை அல்லவா?

தென்னாட்டில் உயரிய எண்ணப் போக்கு சைவ வைணவ சித்தாந்தங்களில் தான் உண்டு. சிறப்பாகத் தமிழ் மொழியில் தான் உண்டு. இவற்றை வடமொழியில் காணமுடியாது. ஆனால் தெரிந்தெடுத்த அறிஞரோ வடமொழி அறிஞர். அத்துவைதத்தில் பேருரையாளர். அவரைத் தெரிந்தெடுத்ததில் சைவ வைணவ சித்தாந்தங்களை நன்குணர்ந்த தமிழர் ஒருவர் இல்லாத குறை என்கிறார்களோ தெரியவில்லை. தென்னாட்டு வீரசைவத்தைக் கூறக்கூடிய தமிழரும் கிடைக்கவில்லை போலும்!

கலையும் சிற்பமும் தென்னாட்டைப்போல வடநாட்டில் கிடையா. தென்னாட்டுக் கோயில்களில் உள்ள சிற்பப் பெருமையை உலகிலேயே வேறு எந்த நாட்டிலும் காணல் அரிது. அதனை இயற்றியவர் - பெருக்கினவர் ஆதரித்தவர் எல்லாரும் தமிழர்களே. குடைக்கோயில், தேர்க்கோயில், கற்கோயில், அடுக்குக்கோயில், கூட கோபுரங்கள், மண்டபங்கள்,

தூண் சிற்பங்கள், மூர்த்திகள் முதலியவை வேறு எந்த இடத்திலும் காண இயலா. இவைகளை விளக்கப் பிற நாட்டார்தான் வேண்டும் போலும்! கோயிலுக்குள் நெஞ்சார்ந்த அன்போடு நுழைய இயலாத ஒரு பிறநாட்டான்தான் விளக்க முடியுமோ?

இலக்கியங்களில் தமிழ் இலக்கியமே மிகப்பண்டையதும் பல ஆயிரமாண்டுகளாக வளர்ச்சியும் ஒப்பற்ற தனி இயல்பையும் பெற்றது. மற்ற இலக்கியங்கள் ஆயிரம் ஆண்டளவில் புதிதாகக் கிளம்பியவை. அப்படியிருக்கத் தமிழ் இலக்கியமே அறியாத ஒருவர் எவ்வாறு அதனை எடுத்துக்கூற முடியும்? இன்னிசை நடனம், இவைகளைப்பற்றி அவைகளில் தேர்ந்த ஒருவரைத் தேர்ந்தெடுத்தது சரியே. ஆனால் தமிழ்ப் பண்முறையை அறிந்தவர் கூடச் சேர்ந்திருந்தால் நன்றாக இருக்கும். தென்னாட்டுச் சமூகப் பழக்கவழக்கங்களும் நிலையங்களும் எவ்வகையில் சிறந்தன என்று விளக்குவதற்குத் தமிழ்நாடுமுழுவதையும் அறிந்த ஓர் அறிஞர் இருந்தால் நலமாக இருக்கும். நாட்டுப் பாடல்கள் நாட்டுக் கலைகள் இவைகளை நன்குணர்ந்த ஓர் அறிஞர் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கவேண்டும். வேறு வரலாற்று ஆசிரியர் இதற்குத் தக்கவர் அல்லர். தென்னாட்டுப் பௌராணிகம் மிகச்சிறந்த இலக்கியமாகும். வேறு எந்நாட்டிலும் இல்லாத களஞ்சியம் தமிழ் நாட்டுக் கோயில் வரலாறுகளில் உள்ளன. அவைகள் இங்கே தலபுராணங்கள், தலப் பிரபந்தங்கள் என்ற பெயர்களில் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளின் வளர்ச்சியைக் கண்டால் ஒரு தனித்த முறையில் அவை பரிணமித்திருக்கின்றன என்று கூறலாம். இவைகளை விளக்க ஒரு தனித்தமிழறிஞர் வேண்டும்.

இனி இறுதியாகத் தென்னாட்டு அரசியல் முறைகளை ஒரு வரலாற்று ஆசிரியர்தான் விளக்கமுடியும். அதில் தெரிந்தெடுக்கப்பட்ட ஆசிரியரைப்பற்றிக் குறைகூற வேண்டியதில்லை. பொதுவாக எடுத்துக்கொண்ட தலைப்பு சிறந்ததானாலும் அதனை விளக்கக்கூடிய அறிஞர்கள் தக்கவர்களோ என்று ஐயப்படக்கூடிய அளவில் அமர்ந்திருக்கிறார்கள். அதனை இன்னும் சிறப்பாக விளக்கக்கூடியவர்கள் தெரிந்தெடுக்கப்பட்டிருந்தால் நலமாக இருக்கும். தென்னாட்டின் அபாக்கியமான நிலை, நல்ல கருத்துக்களிலும் பிறர் புகுந்துகொண்டு அதனை மழுங்கச் செய்துவரும் நிலைமையாக இருக்கிறது. இந்த நிலை எப்போது மாறி நல்லதாக அமையுமோ அறியோம்!

# *தமிழிசையும் கர்னாடக சங்கீதமும்

[இசைத்தமிழ்ச்செல்வர், திரு. இலக்குமண பிள்ளை, பி. ஏ.]

'கர்னாடகம்' என்னும் சொல் 'கரை நாடகம்' என்ற சொற்றொடரின் திரிபு. வடஇந்தியா கடற்கரை யடுத்திராமலும், தென்னிந்தியா மூன்று பக்கங்களிலும் கடலாற் சூழப்பட்டும் நிலைபெறுவதால் பின்னதற்கு அத் தனிப்பெயர் வரலாயிற்று. 1800 ஆண்டுகளுக்கு முன்னே 'தமிழகம்' என்று பெயர்பெற்று விளங்கிய தென்னிந்தியா சிலகாலம் செல்ல எக்காரணத்தாலோ 'கரைநாடகம்' (Carnatic) எனனும் பெயர்பெற்றது. இப்பெயர் அப்பிரதேசத்தில் வழங்கும் சங்கீதத்திற்கு இடப்படுமானால் 'தமிழிசை' என்பது 'கர்னாடக சங்கீதம்' எனப் பெயர்பெறுவது இயல்பாவதும் தவிர, பின்னதன் அடிப்படை 'தமிழிசை' என்பதையும் ஒருவாறு குறிப்பாக விளக்குகின்றதல்லவா? ஆரிய சங்கீதம்மட்டும் தென்னிந்தியாவில் நிலைபெற்றிருந்தால் 'கர்னாடக சங்கீதம்' என்னும் பெயர் அதற்கு வாய்ப்பதரிது.

வேறு சில அத்தாட்சிகளைப் பார்க்கும்போதும், கர்னாடக சங்கீதம் தனி ஆரிய சங்கீதம் அன்றென்று வெளிப்படுகின்றது. கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரத்தில் தமிழிசையைப்பற்றி விரிவான விவரணம் காணப்படுகின்றது. கர்னாடக சங்கீத ஏற்பாட்டின் முறைப்படி எழுதப்பட்ட அடிபபடை நூல் சாரங்கதேவரின் 'சங்கீத ரத்னாகரம்' ஆம் என்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. அவர் வாழ்ந்திருந்தது கி. பி. 13ஆவது நூற்றாண்டின் முற்பகுதியிலாம். காஷ்மீர் தேசத்தில் பிறந்த ஒரு குடும்பத்தவரானாலும், அவருடைய பாட்டனார் 'பாஸ்கரர்' என்பவர் தக்கண இந்தியாவில் 'டௌலட்டபாட்' என்னும் நகரத்தில் குடிபுகுந்தார். அவருடைய குமாரர் 'ஸ்ரீ சோடலா'வுக்குப் பிறந்தவர் சாரங்கதேவர். ஆதலால், சங்கீத ரத்னாகரத்திற்குப் பிறப்பிடம் தென்னிந்தியாவென விளங்குகின்றது. தனித் தமிழிசை விளங்கிய காலத்திற்கும், கர்னாடக சங்கீதம் வர வர உருவெடுத்து வந்த காலத்திற்கும் இடையில் ஏறக்குறைய ஓராயிரம் ஆண்டுகள் சென்றனவென்று இதனால் விளங்குகிறதல்லவா? அவ்வாறாயின் சாரங்கதேவரும், அதற்குப்பின் வாழ்ந்த ராமாமாத்தியார் முதலிய சங்கீத வித்வான்களும், தனித்தமிழிசையைப்பற்றி ஒன்றும் அறியாமலிருக்க, முடியுமோ? முடியும் என நினைப்பது இயற்

* குமரன் தமிழ் இசை மலர் (2-4-42) இல் வெளிவந்தது.

கைக்கும் மக்கள் வரலாற்றின் போக்குக்கும் நேரே முரணுவ தாகும். உண்மையில் முற்கூறிய இருவரும் தமிழ்ப் பண்களைப் பற்றி எடுத்துக் கூறியும் இருக்கிறார்கள்.

இது இங்ஙனம் இருக்க, தமிழிசையில் பன்னிரு பாலையின் உரு, தொண்ணூற்றொன்றென்றும், பன்னிரண்டுமாய், ஆக 103 பண்கள் இருந்தன. இவற்றில் தேவாரத்தோடியைந்து, இப் போதும் ஓதுவார்கள் பாடிவரும் 24 பண்களைக் குறைத்தால், மீதி 79 பண்களும் எங்குப் போயின? எவ்வாறு மறைந்தன? 24 பண்கள் இன்னும் உயிரோடிருக்கலாகுமென்றால் மற்றைப் பண்கள் அவ்விதம் வாழ்ந்திருக்கத் தடையென்ன இருந்தது? அவை மறைந்துபோனதின் மாயமென்ன?

உண்மையில் அவை எங்கும் மறைந்துபோகவில்லை. கர்னடக ராகங்களாகப் பெயர்பெற்றன. கீழ்க்கண்ட பட்டியின்படி தனித்

| தனித்தமிழ்ப் பண்கள் | அவற்றோடு ஒக்கின்ற கர்னடக ராகங்கள் |
|---|---|
| செவ்வழி | ...யதுகுல காம்போதி |
| சாதாரி | ...காமவர்த்தனி |
| வியாழக்குறிஞ்சி | ...சௌராஷ்டிரம் |
| பழந்தக்கராகம் | ...ஆரபி |
| இந்தளம் | ...மாயாமாளவகௌளை |
| புறநீர்மை | ...பூபாளம் |
| நட்டராகம் | ...பந்துவராளி |
| நட்டபாடை | ...நாட்டை |
| கொல்லி | ...பிலஹரி |
| கொல்லிக் கௌவாணம் | ...நவரோஜ் |
| தக்கேசி | ...காம்போதி |
| தக்கராகம் | ...காம்போதி (ஏறக்குறைய) |
| சேரிசை | ...குறிஞ்சி |
| கௌசிகம் | ...பைரவி |
| சாந்தார பஞ்சமம் | ...கேதாரகௌளம் |
| பழம் பஞ்சுரம் | ...சங்கராபரணம் |
| மேகராகக் குறிஞ்சி | ...நீலாம்பரி |
| குறுந்தொகை | ...நாதநாமக்கிரியை |
| அந்தாளிக் குறிஞ்சி | ...சாமா |
| செந்துருத்தி | ...மத்யமாவதி |
| திருத்தாண்டகம் | ...ஹரிகாம்போதி |
| பஞ்சமம் | ...ஆஹிரி |
| சீகாமரம் | ...புன்னாகவராளி |

தமிழ்ப் பண்களுக்கு இவ்வாறு வடமொழிப் பெயர்கள் கொடுத்து, அவற்றைக் கர்னடக சங்கீத ஏற்பாட்டுக்குள் நுழைத்

ததின் வரலாறு எப்படியிருக்கலாம்? தமிழில் திருஞான சம்பந்தருடைய பாடல்களுக்கு இசைக்கப்பட்டிருந்த 19 தமிழ்ப் பண்களுக்கும், சாரங்கதேவரின் 19 மேளகர்த்தாக்களுக்கும், ஏதோ இயைபு இருந்ததென்று நினைக்க இடமுண்டு. அப் பண்களே அம்மேளகர்த்தாக்களின் அடிப்படையாக இருந் திருக்கலாம். அதற்குப்பின் தோன்றிய ராமாமாத்தியர் தமிழ்ப் பண்களுக்கும், அவற்றிற்கு எதிரில் குறிக்கப்பட்ட கர்னாடக ராகங்களுககும், இப்போது பாடிககொண்டு வருகிற முறையில் மிருந்த ஒற்றுமைப்பாடு கண்கூடாக காணக்கிடக்கின்றதால் ஒன்று, மற்றொன்றாகப் பெயர் மாற்றப்பட்டது என்று முடிவு கட்டுவதற்குத் தடையென்ன இருக்கின்றது? காலத்தில் மேள கர்த்தாக்களின் தொகை சற்றுக் குறைந்தது. கி. பி. 17ஆவது நூற்றாண்டிலிருந்த வெங்கிடமகியின் காலத்திலோ அவருடைய தந்தையார் கோவிந்த தீட்சதரின் காலத்திலோ 72 மேளகர்த் தாக்கள் கர்னாடக சங்கீதத்தில் ஏற்படுத்தப்பட்டதாகக் கூறப் படுகிறது.

ஆதியில் மேளகர்த்தாக்கள் எப்படி உற்பத்தியாயிருக்கலா மென்றால், முன் உலகவழக்கிலிருந்த பல ராகங்களையும், வகைப் படுத்தி, அவற்றிற்குப் பொதுவான சுரங்களைக் (க்ரிம்ஸ்லாவைக் கண்டுபிடித்ததுபோற்) கண்டுபிடித்து, அவற்றோடு மேலேழும் கீழேழும் சுரங்களைப் பூர்த்திசெய்தா யிருக்கவேண்டும். இப்படித் தமிழிசையில் பெரும் பண்களும் உற்பததியாயிருக்க வேண்டும். கர்னாடக சஙகீத ஏற்பாட்டில் மேளகர்த்தாக்கள் உற்பத்தியான தும், பெருகினதும் இவ்வாறேயென்று கொள்ளவேண்டும். அதில் 72 மேளகர்த்தாக்கள் இயற்றியபின், சில மேளகர்த்தாக்களி லிருந்து புதிதாக ஜன்னிய ராகங்களையும் உண்டாக்கி யிருக்கக் கூடும். அன்னிய நாட்டு ராகங்களையும் பெயர் மாற்றியோ, மாற்றாமலோ, மேளகர்த்தாக்களுக்குள் புகுத்தக்கூடும். உண்மை யில், இந்த மேளகர்த்தாக்களுக்கெல்லாம் முற்றிலும் இயைந்த ராகங்கள் ஒருகாலத்தும் உலகவழக்கில் இருந்ததில்லையென்பது திண்ணம். பன்னிரண்டு சுரங்களை ஏழேழாக இடப்பெயர்ச்சி செய்தால் மேலும் கீழுமாக 72 சுரத்தொகுப்புக்கள் வரும். அவை 71-ம் ஆகா, 73-ம ஆகா. இது வெறும பளளிக்கணக்கு. உலகத்தில் வழங்கியிருந்த பெரிய அல்லது சம்பூர்ண ராகங் களின் தொகையன்று. இம் மேளகர்த்தாக்களை முதலில் ஏற்படுத் தியபோது, தென்னிந்தியாவில் வழங்கியிருந்த ராகங்களை யெல்லாம (தனித் தமிழ்ப்பண்கள் உள்பட) அம் மேளகர்த்தாக்க ளாகவோ அவற்றின் ஜன்னிய ராகங்களாகவோ, ஒன்றுபடுத்தி உட்படுத்தினார்கள். யார் உட்படுத்தினார்கள் என்பதை அடுத்த படியில் ஆராய்வோம்.

இவ்விடத்தில் கனம் T. K. சிதம்பரநாத முதலியார் அவர்கள் (Retd. Commissioner, Hindu Religious Endowments Board) செய்த ஆராய்ச்சிக்கு நமக்கு வெளிச்சத்தைத் தருகின்றது. அதாவது, தமிழ்நாட்டில் ஒவ்வோர் இடத்திலும் கோயில்கள் உள்ளன. அவற்றையெல்லாம் பலநாள் சென்று மேற்பார்வை செய்ததின் பயனாக அவர்களுக்கு வெளிப்பட்டது என்னவென்றால், ஒவ்வொரு கோயிலின் சார்பாகவும் சில தனிப்பட்ட குழுவினர் உள்ளார். அவர் ஓதுவார், நட்டுவர், தீட்சதர், மேளகாரர் என்ற மூன்று அல்லது நான்கு வகையினர். ஓதுவார் தனித் தமிழ்ப் பண்களை இசைத்துத் தேவாரம் முதலிய தோத்திரப் பாட்டுக்களைப் பாடுவோர். நட்டுவர் நட்டுவாங்கமும், சங்கீதமும் கோயிற் பணியிலும் மற்று நடைமுறைகளிலும் தொழிலாக எடுத்துக்கொண்டவர். மேளகாரரும் அப்படியே. வடமொழியில் இயற்றப்பட்டிருக்கும் சைவாகமங்களைச் சரிவரப் பொருள் கூறிக் கோயிற் காரியங்களை நடத்துவதற்கு வடமொழி பயின்ற தீட்சதர்களே (இவர்களும் தமிழ்ப் பிராமணரே யாவார்) ஏற்பட்டனர். இவ்வேற்பாடு ஆதிகாலந்தொட்டே தென்னிந்தியாவில் நடந்து வருகின்றது. இத் தீட்சதர்களில் சங்கீத ஞானமுடைய சிலர் மேளகாரரின் சங்கீதம் கேட்டும், நட்டுவர் முகாந்திரம் சங்கீதம் கற்றும், கர்னாடக சங்கீத சாஸ்திரத்தை எழுதப் புகுந்தனர். அப்போது தனித்தமிழ்ப் பண்களுக்கு வடஇந்திய ராகங்களோடு அவை பொருந்துமாறு வடமொழிப் பெயர்களைக் கொடுத்தார்கள். கி. பி. 17ஆம் நூற்றாண்டிலிருந்த கோவிந்த தீட்சதர் 72 மேள கர்த்தாக்களை வகுத்தபோது தமிழ்ப்பண்கள் 103-ம் வடமொழிப் பெயாகள் பூண்டு அவர் வகுத்த கர்த்தா ராகங்களாகவும், அவற்றில் உற்பத்தியான ஜன்னிய ராகங்களாகவும் வெளித்தோற்றம் மாறியிருக்க வேண்டும். பட்டியின்படியுள்ள தமிழ்ப்பண்கள், கர்னாடக ராகங்கள், இவை தம்மிலுள்ளமிருந்த ஒற்றுமைப் பாட்டுக்குக் காரணம் இதுவே என்று உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

ஆகவே சரஸ்வதிக் கிளை நதியும், யமுனைக் கிளை நதியும் சேர்ந்து கங்கா நதியானதுபோல் தனித் தமிழிசையும், ஆரிய சங்கீதமும் சேர்ந்து 'கர்னாடக சங்கீதம்' ஆயின. மேளகர்த்தா ஜன்னிய ராக ஏற்பாடு, தமிழிசையில் பண், பண்ணியல் ஏற்பாட்டை ஆதாரமாகக் கொண்டிருக்கலாம் என்பதும், உய்த்துணரக் கூடியதே.

# ஆராய்ச்சிப் பேரறிஞர்

# சதாசிவ பண்டாரத்தார் வாழ்க்கை வரலாறு

*[திரு T. S. நடராச குருக்கள், பி. ஏ., எல். டி.]

நம் தமிழ் நாட்டில் வள்ளுவர் என்றால் திருக்குறள் என்ற ஒப்புயர்வற்ற நூலை உலகிற்கு ஈந்த திருவள்ளுவப் பெருந்தகையையே குறிக்கும். அப்பர் என்றால் சைவ சமய குரவர்களில் முதியவராகிய திருநாவுக்கரசு அடிகளையே குறிக்கும். அஃதே போன்று தமிழாராய்ச்சி, கல்வெட்டாராய்ச்சி உலகிலே பண்டாரத்தார் என்ற பெயர் ஆராய்ச்சிப் பேரறிஞராகிய தி. வை. சதாசிவபண்டாரத்தார் அவர்களையே குறிக்கும். தமிழாராய்ச்சி, கல்வெட்டாராய்ச்சியின் பண்டாரமாகவே, (கருவூலமாகவே) நம் பண்டாரத்தாரவர்கள் விளங்கினார்கள். அவர்கள் சென்ற 2-1-60 சனிக்கிழமை இம் மண்ணுலக வாழ்வை நீத்துச் சென்றது தமிழுலகிற்கு ஒரு பேரிழப்பாகும். அவ்விழப்பினால் ஆராய்ச்சி யுலகில் ஒரு பெரிய பாலைவனம் தோன்றிவிட்டது. தமிழன்னை தன் தவப்புதல்வர்களுள் ஒருவரையிழந்து கண்ணீர் வடிக்கின்றாள். அத்தகைய அறிஞர் பெருமானது வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கி வரைவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

சோழவள நாட்டிலே பொன்னியாகிய காவிரியாற்றிற்கும் அதன் கிளையாகிய அரிசிலாற்றிற்கும் இடையே அமைந்துள்ள குடந்தை மாநகரத்திற்கு வடமேற்றிசையில் ஐந்துகல் தொலைவில் மண்ணியாற்றின் வடகரையில் திருப்புறம்பயம் என்னும் பதி உளது. அவ்வூர் பல்வளங்களும் நிரம்பியது; சைவசமய குரவர் நால்வராலும் பாடப் பெற்றது; சோழமன்னன் ஆதித்தனால் கற்றளியாக எடுப்பிக்கப்பெற்ற திருக்கோயிலைத் தன்னகத்தே கொண்டது. அத்திருப்பதியில் பழமை வாய்ந்த சைவக்குடியிலே தோன்றிய வைத்திலிங்கப் பண்டாரத்தார் என்பார் தம் மனைவி மீனாட்சியம்மையாருடன் இல்லற வாழ்க்கையை இனிது நடத்திவந்தார். அன்னோர் இருவரும் அப்பதியில் கோயில் கொண்டுள்ள சாட்சிநாதப் பெருமானிடத்தே மிகவும் ஈடுபாடுள்ளவர்கள். அவர்கள் ஆற்றிய தவப்பயனாய் நம் அறிஞர் சதாசிவப்பண்டாரத்தார் நந்தன

* இவர் பண்டாரத்தார் அவர்கள் மைத்துனரும் சிதம்பரம் பச்சையப்பன் உயர்நிலைப் பள்ளி ஆசிரியருமாவர்.

ஆவணி முதல் நாள் (15-8-1892) இல் ஒரே புதல்வராகத் தோன்றினர். ஒரேபுதல்வரானமையின் நம் சதாசிவம் செல்வ மாக வளர்க்கப் பெற்றனர்.

நம் சதாசிவம் தக்கவயதில் அவ்வூர்ப்பள்ளியில் பயின்று, பின்னர் மூன்று கல் தொலேவிலுள்ள புளியஞ்சேரியில் இருந்த உயர்தர தொடக்கப் பள்ளியில் பயின்றனர்! அதன் பின்னர்க் குடந்தை நகர உயர்நிலேப்பள்ளியில் நான்காம் படிவமுதல் பயின்று 1910 ஆம் ஆண்டில் பள்ளிப் படிப்பை முடித்தனர். அன்னர் அங்குப் பயின்றகாலே ஆர். சாமிநாத ஐயர் என்பார் தலைமை ஆசிரியராகவும் நற்றிணைக்கு உரைகண்ட பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் அவர்களும் தஞ்சை வலம்புரி பாலசுப்பிர மணியப்பிள்ளை அவர்களும் தமிழாசிரியர்களாகவும் அப்பள்ளி யில் தொண்டாற்றினர். பெருமைமிக்க தமிழாசிரியர்களிடம் பயின்றதன் பயனாகப் பண்டாரத்தார்க்குத் தமிழ்க்கல்வியில் ஆர்வம் உண்டாயிற்று. அன்றியும், நற்றிணை உரையாசிரியர் கல்வெட்டுக்களின் வரலாறு பற்றியும் அவற்றை ஆராய்வதன் பயனைப் பற்றியும் அடிக்கடி கூறிவந்தமை கல்வெட்டாராய்ச்சி யிலும் இவர்களை ஈடுபடச் செய்தது. புறம்பயத்திலுள்ள ஆதித்தேச்சுரத்தில் சோழமன்னன் முதலாம் ஆதித்தன் கால முதல் விசயநகர வேந்தர் காலம்வரையில் ஆண்டமன்னர்களின் கல்வெட்டுக்கள் உள்ளன. அவைகளும் நம் அறிஞரது ஆராய்ச் சிக்கு அடிப்படைக் காரணமாக இருந்தன. எனவே, பள்ளிப் படிப்பு முடிந்தபின் தமிழிலக்கிய இலக்கண நூல்களை அவர்கள் பயின்று வந்தார்கள். ஏற்படும் ஐயப்பாடுகளைத் தம் தமிழாசிரி யர்களிடம் அவ்வப்போது அவர்கள் தீர்த்துக் கொள்வது உண்டு. அவர்களது கல்வெட்டாராய்ச்சிக்கு முதலில் உறு துணையாக இருந்தது கோபிநாதராயர், எம். ஏ., எழுதிய சோழவமிச சரித்திரச் சுருக்கம் என்னும் நூலாகுமென்று அவர்களே கூறியுள்ளார்கள்.

இங்ஙனம் அவர்கள் தமிழ்மொழிப்பயிற்சியில் ஈடுபட்டி ருந்த காலே அவர்கட்குத் திருமண ஏற்பாடு ஆயிற்று. திருத் துறைப்பூண்டிக்கு அருகிலுள்ள குறுக்கையில் ஒரு செல்வக் குடியில் குமாரசாமிராயர், ஆத்மலிங்கராயர் என்ற சகோதரர்கள் சிறப்புடன் வாழ்ந்து வந்தனர். அவர்களில் இளவலாகிய ஆத்மலிங்கராயரது ஒரேபுதல்வியாகிய தையல்முத்து அம்மையை 1914இல் பண்டாரத்தார் மணந்தனர். மணமான பின் வாழ்க்கைக்கு ஓர் அலுவல் தேடும் இன்றியமையாமையும் நேர்ந்தது. இப்போதெல்லாம் அவர்கள் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் திங்கள் வெளியீடாகிய 'செந்தமிழி'ல் கட்டுரைகள்

எழுதத் தொடங்கி விட்டனர். அப்போது திருச்சிராப்பள்ளி பிஷப் ஹீபர் கல்லூரியில் தமிழாசிரியராயிருந்த பண்டித ந. மு வேங்கடசாமிநாட்டார் அவர்களைச் சென்று காணுமாறு நண்பர் ஒருவர் கூறவே, ஆங்குச் சென்றனர். இருவரும் ஒருவரை யொருவர் கண்டறியார். நாட்டார் அவர்கள் இவர்களை அன்புடன் வரவேற்று முகமன் கூறினர். அப்போதுதான் வந்த 'செந்தமிழி'ல் இருவர் கட்டுரைகளும் வந்திருந்தன. ஒருவரது கட்டுரையை மற்றவர் படிக்க இருவரும் இன்புற்றனர். நாட்டாரவர்கள் இவர்களது பிறந்தநாட்குறிப்பைப் பார்த்து இவர்கட்குத் தமிழினால்தான் வாழ்க்கை சிறப்புறும் என்றும், தற்காலிகமாக ஓர் அலுவல் பார்க்கலாமென்றும் கூறி, தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்கத்தலைவர் த. வே. உமாமகேசுரம் பிள்ளை அவர்ட்குக் கடிதம் தந்தனர். எனவே, கரந்தைத் தமிழ்ச்சங் கத்தின் தொடர்பு இவர்கட்கு உண்டாயிற்று. கரந்தைத் தமிழ்ச்சங்கத்தின் மூன்றாவது ஆண்டுவிழாவில் எல். டி. சுவாமிக் கண்ணுப்பிள்ளை அவர்கள் தலைமையில் 'கல்லாடமும் அதன் காலமும்' என்னும் பொருள் பற்றி இவர்கள் பேசியது கேட்டு அறிஞர் பலரும் வியந்தனர். இளமையிலேயே இவர்கட்கிருந்த ஆராய்ச்சித்திறனைத் தலைவரவர்களும், சொற்பொழிவாளர்களாக வந்திருந்த பா. வே. மாணிக்கநாயக்க ரவர்களும் 'ஆயிரத்தெண் ணூறு ஆண்டுகட்கு முந்திய தமிழர்' என்ற அரியநூல் எழுதிய கனகசபைப் பிள்ளை அவர்களும் பிறரும் பாராட்டினர்.

பின்னர், இவர்கள் தஞ்சை மாவட்டம் பாபநாசத்தில் தாலூக்கா அலுவலகத்தில் ஓர் எழுத்தராக நியமனம் பெற்றனர். அங்குத் தாசில்தாராக இருந்த தஞ்சை அழகிரிசாமிப்பிள்ளை அவர்களின் அன்பிற்குப் பாத்திரராக இவர்கள் ஒன்றரையாண்டு அலுவல் பார்த்துவந்தனர்.

குடந்தை நகர உயர்நிலைப்பள்ளியிலே தலைமைத் தமிழாசிரி யராக விருந்த பாலசுப்பிரமணியப்பிள்ளை அவர்கள் விடுமுறையி லிருந்தபோது ஒருமாதம் அப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினர்.

நடுத்தரப் பள்ளியாக இருந்த குடந்தை வாணாதுறைப் பள்ளிக்கூடம் 1917 இல் உயர்நிலைப்பள்ளியாக ஆயிற்று. பண்டாரத்தார் அவர்களின் ஆசிரியரான பி. டி. நடேச சாஸ்திரி கள் அங்குத் தலைமையாசிரியராக இருந்தனர். அவ்வாண்டில் இவர்கள் அப்பள்ளியின் தலைமைத் தமிழாசிரியராக நியமனம் பெற்றார்கள். இவர்கள் இப்பணியை 25 ஆண்டுகள் தொடர்ந்து சிறப்புடன் ஆற்றினார்கள். இக்காலப் பகுதியில் அப்பள்ளியில் தலைமையாசிரியர்களாக விருந்த பி. டி. நடேச சாஸ்திரிகள்,

டி. ஆர். ரங்கசாமி ஐயங்கார், கே. எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார், பள்ளிக்கூட நிர்வாகி வி. ஆர். சீனிவாச ஐயங்கார் ஆகியோரால் நன்கு மதிக்கப்பெற்று, மாணவர்களது பேரன்பிற்குப் பாத்திரராய் தமிழ்ப்புலமை நடத்தினார்கள். அப்பள்ளியிலும் குடந்தை நகரத்திலும் இவர்களுக்கு மிக்க செல்வாக்கு இருந்தது.

ஓய்வு நேரங்களில் பண்டாரத்தாரவர்கள் தமிழாராய்ச்சியும் கல்வெட்டாராய்ச்சியும் புரிந்துவந்தனர். அவர்களது ஆராய்ச்சிக்குக் குடந்தை அரசினர் கல்லூரியிலுள்ள சிறந்த நூல் நிலையம் மிகவும் பயன்படுவதாயிற்று அரசினர் கல்லூரியாதலின் அரசாங்கத்தாரால் வெளியிடப்பெறும் கல்வெட்டுத் தொகுதிகளும், கல்வெட்டிலாகா ஆண்டு அறிக்கைகளும், எபிகிராபிகா இண்டிகா போன்ற சரித்திர ஆராய்ச்சிப் பத்திரிகைகளும் அங்குத் தொகுத்து வைக்கப் பெற்றிருந்தன. அவற்றைப் பயில்வார் இவர்களையன்றி வேறொருவரும் அக்காலத்தில் அவ்வூரில் இல்லை. அக்காலத்தில் கல்வெட்டாராய்ச்சியில் இவர்களைப்போல் ஈடுபட்டிருந்த தஞ்சை பண்டித எல். உலகநாத பிள்ளை, திருவாரூர் இலக்கண விளக்கப் பரம்பரை சோமசுந்தர தேசிகர் ஆகியோர் இவர்கட்குச் சிறந்த நண்பர்கள். விடுமுறைக் காலங்களில் இந் நண்பர்கள் சந்தித்து ஆராய்ச்சியில் தாம்கண்ட உண்மைகளை ஒருவருக்கொருவர் கூறி மகிழ்வர். பிற்காலத்தில் தமிழவேள் என்றும் செந்தமிழ்ப் புரவலர் என்றும் சிறப்பிக்கப் பெற்ற கரந்தைத் தமிழ்ச் சங்கத் தலைவர் த. வே. உமாமகேசுரம் பிள்ளை அவர்கள் இவர்கட்கு அடிக்கடி கடிதம் எழுதி, 'தமிழ்ப் பொழி'லுக்குக் கட்டுரை எழுதுமாறு தூண்டுவார்கள். 'அடிக்கடி கடிதம் எழுதித் தொந்தரவு தருகின்றேன் என்பது பற்றிச் சினவாதிருக்க' என்றெல்லாம் எழுதுவார்கள். எனவே, இவர்களுடைய ஆராய்ச்சிக் கட்டுரைகள், கரந்தைத்தமிழ்ச்சங்க வெளியீடாகிய 'தமிழ்ப்பொழிலி'ல் மலர்வனவாயின. மேலும், கல்வெட்டிலாகா அதிகாரிகளான இராமநாதையர், வேங்கட சுப்பையர் ஆகியோர் குடந்தை வட்டத்திலுள்ள கோயில்களில் கல்வெட்டுக்களைப் படியெடுக்க வருங்கால் இவர்களுடன் தொடர்பு கொள்வது உண்டு.

1921 ஆம் ஆண்டிலே பண்டாரத்தாரவர்களின் மனைவியார் எலி கடித்ததனால் நோய்வாய்ப்பட்டு இறந்தனர். அதற்கு முன்னரே இவர்களுடைய பெற்றோர்கள் காலமாகிவிட்டனர். எனவே, 1921—22ஆம் ஆண்டு தனிமையில் வாழ்ந்த நம் அறிஞரது வாழ்க்கை ஓர் இருண்ட பகுதியாகும். அப்போது அவர்கள் வாணாதுறை உயர்நிலைப்பள்ளியிலேயே தங்கி நோயினால் நலிவுற்றிருந்தனர். அவர்கள்பால் அன்புமிக்கு அணுக்கத்தொண்டர்களா

யிருந்த மாணவர்கள் அவர்கட்குப் பல்வகையாலும் உதவிபுரிந்தனர். அன்னோரில் குறிப்பிடத்தக்கவர் ஆர். சன்னுசாமி,* டி. எம். வீரையன்,† காங்கேயன் பேட்டை இராமச்சந்திரன் பர்.

பின்னர், பண்டாரத்தார் அவர்களின் நெருங்கிய உறவினர் டி. எஸ். சிவாநந்தம் பிள்ளையவர்களின் முயற்சியால் அவர்கட்கு இரண்டாம் திருமணம் நிகழ்ந்தது. சீகாழிவட்டம் எலத்தூரில் வாழ்ந்த சைவப்பெரியார் சதாசிவக் குருக்கள் அவர்களின் இரண்டாம் புதல்வியாகிய சின்னம்மாள் என்ற கலந்சான்ற பெண்மணியைப் பண்டாரத்தாரவர்கள் 1923-இல் (துந்துபி ஆனி 19௳) மணந்தார்கள். அதன் பின்னர் அவர்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சியும் பொருளாதார முன்னேற்றமும் படிப்படியாகத் தோன்றலாயின.

குடந்தை வாழ்க்கையில் அவர்கள் தமிழ்ப் பேரறிஞர்கள், குடந்தைக்கல்லூரிப் பேராசிரியர்கள் ஆகியோருடன் உறவு கொண்டும், தமிழ் ஆராய்ச்சி கல்வெட்டாராய்ச்சி புரிந்தும், தம் ஆராய்ச்சியில் கண்டவற்றைக் கட்டுரைகளாகவும் நூல் வடிவமாகவும் புனைந்தும் வந்தார்கள். அன்றியும் ஒய்வு கிடைத்த போதெல்லாம் குடந்தை வட்டத்திலுள்ள பல ஊர்களுக்குச் சென்று கோயில்களிலுள்ள கல்வெட்டுக்களைப் படியெடுத்தும், அவற்றை ஆராய்ந்து பத்திரிகைகளில் வெளியிட்டும் வந்தனர். அக்காலத்தே அவர்கட்கு நெருங்கிய நண்பர்களாக இருந்தவர்கள் புரொபசர் சுந்தரராம ஐயர், பாஷாபாரத துரந்தரர், மகாமகோபாத்தியாய ம. வீ. இராமானுசாச்சாரியார், தமிழாசிரியர்கள் அ. பாலசுப்பிரமணியப் பிள்ளை, சீநிவாசய்யர், ஏ.எம். சடகோப ராமானுசாசாரி, எம். ஓ. எல், பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை, 'யதார்த்தவசனி' பத்திராதிபர் கோவிந்தசாமிப்பிள்ளை, சிவசேனபதி ப. தி. சோ. குமாரசாமி செட்டியார், பண்டித செ. முத்துரத்தின முதலியார், குமாரவீரய்யர் முதலியோராவர்.

பண்டாரத்தாரவர்கள் 'செந்தமிழ்', 'தமிழ்ப்பொழில்' ஆகியவற்றில் வெளியிட்ட கட்டுரைகள் பலவாகும். அவற்றில், சோழன் கரிகாலன், சோழன் செங்கணான், அதிகமான் நெடுமானஞ்சி, திருவைகாவூர்க் கல்வெட்டுக்கள், கல்லாடமும் அதன் காலமும், முதல்கண்டராதித்த சோழர், உலாக்கொண்ட மூன்று சோழ மன்னர், கல்வெட்டுக்களால் அறியப்படும் சில தமிழ்ப் புலவர்கள்

* இவர் ஆவணப்பதிவுத் துறையில் அலுவல் பார்த்துக் காலஞ்

† இவர் திருச்சி மாவட்டம் பள்ளப்பட்டி உயர்நிலைப்பள்ளியின் தலைமையாசிரியராக வுள்ளனர்.

வரலாறுகள் குறிப்பிடத்தக்கவைகளாம். குடந்தையில் அவர்கள் எழுதத் தொடங்கிய நூல்கள் கருணாகரத்தொண்டைமான், பாண்டியர் வரலாறு ஆகியவையே. கருணாகரத்தொண்டைமான் 1922—23 இல் முடிவெய்தியது. அத்தொண்டைமான் முதற் குலோத்துங்க சோழனின் படைத் தலைவர்களுள் ஒருவன். எனவே, தொண்டைமானது வரலாற்றை உட்படுத்தி முதற் குலோத்துங்க சோழன் என்ற ஆராய்ச்சி நூலைப் பின்னர் எழுதி முடித்தனர். பாண்டியர் வரலாறு 1922க்கு முன்னரே தொடங்கப் பெற்றது. 'முதற் குலோத்துங்க சோழன்' முதலில் 1930ஆம் ஆண்டில் வெளிவந்தது அப்போது அது இந்து, நவசக்தி, செந்தமிழ் போன்ற பத்திரிகைகளாலும் மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் போன்ற பெரியோர்களாலும் பாராட்டப்பெற்றது. அதன் இரண்டாம் பதிப்பு 1933இலும் மூன்றும் பதிப்பு 1941இலும் வெளிவந்தன. பாண்டியர் வரலாறு முதன் முதலாக 1940 ஜூலையில் அச்சிடப்பெற்றது. இரண்டாம் பதிப்பு 1950 அக்டோபரிலும் மூன்றும் பதிப்பு 1956 ஜூலையிலும் வெளிவந்தன. இந்நூலைப்பற்றிச் செந்தமிழ்ப் புரவலர் தமிழவேள் த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்கள் பின்வருமாறு எழுதியுள்ளார்கள்: "பண்டை இலக்கியங்களின் சான்றுகளையும் கல்வெட்டுக்களின் உண்மைகளையும் ஒப்பு நோக்கிப் பாண்டி மன்னரின் மெய்ச்சரிதையைத் தமிழ் மக்கள் அறிந்து கோடற்கு ஏற்ற கருவிநூல் இதுவேயாகும். நூலாசிரியர் தமிழ்ப்புலமை மிக்கவர்; கல்வெட்டுக்களை நுண்ணிதின் ஆய்ந்து உண்மை காண வல்லவர். கட்டுரை வன்மையும் கலை பயில் தெளிவுமுடைய இத் தமிழ்ப்புலவர் இந்நூலை இயற்றி உதவியது யாம் நன்றியுடன் போற்றத்தகும் நற்செயல். தமிழ் மக்கள் இதனைப் போற்றிப் பயன்கொள்வார்களாக." என்பது.

'முதற் குலோத்துங்கன்' சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் 'இன்டர்மீடியேட்' வகுப்பிற்குரிய பாடமாக்கப்பெற்றது. அது முதல் பண்டாரத்தார் அவர்கட்கு அதுகாறும் இருந்துவந்த பொருள் முட்டுப்பாடு நீங்கியது. வாணாதுறை உயர்நிலைப்பள்ளியில் (1917—1942) அவர்கள் தலைமைத் தமிழாசிரியராக இருபத்தைந்து ஆண்டுகள் பணியாற்றியபோது அவர்கட்குக் கிடைத்த ஊதியம் ரூ. 25க்குமேல் ரூ. 39 வரையில்தான். இதுபற்றி அவர்கள் கூறியது: "முதற் குலோத்துங்கன் கலிங்கத்தை வெற்றி கொண்டபோது ஆசிரியர் சயங்கொண்டார் அவன்மீது கலிங்கத்துப் பரணி பாடி மகிழ்வித்தார். மன்னர்பெருமானும் அந்நூல் அரங்கேற்றப்பெற்றபோது ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் பொற்றேங்காயொன்றை உருட்டித் தந்து புலவர் பெருமானை மகிழ்வித்தான் என்பர். யான் அப்பேரரசனது வரலாற்றை

எழுதினேன். அதுமுதல் எனது வாழ்க்கையில் பொருள்முட்டுப்பாடு நீங்கியது. கடன் வாங்கவேண்டிய நிலையும் ஒழிந்தது" என்பது.

இத்தகைய பெரும்புலவர் குறைந்த ஊதியத்துடன் ஓர் உயர்நிலைப்பள்ளியில் இருப்பது கண்டு அவர்களது நல்வாழ்க்கையில் ஈடுபட்ட பெரியோர்கள், அவர்கள் அதிக ஊதியம் கிடைக்கும் நிலையங்களுக்குச் செல்லவேண்டுமென்று விரும்பினர். வாய்ப்புக்கள் நேர்ந்தபோதெல்லாம் திருவையாற்று அரசர் கல்லூரி, திருப்பதி தமிழ்க்கல்லூரி, சென்னைப் பல்கலைக் கழகம் (தமிழகராதி) ஆகிய இடங்களுக்கு விண்ணப்பம் அனுப்புமாறு தூண்டினர். பல காரணங்களால் பண்டாரத்தார் அவர்கள் மேற்கூறிய இடங்களுக்குச் செல்ல விரும்பவில்லை. இறுதியாக, அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 1942ஆம் ஆண்டில் சர். கூர்மா வேங்கடரெட்டி நாயுடு துணைவேந்தரா யிருந்தபோது அன்னார் பெயரால் அமைந்த தமிழாராய்ச்சிக் கழகம் விரிவுபடுத்தப்பெற்றது. அப்போது பண்டாரத்தார்பால் அன்பும் பெருமதிப்பும் உடைய கரந்தைத் தமிழவேள் அவர்கள் முன் எழுதிய குறிப்பாலும், புதுக்கோட்டை வழக்கறிஞர் நாகராச ஐயர் முதலிய பெருமக்களின் முயற்சியாலும் அவர்கட்கு மேற்கூறிய ஆராய்ச்சிக்கழகத்தில் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது.

அவ்வாண்டில் சர். கே. வி. ரெட்டி நாயுடு அவர்கள் துணைவேந்தராயிருந்தார்கள். பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் ஆராய்ச்சிக் கழகத் தலைவராக இருந்தார்கள். பண்டாரத்தாரவர்கள் தாம் பல்லாண்டுகளாக எழுதவேண்டுமென்று ஆவலுற்றிருந்த 'பிற்காலச் சோழர் வரலாற்'றைத் துணைவேந்தரவர்கள் அனுமதியுடன் ஆராய்ந்து எழுதத் தொடங்கினார்கள். ஸ்ரீ மீனாட்சி கல்லூரியின் தலைவராக இருந்த பேராசிரியர் K.A. நீலகண்ட சாஸ்திரியார் காலமுதல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தொகுத்து வைக்கப்பெற்றனவாகிய கல்வெட்டுப் பெருநூல்களும், கல்வெட்டிலாகா ஆண்டறிக்கைகளும், எபிகிராபிகா இண்டிகா, எபிகிராபிகா கர்நாடிகா போன்ற பத்திரிகைத் தொகுதிகளும் இவர்களது ஆராய்ச்சிக்கு உதவுவனவாயின. தமிழ்க் கல்வெட்டுக்களை ஆராய்வார்க்குத் தமிழிலக்கிய அறிவும் இன்றியமையாததே. ஆகவே, நம் புலவர்பெருமான் கல்வெட்டிலாகா அதிகாரிகளும் பிறரும் போதிய தமிழிலக்கியப் பயிற்சியின்றி இடர்ப்பட்ட இடங்களைக் கண்டறிந்து உண்மை காணும் பேற்றியராயினர்.

நம் பண்டாரத்தாரவர்கள் பல்கலைக் கழகப் பட்டம் பெறாதவர்கள். எனினும், பல்கலைக் கழகப் பட்டம் பெறுபவர்களுக்கு

இன்றியமையாத சிறந்த ஆராய்ச்சி நூல்களை இயற்றும் ஆற்ற லுடையவர்கள் என்பதனை அண்ணமலைப் பல்கலைக் கழகம் நன் குணர்ந்தமை மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். அவர்கள் பொரு ளுக்கு அல்லது பிறர் பாராட்டுதலைப் பெறுதற்கு ஆராய்பவர்கள் அல்லர். அவர்களது ஒரே குறிக்கோள் தமிழகத்தின் உண்மை வரலாறு வெளிவரவேண்டும் என்பதே. ஆகவே, பகலெல்லாம் ஆராய்ச்சிக் கழகத்தில் படித்துக் குறிப்பெடுப்பதுவும் வீடு திரும் பிய பின் மாலையிலும் இரவிலும் அவற்றை விரித்து எழுதுவதும் கடமையாகக் கொண்டிருந்தார்கள். இத்தகைய உழைப்பின் பயனாக, 'பிற்காலச் சோழர் சரித்திரம்' இரண்டு பகுதிகளாக எழுதப் பெற்று 1949ஆம் ஆண்டிற்கு முன்னதாக முடிவுற்றன. முதற் பகுதி (கி. பி. 846—1070) 1949ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்திலும் இரண்டாம் பகுதி (கி. பி. 1070—1279) 1951ஆம் ஆண்டு சனவரியிலும் வெளியாயின. அப்போது துணைவேந்தராக இருந்தவர்கள் உயர்திரு. டாக்டர் எஸ். ஜீ. மணவாளராமானுஜம், M. A., Ph. D. அவர்கள். பல்கலைக் கழகப் பதிவாளராக ச. சச் சிதானந்தம் பிள்ளை B. A., L. T., அவர்கள் இருந்தனர்.

பிற்காலச் சோழர் வரலாறு தமிழ்ப்புலவர் பெருமக்க ளுக்கும், புலவர் மாணவர்கட்கும், தமிழ் எம். ஏ. பயிலும் மாணவர்கட்கும், தமிழ் அறிஞர்க்கும், சரித்திரமாணவர்க்கும் பெருவிருந்தாயிற்று. அன்னோர் தம் நாட்டின் பழைய வரலாற்றை யுணர்ந்து பெருமிதம் கொண்டனர்; பண்டாரத்தார் அவர்களை ஆராய்ச்சியுலகில் ஒரு தலைசிறந்த மேதை எனக் கண்டனர். ஆராய்ச்சி செய்வார்க்கும், ஆராய்ச்சி நூல்கள் எழுதுவார்க்கும், சரித்திர நாவல்கள் எழுதும் 'கல்கி' ரா. கிருஷ்ணமூர்த்தி போன்ற எழுத்தாளர்களுக்கும் 'பிற்காலச் சோழர் சரித்திரம்' பெரிதும் பயன்படுகின்றது.

பிற்காலச் சோழர் சரித்திரத்தின் மூன்றும் பகுதியாக 'சோழர்அரசிய'லைப்பற்றி எழுதத் தொடங்கினர் நம் பண்டாரத் தார். ஆனால், 'தமிழிலக்கிய வரலாறு' எழுதவேண்டும் என்று துணைவேந்தரவர்களின் ஆணைபிறந்தமையின் அம்முயற்சியை நிறுத்திவைக்க வேண்டியதாயிற்று. தமிழிலக்கிய வரலாற்றில் இவர்கள் எழுத வேண்டிய பகுதி இருண்டகால மெனப்படும் கி.பி. 300 முதல் 600 முடியவுள்ள பகுதியாகும். தமிழ் வரலாறு என்னும் அரிய நூல் தந்த தஞ்சை K. S. சீனிவாசப் பிள்ளை அவர்கள் இப்பகுதியைப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை யென்று ஒரு சில வரிகளில் முடித்துவிட்டனர். அத்தகைய காலப் பகுதியைப் பண்டாரத்தார் அரிதின் ஆராய்ந்து சுமார் 150 பக்கங்களுள்ள ஒரு நூலாக அதனை இயற்றினர். அது

1955 ஆம் ஆண்டிலும் 1957 ஆம் ஆண்டிலும் ஆக இருமுறை பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப் பெற்றது.

பின்னர், பண்டாரத்தார் தமிழிலக்கிய வரலாற்றின் 13, 14, 15 ஆம் நூற்றாண்டுகளின் பகுதியை 1952—53 ஆம் ஆண்டில் எழுதி முடித்தனர். இந்நூலின் முதற் பதிப்பு 1955 ஏப்ரல் மாதத்திலும் இரண்டாம் பதிப்பு 1957 ஆகஸ்டிலும் வெளியாயின. தமிழிலக்கிய வரலாற்றின் இவ்விரண்டு பகுதிகளும் தமிழ் மாணவர்களாலும் தமிழ்ப் புலவர்களாலும் தமிழறிஞர்களாலும் பெரிதும் பாராட்டப் பெற்றன.

பண்டாரத்தார் அவர்கள் 1953 ஆம் ஆண்டில் 60 ஆண்டுகள் நிறைவுற்றமையின் பல்கலைக்கழக அலுவலினின்றும் ஒய்வு பெற்றனர். பின்னர், உயர்திரு. T. M. நாராயணசாமிப்பிள்ளையவர்கள் துணைவேந்தரானபோது பிற்காலச்சோழர் வரலாற்றின் மூன்றும் பகுதியை எழுதி முடிப்பதற்காகப் பண்டாரத்தாரவர்கள் மீண்டும் பல்கலைக் கழகத்தில் 1955 இல் நியமிக்கப் பெற்றனர். அப்பகுதி அவர்களால் எழுதப் பெற்று முடியும் நிலையிலுள்ளது. சென்ற 1959 சூலைமாத முதல் அவர்கள் நோய்வாய்ப்பட்டு நலிவுற்றமையின் அந்நூலில் மேலும் எழுதிச் சேர்க்க எண்ணிய பகுதிகள் சில இடம் பெற இயலாவாயின. இதற்கிடையில், தமிழகத்தின் தவக்குறைவால் தமிழன்னை ஏங்கும் வண்ணம் அப் புலவர்பெருமான் 1960 சனவரி 2 ஆம் நாள் சனியன்று காலை 5 மணியளவில் இம் மண்ணுலக வாழ்வை நீத்தமை தமிழகத்திற்கு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும்.

## பண்டாரத்தார்க்குத் தமிழகத்தின் பாராட்டுக்கள்

நமது ‘ஆராய்ச்சிப் பேறறிஞர்’ இயற்றிய அரியவரலாற்று நூல்களையும் ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் வியந்து பாராட்டிய தமிழுலகம் அன்னாருக்குத் தன் நன்றியறிதலைக் காட்ட முன் வந்தது. முதலாவதாக 29-3-1956 இல் மதுரைத் திருவள்ளுவர் கழகம் கல்வெட்டுப் புலத்துறை முற்றிய கலைஞராகிய பண்டாரத்தார்க்குப் பொன்னாடை போர்த்தி, ‘ஆராய்ச்சிப் பேறறிஞர்’ என்ற பட்டத்தையும் வழங்கிச் சிறப்பித்தது. அப்போது தலைமை தாங்கிய செட்டி நாட்டரசர் இராசா சர். எம். ஏ. முத்தையாச் செட்டியார் அவர்கள் அறிஞர் பெருமானுக்குப் பொன்னாடையணிந்து அன்னாரது ஆராய்ச்சித் திறனைப் பாராட்டினர். பின்னர், கழகச்சார்பில் திருவாளர் ஆ. கார்மேகக் கோனார் அவர்கள் பண்டாரத்தார்க்கு ‘ஆராய்ச்சிப் பேறறிஞர்,

என்ற பட்டம் பொறிக்கப் பெற்ற பொற்பதக்கத்தை வழங்கி அவரது வரலாற்றாராய்ச்சித் திறனை விளக்கினர்.

சென்னை எழுத்தாளர் சங்கத்தின் நான்காம் ஆண்டுவிழா 7-4-1956 இல் நடைபெற்றபோது சிறிய முறையில் தமிழ்த் தொண்டாற்றிய பண்டாரத்தார்க்கு அச்சங்கச் சார்பில் கல்வி யமைச்சர் கனம் சி. சுப்பிரமணியம் அவர்களால் கேடயம் வழங்கப் பெற்றது. அப்போது அறிஞரது தமிழ்த்தொண்டின் திறனைப் பாராட்டி விழாவிற்குத் தலைமை தாங்கிய மகாதேவன் அவர்களும், பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர் களும், பிறரும் பேசினர்.

தலவரலாறுகளை வரலாற்று முறையில் முதன் முதலில் எழுதிய பெருமை பண்டாரத்தார் அவர்கட்கே உரியது என லாம். நாகப்பட்டினத்திற்கு அருகிலுள்ள செம்பியன்மாதேவி என்ற ஊரிலுள்ள சிவாலயத்தின் வரலாற்றைக் கல்வெட்டுக் களின் துணைகொண்டு அவர்கள் எழுதினார்கள். அக்கோயிலின் அறங்காப்பாளர் திருவாளர் எஸ். ரங்கராமானுஜ நாயுடு, பி. ஏ., இறைபணியாளர் திருவாளர் T. நாகராசன், B. Sc. ஆகிய இருவரது விருப்பத்தின்படி அஃது எழுதப்பெற்றது. அவ்வூரின் கண் 13-5-59 இல் நிகழ்ந்த குடமுழுக்கின்போது அந்நூல் வெளியிடப் பெற்றது. வெளியீட்டுவிழாவிற்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் உயர்திரு. T. M. நாராயண சாமிப் பிள்ளை அவர்கள் தலைமை தாங்கினார்கள். அதுகாலை அறநிலையப் பாதுகாப்பு இலாகா உதவி ஆணையர் உயர்திரு. ஏ. சர்க்கரை சேர்வை அவர்கள் ஆசிரியர் பண்டாரத்தார்க்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தனர். தலைவரவர்களும் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிவாளர் உயர்திரு. T. D. மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களும் ஆசிரியரவர்களின் ஆராய்ச்சித்திறனையும் குணநலனையும் புகழ்ந்து பேசினர்.

பண்டாரத்தாரவர்களின் ஆராய்ச்சி வன்மையினை உணர்ந்த தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் அவர்களைத் தமிழ்க்கலைக் களஞ்சியப் பதிப்பாசிரியர் குழுவில் ஒருவராகத் தேர்ந்து கொண்டனர். கரந்தைத் 'தமிழ்ப் பொழிலி'ன் இதழாசிரியர் குழுவிலும் அவர்கள் இருந்து வந்துள்ளார்கள்.

## பண்டாரத்தார் குணச்சிறப்பு

பண்டாரத்தாரவர்களின் குணநலன்களில் முதலாவதாகக் குறிக்கத்தக்கது அவர்களது ஆடம்பரமற்ற சிவபத்தியாகும். சைவசமய குரவர்களாகிய நால்வரிடமும் அன்னாருக்கு மிக்க ஈடுபாடு உண்டு. வாழ்க்கையின் முற்பகுதியிலே திருமுறைகளில்

பெரியபுராணம் ஓதிய பின்னரே உண்பது வழக்கம். 1928 ஆம் ஆண்டுமுதல் தாம் இறக்கும் வரை தாமது பிறந்த ஊராகிய திருப்புறம்பயத் திருக்கோயிலில் சமயாசாரியர் நால்வர்க்கும் குருபூசை நடத்திவந்தார்கள். அப்பணி என்றும் தம் குடும்பத்தாரால் தொடர்ந்து நிகழவும் செய்துள்ளார்கள்.

பண்டாரத்தாரவர்கள் ஒரு சிறந்த ஆசிரியர். வாணுதுறை உயர்நிலைப் பள்ளியிலே 25 ஆண்டுகள் தலைமைத்தமிழாசிரியராக இருந்தபோது மாணவர்களுடைய பேரன்பிற்கும் மதிப்பிற்கும் உரியவராயிருந்தனர். மாணவர்கள் பொதுவாக இலக்கண இலக்கியம் கற்றனரேனும் அவர்களது வரலாற்று ஆராய்ச்சியினும் அன்னோர் ஈர்க்கப் பெறுதல் உண்டு. அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் வரலாற்று விரிவுரையாளராயிருந்து காலஞ்சென்ற எஸ். கே. கோவிந்தசாமிப் பிள்ளையவர்களும், கல்வெட்டு ஆராய்ச்சியாளர் தி. நா. சுப்பிரமணியம் அவர்களும் பண்டாரத்தாரின் மாணவர்களேயாவர்.

விரைவாகச் செய்யுள் இயற்றும் ஆற்றலும் பண்டாரத்தாரவர்கட்கு உண்டு. ஆராய்ச்சியில் ஈடுபட்டபின் அத்துறையில் கருத்துச் செலுத்தவில்லையெனினும், அன்னார் இளமையில் இயற்றிய பாடல்கள் பலவாம்.

சில தாம கண்டனவற்றைப் பண்டாரத்தாரவர்கள் விரைந்து வெளியிடுவதில்லை. தக்க சான்றுகளை மேன்மேலும் கண்டறிந்து தமது முடிவு அசைக்க முடியாதது என்று உணர்ந்தபின்னரே அதனை வெளியிடுவர். அவர்களது ஆராய்ச்சி ஆராய்ச்சிக்காகவே செய்யப்பெற்றது. தந்நலங் கருதித் தம் நூல்களின் எண்ணிக்கையைப் பெருக்கிப் பொருளீட்டும் முயற்சியை அவர்கள் என்றும் எண்ணியதில்லை. அவர்கள் ஆயுள் முழுதும் ஆராய்ச்சியிலேயே இடைவிடாது ஈடுபட்டுத் தமிழக வரலாற்றின் ஒரு பகுதியை ஒப்பற்ற வகையில் ஆக்கித் தந்தார்கள்.

பண்டாரத்தாரின் உரைநடை ஒருதனிப்பட்ட நடையாகும். எளிமையும் இனிமையும் வாய்ந்த அத்தமிழ் நடையில் அன்னார் எழுதிய ஆராய்ச்சிகள் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர்களால் மதிக்கத்தக்க அருமையுடையன வாயினும் உயர்நிலைப்பள்ளி மாணவரும் அறிந்து இன்புறுதற்கேற்ற எளிய இனிய நடையில் அமைந்தனவாகும். சோழர் வரலாறு, பாண்டியர் வரலாறு ஆகிய வரலாற்று நூல்கள் ஆற்றொழுக்காகக் கதைபோல் அமைந்துள்ளன. செய்திகள் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இருக்கும். வெற்றுரைகளோ அவர்கள் நூல்களில் காணப்படுவ

தில்லை. கொள்கைபற்றியோ, சமயச் சார்புபற்றியோ அன்றி விருப்பு வெறுப்பினாலோ ஆராய்ச்சியில் நடுநிலை திறம்புபவர் பண்டாரத்தாரல்லர்.

பண்டாரத்தாரவர்களுடன் உரையாடியவர்கள் அன்னாரது உரையாடற்றிறனை நன்கு உணர்வர். அவர்களது பேச்சு ஆராய்ச்சியின் சாரமாகவே இருக்கும். உரையாடுபவர் இடையில் எழுந்து செல்ல நினையார்; பிரிந்து செல்லும்போது தாம் அதுகாறும் அறியாத சில செய்திகளையறிந்தே செல்லுவார். எனவே, அவர்களுடன் உரையாடுவதே ஒருவகைக் கல்வியாகும்.

படித்தலே பண்டாரத்தார்க்குப் பொழுது போக்காகும். எத்தகைய நூலையும் விரைவில் நன்குபடித்து முடித்துவிடுவது அன்னார் வழக்கம். அண்ணாமலைப் பல்கலைக்கழக நூல் நிலையத்தை நன்கு பயன்படுத்தியவர்களில் அவர்கள் ஒருவர் என்பது அறிஞர் கருத்து. பல்கலைக்கழகத்தின் டாக்டர் சர். சி. பி. இராமசாமி ஐயர் நூல்நிலையக் கட்டிடம் அண்மையில் திறக்கப்பெற்றபோது வெளிவந்த வெளியீட்டில் புதுக்கோட்டை வழக்கறிஞர் உயர்திரு. கே. நாகராஜ ஐயர், பி. ஏ., பி., எல். அவர்கள் எழுதியுள்ள கட்டுரையில் பண்டாரத்தாரவர்களின் படிப்பார்வத்தை விளக்கியுள்ளமை அறிந்து மகிழற்பாற்று.

"Full advantage is taken of the facilities provided by those members of the staff who are devoted to disinterring the treasuers of the past. Valuable books have been written, such as for example, the History of the later Cholas, by Sadasiva pandarathar, and the History of Tamil literature, by the same author. Pandarathar is a researcher of the purest vintage and he reminds one of those Cambridge Dons, Wordsworth's "Venerable Doctors" who

"Led in abstemiousness astudious life;
When in forlorn and naked chambers cooped
And crowded, o'er the ponderous look they hung
Like cater pillars eating out their way
In silence"

பண்டாரத்தவர்கள் செய்தித்தாள்களை நாள்தோறும் முறையாகப் படித்து அரசியல் செய்திகளைக் கேட்போர் வியக்கும் வண்ணம் உரைப்பார்கள். நீதிக் கட்சி ஆண்ட வரலாறு, காங்கிரஸ்மகாசபையின் வளர்ச்சி முதலியவற்றைச் சரித்திர ஆசிரியர்களும் விரும்பிக் கேட்குமாறு இயம்புவார்கள். அவர்கட்கு அரசியலில் தனிப்பட்ட கொள்கை உண்டு. பொது

வாகக் கூறுமிடத்து, அவர்கள் தமிழுணர்ச்சி வாய்ந்த தமிழர்; தமிழின் வாழ்வே தம் வாழ்வாகக் கொண்டவர்கள்.

வரலாற்றாராய்ச்சி, தமிழாராய்ச்சியில் தாம் கண்ட உண்மைகளை ஒருவகைக் குறிப்பும் கைகயிலில்லாது நீண்ட நேரம் அவர்கள் சொற்பொழிவாற்றுவது வியப்பாயிருக்கும். பண்டாரத்தார் சொற்பொழிவு என்றால் அதில் பல புதிய செய்திகள் நிறைந்திருக்கும் என்பது அறிஞர் துணிபாகும்.

இத்தகைய அருங் குணங்கள் வாய்ந்த அறிஞர்பிரான் எளிமையே உருவமாகக் கொண்டு ஆடம்பரமின்றி வாழ்ந்து வந்தனர். சிறிது கற்றவரும் தாம் எல்லாமறிந்தவராகக் காட்டும் இக்காலத்தே, அவ்வாராய்ச்சிக் கடல் சுயவிளம்பரமின்றியே இருந்து வந்தனர். குறைகுடந்தானே கூத்தாடும்.?

பண்டாரத்தாரின் ஒரேபுதல்வரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வரலாற்று விரிவுரையாளராகப் பணிபுரிபவரும் ஆகிய ச.திருஞானசம்பந்தன் தந்தையாரிடம் கல்வெட்டாராய்ச்சியில் பயிற்சி பெற்றவர். அன்னார் தந்தையாரின் ஆராய்ச்சியைத் தொடர்ந்து மேற்கொள்ளுதல் கடனாகும்.

தமிழாராய்ச்சி, கல்வெட்டாராய்ச்சி செய்வோர்க்குப் பண்டாரத்தாரின் நூல்கள் உறுதுணையாகும். அவரது ஆராய்ச்சி முறையை அவருடைய நூல்கள் வாயிலாக உணர்ந்து அத்துறையில் ஈடுபடுதல் ஆராய்ச்சி மாணவர் கடமையாகும். தமிழ்நாட்டில் பண்டாரத்தார் மரபு நீடு வாழ்க.

---

## திரு. டி. வி. சதாசிவபண்டாரத்தார் மறைவுக்கு

# இரங்கற் செய்திகள்

திரு. டி. வி. சதாசிவபண்டாரத்தார் அவர்கள் இறையடி நிழல் எய்திய செய்தி அறிந்து நமது பல்கலைக் கழக ஆட்சிக்குழு உறுப்பினர்களும், ஆசிரியர்களும் மாணவர்களும் தமது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்வதோடு தமது இரங்கலை அவர்கள் குடும்பத்தார்க்கும் தெரிவித்துக்கொள்கின்றனர்.

பதிவாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

பேராசிரியர் சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் மறைவு கேட்டு மிகவும் வருந்துகிறேன். அன்னார் ஆன்மா இறைவன் துணைத்தாட்கீழ் என்றும் இருந்து நிறையின்பம் எய்த எல்லாம் வல்ல திருவருளை வழுத்துகிறேன்.

கரு. முத்துதியாகராசர், மதுரை.

திருஞானசம்பந்தம் அவர்களுக்கு, வணக்கம்.

தந்தையார் அவர்களின் பிரிவுச் செய்தி என்னைத் திடுக்கிடச் செய்தது. பெரிதும் வருந்துகிறேன். என் செய்வது? தயவு செய்து தாங்கள் ஈசனின் ஆறுதல் பெற்றுப் பிறகு குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் நல்லாறுதல் கூற வேண்டிக்கொள்ளு கிறேன்.

கி. ஆ. பெ. விசுவநாதம்.

கல்வெட்டு ஆராய்ச்சி அதன் முதல்வரை இழந்துவிட்டது. ஆராய்ச்சி அறிஞர் தங்கள் உண்ணுவை இழந்துவிட்டனர். தமிழ் ஆராய்ச்சி என்னும் தாய் தம் செல்வ மகனை இழந்துவிட்டாள். உலகம், எதைக்கேட்டாலும் சொல்லவல்ல பேரறிஞரை இழந்து விட்டது.

டாக்டர் மா. இராசமாணிக்கனர்.

எனது அரியதோர் செந்தமிழ்ச் செம்மல், வரலாற்றுத் துறையில் நல்வழி வகுத்த நல்லவராம், பண்டாரத்தாரை இழந் தது, மிகப் பெரிதும் துன்பத்தையே தருகிறது.

மு. இராசாக்கண்ணனர், மலேயா.

மொண்டார மாணவர்கள்
பருகுவதோர் முத்தமிழின் பொய்கை! யாவும்
கொண்டாரும் கொளவிரும்பும்
அருங்குணங்கள் தமிழ்ப்பற்றும் கொண்ட மேலோர்
அன்பினெடு குழைந்துவர இனிது பேசும்
பண்டாரத் தார்போன்முர்
பண்டில்லை இன்றில்லை இனியும் அஃதே.

'குயில்'

பண்டாரத் தாரென்று பாவலரும் நாவலரும்
கண்டாரத் தாரணியிற் கற்றவர்க்கே - தண்டாரத்
தின்புதல்வர் நட்பயலார் ஏங்கத் திருக்கூத்தின்
அன்புதல்வ நல்கடியுற் ருர்.

நல்லெழுத்துச் சொல்லழுத்தம் நல்லமுடி வாராய்ச்சிக்
கல்லெழுத்தும் உச்சியயன் கையெழுத்தும் - பொல்லெழுத்தாய்
பெற்ற சதாசிவனும் போராசான் போலுலகில்
உற்ற புலவர் ஆர்? ஒது.

முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், தருமையாதீனம்.

திருக்கோயிற் கல்வெட்டைப் படித்தாய்ந்தே,
　　தெள்ளுதமிழ் மொழியினிலே பெயர்த்தெழுதி,
"இருண்டகாலம்" போன்ற நூலாலே,
　　இன்றமிழ் அறிஞரினைக் கவர்ந்தேதான்
உருவிற்கெளி தானசதா சிவப்பெரியோய்!
　　உண்மைவடி விறைவனிடம் விரைந்தாயோ?
விருப்புடனே உள்ளவரார் இனியிங்கே?
　　திருக்கோயிற் கல்வெட்டை எழுதிடவே!

பொ. திருஞானம், வெண்பாவூர்.

மற்றும், கீழ்க்காணும் மன்றங்களும், பெருமக்களும், அன்பர்களும், ஆகியபலரும் கடிதங்கள் வாயிலாகவும், கம்பி வழியாகவும் தமது இரங்கலைத் தெரிவித்துள்ளனர் எனத் தெரியவருகின்றது. அவற்றுள் சில வருமாறு:

எஸ். சுயம்பிரகாசம், கரந்தைத் தமிழ்ச் சங்கம்; கும்பகோணம் பாணாதுறை உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் சங்கம்; தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை; மதுரை திருவள்ளுவர் கழகம்; மயிலை சிவ. முத்து, தலைவர், மாணவர் மன்றம், சென்னை; திருக்குறள் கழகம், குகை, சேலம்; திருக்குறள் கழகம், புதுக்கோட்டை; இளங்கோ மன்றம், தியாகராயர் கல்லூரி, மதுரை; மாதவி மன்றம், மேலப்பாளையம்; தமிழ்ப் பேரவை, புதுக்கோட்டை; மாணவர் அருள் நெறி மன்றம் பேரூர், கோவை; ஈ. வே. ராமசாமிப் பெரியார்; ச. சச்சிதானந்தம் பிள்ளை; சம்பந்த சரணாலய தம்பிரான், கோவை; டாக்டர். எம் ஏ. துரையரங்கனார், மதுரை; டாக்டர். வ. சுப. மாணிக்கம் காரைக்குடி; எஸ். இராமச்சந்திர பத்தர், பி. ஏ., துணைத்தண்டலாளர், மதுரை; கே. ஆர். சம்பந்தம், இந்தியப் பாராளுமன்ற உறுப்பினர்; டாக்டர். பி. திருஞானசம்பந்தம், கோவை; எஸ்.பி. தியாகராசன், Blitz, Bombay; சோம. லெ; டாக்டர் அப்பர் சுந்தரம், தஞ்சை; எஸ். ஜி. மணவாள இராமாநுசம், M. A., Phd., டி. எம். நாராயணசாமிப் பிள்ளை, துணைவேந்தர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம்; டாக்டர். அ. சிதம்பரநாதச் செட்டியார். மயிலை. சீனி. வேங்கடசாமி; வித்துவான் வெங்கடராமையா திருப்பனந்தாள்; வித்துவான், ந. சேதுரகுநாதன்; ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை; இ. மு. சுப்பிரமணியபிள்ளை; மற்றும் பலர்.

# மிளகு பயறான கதை

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

மலையாள நாட்டிலே மிளகு கொண்ட ஒரு வேளாளன் வெளியிடங்கட்குச் சென்று வாணிகஞ் செய்யவேண்டும் என்று முடிவு செய்தான். எருதுகளின்மேல் மிளகுப்பொதிகளை ஏற்றிக் கொண்டு பயணமானான்.

ஆம்பிராவதிக் கரையில் உள்ள தென்கரை நாட்டில் கோவில் உள்ள ஒரு காட்டிலே வந்து தங்கினான். அக்கோவிலில் எழுந்தருளிய கடவுள் ஒரு முதிய அந்தணனாக வடிவங்கொண்டு வணிகன் முன்பு தோன்றினார். வணிகனைப் பார்த்துச், "சிறிது மிளகு வேண்டும்" என்று கேட்டார். மிளகு கொடுக்க மனமில்லாத அந்தணன், "இம்மூட்டைகளில் உள்ளவை பயறு" என்று கூறினன். "அப்படியே ஆகுக" என்று கூறி விட்டுக் கிழ அந்தணனாக வந்த கடவுள் மறைந்து போயினர். வணிகன் திருவாரூர் போய்ச் சேர்ந்தான். அங்குள்ள வணிகர்களிடத்தில் மிளகை விலைபேசினான். தொகையைப் பெற்றுக் கொண்டு மிளகை அவிழ்த்துக் கொட்டினான் மிளகு முழுவதும் பயறாக இருந்தது. வணிகர்கள் இவன் புரட்டன் என்று சினங் கொண்டு புடைக்கத் தொடங்கினார்கள். அப்பொழுது முன் தோன்றியவாறே கடவுள் முதிய அந்தணராகத் தோன்றித், "தென்கரை நாட்டிற் சிறிது மிளகு கேட்டபொழுது 'இவை பயற்று மூட்டை' என்று சொன்னீரே?" என்று கேட்டனர்.

வணிகன் திகைத்தான். முன்பு தோன்றியவரும் இப்பொழுது தோன்றியிருப்பவரும் சிவபெருமானே என்று துணிவு கொண்டான். "மிளகைப் பயறாகச் செய்த தாங்களே இதனைத் திரும்பவும் மிளகாகச் செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். "தென்கரை நாட்டில் இடைச் சிறுவனிட்ட பந்தல் எமது கோயில். அதனைக் கற்பணியாகச் செய்வாயாக" என்று கூறி மறைந்தருளினார். பயறு முழுவதும் மிளகாக மாறிவிட்டது. [அப்பிர மேயர் தலபுராணத்திற் காணப்படும் இச்செய்தியைக் கொங்குமண்டல சதக உரைகாரர் தமது உரையில் மேற்கோளாக எடுத்துக் காட்டியுள்ளார்.]

"அவ்வி டத்திலுறை யும்பதத்துமுன(து) அருகுவந்துமிள காசையால்
செவ்வி பெற்றமெய் வருந்தி நின்றது பெறாது போனகுறி தேறவாய்
பவ்வ மற்றநெறி வணிக னேஎமது பணிசெ யென்றுகுவி பயறெலாம்
வெவ்வி யற்கைபெறு மிளகு செய்தருளி ஏகி னார்பரம வெளியிலே."

# நக்கீரர்

[திரு. சேர. ந. கந்தசாமி, பி. ஏ. (ஆனர்சு)]

(செல்வி-சிலம்பு ௩௪, பரல்-௫, ௨௩௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

சமயத்தைப் புரப்பதற்காகவே பிறந்த அடியாருட் பலர் வரைவயர்ந்து நிறையின்பம் உட்கொண்ட நீர்மையராவர். இல்லறம் துறவறம் இரண்டையும் வகுத்த வள்ளுவப் பெருந் தகையும் நமக்குத் துணையாக உள்ளார். எனவே, நக்கீரர் இல்லறத்தை இனிது நடத்துதற்காகப் பொருட்பரிசிலை நாடிப் புரவலரைப் பாடினர். முதுமை கதுவக் கதுவ மறுமை நினைவால் உந்தப் பெற்ற நக்கீரனர் அருட்பரிசை அடைதற்காகத் தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானின் சேவடி படர்ந்து பெறலரும் பரிசில் எய்தினர். தாம்பெற்ற பேற்றைப் பெறுதற்கு அவாவும் புலவனுக்கு அது பெறுமாற்றைப் புலப்படுத்துவதற்குத் திருமுருகாற்றுப் படையினை அருளினர். எனவே, இளமைக் கும் முதுமைக்கும் இடையில் எத்துணையோ கருத்து வேறு பாடுகள் பிறக்கலாம். இவற்றை மனத்தில் இருத்தினல், திருமுருகாற்றுப்படை ஆசிரியரும் நெடுநல்வாடை ஆசிரியரும் ஒருவர் என்பது தெளிவாகும்.

## புராணச் செய்திகள் திருமுருகாற்றுப்படையில் வருதல்

6. முடிபாகத் திரு. பிள்ளை அவர்கள் திருமுருகாற்றுப் படையில் புராணக் கருத்துக்கள் வருதலைக் காட்டிப் பிற்காலத் தது என்பர். இக்கருத்தைச் சிறிது எண்ணிப் பார்ப்போம். முருகவேள் சூரனைக் கொன்றான் என்னும் புராணக் கருத்து,

> "பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச்
> சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேல்."

எனத் திருமுகாற்றுப் படையில் வருதல் காணலாம். இக் கருத்தே,

> "வெண்டிரைப் பரப்பில் கடுஞ்சூர் கொன்ற
> பைம்பூட் சேஎய்." (பெருபாண் ௪௫௭-௪௫௮)

> "......மாக்கடல் முன்னி
> அணங்குடை அவுணர் ஏமம் புணர்க்கும்
> சூருடை முழுமுதல் தடிந்த......விறல்வேள்." (பதிற்று-௧௧)

> "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்." (அகம்-௫௯)

" மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர்
வேல்வல்லான்." (கலித்-௧0௪)

" பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்கு
மாய அவுணர் மருங்கறத் தபுத்தவேல்." (பரி-௫)

எனச் சங்க இலக்கியங்களில் பயின்று வருதல் காண்க. திரு முருகாற்றுப் படையில் சூரரமகளிரும், பிணந்தின்று துணங்கை யாடும் பேய்களும் பேசப் பெறுதல் பிற சங்கப் பாக்களிலும்,

" அணங்குடைச் சிலம்பின் கவிரம்,
பேரிய உருகெழு கவாஅன் ஏர்மலர்
நிறைசுனை உறையும் சூர்மகள்." (அகம்-௧௧அ)

" பலிபெறு வியன்களம் மலிய ஏற்றிக்
கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந்தாடும்
துணங்கையம் பூதம்." (பெரும்பாண்-௨௩௩-௫)

" நிணம் வாய்ப் பெய்த பேய்மகளிர்
இணையொலியிமிழ் துணங்கை." (மதுரைக்-௨௫-௬)

என்று இயம்பப்பெறுதல் அறியலாம். முருகற்கு யானையூர்தி, மயிலூர்தி முதலியன உரியவெனும் பழங்கருத்து முருகாற்றுப் படை மொழியும். இப்புராணக் கருத்தினை,

" சுருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு." (பதிற்று-௧௧)

" பிணிமுக வூர்தி ஒண்செய் யோன்." (புறம்-௫௬)

" பிணிமுகம் ஊர்ப்படப் பிறவு மேந்தி." (பரி: அ-௧0௧)

" பல்பொலி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஒடியா விழவின் நெடியோன்." (அகம்-௧௪௯)

" சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள் வது போலும் மயிற்கொடி." (பரி-௧௯: ௬-எ)

" மையிரு நூற் றிமையுண்கண் மான்மறிதோள் மணந்தஞான்று."
(பரி-௯: அ)

எனவரும் சங்கநூற்பகுதிகள் விளக்குதல் காண்க.

திருமால், சிவன், இந்திரன், நான்முகன் ஆகிய நால்வரும் முருகாற்றுப்படையில் தோற்றமளிக்கின்றனர். விநாயகரைப் பற்றி இந்நூலிலும் பிற சங்கப் பாக்களிலும் இயம்பப்பெறவில்லை. இனி, இந்நால்வரும்,

" நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல்." (முல்லை: ௧-௩)

" மாஞ்செல மிதித்த மாஅல்." (அகம்-நிக)

" வண்டுது பொலிதார்த் திருஞெமர் அகலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ்குரல் துழாஅய்
அலங்கற் செல்வன்." (பதிற்று-நக)

" நீனிற வுருவின் நேமியோன்." (புறம்-நஅ)

" அஞ்சன உருவன்." (புறம்-கஎச)

" முக்கட் செல்வர் நகர்." (புறம்-சு)

" நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்." (அகம்-கஅசு)

" ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல்." (புறம்-நு)

" நீலமணி மிடற் றொருவன் போல." (புறம்-கக)

" பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற்றணி." (கலி-க0ு)

" அணங்குடை வச்சிரத்தோன் ஆயிரம்கண்." (கலி-கநு0)

" வச்சிரத் தடக்கை நெடியோன் கோயில்." (புறம்-உசக)

" நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்விதழ்த் தாமரை."
(பெரும்பாண்: சOஉ-ச)

எனச் சங்கத்துச் சான்றோர்தம் பாக்களில் காட்சி தருதலைக் காணலாம். மேழகம் நூறி வேரி நிறைத்து வெறியாட்டெடுத்தல் முருகாற்றுப் படையிலும் பிற சங்கச் செய்யுட்களிலும் வழங்கப் பெறுதல் அறிஞர் உலகம் அறிந்ததொன்றும்.

எனவே, இதுகாறும் இயம்பியவாற்றான் புராணக்கருத்துக்கள் திருமுருகாற்றுப் படையிலும் பிறசங்க இலக்கியங்களிலும் பேசப்பெறுதல் கண்டோம். இனி, முருகன் இயற்கை வடிவாக வயங்கும் எழிற் காட்சியை,

" உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி."

" கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பு."

" காடும் காவும் கவின்பெறு துருத்தியும்
யாறும் குளனும் வேறுபல் வைப்பும்
சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்
மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்."

எனவரும் அடிகளில் கவின் செறியக் காட்டுகின்றார். கோயில் போந்து வழிபட இயலாராய் "யாம் எம் இல்லத்தின் உள்ளிருந்தே இயற்கையாகிய இறைவனை எண்ணி ஏத்துவேம்" என்னும் கோட்பாட்டினர்க்கும் முருகப்பெருமான் தண்ணருள் பாலிக்கும் தன்மையன் என்னும் உயரிய கருத்தினை,

"வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
ஆண்டாண் டுறைதலும் அறிந்த வாறே."

என்னும் அடிகளில் தெளிவுறுத்துகின்றார்.

கந்துவில் முருகன் உறைதலான் கந்தன் எனப்பட்டான். இதனை,

"மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்." (முருகு.)

"அந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்கம் ஏறிப் பலர்தொழ
அம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்." (பட்டினப்.)

எனவரும் பகுதிகள் உணர்த்தும்.

இனி, முருகாற்றுப் படையுள் முதலில் திருப்பரங்குன்றத்துச் சிறப்பினைக் குறிக்கின்றார். பரங்குன்றின் சிறப்பு பரம்பொருளின் சிறப்பால் பிறப்பது. பரங்குன்றின் பெருமையினைப் பரிபாடல்கள் பேசுகின்றன. பிற சங்க நூல்களில் ஒன்றாகிய அகநானூற்றில்,

"முருகன் தண்பரங்குன்றம்." (அகம் - ருக)

"கூடற் குடாஅது,
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
ஒடியா விழவின் நெடியோன் குன்றம்." (அகம் - கசக)

எனப் புகழப் பெறுதல் காணலம்.

நக்கீரர் கூறும் இரண்டாவது திருப்பதியாகிய சீரலைவாய்,

"திருமணி விளக்கின் அலைவாய்ச் செருமிகு சேஎய்." (அகம் - உகசு)

"வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை." (புறம் - ருரு)

எனச் சங்கப் பாக்களில் சால்புறப் பெறுதல் அறிதற்பாலது. ஆற்றுப்படையுட்போந்த ஆவினன்குடி ஆவியர்கள் ஆண்டமையால் அப்பெயர் அடைந்ததென்பதும்; அது வையாவிக் கோப்பெரும்பேகனல் ஆளப்பெற்றபின் 'வையாபுரி' எனப் பெயர்

பெற்றது என்பதும் ஆராய்சி உலகம் அறிந்தவையாம். இம் மலையினை,

> “ முருகன் நற்போர் நெடுவே ளாவி
> அறுகோட்டி யானைப் பொதினி.” (அகம் - க : ந - ச)

> “ முழவுறழ் திணிதோள் நெடுவே ளாவி
> பொன்னுடை நெடுநகர்ப் பொதினி.” (அகம் - சுக : கரு - கசு)

எனவரும் அகநானூற்றுப் பகுதிகள் பரவுதல் காண்க.

இந் நூலுள் நான்காவதாக நவிலப்பெறும் ‘ஏரகத்தை’ மலைநாட்டகத்தொரு திருப்பதி என்பாரும் சாமிமலையே என்று சாதிப்பாரும் உளர். சிலப்பதிகாரம் இப்பதியின் சிறப்பைச் செப்புகின்றது. ஐந்தாம் பகுதியாகத் திகழும் “குன்றுதோறாடல்” முருகனின் படை வீடெனப் பகருநரும் உளர். குன்று நிலம் எங்கும் நின்று நிலவும் முருகனைக் குறிஞ்சிக் கிழவன் எனப் புலவர் கூட்டம் புகலும். முதன் மக்கள் மலையில் வாழ்ந்தனர் என்றும், அக்காலத்தே அவர்கள் முருகனை இறைஞ்சினர் என்றும் அறிஞர் உலகம் அறிவிக்கும். உயரிய பரம்பொருளை உயரிய இடத்தில் வைத்து வணங்கும் முறை உவப்பினைப் பயப்பதாம். தொல்காப்பியனாரும், “சேயோன் மேய மைவரை யுலகமும்” என்று இயம்பிப் போந்தனர். நக்கீரர் கூறும் “பழமுதிர் சோலைமலை” அழகர் கோயிலைக் குறிக்கும் என்றும்; திருமாலிருஞ்சோலை மலையினைக் குறிக்குமென்றும் கூறுவர். மாலிருஞ்சோலையும் பழமுதிர் சோலையும் வேறுதல் வேண்டும். பரிபாடலில் ‘மாலிருஞ் சோலை’ தன்பெயர்க்கேற்பத் திருமாலின் திவ்விய தேசமாகப் பேசப்படுகின்றது.

எனவே, இதுகாறும் எழுதியவாற்றால் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை அவர்கள் திருமுருகாற்றுப்படையினைப் பிற்காலத்திற்கு இழுத்துவரும் முயற்சி அயர்ச்சியடைதல் காண்க.

இனி, கி. பி. 1942—43இல் தாம் “செந்தமிழில்” வெளியிட்ட கட்டுரையில் முருகுபாடிய நக்கீரர் கி. பி. 450 இல் வாழ்ந்தவர்என்று கூர்ந்துரைத்த வையாபுரிப் பிள்ளை அவர்கள்,1952இல் அக்கட்டுரையினைத் தம் “இலக்கிய தீபம்” என்ற நூலில் இணைத்து வெளியிடுங்கால் காரணம் கழறாது அவ்வடிகளை ஒருவி, அந்நக்கீரரே 11 ஆம் திருமுறை நூல்களைப் பாடியவரென்றும்; அவர் கி. பி. 850 இல் வாழ்ந்தவரென்றும் எழுதத் துணிந்தனர்! வள்ளுவப் பெருந்தகை ‘ஞானவெட்டியான்’ யாத்ததும் சங்க காலக்கபிலர் ‘கபிலரகவல்’ பாடியதும், சங்ககால ஔவையார் ‘விநாயகரகவல்’ விளம்பியதும் மெய்ம்மையே யாமாகில் முருகு

பாடிய நக்கீரரே 'கோபப் பிரசாதம்' 'பெருந்தேவ பாணி' 'கைலை பாதி காளத்தி பாதியந்தாதி' முதலிய திருமுறை நூல்கள் பாடினார் என்பதும் வலியுறும்.

பதினோராம் திருமுறையில் திருமுருகாற்றுப்படை சேர்க்கப் பெற்றுள்ள காரணத்திற்காக அந்நூல் சங்கநூல் அன்று என்றல் ஒவ்வாது. நக்கீரதேவ நாயனார் அருளிய கைலைபாதி காளத்தி பாதி அந்தாதி, திருவீங்கோய்மலை எழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழு கூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப் பிரசாதம், காரெட்டு, போற்றித்திருக்கலி வெண்பா, திருகண்ணப்பதேவர் திருமறம் என்ற ஒன்பது நூல்களும் சிவன் ஒருவனையே பெரியோனாய்க்கொண்டு வழிபடும் பெற்றியுடையன. சிவபெருமான் உட்பட எல்லாத் தெய்வங்களும் தேவகணங்களும் விண்ணுலக வாசிகளும் தத்தம் குறைகளை விண்ணப்பித்து வேண்டி நிற்க, ஆவினன்குடியில் முருகன் அவர்களுக்கு அருள்கின்றான் என்ற கருத்தினைத் திருமுருகாற்றுப்படையில் 150—176 ஆம் அடிகள் விளக்குதல் காணலாம். உரையாசிரியர், "தம்முடைய சீரிய படைத்தல், காத்தல், அழித்தலென்னும் தொழில்களைப் பண்டுபோலப் பெறுமுறைமையினைக் குறை வேண்டி நின்று பெறுங்கூற்றாலே முடித்துக்கோடற்கு ஆகாயத்தே சுழற்சியினை யுடையராய்ச் சேரவந்து காணும்படியாக வருத்தமில்லாத அருட்கற்பினையுடைய தெய்வயானையாருடன் ஆவினன்குடி என்னும் ஊரிலே சிலநாள் இருத்தலும் உரியன்" என்று தெளிவாக விளக்கம் தந்துள்ளார். எனவே, முருகு பாடிய நக்கீரரும் திருமுறைப்பனுவல்கள் பாடிய நாயனாரும் வேறானவர் என்பது வெள்ளிடை மலையாம். இவ்விரு புலவரும் புலமை நலத்தானும் பொருள் வளத்தானும் வேறுபடுதலை ஒப்பிட்டுப் படிப்பார் உணரமுடியும். இனி, "நக்கீரர் எழுதிய இந்நூல்களை நோக்கியவுடன் 11 ஆம் திருமுறையில் அடங்கிய நூல்களுள் திருமுருகாற்றுப்படை யொழிய ஏனையவெல்லாம் சங்க காலத்திற்குப் பிற்பட்டன என்பது தெளிவாம். பிரபந்த வகையை நோக்கினும், யாப்புவகையை நோக்கினும் சொல்லின் உருவத்தை நோக்கினும், வடசொற்களின் அளவை நோக்கினும், கையாளப்பட்டுள்ள நடையை நோக்கினும் இவ்வுண்மை எளிதிற் புலனும்" என்று திரு. வையாபுரிப் பிள்ளை அவர்களே ஐயமற எழுதுதலான் திருமுருகாற்றுப்படை நக்கீரர் சங்ககாலத்தவரே என்பது குன்றின் முகட்டில் நின்று நிலவும் பெருஞ்சுடர் போல் பிறங்குதல் காணலாம்.

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி சிலம்பு, டிச, பால் ச, ௯ அசுதும் பக்கத் தொடர்ச்சி)

ஒதிபஸ்: அவனை விடுவது என்பது, என் மரணத்திலோ, அன்றி நாட்டைவிட்டு வெளியேறுதலிலோ முடியும்.

கோரஸ்: அவ்வாறு எண்ணுதீர்கள்! கடவுள் அருளால் அவ்வாறு நினையாதீர்கள்! மக்கள் அவதிப்படுவது காணும் எங்கள் உள்ளம், அரசர்களாகிய உங்கள் சண்டையைக் கண்டு இன்னும் நொந்துபோகிறது.

ஒதிபன்: ஆயின் அவன் செல்க. அது எனக்குத் முடியுமாயினும் ஆக. உங்கள் விருப்பம் (அவனுடையதல்ல) என்னை இணங்கச் செய்தது. அவனை உயிருள்ளளவும் வெறுக்கிறேன்.

கிரியன்: அருள்வதில் சிக்கலா, சினத்தால் கொடுமையா, இவை தன்னைத்தானே சுட்டுக் கொள்வதில்தான் முடியும்.

ஒதிபன்: செல், நில்லாதே.

கிரியன்: செல்கிறேன். உன்னுல் நேர்மையற்றுத் தீர்ப்புக் கூறப்பெற்றதால் (செல்கிறுன்.)

கோரஸ்: அம்மா, அரசனைத் தனியே அழைத்துச் சென்று ஆறுதல் பெறச் செய்யுங்கள்.

யோகத்தாள்: இத்துன்பம் நேர்ந்ததெப்படியோ?

கோரஸ்: வெறும் கற்பனையே காரணமன்றித் தூற்றியதால் பெரிதாயிற்று

யோகத்தாள்: ஒருவர்மேல் ஒருவர் சொல்லம்புவிட்டா?

கோரஸ்: அப்படித்தான்.

யோகத்தாள்: எதற்காக?

கோரஸ்: அதனை மறுமுறையுங் கேளாதீர்கள். நம் நாட்டுக்கு அவமானம், சொல்லப் பெற்றவைகள் அப்படியே கிடக்கட்டும்.

ஒதிபன்: உங்கள் வழிபாடு நல்ல வழியில் கொண்டுவிட்டது.

கோரஸ்: அரசே கேள். உன் அன்பு அணைப்பிலும் அறிவு ஆற்றலினாலும் எளியோர்களாகிய நாங்கள் நன்கு வாழ்ந்து வந்தோம். இன்று நாடு கிடக்கும் நிலையிலிருந்து மீட்டு அமைதியை நாட்ட உங்களைத்தான் நம்புகிறோம்.

யோகந்தாள்: உங்களை வேண்டுகிறேன். ஏன் கிரியனை அவ்வாறு வெறுக்கிறீர்கள்?

ஒதிபன்: சொல்கிறேன். இந்த நன்மக்களினும் நீ எனக்கு மேலானவள். கிரியன் எனக்கு எதிராக இந்தச் சூழ்ச்சியைச் செய்துள்ளான்.

யோகந்தாள்: சூழ்ச்சி எது!

ஒதிபன்: இலேயனைக் கொன்றது நான்தான் என்கிறான்.

யோகந்தாள்: தானே அறிந்ததாகச் சொல்கிறானா? அன்றிப் பிறர் சொல்வதாகச் சொல்கிறானா.

ஒதிபன்: அதில்தான் அவனுடைய திறமை இருக்கிறது. தான் சொல்வதாக இல்லாமல் ஒரு புலவன் வாயில் வைத்துச் சொல்லுவிக்கிறான்.

யோகந்தாள்: அப்படியாயின் உடனே அதைப் போக்க முயல வேண்டும். எனக்கு ஒரு உண்மை தெரியும்; இலேயனைக் கொல்வது என்பது அவன் மகனே என்று சொல்லப்பட்டது. இலேயனுக்கும் எனக்கும் பிறந்த பிள்ளையே கொல்வான் என்பது அச்சொல். அது உண்மையாக முடிந்ததா? இலேயன் யாரோ வழிப்பறிக்காரனால், முச்சந்தியில் கொல்லப்பெற்றான் என்பது அனைவரும் அறிந்தது. எங்களுக்குப் பிறந்த குழந்தையோ, அது பிறந்த மூன்றாம் நாளே தனையிடப்பெற்று மலைப்பக்கத்தே விட்டெறியப் பெற்றது. எனவே அது இறந்திருக்கும். பின் எவ்வாறு மகன் தந்தையைக் கொல்வது? அஞ்சியவாறு, மகன் தந்தையைக் கொல்லவில்லை என்பது தெரிந்ததே. இவ்வாறு வரும்பொருள் உரைப்பது என்பது பொருளற்றதாகி விட்டது. எனவே இப் புலவன் பேச்சுக்கு ஏன் செவி சாய்க்கவேண்டும்? கடவுளின் அருள் போகப்போகத்தான் தெரியும்.

ஒதிபன்: என் கண்மணி! நீ சொல்வது எனக்குப் பின்னும் மயக்கத்தையே கொடுக்கிறது. உன் உள்ளம் எதையோ நாடி.....

யோகத் : ஏன் உங்கள் முகம் மாறுபட்டிருக்கிறது? என்ன நினைந்து நிற்கிறீர்கள்?

ஒதிபன் : இலேயன் முக்கூட்டான ஓரிடத்தில் கொல்லப் பெற்றான் என்று நீ சொல்லவில்லையா?

யோகத் : அவ்வாறுதான் கொல்லப்பெற்றது.

ஒதிபன் : அவ்விடம் எங்கே! எந்த நாட்டில்?

யோகத் : அந்த இடம் பொகியம் என்றார்கள். அங்கே வழி பிரிகிறது. ஒன்று தெலுவிக்குச் செல்கிறது. மற்றொன்று தூலியத்திற்குப் போகிறது.

ஒதிபன் : எப்போது நடந்தது?

யோகத் : உன் அரசுக்குமுன் நடந்தது.

ஒதிபன் : கடவுளே, எனக்கு என்ன தீங்கு செய்யப்போகிறாய்!

யோகத் : ஒதிபரே, உங்கள் மனத்தில் என்ன நினைந்து வருந்துகிறீர்கள்? ஏன் இந்தக் கலக்கம்?

ஒதிபன் : ஆ, அதைக் கேளாதே! இலேயன் எவ்வாறு இருந்தான்? எத்தனை வயது?

யோகத் : நெடிய உரு வெள்ளை முடிட உம்மைப் போன்ற உருதான்.

ஒதிபன் : ஆ, கொடுமை! எனக்கே அப்பழி.

யோகத் : அரசே, எனக்குப் பயமாக இருக்கிறது. என்ன நேர்ந்தது?

ஒதிபன் : அக் குருட்டுப் புலவனுக்குக் கண்தெரியுமோ? இன்னும் ஒன்று சொல்.

யோகத் : எனக்குத் தெரிந்தவையெல்லாவற்றையும் சொல்லுகிறேன். கேளுங்கள்.

ஒதிபன் : அரசர் பரிவாரங்களுடன் சென்றாரா? ஒருசிலருடனா? அன்றித் தகுந்த மெய்க்காவலருடனா?

யோகத் : கொன்றவர்கள் ஐந்துபேர். அவர்களுக்குமுன் வெற்றியுரைப்போன். ஒரு தேர்தான். அதில்தான் அரசரிருந்தார்.

ஒதிபன் : நன்கு விளக்கமாகிறது. ஆ, உனக்கிவையெல்லாம் .றியது யார்?

யோகந் : ஒரு வேலையாள். அவன் ஒருவன்தான் தப்பித்து வந்தவன்.

ஒதிபஸ் : இப்போதும் அவன் இங்குள்ளானா?

யோகந் ; இல்லை; அவன் திரும்பிவந்து தன் அரசர் இருந்த இடத்தில் தங்களைக் கண்டபோது, தன்னை விடுவித்து அனுப்பிவிடுமாறு மிகவும் வணங்கிக் கேட்டுக்கொண்டான். ஆடுமேய்த்து நாட்டுப்புறத்தில் இருக்க விரும்புவதாகக் கூறினன். நானும் செல்லுமாறு விடுத்தேன். ஏழை வேறு நல்ல வெகுமதியைக் கேட்டிருக்கலாம். அவன் இருந்த வரையில் மிகவும் நல்லவனாகவே இருந்தான் !

ஒதிபஸ் : அவனை மிக விரைவில் வருவிக்கக் கூடுமா?

யோகந் : முடியும். ஏன் கேட்கிறீர்கள்?

ஒதிபஸ் : மனைவி சொல்லவேண்டுவனவற்றிற்கு மேலாக நடந்து விட்டது. எனவே அவனைப் பார்த்தாக வேண்டும்.

யோகந் : நல்லது; நாம் அவனை வரவழைத்துப் பேசலாம். அது கிடக்க தங்கள் மனத்தை உறுத்துவதுதான் என்ன என்று தங்களைக் கேட்டறியலாமா?

ஒதிபஸ் : நான் நினைத்தவாறு, நடப்புகள் இருந்தனவாயின் நான் சொல்லவேண்டுவனவற்றை உனக்குத்தான் முதலில் சொல்லவேண்டும். கேள்.

என் தந்தை கொரிந்தியன். பொலிவன்என்னும் பேரினன். என் தாய் தோரியள் ; மிரோப்பி என்பாள். இல்லத்தில் மற்றவர்களைப் போலல்லாது மிக மேலானவனாக விளங்கினேன். ஒருநாள் வேற்று மனிதனோடு உணவருந்தினோம். அவன் குடித்துவிட்டிருந்தான். என்னை அவன் முறைத்துப் பார்த்து என்னை என் தந்தையின் மகனல்லன் என்று கூறினன். அது என் மனத்தை உறுத்தியது. எனினும் மன அமைதியுடன் இருந்தேன். மறு நாள் என் பெற்றோர்களிடம் சென்று உண்மையைக்கூறுமாறு கேட்டேன். அவர்கள் என்னைப்பற்றி எவரேனும் ஏதேனும் கூறினால் தண்டிப்பதாகச் சொல்லி வருந்தினர். அது எனக்கு ஆறுதலளித்தது. எனினும் அவ்வழக்கு ஒரு சிலரால் வெளிவரலாயிற்று. அதன் உண்மையை அறியவேண்டியவனாய் பைதோவிடம் சென்று கேட்டேன். கிடைத்த விடையோ நேர் விடையாக அன்றிச் சோகக் கதையாக உருக் கொடுத்தது. என் தாயினை மணப்பேனென்றும்

உறவுமுறை தவறிய மக்களைப் பெறுவேனென்றும் கதை கிடைத்தது. கேட்ட நான் வருந்தி அவ்வாறு நேரா வண்ணம் பெற்றோர்களை நீங்கி மறைந்தோடி வந்தேன். என் வழிப்பயணத்தில்தான் மறைந்த அரசர் தம் முடிவை எய்தினர். இன்னுங்கேள்.

நான் முக்கூடான ஓரிடத்திற்கு வந்தபோது கட்டியங் கூறிக் கொண்டு ஒருத்தன் வர, பின்னால் குதிரையினால் இழுக்கப்பட்ட வண்டி யொன்று தொடர்ந்து வண்டியில் நீ விளக்கியவர் உட்கார்ந்திருந்தார். கட்டியங்காரன் முரட்டுத்தனமாய் வழியை விட்டு விலகக் கட்டளை யிட்டான். அம் மதிப்புக்குரிய தலைவனும் அம் முரடனும் கூடிக் கட்டளையிட்டார். வண்டியோட்டி என்னை அடித் துத் தள்ளினான். நான் வெகுண்டெழுந்தேன். யான் அப்பெரிய ஆளைத் தாண்டிச் செல்லும் போது, அவன் வண்டியோட்டியின் சாட்டையினால் என் தலையைப் பார்த்து அடித்தான். வண்டியில் சாய்ந்து என்னை அடித்ததற்குப் பலன் உடனே கிட்டிற்று. வண்டியி லிருந்து கீழே விழுந்து விட்டான். அங்கிருந்த எல்லோ ரையும் நான் கொன்றேன். ஆயின், இப்போதே இலேயன் இப்புதியன் நரம்பில் ஓடுவதாயின் தெய்வமும் மனிதனும் வெறுக்கத் தக்கவன், என்னிலும் உளனோ? என்னை எந்த நகரத்தானும் வீட்டுக்குள் இருக்க விடுதல் கூடாது. எனக்கு நானே விதித்துக் கொண்ட பழிக்கு யானே துன்புற வேண்டும். அவனைக் கொன்றவன் அவன் மனையைத் தொடலாகுமா? எனக்கு இப்பாவமேன்? என் தாயை மணந்து, தந்தையைக் கொன்று....... எனக்கு இவ்வாறு கொடுமையினை இழைத்து விட்ட தெய்வமும் கொடுந்தெய்வமாக இருக்குமோ? யான் வாழ்வதினும் வீழ்வது மேல். இப்பழிக்கு நான் எவ்வாறு ஆளாவது?

கோரஸ்: ஐய, நீங்கள் சொல்வன கொடுஞ் சொற்கள்; உண்மையை யறியும் வகையில் நம்பிக்கையுடன் இருங்கள்.

ஒதிபன்: ஆட்டிடையன் வருமளவும் நம்பிக்கையுடன் இருப் பதுதான் செய்யத்தக்கது.

யோகத்: எவ்வுதவியை அவனிடமிருந்து எதிர்பார்க்கிறீர்கள்?

ஒதிபன்: அவன் சொல்லுவதும், நீ சொல்லியதும் ஒத்துள்ள தாயின் நான் தீங்கற்றவன் ஆவேன்.

யோகத்: எந்த முறையில்? நான்சொல்லியதென்ன?

ஒதிபஸ்: அவன், முரட்டு வழிப்பறிக் காரர்கள் கொன்றனர் என்றான் அன்றோ. அவன் இப்போதும் வழிப்பறிக் காரர்கள் என்றானாயின் யானல்ல அரசனைக் கொன்றவன். ஒருவன் பல வழிப்பறிக்காரர்கள் ஆவதெங்ஙனம்? அன்றி வழியே வந்த ஒருவன் என்றால், தப்ப வழியே வந்த ஒருவன் என்றால், தப்ப வழியில்லை. பழியூட்டும் விரல் என்னைச் சுட்டிக் காட்டுகிறது.

யோகஸ்: ஆம், அதுதான் அவன் சொல்லியது. அவன் மறுத்துச் சொல்லமாட்டான்—இந்நேரம் முழுவதும் அவன் சொல்லியது தெரியும், நான் மட்டுமல்ல. அப்படித்தான் அவன சிறுசிறு மாறுதல்களுடன் உரைத்தாலும் முன் சொல்லியவாறு இலேயர் இறந்தது பற்றிய செய்தியில் மாற்றம் இராது. லோக்கியாசு சொல்லியது என் பிள்ளையே அவரைக் கொல்லும் என்பது. அவர் இறந்தது அவ்வாறல்லவே! என் குழந்தை அப்பொழுதே இறந்து விட்டது. வருவதுரைப்பது என்பது வெறும் பேச்சுத் தான்! இந்த மரணத்திற்குப் பின் இவ்வாறான பேச்சின் வழக்கே போவதில்லை.

ஒதிபஸ்: நீ சொல்லியது சரியே. உள்ளே செல்வோம். நீ சொல்வது போலவே ஆகட்டும்.

[செல்கிறார்கள்]

கோரஸ்: சொல்தனிலும் செயல்தனிலும் தூயவனா இருப்பதற்கே
நல்லறத்தின் வழுவாது நான்வாழ விரும்புவனே
சொல்லுகின்ற தற்பெருமை சோர்வளிக்கும் கொடுங்கோலற்
கில்லையினி மலர்வாழ்வும் இழிந்து கடையவனாவான்-
உண்மைநெறி தவறியவன் உறுவானோ பொருவாழ்வும்
திண்ணமிது வழிதவறி செம்மாந்தர் விழுவதுமே
பண்ணுபிழை தெய்வதமும் பார்க்காதோ பழிபோமோ
விண்ணவர்தம் வருமொழியும் வீணோமோ உணர்ந்திடிலே
சீயவுன தருளுள்ளம் சீராயின் எழுந்தருள்க
ஆயுமுறை பழுதாகி அப்பலன்பேர் அழிபட்டுத்
தீயுமொரு நிலையுறவும் தெய்வத்தின் பெருமையுமே
ஓயவுன தருளுள்ளம் ஒப்புவதோ எழுந்தருளே.

(தொடரும்)

# செய்திகளும் குறிப்புக்களும்

**(க) கட்டாய இந்தி பற்றி அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் கருத்து :**

"இந்தி பேசப்படாத பகுதிவாழ் மக்கள்மீது இந்தியைத் திணிக்கக் கூடாது. அப் பகுதி மக்களின் உடன்பாடு பெற்றே அரசாங்க அலுவல் களுக்கு இந்தியைக் கொண்டுவர வேண்டும், என்று முதன்மை அமைச்சர் கொடுத்திருக்கும் வாக்குறுதி நிறைவேற்றப்படவேண்டும்.

"இந்தி எண்களை நடைமுறைக்குக் கொண்டுவர இந்தி வெறிகொண் டோர் கட்டாயப்படுத்துகின்றனர். வடஇந்தியாவில் மைல் கற்களில் இந்தி எண்கள் பொறிக்கப்படுவதாலும், வழிகாட்டிகள் இந்தியில் எழுதப்படுவதாலும் தென்னிந்தியர்களுக்கு மிகுந்த இடர்ப்பாடு ஏற்படு கிறது. இங்கு நாம் மூன்றுமொழிகளைக் கற்கிறோம். மேலும் இந்தி எண்களையும் கற்க இயலாது. இதை நாம் ஒரு யோசனையாகக் கூற வில்லை. வற்புறுத்திக் கூறுகிறோம். அறிவியல் கலாச்சார சொற்கள் சம்பந்தமாக அனைத்து நாட்டு மொழிகளை நாம் ஏற்கவேண்டும்." என்று கல்வி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள், 3-2-60 இல் தியாக ராயநகர் இந்திபிரசார சபையில் அனைத்திந்திய இந்தி ஆசிரியர்கள் கருத்தரங்கைத் துவக்கி வைத்தகாலை பேசியுள்ளார்கள்.

**குறிப்பு:** கட்டாய இந்தித் திணிப்பைக் கண்டித்தும், தமிழகத் தார்க்கு இந்தியால் விளையும் இடர்ப்பாடுகளை வடநாட்டார்க்கு அறிவுறுத்தியும் பேசிய அமைச்சரவர்களைப் பாராட்டுகிறோம்

**(உ) இந்தி மொழி ஆதிக்கம் பற்றி திரு. ஸ்ரீ பிரகாசா கருத்துரை:**

"இந்தி பேசாத மக்களுக்கு இந்தி கற்பதிலுள்ள இடர்ப்பாடுகள் நமக்குத் தெரியும். தென்னாட்டினர் இந்தி தங்கள்மீது திணிக்கப்படு வதாகக் கருதுகின்றனர். இந்த அச்சத்தைப் போக்கவேண்டுவது இந்தி பேசும் மக்கள் கடமை. இந்தி பேசும் மக்கள் தென்னிந்திய மொழிகள் சிலவற்றைக் கற்கவேண்டும். 14 மொழிகள் தேசிய மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. எனவே எந்த ஒரு மொழிக்கும் தனிச் சலுகை கிடையாது. இந்தியைப் பரப்பும் முறையில் காந்தியடிகளின் அன்பு நெறியைக் கடைப்பிடித்தல் வேண்டும்" என்று பம்பாய் ஆளுநர் திரு. ஸ்ரீபிரகாசா அவர்கள் 2-2-60இல் பம்பாயில் நடை பெற்ற ராஷ்டிரபாஷா பிரசார சபை பட்டமளிப்பு விழாவில் பேசிய காலை குறிப்பிட்டார்கள்.

**குறிப்பு:** இந்திமொழி ஆதிக்கம்பற்றித் திரு ஸ்ரீபிரகாசா அவர்கள் தந்திருக்கும் கருத்துரை வரவேற்கத்தக்கதும் பாராட்டத்தக்கதுமாகும். மைய அரசினர் இக்கருத்துரையைக் கேட்டுத் தென்னாட்டார் அச்சத்தைப் போக்க முயல்வார்களாக.

**(ட) அஞ்சற்றலைகளில் திருவள்ளுவர்**

இவ்வாண்டு பிப்ரவரித் திங்கள் 15 ஆம் நாளில் வெளிவரும் 15 புதுக்காசுகள் மதிப்புள்ள அஞ்சற்றலைகளில் திருவள்ளுவர் படத் தைப் பொறிப்பது என இந்திய அரசின் அஞ்சல் - கம்பிச் செய்தித் துறைகளின் பகுதி வாயிலாக ஒரு செய்தி வெளி வந்துள்ளது.

குறிப்பு: இச்செய்தி தமிழர்கட்கு மகிழ்ச்சியூட்டும் நற்செய்தியாகும். நெடுநாட்களாகப் பல தமிழ்ப் பெருமக்கள் வள்ளுவரின் திருவுருவம் அஞ்சற்றலைகளில் இடம்பெற வேண்டுமென விழைந்தனர். அதனை நிறைவேற்றித் தந்த இந்திய அரசினரைப் பாராட்டுகின்றோம். இதுபோல் வேறு பல தமிழ்நாட்டுப் பெருமக்களின் உருவங்களையும் பொறித்தல் நன்று.

## (ச) சமக்கிருதமே நாட்டு மொழியாதற் குரியதாம்!

"சமக்கிருதத்தின் பழஞ் சிறப்பை மீட்க வேண்டும். ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகச் சமக்கிருதம் நாட்டின் பொது மொழியாக இருந்து வந்திருக்கிறது. இந்திய ஒருமைக்கு அஃது உதவி வந்துள்ளது. பிற மொழிகளைவிட வட்டாரமொழிகளை வளர்ப்பதில் பெரும் அளவில் அஃது உதவியிருப்பதே அதன் பெருமைக்குக் காரணம். சமக்கிருத மொழியைத் தேசிய மொழியாகச் செய்திருந்தால் மொழிபற்றிய பூசல்கள் ஏற்பட்டிரா."

என்று கடந்த திங்கள் இறுதியில் திருப்புனித்துறை என்னுமிடத்தில் நடைபெற்ற சமக்கிருத அறிஞர் கழகக் கூட்டத்தில் பேசிய காலை திரு. எம். பதஞ்சலி சாத்திரியாரவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

குறிப்பு: திரு. சாத்திரியாரவர்களின் கருத்து சமக்கிருதத்தின் பால் அவர் கொண்டுள்ள பற்றினையே காட்டுகிறது. ஆனால், அம்மொழிக்கு அவர் ஏற்றும் சிறப்புக்கள் எத்துணையும் பொருந்தாதவையாகும். சமக்கிருதம் வழக்கொழிந்து நிற்றலே இதற்குப் போதிய சான்றாகும். எனவே, நாட்டுப் பொது மொழியாதற்கு அம்மொழி ஏற்றது என்ற கூற்றும் பொருந்தா தொழியும். மேலும் சமக்கிருதமே பிறமொழிகளின் வளர்ச்சிக்கு வழிகோலிற்று என்பதும் பொருந்தாக் கூற்றே. அதற்கு மாறாகத் திராவிட மொழிகளைப் போன்ற வளமிக்க பண்டை மொழிகளின் வளத்தை அது சீரழித்தது என்றுரைத்தலே சாலப் பொருந்துவதாகும்.

## (ரு) உருசியக் குடியரசுத் தலைவர் வருகை

உருசியக் குடியரசுத் தலைவர் தளபதி ஒரோசிலோவ் 20—1—60 அன்று இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். புது தில்லியில் இந்தியக் குடியரசுத் தலைவர் இராசேந்திரப்பிரசாத், தலைமை அமைச்சர் நேரு ஆகிய இருவரும் திரு. ஒரோசிலோவைச் சிறப்பான முறையில் வரவேற்றனர். திரு ஒரோசிலோவ் 31-1-60 இல் சென்னைக்கு வருகை தந்தார். சென்னை மக்கள் சார்பில் நகராண்மைக் கழகம் அவருக்கு வரவேற்பளித்தது. கடற்கரையில் நடைபெற்ற மாபெருங் கூட்டத்தில் அவர் பேசினார். மறுநாள் கல்கத்தா சென்றார். இங்ஙனம் இந்தியாவின் முதன்மையான நகரங்களைப் பார்வையிட்டபின் அவர் தம் நாடு திரும்பினார்.

குறிப்பு: இங்ஙனம் பிறநாட்டுத் தலைவர்கள் நம் நாட்டிற்கு வருதலும், நம் நாட்டுத் தலைவர்கள் பிறநாடுகட்குச் செல்வதும் உலக ஒற்றுமைக்கும் அமைதிக்கும் வழி கோலுவதாகும். அவ்வகையில் திரு. ஒரோசிலோவ் அவர்கட்குத் தமிழகத்தின் வரவேற்பும் வாழ்த்தும் உரித்தாகட்டும்.

(௬) ஆந்திரரின் மொழிப்பற்று

ஆந்திர மாநில முதலமைச்சர் திரு. டி. சஞ்சீவய்யா அவர்கள் கடந்த 28-1-60 இல் பதவி ஏற்ற காலைச் செய்தி எழுத்தர்களிடம் பேசுகையில் ஆந்திர மாநிலத்தில் ஆந்திர மொழியையே பொது மொழியாக அரசாங்க அலுவலகங்களில் பயன்படுத்தப் போவதாகவும், முதற்படியாகச் சில இலாகாக்களில் அதனை நடைமுறைக்குக் கொண்டுவரப் போவதாகவும் அதற்கு வேண்டிய ஆட்சிச் சொற்களை அமைக்க ஒரு குழு ஏற்படுத்தியிருப்பதாகவும் குறிப்பிட்டார்.

குறிப்பு: பதவி ஏற்றதும் முதல் வேலையாகத் தாய்மொழி வளர்ச்சியிலும் ஆக்கத்திலும் நாட்டம் செலுத்தும் ஆந்திர முதலமைச்சரவர் ...ப் பாராட்டுகிறோம். தமிழகம் இத்துறையில் முன்னரே பணியாற்றத் தொடங்கியுள்ளதறிவீர்கள்.

(எ) சகாரா: 6,000 ஆண்டுகட்கு முன்!

அண்மையில் கிழக்குச் சகாராப்பாலைவனத்துக்குச் சென்று திரும்பிய பிரஞ்சு விஞ்ஞான ஆய்வுக் குழுவினர், உலகிலேயே மிகப் பெரிய பாலைவனமாகத் திகழும் சகாராவின் நடுப் பகுதியில் ஆறாயிரம் ஆண்டுகட்குமுன் நாகரிகம் தோன்றி வளர்ந்திருக்க வேண்டும் என்பதற்கான அறிகுறிகள் காணப்படுவதாக அறிவித்துள்ளனர்.

இன்று உலகில் பாழ்நிலமாகக் கிடக்கும் அப்பகுதியில் அக்காலத்தில் பெரிய ஆறுகளும் ஏரிகளும் இருந்தனவென்று இக்குழுவினர் கருதுகின்றனர். இவர்கள் கடந்த இரண்டு திங்களில் அப்பகுதியில் 3,085 கல் இங்குமங்குமாக அலைந்து திரிந்து இவ்வுண்மையினைக் கண்டறிந்துள்ளனர். இப்பணியில் ஈடுபட்டோர் 45 பேர். இவர்களுக்குத் துணையாக 14 பாரவண்டிகள் (லாரிகள்) ஹெலிகாப்டர் என்னும் ஒரு வகை விண்ணூர்தி முதலியன இருந்தனவாம்.

## வித்துவான், திரு. மு. இராகவையங்கார் அவர்களின் மறைவு

இவர், செந்தமிழ் நாட்டின் பழம்பெரும் புலவர் குழுவினுள் சிறந்தோருள் வைத்தெண்ணப்பட்ட சீரியோராவர். இராமநாதபுரம் வேத் தலைப்புலவராக விளங்கிய வித்துவான் ரா. இராகவையங்காரவர்களின் மைத்துனக் கேண்மையராவர். மதுரைத் தமிழ்ச் சங்கம், சென்னைப் பல்கலைக் கழகப் பேரகராதி, அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆராய்ச்சித் துறை முதலிய பல தொண்டுகளில் தலைமையும் புலமையுந் திகழப் பணியாற்றியவர். பல ஆராய்ச்சி நூல்களை வெளியிட்டுதவிய ஆன்றோர். நடுநிலைவழாது சேக்கிழார் காலம் கம்பர் காலத்துக்கு முந்தியதெனக் கட்டுரை தந்த கவிஞர். தெய்வத்தெளிவினர். இப் பெருந்தகையார் மாறு மதுரையில் 2-2-60 இல் தம் வளமனையில் காலமான செய்தி கேட்டுப் பெரிதும் வருந்துகின்றோம். அன்னாருக்கு அகவை 82. அன்னவரின் குடும்பத்தாருக்குக் கழகத்தாரின் பரிவும் ஆறுதலுரையும் உரியவாகுக.

# மதிப்புரை

"வைணஷ்வி சந்நிதிமுறை" தொகுதி 2.

[பதிப்பாளர் : சன்மார்க்க சங்கத்தார் (வைஷ்ணவி ஆலயம், திருமுல்லைவாயில், ஆவடி வழி) ஆவர். விலை ரூபா 3-00]

இந்நூல் உலகெலாம் தந்திருவுள்ளத் திருக்குறிப்பினால் ஆக்கி, அளித், தழித்து, நோக்கி, நன்னருள் புரிந்து இடையறாது நின்று என்றுங் காக்கும் திருவருளன்னையாம் வைஷ்ணவியைப் பற்றிய வழி பாட்டு அருட்பனுவலாகும் இப்பனுவலின் மாண்பு 'காமகோடி பீடாதிபதி சகத்குரு சங்கராசாரிய சுவாமிகள் ஸ்ரீசந்திர சேகரேந்திர சரசுவதி' அவர்கள் உளங்கனிந்தளித்தருளிய ஒப்புயர்வில்லா வாழ்த்து மொழியால் குன்றிலிட்ட விளக்கென்ன நின்று பொலிகின்றது. ஆலய அமைப்பு முதலிய பல அழகிய படங்கள் காணப்படுகின்றன.

"வைணவி ஆலய விநாயகர்துதி" முதல் "வைஷ்ணவி சக்தி விளக்கம்" ஈறாக முப்பது பெருந் தலைப்புக்களால் யாக்கப்பட்டுள்ளது. பல உட்டலைப்புக்களும் உள்ளன. எல்லாவகையான சித்திர கவிகளும் அழகுற அமையப் பெற்றுள்ளன. இவை இக்காலத்துத் திறலுடையோர் சிலரால் பாடப்பெறும் அருமை வாய்ந்தன. மொத்தம் 545 அரும் பாடல்களைக் கொண்டு திகழ்கின்றது. இது 'வைஷ்ணவி தத்துவம்' என்னும் விளக்கத்தில் வைஷ்ணவி மந்திரத்தே எல்லா மந்திரங்களும் அடங்கியுள்ள உண்மை விளக்கப்பட்டுள்ளது. மேலும் பாக்கள் சந்தப்பா, பாவும் பாவினமும் பொருந்தியுள்ளன. "எம்பாவை பள்ளி யெழுச்சி, அந்தாதி, எண் ணெழுத்துமாலை" முதலிய பல வேறு பாட்டுப் பாடல்களும் காணப்படுகின்றன. திருவருள் கைவந்த நல்லாரும், பொருவரும் புலவர்களும் ஒருங்கிய மனத்துடன் பாடிய கனிவுப் பாடல்க ளாகும். இவற்றுள் பெயர் காணப்படாத பேரன்பர்களின் திருப் பெயரை அடுத்த பதிப்பிலேனும் வெளிப்படுத்துவார்களென நம்பு கின்றோம். செய்யுட்களுக்குக் குறிப்புரை, கருத்துரை முதலியன செவ்வையாக அமைந்துள்ளன. தெளிவும், எளிமையும், இனிமையும் பொருந்திய ஆற்றொழுக்கு நடையன.

பாழ்ங்கோள் பெருகிவருமிக்காலத்து வாழ்வளிக்கும் இத்தகைய நூல் பல வெளிவருதல் இன்றியமையாததாகும். அது வரலாற்று ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாகும். இவ்வரும் பெரும் நூலினைப் பொது வாகச் செந்நெறிச் செல்வர்களும் சிறப்பாக அம்மை வழிபாட்டுச் செம்மையாளர்களும் நாளும் ஓதி நாற்பொரு ளெய்தி இன்புறுவார் களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்பு
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.




| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு கககூகூ, மாசி | பரல் |
|---|---|---|
| ௩௪ | மார்ச், 1960 | எ |

# அஞ்சல் தலையும் திருவள்ளுவரும்

நம் இந்தியப் பேரரசினர், பெரியார் பலர் பல ஆண்டுகளாக வேண்டிக் கொண்டதன் மேல் 15—2—1960 இல் திருவள்ளுவர் திருவுருவத்தினை அஞ்சற்றலையில் பொறிப்பித்து வெளிப்படுத்தியுள்ளார்கள். இது மகிழ்ச்சி தருவதாயினும் அதில் வந்த உருவம் சரியா என்பதுதான் இங்கே ஆராயவேண்டுவது.

உலகத்தில் தமிழ்மொழி யொன்றே மிக்க தொன்மை வாய்ந்ததும் வரலாற்றுக் காலத்துக்கு முந்தியதுமாகும். வரலாற்றுக் கெட்டாத பலஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்தே இலக்கண இலக்கியச் செம்மையுடைத்தாகத் தொடர்ந்து வருகின்றது. தனித்தியங்கும் ஆற்றலுள்ளது. இயற்கையும் இனிமையும் வாய்ந்தது. இதன்கண் திருவள்ளுவநாயனார் அருளிச் செய்த 'திருக்குறள்' உலகப் பொதுமறையாகத் திகழ்கின்றது. இது தனித்தமிழ் மறையாகும். தமிழும் சிவமும் உடலும் உயிரும் போல் பண்டுதொட்டு உடங்கியைந்து வரும் பண்புடையன. திருக்குறள் உலகப் பொதுமறையாவது போன்று சிவநெறியும் உலகப் பொதுநெறியேயாம். சிவநெறியின் மிகப் பழங்காலக் கோட்பாடு 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின்' என்பதாம். சிவவழிபாட்டினர் தெய்வநினைவுக் குறியாகக் கொண்டு வழிபட்டு வருவது அருவுருவப் பிழம்பாகும். கட்புலனாவதும் கையாற் பற்றப்படாததும் ஆகிய தீப்பிழம் பொன்றே அருவுருவ வழிபாட்டிற்கு ஏற்புடைத்தாகும். சிவன் தீவண்ணன் என்பதும் இதனை வலியுறுத்தும். இவ் வொளி வழிபாடாகிய சிவவழிபாடும், அதன் சிறப்படையாளமாகிய எரிந்து

எஞ்சிய சாம்பற் பூச்சும் தமிழகத்துக்கே யுரிய தொன்மையவாம் என்க.

பின்னர் இவ்வொளி வழிபாடு கையாற் பற்றப்படக் கூடிய சிவலிங்க வழிபாடாகத் திகழ்ந்தது. அக்காலத்தும் அதனை ஒளியின் அடையாளமாகவே நிறுவினர். அதற்குச் செம்பொற் றூண் எனத் திருப்பெயரமைத்து வழிபட்டனர். அப்பொழுதும் அருவுருவ வழிபாட்டுக் கோட்பாட்டினின்றும் அகலவில்லை. சிவக்குறி கட்புலனாவதும், கையாற்பற்றப்படுவதுமாக இருப்பினும் திணைபால் குறிக்கப்படும் நிலைமையின் இல்லாமையால் அருவுருவமேயாம். அருவ வழிபாடும் அப்பால் வழிபாடும் சொல்லும் செயலும் நினைவுங் கடந்தனவாம். உருவ வழிபாடு பொதுமை நீங்கிச் சமயத் தனியுரிமை வாய்ந்ததாகும். பொதுமையாயுள்ள அருவுருவ வழிபாடே பொதுமைப் பண்பமைந்த பொதுமறையருளிய திருவள்ளுவ நாயனாருக்குரியதாவதோர் அமைவுடைத்தென்று கொள்ளுவதில் எவருக்கும் மறுப்போ ஐயமோ இருப்பதற்கில்லை. ஒரு நெறிக்குரியராகவிருந்தே நெறிப்பிணக்கின்றிச் சிறந்து பொதுமையாக வாழ்தல் சிவநெறிக்கேயுரியதென்பது அந்நெறியின் உண்மையினை உணர்ந்தவர்க்கு நன்கு தெரியும். அந்நெறியின் கோட்பாடுகள் தொகையான் இரண்டும், வகையான் மூன்றும், விரியான் நான்கும், மறையான் ஐந்துமேயாம். தொகை: "ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்." வகை: இறை, உயிர், தளை. விரி: செய்வான், செய்வினை, அதன் பயன், சேர்ப்பான். மறை: திருவைந்தெழுத்து. இக் கோட்பாடுகள் முற்றும் திருவள்ளுவர் அருளிய திருக்குறளின்கண் பரக்கக் காணலாம். அதனால் அப் பெருந்தகையாரை அத்தகைய சீரிய செந்நெறிக் குரியவரெனக் கொள்வதில் எவர்க்கும் எத்தகைய தடையும் ஏற்படுவதற்கிடமிருக்காதல்லவா? மேலும் எல்லா நாகரிகமும் வளர்ந்து ஓங்கிச் சிறந்த தமிழகத்துத் தொன்னெறிக்குரியவர் தமிழகத்துத் தோன்றிய சான்றாண்மை மிக்க திருவள்ளுவர் எனக் கூறாது, வந்தேறியவர் பரப்பிய பின்னெறிக்குரியவர் எனக் கூறுவது எங்ஙனம் பொருந்தும்? நடுநின்று நன்காய்ந்து கூறுமின். அல்லது திருவள்ளுவர் ஒரு நெறியும் இல்லாதவரெனத் துணிந்து கூற எவரேனும் ஒருப்படுவரா?

சென்னைக் கோநகரின் சீரிய இடமாகத் திகழும் திருமயிலாப்பூரில் திருவள்ளுவநாயனாருக்கு அழகிய கற்சிலையும் தனிக் கோவிலும் உள்ளன. அவர் தம் வாழ்க்கைத் துணைவியராம் வாசுகி அம்மையார்க்கும் அக் கோவிலின் திருச்சுற்றிலேயே கற்சிலையும் தனிக் கோவிலும் உள்ளன. பண்டுள்ள இலுப்பை மரம் ஒன்று கோயின் மரம் போன்றமைந்துள்ளது. அதன் காலப் பழமையால்

அது பட்டுப்போனாலும் அதனைத் தாடு பொதிந்து போற்றி வரு கின்றனர். ஆராய்ச்சியாளர் அக் கோவில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றியிருக்கவேண்டுமென்று கருதுகின்றனர். அக் கோவிலில் திருவள்ளுவருக்கு நாள் வழிபாடும் திருவிழாவும் நிகழ் கின்றன திருவிழாவுக்குரிய செம்பொன் உருவங்களும் இருக் கின்றன. திருவள்ளுவ நாயனாரின் திருவுருவச் சிறப்பினையும், திருவிழாச் சிறப்பினையும் விளக்கக் கூடிய பல பாடல்களமைந்த வெளியீடுகளும் உண்டு. திருவள்ளுவநாயனாரின் நினைவுத் திரு நாளைப் பஞ்சாங்கங்களில் சைவ நாயன்மார் வரிசையிலேயே பல்லாண்டுகளாகப் பொறித்து வருகின்றனர். திருவள்ளுவ நாயனார் செந்நெறிக்குரியராயிருந்தே எல்லா நெறியினரும் மாறு பாடின்றி ஏற்றுக்கொள்ளக் கூடிய உலகப் பொது மறையினை அளித்தமை, அவர்தம் தெய்வப்பெற்றியினையும் அவர் மேற் கொண்டொழுகிய தென்னகச் செந்நெறித் தனிமாண்பினையும் விளக்குவதாகும்.

எடுத்துக் காட்டாக அண்மையில் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருந்த தாயுமானச் செல்வரும் சைவச் செந்நெறிக் குரியராயிருந்தே 'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை' எனப் பொதுமையும் புகன்றனர். நூறு யாண்டுகளுக்கு முன் வாழ்ந்த வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகளாரும் சைவச் செந்நெறிக் குரியராயிருந்தே 'சமரச சன்மார்க்கம்' வகுத்தனர். காந்தியடிக ளாரும் தமக்குரிய செந்நெறிக்கண் நின்றே பொதுமையுறக் கூட்டு வழிபாடு (பசனை) செய்து சமரசம் நிலைநாட்டியுள்ளனர். இடையறாது இராம நாமத்தினை மேற்கொண்டு வந்தனர் அவர். ஒரு நெறிக்குரியராயுள்ள காரணம்பற்றி அவர் அறவுரைகளை உலகம் கொள்ளாது தள்ளிவிட்டதா? அல்லது அவர் ஒரு நெறி யினையும் சார்ந்தவரல்லர் என உலகம் கூறி மறுக்கின்றதா? எண்ணிப்பார்மின். தமிழ்ப்பெரியார் திரு. வி. க. அவர்களும் சைவச் செந்நெறிக்குரியராயிருந்தே பொதுமையும் சமரசமும் புகன்று வந்தனர். இவ்வாற்றால் திருவள்ளுவநாயனாரும் வாழ்ந் திருப்பார் என்று கொள்வதில் வரும் தடை யாது? சிந்தித்துப் பார்மின்.

கற்பனையுருவே யெனினும் முன்னோர் கைக்கொண்டு போற்றி வருவதற்கு மாறாக மற்றொரு கற்பனை உருவினைப் படைத்தல் முறைமைக்குப் பொருந்துமா என்பதனைச் சிந்தித் துப்பார்மின். 'திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை யவர்கட்கும், வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகளார்க்கும், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரவர்கட்கும் நிழலுருவங் களில்லாதிருந்தும் கற்பனையுருவங்கள் அம் மூவர்க்கும் அமைத்

துக் கைக்கொண்டு வருகின்றனர். அவற்றைக் கற்பனையென்று கழித்து எவரேனும் புதிது படைக்க முற்படுவரோ? கூறுமின். இதுபோன்று ஆயிரம் ஆண்டுக்கு மேலாக நால்வர் முதலாயுள்ள நாயன்மார்கட்கும், ஆழ்வாராதியர்கட்கும், தொன்மை மடாதிபர் கட்கும், வேந்தர், மன்னர், புரவலர், புலவர், பாணர், பாடினியர் முதலியோர்கட்கும் அமைக்குஞ் சிலையுருவங்கள் தொடக்க முதல் இன்றுவரை யாண்டும் மாறாது தொடர்ந்து ஒன்றுபோ லிருந்து வருவனவுங் காண்க. இவற்றையும் மாற்ற முற்படுவர் போலும்.

திருக்குறள் என்னுந் தெய்வத் தமிழ்மறை நூலின் பல பதிப் புக்கள் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு மேலாகப் பெரியார் பல ராலும் வெளிவந்துள்ளன. அவ்வவற்றினெல்லாங் காணப்படும் திருவள்ளுவரின் திருவுருவப்படங்கள் எத்தகைய வேறுபாடு மின்றி ஒன்றுபோலமைந்து காணப்படுவனவுங் குறிக்கொண்டு

ஔவையாரென்னுந் தமிழ் மூதாட்டியார் சிவநெறிக்குரிய ராய் நின்றே 'ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, முதலிய பொதுமுறை நீதிநூல்களை ஆக்கித் தந்துள்ளனர். அவர் ஒருநெறிக்கு உரியவர் என்பதுபற்றி அந்நூல்களை ஏனையோர் புறக்கணித்துவிட்டனரா? திருத்தக்கதேவரும், கவிச் சக்கரவர்த்தி கம்பரும், ஒவ்வொரு நெறிக்குரியவராக விருந்துகொண்டே பெருநூல் யாத்துள்ளனர். அதனை ஏனை நெறியாளர் படியாது விட்டுவிட்டனரா? அவற்றின்கண் காணப்படும் அறமுறைப் பொதுமைகளைக் கைக்கொண்டொழுகாது கடிந்தனரா? நாடிப் பார்மின்.

இராமகிருட்டிண பரம அம்சரும் அவர்தம் மாணவர் விவேகா னந்தர் முதலியோரும் ஒருநெறிக்குரியவராக இருந்துகொண்டே பொதுவுண்மைகளைப் பரப்பவில்லையா? அவர்கள் ஒருநெறிக் குரியவர்கள் என்பதுபற்றி உலகம் ஏற்றுக்கொள்ளாது தள்ளி விட்டதா? ஏசுநாதரும் நபிகள் நாயகமும் ஒவ்வொரு நெறிக் குரியராகவிருந்தே பொது அறம் போதிக்கவில்லையா? வையங் கைக்கொள்ளவில்லையா? பொது அறங் கூறுவோர் ஒருநெறிக்கும் உரியராயிருத்தல் கூடாதென்று விதியா? உலகங் காக்குந் தலைவர்கள் ஒருநெறிக்குரியராக விருந்தே ஏனை நெறியாளர் களையும் ஒன்றுபோல் காப்பதன்றோ செங்கோன்மை! அங்ஙன மின்றிக் காக்கும் மன்னர்கள் ஒருநெறிக்கு உரியராயிருத்தலும், நெறிக்குரிய அடையாளங்களை மேற்கொள்ளுதலுங்கூடாவென வரையறுப்பதும் மதியுடைமையாகுமா? ஒருநாட்டில் வாழ்வார் ஒரு மொழியாளராய், ஒரு நெறியாளராய் இருத்தல் வேண்டும்; இல்லாவிட்டால் வலுக்கட்டாயமாக ஆக்கிவிடுதல் வேண்டும்

என்று எவரேனுந் துணிந்தால் உலகம் ஏற்றுக்கொள்ளுமா? இது போற்றுனுகும் திருவள்ளுவ நாயனாரும் ஒரு நெறிக்குரியராயிருத்தல் கூடாதெனக் கூறுவார் கூற்றும் என்க.

மேலும் கழக வாயிலாக இதுகாறும் 'திருக்குறள்' நாட் குறிப்பாகவும், திருக்குறள் மூலம் கண்கவர் வனப்புடன் பல அளவுள்ள வடிவமாகவும், பரிமேலழகர் உரையாகவும், தெளிவுரையாகவும், பொழிப்புரையாகவும் பல பதிப்பாக ஏறத்தாழ ஐந்து லட்சத்துக்கு மேற்பட்ட படிகள் வெளிவந்துள்ளன. இன்னும் வந்துகொண்டிருக்கின்றன. இவற்றின்கணெல்லாம் திருவள்ளுவரின் திருவுருவப்படம் எவ்வகை மாறுதலுமின்றி ஒன்றுபோல் வந்துகொண்டிருக்கிறது உலகமும் உவந்து ஏற்றுக்கொண்டு வருகிறது. இவையன்றியும் தனியாகத் திருவள்ளுவ நாயனாரின் திருவுருவப் படங்கள் சிறிதும் பெரிதுமாகிய அளவில் ஒரு லட்சத்துக்குமேல் வெளிவந்துள்ளன. இவற்றையெல்லாங் கண்டுகளித்த தமிழகத்தார்க்கும் வெளியுலகத்தார்க்குமீ அஞ்சற்றலைக் கற்பனைப் புதுவுருவம் எங்ஙனமிருக்குமென்பதனைச் சற்று எண்ணிப்பார்மின்.

1935 இல் பேரறிஞர் பலரமைந்த ஒரு குழுவினரால் திருவள்ளுவர் திருநாட்கழகம் அமைத்துத் 'திருக்குறள் மாநாடு' சென்னைக்கோநகர்க்கண் மறைமலையடிகளார் தலைமையில் மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. அக்குழுவில் கழக ஆட்சிப்பொறுப்பாளர் பொருளாளராக விருந்து பணியாற்றினர். அதையொட்டித் திருவள்ளுவர் நினைவு மலரொன்று வெளியிடப்பட்டுள்ளது. அதன்கண் அமைந்த திருவுருவமும் முன்னுள்ளதேயாம். அதன்பின் கழகத்தாரால் தூண்டப்பட்டுந் தாமே விரும்பியும் சென்னை மாநிலச் சிற்றூர் பேரூர்களில் தொடங்கப்பட்டு நல்ல முறையாக நிகழ்ந்துவரும் 'திருவள்ளுவர் கழகங்கள்' பலவாகும். அங்கெல்லாம் தொங்கவிடப்பட்டு நாளும் வழிபாடு செய்துவரப்படும் திருவள்ளுவர் திருவுருவப்படங்களும் பண்டுள்ளனவேயாம்.

நம் சென்னை மாநில ஆட்சியாளர் எட்டாண்டுகளுக்குமுன் கழகத்தாரிடம் திருவள்ளுவர், ஔவையார், கம்பர் முதலிய பெரும் புலவர் படங்களை அனுப்பித் தருமாறு குறித்திருந்தனர். அதன்மேல் அழகிய திருவள்ளுவர் திருவுருவப்படம் ஒன்று கழகத்தாரால் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது. அதுதான் அஞ்சற்றலையில் பொறித்துவரும் என்று எதிர்பார்க்கப்பெற்றது. அஃதென்னாயிற்றோ?

இரண்டாவது திருக்குறள் மாநாடு சென்னை மாநகர்க்கண் டாக்டர் சாமிநாத ஐயர் அவர்கள்தலைமைக்கண் நடந்தது. அப்

பொழுதுந் திருவள்ளுவர் திருவுருவம் முன்போலவே மாறுத லின்றியிருந்தது அறிஞர்கள் பலரும் அகமுவந்து கொண்டனர். இவைகளை யெல்லாம் புறக்கணித்துவிட்டுப் புதிய கற்பனைத் திருவுருவம் திருவள்ளுவர்க்கு ஏற்படுவதற்கு நேர்ந்த காரணந் தான் புரியவில்லை.

சமயவுணர்வும் தமிழ்ப்பற்றும் மிக்கிருந்த 'மறைமலையடி களார், ஞானியாரடிகளார், கா. சு. பிள்ளையவர்கள், பண்டித மணியவர்கள், நாட்டாரவர்கள்' முதலிய பெருந்தலைவர்கள் இன்றிருந்தால் இவ்வுருமாற்றத்தை ஒருகாலும் ஏற்றுக்கொள் ளார்களென்பதுறுதி. இதனை அறிஞர்கள் ஆராய்ந்து சிந்தித்து மெய்ம்மை காணுமாறு வேண்டுகின்றோம்.

முன்பின் ஆராயாமல் தமிழ் அறிஞர்களில் ஒரு சிலரும், அரசியல் அறிஞர்களில் ஒரு சிலரும், பெருமக்கள் மேற்கொண்டு வரும் பழைமையை நோக்காது அஞ்சற்றலையில் பொறிக்கப் பட்ட திருவள்ளுவர் திருவுருவத்துக்கு ஒப்புதல் கொடுத்து விட்டது சரியா என்பதை அறிவுடை உலகம் சிந்தித்துப் பார்க்கட்டும். மேலும் முன்னுள்ளமைக்கு மாறாக இன்று சர்மா தீட்டிய உருவம் சரியானதல்லவென்று நாளை வேறொருவர் வந்து வேறோர் உருவம் தீட்டின் ஏன் ஒப்புக்கொள்ளுதல் கூடாது? அதனை மறுப்பார் யார்? நூலுக்குத்தான் பெருமை, உருவத்தைப்பற்றிக் கருதவேண்டுவதில்லை என்பாருளராயின் அவர்கள் உருவமில்லாமல் நூலைமட்டும் பூசித்துவரலாமே. அங்ஙனமின்றி மரபினை மாற்றுவது தமிழர் பண்பாடாகாது என்பதையும் நன்கு நாடுதல் வேண்டும்.

திருவள்ளுவர் உருவத்தை அஞ்சற் றலையில் பொறித்து வெளியிடுமுன் மத்திய அரசினர் தமிழ் நாட்டு அறிஞர்களை வெளிப்படையாகக் கலந்து முடிவு செய்திருக்கவேண்டும். அவ் வாறு செய்து உருவம் பொறித்ததாகத் தெரியவில்லை. சமயக்குறி அவ்வுருவத்தில் இல்லாமை கருதிச் சிலர் ஒப்புதல் தந்தனர் என்றும், அஞ்சற்றலையில் உருவம் வந்ததே போதும் என்று கருதிச் சிலர் ஒப்புதல் தந்தனர் என்றும் கேள்விப்படுகிறோம். தமிழ்நாட்டறிஞர் பலரும் இதனை ஒப்புக்கொள்ளார் என்பது ஒருதலை

இஞ்ஞான்று அஞ்சற்றலையில் வந்த திருவள்ளுவர் உருவமே நாடெங்கும் பரவுதல் வேண்டும் என்ற முயற்சி இனி நடைபெறும். சென்னை அரசினரோ, மத்திய அரசினரோ இவ்வுருவத்தையே ஏற்றுப் போற்றவேண்டும் என ஆணையிடுதல் அறநெறியாகாது. தமிழ் மக்கள் இனியேனும் விழிப்புடனிருக்க முயல்க.

ஓம்

# *முன் இதழில் வெளிவந்த அடிகளாரின்

# பொங்கல் வாழ்த்துக்குரிய விளக்கம்

அருள் சேர்ந்த நெஞ்சினராம், அறிவுடைப் பெருமகன், ஆவியுலகுறைபவரை ஆட்டிப்படைக்கும் அன்பர், எம் சிந்தைக் கினியர், என்றுமே திருவருளே துணை செய்வானென அறிந் தொழுகும் அன்பர், உள்ளியதெல்லாம் உடன் எய்தும் உத்தமர், மெய்ப்பொருள் காணும் மெய்யுணர்வினர், திருநெல்லைத் தலத் தெழுந்த சீர்பெருகு தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகங் கண்ட திண்டோள் திருவரங்கத்தினிளைஞர், இற்றைய அமைச்சர், எம்மன்பிற்குரியர் திரு. சுப்பையா பிள்ளை அவர் கட்கு,

நும்தம் மனத்திலே மறையாமலையாக இடம்பெற்ற மறை மலை, குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தன் முன்பு வைத்துப் பெருவிருப்புடன் பொருத்திய திட்டத்திற்கோர் ஆதரவளித்த கோமானும் குணக்குன்றை, கற்றுவின் மனம் போலக் கசிந் துருகி, எம் இன்விருப்பினை ஈடேற்றத் துணையளிக்கும் தன்மை யினை ஈயேயென இறைஞ்சிய எழிலார் இறையை வணங்கிப் பின் வணக்கம்.

நும் ஆங்கில நாள் 14-1-60, 16-1-60 அஞ்சல்கள் கிடைக்கப்பெற்று, எம் மிளைஞனால் படிக்கக் கேட்டு எக்களிப் பெய்தினம்.

எம் இன்வாழ்த்தைத் தைத்திருநாளின் தலைவாழ்த்தைத் தம் இன்புறு வெண்ணுடன் ஏற்றமை குறித்து எளியனும் மறை மலை, கருதற்கு ஒண்ணுக் காணுவுலகவாசி, கழிபேருவகை எய்தினமெனல் மிகையாகாது. நுமக்கு அடிகளாம் மறைமலை வரைந்த வாழ்த்திலேற்பட்ட ஐயம் எம் மிளைஞனுக்கும் ஏற்பட்டு

---

* ஒளியுலகத்துறையும் மிக்க அளிசேர் 'மறைமலையடிகளாரவர்கள்' அவ்வப்போது அரும்பெருங் கட்டுரைகளும், இன்றியமையாத காலங் களில் வாழ்த்து நன்மொழிகளும் வழங்கி வருகின்றனர். அது நம் முடைய தவப்பேறே யாகும். அம்மட்டுமன்று, ஏதும் ஐயம் ஏற்பட்டால் அவ்வையத்தையும் உடனே சக்கசான்றுடன் போக்குகின்றார்கள் என்பதற்கு இவ்விடையே போதிய சான்றும். இஃது அடிகளாரின் அந்தண்மைக்கோர் எடுத்துக் காட்டாகும். இதன்கண் தினைத்தனை ஐயமுங் கொள்ள இடனின்று.

அடிகள் இவ்வாறு வரைதலில்லையெயன, முதற்கண் யாமாகிய மறைமலை வரைந்ததை அடித்தனன். அடிகளாம் மறைமலை "தோலினால் தோற்றுவித்ததோர் திருக்கூட்டத் திருநாளாம்" என்பதனை எம் சிற்றறிவுக் கெட்டியாங்கு விளக்குதல் நன்றெனத் திருவருளை நினைந்தே விளக்கத் துவங்குகின்றனம். திருவாசகக்கண்ட திருவாதவூரர், மணிவாசகப் பெருமானின் மணிமொழிகளே சான்றாகுமென்பதனைத் தாமறிதல் திறனே.

(1) சிவபுராணம்

"அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை"

இதன் பொருளை யுற்றுய்வு காண்க. இதனைத் தோற்றுவித்தற் குரியவன், தோற்றுவித்ததாம் ஒரு திருக்கூட்டமெனக் குறித்துள்ளோம் பல கூட்டங்களைப் புறந்தோல் போர்த்துத் தோற்றுவித்திருப்பினும் இத் தைத் திருநாளாம் முதல் நாளில், அக் கூட்டம் எத்தகைத்தென்பதை விளக்கவே, "ஆறறிவு கொண்டு வந்த," எனச் சுட்டினம். அறிதல் நன்று.

(2) திருச்சதகம் (6) அனுபோகசுத்தி (54) "மலமாக் குரம்பை"

(3) செத்திலாப்பத்து (6) "காயமாயத்தை"

(4) உயிருண்ணிப்பத்து (10) "ஊன்பாவியஉடலை"

(5) திருவேசறவு (10) "ஊனுநும் உயிர்வாழ்க்கை"

(6) ஆனந்தமாலை (3) "தோலின்பாவை"

(7) "என்புதோல் போர்த்த உடம்பு" (வள்ளுவர்)

இரண்டாவது அடியை மட்டிலுமாய்க.

கருத்தாய்ந்தால், அடிகளாம் மறைமலை, தோலினால் தோற்றுவித்ததோர் திருக்கூட்டத் திருநாளாம், ஆறறிவு கொண்டு வந்த அரிதெனவே இப் பிறவியென வுரைக்கும் உறு இனமாம், மானிட இனத்தையே குறித்தனமென்பதைக் கருத்துட்கொளல் நன்று.

அடுத்தபடியாகக் "கோனுனின் திருநாளாம்" என்ற சொற்றொடரின் கருத்தை விளக்குவாம்.

கோன் + ஆன் + இன் = கோனுனின் (சரியோ, தவறோ) கோன் ஆனுனின். (இன்) ஐந்தாம் வேற்றுமையுருபோவென வெண்ணுகின்றோம். புதுமைப் பிரிப்பாகவே எமக்குத் தோன்று

## திருவாசகம்

(1) சிவபுராணம் வரி 9. கரங்குவிவார் உண்மகிழுங் "கோன்" கழல்கள் வெல்க—கைகூப்பி வணங்கும் அன்பர்கள் அகத்தே நினைந்து நினைந்து மகிழ்வதற்கு ஏதுவான "இறைவனுடைய" திருவடிகள் சிறப்பனவாக.

(2) திருச்சதகம் அறிவுறுத்தல் (15) "கோனாகி" யான் எனதென்று அவரவரைக் கூத்தாட்டு" "முதல்வனாகி" யெனப் பொருள் கொள்க.

(3) திரு அம்மானை (16)—அளவிறந்த பல்லுயிர்க்குங் "கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய்" "தலைவனாய்" எனப் பொருள் கொள்க.

(4) திரு அம்மானை (14) "தேனையும் பாலையுங் கன்னலையும் ஒத்தினிய கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற் கொண்டருளும் வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய்!" தேனும், பாலும், சர்க்கரையும் போலத் தித்திப்பானாயுள்ள எங்கள் "தலைவனை, தலைவனைப்போல் ஆசிரியனாய் எழுந்தருளி," எனப் பொருள் கொள்க.

இக் கருத்துக்களை ஆய்ந்தால் கோனானின் என்பதற்கு எளிதிலே பொருள்தெரியும்.

கோனானின் திருநாளென்றால் பொருளென்னை? தைத் திருநாளாம் பொங்கற் பெருநாளில், பெண்ணினத்தார் பொங்கற் பணியாற்றத் தொடங்குமுன்னர், மண்ணால் ஓர் உருப்பிசைந்து அதனைத் திருவிளக்கின் அடுத்திருத்தி "உடையவ"ரென உரைப்பதைத் தாமறியலாமே. அதுவே சிவம். சிவத்தின் திருநாள் கோனானின் திருநாள். உலகிற்கெல்லாம் சிறந்த தலைவனின் ஒப்பற்ற திருநாள் என அறிக.

செல்வரே! தம் 14-1-60 அஞ்சற்கு நாளை மறுநாள் பதிவிறுப்பதாயிருக்குமெனத் தாமறிதல் நன்று.

ஆடகச்சீர் மணிக்குன்றும் அம்மை அம்பலவாணன் அருளளிப்பான் வணக்கம்.

ஆங்கில நாள் 18-1-60

அன்பன்,
மறைமலை (நெல்லை).

# *தைப்பொங்கற் பெருவாழ்த்து

நீலவுருவிற் குயிலன்ன நீலா!

தென்பாண்டி நாட்டாராம், திருநெல்லைப் பதியவராம், சென்னையம்பதி யுறைபவராம், திருவரங்கத்தினையவராம், திருக்குமரன் திருவடியை நாளுநாளும் துதிப்பவராம், தில்லி சென்று வெற்றியுடன் வந்தவராம், திண்மைகொண்ட மனத்தினராம், திருக்குமரன் திருப்பெயர் கொண்டவராம், தீர்க்கவுருப் பெற்றவராம், தங்கை மங்கைதனை மனமகிழ்ந்து மணமது புரிந்தவராம், மக்கட்பேறுடையவராம், கார்வண்ணங் கொண்டவராம், அண்ணியாரென் றழைப்பவராம், அண்ணன்தன் குழவிகட்கு ஆதரவு அளிப்பவராம், விகாரி தை முதல்நாளாம், தைப்பொங்கற் றிருநாளாம், தமிழன்தன் திருநாளாம், தமிழரசி பெருநாளாம், தேயத்தின் தென்னகத்துத் திருநாளாம், ஞாயிற்றின் வரவு கண்டு நலமுடனே பால் பொங்கல் பெருநாளாம், அன்னவர் தம் அண்ணியவள் திருவரங்க நீலாம்பிகை யம்மையராம், அத் திருநாளில் அவரில்லில் தங்கை நல்லாள் மங்கையர்க்கரசியுடன் இயைந்திருந்து முகனமர்ந்து, பால்பொங்க, பொங்கலது தான் பொங்கப் பணியாற்றப் பண்புடனே அழைத்து வந்தேனென உரைத்துக் காத்திருந்தார் உன் தலைவாயில். "அழைக்க வந்தேன் அண்ணியரை, அவரிடத்தில் அன்புடனே உரைக்க வந்தேன், உத்தமியாள் இங்கில்லை, உரைப்பீரோ" வென வினவ, "உரைக்கின்றேன் உத்தமரே! தாம் சென்று வருக" வென்றேன்.

கிஞ்சுகவாய் அஞ்சுகமே!

எவரென்றறியாயோ? ஆலமர் செல்வன்; விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவன்; பலர் புகழ் நன்மொழிப் புலவரேறு; அலர்ந்தோர்க் களிக்கும் பொலம்பூட் செல்வன்; வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வன்; இழையணி சிறப்பிற் பழையோள் குழவி; மங்கையர் கணவன்; பெரும்பெயர் முருகன், உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீரலைவாய், அவனுறை சென்றங்கு சுந்தரத்தம்மையர் அன்னவன் திருவடித்தாமரை இறைஞ்சிய பயனாய், அன்னவன் அருளொடு, என் கொழுநர்க் கிளையரா யீன்ற, நல்லிசைச் செவ்வேள் பெயருங் கொண்டு, வீரரென இலங்கும் வீரவாகு, அருளுடை மகனின் அருளால், எளியவள் என்னைக் குதிகொள வைக்கக் கூறவந்த உரையெனக் காண்டல் கருத்தே.

---

* காணுவுலகவாசி தி. நீலாம்பிகையம்மையாரால் இயக்கி இயக்குநர் வழி எழுதப்பெற்று வந்தது.

ஒள் நித்தில நகையீர் !

நன்று ! நன்று ! வண்ணக்கிளிமொழித் தோழியரெல்லாம், தோழமை கொண்டு திருநாளாம் இத் தைத் திருநாளில், விகாரி தை முதல்நாளில், சென்னையம்பதியுறை செல்வரைக் கண்டு, தங்கை மங்கை நல்லாளுடனே, இயைந்திருந்து ஆற்றும் பணிகளை யாற்றி, போற்றுக போற்றி! பொங்குக பால்! பொங்குக பொங்கல் ! பொங்குக புதுவினை ! மறைமலையுரைத்த பேறுடனி யைந்தென, முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளைப் பணிவுடன் போற்றி வாழ்த்துவம்.

பொங்குக பால்! பொங்குக பொங்கல்! பொங்குக களிப்பு !
பொங்குக மக்கட்பேறு ! பொங்குக புன்னகை !
பொங்குக} என்றும்நன்றென !

14—1—60 }
நெல்லை }

திருவரங்க—நீலாம்பிகை
காணுவுலகவாசி

# *தைப் பொங்கல் வாழ்த்து விளக்கம்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகக் கருத்தணிக் குரவரும், செந்தமிழ்ச் செல்வித் திங்கள் வெளியீடு நிகழ்த்திய திருவரங்கனார் திருமகள் திரு வரங்க நீலா தெருளுடன் திகழ்த்தும் திருத்தம்.

செந்தமிழ்ச் செறிவே !

சீர் பெருகும் சென்னைக் கிளைத் துறையில் செவ்வழிப் பண்ணுடன் செயலாற்றுந் தங்கட்கு திருவரங்க - நீலா தைப் பொங்கல் வாழ்த்து அனுப்பியமை குறித்து அன்புடையராகிய தாங்கள் விளக்கவுரை வினவுதலென்பது வியப்பெனவே வியப் பேனோ அல்லை விருப்பெனவே விரும்புதலே என்ற வியனுக்கு வர இயலா நிலையிலே விளக்கமுரைத்தல் விருப்பெனவே விழைந்து வரையும், (இரா. ந. கு. வழி) விளக்கம்.

நீலவுருவிற் குயிலன்ன நீலாம்பிகை யென்னும் பெண் திரு வருளைத் தொழத் திருக்கோயில் சென்றிருந்த பொழுதினில், செந்தமிழ்ச் செல்வி ஆசிரியரும், திரு. சை. சி. க. முன்னாள்

* திருவாட்டி தி. நீலாம்பிகை அம்மையார் நெல்லை இயக்குநர்வழி எழுதி அனுப்பிய பொங்கல் வாழ்த்தில் சில தொடர்களைக் குறித்து விளக்கங் கேட்டதற்கு வந்த விடை.

அமைச்சரும், திருவரங்கனாரின் பின்னோருமாய, திரு. சுப்பையா பிள்ளை அவர்களாகிய, தாங்கள், என்னைத் தங்கள் இல்லத்திற்குப் பொங்கல் விழாவில் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைத்த கூற்றும், தாங்கள் தங்களை இன்னாரென (என் தோழியாகிய "அஞ்சுகம்" என்ற அயல்மனைக் கிழத்தியாளாகிய, என்னை எதிர் நோக்கி என் வீட்டுத் தலைவாயில் காத்திருந்தவளும், என் அன்பிற்குரியவளுமாகிய தோழியிடம்) அறிமுகப்படுத்திய கூற்றையும், என் தோழி தங்களிடம் உரைத்த உறுதி மொழியையுமே, "உரைக்கின்றேன் உத்தமரே" என்பதும், தங்கள் இருவரின் கூற்றுக்களையும் வீடு திரும்பி வந்தவளாகிய, திரு-நீலாவாகிய என்னிடம் உரைத்தாள் என்பதே கூற்று.

அவ்வாறு தங்கள் திருமுகப்படி (வினா) "பண்புடனே அழைத்து வந்தேன்" என உரைத்துக் காத்திருந்தேன் உன் தலைவாயில் என்பது யார் கூற்று? (காத்திருந்தாருன் தலை வாயில் என்பதைத் தட்டச்சுப் பொறியர், காத்திருந்தேன் உன் தலைவாயில் எனத் தட்டியிருப்பது தவறு) (தங்கள் திருமுகத்தில்) விடை:- (நானாகிய சுப்பையாபிள்ளை) அவளாகிய அஞ்சுகத்தினிடம் உரைத்தமையை, (வெளியில் சென்று வீடு திரும்பியவளாகிய நீலாவிடம்) "அடி! நீலா! உன் கணவர் திருவரங்கனாரின் இளையவராகிய திரு. சுப்பையாபிள்ளை, நெடுநேரம் உன் வருகை நோக்கித் தலைவாயிலில் காத்திருந்தார்" என்பதே தெளிவு.

**"அழைக்க வந்தேன், உரைப்பீரோ" என வினவியது யார்?**

அண்ணியார் வீட்டுத் தலைவாயிலில் அமர்ந்திருக்கும் அன்னாய்!

நானாகிய சுப்பையாபிள்ளை என் அருமை அண்ணியாரைப் பொங்கல் விழாவிற்கு நேர் முகத்தான் அழைக்க வந்தேன். அவர்களோ வீட்டில் இல்லை. எனக்குப் பல அலுவல்களிருக்கின்றன. ஆகையால், தாங்கள் (அஞ்சுகம் என்ற பெண்ணாகிய, அவளிடம்) அண்ணியாரிடம் நானாகிய சுப்பையாபிள்ளை வந்து காத்திருந்தேனென்பதையும், நான் சொன்ன அடையாளங்களையும் அண்ணியாரிடம் சொன்னால் அவர்கள் அறிய இயலுமெனவும், எனக்காகத் தாங்கள் உரைத்தால் நல்லது. அவ்வாறு உரைப்பீர்களா?

"உரைக்கின்றேன் உத்தமரே! தாம் சென்று வருக"

(திரு. சுப்பையா பிள்ளையாகிய தங்களை நோக்கி) அஞ்சுகம் என்ற பெண் உரைத்த கூற்று.

"எளியவள் என்னைக் குதிகொள வைக்கக் கூறவந்த உரையெனக் காண்டல் கருத்தே" என்பது யார் கூற்று?

தாங்களாகிய திரு. சுப்பையா பிள்ளை அவர்கள் வந்தழைக்குங்காலை வீட்டிலில்லாது வெளியே சென்றிருந்து, தாங்கள் என் வீட்டுத் தலைவாயில் திண்ணையில் காத்திருந்த என் தோழியாகிய அஞ்சுகம் என்பவள், தாங்கள் உரைத்தவைகளை என்னிடம் கூறியபோது, நானாகிய திருவரங்க-நீலா, என் தோழியாகிய அஞ்சுகத்திடம், தங்களை (திரு. சுப்பையா பிள்ளையை) இன்னாரெனத் தெளிவுடன் அவளிடம் (என் தோழி அஞ்சுகத்திடம்) கூறியும், அண்ணியாகிய என்னை மகிழ்விக்க, அவருடைய இல்லத்தில் என் தங்கையாகிய மங்கையர்க்கரசியுடன் இயைந்து பொங்கல் பண்ணல் வேண்டுமென்று விரும்பி, என்னை மகிழ்விக்க வந்த செயலடி, தெரிந்துகொள் என்று நானாகிய திரு-நீலா உள்ளம் நிறைவுடன் தோழியாகிய அஞ்சுகத்திடம் கூறிய கூற்றெனவே கொள்ளுதல் நன்று.

இத்துடன் இரண்டு பத்திகளுக்கும் விளக்கம் முடிந்தது. விருப்புடையவர் விருப்புடன் காண்டல் விருப்பே.

(ஒள்நித்தில நகையீர்! என்று விளித்தல்) என் அன்புடைய இணைபிரியாத தோழியாகிய அஞ்சுகம் என்னுடன் இதைப் பற்றிச் சொல்லுங்காலை, அண்டையிலுள்ள அருமைத் தோழியர்கள் வந்து சூழ்ந்தனர். அவர்களை, என்னுடைய இணைபிரியாத தோழி அஞ்சுகம், எல்லோரும் இயைந்து சென்னை சென்று நீலாவின் தங்கையாகிய மங்கையர்க்கரசியுடனியைந்து பொங்கல் பணிகளை மகிழ்வுடன் ஆற்றி, போற்றக்கூடியவர்களைப் போற்றிப் பால் பொங்கட்டும், பொங்கல் பொங்கட்டும், மறைமலையடிகளுரைத்த புதுவினையாகிய ஆண்மக்கட்பேறு செல்வராகிய திரு. சுப்பையாபிள்ளை அவர்களுக்குக் கிட்டட்டுமென முன்னைப் பழம்பொருளாகிய சிவனைப் பணிவுடன் வணங்கி, வாழ்த்துவோம் என்று அழைத்தல்.

(சேர்ந்து பொங்கலன்று வாழ்த்தல்)

பொங்குக பால்! பொங்குக பொங்கல்! பொங்குக களிப்பு!
பொங்குக மக்கட்பேறு! பொங்குக புன்னகை! பொங்குக
என்றும் நன்றென! என்று வாழ்த்துகின்றோம் சிலரே.
தெளிவு தந்துவிட்டேன், வணக்கம்.

## திருமுறைகாட்டுந் தெய்வ உண்மை

## சிவத்திரு, சேலம் சி. சுப்பராய பிள்ளை அவர்கட்கு

# நிகழ்த்திய பாராட்டு விழா

நம் அருந்தவப் பேற்றால் நாம் காணுமாறு திகழ்கின்ற மெய்ம்மைச் சிவனடியார் குறித்த பெரியாராவர். அவர்களுக்கு இப்பொழுது வயது 91. அவர்களுடைய 84ஆவது வயதில் வலது முழங்கால் எலும்பும விலா எலும்பும் முறியப்பெற்றன. பேர்போன சென்னை மருத்துவர் பலரும் தக்க மருந்து முறைகள் செய்து குணப்படாதெனக் கைவிட்டு விட்டனர். அவர்கள் சிவத் திருவூர்கள் 274இல் 260 திருவூர்களுக்குப் பல முறை சென்று வழிபட்டுத் திருவருள் நிரம்பப் பெற்றவர். திருவருள் நம்பிக்கை உறுதியால் திருமுறையில் கயிறு சார்த்திப் பார்த்தனர் "விங்கு விளை" எனத் தொடங்கும் திருமாகறல் திருப்பதிகம் வந்தது. அதன்மேல் அவர்கள் திருமாகறலென்னுந் திருவூர் சென்று ஆங்குள்ள மெய்யன்பர் பலர் புரிந்த பேருதவியினால் ஒவ்வொரு நாளும் திருக்கோவில் சென்று திருத்தநீர் முழுகி அத் திருப் பதிகத்தினைப் பெருங்குரலெடுத்தோதி வந்தனர். ஓராண்டுக்குள் படிப்படியா நலமெய்தி முற்றுங் குணமாகிப் பண்டுபோல் நடப் பாராயினர். இவர்கள் வரலாற்றைச் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ௩௪, பரல் ௧0, பக்கம் ௪௭௩ இல் விரிவாகக் காணலாம்.

இவர்களைச் செந்நெறிச் செல்வர்களுக்கு அறிமுகப்படுத்து வதால் சிவநெறி மாண்பு விளங்கும் என்னுங் குறிப்பினுடன் 29-2-1960 திங்கள் மாலை 6-30 மணிக்குச் சென்ன மல்லீசுரர் சென்னகேசவப்பெருமாள் தேவத்தானத்தின் சென்னமல்லீசுரர் கோயில் அனுபூதி மண்டபத்தில் பாராட்டு விழா நடைபெற்றது. அப்பொழுது அறநிலையப் பாதுகாவல் ஆட்சித்துறை ஆணையர் உயர்திரு, அ. உத்தண்டராம பிள்ளை, I. A. S. அவர்கள் தலைமை பூண்டார்கள். உயர்திரு, மணலி இராமகிருட்டிண முதலியார் அவர்கள் (பரம்பரைத் தருமகருத்தர்) எல்லார்க்கும் மாலை யணிவித்துச் சிறப்பித்தனர். கடவுள் வாழ்த்துக்குப்பின் கழக ஆட்சியாளர் வரவேற்புரை மொழிந்தனர். தலைவரவர்கள் முன்னுரையில் திருமுறையைப்பற்றிய மெய்ப்பெருமைகளையும் இப் பெரியாரவர்களின் உறுதிப்பாட்டின் திறனையும் நன்கெடுத்து மொழிந்தனர். சைவட்பாதிரியார் திரு. ச சச்சிதானந்தம் பிள்ளை பி ஏ. எல். டி. அவர்களும், திரு. ச. சிவகுமரன், எம்.ஏ., அவர் களும், சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளையவர்களும் பாராட்டிப் பேசினர்.

சிவத்திரு, சேலம்

கி. சுப்பராய பிள்ளையவர்கட்குப் பாராட்டு விழா



சிவத்திரு, கி. சுப்பராய பிள்ளை, கழகப்புலவர், திரு. ப. இராமநாத பிள்ளை,
கழக ஆட்சியாளர், திரு. வ. சுப்பையா பிள்ளை



பாராட்டு விழாவிற்குத் திரு. அ. உத்தண்டராம பிள்ளையவர்கள் தலைமை தாங்குதல்



பாராட்டு விழாவிற் கலந்துகொண்ட பெருமக்கள்

பாராட்டப் பெற்ற பெரியார் தங்களுடைய திருமுறைத் தோய்வு முழுமையினையும் மெய்ப்பாடுதோன்ற எடுத்து மொழிந்தனர். இடையிடையே பெருங்குரலெடுத்துத் திருமுறைப் பாக்கள் சிலவும் ஓதினர். கடவுள் வாழ்த்துடன் திரு. வ. சு. அவர்கள் நன்றி நவில இரவு பத்து மணிக்குக் கூட்டம் இனிது நிறைவுற்றது.

"தெய்வத் திருவருளால் செந்தமிழின் மாமறையாய்
உய்வைத் தருவனவாய் ஒண்மையொடும்—வையத்து
நின்று பயனருளும் நீர்மைத் திருமுறைகள்
என்றுமே வாழ்க இனிது."

"இனிதாகும் அம்மறையின் ஏற்றமெலாம் இந்நாள்
இனிதாக யாமுணர எம்முன்—இனிதாக
வீற்றிருக்கும் சுப்பரா யர்வாழ்க வூழிபல
ஆற்றுதிருத் தொண்டால் அமர்ந்து."

குறிப்பு: அச்சிவனடியாரின் திருவுருவப்படமும், திருமாகறல் திருப்பதிகத் திருப்பாட்டுக்கள் பதினொன்றும் உயர்ந்த வெண்கடிதத்தச் சிட்டு வீடுகளில் தொங்கவிட்டுப் பயனெய்துவதற்கு வாய்ப்பாக மலிந்த விலையாகிய 5 காசுக்குக் கழகத்தாரால் வழங்கப்பட்டது.

## இயற்கை எய்திய சக்கரவர்த்தி நயினர்

M.A., L.T., I. E. S.

தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர் பேராசிரியர் திரு. அ. சக்கரவர்த்தி நயினரவர்கள் 12-2-1960 இரவு தங்கள் இல்லத்தில் இயற்கை எய்தினமையறிந்து வருந்துகிறோம். அவர் தமக்குரிய சமண சமய இலக்கியம்பற்றிச் சிறந்த ஆராய்ச்சிகள் நடத்தியவர். திருக்குறளை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்துள்ளனர். பல சிறந்த நூல்களியற்றியுள்ளார். குடந்தை அரசினர் கல்லூரி முதல்வராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர். அவர்கள் சென்னை மாநிலக் கல்லூரியில் தத்துவப் பேராசிரியராகவும், இராசமந்திரிக் கல்லூரியின் முதல்வராகவும் பணிபுரிந்துள்ளனர். அவர் தமக்கு அகவை எழுபத்தெட்டு. அவருக்கு ஒரே ஒரு மகளுண்டு. இப்பெரியாரின் பிரிவு தமிழுலகத்திற்கு ஈடு செய்யவொண்ணாப் பேரிழப்பாகும். கழகத்தாரின் நிறைந்த வருத்தத்தை அறிவித்துக் கொள்கின்றோம். அவர்தம் ஆவி இயற்கையின்பம் எய்துமாக! குடும்பத்தார்க்குக் கழகத்தாரின் ஆறுதலுரை உரியதாகும். விரிவான வரலாறு பின்னர் வெளியிடப்படும்.

## மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு

# நிதி அமைச்சர் சுப்பிரமணியம் வருகை

சென்னை மாநில நிதி, கல்வி அமைச்சராய திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் சென்ற 16—2—60 செவ்வாயன்று நூல் நிலையத்தைப் பார்வையிட்டார். கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் அழைப்பச் கிணங்கி வந்திருந்தார். செவ்வாய் மாலை 6 மணி அளவில் அமைச்சர் நூலகத்திற்கு வந்த பொழுது கழக ஆட்சியாளரும், கழக இயக்குநர்களில் இருவராய திரு. சொ. சுப்பிரமணிய பிள்ளையும், திரு. மு. நாராயணன் செட்டியாரும், எட்டாம் மாவட்ட நடுவரான திரு ஆவுடை நாயகம் பிள்ளையும் இன்னும் கழக அலுவலரும் அவரை வரவேற்றனர்.

அமைச்சர் நூலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் ஆர்வத்துடனும் ஊக்கத்துடனும் பார்வையிட்டார். அவர் காட்சிக்கென அரிய பல பழைய நூல்கள் வைக்கப் பெற்றிருந்தன. கவர்ச்சி மிக்க பல்வகைக் கட்டடங்கள் செய்யப்பட்ட நூல்கள் வைக்கப்பெற்றிருந்தன. அவற்றுள் குறிப்பிடத்தக்கன வெள்ளி, தந்தம், பட்டு, வெல்வெட், கதர், ரெக்ஸைன் போன்றவற்றால் செய்யப்பட்ட கட்டடங்களாம். இருநூறுக்கு மேற்பட்ட தமிழ்ப்புலவர்கள் உருவப் படங்களின் தொகுப்பேட்டைப் பார்த்து மகிழ்வுற்றனர்.

நூலகத்தை முழுவதும் கண்டுகளித்த அமைச்சர் பார்வையாளர் ஏட்டில் "இந் நூல் நிலையத்திற்கு இன்று வந்து இங்கு சேகரிக்கப்பட்டு வைத்திருக்கும் அரிய நூல்களைக் காணும் வாய்ப்புக் கிடைத்ததுபற்றி மகிழ்ச்சியடைகிறேன். இந்நிலையம் மேன்மேலும் வளர்ச்சியுற்றுத் தமிழின் பழங்கால பெருமையை எடுத்துக் காட்டுவதுடன் வருங்கால வளர்ச்சிக்கும் உயர்வுக்கும் வழிகாட்டுமென நம்புகிறேன்" என்று எழுதினர்.

அரைமணி நேரம் நூலகத்தைப் பார்வையிட்ட பின்னர் அமைச்சர் அங்குக் குழுமி யிருந்தோரிடம் விடைபெற்றுக் கொண்டார். கழக ஆட்சியாளரும், நூலகரும் அமைச்சருக்கு நன்றி நவின்றனர்

மறைமலையடிகள் நூல்நிலையத்தில்
அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம்



நூல்நிலையத்திற்கு அமைச்சர் அவர்கள்
வருகைதந்த காலை கழக ஆட்சியாளர்களும் அலுவலர்களும் வரவேற்றல்



அமைச்சரவர்கட்குக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை
அடிகளார் படித்துப் பாதுகாத்துவைத்த நூல்களைக் காட்டுதல்

# கவுந்தியடிகள்

[திரு. மது. ச. விமலானந்தம் எம்.ஏ.,]

## கற்பனைப் படைப்பா?

கவுந்தியடிகள் கற்பனைப் படைப்பா? அன்றிக் காப்பியத்திற்கு இன்றியமையாப் பாத்திரந்தானா? இன்றியமையாப் பாத்திரமெனின் இளங்கோ படைத்ததேன்? கற்பின் செல்விக்கு உற்ற துணையாகவா? ஊடல் தீர்க்கும் உறுப்பாகவா? அல்லது சமண சமய விளம்பரராகவா? (Propagandist) என்பன போன்ற கவுந்தி பற்றிய கருத்துக்கள் பலவாகும். இக்கருத்துக்கள் எவ்வளவிற்கு உண்மை என்பதுவும், கவுந்தியடிகள் காப்பியத்தில் பெறும் இடமும், அவரால் காப்பியம் பெறும் சிறப்பும் காண்பதே இக் கட்டுரையின் கருத்தாம்.

## காப்பியத்தில் கவுந்தியடிகள்

காப்பியத்தில் கவுந்தியடிகள் தோன்றுவது ஒரே ஒருமுறை தான்! காப்பியத்தில் நுழையுமிடம்: புகார்க்காண்ட நாடுகாண் காதையில்; காப்பியத்தினின்றும் நீங்குமிடம்: மதுரைக் காண்ட அடைக்கலக் காதையில்; இதற்கிடையில் இவர் பேசுமிடங்கள் பதினொன்று. விவரம் வருமாறு:

காப்பியத்தில் வருமிடம்: நாடுகாண் காதை: அடி: 45.

| | | |
|---|---|---|
| பேசுமிடங்கள்: | நாடுகாண் காதை: | 45-49; 52-60; 64-97; 194-207; 224-226; 231-32; 241-244; |
| | காடுகாண் காதை: | 152-161; |
| | ஊர்காண் காதை: | 25-61; |
| | அடைக்கலக் காதை: | 107-113; (120-124) 125-200; |

காப்பியத்தினின்று விடைபெறுமிடம்: அடைக்கலக் காதை-அடி: 200.

## மாதவத்தாட்டியின் மாண்பு

### காப்பிய வாயில்

ஆருகத சமயத் தவமுதியள் இக்கவுந்தியடிகள். சோழ நாட்டில் பொதுவறு சிறப்பினதாய புகார் நகருக்கு மேற்கே ஒரு காவத எல்லையில் பள்ளியமைத்து அறம்புரியும் அறச் செல்வி. மதுரை செல்வழியில் வழிசெல் வருத்தம் களைவான் வேண்டி இத்தவமுதல்வியின் தவப்பள்ளி அமைந்துள்ள சோலையில் தங்கினர். அதுபோது அடிகளைக் கண்டு வணங்கவே, விவரமறிந்த புண்ணிய முதல்வியும் மதுரைக்குப் புறப்படுகின்றார். இதுவே கவுந்தி காப்பியத்தில் நுழையுமாறு.

உயர்ந்த உள்ளமும் உயரிய நோக்கும்

எடுத்த எடுப்பிலேயே தம்பால் வந்தணைந்த கயமலர்க் கண்ணியையும் காதற் கொழுநனையும் கண்ட கவுந்தி,

"உருவும் குலனும் உயர்பே ரொழுக்கமும்
பெருமகன் திருமொழி பிறழா நோன்பும்."
உடையீர்! (நாடுகாண் ௪௬-௪௮)

எனவும், முன்பின் அறியா மறையவனை, 'நலம்புரி கொள்கை நான்மறை யாளா!' எனவும் விளித்தமை இவர்பால் அமைந்த பெருமித நோக்கையும் பேரருள் நெஞ்சத்தையும் நன்கு விளக்குவன.

"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டிவிடும்."

என்ற தமிழ் மறைக்கு இத்தவமூதாட்டி தக்க சான்றாக அமைவது கண்டு அறியத்தக்கது.

இரக்கமும் ஏக்கமும்

இவர்பால் அமைந்த இரக்கவுணர்வு எவருள்ளத்தையும் தொடுவதாகும். 'என்னே வுறுகணுளரிற் கடைகழிந்து இங்ஙனம் கருதியவாறு' எனக் கோவலனிடத்து இரங்கிக் கூறுவதும்;

"பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்கு
அரிதிவள் செவ்வி அறிகுநர் யாரோ?" (நாடுகாண் ௫௨-௫௪)

எனக் கண்ணகியின் மென்மைத் தன்மையைக் கூறி மதுரைக்குச் செல்லுதலை விலக்க, அவர்கள் கேளா தொழியவே தானும் அவர்களுடன் புறப்படும் பான்மையும் செலவின் போது கூடச் செந்தமிழ்ப் பாவைக்குத் துயர் தருவனவற்றை விலக்கிச் செல்லும் விதமும்;

"குறநர் இட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞர் எய்தி
அறியாது அடியாங்கு இடுதலும் கூடும்." (நாடுகாண் ௮௭-௮௯)

எனவும்,

"எறிநீர் அடைகரை இயக்கந் தன்னிற்
பொறிமாண் அலவனும் நந்தும் போற்றாது
ஊழ்அடி ஒதுக்கத்து உறுநோய் காணின்
தாழ்தரு துன்பம் தாங்கவும் ஒண்ணா." (நாடுகாண் ௯0-௯௩)

எனவும், ஏனை உயிர்களின் இன்னல் கண்டு துன்புறும் நிலையும் இவரது அன்பு நெஞ்சத்தையும் அருளுணர்வையும் அறிவிப்பன வாகும்.

தவமுதல்வியின் தவவலிமை

'கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி' எனச் சாரணரும், 'நோற்று ணல்நோசி தவத்திர்', 'தவப்பெருஞ் சிறப்பிற் கவுந்தி ஐயை', 'மாதவத்தாட்டி', 'புண்ணிய முதல்வி' என இளங்கோவும் புகழ் வதே இவரது தவச்சிறப்பிற்குத் தக்க சான்றாகும்.

மாதரும், கணவனும் மாதவத்தாட்டியும் (மூவரும்) செல விடையே பல்வகை வளமும், சில்வகை ஒலியும் கண்டு கேட்டுத் துன்பம் தோன்றாது வழிநடந்து காவிரியின் தென்கரையை யடைந்து ஆங்கொரு பூம்பொழிலில் இருந்தனராக, அவண்போந்த வம்பப் பரத்தையும் வறுமொழியாளனும், 'காமனும் தேவியும் போலும் ஈங்கிவர் யாரென அறிகுவம்' எனக் கவுந்தியை வினவ, அதற்கு,

"............என்
மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரெனக்." (நாடுகாண் ௨௨௪-௨௬)

கூறினர். அதுகேட்ட அவ்வம்பன் ஒரு வயிற்று உடன் பிறந் தோர்கள் கணவனும் மனைவியு மாவரோ எனக் கேட்க, தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக் காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்கி நிற்கவே, சீற்றமுற்ற தவச் செல்வி,

"எள்ளுநர் போலுமிவர் என்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனச்." (நாடுகாண் 231-32)

சாபமிட்டு அந் நயவஞ்சகரை நரியாக்கினர். அத்தகைய தவத்திறன் மிக்கவர் இவ் அறச்செல்வி. நரியாயினமை கண்ட நறுமலர்க்கோதையும் நம்பியும் 'நெறியின் நீங்கியோர் நீரல கூறி னும், அறியாமை என்று அறிதல் வேண்டும்' என இரங்கிக் கூறவே, அவர்கட்குச் சாபவிடை தந்ததும் இவரது தவமேம் பாட்டிற்குத் தக்க சான்றாகும்.

அன்றியும் வசந்தமாலை வடிவில் வந்து கோவலனை மயக்கிய கானுறை தெய்வம்கூடத் தன் தீச்செயலைப் புண்ணிய முதல்விக் குப் புலப்படுத்த வேண்டா என வேண்டிச் செல்கின்றது. கானுறைதெய்வமே கவுந்தியடிகட்கு அஞ்சி நடுங்குகின்றதெனின் அடிகளின் தவ வலியை என்னென்பது?

பணியுமாம் என்றும் பெருமை

இத்தகைய ஆற்றலும் அருஞ்செயலும் மிக்க கவுந்தியடிகளிடத்துக் காணப்பெறும் பண்பு ஆன்றவிந்தடங்கிய கொள்கையும் அடக்கமுமேயாகும். சமய அறிவும் அருளாட்சியும் மிக்கிருந்த நிலையிலும், மறவுரை நீத்த மாசறு கேள்வியர்தம் அறவுரை கேட்கும் விருப்பும், அறிவனை ஏத்தும் விழைவும் இவர்பால் இருந்ததெனின் இவரது அடக்கத்தையும் பெரியோரைப் பேணும் பெற்றியையும் என்னென்பது? தருமஞ் சான்ற சாரணர் தோன்றியகாலை அவர்கள் அடித்தலத்து வீழ்ந்து வணங்கும் பணிவுடைமையும் பாராட்டற்பாலது.

அன்புரிமையும் அருளுறவும்

அறிந்தார் மாட்டு மட்டும் இதயம் ஈடுபடுவது அன்பாகும். அறியாதாரிடத்தும் அன்பு கொள்வதே அருள் நிலையாகும். இதனையே குறளாசிரியரும் 'அருளெனும் அன்பீன் குழவி' என்றார். இதற்கோர் எடுத்துக்காட்டாக அமைபவர் அடிகள். முன்பின் அறியாது போந்த கோவலன் கண்ணகி இருவர்பாலும் எல்லையில் இரக்கமும், இணையிலா அன்பும் கொண்டு, அவர்களைப் பற்றிக் கூறும்போதுகூட 'என் மக்கள்', 'என் பூங்கோதை' என ஒன்றிய உள்ளத்தோடு உறவாடும் நிலையும், அவர்களைப்பற்றி இன்னாது பேசிய இழிந்தோரை நரியாக்குமளவிற்குச் செல்லும் அன்புரிமையும் அறிந்து இன்புறத்தக்கன.

சமயப்பற்று

தீதுதீர் மதுரைக்குரிய நெறி கூறப் புகுந்த மாங்காட்டு மறையோன் பிலத்தின் பெற்றியைக் கூற, அதற்கு அடிகள் 'நலம்புரி கொள்கை நான்மறையாள! பிலம்புகவேண்டும் பெற்றி ஈங்கில்லை' என மறுத்துரைத்து,

"வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவது முண்டோ எய்தா அரும்பொருள்
காமுறு தெய்வங் கண்டடி பணிய
நீபோ யாங்களும் நீள்நெறிப் படர்குதும்."

(காடுகாண். கஙஅ-கூக)

என மொழிந்ததும்,

ஒருமூன் றவித்தோன் ஓதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா;
காமனை வென்றோன் ஆயிரத் தெட்டு
நாம மல்லது நவிலாது என்நா;

ஐவரை வென்றோன் அடியிணை யல்லது
கைவரைக் காணினுங் காணா வென்கண்;
அருளறம் பூண்டோன் திருமெய்க் கல்லதென்
பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தாது;
அருக ரறவ னறிவோற் கல்லதென்
இருகையுங் கூடி யொருவழிக் குவியா;
மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லதென்
தலைமிசை யுச்சி தானணிப் பொறாஅது;
இறுதியில் இன்பத்து இறைமொழிக் கல்லது
மறுதர வோதியென் மனம்புடை பெயராது.''
(நாடுகாண் ௧௯௪-௨௦௭)

எனக் கூறியதும் இவரது திண்ணிய சமயப் பற்றையும், தருக்க ஆற்றலையும் தெற்றெனக் காட்டுவதாகும்.

## எண்ணித்துணியும் புண்ணிய முதல்வி

கண்ணகியை இடைக்குல மூதாட்டியிடம் அடைக்கலம் தரவிழைந்த கவுந்தியடிகள்:

"ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்
கோவலர் வாழ்க்கையோர் கொடும்பா டில்லை,
தீதிலள் முதுமகள் செவ்வியள் அளியள்
மாதரி தன்னுடன் மடந்தையை இருத்துதற்கு
ஏதம் இன்று.'' (அடைக். ௧௨௦-௨௪)

என எண்ணுவதினின்று இவள் எக்காரியத்திலும் எண்ணித் துணியும் இயல்புடையவள் என்றறிகின்றோம்.

## புண்ணிய முதல்வியின் புலமைத்திறம்

தான் உற்ற இன்னலை எடுத்தியம்பி வருந்திய விருத்த கோபாலனுக்கு, "ஒய்யா வினைப்பயன் உண்ணுங்காலைக் கையாறு கொள்ளார் கற்றறி மாக்கள், காமஞ் சார்ந்தாரை ஏமஞ் சாராது, அதனால் வசையும் துன்பமுமே வந்து சேரும்; அவ்வாறே நீயும் துன்புற்றனை. இத்துணை இடும்பை எய்தியோர் எத்துணையோ பேர்'' என இல்வாழ்வுதரும் இன்னலை எடுத்தியம்பி,

"தாதை யேவலின் மாதுடன் போகி
காதலி நீங்கக் கடுந்துய ருழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந் திலையோ நெடுமொழி யன்றோ.'' (ஊர்காண். ௪௬-௪௯)

எனவும்,

"வல்லாடு ஆயத்து மண்ணரசு
மெல்லியல் தன்னுடன் வெங்கா னடைந்தோன்
காதலிற் பிரிந்தோன் அல்லன் காதலி
தீதொடு படூஉஞ் சிறுமையள் அல்லள்
அடவிக் கானகத்து ஆயிழை தன்னை
இடையிருள் யாமத் திட்டு நீக்கியது
வல்வினை யன்றோ" (ஊர்காண் ௫0-௫௬)

எனவும் இலக்கிய நாயகன் இராமன், நிடதநாட்டரசன் நளன் முதலியோர் அடைந்த துன்பம் கூறித் தெருட்டும் திறப்பாடு அறியத்தக்கது.

தசரதன் குறையை நிறைசெய்யவும், கைகேயியின் நிறையை முறைமை யாக்கவும் அயோத்தி நீங்கி ஆரணியம் புகுந்தான் இராமன். சூதும் வாதும் வேதனை செய்யவே சொந்த நாடாம் நிடதநாடு நீத்துக் காடு சென்றான் நளன். சலம்புணர் கொள்கை யோடு சலதியாடித் தன் செல்வமனைத்தும் இழந்து பொதுவறு சிறப்பின் புகாரினின்றும் தீதுதீர் தென்னவர் மதுரை யடைந் தான் கோவலன். இங்ஙனம் மூவரும் பிறந்தநாடு துறந்த பேரருள் நெஞ்சத்தினர்; பிரிந்து சிறந்தவர்கள். பிரிந்து செல்லுங்கால் தங்கள் காதல் மனைவியரையும் உடன் கொண்டு சென்ற ஒப்புர வானுயர்ந்த பெற்றிமையாளர்கள்.

இம்மூவரிலே இராமன் தன் மனைவியை மாற்றான் பிரிக்கப் பெருந்துயருற்றான்; இலங்கையர்கோன் செல்வி - சீதா பிராட்டியைக் கவர்ந்து செல்லவே கடுந்துயருற்றான். நளன் தன் மனையாளைத் தானே கானகத்திடை விட்டுப் பிரிந்து வாட்டமுற்றான்; கானகத்திடையே தமயந்தியைப் பிரிந்து நீங்காத் துயரடைந்தான். முன்னவன் தன் மனைவி பிரிக்கப் படத் தனித்துயர் அடைந்தான்; பின்னவனோ தன் மனைவி யைத் தான் பிரிந்து தாளாத் துன்பமடைந்தான். இவ் விருவரும் இன்ப வாழ்வின்போது மனைவியரோடு உறைந்து, துன்பவேளையில் காதலியரை நீங்கித் தவித்தனர். ஆனால் கருணை மறவனும் கோவலனோ இன்பியல் வாழ்விலே கற்பின் செல்வி கண்ணகியைப் பிரிந்து, துன்பம் நேர்கையில் அவளோடு கூடித் துன்பம் மறந்திருந்தான். இவ்வளவிலே இம் மூவரிலே கோவலனே கொடுத்து வைத்தவன் எனலாம். இதனையே அறமுதல்வியும் அறிவுறுத்துகின்றார்.

(தொடரும்)

# ஓவியம்

[திரு. தி. நா. அறிவு ஒளி]

பொய்யாமொழிப் புலவரியற்றிய இன்பச்சுவை கனிந்த இனிய கவிதை நூலே தஞ்சைவாணன் கோவை. இவர் தொண்டை நாட்டில் செங்காட்டங் கோட்டத்துறையூரில் தோன்றினர். இளமையில் வயிரபுரம் (திண்டிவனத்துக்கு அண்மையில் உள்ளது) என்ற ஊரில் ஒரு தமிழாசிரியர்பால் தமிழ் பயின்றார். இவருக்குச் சீநக்கன் என்பாரிடம் பெருநட்பு இருந்தது. அவர் இறந்தபின் மேலும் உலகில் உயிர்வாழ விழையாது தீப்பாய்ந்து உயிர் துறந்தார் என்பர்.

இவர் மாறைநாட்டை ஆட்சிசெய்த பாண்டிய மன்னரான குலசேகர தேவருக்கு அமைச்சனும் படைத்தலைவனுமான சந்திரவாணன் என்பவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டே தஞ்சைவாணன்கோவையை இயற்றினர். இக்கோவையை அரங்கேற்றும்போது சந்திரவாணன் கோவைக் கவி ஒன்றுக்கு ஒரு பொன் தேங்காய் எனப் பரிசளித்தானும். இவரைப்பற்றித் தமிழ் நாவலர் சரிதை, சோழமண்டல சதகம், பாண்டி மண்டல சதகம், தொண்டைமண்டல சதகம், திருப்புகழ், சேயூர்முருகன் பிள்ளைத் தமிழ் முதலியன பலப்பல செய்திகளைக் கூறுகின்றன. அவை எவ்வளவில் இவர் வரலாற்றோடு உண்மைத் தொடர்புடையன என்பது புலனாகவில்லை!

இந்நூல் நம்பி அகப்பொருளுக்கு மேற்கோள் அமையுமாறு பாடப்பட்டதென்பர். சுவைமிக்க அழகிய பாடல்கள் கொண்ட இந்நூல் (க) களவியல் (உ௧0) (உ) வரைவியல் (அகூ) (ங) கற்பியல் (ருகூ) என மூவியலினும் சஉரு செய்யுட்கள் கொண்டது.

திருப்புகழ் பாடிய அருணகிரியாருக்குக் காலத்தால் முற்பட்டவர் இவர். இவர்காலம் ஏறத்தாழ எழுநூறு ஆண்டு என்றும், ஆயிரம் ஆண்டுகட்குமுன் என்றும் பலவாறாகக் கூறுகின்றனர்.

காதற்சுவை கனிந்த இனிய பாடல்களில் உவமைநலன்களும், அணிநலன்களும், விளக்க அழகுகளும், இனிய சொல்லாட்சிகளும் நிறைந்துள்ளன.

முப்பத்துநான்கு பாட்டுக்களில் ஓவியக் குறிப்புக்கள் அளித்துள்ளார் பொய்யாமொழியார்.

எழுதிய பாவை

தமிழ்க் கவிஞர்கள் அழகு வெறிபிடித்தவர்கள். தங்கள் கவிதையால் பெண்டிர் அழகைப் பலப்பல வகைகளில் விளக்கிப் பாடிப் பாடிக் கூட அவர்களுக்கு மனம் ஆறுதலடைவதில்லை. தாங்கள் கூறிய அழகு விளக்கங்களினால் அமைதியடையாத வர்கள். 'ஓவியத்தில் ஒப்பற்ற கலைச்செல்வர்கள் எழுதிய ஓவியம் போன்றவள்' என்று முடித்துத்தான் பெருமூச்சு விடுவார்கள்! தங்களால் செய்யமுடியாத வேலையை மற்றவர்மீது சுமத்தி விடுவது மக்கள் இயல்புதானே! அதேபோலக் காவியப் புலவர் கள் தம்மால் எழுத முடியாததை ஓவியப் புலவர்களால் எழுத முடியும் எனநம்பி, அவர்கள் தலைமீது சுமத்திவிடுவர். அதே போலக் காதலியின் அழகை வியக்கும் காதலன் பாடுகின்ற ஒரு பாட்டு! அதில், "பாண்டியரின் புகழை வளர்க்கக் கூடிய தஞ்சை வாணனுக்கு உரிய மாறை என்ற அழகிய ஊரில்வாழும் பூக்களைக் கோதுகின்ற இலக்கணத்தை அறிந்த வண்டுகள் ஆர்க் கக்கூடிய கூந்தலை உடைய மடமைப் பண்புடைய பெண்டிரே! உம்மிடம் சிறு தொழில்களைச் செய்து வணங்கி இயங்கக் கூடிய, தோழியர் குழாத்தோடு சுனைநீரில் குளிக்காமல் ஓவியப் புலமை மிக்க ஒள்ளிய கலைஞனால் பலவகை வண்ணங்களால் கண் கவரும்படி எழுதிவைத்த ஓவியம் போன்று வாளா நிற்பது என்ன? இப்போது கூறுங்கள்!" எனக் காதலியோடு பேசுவ தற்காக அவளை முன்னிலைப் படுத்துகிறான் தலைவன்,

"வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்தென் மாறைவண்டு
கொழுதியல் ஆர்செய் குழல்மட வீர்உங்குற் றேவல்செய்து
தொழுதியல் ஆயத் தொகுதியொ டாடிச் சுனைகுடையா
தெழுதிய பாவையைப் போல்நின்ற வான் இயம்புமினே."
(தஞ்சைவாணன் கோவை: எ)

இப்பாடலால் பொய்யாமொழிப் புலவர் காலத்திலும் நஞ் செந்தமிழகத்து ஓவிய மேதைகள் உயிரோவியங்கள் தீட்டி, நாட்டுக் கலைவளத்தை உயர்த்தி இருந்த மாண்பினை அறியலாம்!

புனை ஓவியம்

தமிழ்ப் பெண்டிர் அழகுக் கோயில்கள்! அவர்களின் அழகோ புனைந்த ஓவியம் போல அத்துணை அழகுடைய தாம்! தலைவி, தலைவனோடு பெற்றோர்க்குத் தெரியாமல் தன் வீட் டையும், ஊரையும் துறந்து ஓடிவிட்டாள்! (உடன்போக்கு) அத்தலைவியைத் தேடிக்கொண்டு செவிலித்தாய் பாலை நிலத்துக்கு வந்துவிட்டாள். அப்பாலை நிலப்பெண்ணொருத்தியைக் கண் டாள். அவளை 'எயிற்றி' என்பர். எயின இனத்தினள். அவளை

நோக்கிச் செவிலி," பலவகை வண்ணங்களால் அழகுற ஒப்பனை செய்து புனையப்பட்ட ஓவியப்பாவை போன்ற அழகு மிகுந்து வருகின்ற இளமகளே! தஞ்சை வாணனின் பகைவர் நெருங்கும் வலியகாட்டில் வாழ்கின்ற மறவரின் அருமையான பெண்ணே! மறத்தாய் வீற்றிருக்கும் தோள்களை உடைய புதியவன் ஒருவன் பின்னே செல்லுமாறு விட்டுவிட்ட என்னுடைய அருமையான ஒப்பற்ற மகள்தானோ நீ என்று ஐயமுற்றேன். ஆனால் நீயோ மறவர் மகளாக இருக்கிறாய்! உன்னைப் போலவே பேரழகும் இளமையும் உடையவள் என்மகள். அதனாலேதான் அவ்வாறு ஐயுற்றேன். என்மகளும், அவள் காதலனும் போன வழி எனக்குத் தெரியவில்லை. ஒருகால் அவள் போகும்போது நீ பார்த்திருப்பின் அவள் சென்ற காட்டு வழியை அருள்கூர்ந்து எனக்குச் சொல்க." எனக் கேட்பதாக அழகிய பாட்டை இயற்றியுள்ளார்:

"செருமக ளேயும் புயத்தய லான்பின் செலவிடுத்தென்
ஒருமக ளேஎன் றுனைஅயிர்த்தேன்புனை ஓவியம்போல்
வருமக ளேதஞ்சை வாணன்ஒன் னார்துன்னும் வன்சுரத்தோர்
அருமக ளேஉரை யாய்அவள் போன அதர்எனக்கே."

(த. வா. கோவை: ௩௪௩)

யம்' என்பது வண்ணம் தீட்டப்பட்டு முடிந்த வண்ண ஓவியம்! புனையா ஓவியம் என்பது வரைகோட்டு ஓவியம் (கீற்று ஓவியம்) இதனை ஆங்கிலத்தில் Sketch என்பர்! புனை ஓவியம் 'Painting drawing' எனப்படும்.

சின்னம் பொறித்தல்

பண்டைத் தமிழ் மன்னர்கள் தம் கொடிகளில் குறிக்கப் பட்டிருக்கும் உருவத்தைத் தாம் வெற்றி கொள்ளும் இடங் களில் வெற்றிக்கு அறிகுறியாகச் செதுக்கியோ, பொறித்தோ ஓவியந் தீட்டியோ வைப்பது வழக்கம். தஞ்சைவாணன் பாண் டியர் படைத்தலைவனாக இருந்தவன். அவன் தன்வேந்தனாகிய குலசேகர தேவருக்கு வெற்றி உண்டாகுமாறு பலதிசை களிலும் போர்புரிந்து கயற் குறியைத் திசையானைகளின்மீது
றம்!

"எண்போன நெஞ்சமு நீருமென் பாதம் இறைஞ்சுதனும்
கண்போலும் எங்கையர் காணினன் றேகயன் மாதிரத்துத்
திண்போ தகந்தோறுந் தீட்டிய வாணன் செழுந்தஞ்சை சூழ்
வண்போ தளவிய நீர்வையை நாட்டுறை மன்னவரே."

(த. வா. கோவை: ௩௧௮)

தமிழ் மன்னர் தம் புகழை மலைகளிலும், கோயில் கருவறை, சுற்று மதிற்சுவர் ஆகியவைகளில் 'கல்வெட்டு' வெட்டி வைப்பது வழக்கம். கல்வெட்டில் தம் வெற்றிகளையும், போர்ப் பெருமைகளையும் பொறிப்பர். இக்கல்வெட்டுத் திட்டக் கற்கொல்லரும், கல்வெட்டுப் பாட்டியற்றுவோரும் அக் காலத்து அரசியலில் பணிபுரிந்தனர். நாண் பூட்டப்பட்ட வில்லேந்திய மறவரை வெற்றிகொண்டு மாறைநாட்டைச் சூழ்ந்த எல்லா மலைகளிலும் தன் புகழைத் தீட்டினும் தஞ்சை வாணன். இக் கல்வெட்டுத் திட்டுதலைக் கோவை ௬௫ ஆம் பாட்டில் குறிக்கிறார் புலவர்.

"பூட்டிய வார்சிலை வீரரை வென்றுஎப் பொருப்பினும் சீர்
தீட்டிய வாணன் தென் மாறை அன்னீர்! இதழ்ச் செம்மையும், மை
ஊட்டிய வாளின் கருமையும் தான்கொண் டுமக்கிங்ஙனே
சூட்டிய வாணன் றூல்முல்லை மாலை சுனைப் புனலே!"

(த. வா. கோவை: ௬௫)

மடற்கிழி

பண்டைக் காலத்தில் ஓராடவன ஒரு மகளைக் காதல் செய்து, அப்பெண்ணும் அவனை விரும்பியும், அவனைக் கூடுதற்கியலாதெனின், அக்காம ஆற்றாமை மீதூரவே, தம் காம எழுச்சியை வெளியிட மடலூருவர்! எருக்கம்பூ மாலையைத் தலையில் சூடி, பனைமடல் கருக்குகளாற் செய்யப்பட்ட ஒரு பொய்க் குதிரையின்மேல் காற் சதைகள் அறுந்துபட்டு குருதி குழைந்து ஒழுகும் வண்ணம் அம்மடல்மீதேறித் தலைவியின் உருவத்தையும் தன் பெயரையும் ஒரு படத்தில் எழுதிக் கையில் பிடித்துக்கொண்டு அக்காதலியின் வீட்டிற்கு அருகில் நாற்சந்தி முனையில் அக்குதிரையை ஆட்கள் வைத்து இழுத்து வரச்செய்து ஊராருக்குத் தன் காதல் மிகுதியைப் புலப்படுத்துவான் தலைவன், இம் மடலூர்தலை விளக்கமாக,

"மாஎன மடலும் ஊர்ப, பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியுஞ் சூடுப,
மறுகின் ஆர்க்கவும் படுப,
பிறிதும் ஆகுப காமங் காழ்க் கொளினே."

எனக் குறுந்தொகை ௧௭ ஆம் பாட்டுக் கூறுகிறது.

இம்மடலூரும் துன்பியல் நாடகத்திலும் ஓவியக் கலையின் ஒள்ளிய துணை உடனுறைவதை நோக்க வாழ்விலும் தாழ்விலும், இன்பத்திலும் துன்பத்திலும், நன்மையிலும் தீமையிலும், செழுமையிலும் வறுமையிலும்கூட ஓவியக் கலையின் ஒண்துணை நம் நாட்டில் இருந்து வந்தமை காண்கிறோம்.

மடலேறும் ஆடவன் தன் காதலியின் எழிலுருவை அழகொழுகத் தீட்டிக் கொள்கிறான்! அவ்வாறாயின் அக் காலத்து ஓவியக் கலைஞர்கள் உயிரோவியம் தீட்டும் பேரறிவினராக விளங்கிய பெற்றியை அறிகிறோம். ஒருவர் உருவை நிழற்படம் பிடிப்பதினும் இயற்கையாகவும், உள்ளது உள்ளபடியும் ஓவியத்திலேதான் புனையமுடியும்! அத்தகைய ஓவியக்கிழியைக் கையிலே பிடித்தவாறு மடலூர்வதைப் பொய்யாமொழியாரின் மெய்ம்மொழி அழகுறத் தீட்டிக் காட்டுகிறது,

"விரையூர் குழலியர் தந்தசிந் தாகுல வெள்ளம் நிரைக்
கரையூர் பொழுதிளங் காளையர் தாம்கிழி கைப்பிடித்துந்
தரையூர் தொறும்பெண்ணை மாமடல் ஊர்வர்; தவிர்ந்து பின்னும்
உரையூர்வர்; தஞ்சையர் கோன்வாணன் மாறையில் வாள்நுதலே!"
(த. வா. கோவை: ௧0௨)

இப்பாட்டுக் குறிக்கும் 'கிழி' என்ற சொல் ஆங்கிலத்தில் Canvas எனக் கூறப்படுதற்கு ஏற்ற தமிழ்ச் சொல்லாகும். மேற்குறித்த அழகிய 'கிழி' என்ற சொல்லைவிடுத்து சீலை, திரைச் சீலை, 'படவிரிப்பு' எனவெல்லாம் பிறசொற்களை அமைத்து இடர்ப்படுவது இனியேனும் தவிர்க்கப்பட வேண்டும்.

பாவை

பண்டைத் தமிழகத்தில் சிற்பக்கலை பெற்றிருந்த உயர்ந்த தகுதியை எண்ணினால் பெருவியப்பு முகிழ்க்கிறது. ஆகா! கலைகளின் பிறப்பகமே தமிழகம்தான் எனினும் ஓவியக் கலையின் சிறப்பகம் அஃது எனல் நனிசாலும்!

பொய்யா மொழிப் புலவர் பெண்டிர்க்கு உவமையாகப் பல பாடல்களில் ஓவியப் பாவையை எடுத்து ஆள்கிறார். 'ஒப்பற்ற கற்றச்சன்' செதுக்கிய மிக வியக்கத்தக்க பேரெழில் வாய்ந்த பெண்சிலையைப் போன்ற பெண்கள்' என அவர் கூறுவதிலிருந்து அக்காலத்துத் தச்சுக்கலைஞரின் மேதை விளங்கும்.

"பொருமணி வெண்திரைப் பைங்கடல் வங்கம் பொருந்திமுன்பு
தருமணி பின்பெற் றணிபவர் போல்சென்று சார்ந்து இரந்து,
பருமணி நன்கலப் பாங்கியை நீங்கி, அப் பாவையைநாம்
மருமணி வண்டுறை தார்வாணன் மாறை மருவுதுமே."
(த. வா. கோவை: ௬௧)

"தண்பட்டம் மேவும் வயல்தஞ்சை வாணன் தமிழ்ச் சிலம்பில்
பண்பட்ட தேமொழிப் பாவை அன்னீர்! பனை பட்டகையும்
மண்பட்ட கோடும், மதம்பட்ட வாயும், வடிக்கணை தோய்
புண்பட்ட மேனியு மாய்வந்த தோஒரு போர்க் களிறே."
(த. வா. கோவை: எ௨)

“மயனார் விதித்தன்ன மாமதில் சூழ்தஞ்சை வாணன் வெற்பில்
பயனார் பயோதரப் பாவை அன்னீர் ! பசும் பொற்குழை தோய்
நயனார விந்தத்து நஞ்சு, நும்வாய் இதழ் நல்லமுதம்
அயனார் படைத் திலரேல், அடங்காதவ் வரனுக்குமே.”

(த. வா. கோவை : ௧௩௯)

“பண்ணும் குழலும் பழித்தசொல் பாவை! பரியல்; எல்லா
மண்ணும் புகழ்தஞ்சை வாணன்ஒன் னார்என மைக்குவளைக்
கண்ணும், கனைஇருள் கங்குலும், மாரன் கணைகள் பட்ட
புண்ணும் புலரவந்தார்நமது ஊர்வயின் போனவரே.”

(த. வா. கோவை : ௨௩௯)

“தொடுசிலைக் கானவர் ஓடிய வேற்றுச் சுவடுவையே;
அடுசிலைக் காளை அடிஅவையே; அறிந்தோர் அறிய
இடுசிலைப் பார்புரக்கும் தஞ்சை வாணன் இசைக்குருகப்
படுசிலைப் பாவை பதம் இவையே; வண்டு பாடுகவே.”

(த. வா. கோவை : ௩௪௯)

“ஒன்றோ நமக்கு வந்தெய்திய நன்மை! உடன்றெதிர்ந்தார்
வன்றோல் அமர்வென்ற வாள்படை வாணன் தென்மாறையில்வாழ்
நின்றோகை கற்பின் நிலைமைஎண் ணாதெதிர் நின்றுவெந்நிட்
டன்றோ வடக்கிருந்தாள் மடப்பாவை அருந்ததியே?”

(த. வா. கோவை : ௩௭௪)

“மாவா ரணம்அன்ன வாணன்தென் மாறைநம் மன்னர்நின்னைப்
பாவாய் பணியவும் பார்க்கிலைநீ; இடப்பாக மங்கை
தாவாத சங்கரன் கங்கைதன் கொங்கை தழீஇ,இதழிப்
பூவார் சடைமுடி மேல்வைத்த போதும் பொறுத்தனளே.”

(த. வா. கோவை : ௪௦௧)

பண்டைக் காலத்தில் பொற்கொல்லர்கள் மிகச் சிறந்த பொற்பாவைகள் இயற்றுவர். அத்தகைய பொற்பாவையைப் (Copy) படிஎடுத்தலும் வழக்கமாம். இவ்வரிய வரலாற்றுண்மையைப் பொய்யாமொழிப் புலவர் அழகொழுகக் குறிக்கிறார் ௧௦௪ ஆம் பாட்டில்.

“தொடையேய் எருக்கென்பு நீஅணிந்தால் என்னை? சூல்வளைஊர்
மடையேய் வயல்தஞ்சை வாணன் வெற்பா! மலரோன் வகுத்த
படையே நயனம் படைத்த பொன்பாவை படிஎடுக்க
இடையேதெனத் தெரியாதுரை ஆணிஇட அரிதே.”

(த. வா. கோவை : ௧௦௪)

(தொடரும்)

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி சிலம்பு, ௩௪, பரல் ௪, ௩௦௦ஆம் பக்கத் தொடர்ச்சி)

[யோகத்தாள் வருகிறாள். மாலையணிந்த இலைக் கொத்தும் தூபமும் ஏந்தியுள்ளன அவள் கைகள்.]

**யோகத்:** பெருமக்களே, கோயில்களுக்குச் சென்று இவைகளை இட்டு வணங்க வேண்டும் என்று மனங்கொண்டேன். அரசர் மனநிலை மாறுபட்டு நல்லன இவை, தீயன இவை என்று அறியமாட்டாது வருந்துகிறார். அவருக்கு ஆறுதல் சொல்ல ஆற்றுதவளாக இருக்கிறேன். என் இல்லத்திற் கருகே வீற்றிருக்கும் ஒளியுடைய அப்பலத் தெய்வமே! நின்னை முதலில் வணங்குகிறேன். இப்பழியினின்றும் எங்களைக் காப்பாற்று. எங்களை நடத்தும் பெருந்தலைவன் மனந் தடுமாறுவது உண்டு, என்ன நேருமோ என்றஞ்சு கிறோம், காப்பாற்று!

[பலிக்கல் மீது வைத்து வணங்குகிறாள். கொரிந் தத்திலிருந்து செய்தி சொல்லி வருகிறான்.]

**செய்தி சொல்லி:** எனக்குப் புதிதானவளே, ஒதிபர் இல்லம் எங்குள்ளது, காட்டுங்கள். நான் அவரைக் காணவேண்டும்.

**கோரஸ்:** இதுதான் அவர் இல்லம். அவர் உள்ளே இருக்கிறார். இப்பெருமாட்டி அவருடைய மனைவி. அவர் ஈன்ற மக்களுக்குத் தாய்.

**செய்திசொல்லி:** இவ்வம்மை வாழ்க! அப்பெருமானார் குடி வாழ்க!

**யோகத்தாள்:** நீங்கள் வாழ்க! ஐயா, உங்கள் அன்புடைமைக்கு நன்றியுடையேன். உங்களுக்கு வேண்டுவதென்ன? அன்றி ஏதேனும் அரசருக்குச் செய்தியுண்டோ?

**செய்திசொல்லி:** நல்ல செய்திதான் அம்மா: உங்கள் அனைவருக்கும் அவருடைய குடும்பத்திற்கும் நல்ல செய்திதான் அம்மா!

**யோகத்தாள்:** என்ன செய்தி? யாரிடமிருந்து வந்துள்ளது?

**செய்திசொல்லி:** கொரிந்தத்திலிருந்துதான். செய்தியில் துன்பங் கலந்துள்ளதேனும் மகிழ்ச்சிக்கும் இடமுண்டு.

யோகந்தாள்: அப்படி இன்பமும் துன்பமும் கலந்த செய்தி யாதாகத்தானிருக்கும்?

செய்திசொல்லி: எங்கள் நாட்டினர் ஓதிபரை அரசராக்குவர்.

யோகந்தாள்: அரசர் பொலிபர் ஆளவில்லையா?

செய்திசொல்லி: அம்மா, அரசர் பொலிபர் இறந்துவிட்டார். அடக்கமும் ஆயிற்று.

யோகந்தாள்: என்ன! இறந்துவிட்டாரா? ஓதிபரின் தந்தையா?

செய்திசொல்லி: ஆம் அம்மா!

யோகந்தாள்: (தோழியிடம்) பெண்ணே, சென்று தலைவரிடம் இச்செய்தியைத் தெரிவித்து வா. (தோழி செல்கிறாள்) தெய்வ சக்தி எங்குள்ளது? தந்தையைக் கொல்லுதல் கூடாது என்று ஓதிபர் இத்தனை காலமாகத் தம் தந்தையைச் சாராதிருந்தாரே! இன்றோ இயற்கை வழி, முதுமையினால் அவர் இறந்து போனார். ஓதிபருக்குப் பழி இலதாயிற்று!

[ஓதிபன் வருகிறான்.]

ஓதிபன்: அன்பே, என்னை மீண்டும் அழைத்ததேன்?

யோகந்தாள்: இச் செய்தியைக் கேளுங்கள். தெய்வ மொழிதான் என்னவாயிற்று என்று அறிந்துகொள்ளுங்கள்.

ஓதிபன்: யார் இவர்? என்ன செய்தி கொண்டு வந்துள்ளார்?

யோகந்தாள்: இவர் கொரிந்தத்திலிருந்து வருகின்றார். உங்கள் தந்தை பொலிபர் இறந்துவிட்டாராம்.

ஓதிபன்: என்ன ஐயா? நீங்களே சொல்லுங்கள்.

செய்திசொல்லி: உண்மைதான் அரசே. அனைவரும் செல்லும் வழியில்தான் அவரும் இயற்கை எய்தினார்.

ஓதிபன்: சூழ்ச்சியினாலா, அன்றி நோய்வாய்ப்பட்டா?

செய்திசொல்லி: முதுமையினர்க்கு வரும் நோய்தான்.

ஓதிபன்: நோய்வாய்ப்பட்டு இறந்துபோனாரா? அந்தோ! தந்தையே!

செய்திசொல்லி: தம் கடமையை நன்றாகச் செய்து வந்து முதுமையில் இயற்கை எய்தினர்.

ஒதிபஸ்: நன்று, நன்று, அன்பே. பிதியத்தின் தீ, தெய்வ மொழி, பறவைச் சொல் என்ற இவைகள் என்னவாயின? என் தந்தையை யானே கொல்வேன் என்ற சுடு சொற்கள்! தந்தை இறக்க அடக்கம் செய்யப் பெற்றார். இங்கு யான் இருக்கிறேன். அவர் வருந்த வாளும் எடுத்திலேன். தெய்வ மொழி பொய்யாயிற்று!

யோகந்நாள்: இத்தனை நாழிகை சொல்லிக் கொண்டிருக்க வில்லையா நான், இவற்றை யெண்ணி மயங்க வேண்டா மென்று!

ஒதிபஸ்: நீ சொல்லிக் கொண்டிருந்தாய். யான் தான் அஞ்சினேன்.

யோகந்நாள்: இனியேனும் அதை நினைத்து மருளாதீர்கள்.

ஒதிபஸ்: இன்னும் ஒன்றுள்ளதே என் தாய்.

யோகந்நாள்: அஞ்சுதல் எதற்கு? வாழ்வே இயற்கையின் விளைவு. பின் வருவது யாருக்குத் தெரியும்? இருக்கும் வரையில் நன்றாக வாழ்ந்து வரவேண்டும். அன்னையை மணக்க நேரும் என்று அஞ்சுவானேன். இவ்வாறு பொல்லாக் கனவு பலருக்கும் வருவதுண்டு. ஆயின் அவைகளை மனத்திலிருந்து நீக்கிக்கொள்ளவேண்டும், வாழ வேண்டுமாயின்.

ஒதிபஸ்: அன்னை இறந்தவளாயின் அஞ்சுதற்கில்லை. ஆயின் அன்னை இருக்கும்போது அஞ்சாமல் இருக்க என்னலிய லாது.

யோகந்நாள்: தந்தை இறந்தவரையில் ஓரளவு மன அமைதி யுற்றதன்றோ?

ஒதிபஸ்: ஆம். ஆயின், அன்னை இருக்குங்காலத்தே நான் அஞ்சவேண்டியவனே.

செய்திசொல்லி: அரசே, எவரைப்பற்றி அஞ்சுகிறீர்கள்.

ஒதிபஸ்: அரசர் பொலிபரின் மனைவி அரசி மிரோபி அம்மைதான்.

செய்திசொல்லி: அவ்வம்மையால் தங்களுக்குத் தீமையாவது எப்படியோ?

ஒதிபஸ்: தெய்வமொழி யொன்றுண்டு. அது மிகவும் அஞ்சு தற்குரியது.

செய்திசொல்லி: என்னைப் போன்ற வேற்றான் ஒருவனுக்குச் சொல்லத் தகுவதோ அது?

ஒதிபன்: சொல்லத் தருவதுதான். லோக்கியத் தெய்வம் சொல்லிற்று, என் தாயை மணந்து தந்தையைக் கொல்வேன் என்று. எனவேதான் கொரிந்த நாட்டுக்கு வருவது தடையாகிறது. தாய் தந்தையரை விட்டுப் பிரிவதென்பது துன்பமாயினும், இந்நாள் வரையில் தீமையினின்றும் விலகி நிற்கின்றேன்.

செய்திசொல்லி: இதற்காகத்தான் அரசர் தம்மை நாடு கடத்திக் கொண்டதுவோ?

ஒதிபன்: ஆம். என் தந்தையைக் கொல்லுதற்கு ஆளாகாதவாறு உறுதியுடனிருக்கிறேன்.

செய்திசொல்லி: ஆயின் அச்சத்தினை ஒழியுங்கள். நான் வந்ததும் நல்லதாயிற்று.

ஒதிபன்: என் நன்றி சொல்லத்தரமன்று.

செய்திசொல்லி: நல்லது சொல்லித் தங்கள் நாட்டுக்கு அழைத்துச் செல்வேன்.

ஒதிபன்: நம் நாட்டுக்கா? ஒருபோதும் உடன்படேன்.

செய்திசொல்லி: என் அன்பிற்குரிய இளைஞரே! கேளுங்கள். ஒன்றை உங்களுக்குத் தப்பாக மறைத்து வைத்துள்ளனர்.

ஒதிபன்: அது எப்படியோ? தெய்வத்தின் மேலாணை! உண்மையைச் சொல்லுங்கள்.

செய்திசொல்லி: உங்கள் வீட்டுக்குச் செல்லவொண்ணாது செய்வது இப் பழிதானே?

ஒதிபன்: ஆம். போபஸ் சொல்லிய மாற்றத்தில் எனக்கு நம்பிக்கை உளளது.

செய்திசொல்லி: உங்கள் தாய்க்குத் தீங்குநேரும் என்பதுதானே?

ஒதிபன்: ஆம். அதுவே எனக்கு என்றும் துன்பந்தருவது.

செய்திசொல்லி: அவை வீணானவை அரசே! உங்கள் அச்சம் பயனற்றது.

ஒதிபன்: எப்படிப் பயனற்றதாகும்?

செய்திசொல்லி: பொலிபன் தங்கள் தந்தையல்ல.

(தொடரும்)

நாவலர், சோமசுந்தர பாரதியார்,
ஆய்வறிஞர், சதாசிவ பண்டாரத்தார் நினைவுக் கூட்டம்



அமைச்சர், சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையுரை ஆற்றி
நூலை வெளியிடுதல்



செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார்
பாரதியார் உருவப்படத்தைத் திறந்துவைத்துப் பேசுதல்



பேராசிரியர், கோ. சுப்பிரமணிய பிள்ளை பண்டாரத்தார்
உருவப்படத்தைத் திறந்துவைத்துப் பேசுதல்



நாவலர் பாரதியார், ஆய்வறிஞர் பண்டாரத்தார் திருவுருவப்படங்க
திறந்துவைக்கப்பட்டிருத்தல்

நாவலர் பாரதியார், ஆராய்ச்சிப் பேரறிஞர்
சதாசிவ பண்டாரத்தார்

# நினைவுக் கூட்டம்

[தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 17—2—60 இல் சென்னை இராசாசி மண்டபத்தில் நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்களின் சீரிய தலைமையில், நாவலர் பாரதியார், ஆராய்ச்சிப் பேரறிஞர் சதாசிவ பண்டாரத்தார் ஆகியோரின் நினைவுக் கூட்டம் நடைபெற்றது. அமைச்சரவர்கள் கழகவழி வெளிவந்துள்ள 'நாவலர் பாரதியார்' என்னும் வரலாற்று நூலை வெளியிட்டனர். செட்டிநாட்டரசர் இராசா சர். முத்தையா செட்டியாரவர்கள் நாவலர் பாரதியாரின் உருவப் படத்தையும், பேராசிரியர், கோ. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் சதாசிவ பண்டாரத்தார் அவர்களின் உருவப்படத்தையும் திறந்து வைத்து அப் புலவர் பெருமக்களின் அருந்திறல்கள் பற்றிப் பேசினர். கூட்ட நிகழ்ச்சிகளின் சுருக்கம் பின் வருமாறு :]

கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின்
வரவேற்புரை

சென்னை மாநில நுண்மாண் நுழைபுலமிக்க மதியமைச்சர் அவர்களே! செட்டிநாட்டுப் பேரரசர் அவர்களே! மற்றும் இங்குக் கூடியிருக்குந் தமிழ்ப் பெருமக்களே! இங்கு நாம் இரண்டு பெரிய அறிஞர்களின் பிரிவினை நோக்கி ஒரு நினைவுக் கூட்டத்தை நடத்த இருக்கின்றோம். நாம் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே தமிழ்ப் புலவர்கள் பலர் இருந்தனரென்பதைத் தொல்காப்பியத்திலே "என்மனார் புலவர்" என்று பல சூத்திரங்களிலே கூறப்படுவதுகொண்டு அறிகின்றோம். அதற்கு முன் எத்தனையோ புலவர்களைக் கூற்றுவன் கொள்ளை கொண்டு போயிருக்கின்றான். தொல்காப்பியரையும், தொல்காப்பியருக்குப் பின் வந்த பெரும் பெரும் புலவர்களையும் கூற்றுவன் கொள்ளைகொண்டு போயிருக்கின்றான். இப்போது நாம் வாழ்ந்து வரும் இக்காலத்திலேயே எத்தனையோ புலவர்களை இழந்திருக்கின்றோம். இப்போது கடைசியாக நாம் இரண்டு பெரிய அறிஞர்களை இழந்தமை கருதியே இந்தப் பெருங் கூட்டம் இங்கே கூட்டப்பெறுகின்றது. ஒருவர், டாக்டர் நாவலர் சோமசுந்தர பாரதியாரவர்கள். அவர்கள் தமிழிலே எம். ஏ. பட்டம் பெற்றவர்கள். சட்டத்திலே பி. எல். பட்டம் பெற்றவர்கள். ஆனால் அவர்கள் கடைசிக்காலத்திலே அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலே தமிழ்ப் பேராசிரியராக இருந்து தமிழ்ப்பணி செய்தவர்கள்,

டாக்டர் நாவலர் பாரதியார் அவர்களை நினைக்கும்போது அவர்கள் ஒரு பெரிய வீரர் என்பதுதான் நம் கண்முன்னே தோன்றும். அவர்களுடன் மிக நெருங்கிய தொடர்புகொள்ளும் வாய்ப்பு எனக்கு 1937ஆம் ஆண்டில் கட்டாய இந்தி தமிழ் நாட்டிலே புகுத்தப்பட்ட அந்தக் காலத்திலே ஏற்பட்டது. அவர்கள் அதுபற்றித் துடிதுடித்ததை யான் நன்கு அறிவேன். அந்தக்காலமுதல் அவர்களோடு மிக நெருங்கிய தொடர்பு கொள்ளும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டது. அவர்கள் அப்போது கட்டாயமாக இந்தியைப் புகுத்திய திருவாளர் இராசாசி அவர்களுக்கு வெளிப்படைக் கடிதமொன்று எழுதினார்கள். அதனை யான்தான் அச்சிட்டு வெளிப்படுத்தினேன்.

அந்தக் காலத்திலே அப்படி அந்த எதிர்ப்பினைத் தெரிவிக்காவிடில் இப்பொழுது தமிழின் நிலைமை வருந்தத்தக்கதாக விருக்கும். வேற்றுமொழி இங்குப் புகுந்து அது ஆட்சி செலுத்தியிருக்குமென்பதை நீங்கள் எல்லோரும் நன்கு அறிவீர்கள். நம்முடைய அமைச்சர் அவர்கள் அதனை எவ்வாறோ உணர்ந்து தமிழ் அதற்குரிய தனி நிலையை அடைந்துவிடின் வேறு எந்த மொழியைப் பற்றியும் நாம் கவலை கொள்ள வேண்டுவதில்லை என்று கருதியே தமிழை ஆட்சி மொழியாகக் கொண்டு வந்துவிட்டார்கள். உயர்நிலைப் பள்ளிவரை எல்லாப்பாடங்களையும் தமிழில் சொல்லிக் கொடுக்கப்பட்டு வருவதுபோல் கல்லூரிகளிலும் எல்லாப் பாடங்களையும் தமிழில்தான் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்ற திட்டத்தையும் கொண்டுவந்து அதனையும் செயல்படுத்தி வருகின்றனர். ஆகையினாலே வேறு எந்த மொழியும் இதற்குப் புறம்பாகத்தான் இருக்கவேண்டுமே யல்லாது அது வந்து ஆட்சிசெலுத்தவே செலுத்தாது என்ற ஒரு நம்பிக்கை நம் அமைச்சர் அவர்கள் வழியாக நமக்குக் கிடைத்திருக்கின்றது என்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கின்

இனி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைத் தோற்றுவித்த இராசா சர். அண்ணாமலை செட்டியார் அவர்கள் டாக்டர். நாவலர் பாரதியார் அவர்களின் தகுதி அறிந்து அவர்களை வேண்டித் தலைமைப் பேராசிரியராக அமர்த்தியது பெருமைக் குரியதாகும். அவர்கள் ஓய்வு பெற்றதன் பின்னாலே அவர்களுக்கு டாக்டர் பட்டம் வழங்கிப் பொன்னாடை போர்த்திச் சிறப்புச் செய்ததெல்லாம் இங்கே வீற்றிருக்கும் இராசா சர். முத்தையா செட்டியார் அவர்களாவர். நம் பாரதியார் அவர்கள் சில அரிய நூல்களை இயற்றியிருக்கிறார்கள். இப்பொழுது அவர்கள் நூல்களைப்பற்றி அவர்களுடைய மகனார் ஒன்று தெரிவிக்கும்படி சொன்னார்கள்,

அவர்கள் தாம் எழுதிய நூலகளை மதுரைத் தியாகராசர் கல்லூரிக்கு உரிமையாக வழங்கிவிட்டதோடு, தம் ஆராய்ச்சிக்கெனத் தொகுத்து வைத்திருந்த நூலகத்துள்ள நூல்களை மிக மகிழ்வுடன் மதுரைத் தமிழ்ச்சங்கத்துக்கு வழங்கிவிட்டார்களாம். அது மிகவும் போற்றுதற்குரிய அரிய செயலாகும் என்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இனிச் சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் கல்வெட்டு ஆராய்ச்சித் துறையில் பெரும் வல்லுநர். அவர்களுக்கு ஒப்பானவர்கள் நம் நாட்டிலே இல்லையென்றே சொல்லலாம். அந்தத் துறையில் மிகவும் அமைதியான பணியைச் செய்தவர்கள். அவர்கள் பிரிவு நமக்கு மிகவும் வருத்தந் தரத்தக்க பிரிவாகும். அவர்களைத் தொடர்ந்து இப்பொழுதும் சிற்சில புலவர்கள் ஆராய்ச்சி செய்து வருகின்றனர். நாம் நம்முடைய கல்வி அமைச்சர் அவர்களை ஒன்று வேண்டிக்கொள்ளுதல் வேண்டும்; கல்வெட்டு ஆராய்ச்சிக்கு எனவே ஒரு துறையினை வகுத்து நம்முடைய பல்கலைக் கழகத்திலே இடம் பெறச் செய்தால் மிகவும் நன்றாயிருக்குமென்பது என்னுடைய வேண்டுகோள். அது புறக்கணிக்கக்கூடிய செயலன்று. இதேபோல் ஏட்டுச்சுவடிகளிலுள்ள செய்திகளை எல்லாம் தமிழிலே கொண்டு வருதற்குவேண்டிய தனிப்பட்ட பயிற்சி அளித்தற்கும் ஏற்பாடு வேண்டும். வித்துவான் பட்டம் பெற்றவர்களுக்கு ஓராண்டுப்படிப்பு அதற்கெனவே ஏற்படுத்தி அவர்களுக்கு வேறு அலுவல்கள் கிடைக்கிறபோது, அவர்களுக்கு ஒரு தனிச் சலுகை கொடுப்பார்களேயானல் அவர்கள் கட்டாயம் விரும்பிப் படிப்பார்கள் என்பது அடியேனுடைய கருத்து. அடுத்து இனி இவ்விருபெரும் பெரியார்களைப் பற்றி ஒரு தனிச் சிறப்பு அமைந்திருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும். இவ்விருவரும் ஒரே பல்கலைக் கழகத்தில் அஃதாவது அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகவும் விரிவுரையாளராகவும் பணியாற்றியவர்கள். டாக்டர் பாரதியார் அவர்களின் படத்தைத் திறந்து வைப்பதற்கு இராசா சர் முத்தையா செட்டியார் அவர்களும் சதாசிவ பண்டாரத்தார் அவர்களுடைய படத்தைத் திறந்து வைப்பதற்குப் பேராசிரியர் கோ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் வந்துள்ளார்கள். இனி நாவலரவர்களுடைய மாணவர் இருவர் தமிழ்ப் பேராசிரியை இராசரத்தினம் அம்மையாரும், தமிழ்ப் பேராசிரியர் பூ. ஆலால சுந்தரஞ் செட்டியாரும் இன்று பேசுவர். இனிக் கல்வெட்டுத் துறையிலும் ஆராய்ச்சித் துறையிலும் வல்லுநரான பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை அவர்கள் பேசுவார்கள். மதிப்புக்குரிய நிதி அமைச்சர் அவர்களைத் தலைமையுரை ஆற்றும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

## நிதி, கல்வி அமைச்சர் பேச்சு

நண்பர்களே! நாம் எல்லாரும் இன்றைக்கு இரண்டு பெரியார்களுக்கு நம்முடைய மரியாதையைத் தெரிவித்துக்கொள்வதற்காக இங்குக் கூடியிருக்கிறோம். இருபெருந் தமிழ்ப் பேரறிஞர்கள் நம்மைவிட்டுச் சமீபகாலத்திலே இயற்கை எய்திவிட்டார்கள். அவர்கள் நினைவு நாளாக இன்றைக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதிலே சோமசுந்தர பாரதியாரைப்பற்றி நான் உங்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை என்று கருதுகின்றேன். தமிழ் நாட்டிலே தமிழ்த் துறையிலே நல்ல பயிற்சி பெற்று அதன் மூலமாகத் தமிழுக்கு ஆக்கம் கொடுக்கவேண்டுமென்ற முறையிலே பணியாற்றிய பெரியவர்களிலே சோமசுந்தர பாரதியார் முன்னணியிலே இருந்து வந்திருக்கின்றார்கள் என்பது எல்லாரும் அறிந்தது. இக்காலத்திலே சுதந்திரம் பெற்றதற்குப் பிற்பாடு நம்மிடையே தமிழ் உணர்ச்சி, தமிழ் அன்பு, தமிழுக்கு ஆதரவு ஏற்படுவது இயற்கையாக

ஆனால்: அந்நிய ஆட்சி இருந்த காலத்திலே, ஆங்கில மொழி ஆதிக்கம் இருந்தகாலத்திலே தமிழுக்கு ஆக்கம் கொடுக்கவேண்டிய முறையிலே பல பெரியவர்கள் பாடுபட்ட காரணத்தினாலேதான் தமிழ் இன்று இந்த நிலையில் இருக்கின்றது என்று பெருமைப் படக்கூடியதாக இருக்கின்றது. அவ்வாறு இல்லாது எல்லாருமே ஆங்கிலமொழி மோகத்திலே மூழ்கி ஆங்கில மொழி கற்றால் போதும், ஆங்கிலத்தில்தான் பேசினால் பெருமை என்கின்ற நிலையிலேயே எல்லாரும் மூழ்கி இருந்திருப்பார்களானால், இன்றைக்குத் தமிழை மறுபடியும் அதற்கு உரிய இடத்தில் நிலைக்குக் கொண்டுவருவது பெரும் பாடாகப் போய்விடும். ஆகையினால்தான் அந்தக் காலத்தில் ஆங்கிலமொழி ஆதிக்கம் இருந்த காலத்தில் தமிழுக்காகப் பாடுபட்டவர்களுக்குத்—தமிழின் உயர்வுக்காகப் பணியாற்றியவர்களுக்கு நாம் பெரு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம். அப்படிப்பட்ட சோமசுந்தர பாரதியார் அவர்கள் சர்வகலாசாலைப் பட்டம் பெற்ற வழக்கறிஞராக வாழ்க்கை நடத்திய காலத்திலும், தமிழின் உயர்வுக்குப் பாடுபட்டு வந்திருக்கிறார்கள் என்பதை நாம் காண்கிறோம்.

அவர்களுடைய வரலாற்றைத் தெரிவிக்கின்ற முறையிலே இன்றைக்கு நாவலர் பாரதியார் என்ற புத்தகத்தை வெளியிடுமாறு எனக்குப் பணித்திருக்கின்றார்கள். மிக மகிழ்ச்சியுடன் நான் அந்தப் பணியை ஏற்று அந்த நூலை வெளியிடுகின்றேன்.

தமிழ் மக்கள் இந்தப் புத்தகத்தை வாங்கிப் படித்து அதன் மூலமாக நாவலர் பாரதியார் அவர்களுடைய வாழ்க்கையைத் தெரிந்து கொள்வது மட்டுமல்ல; அதன்மூலமாகப் புத்துணர்ச்சி பெற்றுத் தமிழுக்குப் பணிசெய்யக்கூடிய வாய்ப்பைப் பெறுவார்கள் என்று நம்புகின்றேன். பிறந்தவர்கள் எல்லோரும் இறந்துதான் தீரவேண்டும். பாரதியார் அவர்கள் எண்பது ஆண்டுகள் நம்முடனிருந்து அதற்குப்பின் உயிர் நீத்திருக்கின்றார்கள். அந்த வயதுக்கு மேல் இருப்பவர்கள் ஒரு சிலரே. பெரியவர்கள் பிரியும்போது நாம் கொள்ளவேண்டிய உறுதி அவர்கள் எந்த லட்சியத்திற்காகப் பாடுபட்டார்களோ, எந்த மொழி உயர வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்களோ அதற்காகத் தொடர்ந்து பாடுபடக்கூடிய ஓர் உறுதியை நாம் மனதிலே ஏற்படுத்திக்கொள்ள விரும்பினால்தான் அவர்களுக்கு நல்ல முறையிலே மரியாதை செய்பவர்களாவோம். ஆகையினால் இன்றைக்கு இருக்கக்கூடிய இளைஞர்கள் அவர்களுடைய பரம்பரையிலே வருகின்ற எல்லோருமே தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடுவோம் என்கின்ற உறுதியை இந்த நினைவு நாளிலே உறுதிப் படுத்திக்கொள்வது மிகவும் பொருத்தமாக இருக்குமென்ற கருத்தைத்தான் உங்கள் முன்னிலையில் வைக்க விரும்புகின்றேன். அவ்வாறு தமிழ் மேலும் மேலும் வளர்ச்சியுறக்கூடிய துறையிலே நாம் எல்லோரும் பாடுபடுவதற்கு முயற்சி செய்யவேண்டும். இதிலே கருத்து வேறுபாடு இருப்பதற்கு இடமில்லை என்பது என் துணிபு. யார் யாரைக் கேட்டாலும் இன்றைக்குச் சுதந்திர இந்தியாவிலே வாழுகின்ற ஒவ்வொருவரும் இந்தியாவிலே இருக்கக்கூடிய பல்வேறு மொழிகளும் வளர்ச்சியுற்று முன்னிலைக்கு வரவேண்டுமென்பதை எல்லாரும் ஒப்புக்கொள்வார்கள். அதன் காரணத்தினால்தான் நம்முடைய அரசியல் சட்டத்திலேகூட இந்தியாவிலே இருக்கக்கூடிய எல்லா மொழிகளையும், முக்கியமான மொழிகளையும் தேசிய மொழியாக ஏற்றுக்கொண்டு அந்தத் தேசிய மொழியெல்லாம் மேலும் மேலும் வளர்ச்சியுற வேண்டிய முறையிலே சர்க்காரும் மக்களும் பாடுபடவேண்டுமென்று அரசியல் சட்டத்திலேயே விதித்துக்கொண்டிருக்கிறோம். அதிலே ஒன்றிற்கொன்று போட்டி இருக்கக்கூடியது என்பது இல்லை. ஒருமொழிக்கு இன்னொரு மொழி போட்டி இருக்கவேண்டுமென்ற அவசியமுமில்லை. அந்தந்த மொழிகள் அதனதனுக்குரிய இடங்களிலே அமர்ந்துகொண்டு எல்லாருக்கும் பயன்பட வேண்டுமென்பதைத்தான் நம்முடைய அரசியல் சட்டத்திலே வகுத்துக்கொண்டிருக்கின்றோம். அந்த முறையில் தமிழ்நாட்டிலே தமிழ் மூலமாகத்தான் எல்லாக் காரியங்களும் செய்யப்படவேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க

முடியாது ஆனால் உடனடியாக அதை நிறைவேற்றுவதிலே சில இன்னல்கள் இருக்கின்றன என்று சொல்லும்போது அனேகமாக அதிலும் கருத்து வேறுபாடு இல்லை என்பதைச் சொல்ல விரும்புகின்றேன். ஏனென்றால் பல நூற்றாண்டுகள் பல துறைகளில் தமிழ் வழங்கப்படாத காரணத்தினாலே சில துறைகளிலே தமிழ் மூலமாகக் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கும், பாடங்களைப் போதிப்பதற்கும் சில குறைகள் இருக்கலாம் என்பதை எல்லாரும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் ஆனால் அந்தக் குறையை எப்படித் தீர்ப்பது என்பதைப் பற்றித்தான் நாம் இன்று ஆராய்ந்து அதற்கான முயற்சியில் ஈடுபட்டிருக்கின்றோம் இன்றைக்கு எந்த மொழியானாலும் உலகிலே முதன்மை பெற்றிருக்கின்றது என்றால் எந்த அடிப்படையில் முதன்மை பெற்றிருக்கின்றது என்பதை ஆராயக் கடமைப்பட்டிருக்கின்றோம். அந்த முறையிலே தமிழும் வளர்வதற்கு எல்லாவிதமான முயற்சிகளையும் எடுக்கவுங் கடமைப் பட்டிருக்கின்றோம். இன்றைக்கு ஆங்கில மொழி உலகத்திலே பல்வேறு பகுதிகளுள்ளும் எல்லாராலும் பயிலப்பெற்று உலகத்திலே முதன்மை மொழியாகப் பயன்பட்டுவருகின்றது. எந்தக் காரணத்தினாலே ஆங்கிலம் இப்படிப்பட்ட முதலிடம் பெற்றிருக்கின்றது என்று பார்த்தால் ஏதோ நம்மை ஆண்ட ஆங்கிலேயர்களுடைய மொழி என்ற காரணத்தினால் அல்ல. அப்படியிருந்திருந்தால் இன்றைக்கு அது இந்தியாவோடு மட்டும் இருந்திருக்கும். அன்றிருந்த ஆட்சியாளர்கள் இங்கு ஆங்கிலத்தைப் புகுத்திய காரணத்தினால் இங்கு ஆங்கிலத்திற்கு ஒரு தனி மதிப்பு இருக்கிறது என்று சொன்னால் அவர்கள் வெளியேறியவுடனேயே நாம் ஆங்கிலத்தை விட்டிருக்கவேண்டும். இன்றைக்கு அவர்கள் ஆட்சியின்கீழ் இருந்த இந்தியாவில்மட்டுமல்ல; உலகத்திலேயே இருக்கின்ற பல்வேறு நாடுகளிலும் ஆங்கிலத்தை விரும்பிப் படிக்கின்றார்கள் என்பதைப் பார்க்கின்றோம். சமீப காலத்திலே ரஷ்யாவிலிருந்து ஒரு குழுவினர் இங்கு வந்திருந்தார்கள். அவர்கள் அங்கு என்னென்ன மொழிகள் கற்றுக் கொள்கிறார்கள் என்பதுபற்றி விசாரித்தேன். அவர்கள் சொன்னார்கள் : அங்கிருக்கின்ற மொழியைவிட மேலாக ஐரோப்பிய மொழி ஒன்றைக் கற்றுக்கொள்ளவேண்டும் என்று கூறினார்கள். அந்த ஐரோப்பிய மொழிகளிலே எந்த மொழியை அவர்கள் அனேகமாகக் கற்றுக்கொள்கிறார்கள் என்று கேட்டபோது இன்றைக்கு இருக்கக்கூடிய நிலையில் பெரும்பகுதியினர் ஆங்கிலத்தையே விரும்பிப் படிக்கின்றார்கள் என்று சொன்னார்கள். எந்தக் காரணத்தில் இன்றைக்கு ஆங்கில மொழியை எடுத்துக் கொள்ளுகிறார்களெனின் எந்தத் துறையிலே வேண்டுமானாலும்

சரி, பழங்காலக் கருத்துக்கள் முதற்கொண்டு தற்காலக் கருத்துக்கள் வரை விளக்கக்கூடிய பல நூல்கள் இருப்பதனாலேதான். இன்றைக்கு ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு வருடமும் ஆங்கிலத்தில் பல நூல்கள் வெளிவந்துகொண்டே இருப்பதால் ஆங்கிலத்தைத் தெரிந்திருந்தால் அக் கருத்துக்கள் மொழி பெயர்ப்பு இல்லாமலே உடனே படித்துக்கொள்ளலாம் என்ற காரணத்தால் ஆங்கிலத்தைப் படிக்கின்றனர். அதே முறையில் நம்முடைய தமிழுக்கும் பெருமை வரவேண்டுமென்றால் பல்வேறு துறைகளிலும் புதிய புதிய கருத்துக்கள் தெரிவிக்கும் நூல்கள் வெளிவரவேண்டும். அந்த நிலைமை எப்படி ஏற்படுத்துவது என்பதுபற்றித்தான் நாம் எல்லாரும் ஆலோசனை செய்ய வேண்டுவது அவசியம் இன்றைக்கு அப்படிப்பட்ட நிலைமை ஏற்படவேண்டுமானால் தமிழ் இப்படிப் பல துறைகளில் வழங்கப் பட்டால்தான் அத்துறைகளில் நூல்கள் பெருகும். இன்றைக்கு உலகத்திலேயே எல்லாரும் விஞ்ஞானத் துறையில் முன்னேற வேண்டும் என்று கருதுகின்றார்கள் விஞ்ஞானத்துறையில் ஆராய்ச்சி செய்து புதிய புதிய கருத்துக்களை எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்புகின்றார்கள்.

ஆகையினாலே இன்றைக்குத் தமிழிலே விஞ்ஞான நூல்கள் வரவேண்டியது அவசியம். கணித நூல்கள் வரவேண்டியது அவசியம். பொறியியல் நூல்கள் வரவேண்டியது அவசியம். வரலாற்று நூல்கள் வரவேண்டியது அவசியம். ஆராய்ச்சி நூல்கள் வரவேண்டியது அவசியம். பல்வேறு நூல்களும் நம்முடைய தமிழிலே வரவேண்டுது மிகவும் அவசியம். அதை ஏற்படுத்தவேண்டுமென்று சொன்னால், அஃது இயற்கையாக ஏற்பட்டுவிடும் என்று சொல்லுவது தவறு. அதற்காக ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டுவது அவசியம். அதற்காகத்தான் இன்றைக்குக் கல்வி எல்லா அளவிலும் தமிழிலே இருக்க வேண்டும் என்று சொல்வது ஏதோ தமிழ்ப் பித்துப்பிடித்ததினால் அல்ல, தமிழ் வெறி பிடித்ததினால் அல்ல. இன்றைக்குத் தமிழுக்கு இப்படிப்பட்ட ஓர் இடம், இப்படி வளர்ச்சி ஏற்பட வேண்டும் என்ற நிலை, இந்தமாதிரி எல்லாத் துறைகளிலும் அதை உபயோகிக்க வேண்டிய காரணத்தினால்தான் தமிழுக்கு இந்த உயர்வு ஏற்படும் என்பதைக் காண்கிறோம். இன்றைக்கு விஞ்ஞான நூல்கள் தமிழிலே வரவேண்டுமென்று சொன்னால் விஞ்ஞானம் படிக்கவேண்டியவர்கள் எல்லாரும ஆங்கிலத்தில் படித்தாகவேண்டும். ஆகவே விஞ்ஞானக் கருத்துக்கள் ஆங்கிலத்திலே படித்து, ஆங்கிலத்திலே எழுதி, ஆங்கிலத்திலேயே குறித்து வைக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. அதைத் திருத்தித் தமிழுக்குக் கொண்டுவரவேண்டுமென்று சொன்னால் எவ்வளவு

கஷ்டம் இருக்கிறது என்பது ஆங்கிலத்திலே சில கருத்துக்களைப் படித்து அதைத் தமிழிலே சொல்ல முயற்சி செய்யும்பொழுது அதில் இருக்கக்கூடிய கஷ்டம் நன்றாகத் தெரியும். ஆகையினால் தான் இன்றைக்குத் தமிழுக்கு முன்னேற்றம் அடையவேண்டும் என்று சொல்லும்பொழுது போதனைமொழி தமிழ் மொழியாக எல்லா ஊர்களிலும் அமைவதென்ற இந்தக் காலத்திலேதான் உண்மையான தமிழ் வளர்ச்சி ஏற்படமுடியும். அதற்கான நூல் களும் வரமுடியும் என்பதை நாம் காண்கின்றோம். அதை அனு சரித்துத்தான் இன்றைக்குத் தமிழ்மொழி போதனை மொழியாக ஏ* கல்லூரிகளிலும் ஏற்பாடு செய்யவேண்டும் என்கின்ற கருத்தும் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட் டிருக்கிறது. ஏன், தமிழ் போதனைமொழியாக வருவது இன்றைக்குத் தவறு என்று சொல்லுபவர்கள்கூட அவர்களைக் கேட்போமானால் தமிழ் இதே மாதிரிதான் இருக்கவேண்டுமா? என்றைக்குமே ஆங்கிலத்தைப் போதனைமொழியாக வைத்துக்கொண்டிருக்கவேண்டுமா? என்று சொன்னால், இல்லை பிற்காலத்தில் வரவேண்டுவது அவசியந்தான் என்று அவர்கள் சொல்லுவார்கள். ஆகையினாலே இந்த லட்சி யத்தை யாரும் மறுக்கமாட்டார்கள் என்ற காரணத்தினால்தான் நாம் மகிழ்ச்சியுறுகின்றோம். அப்படி அதிலே கருத்து வேற்றுமை இல்லையென்று சொன்னால் இதைப் போதனை மொழியாகக் கொண்டுவர எந்த முயற்சிகள் செய்யவேண்டுமென்பது பற்றியும் நாம் இன்றைக்கு ஆராயக் கடமைப்பட் டிருக்கின்றோம். பெரிய வர்கள் எல்லாரும் நாட்டினுடைய மக்களுடைய அறிவுத் திறன் குறைந்துவிடக்கூடாது என்று சொல்லுகிறவர்கள் எல்லாரும் இன்றைக்குச் சொல்லக்கூடிய தமிழிலே போதுமான நூல்கள் இல்லை. அதன் காரணத்தினாலே இன்றைக்குத் தமிழ் மொழி போதனைமொழி ஆகும்பொழுது அறிவுத்திறன் குறைந்துவிடுமோ என்று அவர்கள் உண்மையிலே கவலைப்படுகின்றனர். அவர்கள் கவலைப்படுவதும் ஏதோ அவர்கள் சொந்த நன்மைக்காக அல்ல. நாட்டினுடைய நன்மைக்காக என்பதையும் நான் ஒப்புக் கொள்ளத் தயாராக இருக்கின்றேன். ஆனால் இன்றைக்குக் கடைசியில் தமிழ்மொழிதான் போதனை மொழியாக இருக்க வேண்டும் என்கிறபோது ஏதோ ஒரு சமயத்தில் ஆரம்பம் செய்து தான் ஆகவேண்டும்.

இந்த நூலை வெளியிடுவதினால் நாவலருக்கு ஒரு புதிய பெருமை வந்துவிடுவதாக நான் எண்ணவில்லை. இதன் மூலமாக நமக்கு ஒரு புதிய துணிபு. நமக்குரிய ஓர் ஆர்வம். ஒரு பெரிய உற்சாகம் நமக்கு ஏற்படக்கூடிய இந்த நிகழ்ச்சிகள் அமைய வேண்டும் என்கின்ற முறையில்தான் இந்த நினைவுநாள் கொண்

* முதல்தரக் கல்லூரி.

டாடுவதற்குச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இங்கு ஏற்பாடு செய்திருக்கின்றார்கள் என்று நான் நம்புகின்றேன். அந்த முறையிலே இந்த நன்னாளிலே இந்த இரண்டு பெரியார்களுடைய நினைவு நாளிலே தமிழினுடைய முன்னேற்றத்திற்காக எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைவதற்காக நாம் பாடு படுவோம் என்ற உறுதியை எடுத்துக்கொண்டு அந்த ஒரு உறுதியுடன் மட்டும் நின்றுவிடாமல் நாம் எடுத்துக்கொண்ட உறுதி நிறைவுறும் முறையில் பணியாற்றவேண்டுமென்று எல்லாத் தமிழ்ப் பெருமக்களையும் கேட்டுக் கொண்டு, தமிழ்ப் பெருமக்களுடைய முறையிலே மட்டுமன்றி, எல்லாருடைய பணியாகவும் இருக்கவேண்டுமென்ற முறையிலே ஏனென்றால் இன்றைக்குத் தமிழ் வளரவேண்டுமென்று சொல்லும்பொழுது தமிழ் அண்டையிலே இருக்கின்ற மற்ற மொழிகளும், இந்தியாவில் இருக்கக்கூடிய எல்லா மொழிகளும் வளரவேண்டும் என்றுதான் நான் விரும்புவது. ஆகையினாலே இது ஒன்றைத் தள்ளிவிட்டு இன்னொன்று வளரவேண்டும் என்ற அடிப்படையில்லாது எல்லா மொழிகளும் வளரவேண்டும் என்று சொல்லும்பொழுது நமக்கு உரிய மொழியாய தமிழ்மொழி வளர்வதற்கு நாம் பணியாற்றக் கடமைப்பட்டிருக்கின்றோம் என்ற முறையிலே மேலும் மேலும் சிறக்கவேண்டும். அந்தச் சிறப்புப் பணி சிறப்புறுவதற்கான ஒரு பெரிய உற்சாகம் இந்த நினைவுநாளிலே ஏற்படவேண்டும் என்று எல்லோரையும் கேட்டுக்கொண்டு நாவலர் பாரதியார் அவர்களுடைய இந்த வரலாற்று நூலை வெளியிடுகின்ற பெரும் பணியை எனக்குக் கொடுத்ததற்காக எல்லாருக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு இந்தப் படத்தைத் திறந்துவைப்பதற்கு இராசா சர். முத்தையா செட்டியார் அவர்கள் இங்கு வந்திருக்கின்றார்கள். அவர்கள் இந்தப் படத்தைத் திறந்துவைப்பது மிகவும் பொருத்தமாகும். ஏனென்றால் பாரதியார் அவர்கள் அவர்களுடைய பல்கலைக் கழகத்திலே பேராசிரியராகப் பணியாற்றியவர்கள். அப் பணியாற்றுவதற்குப் பொறுப்பாக இருந்தவர்கள் முத்தையா செட்டியார் அவர்கள். ஆகையினால் அவர்கள் இதைத் திறந்துவைப்பது மிகவும் பொருத்தமாகவும் இருக்கும் என்பது. அதே சமயத்தில் இந்தத் தமிழ்த் துறையிலே அதுவும் தமிழ் போதனை மொழியாகவேண்டும் என்பதிலே அண்ணாமலைப் பல்கலைக் கழகம் முன்னணியிலே இருக்கவேண்டும் என்ற கருத்தை அவர்களுக்குத் தெரிவித்துக்கொண்டு பேராசிரியர்களைத் தமிழ்ப் பாடங்கள் சொல்லிக் கொடுப்பதற்குமட்டும் ஏற்பாடு செய்வது மட்டுமல்ல, மற்றப் பாடங்களையும் தமிழிலே சொல்லிக் கொடுப்பதற்கான ஒரு முயற்சியை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் வழி

காட்டியாக இருந்தால் எந்த நோக்கத்தைக் கொண்டு அப் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டதோ அந்த நோக்கமும் நிறை வேறும் என்ற கருத்தையும் இன்றைச்சு வற்புறுத்திக்கொண்டு செட்டியார் அவர்களைப் படத்தைத் திறந்துவைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

தலைவர் முன்னுரைக்குப் பின் இரு பேரறிஞர்களைப் பற்றி யும் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரைப் பிள்ளை (எம்.எ., எல்.டி., உதவியாசிரியர் ஆங்கிலத் தமிழ் அகரவரிசைக்குழு) அவர்களும், தமிழ்ப் பேராசிரியை இராசரத்தினம் அம்மையார் எம்.ஏ., எல்.டி., (லேடி வில்லிங்டன் ஆசிரியைப் பயிற்சிக்கல்லூரி) அவர்களும், தமிழ்ப் பேராசிரியர் பூ. ஆலாலசுந்தரஞ் செட்டியார், எம்.ஏ., (தமிழ்த்துறைத் தலைவர் கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்) அவர்களும் சுருக்க விளக்கமுந் தெளிவும் அமையப் பேசினார்கள்.

கழக ஆட்சியாளர் திரு வ சு அவர்கள் வந்துள்ள கையறு நிலைச் செய்திகளைச் சுருக்கக் கூறி நன்றி மொழிந்தனர். கடவுள் வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவுற்றது.

## பாரதியார், பண்டாரத்தார் இவர்களின்

# நினைவுக்கூட்டக் கையறு நிலைகள்

இரு பேரறிஞர்களின் நினைவுக்கூட்டக் கையறு நிலையாகத் தில்லி முதல் கன்னியாகுமரிவரையுள்ள பல்வேறு மாவட்டம், வட்டம், பேரூர், சிற்றூர் முதலிய இடங்களில் வாழும் பெருநிலக் கிழார், வணிகப் பெருஞ்செல்வர், அரசியற்றலைவர், ஆட்சித் துறையினர், கல்லூரி உயர்நிலைப்பள்ளி, பல்கலைக் கழகம் முதலிய வற்றில் பணிபுரியும் முதல்வர், பேராசிரியர் முதலியோர், பெரும் புலவர் ஆகிய பல்லோரிடமிருந்து நூற்றுக்கு மேற்பட்ட கடிதங் கள், கம்பிச் செய்திகள் வந்துள்ளன. அவர்கள் அனைவர்களுக்கும் சங்கத்தாரின் நன்றி என்றும் உரித்தாகுக.

அக்கையறு நிலைகளிற் சில வருமாறு :

"நாவலர் பாரதியாருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்றவர்களுள் யானும் ஒருவன், பேரறிஞர் சதா சிவ பண்டாரத்தாரின் ஆராய்ச்சியைப்பற்றி அறியாதவரும் சிலரே. இவ்விரு கலைஞர்களும் தமிழன்னைக்குச் செய்திருக்கும் தொண்டுகள் விவரணைக் கடங்கா. அன்னோரின் பிரிவு தமிழ்

நாட்டிற்கே ஏற்பட்ட ஒரு மகத்தான நட்டம் என்றதாகக் கூற வேண்டும். அப் பெரியார்கள் மறைந்தபின் நாம் ஒவ்வொரு வரும் தமிழ் வளர்ச்சிக்காகப் பாடுபடுவதே அன்னோருக்கு நாம் செய்யும் கைம்மாறு ஆகும்.”

டாக்டர், ப. சுப்பராயன், போக்குவரத்து அமைச்சர், புதுதில்லி.

மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன், விழா இனிதே நிகழ்ந்தேற எல்லாம் வல்ல இறைவன் திருவருளை வழுத்துகின்றேன்.”

கருமுத்து தியாகராசன், மதுரை.

“இருபே ரறிஞர் இரங்கற் கூட்டம்
அருமை மிக்க அமைச்சர் தலைமையில்
திருமிகு தமிழர் செட்டிநாட் டரசரும்
பெருமை வாய்ந்த பேரறி வாளரும்
ஒருங்கே கூடி உரைபல நிகழ்த்திக்
கருதிய தமிழர் கடமை யுணர்ந்தோர்
என்பதை உலகிற் கெடுத்துக் காட்டி
விழாவும் இனிதே விளங்க
வேண்டுவன் இறைவனை வேண்டுவன் யானே
வாழ்க பாரதியார்;—பண்டாரத்தார் புகழ்.

கி. பழனியப்பன், தமிழ்ச்சங்கம், மதுரை.

மற்றும் கீழ்க்காணும் பெருமக்களிடமிருந்தும் இரங்கற் செய்திகள் வந்துள்ள,

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர், பண்டிதமணி லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்; தஞ்சை ஜில்லா காங்கிரஸ் கமிட்டிக்காரியதரிசி, M. D. தியாகராஜ பிள்ளை M. L. A; திருநெல்வேலி, ம. தி. தா. இந்துக் கல்லூரி தமிழ் விரிவுரையாளர், பொ. முத்தரசு எம். ஏ.; கோவை புலவர் நா. சுந்தரராசன்; திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத்தலைவர், V. I. சுப்பிரமணியம் M.A., PH.D., சேலம் செவ்வாய்ப் பேட்டை தமிழ்நெறி விளக்கப் பதிப்பக ஆசிரியர், ஆ. மாணிக்கம்; அமராவதிபுதூர், ராய. சொக்கலிங்கன்; திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், பண்டித வித்துவான், சித்தாந்த நன்மணி, கு. சுந்தரமூர்த்தி; புதுக்கோட்டை சகோதரி பிருந்தாதேவி; சேலம் திருவள்ளுவர் கழகம்; பவானி திருமுறைக் கழகம்; சென்னை மாணவர் மன்றம்.

# இராயபுரம், தென் இரயில்வே தமிழ் மன்றப்
# பொங்கல் விழா

இவ்விழா இராயபுரம், இரயில்வே படிப்பகத்தில் 6-2-60 சனிக்கிழமை மாலை 5 மணிக்குத் தென்னக இரயில்வே, சென்னை வட்டார மேற்பார்வையாளர் உயர்திரு. எஸ். இராஜகோபாலன் அவர்கள் தலைமையில் மிக்க சிறப்பாக நடைபெற்றது. கூடிய பேரவையினருக்குச் சிற்றுண்டி வழங்கப் பெற்றது. கூட்டத்திற்கு இரயிற்றுறையில் அலுவல் புரியும் பெண்பாலார் பலர் வந்திருந்தனர். இவ்வருகை தமிழ்முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் குறிப்பதாகும். இம் மன்றத்தார் சனிக்கிழமை தோறுந் திருக்குறள் வகுப்பும் ஆய்வும் நிகழ்த்துகின்றனர்.

கடவுள் வாழ்த்துடன் துவங்கப்பெற்றது. தலைவர் அழகியதொரு முன்னுரை மொழிந்தனர். கழகப் புலவர் சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளையவர்களின் தமிழ்த் தொண்டினைப் பாராட்டிச் சிறப்புச் செய்தனர். இரயில்வேத் துறையில் உயர்ந்த அலுவல்களைப் பார்த்துவரும் தமிழார்வமிக்க பலரும் தத்தம் அலுவல்களுடன் தனிப்பட்ட முறையில் தாமாகவே முயன்று கற்று 'வித்துவான்' தேர்வில் வெற்றி பெற்றுத் திகழ்கின்றனர். அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தனர். அவர்தம் தமிழார்வமும் உலையா உழைப்பும் உவந்து பாராட்டற்குரிய. இத்தகைய ஆர்வம் ஏனைத் துறைகளில் பணிபுரிவார்க்கும், இத்துறையில் பணிபுரிந்துவரும் மற்றையோர்க்கும் உண்டாவதாக. இத்தன்மை தமிழ் தொன்னிலை மேன்மையினை எய்துதற்கும், செழித்தோங்கி வளம் பெறுவதற்கும், ஏனையாரைத் தூண்டுவதற்கும் வழிகோலுவதாகும்.

அறிமுகம் செய்யப்பெற்ற வித்துவான் பட்டமெய்திய அன்பர்கள்: அ. சின்னண்ணன் (G M (P.)/O/M A S) கே. வி. சச்சிதானந்தம் (D P M/O/B Z A) ப. வரதராசன் (A S M/K O K). க. மு. துரைசாமி (C O S/O/; Per) ரா. கண்ணன் (D A O/O/R P M).

பின் இராமநாத பிள்ளையவர்கள் பாராட்டியமை பற்றி அன்புரை பகர்ந்தனர். மறைமலையடிகளார் படத்தினைப் புலவர், முருகவேள் M. A., M. O. L., (தமிழ் விரிவுரையாளர் கிறித்துவக் கல்லூரி தாம்பரம்) திறந்துவைத்து அடிகளாரைப் பற்றிப் பேசினர். கடவுள் வாழ்த்தும் நன்றியும் மொழியக் கூட்டம் இனிது நிறைவுற்றது.

**Statement about ownership and other particulars about the journal--Senthamil Selvi—as required by rule 8 of the Registration of News papers (Central) Rules, 1956.**

FORM IV

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | 1/140, Broadway, Madras-1. |
| 2. | Periodicity of its publications | Monthly |
| 3. | Printer's name | Appar Achakam |
| | Nationality | |
| | Address | 2/140, Broadway, Madras-1. |
| 4. | Publisher's Name | The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd., |
| | Nationality | |
| | Address | 1/140, Broadway, Madras-1. |
| 5. | Editor's Name | Sri. V. Subbiah Pillai |
| | Nationality | Indian |
| | Address | 1/140, Broadway, Madras-1. |

6. Names and addresses of individuals who own the news paper and partners of shareholders holding more than one percent of the total capital.

1. Sri. P. Muthukaruppa Pillai,
Thamaraikulam,
(Kanyakumari Dist.)

2. Sri. T. S. Ramalingam Pillai.
M.A., B.L., Sub Judge,
Nagercoil,
(Kanyakumari Dist.)

3. Sri. T. Vairamuthu,
,, T. Thirunavukarasu
(Minors)

By Guardian:
Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

4. Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

5. Srimathi S. Mangayarkarasi Ammal
6, Coral Merchant Street,
**Madras-1.**

6. Sri. R. M. S. Gopalakrishna Pillai, Land Lord,
**Sathankulam.**
(Tirunelveli Dist.)

7. Sri. M. K. Sivagaminatha Pillai, Fourth Floor, Broche Buildings, Princess Street, **Bombay-2.**

8. Sri. N. S. Sundaram, Bar-at-Law, 134, South Raja Street, **Tuticorin,** (Tirunelveli Dist.)

9. Sri. M. Kasiviswanathan Chettiar, Banker. **Paganeri,**

10. Srimathi, K. Lakshmi Achi, w/o. Sri. M. Kasiviswanathan Chettiar, **Paganeri,** (Ramnad Dist.)

11. Sri. PR. AL. M. N. Narayanan Chettiar, Proprietor, Paari Achakam, 127, Broadway, **Madras-1.**

12. K. V. AL. RM. Ramanathan Chettiar, Correspondent and Trustee, Dr. Alagappa Chettiar Endowments Trust, **Karaikudi,** (Ramnad Dist.)

13. Sri. RM. K. RM. Ramaswamy Chettiar, **Thittai,** (Tanjore Dist.)

14. Messrs. V D Nagappa Chettiar and N. Meenakshi Atchi **Valampuri,** (Trichy Dist.)

15. Sri. C. T. Chidambaram Chettiar, **Valampuri,** (Trichy Dist.)

16. Srimathi Valliammai Achi, W/o Sri Kannappa Chettiar, **Nattarasankottai,** (Ramnad Dist.)

17. Sri. T. S. Viswanatha Pillai, C/o T. V. Lakshmanasami, B.E. Inspector of Factories **Coimbatore.**

18. Sri. C. M. Ramachandran Chettiar, B.A., B.L., Advocate, Tiruchi Road, **Coimbatore.**

19. Sri. T. S. Jambulingam Chettiar, Tirupur House, **Coimbatore,**

I, V. Subbiah Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

**V. SUBBIAH PILLAI,**
*Signature of Publisher,*

4—3—1960

# மதிப்புரை

**"விக்ரக ஆராதனையின் விளக்கம்"**

[திருவருள் தவநெறி மன்ற வெளியீடு. ஆசிரியர்: மதுரை, திருஞான சம்பந்த சுவாமிகள் ஆதீனம் 291 ஆவது குருமகாசந்நிதானம். திருவருள் தவயோக ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகபரமாசாரிய சுவாமிகள். இதன் விலை காசு 50.]

அடிகளார் திருவருட் பணிக்கென்றே தோன்றிய படியிலாவடிவினர் என்பது அவர்கள் அந்நாள் தொட்டு ஆற்றிவரும் அருந்தொண்டுகளால் அறியலாம். அவற்றுட் சில வருமாறு: திருவருள் தொண்டர் சபை குலசேகரன் பட்டினம், திருவருள் உயர்நிலைப்பள்ளி குலசேகரன் பட்டினம், திருவருள் தவநெறி மன்றம் மதுரை, இந்து தர்மப் பிரசார சங்கம் சென்னை என்பன. இவற்றை நிறுவி இவை எந்நாளும் முட்டின்றி நிகழ வேண்டும் வைப்பு முதலியன உதவித் தலைவராகவும் வீற்றிருந்து, ஒல்லும் வகை நேரிலெழுந்தருளி அருமறை பகர்ந்து அரன்பணி புரிந்து வருவது உலகறிந்ததொன்றே.

அவர்கள் நெடுநாள் பன்மொழி நூல்களையும் நன்கு பயின்று உலகுக்கு உண்மையுணர்த்தி உய்விக்க வேண்டுமெனும் திருநோக்கம் ஒன்றே கொண்டு அரும்பெரு நூல்கள் பல வெளியிட்டு வருகின்றனர். நூல்கள் சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் முதலிய அழகுகள் பலவுங்கொண்டு பயனுடையதாய்த் திகழ்கின்றன. மேலும் 'சில சொல்லல் தேற்றாஞ்' சீர்மையும் மிளிர்கின்றது. அடிகளார் திருப்பணி நாளும் பெருகி ஞானிலம் வாழும் நலம் பயக்குமாறு நந்தியினையடி வழுத்துகின்றோம்.

இந் நூல் விக்ரக ஆராதனை யொன்றினால் மட்டுமே மெய்ப் பொருளினை எய்தி யின்புறலாமென்னும் வாய்மையினையும், இந்நாள் உலகிடைக் காணப்படும் 'இஸ்லாமியம்' முதலிய எல்லா நெறியின் மறை நூல்களும் அவ்வாராதனையினை உற்றுநோக்குவார்க்கு வெளிப்படையாக விளக்கும் தன்மையினையும் அவ்வந் நூல்களின் மேற்கோள்களுடன் விளக்குகின்றது. இதன்கண் அடிகளார் இனிய எளிய தெளிவு நடையில் எல்லாவற்றையும் விளக்குகின்றனர். எடுத்துக் காட்டும் உவமை எல்லார்க்கும் பொருளினை நன்கு பதியச் செய்யும் ஏற்றமுடைத்து. நாற்பத்தைந்து பெருந் தலைப்புக்களால் இந் நூலின்கண் ஆய்வன முற்றும் வரையறுத்துள்ளார்கள். இந் நூல் பலசமயத்தாரையும் ஒற்றுமைப்படுத்தும் பண்பிற்று. நாத்திகக் கொள்கை மிக்குப் பெருகிவரும் இந்நாளில் அதனை மாற்றி ஆத்திகக் கொள்கையினை நிலைநாட்டற்குரிய இந்நூல் காலத்தொடு பொருந்த வெளிவந்ததொன்றாகும். பொதுவாகச் செந்தமிழன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் இன்றியமையாது இதனைக் கற்றுப் பயனெய்துவார்களாக.

**"மரணபயம் தீரும் வழி"**

திருவருள் தவநெறி மன்ற வெளியீடு. இந்நூலாசிரியரும் மேலே கூறிய அருளடிகளாரேயாவர். இம் மன்றம் செயன்முறையில் ஆங்காங்குச் செய்துவரும் அருந் தொண்டுகளுடன், எல்லாரும் வாங்கிக் கற்று நற்பயனெய்துமாறு எளிய விலைக்குப் பல நூல்கள் வெளியிட்டுள்ளது. இன்னும் வெளியிட்டுக்கொண்டு வருகின்றது.

பெரும்பாலும் மக்களனைவர்களும் காணப்படும் இப் பருவுடலினை விட்டு உயிர் நீங்கின் அத்துடன் அவ்வுயிர் அழிந்துபட்டதென்றோ, வேறு உலகத்து உறையாதென்றோ, மீண்டும் பிறவாதென்றோ நம்பிப் பெரிதும் வருந்துகின்றனர். அவ்வருத்தத்தினை நீக்கும் அருமருந்தனைய பெருநூலிதுவாகும். எக்காலத்தும் உயிருக்கு அழிவில்லையென்றும், இறைவனை அடையுங்காறும் மீண்டும் மீண்டும் பிறக்குமென்றும், இடையே பல ஆண்டுகள் காணுவுலகத்ததாய் வெவ்வேறுலகங்களில் நுண்ணுடலுடன் வாழுமென்றும், வேறு பருவுடல் எடுக்கும்வரையும் நுண்ணுடலுடன் காணுலகத்திருந்து விட்டுப்போன பருவுடலின் தொடர்பான நாடு, மொழி, கல்வி, வழிபாடு, உறவு முதலிய தொடர்புகளுடன் இவ்வுலகத்துக்கு நன்மைபுரிய வேண்டுமென்னும் நன்னோக்குடன் அவ்வுலகில் தெய்வ வாணைக்குட்பட்டு உலவு மென்றும், தக்க இயக்குநர் வாய்க்குமேல் உட்புகுந்து எழுத்தாலும் குரலாலும் தன் கருத்தை வெளிப்படுத்துமென்றும் உலகிடை உண்மையாக நிலவிவரும் மெய்க்கொள்கையினை இந்நூல் விளக்குகின்றது. இவ்விளக்கத்தால் மக்கட்குத் தெய்வ நம்பிக்கையும், நல்லொழுக்கமும், நல்வினைபுரிதல், நன்னெறிப் படர்தல் முதலிய வாழ்க்கைச் சிறப்பும் வந்தெய்தும் என்பது தொருதலை. இதன்கண் 32 பெருந்தலைப்புக்களும், சில சிறு தலைப்புக்களும் காணப்படுகின்றன. அவையனைத்தும் பெரும் பயன் தருவனவே. எளிய இனிய நடை. இதனையும் எல்லாரும் வாங்கிக் கற்றுப் பெரும் பயன் எய்துவார்களாக.

" திருச்செங்கோட்டுத் தோத்திரமஞ்சரி "

இந்நூலாசிரியர் திருப்போரூர் முருகவேளால் ஆட்கொள்ளப்பட்ட அந்தணப் பெரியாராவர். ஆண்டிவிளைஞரேனும் அருளறிவில் முதியராவர். இவர்கள் வாயிலாக அருள் விளக்கமும், அருளுணர்த்த உரைக்கும் அருந்தமிழ்ப்புகழ்ப் பாக்களும் வெளிவருவன கண்டுங் கேட்டுமுளார், ஈண்டிய பெரும் பற்றுக்கொள்வர் காண்டற்கரிய கடவுளிடத்து. பண்டுதொட்டு இன்றுகாறும் வியத்தகு அருள் நிகழ்ச்சிகள் இடையிடையே ஆங்காங்கு நிகழ்வன தெய்வவுண்மையினைத் தேற்றுவதற்கேயாம் என்றல் துணிபு. அம்முறையில் இந்நூலாசிரியர் 'மறைக்குலமணி-அருட்கவி சேதுராமனாரவர்கள் ஆவர். இவர்கள் 15—5—1957 இல் திருச்செங்கோட்டைக் கண்டு வழிபட்டனர். அப்பொழுது குறியாக்கவியாகத் திருவருளால் பாடப்பட்டவை இதன்கண் காணப்படும் தெய்வச் செழும் பாடல்கள்.

இதனை நேரிற் கண்டு கரைகடந்த இன்பம் எய்திய திருச்செங்கோடு **ஸ்ரீஅருணகிரிநாதர் சட்டி வழிபாட்டுச் சங்கத்தார்** இப்பொழுது வெளியிடுகின்றனர். பல தலைப்புக்களாகக் கூடி முப்பத்தெட்டுத் திருப்பாடல்களுள்ளன. இப்பாட்டுக்களுக்கு நூலாசிரியரவர்களே செவ்விய குறிப்புரை கண்டுள்ளார்கள். அது பயில்வார்க்குப் பெருந்துணை புரியும் நல் விளக்கமாகும். இவ் வெளியீட்டுக்கு வேண்டுவ செப்பஞ் செய்து அச்சிட்டமைத்தோர் சிவத்திரு, தணிகைமணி ராவ் பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள் எம். ஏ., இஃது இலவச வெளியீடு. கிடைக்குமிடம்: 292, லிங்கச் செட்டித் தெரு, சென்னை-1. தணிகை மணி அவர்கள் அழகியதொரு முகவுரை அளித்துள்ளார்கள். சிறந்த கந்தரலங்காரப் பாடல்கள் எட்டுச் சேர்க்கப்பட்டுள்ளன.

பொதுவாகச் செந்நெறிச் செல்வர்களும் சிறப்பாகத் திருமுருகன் அன்பர்களும் இதனை வாங்கி நாளும் ஓதி நன்னலமெய்துவார்களாக.

# செய்திகளும் குறிப்புக்களும்

## க. வரலாறு அறிய வழிகாட்டும் அகராதி

சென்னை அரசினரின் வேண்டுகோட் கிணங்கி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஒரு தமிழ் அகராதியைத் தொகுக்க முன்வந்துள்ளது. இவ்வகராதி மற்ற அகராதிகளைப்போலின்றிப் புதிய முறையில் தொகுக்கப்படும். அஃதாவது, இதுவரை வெளியிடப்பட்டுள்ள அகராதிகளையும் கல்வெட்டுச் சான்றுகளையும் ஆராய்ந்துவரும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் திராவிட மொழிப் பிரிவு ஆராய்ச்சி யாளர்கள், வரலாற்று அடிப்படையில் இவ்வகராதியைத் தொகுப்பார்கள். இதற்கான செலவைச் சென்னை அரசு ஏற்கும் என்றும் சொல்லப்படுகிறது.

குறிப்பு: மொழி, வரலாறு இன்னபிற துறைகளில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் ஆற்றிவரும் பணி அனைவரும் அறிந்ததே. இப் பல்கலைக் கழகத்தின் முயற்சிகள் வெற்றிபெற்று அதன் பயனைத் தமிழகம் விரைவில் நுகரும் என எதிர்பார்க்கிறோம்.

## உ. தமிழில் கலைச்சொல் ஆக்கப்பணி

அரசியல், பொருளாதாரம், வரலாறு, உடற்கூறு, நிலநூல் என்னும் ஐந்து முதன்மையான பொருள்களில் வரும் பிறமொழிச் சொற்களைத் தமிழில் ஆக்கி, அதனைப் போதனு மொழியாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் சென்னை அரசினர் 'கல்லூரித் தமிழ்க் குழு' மூலம் இதனைச் செயல்படுத்த முன்வந்துள்ளனர். இப் பணியின் முதற்படியாகப் பதினன்கு பொருள்கள் பற்றிய தமிழ்ச் சொற்களைத் தொகுத்து, கோவை அரசினர் கலைக் கல்லூரியில் அவற்றைப் போதிக்கும் முறையை ஒரு முன்னேற்பாடாகச் செய்ய முன் வந்துள்ளனர். இக் கலைச்சொற்கள் அகரவரிசையின் முதற்பெருகுதி அடுத்து வரும் சூன் திங்களில் வெளி வரும் எனச் சொல்லப்படுகிறது.

குறிப்பு: சென்னை அரசினரின் இத் தமிழ்ப் பணியினைப் பாராட்டு கிறோம். அவர்தம் பணி சிறந்து, விரைவில் தமிழகமெங்கும் தமிழ் மணங்கமழும் என எதிர்பார்க்கிறோம்.

## ங. பண்டித சவரிராயரின் நூறுவது பிறந்தநாள் விழா

மறைந்த தமிழ்ப்பெரும்புலவரான பண்டித சவரிராயர் அவர்களின் நூறுவது பிறந்தநாள் விழா அண்மையில் தூத்துக்குடி நகராண்மைக் கழகமண்டபத்தில் நடைபெற்றது. விழாவிற்கு அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டி. எம். நாராயணசாமி பிள்ளையவர்கள் தலைமை தாங்கிப் பண்டிதரின் உருவப்படத்தைத் திறந்துவைத்து, அவருடைய தமிழ்ப்பற்றினையும் பிறமொழிப் பயிற்சியினையும் சிறப்பித்துப் பேசினர். திருவாளர்கள் பிரான்சிஸ் மொரே, வித்துவான் அருணசலக் கவுண்டர், அ. சீனிவாசராகவன் ஆகியோர் திரு சவரிராயரின் ஆராய்ச்சி, தமிழறிவு இன்ன பிறபற்றிப் பேசினர்.

குறிப்பு: இங்ஙனம் மறைந்த மாண்புறு புலவர்களின் நினைவு நாட்களைக் கொண்டாடுவதும் கொண்டாடச் செய்வதுமான பணிகள் நாட்டையும் மொழியையும் வளப்படுத்தும் நற்பணிகளாகும். இவ் விழாவினை ஏற்பாடு செய்த தமிழன்பர்களைப் பாராட்டுகிறோம்.

௪. குழந்தை இலக்கியங்களுக்குப் பரிசு

குழந்தை இலக்கியங்களுக்குப் பரிசு வழங்கும் திட்டத்தின் ஆறுவது திட்டத்தை இந்திய அரசினர் வெளியிட்டுள்ளனர். இதன்படி 1000 ரூபாய் பரிசுகள் 15-ம், 500 ரூபாய் பரிசுகள் 15-ம் வழங்கப்படும். இவற்றுள் ஒவ்வொரு பரிசுகள் தமிழ்ப் புத்தகங்களுக்கும் ஒதுக்கப்பட்டுள்ளது 1953—60 ஆண்டுகளில் வெளிவந்த புத்தகங்கள் அல்லது கையெழுத்துப் படிகள் இப்பரிசுக்கென ஏற்றுக்கொள்ளப்படும் எனச் சென்னைக் கல்வித் துறையினர் அறிவித்துள்ளனர்.

குறிப்பு: குழந்தை இலக்கியங்கட்கு அங்ஙனம் ஆதரவு நல்கும் இந்திய அரசினரைப் பாராட்டுகிறோம். இந்திய அரசினரைப் பின்பற்றி இம் மாநில அரசினரும் திட்டம் வகுப்பார்களாயின் தமிழில் மேலும் பல குழந்தை இலக்கிய நூல்கள் வெளிவர வழிகோலியவர்களாவார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விழைகிறோம்.

திருவாட்டி வை. மு. கோதைநாயகி அம்மையார் மறைவு

நூற்றுக்கு மேற்பட்ட நாவல்களை எழுதிப் புகழ்பெற்றவரும், 1932-ல் நாட்டு விடுதலைப் போராட்டத்தில் பங்கு கொண்டு சிறை ஒறுப்புக்குள்ளானவரும் ஆகிய திருவாட்டி. வை. மு. கோதைநாயகி அம்மையாரவர்கள் தமது 58 ஆவது அகவையில் கடந்த 20—2—60 இல் இறைவன் திருவடி நீழலை அடைந்தனர்.

குறிப்பு: எழுத்துலகில் அம்மையார் ஆற்றிய பணியை நாடு நன்கறியும். அத்துடனில்லாது நாட்டு விடுதலையில் நாட்டம் செலுத்தியதும், 'ஜகன்மோகினி' என்னும் திங்களிதழைத் திறம்பட நடத்தி வந்தமையும் அம்மையாரின் ஆற்றலை வெளிப்படுத்துவன. இவர்தம் மறைவுச் செய்தியறிந்து வருந்துகிறோம் அவர்களை இழந்து வருந்தும் அவர் கணவருக்கும் உற்றார் உறவினர்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

---

## இறையடி எய்திய
## செல்லூர்க்கிழார் இராமசாமி பிள்ளை

இவர்கள் 9—3—1960 இல் இறையடி எய்தியமை அறிந்து பெரிதும் வருந்துகின்றோம். முன் சில ஆண்டுகள் சென்னையில் கழகப் புலவராக விருந்து பல நூல்கட்கு உரைகண்டு அரும்பணி புரிந்துள்ளார்கள். 1957 ஏப்பிரல் முதலாகப் பக்கவாத நோயினால் பீடிக்கப்பட்டு வீடு மட்டுமாயிருந்தனர். விரிவான வரலாறு செல்வியில் பின்வரும். அவர் தம் ஆருயிர் இறையடி இன்பம் எய்துமாக. அவர்தங் குடும்பத்தார்க்குக் கழகத்தாரின் கையறுநிலைப்பரிவும் ஆறுதலுரையும் உரியவாகுக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



மங்கலகிழார்
திரு. குப்புசாமி முதலியார்



சிலம்புச் செல்வர்
திரு. ம. பொ. சிவஞான கிராமணியார்




சிலம்பு ௩௪ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, பங்குனி | பரல் ௮
ஏப்ரல், 1960

# மீண்டுவந்தெய்திய திருத்தணிகை வெற்றிவிழா

வீடுகாத்தலும், நாடுகாத்தலும் பீடுடை ஆடவர் பேராண்மை யாகும். வீடுகாத்தலினும் நாடுகாத்து நற்புகழ் எய்துதல் நனிமிகு சிறப்புடைத்தாகும். வீடுகாத்தல் ஒரு குடும்பத்திற் காற்றுந் தனித்தொண்டாகும். நாடுகாத்தல் பல குடும்பத்திற் காற்றும் பயனுடைய பெருந்தொண்டாகும். இம்முறையில் பிறர்க்கென முயலும் பெருந்தகையார் அளவிறந்த இன்னல்களுக்குள்ளாவ ரென்பது வரலாற்றுண்மையாகும். அவர்கட்கு மாற்றாரால் நேரும் இடர்களினும் யார் பொருட்டு முயல்கின்றார்களோ அப்போற்றா ரால் நேரும் இடரும் இடுக்கண்ணும் பலவாம்; என்னை? இப் போற்றார் தம்முரிமையையும் கடமையையும் உள்ளவாறுணரா மையும், முயல்வார் தம் பயன் கருதி முயல்கின்றனர் எனப் பிழைபடக்கொண்டு பேசுவதும் ஆகிய செய்கைகளாலென்க.

ஏறத்தாழக் கால்நூற்றாண்டுகட்கு மேலாகத் திருத்தணிகை, சித்தூர் முதலிய தமிழகப் பகுதியில் வாழும் பெரும்பான்மை யான தமிழ்மக்களைத் தமிழை மறந்து தெலுங்கைக் கைக் கொள்ளும்படி செய்துவிட்டால் அவ்வூர்கள் எளிதாக ஆந்திர நாட்டுடன் இணைந்துவிடும் என்னும் இரண்டக எண்ணத்துடன் ஆட்சித்துறையின் மேலிடத்துள்ளார் பள்ளிகள், நகராண்மைக் கழகங்கள் முதலிய இடங்களிலெல்லாம் தமிழை அறவே இல்லா மற் செய்து தெலுங்கினையே புகுத்திவிட்டனர். தமிழ்மக்களும் பிழைப்பினைப் பெரிதென்றெண்ணி மொழியுரிமையையுங்கூடக்

கருதாதுங் காவாதுங் கைநழுவவிட்டனர். இந்நிலையில் 'மங்கலக் கிழார் என வழங்குங் குப்புசாமி முதலியாரவர்கள்' பெரிதுங் கவன்றனர்; வீறுகொண்டெழுந்தனர். ஊர் ஊராகச் சென்று உலையா முயற்சியால் தமிழ்மக்களைத் தட்டியெழுப்பி அவர்தம் தமிழுரிமையினை நன்குணர்த்தி வீறுகொண்டெழச் செய்தனர். ஆங்காங்கே தமிழ்ப் பள்ளிக்கூடங்களும் தமிழ்க் கழகங்களும் பல அமைத்தனர். படிப்பிக்கும் ஆசிரியராகத் தாமும், தமிழகத் துள்ள தக்கார் பலருமாகச் சேர்ந்து தமிழைப் பயிற்றுவித்தனர். பயின்ற அவ்வவ்வூரவர்களை ஆசிரிய நிலைமைக்குக் கொண்டு வந்தனர். பின்பு அவர்களையே ஆசிரியர்களாகவமர்த்தித் தமிழைப் பரப்பினர். கற்றாரும் மற்றாரும் தாய்மொழியாகிய தமிழ்மொழிக்கும் தங்கள் நாட்டுக்கும் உரிமைகொண்டாடவும் அவற்றை உயிரினும் மேலாகச் சாக்குங் கடமையில் கைம்மாறு கருதாது எவ்வகைத் தொண்டும் புரிய முன்வரவுங் கூடிய பண்பமை உள்ளமுடையவராமாறும் பணிபுரிந்தனர். அம் மக்களும் அத்தகைய பண்பாடுடையவராகத் திகழ்ந்தனர். அம் மட்டோ!

தமிழகத்துள்ள திரு. வி. க. போன்ற பல பெரியார்களையும் அவ்வப்போது வருவித்துத் தமிழ்மொழிச் சிறப்பு, இலக்கண இலக்கிய மாண்பு, தொன்மை, பண்பாடு, நாகரிகம், சமயம், சைவசித்தாந்தம் முதலிய பலவற்றையும் பற்றி அரிய பெரிய சொற்பொழிவுகள் செய்வித்துத் தமிழ்மக்களுக்கு ஊக்கமும், ஆக்கமும், கிளர்ச்சியும் அமையுமாறு பணிபுரிந்துள்ளார்கள். இவர்களின் அருமை பெருமைகளைத் திரு. வி. க. அவர்கள் தம் வாழ்க்கைக் குறிப்புக்கள் என்னும் நூலில் குறித்துள்ளார்கள்.

"இவர்கட்குரிய பெயர் குப்புசாமி முதலியாரென்ப. இவர்கள் சேசாசலம் ஐயரவர்களிடம் அருந்தமிழ் பயின்றவர். வித்தியானந்தர் என்னும் விழுமிய திருப்பெயரும் வழங்கி வருகின்றது. வாழ்க இப்பெரியார் புகழ், வாழ்க தமிழ்த்தொண்டு. வாழ்க தமிழ்மொழி. வாழ்க தமிழ்நாடு."

மொழிவாரி மாநிலப் பிரிவு நிகழ்ந்த காலத்தில் திருத்தணிகையும் அதனைச் சார்ந்த பல சிற்றூர்களும் ஆந்திரப் பகுதியுடன் இணைந்துவிட்டன. அதனை மீட்டும்பெற வேண்டுமென்று பல பெரியார் பாடுபட்டனர். அவருளெல்லாம் தலைசிறந்தவராய் முன்னணியில் நின்று ஓவாது முயன்ற பெரியார் 'தமிழரசுக் கழகத் தலைவர் நம் சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞான கிராமணியா'ரவர்களாவர். பண்பட்ட விளைநிலத்தில் வித்துப் பழுதின்றி முளைதோன்றி வீறுகொண்டு வளர்ந்து, விளைவு மிகுதியாய்த் தப்பா விழுப்பயன் தருதல்போல் மங்கலக்கிழார் என்னும்

மாண்புடைச் சான்றோரால் பண்படுத்தப்பட்ட மக்களுள்ள மாகிய விளைநிலத்துப், பிறக்கென வாழும் பெற்றியமைந்த பெரியார் ம பொ. சி. யவர்கள் விதைத்த உரிமை வீறுகொண்டெழுந்து திருத்தணிகை, திருவாலங்காடு முதலிய தமிழகத் திருவூர்கள் மீண்டு வந்தெய்துவதாகிய பெருவிளைவு கைகூடிற்று. இவ் விளைவினுக்கு அரும்பாடுபட்ட இருகண்போன்ற பெரியார் இருவர்க்கும் தமிழகத்தாரின் நன்றியும் வாழ்த்தும் என்றும் உரியவாகுக.

வெற்றிவிழா

1960 ஏப்பிரல் திங்கள் முதல்நாள் வெள்ளிக்கிழமை குறித்த வெற்றிவிழாக் காலை 8 மணிக்குத் திருத்தணிகை நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியின் திறந்த வெளியில் மிக்க சிறப்புடன் தொடங்கப்பெற்றது. இவ்விழாவை யொட்டித் திருத்தணிகை நகரே பேரழகுடன் காணப்பட்டது. இவ்வூரின் அண்மையிலிருந்தும், சென்னை மாநகரிலிருந்தும் பலர் வந்திருந்தனர். அரசியல் ஆணை வாயிலாகத் திருத்தணிகையும் அதனைச் சார்ந்த சில சிற்றூர்களும் ஆந்திர மாநிலத்திருந்து இந்நாள் தமிழ் மாநிலத்துடன் இணைகின்றது. ஊர்காவற்றுறை அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் தேசியக்கொடியை ஏற்றுவித்தனர். செங்கற்பட்டு மாவட்ட ஊர்காவல் வியன்படையின் அணிவகுப்பினையுங் கண்ணுற்று நல்கும் மதிப்பினையும் ஏற்றுக்கொண்டனர். அப்பொழுது செங்கல்பட்டு மாவட்டத் தண்டல்நாயகர், திரு. கே. திரவியம், ஐ. ஏ. எஸ் அவர்களும், ஊர்காவற் கண்காணிப்பு மேலாளர், திரு. கே. இராதாகிருட்டிணரும் வந்திருந்தனர்.

அமைச்சர் பேச்சின் சுருக்கம்

'முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள புண்ணியத் திருவூரான திருத்தணிகை இன்று தமிழ்நாட்டுடன் இணைக்கப்படுகின்றது. இது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். இதற்காகப் போராடிப் பல இன்னல்களுக்குட்பட்டாரனைவரையும் நாம் பாராட்டுதல் வேண்டும். மொழிவாரியாக மாநிலங்கள் பிரிந்தாலும் இமய முதல் குமரி வரையுள்ளன முற்றும் ஒரேநாடு என்பதில் நாம் பெருமைப்படுதல் வேண்டும். அதை மறந்துவிடுதலாகாது. 'செந்தமிழ் நாடு' எனப் பாரதியார் பாடினர். எனினும் 'மன்னும் இமயமலை எங்கள் மலையே' எனவுங் கூறிப் போந்தனர். மாநிலங்கள் எவ்வாறு பிரிந்தாலும் பிறமொழியாளர் ஒவ்வொரு மாநிலத்திலும் சிறுபான்மையோர் இருக்கவே நேரிடும். அவர் தம் தாய்மொழிக்கு வேண்டுந் துணைபுரிவது ஆட்சியாளர் கடனாகும். அதற்கு வேண்டுவன மாநில வட்டாரக் குழு வேண்டிய ஏற்பாடு செய்யும்.

தமிழகத்துடன் திருத்தணிகை முதலிய பகுதிகள் இணையும் போது நமது மாநிலப் பகுதிச் சிற்றூர்களில் சில ஆந்திராவுக்குப் போகின்றன. அப்பகுதிகளின் வளர்ச்சியில் நாம் நடுநிலைகுன்றாது கருத்துச் செலுத்தியுள்ளோம். ஆனால் நமது மாநிலத்துடன் புதிதாக இணைந்துள்ள பகுதிகள் மிகவும் பிற்போக்கான நிலைமையிலிருக்கின்றன. அவற்றின் வளர்ச்சியில் நாம் முழுக் கருத்தும் செலுத்துதல் வேண்டும். பழைய சண்டைகளை நாம் மறந்துவிடுதல் வேண்டும். இவ்வடவெல்லைப் பகுதியின் முடிவு இத்துணை நேர்மையாகவும் இடரின்றியும் முடிந்தமைக்குப் பெருங் காரணம் ஆந்திர முதலமைச்சராகவிருந்த திரு. என். சஞ்சீவி ரெட்டியும், தமிழக முதலமைச்சர் திரு. காமராசரும் ஆவர். இவ்விருவரையும் நாம் நனிமிகப் பாராட்டுதல் வேண்டும். முருகப் பெருமானின் திருவருளைப் பயன்படுத்திக்கொண்டு புதிதாகச் சேர்ந்துள்ள சிற்றூர்ப் பகுதியின் வளர்ச்சிவேலையில் ஈடுபடுவோமாக.

மங்கலக்கிழார் உருவச்சிலை மங்கலம்

அமைச்சர் முருகப்பெருமானை வழிபட்டனர். பின்பு திருத்தணி பஞ்சாயத்துக் கட்டிடத்தின் பின்புறத்தில் விநாயகம் திடலில் மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஆசிரியர் 'மங்கலக்கிழாரின்' உருவச்சிலையினைத் திறந்துவைத்தனர். ஊராட்சி மன்றத்தலைவர் திரு. என். சுப்பிரமணியனும், காந்தி சோதிடர் திரு. வி. கே. சடகோபாச்சாரியாரும் அமைச்சருக்கு மாலைபோட்டனர். அமைச்சர் பேசுங்கால் திருத்தணி செங்கற்பட்டு மாவட்டத்தில் சேர்வதுபற்றி மகிழ்ச்சி தெரிவித்தனர். தமிழ்மக்கள் மனதைக் கவர்ந்திருக்கும் முருகப்பெருமான் தமிழ் மக்களின் பண்பாட்டினைக் காப்பாற்றுதல் வேண்டும். பண்பாடு மட்டும் போதாது வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்திக்கொள்ளுதல்வேண்டும் திருத்தணிக் குடிநீர்த் தேவையில் கருத்துச் செலுத்துதல்வேண்டும். அரசியலார் முயற்சிமட்டும் போதாது; பொதுமக்கள் ஒத்துழைத்தல் வேண்டும். பெரியார் மங்கலக்கிழார் அரும்பாடு பட்டவர். அவர்தம் 'உருவச்சிலை' இளைஞர்களுக்கு நல்ல வழிகாட்டியாக விருக்கும் என்றனர்.

தலைவர் வரும் தனிமாண்பு

பிற்பகலில் வடஎல்லைப் போராட்டத் தலைவரும், தமிழரசுக் கழகத் தலைவருமாகிய திரு. ம. பொ. சிவஞானக் கிராமணியார் சென்னையிலிருந்து ஊர்வலமாக மிக அழகுடன் அமைக்கப்பட்ட தமிழியக்கு பொறியூர்தியில் திருத்தணிகை வந்து சார்ந்தனர். வரும் வழியிலுள்ள பூவிருந்தவல்லி, திருமழிசை முதலிய ஊர்

கள் வழியாக அழைத்துவரப்பட்டனர். அவருடன் மற்றும் பல தலைவர்களும் வந்தனர். ஆங்காங்கு அணியமை வளைவுகள் அமைக்கப்பட்டிருந்தன. பொதுமக்கள் ஏராளமாகக் கூடி வரவேற்பளித்தனர். ஊராட்சி மன்றத்தினரும் பொதுமக்களும் வரவேற்பளித்தனர்.

ம. பொ. சி. படத்திறப்பு

பஞ்சாயத்துப்போர்டு கட்டிடத்தில் மாலையில் திரு.ம.பொ.சி. அவர்களின் உருவப்படத்தினை நிதிஅமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் திறந்துவைத்துப் பேசியதன் சுருக்கம்:"தமிழ் நாட்டின் எல்லைபற்றிய ஆய்வுகள் தீர்ந்துபோயிற்று. இனியும் தமிழரசுக் கழகம் ஓர் அரசியல் கட்சியாக நீடித்திருக்க வேண்டியது இன்றியமையாததா? நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுங் கட்சியோடு இணைந்து கொள்ளக்கூடாதா? இதுபற்றி ம. பொ. சி. சிந்தனை செய்தல் வேண்டுமென்று இந் நன்னேரத்துக் கேட்டுக்கொள்கிறேன். நல்லதொரு முடிவிற்கு அவர் வருமாறு முருகப்பெருமான் அருள்புரிய வேண்டுமென்று வேண்டிக்கொள்கின்றேன்" என்றனர்.

பலர் வருகை

சென்னையிலிருந்து தலைவர்களுடன் தமிழக வெற்றிவிழாக் குழுவினரும் கார்களிலும் உந்துவண்டிகளிலும், பேருந்து வண்டிளிலும் ஊர்வலமாக வந்தனர். வழி நெடுகவும் நல்வரவேற்புகள் அளிக்கப்பட்டன. நடிகர்கள் சிவாசி கணேசன், திரு பாலையா, டி. என். சிவதாணு, பிரேம்நசீர், சிராம், சாரங்கபாணி, டி. கே. சண்முகம், டி. கே. பகவதி முதலியோரும், ஏ. பி. நாகராசன், எம். ஏ. வேணு முதலியோரும் வந்துள்ளனர்.

கூட்டம்

திருத்தணி பஞ்சாயத்துக் கட்டிடத்தின் பின்புறமுள்ள விநாயகம் திடலில் மங்கலக்கிழார் அரங்கில் தனிச்சிறப்பாக அமைக்கப்பட்டுள்ள பந்தலில் மாலையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. நிதிஅமைச்சர் திரு. சி. சுப்பிரமணியத்திற்கும், திரு. ம. பொ. சிவஞானத்துக்கும் திருத்தணி ஊராட்சிமன்றத்தின் சார்பில் அதன் தலைவர் திரு. என். சுப்பிரமணியம் வரவேற்பிதழ்களைப் படித்தளித்தனர். அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள்பேச்சின் சுருக்கம்: "சென்னை மாநில மறுஅமைப்பு நிறைவுறும் இவ்விழாவில் கலந்துகொள்வது குறித்து மகிழ்ச்சி.சென்னை-ஆந்திர எல்லைத் தீர்வு ஏறத்தாழ ஆறு ஆண்டுகளுக்குப் பின் தீர்ந்திருக்கிறது. இதுபற்றி மகிழ்ச்சியுறுதல் வேண்டும். ஆனால்

என்னைப் பொறுத்தவரை இதை ஒரு வெற்றி விழாவாகக் கொண்டாட வேண்டுமென்று விரும்பவில்லை. ஒருவருக்கு வெற்றி என்று சொல்லும்போது மற்றொருவர்க்குத் தோல்வி என்றேற்படுகிறது. நம் மக்கள் முன்னேற்றமடைய இனி எவ்வகையான தடையுமில்லை என்ற நம்பிக்கை ஏற்படுகிறது. திருத்தணிகைப் பகுதி மிகவும் மோசமான நிலையிலிருக்கிறது. மற்றப் பகுதிகளைப்போல் இப்பகுதியையும் முன்னேற்றமடையச் செய்ய எல்லா வகையான முயற்சியும் எடுத்துக்கொள்ளப்படுமென்று உறுதிகூற விரும்புகின்றேன்.

"மேலும் சிலம்புச்செல்வர் சிவஞானக் கிராமணியாரை நான் ஒன்று கேட்டுக்கொள்கின்றேன். ஒருவகையாக எல்லைத் தீர்வு தீர்ந்துவிட்டது. இந்த எல்லை ஆய்வு காரணமாகத்தான் இதுகாறும் இப்பகுதியில் வளர்ச்சி குறைபட்டிருந்தது. எல்லைக் கோட்டை இன்னும் திருப்பி எப்படிப் போடுவது என்பது பற்றி இனிக் கிளர்ச்சி தேவையில்லை. முற்றும் தமிழர் வாழுமிடம் முற்றும் ஆந்திரர் வாழுமிடம் என ஒருநாளும் அமையமுடியாது. மாநிலத்தின் உட்பகுதியிலும் இருமொழியாளரும் கூடித்தான் வாழ்தல் வேண்டும். இலட்சக் கணக்கான ஆந்திரர்கள் தமிழ் நாட்டில் வாழ்கின்றனர். அவர்களுள்ளத்தில் சிறிதுகூட அச்சமிருத்தல் வேண்டாவென்ற உறுதியை நாம் இன்று கொடுத்தல் வேண்டும். காங்கிரசு ஆட்சியில்லை, தமிழர்கள் ஆட்சியிருக்கும் வரை அந்தப் பண்பாட்டுடன்தான் நடந்துகொள்வோம். 'யாவருங் கேளிர்' என்பதே தமிழனின் பண்பாடு. இங்கு வாழும் இதர மொழி பேசுபவர்களின் உரிமை, பழக்க வழக்கங்களுக்கு எவ்வகை வருத்தமும் ஏற்படாதவாறு பாதுகாப்பளிப்பது தமிழரின் கடமையாகும்.

"சிறுபான்மையோரின் கல்வி வசதிகள் கொடுக்கப்படுதல் வேண்டும் இதன்பொருட்டுக் கேரளம், ஆந்திரம், மைசூர், தமிழ்நாடு முதலியவற்றின் ஆணை(பிரதிநிதிகள்)யாளர்கள் குழு ஒன்று கூடி எல்லைப் பகுதியில் வாழும் மொழிச் சிறுபான்மையோருக்கு என்னென்ன வாய்ப்புக்கள் அளிக்கப்படுதல் வேண்டுமென்று முடிவு செய்திருக்கிறது. இம்மாதம் 16 ஆம் நாள் அன்று தில்லியில் கூடவிருக்கும் தென்பால் மாநில மண்டலக் குழுவின் கூட்டத்தில் இப்பரிவுரைகள் ஆய்வுசெய்யப்பட்டு நடைமுறையில் கொண்டு வருவதற்கான நிலையான ஏற்பாடுகள் செய்யப்படும். மொழிச் சண்டை நீடித்துக்கொண்டுபோனால் முன்னேற்றம் தடைப்படும். ஆந்திரரை வென்று ஏதோ கிலைநிறுத்திவிட்டோம் என்ற மனப்பான்மையோடில்லாமல் திருத்தணியில் வாழும் மக்கள் எல்லோரும் ஒற்றுமையாக வாழ்வதற்கு வழிகாணுதல்

வேண்டும். பெரிய தேரை எல்லோரும் சேர்ந்து ஒரே திசையில் இழுப்பதுபோலப் பல்வேறு மொழியினரும் வேற்றுமையின்றி ஒன்று சேர்ந்து ஒற்றுமையோடு முயற்சி செய்தாற்றான் ஆற்றல் பெருகும். இவ்விழாவைக் கொண்டாடும்போது ஒன்றுபட்ட நிலையில் நாம் எல்லோரும் கூடி வாழ்வோம் என்ற உறுதியை எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

"இத்தகைய நன்னாள் வருதல் வேண்டுமென்று திரு. ம. பொ. சி. பாடுபட்டது எனக்குத் தெரியும். மற்றெல்லோரைக் காட்டிலும் அவருக்குத்தான் இன்று மகிழ்ச்சி மிகுதி. திரு ம. பொ. சி. எங்கள் கட்சியுடன் சேர்தல்வேண்டுமென்று நான் கூறவில்லை. முன்னேற்ற நோக்கமுள்ள கட்சிகள் மேலும் வலுப் பெறுதல் வேண்டுமாயின் ஒன்றுசேர்தல்வேண்டும். அதற்கு ஆதரவு கொடுத்தல் வேண்டுமென்பதனைச் சிந்தனை செய்ய வேண்டுகின்றேன்" என்றனர்.

திரு. ம. பொ. சி. சொற்பொழிவு

தளபதி கே. விநாயகத்தின் உருவப்படத்தைத் திறந்து வைத்துப் பேசியதன் சுருக்கம்: "இது தமிழரசுக் கழகம் நடத்துந் தனி விழாவன்று. காங்கிரசு. அரசாங்கம், கழகம் எல்லோரும் சேர்ந்து, ஏன்—தமிழினத்தினர் எல்லோருமே சேர்ந்து, நடத்துந் தேசியத் திருவிழா என்றுதான் கொள்ளுதல்வேண்டும். ஆந்திரர்களை எதிர்த்துப்பெற்ற வெற்றி விழா அன்று வேண்டுமானல் அரசியலாரை எதிர்த்துப் போராடியதன் வெற்றிவிழா என்றுகூட வைத்துக்கொள்ளலாம். ஆட்சி முறையிலிருப்பவர்களுக்கும் கிளர்ச்சிக்காரர்களுக்கும் இடையேயுள்ள நிலை எப்பொழுதுமே இன்னலான இடர்ப்பாடான நிலைதான்; அறமுறையாக, நடுநிலையாக, பொறுப்புத்தன்மையோடு மக்கள் நடந்து கொள்ளுதல் வேண்டும். தமிழருக்கும் தெலுங்கருக்கும் பூசல் ஏற்படுவதை நான் விரும்புபவனல்லன். தமிழன் என்ற பெருமையோடு இந்தியன் என்றவுணர்ச்சியும் எனக்குண்டு. தணிகைத் தமிழர்கள் இனவெறி கொண்டவர்கள் அல்லர்.

"மேலும் அரசியலார் புதிய வரவு செலவுத் திட்டத்தைத் துவங்கும் நாள் இது. திட்டத்தில் பற்றுக்குறைவாகவே இருக்கலாம். ஆனல் திருத்தணிகை அரசியலாருக்குப் புதிய வரவு என்றுகூற விரும்புகின்றேன். மேலும் பஞ்சாங்க முறைப்படி பார்த்தால் உரோகிணியுந் திங்களும் கூடுகின்ற நாள் இது. தணிகையும் தமிழனும் கூடும் புனிதநாள். 1916 ஆம் ஆண்டு ஏப்பிரல் முதல்நாளிற்றான் தணிகைத் தாலுக்கா வடவார்க் காட்டிலிருந்து பிரிந்து சென்றது. வரலாறு தற்போது திரும்பு

கிறது. துணையாக முருகப்பெருமான் திருவருள் இக்கிளர்ச்சிக்கு இருந்தது. முன்னாள் முதலமைச்சர் ராஜாஜிக்கும், தற்போதுள்ள முதலமைச்சர்க்கும், நிதியமைச்சர்க்கும் இந்நாளில் நன்றி செலுத்துகின்றேன்.

"நமக்குச் சேர்ந்துள்ள பகுதி வளமற்றதென்று கூறுகின்றனர். இஃது இயற்கையாக ஏற்பட்டதன்று; செயற்கையானது. பொன்னேரி, திருவள்ளூர்ப் பகுதிகள் வளப்படுத்தப்பட்டன. இப்பகுதிகளில் கருத்துச் செலுத்தப்படவில்லை. இன்று காணப்படும் வெற்றி இனவெறியினால் அல்ல; தெய்வ பத்தியின் வெற்றியாகும். 'ஆணும், பெண்ணும்' சேர்ந்ததுதான் தெய்வீக சத்தி. தமிழகத்தின் தெற்கு எல்லையிலே பெண்தெய்வம்; வடக்கே ஆண் தெய்வம். தெற்கே 'குமரி'; வடக்கே 'குமரன்'. தாய்த்தமிழ் நாட்டை இரு தெய்வங்களும் துணையாகக் காக்கின்றன. தெய்வநெறியோடு கலந்த வெற்றி இது."

அரசியல் சம்பந்தமாக அமைச்சர் சி. சுப்பிரமணியம் விடுத்த ஆய்வுக்கு விடையாக ம. பொ. சி. கூறியது: "எளிதாக விட்டுவிட முடியாது. நான் தனி மனிதன். அவர் ஆட்சியின் ஆணையாளர். இம்மேடையினை ஓர் ஆராய்ச்சிச் சொற்போர் மேடையாக ஆக்க நான் விரும்பவில்லை. எல்லைத் தீர்வுக்கு இஃதொரு காற்புள்ளியேயாகும்; முற்றுப்புள்ளியன்று. காற்புள்ளி போட்டுக்கொண்டே திருத்தணியை வரவேற்கின்றோம். வடக்கு எல்லை எது என்பது பற்றிக் காலம் தீர்ப்புக்கூறட்டும். மைசூர் பம்பாய்எல்லைத் தகராறுகள் இன்னும் நீடித்து வருதலைக் காண்க. விழாவிற்கு வந்திருக்கும் தமிழ்நாட்டுக் கலைஞர்கள் எவரும் தமிழரசுக் கட்சி உறுப்பினர் அல்லர். தமிழர் என்ற உணர்ச்சியினால் விழாவில் கலந்துகொண்டுள்ளனர்" என்றனர்.

### மாயூரத்து அன்பர்

தமிழகத்தோடு சேரும் வேலன் குன்றத்துக்கு (திருத்தணி) 'எல்லைக் காவலர்' என்னும் பெயர் பொறித்த இரண்டு சிறப்புப் பேருந்து வண்டிகளில் தொண்ணூற்றுநான்கு அன்பினர் மாயூரத்தினின்றும் இவ்விழாவில் கலந்துகொள்ள வந்துள்ளனர். இவ்வேற்பாட்டை மாயூரம் தமிழரசுக் கழகத்தைச் சேர்ந்துள்ளவர் செய்துள்ளாரெனத் தெரிகிறது.

### குறியாக் கொடையாளர் குடும்பத்திற்கு உதவி

குறியாக் கொடையாளர் எனினும் தியாகிகள் எனினும் ஒன்றே. நடிகர் திலகம் சிவாசி கணேசன் அவர்கள் வடவெல்லைப் போராட்டத்தில் 'குறியாக் கொடையாளருள்' ஒருவராய் நின்று

உயிர்நீத்த 'பழனி மாணிக்கத்'தின் குடும்பத்தினருக்கு ரூ. 501 நன்கொடை வழங்கினர். நடிகர் திரு. பாலையா சார்பில் மற்றொரு தியாகி திருவாலங்காடு 'கோவிந்தசாமி'யின் குடும்பத்தினருக்கு ரூபா 501 நன்கொடை வழங்கப்பட்டது.

திருத்தணி ஊராட்சி மன்றத்தலைவர் திரு. என். சுப்பிரமணியத்தின் படத்தை விநாயகம் திறந்துவைத்தனர். மற்றும் பல தலைவர்களும் பேசினர். இரவில் காருகுறிச்சி திரு. அருணாசலத்தின் நாதசுர இசையும், குமாரிகள் சூலமங்கலம் சகோதரிகளின் இன்னிசை விருந்தும் நிகழ்ந்தன. விழாவும் இனிது நிறைவுற்றது.

வாய்ப்பு வரும்

தமிழகத்தின் வடவெல்லைப் போராட்டம் 1947ஆம் ஆண்டிலிருந்தே நடந்துவந்திருக்கிறது. குறிப்பாகத் திருத்தணியில் அமைதி மறியல் பல நடந்துள்ளன. நூற்றுக் கணக்கான தமிழர் கைது செய்யப்பட்டனர். இரு தமிழ்த் தொண்டர்களின் உயிரும் பறிபோயின. அதன் பின்புதான் இந்தியப் பேரரசினரால் ஏற்படுத்தப்பட்ட திரு. படாஸ்காரின் ஆய்வுக்குறிப்பு வெளிவந்தது. அதன்படியே அவ்வப்பகுதிகள் கைம்மாறுகின்றன. இவற்றால் வடவெல்லைப் போராட்டத்தின் முழுவெற்றியும் எய்தியதாக எவரும் கூறுவதற்கில்லை. தமிழ் நாட்டின் எல்லையாகப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகத் தெற்கில் 'கன்னியாகுமரியும்' வடக்கில் 'வேங்கடமும்' வெளிப்படையாக அமைந்து வந்திருப்பதற்குள்ள அகப்புறச்சான்றுகள் அளவில்லன உள்ளன. அதனால் சில ஆண்டுகளுக்குப் பின்பேனும் 'கன்னியாகுமரி'யைப்போல் 'திருப்பதியும்' தமிழ்நாட்டுடன் சேரத்தக்க வாய்ப்பு வருமென்பதொருதலை.

தொடக்கத்தில் ஆந்திரர் சென்னைக்கே பொருந்தா உரிமை கொண்டாடினர். அப்பொழுது முதல் அமைச்சராகத் திகழ்ந்த ஆற்றல் மிக்க இராசாசியவர்களின் பெருமுயற்சியால் சென்னை தமிழர்க்காகியது. அதுபோல் இப்பொழுது சென்னை முதலமைச்சராகத் திகழுந் திரு. கே. காமராசர் அவர்களின் அன்பாற்றல்களாலும், ஆந்திர முதலமைச்சராகவிருந்த திரு. என். சஞ்சீவி ரெட்டியவர்களின் ஆற்றலாலும் இவ்விருவர்க்கும் ஏற்பட்டுள்ள இணக்க மனப்பான்மையின் நல்லுறவாலும் இத்துணை எளிமையில் இவை மீண்டன. இவ்வனைவரையும் நாம் மனமார வாழ்த்திப் போற்றுகின்றோம்.

## திருநெல்வேலி கஉ ஆவது தமிழ்த் திருநாளில்

# மூன்றாவது சிற்றிலக்கிய மாநாடு

திருநெல்வேலிச் சந்திப்பு—தருமபுர மடாலயத்தில் குரு ஞான சம்பந்தர் திருமுறைக் கழகம், தருமையருள் பெறு நெல்லை அருணகிரி இசைக்கழகம்—இவற்றின் சார்பில் 6-3-60 முதல் தொடங்கி நடைபெற்ற கஉ ஆவது தமிழ்த் திருநாளில் கடைசி நாளாகிய 13-3-60 ஞாயிறன்று சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் ௩ ஆவது சிற்றிலக்கிய மாநாடு நடைபெற்றது. அன்று காலை 10-மணிக்கு மாநாட்டு நிகழ்ச்சிகள் தொடங்கின. வித்துவான் திரு வ. சு. நடராச பிள்ளையின் இறை வணக்கப் பாடலுக்குப் பின், கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை வரவேற்புரை நிகழ்த்தினார்கள். அவர்கள் தமது உரையில் கழகம் தமிழுக்கும் சைவத்திற்கும் நாற்பது ஆண்டுகளாகத் தொடர்ந்து புரிந்து வரும் நற்பணிகளை விளக்கினர். பழந்தமிழ் நூல்களை மக்களிடையே பரப்புதற்காகவே இத்தகைய மாநாடுகளைக் கூட்டுவதாகவும் மாநாட்டுச் சொற்பொழிவுகளையெல்லாம் நூல் வடிவில் வெளியிடுவதாகவும் குறிப்பிட்டனர். மாநாட்டுத் தலைவரையும் உரையாளர்களையும் வரவேற்று மாலை சூட்டினர்.

பின்பு மாநாட்டைத் தொடங்கிவைத்த ஓய்வு பெற்ற மாவட்ட ஆட்சியாளர் திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், M.A., I.A.S. கழக வெளியீடுகளின் அழகையும் சிறப்பையும் பாராட்டினர். கழகம் தமிழுக்கு ஆற்றிவரும் பணிகளைப் போற்றினர். கழகம் வளர்ந்தோங்க வாழ்த்தினர்.

மாநாட்டுத்தலைவர் மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் திரு. சி. இலக்குவனார், M.A., M.O.L. தமது தலைமையுரையில் தமிழில் உள்ள சிற்றிலக்கியங்களின் சிறப்பையும், மாநாட்டில் உரையாற்றுதற்கு இடம்பெற்றுள்ள பரணி, பள்ளு, குறவஞ்சி நூல்களின் சுவையையும் விளக்கினர். பரணிநூல்களுள் தலையாய கலிங்கத்துப்பரணி, பள்ளுநூல்களுள் தலையாய முக்கூடற் பள்ளு, குறவஞ்சி நூல்களுள் தலையாய திருக்குற்றாலக் குறவஞ்சி ஆகியவற்றின் சிறப்புக்களை விரித்துரைத்தனர். தமிழக மக்களின் அகப்புற வாழ்வின் நலங்களையெல்லாம் அவற்றினின்று எடுத்து விளக்கினர்.

தலைவர் உரைக்குப்பின் கலிங்கத்துப் பரணியைப்பற்றித் திரு. இரா. சுந்தராம்பாள், M.A., தக்கயாகப் பரணியைப்பற்றி வித்துவான் திரு. ந. சேதுரகுநாதன், பாசவதைப் பரணியைப் பற்றி வித்துவான் திரு. க. சிதம்பரநாதனு, முக்கூடற் பள்ளுப்

பற்றித் திரு. செ. சுப்பையா பிள்ளை, M.A. ஆகியோர் காலைநிகழ்ச்சியிற் கலந்து உரையாற்றினர். சென்னை அரசாங்க ஆட்சிமொழிச் சிறப்பு அலுவலர் திரு. கி. இராமலிங்க முதலியார், M.A. மாநாட்டுச் சொற்பொழிவு நூலைப் பாராட்டி உரையாற்றி அதனை வெளியிட்டனர்.

மீண்டும் மாலை 5-30 மணிக்கு மாநாடு தொடங்கியது. செல்வி திரு. இரா. கோமதியின் இறைவணக்கப் பாடலுக்குப் பின் சொற்பொழிவுகள் தொடங்கின. திருமலைமுருகன் பள்ளுப் பற்றி வித்துவான் திரு. வி. குஞ்சிதபாதமையர், திருக்குருகூர்ப் பள்ளுப்பற்றிப் பண்டித வித்துவான் திரு. இராமாநுச ஐயங்கார், திருக்குற்றாலக் குறவஞ்சியைப் பற்றி வித்துவான் திரு. அ. இராசகோட்டியப்பன், கும்பேசர் குறவஞ்சியைப் பற்றித் திரு. கு. பரமசிவன், M.A., சரபேந்திர பூபால குறவஞ்சியைப் பற்றித் திரு. ஆ. அருளப்பன், B.A., மீனாட்சியம்மை குறம் பற்றிப் பண்டித திரு ச. சாம்பசிவன் ஆகியோர் உரையாற்றினர். பின்பு மாநாட்டு வாழ்த்துச் செய்திகளை வித்துவான் திரு. அ. க. நவநீத கிருட்டிணன் வாசித்தார். இறுதியில் மாநாட்டுத் தலைவர் திரு சி. இலக்குவனர் நிறைவுரை வழங்கினர். அவர்கள் தமது உரையில் மாநாட்டுச் சொற்பொழிவாளர்களின் சிறப்பையும் அவர்கள் ஆய்வுரை நலங்களையும் பாராட்டினர். மாநாட்டை நடாத்திய கழகங்கள் மூன்றனையும் பாராட்டினர். கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை நன்றியுரை நவின்றனர்.

இரவு 9-30 மணிக்கு நெல்லை வில்லிசைச் செல்வர் திரு. ஐயன் பிள்ளை குழுவினர் "பரணிகொண்ட பார்த்திபன்" என்ற கதையினை வில்லுப்பாட்டில் இசைத்து முழக்கினர். இரவு 10-30 மணிக்கு நெல்லை அருணகிரி இசைக்கழக நாடகப் பகுதி உறுப்பினர் 'தியாகம்' என்ற நாடகத்தை நடத்தினர். இறுதியில் அ. இ. கழக அமைச்சர் திரு. இராம. கனகசபாபதி பிள்ளை எல்லோருக்கும் நன்றி கூறினர்.

---

## கற்றபின் கூறு!

[திரு. பொ. திருஞானம்]

நல்லதமிழ் நானிலத்தில் நன்மைதரு நம்மொழியை
நல்லதமிழ் இல்லையெனக் கூறினையே—நல்லதமிழ்
கற்றுவிட்டுக் கூறதனில் மாசினையே வீரமுடன்
மற்றுமுள ஊனமொழி விட்டு!

டாக்டர். சு. சங்கரராசு எம். ஏ., பி. எச். டி.,

# வாழ்க்கைக் குறிப்பு

திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த சங்கரநயினர் கோவிலில் 1920ஆம் ஆண்டில் இவர் பிறந்தார். இவரின் தந்தையார் இளம் பருவத்தில் விரைந்து கவிபாடும் திறம் பெற்றிருந்தவராகையால் "நிமிஷக்கவி" சுப்பையா நாயுடு என்று அழைக்கப் பெற்றார். திரு. சங்கரராசு, சேர்மாதேவி, பாளையங்கோட்டை முதலிய இடங்களில் கல்வி பயின்ற பின்னர் 1932இல் தம் தந்தையாருடன் வட இந்தியாவுக்குச் சென்றார். அங்கே தயாள்பாக், ஆக்ரா முதலிய இடங்களில் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் துவக்கத்திலிருந்து முறையே பயின்று எம். ஏ., பட்டம் பெற்றார். அத்துடன் சாகித்யரத்தினம் (அலகாபாத்), பிரபாகர் (பஞ்சாப்) முதலிய பிற பட்டங்களும் பெற்றார். 1944இல் அகில இந்தியப் பேச்சுப் போட்டியில் இவருக்கு முதற் பரிசு வழங்கப்பட்டது. 1945இல் மத்திய சுங்க வரித்துறையில் "ரேஞ்சு ஆபீச"ராகப் பணியாற்றினர். தமது உளப்பாங்கிற்கு அப்பணி ஏற்றதன்று என உணர்ந்து அதை விடுத்து 1946இல் ஆலப்புழையில் உள்ள சனுதன தர்மக் கல்லூரியில் இந்தித் துறைத் தலைவராகப் பணி மேற்கொண்டார். 1947இல் திருவனந்தபுரம் பல்கலைக் கழகக் கல்லூரியில் இந்தி மொழி விரிவுரையாளராகப் பணியாற்றினர். 1948இல் திருவாங்கூர் மன்னர் சுவாதித் திருநாள் அவர்களைப் பாராட்டி நூற்றாண்டு விழா நினைவு இந்திக் கவிதை மலரை இயற்றி வெளியிட்டார்.

1949இல் இவரது இந்திக் கவிதைத் தொகுப்பு (கீதோ பகார்) வெளிவந்தது. ஏற்கெனவே 1944இல் இவர் கைவல்ய நவநீதத்தின் சில பகுதிகளைத் தம் தந்தையாரின் துணையுடன் இந்தியில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்.

1952 இல் இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தின் இந்தி மொழித்துறைத் தலைவராகப் பணி ஏற்றார். தமிழ் இலக்கியங்களின் சிறப்புக்களை இந்தி மொழியினர் அறியும் வகையில் தமிழ் இலக்கியங்களைக் குறித்தும், நம்முடைய புலவர் பெருமக்களின் கவிதைகளை இந்திக் கவிதைகளுடன் ஒப்பிட்டும் பல அரிய ஆராய்ச்சி மிகுந்த நூல்களும், கட்டுரைகளும் எழுதியிருக்கிறார். அவை பலராலும் பாராட்டப்பட்டுள்ளன.

தமிழ் எழுத்தாளர் சங்கம் 1958ஆம் ஆண்டு நாகர்கோவிலில் நடைபெற்ற மாநாடு, இந்தி மொழியின் மூலம் தமிழுக்கு இவர் செய்துள்ள தொண்டினைப் பாராட்டி இவருக்குப் பொற் பதக்கம் அளித்துச் சிறப்பித்திருக்கிறது.

உத்தரப்பிரதேச மாநில அரசு, சென்னைப் பல்கலைக் கழகம் முதல் இந்தி வெளியீடும் இவரால் எழுதப்பட்டதுமான "கம்பரும் துளசியும்," என்னும் ஆராய்ச்சி நூலுக்குப் பரிசு வழங்கியுளது.



டாக்டர் சங்கரராசு அவர்கட்கு டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் பரிசு வழங்குதல்

அண்மையில் "கம்பராமாயணமும் துளசி இராமாயணமும்," என்ற ஒப்பு நோக்கு ஆராய்ச்சிப் பெரு நூலுக்காகச் சென்னைப் பல்கலைக் கழகம் இவருக்குத் தத்துவப் பேராசிரியர் (Doctor of Philosophy) என்னும் பட்டம் வழங்கியுள்ளது.

சென்னைக் "கம்பன் மன்றம்" முதலிய பல நிறுவனங்கள் இவரது தமிழ்த் தொண்டுக்காகப் பாராட்டுரைகளும், வாழ்த்து மடல்களும் வழங்கியுள்ளன. இந்தியில் இவர் எழுதியுள்ளவற்றில் குறிப்பிடத்தக்கவை: (க) திருக்குறள் இந்தி மொழிபெயர்ப்பு (உ) தமிழ் இலக்கிய வரலாறும் தற்காலத் தமிழ் இலக்கியமும், (ரு) கம்பரும் துளசியும் (ஆராய்ச்சி நூல்) (ச) விடுதலைக்குப் பின் தமிழிலக்கிய வளர்ச்சி (ரு) வள்ளுவரும் கபீர் தாசரும் (அறம்) (சா) வள்ளுவரும் பிகாரிலாலும் (இன்பம்) (எ) சிலப்பதிகாரக் கதை (உரைநடை) (அ) மணிமேகலை (கூ) பௌத்தமும் தமிழும் (க0) சைவ சித்தாந்தமும் திருஞானசம்பந்தரும் (கக) திருநாவுக்கரசர் (கஉ) ஆண்டாளும் மீராவும் (கரு) குலசேகரரும் ரசகானும் (கச) தமிழ் இந்தி எழுத்துக்களின் ஒப்பு நோக்கு (கரு) மதுரைமா நகர்.

# மறைமலையடிகளின் தமிழ்நடை

[வித்துவான். நெல்லை. க. சுப்பிரமணியன்]

தனித்தமிழ் நடையின் வேந்தர் என்ற பாராட்டுக்குரிய மறைமலையடிகளின் உரை நடையை விரும்பாதவர்களும் தமிழ் நாட்டில் இருக்கின்றார்கள். அவர்கட்கு, மறைமலையடிகளின் தமிழ்நடைச் சிறப்பை விளக்கிக் காட்டுவது எம்மனோர் கடமை யாகும்.

இனிப்புப் பண்டங்களை விரும்பாத மக்களும் உலகில் உள்ளனர். அன்னார் நீரிழிவு நோய்வாய்ப்பட்டவர் என்பது அது கொண்டு உய்த்துணரலாம். முறுக்கு முதலான வன்பண் டங்களைத் தின்றின்புற விரும்பாதவர்களும் இருக்கின்றனர். அத்தகையோர் பொக்கைவாயர்; அதனால் பொரிமாவையே பெரிதும் சார்பவர் என்பது அது கொண்டு ஊகித்தறியலாம்.

மறைமலையடிகளின் தமிழ்நடையை விரும்பாதவரும் ஈண்டுளர் என்றால், அன்னார் தமிழ்நூல் எதையும் ஆழ்ந்து கற்று ஆராயும் அறிவு முதுமை இல்லாதவர் என்றும்; இனிமைத் தமிழின் தனிமைச் சுவையைத் தக்கவாறு நுகரும் பயிற்சி இல்லாதவர் என்றும் நாம் கருத்தறிகின்றோம்.

இனி, நடையுயர்வு கருதிச் சொற்களைத் தேடி அலைபவர், கருத்தாழம் இன்றி எழுதுவார் என்பர் சிலர். ஆசிரியர் மறைமலையடிகளோ நிறை தமிழ்ப்புலவர் ஆதலின், கருத்துக்குப் பொருத்தமான இன்சொற்கள் அவரைத் தேடி ஒன்றனுக் கொன்று முந்திவந்து நிற்குமேயன்றி அவர் எழுதும்பொழுது, சொற்களை நாடி அலையவில்லை என்பதை, அவர் யாத்த நூல்களை மேற்போக்காக ஒருசிறிது கற்றாரும் தெற்றெனத் தெரிவர்.

கருத்துஞ் சொல்லும் பிரிவறப் பொருந்தி நிற்கும் உண்மையை யாவரும் அறிவர். அல்லாமலும், எழில்மிகுந்த பொன் அணிகளை மாசில்லாத நற்பேழைகளில் வைத்துப் பேணுதல்போல, உயர்ந்த கருத்துக்களையும் சிறந்த சொற்களால் ஆற்றலொடு வெளிப்படுத்துவதே நல்லாசிரியன்மார் எல்லார்க்கும் இயல்பாகும். இந்த இடத்தில் நம் செந்தமிழ்த் தொல்லாசிரிய ரான தொல்காப்பியர், "இழுமென் மொழியான் விழுமியது நுவறல்'' என்று இயம்பிய தொடரானது, எமது நினைவின்கண் தோன்றி இனிக்கின்றது.

மறைமலையடிகளும் தம் ஆராய்ச்சியின் முடிவாக வெளிப் படுத்திய உயர்ந்த கருத்துக்களைத் தக்க தமிழ்ச் சொற்றொடர்

களால் மிக்க வன்மையோடு தம் தனிச் செந்தமிழ் நூல்களில் நிலைபெறுத்தி மாண்பயன் விளைவித்திட்டார்.

அஃது ஒருபுறம் இருக்க, "இலக்கியப் படைப்பு" என்னும் எமது நூலில் நாம் சொன்னபடி, "ஒவ்வொருவர்க்கும் பணவசதி, உடலளவு, மனப்பான்மைகளுக்கு ஏற்ப உடைவகை வேறுபடுவதுபோல், நடைவகையும், அவரவரும் பெற்றிருக்கின்ற மொழித் தேர்ச்சி, வாழ்க்கைநிலை, மனப்பண்பு இவற்றின் காரணமாக மாறுபடக் காண்கின்றோம்." மறைமலையடிகளின் நூல் நடையில் எல்லா இடங்களிலும்,

"கல்வி தறுகண் இசைமை கொடைமைஎனச்
சொல்லப் பட்ட பெருமிதம் நான்கே."

என்ற தொல்காப்பியனார் கருத்துப்படி, கல்விப் பெருமித வுணர்வே மல்கித் தோன்றுவதைக் கற்றோர் அனைவரும் கசடற வுணர்ந்திருப்பர். பெரிய குன்றின் மீதிருந்து, கீழுள்ள இடங்களில் பணிவோடமர்ந்த அவையோரை நோக்கி, அறிவு வீரர் ஒருவர் பேருரை நிகழ்த்துவது போலவே, அடிகளின் நடைப் போக்கு ஆங்காங்கே அமைந்து திகழ்வதையும் அறிவுடையோர் தெரிந்து வைத்திருப்பர். இதுகொண்டு, அடிகளை அவாவாதவர்களை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை.

மறைமலையடிகள் தமது இன்றமிழ் நடையில் வடசொற் புகுவதால் ஏற்படும் பொல்லாங்கினைப் பின்றைப் பருவத்தில் நன்கு உணர்ந்தார். ஆகலின், ஆரியம் ஆங்கிலம் முதலான வேற்றுமொழிச் சொற்கள் பெரும்பாலும் விரவாமல், தூய தனிச் செந்தமிழிலேயே தம் கட்டுரை நூல்களை இயற்றுவாராயினர். இன்னும், வடநாட்டு ஆரிய நூல்களின் பொய்ம்மையையும இழிபையும் தென்னாட்டுத் தமிழ்நூல்களின் மெய்ம்மையையும் உயர்பையும் கூறுபடுத்திக் காட்டித், தமிழ்மக்கள் தம் சமயம் நாகரிகம் மொழி ஆகியவற்றில் தனிச் சிறப்புடையவர்கள் என்பதை ஆணித்தரமாக நிலைநாட்டி, எதிர்காலத் தமிழரசுக்குப் பகைவர் இவர், பாதுகாவலர் இவர் என்னும் உணர்ச்சியையும் தோற்றுவித்து, ஆரியர்தம் கூற்றுவராகத் - தமிழர்தம் காவலராகத் திகழ்ந்ததால், அடிகளை விரும்பாதவர் சில்லோர், நாடு மொழி இனம் இவற்றின் நலப்பேணும் பீடுடைய மறைமலையடிகளின் பெருநூல்களைத், தனித் தமிழின் இனித்த சுவையுணராதார் அது காரணமாகக் குறைகூற முற்பட்டால், அவர்கட்காகப் பெரிதும் இரங்குகின்றோம்.

இனி, மறைமலையடிகள் நீண்ட பெருஞ் சொற்றொடர்களை ஆண்டு, தம் நூல்களை நடத்திச் செல்கின்றார்; ஆதலின்,

அவற்றைப் பொறுமையாயிருந்து கற்கும் திறமான பயிற்சி இல்லாதார், அடிகளின் தமிழ்நடைமீது அகக் காழ்ப்பு மிகக் கொண்டுள்ளார். நெடுவாக்கியங்களைக் கையாண்டு கடுமையான நடையில் கருத்துக்களை அடிகள் வெளிப்படுத்தியிருப்பினும், அறிவு ஒருங்கி உணர்வு நுணுகிக் கற்பார்க்கு அவை தெளிவாக விளங்கித் தோன்றுகின்றன. எனவே, இந்த இயல்பு காரணமாகச் சிந்தை நொந்துரைப்போர் பொருட்டுப் பரிவு கொள்கின்றோம்.

# அமைதி

[வித்துவான் மாவை. துரை. பழநி மகாதேவன், ஆம்பூர்.]

அமைதியே இன்பம், அமைதியே ஆக்கம்,
அமைதியாந் தாயெம்மை ஆளுகின்றனள்,
பொன்று நலந்தரு பொறைப்பா லிவள்,
வாழ்க்கை நூலை வாரி வழங்குவள்,
தந்ததோர் பொறையி னளவே எம்மாற்றல்;
ஏற்றம் தரும்பொறை! ஆஆ! என்னே!!
சோர்விலை, தாழ்விலை, நின்ற நிலையின்
கருத்தி னொளியைக் காட்டும் அஃதே,
சான்றாண் மைதரும், அழுக்கா றகற்றும்,
தீவழி விலக்கி நல்வழி காட்டும்,
அறநல் உணர்வும் ஆன்றோர் சேர்க்கையும்
பீடுடை எண்ணமும், பெட்புறு நலனும்
நாடும் ஒழுக்கமும், நல்ல வூக்கமும்,
உலையா முயற்சியும், அலையா வாழ்வும்
என்பும் உருகும் அன்பு வழங்கலும்,
வன்பு நீங்கிய இன்பும், நெடுநீர்
மறவி மடிதுயில் நீக்க லோடு
செருக்கச்ச மிடுக்கண் பற்றுள்ளம் இன்ன
விலக்கலும், விருந்தயர் வுடனே
பேதைசொல் நோன்றலும் அமைதியாற் பேறே.

# ஓவியம்

[திரு. தி. நா. அறிவு ஒளி]

(செல்வி சிலம்பு, ௩௪, பரல் ௭, ௩௩௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

பொற்பாவைக்குப் படிஎடுக்கத் தலைவியின் இடுப்பு எங்கே இருக்கிறதென்று தெரியாதாம்! அவ்வளவு நுண்மையான இடையாம் தலைவிக்கு! 'படிஎடுத்தல்' என்பது பாவை செய்தற்கு முதல் அச்சிலிருந்து வேறு சிலை வடித்தலாம்.

விளையாட்டுப் பாவை

மேலும் அக்கால இளமகளிர் பெண் சிலைகளைச் செய்து வைத்துக்கொண்டு விளையாடுவது வழக்கம். இன்றும் பெண் குழந்தைகள் மரப்பொம்மைகளை (மரப்பாச்சி) வைத்துக்கொண்டு அவற்றிற்கு எண்ணெய் தேய்த்து குளிப்பாட்டியும், பால் புகட்டியும், அழுகை ஆற்றியும் பலப்பலவாறு கற்பித்து விளையாடக் காணலாம். அதுபோலத் தலைவி 'அரும்பாத முலையைச் சிவந்த வாயை உடைய பசிய பாவைக்கு 'அழாதே' என்று கூறிக் கண்ணீர் துடைத்து, ஊட்டி விளையாடினாள் எனக் குறிக்கிறார் புலவர். இத்தகைய விளையாட்டுப் பாவைகளைப் பண்டு தச்சரும், கொல்லரும் பலப்பல செய்து வழங்கிய கலைவரலாற்றுண்மை கூர்ந்து நோக்கி உணர்தல் வேண்டும்!

"இரும்பா மனம்கொண்ட வாறென்னை நீ? தன்னை ஏத்தி என்றும்
வரும்பா வலர்க்கருள் வாணன்தென் மாறை வளவயலில்
கரும்பார் மொழியாய் அழல்! என்று கண்ணீர் துடைத்து அணைத்துஉன்
அரும்பா முலைசெய்ய வாய்ப்பசும் பாவைக்கு அளிக்கும்மின்னே"

(த. வா. கோவை : ௩௩௭)

மேற்கூறிய பாவைதவிர வண்டலம் பாவைகளையும் மகளிர் விளையாடுதற்குப் பயன் படுத்துவர். வண்டல் மண்ணினால் பாவைகள் செய்து கடற்கரையில் விளையாடுவர் மகளிர். சில போதுகளில் கடலலைகள் ஓடிவந்து அப்பாவையை அழித்துக் கலைத்துவிடும்! அப்போது இளம்பெண்கள் கண்ணீர்விட்டு அழுவார்களாம்!

" அயிரார் திரைவந்துன் வண்டலம்பாவை அழித்தனவோ?
செயிராத அன்னை செயிர்த்தனளோ? செறிகாரை திண்போர்
வயிரா நரலும் வயல்தஞ்சை வாணன்தென் மாறையில்என்
உயிராகியதையல்! நீகலுழ் வான்என் உளம்குழைந்தே?"

(த. வா. கோவை : ௨௮௮)

இத்தகைய திறமையான சிறு கைத்தொழில்களிலும் கலை உணர்ச்சியும், கலைப்பண்பும் சிறந்து நின்றமையாலன்றோ கற்ற கவிஞர்களும் தம் கவினுர் கவிதைகளில் அக் கலையருமையைப் பாராட்டிப் பாடுவாராயினர்!

ஓவியக்கலையின் சார்பினில் ஒன்றாகிய கட்டிடக் கலையைப் பற்றியும் பல அரிய குறிப்புக்களை புலவர் அளிக்கிறார். தஞ்சை வாணனின் மாளிகை வெண் மாளிகை எனக் கூறுகிறார். அக் காலத்தில் வெள்ளைப் பூச்சு மாளிகைகளுக்கு பூசினர் என்ற உண்மை இதில் புலப்படுகிறது.

"பரவாத வண்ணம் பரவியும், பாதம் பணிந்தும், நெஞ்சம்
கரவாத பொன்னைக்கின் காரணமாகக் கயிலை என்றே
வராகுணன் அஞ்சும் வெண்மாளிகைத் தஞ்சைவாணன் வெற்பா!
இரவாத வண்ணமெல் லாம்இரந் தேன்இவ் விரவிடையே"
(த. வா. கோவை. ௧௭௨)

'பளிங்காலாகிய வெள்ளிய மாளிகை' எனவும் இதனைக் கருதற் கிடமுண்டு.

தஞ்சைவாணனின் கோட்டையில் கிடங்கும் புரிசையுமாகியக் கோட்டை உறுப்புக்கள் இருந்தமையைப் புலவர் குறிக்கிறார்.

"தொடங்கும் பிறைநுதல் சேர்கையும் நீயும்முன் தோன்றுகின்ற
கடங்குன் றிரண்டும் கடந்துசென் றால்கமலத் தடமும்
கிடங்கும் புரிசையும் சூழ்ந்தெதிர் தோன்றும் கிளைத்த பைந்தார்த்
தடங்குங் குமநெடுந் தோள்வாணன் மாறையும் தஞ்சையுமே."
(த. வா. கோவை. ௩௨௪)

தஞ்சைவாணன் அரண்மனை பொன்னால் செய்யப்பட்ட மதிலை உடையது என்ற குறிப்பைக் கொடுக்கிறார்.

"வெஞ்சுரநாடு வியன்சுர லோகமும் வெங்கடுங்கான்
ஐஞ்சுர தாரு வனங்களும் ஆக, அகில் புகை போல்
மஞ்சுர ஆடக மாமதில் சூழ்தஞ்சை வாணன் வெற்பில்
பஞ்சரம் ஆகும் மொழிசுகருள் ஓதியென் பைந்தொடிக்கே."
(த. வா. கோவை. ௩௩௫)

"இயங்கா வனம்என் மகள்ஒரு காளைபின் ஏகினள்! என்று
உயங்கா தொழி அஃதுலகியல்பால்; உலவும்புயல் தோய்
வயங்குஆடக மதில்சூழ் தஞ்சை வாணன் மணம்கமழ் தார்ப்
புயம் காதல் கொண்டுஅணைந்தாள் அயனார்தந்த பூமகளே."
(த. வா. கோவை. ௩௪௨)

வாணன் ஊரில் கோபுரங்கள்மிக இருந்தனவாம்! அங்கே கொடிகள்பறந்தன! மாடமும் மதில்களும் ஒழுங்காக அமைக்கப் பட்டிருந்தனவாம்!

" கோபுரம் சோலை கோடிமதில் மாடம் துலாவிமையோர்
மாபரம் போலும் தென்மாறை வரோதயன் வாணன்வெற்பில்
நீபார்த்தே தந்த மாதைஅங்கு யான் வரைநீர்மை பொன்செய்
நூபுரம் சூழ் அடியாய்! சென்று கூறு நமர்தமக்கே."
(த. வா. கோவை. ௩௰அ)

இதுவரை கட்டிடங்கள் பற்றிய குறிப்புக்களைக் கண்டோம். அக் காலத்தில் செம்பை உருக்கி வார்த்துத் தகடு செய்யும் கொல்லரின் தொழிலை உவமையாக்குகிறார் பாலை வழிக்கு. கொல் லர்தம் தொழிலினை புலவர் கூர்ந்து நோக்கி எடுத்து ஆண்டுள்ள மாண்பினைக் காணுவோம்.

" தேர்த்தானை வாணன்தென் மாறையின் னே! அஞ்சல்; செம்புருக்கி
வார்த்தால் அனைய வழிநெடும் பாலை மடப் பெடை நோய்
டார்த்தா தவம்தணி பாதவம் இன்மையின் பைஞ்சிறகால்
போர்த்தாலும் மஞ்ஞை கண்டும் போவ ரோகம் புரவலரே!"
(த. வா. கோவை. உ௬௭)

வேல் வடிப்பது அக் காலக் கொல்லரின் தலையாய கடமை யாக இருந்தது. இத்தகை வடிக்கும் திறமையைப் பற்றிப் புறநா னூற்றில் பொன்முடியாரும், "வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே' எனப் பாடியுள்ளார். அத்தகைய அருந் தொழிலால் பொய்யாமொழிப் புலவர் காலத்திலும் தமிழ்க் கொல்லர்கள் வேல் முதலிய படைகள் ஆக்கி யளித்துள்ளனர்!

" படிஒன்று சாலி அனையவர் சேரிப் படர் பவளக்
கொடிஒன்று நீலம் மலர்ந்தது காட்டக் கொடிய வெம்போர்
வடிஒன்று கூர் இலை வேல்வல்ல வாணன்தென் மாறையில்பொன்
தொடிஒன்று தோள்மட வார்சேரி வாய்வந்து தோன்றியதே."
(த. வா. கோவை. ௩அ௩)

அக் காலப் பொற்கொல்லர் நெருப்பில் பொன்னை உருக்கி யும், காய்ச்சியும் பண்படுத்துவர். அத் தொழில் நலத்தைப் புலவர் அழகொழுகக் கூறுகிறார் ௩௭அ ஆம் பாட்டில்:

" வன்போ தணிதொங்கல் வாணன் தென்மாறை மகிழ்நர் நம்மேல்
அன்போடு நன்னெஞ் சறிவறை போக அழலுள் வேந்த
பொன்போல் நிறம்கொண்டு இரவும்கண் ணீரும் புலர்வதுபார்த்து
என்போல் எவர்இங்ங னேஇமை யாமல் இருப்பவரே?"
(த. வா. கோவை. ௩௭அ)

பொற்கொல்லர் பொன் அணிகலனில் பல்வகை மணிகளை, முத்துக்களைப் பதித்து அழகிய கலைத்திறமை காட்டி ஒப்பற்ற ஓவியக்கலை வியக்கும் படைப்புக்களை உருற்றுவர். அத்தகைய திறமான தொழில்வமைதியை ௬௨ ஆம் கோவைப் பாட்டில் பொய்யாமொழியார் புகல்கிறார்.

"என்னூடு நின்ற இளங்கொடியே! சங்கம் எய்ந்து குழாம்
தன்னூடு செல்லும் சலஞ்சலம் போல்தஞ்சை வாணன்வெற்பில்
பொன்னூடு செல்லும் புசழ்மணி போல்நின் புடை அகலா
மின்னூடு நண்ணிடை யாருடன் நீ சென்று மேவுகவே."

(த. வா. கோவை. ௬௨)

பொன் அணிகலங்களை மென்மை செய்து பண்படுத்துதற்காகப் பொற்கொல்லர் அரம்கொண்டு அராவுவர். அப்போது மிக நுண்ணிய பொன் துகள் சிந்தும். இப் பொற்றூளைப் பெண்களின் முலைகளில் மஞ்சள் நிறமாகப் படரும் தேமலுக்கு (சுணங்கு) உவமையாக ஆள்கிறார் பொய்யாமொழியார் :

"நின்மேல் அடுத்த பசலையின் காரணம் நின்துணைவி
என்மேல் அடுத்த இயல்பின் அன்றோ பெற்றதுஎழ் உலகும்
தன்மேல் அடுத்த புகழ்த்தஞ்சை வாணன் தமிழ்க்கிரி நுண்
பொன்மேல் அடுத்தன பொன்சுணங் கீன்ற புணர்முலையே!"

(த. வா. கோவை. ௩௩௭)

அப்பொன் துகளை உதிர்க்குமாறு தொழில் செய்யும் கொல்லர் தொழிலுக்குரிய கருவியாகிய அரத்தைக் கல்லின் கூர்மைக்கு உவமையாகப் பயன்படுத்தியுள்ளார் புலவர் :

"வரமாமை வேல்படை வாணன்தென் மாறை வணங்கலர்கள்
புரமான வல்லழல் பொங்குவெங் கானில் பொருந்திய கூர்
அரமான கல் உன் அடிமலர் ஆற்றல ; ஆதலின், நாம்
சுரமாறும் எல்லை நல்லாய் ! இருப் பாம் இந்தச் சோலையிலே."

(த. வா. கோவை. ௩௭௪)

கலைத்துறைத் தமிழ்ச்சொற்கள் பலவற்றை நந்தமிழ் மொழி புதையல்போலப் பதுக்கி வைத்துள்ளது. அவற்றுள் 1. வனைதல். 2. புனைதல்.

சிலை செய்வதில் மழமழப்பாக ஒழுங்காக மேட்டுப் பகுதி பள்ளப் பகுதிகளைத் திறமையாக உருவாக்குவதை 'வனைதல்' என்பர். அழகிய நுட்ப வேலைகளைச் செய்வதையும், நிறம் ஊட்டுதலையும் 'புனைதல்' என்பர். ஒரு பெண்ணின் முலை ஓவியக் கலைஞன் சிலைக்கு 'வனைந்து' ஆக்கியதுபோல அமைந்திருந்தது என அழகொழுகக் கூறுகிறார் புலவர். ஓவியக் கலைஞன் பல்வகை

எழில்மிகு நிறங்களால் புனைந்து அழகு ஊட்டியது போலிருக்கிறது புனம் என்கிறார் பொய்யாமொழியார்.

"புனைந்தால் அனகோங்கை மாதரு வாய்த்த தஞ்சைவாணன் வெற்பின்
புனைந்தால் அனைய புனத்து அயல்வாய் வண்டு போதகத்தேன்
நனைந்தால் அனையஎன் நல்வினை தான்வந்து நண்ணிற்றென்று
நினைந்தால் அணங்கனையாய்! தமியேன் உயிர் நிற்கின்றதே."

(த. வா. கோவை. அஎ)

வனைந்தது போன்ற கொங்கைக்கு உவமையாகச் 'செப்பேர் இளங்கொங்கை' என இன்னொரு இடத்தில் பொற்செப்பை உவமையாக்குகிறார் புலவர். பொற்கிண்ணம் செய்வர் தமிழ்ப் பொற்கொல்லர். அச் செப்பின் அமைப்பு முலையின் அமைப்பாகும். இவ்வரிய உவமையை தமிழ்ப் புலவர் ஓர் இலக்கிய மரபு உவமையாகவே உருவாக்கி விட்டனர்! எனின் அச் செப்பின் எழிலும் அதைச் செய்யும் பொற்கொல்லரின் நுண்மைத் தொழிற்றிறனும் இத்துணைத்து என எண்ணி உரைத்தற் கியலுமோ?

"இப்பேரு வகை இனிப்பிரியேன் என்றும், என்முன்சொன்ன
அப்பேருரை பழுதாம் என்னவோ அரவம்சுமந்த
மைப்பேர் அலைகடல் வையகம் தாங்கிய வாணன் தஞ்சைச்
செப்பேர் இளங்கொங்கை மங்கை! செப்பாதன்பர் சென்றதுவே."

(த. வா. கோவை: உகூச)

ஆடவர் காலில் அணியும் கழல் பொன்னால் செய்யப் பெறும். பொற்கொல்லர் அதில் பல நுண்ணிய புனைகொடிகளை உளிகள்கொண்டு வனைவர். அத்தகைய கழலை 'அம்பொன் வனை கழல்' எனக்குறிப்பார் பொய்யா மொழியார்.

"புனையலர் ஏதிலர் காதல்அம் தாயர் பொறுமை யின்போய்
இனை துயர் யாதொன்றும் இன்றிவெங்கான் இகந்துயானும்அம்பொன்
வனைகழ லானும் வருவதெல் லாம்சென்று வாணன் தஞ்சைத்
தனைவுடன் ஏகுகின்றீர்! சொல்லுவீர்என் துணைவியர்க்கே."

(த. வா. கோவை: ௩௫௧)

பெண்டிர் அக் காலத்தில் கழங்கு ஆடுவது இயல்பு. அக் கழங்கைப் பைம்பொன்னால் செய்து ஆடுவாராம்! அக்கால வீட்டுப் பெண்டிர் விளையாடும் கழங்கே பொன்னால் செய்யப்பெற்ற தாயின் அவர்களின் வளமான செல்வவாழ்வு எத்தகையதாயிருக்கும் என்பதை நாம் கற்பனையால் அளவிடமுடிகிறதா? அக்காலப் பொற்கொல்லர் பொற்கழங்கு செய்ததோடு மட்டுமா அமைந்தார்கள்? மன்னர்கள் ஏறிச்செல்லும் பொன்தேரும்

செய்தளித்தார்கள்! அத்தகைய கலைவல்லுநர்களாக அவர்கள் விளங்கியிருந்த மாண்பைப் பொய்யாமொழியார் குறிக்கிறார்.

"தழங்கார் புனல்வையை சூழ்தஞ்சைவாணன் தனதருள்போல்
பழங்காதல் எண்ணல்என் பைதல்நெஞ்சே! இவள்பண்டு பைம்பொன்
கழங்கு ஆடிடமும் கடிமலர்க் காவும் கடந்துபுள்ளும்
வழங்கா வழிநமக் கோர்துணை யாய்வந்த மான்அல்லளோ."
(த. வா. கோவை: ௨௦௨)

இப்பாட்டில் கழங்காடுதற்கெனத் தனி இடம் ஒதுக்கி இருந்தமையை நாம் அறியலாம்.

"எமன் எனஅஞ்சும் என்காத் தலின்,அவ் விரவிபொன்தேர்
வாமானின் வாழ்வன வாகபன் னூன்; தஞ்சை வாணன் ஒன்னார்
போமான் அதர் இடத்து என்னையர் தோன்றப் புறங்கொடுத்த
கோமான் மணிநெடுந் தேர்நுகம் பூண்ட குரகதமே."
(த. வா. கோவை. ௩௬௫)

"நனையகத்து அலகிய நாள்மலர் ஓதி நயந்துஉறையும்
மனைஅகத்து அல்லிடை வைகுத லால், தஞ்சை வாணன் ஒன்னார்
வினையகத்து அல்குதல் செல்லுவ ரேனும், அவ்வேந்தர் பொன்தேர்
முனையகத்து அல்கல்செல் லாது ஒருநாளும் முகிழ்நகையே!"
(த. வா. கோவை: ௩௭௬)

போருக்குச் செல்லும்போதே பொற்றேரில் செல்கின்றார்கள் நமநாட்டு மன்னர்கள் எனின் நம் தாயகத்துப் பொன்வளமை எத்துணை சிறியது என்பதை எடுத்துரைக்காமலே அறியமுடியும்!

'வடிவம்' என்பது 'வடிக்கப்பெற்ற உருவம்' எனும் பொருள்படும். வடித்தல் எனின் செய்தல் ஆக்குதல் என்று பொருள். சிலைகளை வடித்து ஆக்குதலால் அவை வடிவம் எனப் பட்டது. இக்கலைச்சொல் வழக்காற்றில் பொருள் மாறுபட்டு வழங்கிவருதலால் அதன் மெய்ப்பொருளை அறிதல்வேண்டி இக் குறிப்பு விளக்கப்பட்டது. கற்பே ஒருவடிவம் எடுத்து வந்தது போன்ற ஒருபெண்ணைப் புலவர் ௨௦௭ ஆம் பாட்டில் குறிக்கிறார்.

"சிறந்தார் புகழ்தரும் தீம்புனல் ஊரன் செய்தீமை எல்லாம்
மறந்தார் வம்எய்தி வணங்குதலால் இவள்வாணன் தஞ்சை
நிறந்தாரகை அன்னநித்திலம் போலும் நெடுங்குலத்தில்
பிறந்தார் நிறைந்த கற்பு ஓர்வடிவே பெற்ற பெற்றியளே."
(த. வா. கோவை: ௨௦௭)

பொய்யாமொழிப் புலவர் காலத்தில் ஒளிமிக்க கண்ணாடியினுள் பாவை அமைக்கும் வழக்கம் இருந்தது. ஓவியக்கலையின்

ஓர் அரியதிறன் அமைந்த தொழிலை இப்பாட்டின் வழி புலவர் வெளியிடுகிறார். ஒளிமிக்க கண்ணாடியுள் அமைக்கப்பட்ட சிலை போன்ற அழகுள்ள பெண் என்கிறார் புலவர்:

"மலர்புரை ஏர்கொண்ட வாள்கண் எம்கோமங்கை,வாணன் தஞ்சை
பலர்புகழ் பாலன் பயந்து நெய்ஆடினள்; பாங்கெவர்க்கும்
அலர்புரை நீடுஒளி ஆடியுள் பாவை அன்னாட்குஉளநீர்
புலர்புனல் ஊர!என்னோ திருவுள்ளம் இப்போதுனக்கே!"

(த. வா. கோவை: ௩அ௬)

(மேற்பாடலில் கருவுற்ற மங்கையர் பிள்ளைபயந்து நெய் குளித்து முழுகுதலைக் குறிக்கிறார். 'முழ்காமல் இருக்கிறேன்' எனப் பிள்ளைத்தாய்ச்சியர் கூறுவதும், குழந்தைப் பேறு முடிந்ததும் 'குளி குளித்தேன்' என்பதுமாய சொல்லாட்சிகள் மேற்கூறிய 'நெய்ஆடுதல்' என்பதன் வழித்தோன்றியன என்பது குறிப்பிடத்தக்கது.)

தமிழ்ப் புலவர்கள் காவியத்தையும் ஓவியத்தையும் ஒரே தகுதியில் வைத்துப் போற்றிய வாய்மையை அவர்களின் இலக்கியப் படைப்புகளே நிலைநாட்டுகின்றன. அவ்வுண்மையையே பொய்யாமொழிப் புலவரின் தஞ்சைவாணன் கோவை நூலும் நிலைநாட்டக் கண்டோம்.

கலைவளம் சிறந்த தமிழகம், தன் பழம்பெருமையை மீண்டும் ஒருமுறை புதுக்கண்ணோட்டத்தில் ஆராய்ந்துநோக்கிப் பழைய வளமார்ந்த வாழ்வையும், மேதைமையையும் உணர்ந்து கொண்டால், மீண்டும் புதுமைத் தமிழகத்தில் கலைச்சிறப்பை நிலைநாட்ட முடியும்! கலைத்துறை மறுமலர்ச்சியடையப் பழைய கலைவரலாற்று உண்மையை நேரிய கண்களால் ஆராய்ந்து உணர வேண்டும். கலைநூல் மலிந்திருந்தது இந்நாட்டில் ஒரு காலத்தில்; இன்றோ அவை அருகிவிட்டன. அக்குறையை நீக்க, இலக்கியத்தில் ஓவியக்கலை பெறும் இடம் இத்தகையது என ஆராய்ந்து வெளியிடவேண்டிய இன்றியமையாமை உண்டாகிவிட்டது.

---

## 'செல்வி' கட்டுரையாளர்கட்கு

செந்தமிழ்ச்செல்வி திங்கள் வெளியீடாகவும் அளவில் சிறியதாகவு மிருத்தலானும், சில இன்றியமையாக் கட்டுரைகட்கு மட்டுமே முதன்மை தரவேண்டியிருப்பதாலும், இனிக் கட்டுரை அனுப்பும் அன்பர்கள் தொடர் கட்டுரைகளையோ, மிக நீண்ட கட்டுரைகளையோ அனுப்பாமல், ஒரே இதழில் நான்கு பக்கங்களுக்குள் முடியும் அளவில் கட்டுரைகளை அனுப்பி உதவுமாறு வேண்டுகிறோம்.

ஆசிரியர்.

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி, சிலம்பு ௩௪ - மடல் - ௭, ௩௩௫ ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஒதிபன்: ஆ! என் தந்தையல்லவா?

செய்திசொல்லி: நான் எவ்வாறு தங்கள் தந்தையல்லனோ அவ்வாறேதான்.

ஒதிபன்: தங்களைப் போன்றா? விளக்கிச் சொல்லுங்கள்.

செய்திசொல்லி: நான் உங்களுக்குத் தந்தையல்ல. பொலிபரும் தங்களுக்குத் தந்தையல்ல.

ஒதிபன்: அங்ஙனமாயின், அவருடைய மகன் என்பது எப்படியாயிற்று?

செய்திசொல்லி: சொல்லுகிறேன் கேளுங்கள். நான் அவருக்கு உங்களைக் கொடுத்தேன்.

ஒதிபன்: கொடுக்கப் பெற்றவனா? அங்ஙனமிருந்தும் என்னை மகன்போல் அன்புடன் காப்பாற்றினாரே?

செய்திசொல்லி: அவருக்கு மக்கட்பேறில்லை.

ஒதிபன்: நான் கண்டெடுக்கப் பெற்றேனே அன்றி யாராலேனும் கொடுக்கப் பெற்றவனா?

செய்திசொல்லி: சித்தேரணத்துக் காட்டுப் புதரில் கண்டெடுக்கப் பெற்றவராவீர்.

ஒதிபன்: அங்கு ஏன் சென்றீர்கள்?

செய்திசொல்லி: மலையின் மீது ஆடு மேய்த்துக் கொண்டிருந்தேன்.

ஒதிபன்: தாங்கள் எடுத்துக் கொண்டபோது எவ்வாறு இருந்தேன்?

செய்திசொல்லி: உங்கள் காலில் இருக்கும் குறி வரலாற்றைச் சொல்லுமே!

ஒதிபன்: என் கால்களைப்பற்றியா? அந்த நோயினைச் சொல்ல வேண்டுமா?

செய்திசொல்லி: நான் பார்க்கும்போது கால்கள் விலங்கிட்டிருந்தன. வெட்டி விலக்கினேன்.

ஒதிபன்: உண்மைதான். தொட்டில் முதற்கொண்டு அப்புண் இருந்து வருகிறது.

செய்திசொல்லி: அதனாலன்றோ தங்களுக்கு ஒதிபர் என்ற பெயரும் வந்தது?

ஒதிபன்: ஆ, தெய்வமே! இது என் தாயிட்ட கொடுமையோ, தந்தை செய்த தீங்கோ!

செய்திசொல்லி: அஃது என்னால் சொல்ல இயலாதது. எனக்குக் கொடுத்தவனைக் கேட்கவேண்டும்.

ஒதிபன்: உனக்குக் கொடுத்தானா? யார்? நீயே கண்டெடுக்கவில்லையா?

செய்திசொல்லி: வேறு ஒரு இடையன்தான் உங்களை என்னிடம் கொடுத்தவன்.

ஒதிபன்: அவன் யார்?

செய்திசொல்லி: இலேயரின் ஆட்களுள் ஒருவன் என்று நினைக்கிறேன்.

ஒதிபன்: இலேயர்? நம் முன்னாள் அரசர்.

செய்திசொல்லி: ஏன், அவரேதான். எனக்குக் கொடுத்தவன் அவருடைய கையாள்தான்.

ஒதிபன்: அவன் இப்போது உயிரோடு இருக்கிறானா. நான் பார்க்கலாமா?

செய்திசொல்லி: உங்கள் நாட்டினருக்குத்தான் அவன் இருப்பிடம் தெரியவேண்டும்.

ஒதிபன்: நல்லீர், உங்கள் யாருக்கேனும் அவன் இருப்பிடம் தெரியுமா? தெரிந்தால் சொல்லுங்கள். இதுதான் அம்மறையினை அறிந்துகொள்ளுதற் கேற்ற சமயம்.

கோரஸ்: தாங்கள் அறிய விரும்பியவன் அவனே. அரசியாருக்கு அவன் எங்குள்ளான் என்று தெரிந்திருக்க வேண்டும்.

ஒதிபன்: அன்பே, நீ வரச்சொல்லியவன் அவன்தானோ?

யோகத்தாள்: (அச்சமுற்றவளாய்) அவன் யாராயினென்ன? இவர் சொல்வதை மறந்துவிடுங்கள்.

ஒதிபன்: இச் சூழ்ச்சியினை முடிவுவரையில் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

யோகத்தாள்: வேண்டாம். தெய்வத்தின் பேரால் சொல்கிறேன். உயிர் வாழவேண்டுமாயின் இதுபற்றி அறிய வேண்டாம். யான் துன்பமுற்றது போதும்.

ஒதிபன்: அஞ்சுதற்கொன்றுமில்லை. யான் அடிமைக்குப் பிறந்தவனயினும், உன் பெருமைக்குக் குறைவு நேராது.

யோகத்தாள்: ஆராயாதிர்கள். இறைஞ்சுகிறேன்.

ஒதிபன்: தெரிந்துகொள்ளவே விரும்புகிறேன். முடிவு தெரியும் வரையில் ஆராய்வேன்.

யோகத்தாள்: நான் சொல்வதுதான் சரி என்கிறேன். உங்கள் நன்மைக்குத்தான் சொல்கிறேன்.

ஒதிபன்: என் நன்மை எனக்குக் கொலையாளாக நிற்கிறது.

யோகத்தாள்: பழிக்காளாகுபவரே, உண்மை அறிதற்கு உயிருடனிருக்காதிர்.

ஒதிபன்: யாரேனும் சென்று அவளை அழைத்து வாருங்கள். இவ்வரசி தன் குலப் பெருமையில் இன்பங் கொள்ளட்டும்.

யோகத்தாள்: இதுவே என் இறுதிச் சொல். இழந்தீர் ; இழிக்கப் பெற்றீர்!

[செல்கிறாள்]

கோரஸ்: அரசி நம்மைவிட்டு வெகுண்டு எழுந்து செல்லுதற்குக் காரணம் என்னவோ? அவர் சொன்னதை நோக்குமிடத்துத் தாம் சொல்வதற்கு அஞ்சுமாறு ஏதோ பெருந்தீங்கு நேரவிருக்கிறது என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

ஒதிபன்: அது எதுவாயினும் ஆகுக. உண்மை வெளியாகுக! என் பிறப்பின் மறைபொருளை வெளிப்படுத்த வேண்டுகிறேன். யான் அரச குலத்தவன் அல்லன் என்று அரசி அஞ்சுகிறாள். நல்வினையின் பிள்ளையாக வளர்ந்தேன். யான் வெட்கப் படுதற்கொன்றும் இல்லை. நல்வினை என் தாய். பருவகாலங்கள் என் உடன் பிறந்தவர்கள். என் நல் வாழ்வும், வீழ்வும் அவர்களைப்போல் மேற் செல்வனவே. யான் பிறந்ததெப்படி என்பதை அறியவே முற்படுகிறேன்.

(தொடரும்)

# கவுந்தியடிகள்

[திரு. மது. ச. விமலானந்தம் எம். ஏ.,]

(செல்வி சிலம்பு ௩௪, பரல் ௭, ௩௨௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

துன்பத்தால் பெருந்துயரடையும்போது, நம்மைவிடப் பெருந்துன்பமடைந்தோரைப் பற்றி அறிவோமாயின், நம் துன்பம் ஒரு துன்பமாகாது என்ற உள்ளத் தெளிவும், நம்மைவிட இன்னல்பல அனுபவிப்போர் இவ்வுலகிலுண்டு என்பது கண்டு உள அமைதியும் ஆறுதலும் அடைகின்றோம். இது உள நூல் கூறும் உண்மையாகும்.

இவ்வுள நூல் உண்மையை உணர்ந்தார் போலும் கவுந்தியடிகளும்! எனவே தனித்துயரெய்திய கோவலன் துன்பத்தின் சிறுமையையும் பிறர் துன்பத்தின் பெருக்கையும் அறியச் செய்து, துன்பத்திலும் துணைவியைத் துணையாகத் தான் பெற்றுளதையும் கதை வாயிலாகக் கோவலனையும் காப்பிய வாயிலாக நம்மையும் ஆறுதலுறச் செய்யும் கவுந்தியின் திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலது.

குன்றாக்கொள்கைக் கோவலன் தான் நனவுபோல நள்ளிருள் யாமத்தே கண்ட கனவைக் கூறி, கடிதீங்குறுமெனக் கழறிக் கலங்கிய ஞான்று, ஏற்ற விடையோ எளிய மாற்றமோ கூறாது வேறு கூறுவது அறமுதல்வியின் அறிவு ஒட்பத்தை (Presence of mind) நன்கு காட்டுகின்றது. கனவு கண்டு கலங்கும் கோவலனுக்கு உடனே 'ஐயோ, கண்ட கனவு பொல்லாததாயிற்றே! என்னென்ன நடக்கப் போகிறதோ' என்றெல்லாம் எடுத்துக் கூறி இன்னலடையச் செய்யாது சர்வசாதாரணமாகச் (as a matter of fact) செயலாற்றும் மாதவத்தாட்டியின் மாண்பே மாண்பு! இங்ஙனம் மாற்றம் உரைக்காது மனதைத் திருப்பியமையால் கோவலனும் அதனை மறந்து விடுவான், அங்ஙனம் மறக்காவிடினும் கனவொன்றும் அங்ஙனம் தீமையுடையதாகாது என்ற எண்ணமும் தோன்றக் கூடுமன்றோ?

இன்னும், இடைக்குல மூதாட்டியாம் மாதரியிடத்துக் கண்ணகியை அடைக்கலப் படுத்துமிடத்துக் கூறுவன கவுந்தியடிகளின் எடுத்தோதும் திறத்தையும் எண்ணியது உணர்த்தும் இனிமையையும் காட்டுகின்றன.

"மங்கல மடந்தையை நன்னீ ராட்டிச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் தீட்டித்
தேமென் கூந்தற் சின்மலர் பெய்து

தூமடி யுடீஇத் தொல்லோர் சிறப்பின்
ஆயமுங் காவலும் ஆயிழை தனக்குத்
தாயும் நீயே யாகித் தாங்கு." (அடைக். ௧௩௧-௩௯)

எனக் கண்ணகியை ஏற்றிப் போற்றுமாறு இது எனக் குறிப்பாக வும்,

"மாதரி கேள்இம் மடந்தைதன் கணவன்
தாதையைக் கேட்கில் தன்குல வாணர்
அரும்பொருள் பெறுநரின் விருந்தெதிர் கொண்டு
கருந்தடங் கண்ணியொடு கடிமனைப் படுத்துவர்."
(அடைக். ௧௨௫-௨௮)

என, அடைக்கலப்பொருள்தானே எனக் குறைவாக எண்ணி விடக்கூடாத வண்ணம் செந்தமிழ்ப் பாவையின் சிறப்பையும்,

"என்னொடு போந்த இளங்கொடி நங்கைதன்
வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்." (அடைக். ௧௩௭-௩௮)

"தன்துயர் காணுத் தகைசால் பூங்கொடி
இன்துணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்." (அடைக். ௧௪௧-௪௪)

எனக் கண்ணகியின் கற்பின் திறத்தையும், அடைக்கலம் பேணு மாற்றான் வரும் அரும்பயனை,

"தவத்தோர் அடைக்கலம் தான்சிறி தாயினும்
மிகப்பே ரின்பந் தருமது கேளாய்." (அடைக். ௧௪௯-௫0)

என விளித்துக் கதையொன்று கூறி விளங்க வைத்த கவுந்தியின் நாநலம் பாராட்டற்பாலது.

கருந்தடங் கண்ணியும் கவுந்தியடிகளும்

இங்ஙனம் நாநலனும், அறிவு ஒட்பமும், குற்றம் கண்டவழி மனம் பொறாத மாண்பும், தவவலியும் மிக்க மாதவத்தாட்டி உலகிற்கோங்கிய ஒருமாமணியாம் திருமாமணி - கண்ணகியைச் சிறப்பித்துக் கூறுகின்றார்:

"கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்." (அடைக். ௧௪௩-௪௪)

என ஏத்தும்போது பத்தினிப் பெண்ணின் பெருமையை யுணர் கின்றோம்.

“வானம் பொய்யாது, வளம்பிழைப் பறியாது,
நீணில வேந்தர் கொற்றஞ் சிதையாது,
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு.” (அடைக். கசகு-சஎ)

எனப் பின்னரும் பத்தினிப் பெண்டிரால் வரும் சீரும் சிறப்பையும் கூறி நிறுத்துமாற்றான் செந்தமிழ்ச் செல்வியின் சீர்சால் சிறப்பைச் சிந்தனைக்கு விட்டுவிடுகின்றார். கவுந்தி கண்ணகிக்குத் தந்த சிறப்புரை (Tribtue) கவனிக்கற்பாலது.

புண்ணிய முதல்வியின் பண்பு

அறமுதல்வி அடைக்கலக் காதையோடு நம்மை விட்டு நாமறியாதே நழுவி விடுகின்றார். கோவலன் கொலையுண்ட பின்னரே - நீர்ப்படைக் காதையில் மாடலன் வாயிலாக ஆசிரியர்,

“தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்றம்
நிவந்தோங்கு செங்கோல் நீள்நில வேந்தன்
போகுயிர் தாங்கப் பொறைசா லாட்டி
என்னோ டிவர்வினை யுருத்த தோவென
உண்ணா நோன்போடு உயிர்பதிப் பெயர்த்ததும்.”
(நீர்ப்படைக். எகூ-அகூ)

எனக் கூறியவாற்றால் அறிகிறோம். கண்ணகிபால் பேரன்பும் பெருமதிப்பும் கொண்ட கவுந்தியடிகள் கோவலனுக்குற்றது அறிந்து பாண்டியன்பால் பெருஞ்சீற்றம் கொண்டார்: ஆனால் பாண்டி மன்னன் உயிரை உடனே விட்டான் என்றதும் இரக்கத்தால் இவரது சினம் தென்னவனைச் சபியாது தணிந்தது. இருப்பினும் ‘என்னோடு இவர்வினை உருத்ததோ’ என எண்ணி உண்ணா நோன்பிருந்து உயிர் துறந்தார் எனும்போது விம்மிதமும் வியப்பும் எய்துகின்றோம். என்னே! கண்ணகி கோவலர்பால் இவர் கொண்ட ஈடுபாடும் இணைந்த உள்ளமும்.

இதுகாறும் கண்டவற்றால் உயர்ந்த உள்ளமும், உயரிய நோக்கும், இரக்க வுணர்வும், தவவலிமையும் மிக்கவர் கவுந்தியடிகள்; அடக்கமும் ஆன்றவிந்தடங்கிய கொள்கையும் உடையவர்; சமயப்பற்று மிக்கவர்; அன்புரிமையும் அருளுறவும் அமையப் பெற்றவர்; எண்ணித் துணியும் இயல்பினர்; அறிவு ஒட்பமும் ஆன்ற புலமைத்திறமும் உடையவர்; கோவலன் கண்ணகி இருவர்பால் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டவர்; கண்ணகி துயர் பொறாது உயிர் துறந்த உயரிய நட்புத்திறம் நன்கமையப் பெற்றவர் என்றும் கண்டோம்.

## கவுந்தியின் செயல்திறம்

மாதவத்தாட்டியின் மாண்பு கண்டோம்; இனி இவர்பற்றிய வேறுபட்ட கருத்துக்களின் விளக்கம் காண்போம்.

கதையா? கற்பனையா?

கவுந்தியடிகள் இன்றியே காப்பியம் இனிது நடைபெறும். கவுந்தியின் துணையின்றியே கோவலன் கண்ணகி இருவரும் மதுரைக்குச் செல்லவும் கூடும். அன்றியும் கண்ணகி கதையோடு இணைக்கப்பட்டிருக்கும் மாதவியின் கதைபோன்ற இன்றியமையாமையோ, வீரபத்தினிக்கு ஏற்றம் தரும் வஞ்சிக்காண்டம் போன்றோ கவுந்தியின் கதை அமையவில்லை. இங்ஙனம் இன்றியமையாமை ஏதுமில்லாதபோழ்து கவுந்தியைக் காப்பியத்தில் அமைப்பானேன்? இது சிக்கல் தரும், சிந்தனையைத் தூண்டும் கேள்வியாகும்.

இதுபற்றிய பலவாறாய கொள்கைகள் உண்டு: கண்ணகி கோவலர்க்கிடையே உண்டான ஊடல் தீர்க்கும் உறுப்பாக அமைபவர் கவுந்தி அடிகள் என்று சிலரும், தம் சமயம் பற்றிய (சமணப்) பிரசாரப் பரியவே புண்ணிய முதல்வியைத் தோற்றுவித்துள்ளார் இளங்கோ என்று சிலரும், கயமலர்க் கண்ணிக்கும் காதற் கொழுநனுக்கும் வழித்துணையாக அமைந்தவரே கவுந்தியடிகள் என்று பலரும், பத்தினியை ஏத்துதல் என்னும் இனிய நோக்கு எளிதே நடைபெற இத் தவமூதாட்டியைக் காப்பியத்தில் நுழைத்துள்ளார் காப்பிய ஆசிரியர் என வேறு சிலரும் கூறுவர். ஒரு சாரார் கவுந்தியடிகள் வெறுங் கட்டுக்கதை; கற்பனைப் படைப்பு என்றும் பேசி மகிழ்வர்.

இக் கருத்துக்கள் ஒவ்வொன்றும் உண்மையுடையதும் இல்லை; இக்கொள்கைகள் அனைத்திலும் உண்மை இல்லாமலும் இல்லை. இனி இக் கருத்துக்களை ஆராய்வாம்:

ஊடல்தீர்க்கும் உறுப்பா?

மாமலர் நெடுங்கண் மாதவிபால் விடுதலறியா விருப்புற்று வடுநீங்கு சிறப்பின் தன் மனையகம் மறந்தான் கோவலன்; கணவனைப் பிரிந்த கற்பின் செல்வியும் அல்லலுற்று ஆற்றாது அலமந்து இருந்தாள். சலம்புணர் கொள்கைச் சலதியோடாடிப் பல்லாண்டுகட்குப் பின்னர் மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள் என எண்ணி மாதவியைப் பிரிந்து கண்ணகியை வந்தணைந்தான் கோவலன். வந்ததும் மதுரைக்குப் புறப்படுகின்றனர். இந் நிலையில் இருவரிடத்தும் அமைந்த மனக்கசப்பும், உள்ளக் குமுறலும் ஒழிந்து ஒன்றுபடு மாற்றாற் கவுந்தி அமைகின்றார் என்பது ஒரு சிலர் கருத்து. ஆனால் இஃது அத்துணைச் சிறப்புடைக் கருத்தாகாது; ஏனெனில் இளமை தவழும் இருவரும் மதுரை சென்றடையும் வரை மனம்விட்டுப் பேசியதாகவே தெரியவில்லை. பேசுமாறு இத் தவச்செல்வி செய்ததாகவும் அறியோம்.

சொல்லப்போனால் கவுந்தி - அதிலும் ஒரு தவமூதாட்டி உடன் வருவதால் உளம் விட்டுப் பேசித் தத்தம் துயரினைப் போக்க அவர்கட்கு இயலாது போயிற்று. கவுந்தி அவர்கட்கு இடையூறாக அமைந்தார் என்றாலும் மிகையாகாது. அதுதான் பேசவே இடம் தரவில்லையே இக்கிழவி! கவுந்தியடிகள் தங்களுடன் இருக்கும் வரை இருவரும் தத்தம் உள்ளக்கிடக்கையை வெளியிடவே இல்லை. கவுந்தியைப் பிரிந்து மாதரியின் வீட்டில் இருந்தபோது தான் மனந்திறந்து பேசித் தத்தம் துயரத்தைப் போக்கிக் கொள்கின்றனர். இதனைக் கொலைக்களக் காதை ருச-கூஅ ஆம் அடிகளால் நன்கறியலாம். எனவே ஊடல் தீர்க்கும் உறுப்பாக அமைந்தார் கவுந்தி என்பது எவ்வாற்றானும் ஒவ்வாததாகும்.

இலைமறை காய்போல்

இனிச், கோவலன் கண்ணகியர்க்கு வழித்துணையாக வந்தவர் கவுந்தியையே என்பது ஏற்புடைய ஒன்றா? வழித்துணைக்கு இத் தவக்கிழவிதானா வரவேண்டும்? வேறுயாரும் வரக்கூடாதா? வழித்துணை இன்றியே இவ்விருவரும் மதுரைக்குச் சென்றிருக்க முடியாதா? முடியும். பின்னர் ஏன் இப்புண்ணிய முதல்வியை இங்கே புகுத்தல் வேண்டும்? இங்கேதான் இளங்கோவின் எண்ணம் இலைமறை காய் போல் இலங்கக் காண்கின்றோம். செந்தமிழ்ச் சிலம்பின் சீர்சால் நோக்கே பத்தினியைப் பாரோர் ஏத்தச் செய்வதன்றோ? அம்முறையிலே கண்ணகியின் பெற்றியை யுணர்த்தக் கவுந்தியை அமைத்தார். அத்துடன் சமய உண்மை உணர்த்தும் ஓர் அரிய வாய்ப்பையும் அவருக்கு அளித்துள்ளார் அடிகள். வழித்துணை என்ற ஒரே கல்லைக்கொண்டு செந்தமிழ்ப் பாவையைச் சிறப்பித்தல், சமண சமய உண்மையை உணர்தல் என்னும் இரண்டு மாங்காய்களை அடித்துவிடுகின்றார் அடிகள். ஒரே கல்லில் இரண்டு மாங்காய்! எப்படி இளங்கோவின் செப்படி வித்தை?

சமயப் பிரசாரகரா ?

சோழனையும் சோணாட்டையும் புகழப் புகார்க்காண்டத்தையும், பாண்டியனையும் பாண்டிநாட்டையும் பரவ மதுரைக் காண்டத்தையும் பயன் படுத்தியமை போன்றே தன் நாடாம் சேரநாட்டையும் சேரமன்னனையும் ஏற்றிப்போற்ற இறுதிக் காண்டமாம் வஞ்சிக்காண்டத்தை வரைந்தாரன்றோ? அது போன்றே ஏனைச் சமயங்களைப் பற்றிப் பேச மாங்காட்டு மறையோன், யாடலன், தேவந்தி, மாதரி ஆகியோரை அமைத்தமை போன்றே, தம் சமயமாம் சமண சமயத்தை ஏத்துமாறு இக் கவுந்தியடிகளை அமைத்துள்ளார் ஆசிரியர் என்றால் அஃது எத்துணையும் மிகையாகாது.

அஃதாவது சேரநாட்டையும் செங்குட்டுவனையும் சிறப்பிக்கு மாற்றான் வஞ்சிக்காண்டத்தை இளங்கோ எழுதியமைபோன்றே, சமண சமயக் கொள்கைகளைக் காட்டுமாற்றாற் கவுந்தியைக் கற்பித்துள்ளார் காப்பிய ஆசிரியர் என்பது துணிபு. சிலப்பிற்குத் தேவையில்லாத சாரணரைச் சந்திக்க வைத்து, அன்னவர் தம் தலைவனைக் கொண்டு ஊழ்வினையின் ஆற்றலையும், அருகதேவன் அருமைபினையும் அழகுபட மொழியச் செய்து அம் மொழிகேட்ட கவுந்தியடிகள் அருகனையன்றி வேறு தெய்வத்தை வணங்குவதில்லை எனக் கூறுமாறும் செய்த இளங்கோவின் செயல் சமயப் பிரசாரமன்றி வேறென்ன? இதுபோது மாடலனை மறுத்துக் கவுந்தி கூறிய கருத்தினையும் எண்ணிப்பார்க்க:

“ அங்கம் பயந்தோன் அருகன் அருண்முனி
பண்ணவன் எண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி
ஓதிய வேதத்து ஒளியுறின் அல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரெனச்.”

(நாடுகாண். கஅஎ-கஅக)

சாரணர் கூறுவதெல்லாம் காப்பிய ஆசிரியர் கருத்தன்றி வேறு எதுவாகும்? வேண்டுமானால் சிலம்பாசிரியர் தம் சமயத்தை விளம்பரப்படுத்த வேண்டுமென்று இங்ஙனம் செய்யவில்லை; அவரையும் அறியாது அவரது உள்ளக்கிடக்கை உருவெடுத்துளது என்று கூறலாமே தவிரக் கவுந்தியடிகள் சமயப் பிரசாரகர் அன்று என்று எங்ஙனம் கூற இயலும்? (He cannot but reveal himself)

எத்துணைதான் கலைஞன் காலத்தையும் இடத்தையும் கடந்தவனுபினும் அவனும் மனிதன்தானே! அவன் தான் கண்ட-காணவிழைந்த வாழ்வை ஏட்டிலே தீட்டும்போது அவனையு மறியாது - அவனே வேண்டாமென விழைந்தாலும், அவனையும் மீறி அவன் கொண்ட கருத்துக்கள் வெளிப்படுவது இயல்பு. இஃது இலக்கியக் கலைஞர் எவரும் ஒப்புக்கொள்ளும் ஒன்றாகும். அம் முறையில் இளங்கோவடிகள் தம் சமயக்கருத்தை - உள்ளக்கிடக்கையை உணர்த்தவே கவுந்தியைப் படைத்தார் என்று எண்ணுவது தவறன்று; அங்ஙனம் படைத்ததும் தீதுமன்று. வள்ளுவர்போன்று சமயப் பொது நோக்கு உடைய அடிகள் ஏனைச் சமயத்தை எடுத்தியம்பியமை போன்றே தம் சமயத்தைதையும் சிறப்பித்தது ஏற்புடைத்து; இனிமையுடைத்து.

(தொடரும்)

# நக்கீரர்

[திரு. சோ. ந. கந்தசாமி, பி. ஏ. (ஆனர்சு)]

(செல்வி சிலம்பு, ௩௪, பரல் ௫, உ௩உ ஆம் பக்கத் தொடர்ச்சி)

?, கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் நக்கீரர் ஒருவர் வாழ்ந்தார் என்றும், அவர் இறையனார் களவியலுரை, அடிநூல், நாலடியார் ஆகிய மூன்று நூல்களையும் யாத்தார் என்றும் பிள்ளை அவர்கள் விள்ளுகின்றார். பாண்டிக்கோவைப் பாக்கள் களவியல் உரையில் வருதலான், கோவைத் தலைவன் நெடுமாறனின் காலமாகிய கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் இவ்வுரை எழுதப்பெற்றது என்று இயம்புகின்றார். தம் "திருவள்ளுவர் காலம்" என்னும் கட்டுரையில் களவியல் உரை கண்டவர் நக்கீரர் என்றும், "குறுந்தொகை" கட்டுரையில் களவியல் உரை வகுத்தவர் கி. பி. 5 ஆம் நூற்றாண்டினர் என்றும் பிள்ளை அவர்களே குறித்துள்ளார். அக் கட்டுரையிலேயே களவியலுரை எழுத்து வடிவு எய்தியது கி. பி. 7 ஆம் நூற்றாண்டாகும் என்று இயம்பியுள்ளார். களவியலுரைகாரர் நக்கீரர் என்பது பேரறிஞர் பலர்க்கும் ஒப்ப முடிந்த கருத்தாகும். ஆயின், அதனை 7 ஆம் நூற்றாண்டில் வரி வடிவிற் கண்டவர் பிறிதொரு நக்கீரர் என்றற்குச் சான்றுகள் உளவா? அதனை வரிவடிவாக்கியவன் சாத்தனாதல் காத்தனாதல் வேண்டும் என்பார் கூற்றிற்கும் இவர் தம் உரைக்கும் வேற்றுமையில்லை. எனவே, நக்கீரர் கண்ட களவியலுரை பல தலைமுறைகளாகப் பாடம் ஓதப்பெற்று, எழுதாக் கிளவியாக இருந்து, இடைச் செருகல் மலியப்பெற்று, ஏழாம் நூற்றாண்டில் யாரோ ஓரறிஞரால் எழுத்து வடிவு எய்தியது என்பது அறிவிற்குப் பொருந்துமாறுளது.

இனி, நாலடியாரைப் பாடியவர் நக்கீரர் என்றும், அவர் கி. பி. 7 ஆம் நூற்றாண்டினர் என்றும் பிள்ளையவர்கள் பேசுகிறார். நக்கீரர்க்கும் நாலடியார்க்கும் யாங்ஙனம் தொடர்பு வாய்த்தது என்பதை எண்ணிப் பார்ப்போம். யாப்பருங்கல விருத்தியில், "நக்கீரர் நாலடி நானூற்று வண்ணம்" என்ற தொடர் காணப்பெறும். "அளவினாற் பெயர் பெற்றன பன்னிரு படலம், நாலடி நானூறு" என்று மயிலைநாதர் உரையில் வரும் நாலடி நானூறும் மேற்குறித்த நாலடி நானூற்று வண்ணமும் ஒரே நூலாகும் என்று முடிபு செய்தற்குப் பிள்ளை அவர்கள் ஒரு காரணமும் காட்டினாரல்லர். நக்கீரர் நாலடி நானூற்று வண்ணமும் நாலடி நானூறும் வெவ்வேறாகக் கருதற்கு உரியன

என்பதை இவற்றின் பெயர் வேற்றுமையே புலப்படுத்துதல் காண்க. அன்றியும், இவ்விரு நூல்களில் ஒன்றினின்றும் பிறி தொன்றை வேறுபடுத்துக் காட்டவே முன்னதை ஆசிரியர் பெயருடன் சார்த்திப் பேசினராதல் வேண்டும். முன்னதைக் கொண்டேயும் பின்னதை ஆசிரியர் பெயருடன் புணர்த்தும் வழங்குதல் ஆகாதோவென்னில் ஆற்றன்று : அந் நாலடி நானூற் றின் ஆசிரியர் பலராகலானும், அவர்தம் பெயர் அறியுமாறின்மை யானும்; "சில முனிவர் இருந்து தெரிந்துரைத்த, நாலடி நானூறு" என்று உரையாசிரியர் தருமர் உரைத்தமையானும்; நாலடி உரையாசிரியருள் ஒருவரேனும் நக்கீரர் நாலடியைப் பாடியதாகப் பகராமையானும்; இந்நூல் பலராற் பாடப்பெற்ற பாக்களை உடையது என்னும் வழக்கு வலியுடைத்தாகலானும் நற்றிணை நானூறு என்பதுபோல நாலடி நானூறும் தொகை நூல் என்க. அல்லதூஉம், நாலடியாசிரியர் ஒருவராயின் முன் னுக்குப்பின் முரண்தரும் கருத்துக்களும், கூறியது கூறலும், யாப்புக்கொளக் கூறலும், தன்னை ஒருபொருள் கருதிக் கூறலும் இன்னோரன்ன பிழைகள் நிகழ்தற்கு இடமில்லை. ஆயின், நாலடியில் முரண்களும், கூறியது கூறல் முதலிய வழுக்களும் நிரம்ப உள்ளன. காட்டாகச் சில நோக்குவோம்.

1. நட்பியலில், "நட்பாராய்தல்" என்னும் அதிகாரத்தில்,

'கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மைஎஞ் ஞான்றும்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்(கு)
எதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ என்றும்
மதுரமிலாளர் தொடர்பு." (நாலடி. உ௧௧)

என்று வரும் வெண்பாவும்; அரசியலில், "கல்வி" என்னும் அதிகாரததில்,

"கனைகடல் தண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரில்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
ஈரமிலாளர் தொடர்பு." (நாலடி. ௧௩௮)

என்று வரும் வெண்பாவும் சொல்லாட்சி, பொருட்சிறப்பு, உவமை—இனையவற்றால் பெரிதும் ஒத்தியங்குதல் உன்னற் பாலது. நல்ல புலமை வாய்ந்த புலவர் இப்படி இருவேறு வெண்பாக்களில் ஒரே கருத்தினைச் சொல் மாற்றம் பொருள் மாற்றம் இன்றிப் புகலுதல் கூடுமா? இவ்விரு வெண்பாவும் ஒருவர் எழுதுகோலினின்றும் உதிர்ந்தவையல்ல. ஒன்றைப் பார்த்து ஒன்று எழுந்ததாகவே தெரிகிறது. இவற்றுள் ஒன்றை "வெள்ளிப் பாட்'லாக மதிக்கலாம்.

2. அரசியலில் "குடிப் பிறப்பு" என்னும் அதிகாரத்தில்,

"ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம்—திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்."  (நாலடி. கசஅ)

என வரும் வெண்பா வேறு "அவதாரம்" எடுத்தலைக் கீழே காண்க:

"அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
மறுவாற்றும் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்."  (நாலடி. கடுக)

இப் பாடல் அரசியலில் "மேன்மக்கள்" என்னும் அதிகாரத்தில் சேர்க்கப்பெற்றுள்ளது.

3. நாலடியார் கூ௲எ ஆம் பாடல் :

"தவலரும் தொல்கேள்வித் தன்மை உடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட் குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்
தும்பர் உறைவார் பதி."

நாலடியார் உகூகூ ஆம் பாடல் :

"நுண்ணுணர்வி னாரோடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே ஒக்கும் விழைவிற்றால்—நுண்ணூல்
உணர்விலர் ஆகிய ஊதியம் இல்லார்ப்
புணர்தல் நிரயத்துள் ஒன்று."

இவ்விரு வெண்பாக்களில் எது 'அசல்', எது 'நகல்' என்பது எப்படிக் கூற இயலும்!

இக்காலத்தில் வெண்பா எழுதும் போட்டிக்கு ஈற்றடி தந்து எழுதினால் பாக்கள் எங்ஙனம் அமைகின்றனவோ அப்படியே சில வெண்பாக்கள் நாலடியாரில் உள்ளன.

நாலடி கசஎ ஆம் பாடல் :

"செய்கை அழிந்து சிதல்மண்டிற் றாயினும்
பெய்யா ஒருசிறை பேரில் உடைத்தாகும்
எவ்வம் உழந்தக் கடைத்தும் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை."

நாலடி ௧௫௩ ஆம் பாடல் :

" நரம்பெழுந்து நல்கூர்ந்தார் ஆயினும் சான்றோர்
குரம்பெழுந்து குற்றம்கொண் டேறார்—உரங்கவறு
உள்ளமெனும் நாரினாற் கட்டி உளவரையாற்
செய்வர் செயற்பா லவை."

நாலடி ௧௮௫ ஆம் பாடல்.

" உறுபுனல் தந்துல கூட்டி அறமிடத்தும்
கல்லூற் றுழியூறும் ஆறேபோல்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை."

இம்மூன்று பாக்களும் மூவேறு அதிகாரங்களில் காணப்பெறு கின்றன. இவற்றை ஒரு புலவர் பாடுதல் கூடாது

இனி, 'மாறுகொளக் கூறல்' என்னும் வழுவுண்மைக்கு ஒரு சான்று பகரலாம். "பெரியாரைப் பிழையாமை" என்னும் அதிகாரத்தில்,

" தெரியத் தெரியும் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர்நோய் செய்யும்—பெரிய
உலவா இருங்கழிச் சேர்ப்ப ! யார் மாட்டும்
கலவாமை கோடி உறும்."

என்ற பாடலும் ; "அறிவுடைமை" என்னும் அதிகாரத்தில்,

" உணர உணரும் உணர்வுடை யாரைப்
புணரிற் புணருமாம் இன்பம்—புணரின்
தெரியத் தெரியும் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமாம் நோய்."

என்ற பாடலும் மாறுபட்டு மயங்குதல் காணலாம்.

எனவே, இதுகாறும் எழுதியவாற்றால் நாலடிப் பாக்கள் ஒருவரால் பாடப்பெற்றிருத்தல் ஒவ்வாது என்பதும் ; பலகாலத் துப் பல புலவரால் பாடப்பெற்றிருத்தல் வேண்டும் என்பதும் உணரலாம். பழைய வெண்பா ஒன்றில்,

" ஞாலத் துழிதரு நற்பாட்டே கொண்டடக்கி
நாலடி நானூ றெனப்பெயரால்—வாலிதின்
ஈட்டித் தொகுத்தான் இசைசால் பதுமனே
கூட்டமைந்த மூன்றுபால் கொண்டு."

என்று காணப்பெறுதலான், தனிப் பாடல்களாகத் திகழ்ந்த நானூறு பாடல்களைப் பால், இயல், அதிகாரம் என்று பகுப்பு முறை செய்து பதுமனார் தொகுத்தார் என்பது அறியப்படும்.

ஆகலான், நாலடியாரை நக்கீரர் பாடினர் என்பது ஒரு சிறிதும் பொருந்தாத போலியுரையாதல் தெள்ளிதாம். நம் கைக்கு அகப்படாத நூல் வரிசையில் "நக்கீரர் நாலடி நானூற்று வண்ணத்தை"யும் சேர்த்துக்கொள்ளுதல் நல்லதாம்.

இனி, இலக்கண நக்கீரர் கி.பி.7 ஆம் நூற்றாண்டினர் என்று பிள்ளை அவர்கள் எழுதியுள்ளனர். யாப்பருங்கலக்காரிகை உரைகாரர்,

> "ஐஞ்சீர் அடுக்கலும் மண்டில மாக்கலும்
> வெண்பா யாப்பிற்கு உரிய வல்ல."

என்னும் சூத்திரத்தை நத்தத்தனார் அடி நூலில் எடுத்தோதினர் என்று இயம்புகின்றார். ஆயின், இச் சூத்திரமே யாப்பருங்கல விருத்தியில் நக்கீரரால் யாக்கப்பெற்றது என்று கூறப்பெறும். இச் சூத்திரம் எழுதியவர் நக்கீரரே; நத்தத்தனார் என்றல் இடையில் தோன்றிய வழு என்பதற்கு மேற்கோளாக,

> "சேரும் நேரடிப் பாவிலஞ் சீரடி
> எரும் வெள்ளையல் லாவழி என்பது
> சோர்வி லாததொல் காப்பியத்து நக்
> கீரனார் அடிநூல் உள்ளும் கேட்பவே."

என்னும் கலிவிருத்தத்தைக் காட்டிப் பிள்ளை அவர்கள் பேசுதல் உறுதி நிறைந்த கருத்தாகும். ஆயின், ஒரு சான்றும் உரைக்காமல் "அடிநூல்" கி. பி. ௬௫0 இல் எழுந்தது என்னும் வெற்றாகம் பற்றுக்கோடின்றிப் பாடுபெறுகிறது! மேற்காட்டிய மேற்கோளில் தொல்காப்பியர்க்கு அடுத்து நக்கீரனாரைக் குறித்துள்ளமையான் இவரைக் கடைச்சங்ககால நக்கீரர் என்று கருதலாம். கிடைத்துள்ள ஒரு சூத்திரத்தைக் கொண்டு காரணம் கூறாமல் அடிநூல் ஆசிரியர் கி. பி. 7 ஆம் நூற்றாண்டினர் என்று முடிபு கூறுதல் ஒவ்வாது. கடைச்சங்காலப் புலவர் காக்கைபாடினியார் யாத்த சூத்திரங்கள் உரைகாரரால் மேற்கோள் காட்டப்பெறலான், அவராற் காட்டப்பெறும் நக்கீரர்தம் அடிநூலும் கடைச்சங்க காலத்தைச் சார்ந்ததாகல் வேண்டும்.

எனவே, இதுகாறும் எழுதியவாற்றால் பிள்ளையவர்கள் கருதுமாறு கி. பி. 7 ஆம் நூற்றாண்டில் நக்கீரர் ஒருவர் விளங்கினரல்லர் என்பதும்; களவியலுரை, அடிநூல் எழுதியவர் சங்க காலத்தவர் என்பதும்; நாலடியார்க்கும் நக்கீரர்க்கும் தொடர்பில்லை என்பதும் பிறவும் போதரும்.

5காற்றுப்படை நீங்கிய 11 ஆம் திருமுறையில் ஒன்பது பிரபந்தங்களையும் நக்கீரதேவ நாயனர் பாடினரென்

றும், அவர் காலம் கி. பி. 850 என்றும் பிள்ளை அவர்கள் எழுதி யுள்ளார். கண்ணப்பரைத் திருவாசகத்தில் குறிக்கும் மாணிக்க வாசகர் கி. பி. 9 ஆம் நூற்றாண்டினர் எனக் கருதிக்கொண்டு, "திருக்கண்ணப்ப தேவர் திருமறம்" பாடிய காரணத்தால் நக்கீரதேவ நாயனாரும் அக்காலத்தவரே என்று அறிவிக்கின்றார். கண்ணப்பரைப் பற்றி இவ்விருவரும் பாடியிருத்தலை மாத்திரம் துணைகொண்டு கால ஆராய்ச்சி புரிதல் சிலமன்று. கி. பி. 7 ஆம் நூற்றாண்டினராய காழியூர்ப் பிள்ளை,

> "வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம்
> காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே."
>
> "கண்ணப்பற் கருள்செய்த கயிலை எங்கள்
> அண்ணலா ரூராதி யானைக் காவே."

என்றும்; திருநாவுக்கரசர்,

> "கண்ணப்பன் கண்ணப்பக் கண்டுகந்தார்."
>
> "கண்ணப்பர்க் கருள்செய்த காளை கண்டாய்."

என்றும்; கி. பி. 8 ஆம் நூற்றாண்டினராகிய நம்பியாரூரர்,

> "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்."
>
> "கண்ணப்பன் கணம் புல்லன் என்றிவர்கள்,
> குற்றம் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை."

என்றும் கண்ணப்பரின் பெருமையினைப் புகழ்ந்து பரவுகின்ற னர். கல்லாடரும் "திருக்கண்ணப்ப தேவர் திருமறம்" என் றொரு பாடலில் பரசுகின்றார். பிற்காலத்துப் பிறங்கிய பட்டி னத்துப் பிள்ளையும்,

> "......... ......... தொண்டு செய்து
> நாளாறிற் கண்ணிடந் தப்பவல் லேனலன் நானினிச்சென்
> றாளாவ தெப்படியோ திருக்காளத்தி அப்பருக்கே."

என்று இயம்புகின்றார். எனவே, மாணிக்கவாசகர் ஒருவர்தாம் கண்ணப்பரைப் பாடியுள்ளார் என்று கொண்டு நக்கீரதேவ நாயனார் அடிகள் காலத்தவர் என்றல் யாண்டுப் பொருந்தும்? நாயனாரின் கால ஆராய்ச்சிக்குக் கண்ணப்பர் வரலாறு மாத்திரம் உதவாது. நாயனார் தம் ஒன்பது பிரபந்தங்களிலும் குறிக்கும் அடியார்கள் அனைவரின் வரலாறுகளையும் உன்னிப்பாக உற்று நோக்குதல் வேண்டும். நாயனார் சமய குரவராய சம்பந்தரைப் பற்றியாதல், சொற்கோவைப் பற்றியாதல், சுந்தரரைப் பற்றி யாதல் ஓரிடத்தும் பாடினாரல்லர்; மூவர்க்கும் முற்பட்ட சண்டி, கண்ணப்பர், சாக்கியர், கோச்செங்கணார்—இவரையே குறித் துள்ளார் :

"மானுடன் ஆகிய சண்டியை
வானவன் ஆக்கியும்."　　(கோயப் : ௧0-௧௧.)

"கண்ணப்ப ராவார் கதை."　　(கயிலைபாதி. ௧௧௨-௪.)

"கற்கொண் டெறிந்த சாக்கியன் அன்பு
தற்கொண் டின்னருள் தான்மிக வளித்தும்." (கோயப்: ௧எ-௧அ.)

"சீர்மிகு சிலந்திக்கு இன்னர சளித்தும்."　　( ,, : ௩அ. )

என வரும் பகுதிகள் காண்க.

இனி, முருகனைப் பற்றி ஒரு சில இடங்களில் உரைக்கும் நாயனார் மூத்தபிள்ளையாரைப் பற்றி ஓரிடத்தேனும் உரைத்தாரல்லர். கி. பி. 600-க்குப் பின்னரே விநாயகர் வழிபாடு தமிழகத்தில் நிலவிற்று என்பது ஆராய்ச்சியறிஞரின் முடிந்த கருத்தாகும். எனவே, நக்கீரதேவ நாயனார் மூவர்க்கும் முற்பட்டு வாழ்ந்தவர் என்பதும்; கூடக்குறைய கி. பி. 6 ஆம் நூற்றாண்டினராகக் கருதலாம் என்பதும் வெள்ளிடைமலையென விளங்கக் காணலாம்.

நக்கீரர் நால்வர் என்று நவின்ற பிள்ளை அவர்கள் தமது *"நெடுநல் வாடையும் நக்கீரரும்" என்ற கட்டுரையில், "இனி, நக்கீரரைப் பற்றிச் சிறிது கூறி எனது ஆராய்ச்சியை முடிக்கிறேன்......இவரியற்றிய நூல்கள் முருகாற்றுப்படையும், நெடுநல்வாடையும், பதினோராம் திருமுறையில் சில பிரபந்தங்களுமாம்" என்று சாற்றுகின்றார். பிள்ளை அவர்கள் ஓரிடத்திற் கூறிய கருத்திற்கும் பிறண்டு வரையும் கருத்திற்கும் வரைக்கும் தரைக்கும் இடையுள்ள வேற்றுமையிருத்தல் தேற்றமாம்.

இனி, இதுகாறும் இயம்பியவாற்றான் பிள்ளை அவர்கள் கூறும் ஒவ்வொரு கருத்தும் செவ்வையற்றது என்பதும்; நக்கீரர் என்ற பெயருடன் இருவரே வாழ்ந்தனர் என்பதும் தெளிவுறப் பிறங்குதல் உணரலாம். அவர் காலம், நூல்கள் இனையவற்றை இங்ஙனம் பகுத்துக்காட்டலாம் :

| நக்கீரர் | நூல்கள் | காலம் |
|---|---|---|
| 1. சங்ககால நக்கீரர் | தொகைநூற் பாக்கள், நெடுநல் வாடை, அடிநூல், களவியல் உரை, திருமுருகாற்றுப்படை | கி.பி. 120-200 |
| 2. நக்கீரதேவ நாயனார் | 11 ஆம் திருமுறையில் ஒன்பது நூல்கள் | கி.பி. 480-550 |

* "இலக்கிய தீபம்" பக்கம் ௬௫.

திரு. செல்லூர்கிழார் செ. ரெ. இராமசாமி பிள்ளையவர்கள்
மறைவு குறித்த

# இரங்கற்பாக்கள்

செல்லூர்க்கி ழார்என்னும் செழும்பேர் பூண்ட
செ.ரெ. இ ராமசாமி பிள்ளை என்னும்
தொல்நூலுக் குரைசெய்த தொண்டர் நம்தம்
தூயதமிழ்த் தாத்தாவிற் கிரங்கல் சொல்வோம்!
நல்லூழால் நல்நூல்கள் பலவுங் கற்று
நமதுசைவ நூற்பதிப்புக் கழகந் தன்னில்
வல்லவராய் அடியார்க்கு நல்லா ரொத்து
வளவுரையால் பன்னூல்க ளோங்கச் செய்தீர்!
நன்னூலின் முன்னுரையும் காஞ்சிப் புராண
நயவுரையும் திருப்பூவண நாதர் நூலும்
பொன்றாத பெரும்புகழைக் கொடுக்கத் தாங்கள்
போதுமெனச் சென்றீரோ! புலவர் ஏறே!
அன்றிறந்த வாக்கையாருக் கழுத கண்ணீர்
அவ்வழியே தங்களுக்கும் வெள்ள மொத்து
நன்கறிந்த தமிழ்க்கண்கள் கொட்டி வாட
நற்புலவீர்! சென்றுவிட்டீர்! வருந்துமாறே!
நாவலரும் சதாசிவபண் டாரத்தாரும்
இராகவவை யங்காருஞ் சென்றாற் போல
பாவலரே! பைந்தமிழ்நூற் செல்வர் சென்றீர்!
பண்டிதரும் தொண்டர்களும் ஏங்கி நிற்க
தேவர்களாய் அறனறிந்த மூத்தோர் எல்லாம்
தென்தமிழை விட்டுவிட்டுப் போகல் நன்றோ!
சாவென்று மணுகாத நூல்கள் வாழும்
சக்திதரு நல்லூற்றே வற்றல் நன்றோ!

பசும்பொன் இளையோன்.

நல்லதமிழ்ச் செய்யுள்கட் குரைசெய்தே
நன்மக்கள் ஆய்ந்தவற்றை இன்புற்றே
பல்லோரும் உன்னியவை உணர்ந்திடவே
பசுந்தமிழில் ஆற்றியநல் லுரைவல்லோன்
"செல்லூர்க்கி ழார்" இறைதாள் சேர்ந்ததனுல்
செந்தமிழில் நல்லுரைதான் இனியேதாம்
அல்லலின்றி அன்னார்தம் ஆவியேதான்
அமைதியுற இறைவனையே பணிகுவேனே!

வெண்பாவூர். பெ. திருஞானம்.

# திருக்கோளிலிக் கல்வெட்டுக்கள்

[வித்துவான். திரு. வை. சுந்தரேச வாண்டையார்]
(துணைக்கல்வெட்டு ஆராய்ச்சியாளர், அண்ணமலைப் பல்கலைக் கழகம்.)

திருக்கோளிலி என்பது சோழநாட்டுத் தேவாரம் பெற்ற தலங்களுள் ஒன்றாகும். இது தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமானது. இதுபொழுது அவ்வாதீனத்தில் இருபத்தைந்தாம் பட்டத்தில் எழுந்தருளி அருளாட்சி நடத்தியருளும் அருங்கலை விநோதரும் பெருங் கொடை வள்ளலுமாகிய ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் கட்டளையிட்டருளியபடி, அடியேன் இக் கோயில் கல்வெட்டுக்கள் அனைத்தையும் 23—2—1947 முதல் 25—2—1947 முடிய மூன்று நாட்கள் தங்கிப் படித்து எழுதினேன். ஆதீனத்திற்கு ஒரு கையெழுத்துப் பிரதியை அனுப்பி விட்டு அக் கல்வெட்டுக்களின் சுருக்கத்தை ‘செந்தமிழில்’ வெளியிட்டுள்ளேன். இக்கோயில் கல்வெட்டுக்கள் இதுகாறும் கல்வெட்டுத்துறையாளரால் வெளியிடப் பெறவில்லை. யான் எழுதி வந்த கல்வெட்டுக்களின் மூலங்கள் (The Texts) இரண்டினை ஆராய்ச்சி உலகிற்குப் பெரிதும் பயன்படுமென்று எண்ணி வெளியிடுகின்றேன்.

இங்குக் கொடுக்கப்பெற்றுள்ள இரு கல்வெட்டுக்களில், கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தர பாண்டிய தேவர் கல்வெட்டு மூவர் முதலிகளின் திருப்பாடல் களுக்குத் தேவாரம் என்னும் பெயருண்மையும், திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ ராஜ ராஜ தேவரின் கல்வெட்டு சிவன்படவர் என்பதே செம்படவர் என்று இக்காலம் வழங்கப் பெறுகிறதென் பதையும் புலப்படுத்துவனவாகும்.

இடம்: மகாமண்டபத்தின் தென்புறம்

அரசன்: கோச்சடைய பன்மர் திரிபுவனச் சக்கர வர்த்திகள், சுந்தரபாண்டிய தேவர்.

வரி

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடைய பன்மர் திரிபுவனச் சக்காவர்த்திகள்
2. சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு கஉ (12) வது எதிராமாண்டு
3. ஆடிமாதத்து இருபதாந் திய்தி நாள் உடையார் திருக்கோளி
4. லிஉடையார் கோயில் ஆதி சண்டேஸ்வர தேவர் கன்மிகளோ

5. ம் வியாபாரிகளில் மாங்குடையான் பிச்சன் கணபதி ஆண்டார்

6. இசைவ நீட்டுக் குடுத்த பரிசாவது. இந்நாள் முதல் திங்கள் திருநாள்

7. திருவாதிரை தொறும் இவர்க்கு நன்றாக பெருமாளும் நாச்சியா

8. ரும் சிறப்பமுது செய்தருளி திருவுலா செய்தருளவும் ஆளுடை

9. ய பிள்ளையார் திருஞான அமுது செய்தருள திருவுலாச் செய்தருள தேவாரம் செ

10. ய் தருளவும் கடவதாக இந்நாயனார் திருநாமத்துக் காணி இடை யிலியில் விலை

11. கொண்டு இட்ட கிழை வேலிக் கண்டத்து நிலம் கல்வி இந்நிலம் ஒன்றே மூன்

12. றுமாவும் உள்ள முதல் கொண்டு சந்திராதித் தவரையும் இப்படி கள்ளே திருவுலாச்

13. செய்தருளக் கடவதாக சம்மதித்தோம், இந்நிலம் ஒன்றே மூன்று மாவுக்கும் பண்

14. டாரத்து இற்றை நாளில் ஒடுக்கின பணம் ௨௬௦ (260) இப்பணம் இருநூற்று அறுப

15. துக்கும் இந்நிலம் ஒன்றே மூன்று மாவுங் கொண்டு சந்திராதித்த வரையும்

16. இப்படித் திருவுலாச் செய்தருளப் பண்ணக் கடவதாகச் சம்மதித் தோம் மாங்குடி

17. யான் பிச்சன் கணபதி ஆண்டார்க்கு ஆதி சண்டேஸ்வர தேவர் கன்மிகளோம்.

18. இப்படிக்கு உடையார் திருக்கோளிலி உடையார் கோயில் கணக்கு பட்டின முடையா

19. ன் கணக்கு துறையாண்டான் திருவகம்படிப் பிரியன் எழுத்து. இப்படி அறிவேன்

20. மாங்களூர்ச் சாரம்பட்டனேன் இப்படி இவை கோளிலிப் பெருங் கோயில்

21. உடையார் லக ஞானமைக்கு இவை சாரம் பட்டனேன் இப்படிக் கிவை தேவ

22. கன்மி என்னையாளுடையான் பழந்தி யாரப் பிர்மராயன் எழுத்து. இப்படிக்கி

23. வை உடையார் திருக்கோழிலி உடையார் கோயில் அகாரணக் கண் காணி

24. செல்வம் பிள்ளை ... தன்மதேவர் எழுத்து. இப்படிக்கிவை கோயில் கணக்

25. கு பட்டின முடையான் உதவினன் திருவாரமீஸ் வரமுடையான் எழுத்து.

II

வரி

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்திகள்
2. ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு ச (4)
3. வது மார்கழி மாதத் தொருநாள் உ
4. டையார் திருக்கோளிலி உடை
5. யார் கோவிலில் முன்னுளில் சிவன்
6. படவரில் ஆலன் எழுந்த ருளுவித்த
7. அதிபத்தநாயனுந்த திருப்படிமா
8. ற்றுக்கு இவன் தன் சாதியார் பக்க
9. ல் இரந்து பெற்ற காசாய் கலேயி
10. ல் காவசேரி ஐய்யன்னேய் பட்டன்
11. மகன் தாமோதரப் பட்டன்பக்கல் ெ
12. நல் பொலிசைக்கு குடுத்த காசாய்
13. இவன் ஒடுக்கின காசு இரண்டாயிரத்து நூறு. இக்கா
14. சு இரண்டாயிரத் தொரு நூறும் ை
15. கக் கொண்டு திருப்படி மாற்றுக்
16. கு நாள் ஒன்றுக்கு இரு நாழி அரிசி
17. அமுதுபடிக்கு அளிப்போமாகவு
18. ம் நாங்கள் இப்படி செய்வோ
19. மாகவு ஸம்மதித்தோம்.

## அமைதி எய்துக!

[நாஞ்சில், கா. கணபதி.]

பண்டைப் புலமை பழுத்த பதியாம்
செல்லூ ரதற்குச் செம்மைக் கிழாராய்த்
தோன்றிய ஆன்ற செந்நாப் புலவ!
செ. ரெ. இராம சாமியே இன்றோ
இவ்வுல ககன்று அவ்வுல கடைந்தனை
அவ்வுல கதனில் அமைதி எய்துக!

---

# உணர்க அன்னோர்!

[வித்துவான். திரு. சே. சிங்காரவேலனார்.]
(தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்.)

அறங்கண்ட துறைபலவும் அமைத்துக் காத்தே
ஆருயிருந் தம்முயிராய் அன்பு பேணித்
திறங்கண்ட நம்முன்னோர் வாழ்ந்த நாடு;
தெளிவுடைய சீலத்தால் பண்பு தன்னால்
மறங்கண்ட திருநாடு; மானங் காக்க
மன்னுயிரை முன்னிழக்கும் மறவர் கூட்டம்
விறல்கண்ட தொன்னாடு; வீர ஈரம்
விரிந்திடுமிந் தியநாடாம் நமது நாடே. (க)

தோளியயம் போலவெளில் உள்ளந் தானே
துகளறுநற் கங்கையெனப் பொன்னி யென்ன
வாளிதெனுந் தின்காட்சி வாய்ந்த நம்பால்
வடக்கரணும் இமயமெனு மன்னன் தன்னை
நாளிதெனப் பிறர்புகுந்து நலிய வந்தால்
நாமுறங்கிக் கிடப்பேமோ? எழுந்தி டேமோ?
கோளிதெனக் குமுறியெழும் புலியே போலக்
குருடரினஞ் சாயவெழுந் தார்த்தி டேமோ? (உ)

நம்மலையில் நம்மெல்லைக் கோட்டைத் தாண்டி
நட்பினராய்ப் புறங்காட்டிச் சீன வீரர்
தம்மதெனக் குதித்தாரென் றுரைக்கக் கேட்பேம்;
தமிழ்மறவர் குழுவெந்நாள் தளர்ந்து நிற்கும்?
செம்மைநெறி மாறியவர் எவரா மேனும்
செப்பனிடத் தயங்கார்செந் தமிழ ரன்றோ?
கொம்மையுடைப் படைபுரண்டே ஆர்த்த தேனும்
குலைப்பதுண்டோ அறந்தன்னைக்? கூறீர், சான்றீர்! (௩)

கூறிவந்த ஐம்பெருஞ்சீ லங்கள் எங்கே?
குலவிநின்ற நட்புரிமைத் திறமும் எங்கே?
மீறிவந்த செஞ்சீனர் செயலும் எங்கே?
மேலெழுந்தே அறமாறிக் கிளர்ந்த தெங்கே?
நேரிதன்று மெனப்பெரியோர் முழங்கக் கேட்டும்
நில்லாரேல், தென்னகமும் வடபால் நாடும்
சீறிவரும் என்றமொழி நம்ம தன்று;
செந்தமிழாஞ் செல்விமொழி; உணர்க அன்னோர்! (ச)

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) பழனியில் கீழ்த்திசைக் கலைக் கல்லூரி

தமிழ் சமக்கிருதம் முதலிய மொழிகளைப் பயிற்றுவிக்கவும், சமயக் கருத்துக்களைப் பரப்பவும் பழனிப்பதியில் கீழ்த்திசைக் கலைக்கல்லூரி ஒன்று நிறுவப்படும். இஃது அடுத்த ஆண்டு கல்லூரித் துவக்கக் காலத்திலிருந்து செயல்படும். 15 ஏக்கர் நிலம் இதற்கென வாங்கப்பட்டுள்ளது. இக்கல்வி நிலையம் பழனி அறநிலையப் பாதுகாப்பு நிலையம், பிற தென் மாவட்ட அறநிலையப் பாதுகாப்பு நிலையம் ஆகியவற்றின் அதிகப்படி வருவாயினின்றும் நடத்தப்படும். தேவாரம், திருவாசகம், பிரபந்தங்கள், புராணங்கள் முதலியனவும், ஓவியம், இசை முதலிய கலைகளும் இங்குப் பயிற்றுவிக்கப்படும். பழனி அறநிலையப் பாதுகாப்பாளர்களின் வேண்டுகோளின்படி சென்னைப் பல்கலைக் கழகத்தார் பி. ஏ. வகுப்பு ஒன்றை இக் கலைக்கல்லூரியில் நிறுவுவதெனவும் முடிவு செய்துள்ளனர்.

குறிப்பு: நாடு நலம்பெறக் கல்லூரிகள் பலதேவை. அதற்கு அறநிலையங்களின் பொருள் பயன்படுத்தப்படுவது மிக மிக பொருத்தமுடைத்தாகும். பழனி அறநிலையப் பாதுகாப்பாளரின் முயற்சியைப் பாராட்டுகிறோம்.

(உ) காஞ்சி நகராட்சி மண்டபத்தில் திருக்குறள்

அண்மையில் நடைபெற்ற காஞ்சி நகராட்சி மன்றக் கூட்டமொன்றில், நகர மண்டபத்தில் திருக்குறள் பாக்களை 'எனமல் போர்டு'களில் எழுதி அமைப்பதெனவும், அதற்கு ரூ. 150 செலவு செய்வதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

குறிப்பு: குறள் நெறி பரவ இது நல்லமுறை. இதனை மற்ற நகராட்சி மன்றங்களும் பின்பற்றுக.

(ங) ஹரப்பா நாகரிகச் சின்னங்கள் கண்டு பிடிப்பு

ஆமதாபாத் நகருக்கு 48 கல் தொலைவிலுள்ள லொதால் என்னுமிடத்தில், அண்மையில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள் செய்த ஆராய்ச்சியின் விளைவாக முன்னர் ஹரப்பா, மொகஞ்சதாரோ என்னுமிடங்களில் கண்டு பிடிக்கப்பட்டது போன்ற பண்டை நாகரிகச் சின்னங்கள் பல கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து நாலு தெருக்களும், குளியல் அறை முதலிய வசதிகளுடன் கூடிய பழைய வீடுகளும், நிலத்தின் ஊடே செல்லும் சாக்கடை அமைப்புக்களும், கப்பற் றுறைமுகம் ஒன்றும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அங்கு வாழ்ந்திருந்த அப் பண்டை மக்கள் கதிரவனை வணங்கி வந்ததாகவும் தெரிகிறது.

குறிப்பு: இம்மாதிரி ஆராய்ச்சிகள் மூலம் பல வரலாற்றுண்மைகள் அறியக்கிடசகுமாதலால், அரசியலாரின் இம்முயற்சியைப் பாராட்டுவதோடு, தமிழ்நாட்டில் காவிரிப்பூம்பட்டினம் கொற்கை போன்ற இடங்களையும் அகழ்ந்து பார்த்தால் பல வரலாற்றுண்மைகளை அறியக் கூடும் எனவும், இதனைத் தமிழக அரசின் புதைபொருளாராய்ச்சியாளர் சிந்தித்துப் பார்க்கவேண்டுமெனவும் கூறுகிறோம்.

(ச) கல்லூரிகளில் தமிழ்

"தமிழ்மொழி நல்ல முறையில் வளர்வதற்கான திட்டங்களை வகுக்கத் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சிக் குழுவினை ஏற்படுத்தியுள்ளோம். கோயம்புத்தூரிலுள்ள அரசினர் கலைக்கல்லூரியில் அடுத்த ஆண்டி லிருந்து பி. ஏ. வகுப்பில் தமிழ்மொழி மூலம் பாடங்கள் கற்பிக்கத் திட்டமிட்டிருக்கிறோம். 1963—64 இலிருந்து எல்லாக் கல்லூரிகளிலும் பி. ஏ. வகுப்பில் தமிழில் கற்பிக்கும் முறையைத் துவங்கி நடத்த முடிவு செய்திருக்கிறோம்" என்று தமிழ நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் கடந்த 10-3-60 இல் சட்ட மன்றத்தில், 1960—61 வரவு செலவுத் திட்டம் வெளியிட்டுப் பேசியகாலை குறிப்பிட்டார்.

குறிப்பு: தமிழின் ஆக்கத்திற்கு ஊக்கமளிக்கும் திட்டத்தைத் தெரிவித்திருக்கும் அமைச்சரவர்களைப் பாராட்டுகிறோம்.

(ரு) மனிதனின் தோற்றமும் வளர்ச்சியும்

ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த உயிர் நூல் புலவரான சர். அலிஸ்டர் ஹார்டி என்னும் 64 வயதுடைய பேராசியர், மனிதனின் தோற்றம் பற்றிய ஒரு புதிய தத்துவத்தைக் கூறுகிறார்.

அவர் இங்கிலாந்தில் பிரைட்டன் என்னுமிடத்தில் நடைபெற்ற கடல் பற்றிய அறிவியலாராய்ச்சியாளர் கூடிய மாநாட்டில் பேசிய காலை, "மனிதன் ஒரு காலத்தில் கடல்வாழ் மனிதக் குரங்கினத்தைச் சேர்ந்தவனாக இருந்தான். இற்றைநாள் காணப்படும் மனிதக் குரங்கின் உடலமைப்பையும் மனிதனின் உடலமைப்பையும் ஒப்பிட்டுக் காணுங்கால் இவ்வுண்மை தெரியும். இவ்வுண்மையினைக் கண்டறிய நான் 30 ஆண்டுக்காலம் ஆராய்ச்சி செய்தேன். இம்மனிதக் குரங்கினம் காடுகளில் வசித்தபோது, அங்கு விலங்கினங்களுக்கிடையே ஏற்பட்ட உணவுப் போராட்டத்தின் விளைவாக இவை கடல்களை நாடிச்சென்றன. அக் கடல் வாழ்வில் அவை பல ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தன. அங்கே அவை வாழுதற்கேற்ப உடலமைப்புக்கள் மாறின. அவை நிமிர்ந்து நிற்க ஆரம்பித்தது அங்கேதான். நீந்துதற்கு ஏற்ப நீண்ட கால்களும் கைகளும் அமையப்பெற்றதும் அங்கேதான். இங்ஙனம் காட்டிலிருந்து மனிதக்குரங்கு கடலுக்கு விரட்டப்பட்ட காலம் பத்து லட்சம் ஆண்டுகட்கு முன்பாகும். பின்னர் அவை வளர்ச்சியில் மாறுதலுற்று ஐந்து லட்சம் ஆண்டுகட்குமுன் மனித உருவோடு வெளிப் போந்தன" என்று கூறினர்.

(சு) திரு. நாசருக்குத் திருக்குறள் பரிசு

அரபு நாடுகளின் இணைந்த குடியரசுத் தலைவரான நாசர் கடந்த 5-4-60 பிற்பகல் சென்னைக்கு வருகை தந்தார். சென்னை ஆளுநர் திரு. விட்ணுராம் மேதியவர்களும், முதலமைச்சர் திரு. காமராசரும் அவரை வரவேற்றனர். பின்னர் நகரமக்களின் சார்பில் சென்னை நகராண்மைக் கழகத்தினரும் திரு. நாசரை வரவேற்று மகிழ்ந்தனர். நடிகர் திரு. சிவாசி கணேசன் திரு. நாசரவர்களுக்குக் கழக வெளியீடாகிய ஆங்கிலத்தில் போப்பையர் மொழிபெயர்த்த திருக்குறள் பதிப்பொன்றை, அழகிய வெள்ளிப்பேழையில் வைத்துப் பரிசாக வழங்கினர். நாசர் தமிழக மாந்தருக்குத் தம் மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்தார்.

# மதிப்புரை

## ஞானவாழ்க்கை அல்லது திருமூலர் உண்மைகள் :

ஆக்கியோர் : ஆசிரியர் 'இளவழகனார்.' வெளியிடுவோர்: சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தார். விலை ரூபா 1 00. செம்பொருட்டுணிவினைச் செந்தமிழாற்கிளர்ந்தெடுத்தோதும் நெறி செந்நெறியெனப்படும். இதுவே திருநெறி, சிவநெறி, ஒளிநெறி, நன்னெறி, பெருநெறி, பொதுநெறி எனவும் அழைக்கப்படும். இந்நெறியினை விளக்கும் திருவருள் நூலிருவகையாகும். ஒன்று, புகழ்நூல்; மற்றொன்று பொருள்நூல். புகழ் நூலைத் தோத்திரமெனவும், பொருள் நூலைச் சாத்திரமெனவுங் கூறுப. புகழ்நூலைத் 'திருமாமறை' எனவும், பொருள் நூலைத் 'திருமாமுறை' எனவுங் கூறுப. திருமாமறையினைத் திருமுறை எனவும், திருமாமுறையினை மெய்கண்ட நூல்கள் எனவும் வழங்குப. திருமுறைகள் பன்னிரண்டு. மெய்கண்ட நூல்கள் பதினான்கு. வான்முறையான் நோக்குவார்க்கு மெய்கண்ட நூல்களும் பன்னிரண்டேயாம் என்பது தெளிவு. மெய்கண்டார் காலந்தொட்டு எண்ணுவதே வான்முறையாம். இவ்விரு பெருநூல்களும் நெறியின் புண்ணியக்கண் இரண்டாகும். இவ்வகையான் அமைந்த எண்ணிக்கைப் பொருத்தமும் இவை செந்தமிழ் மொழியின் உயிரேயாம் என்பதனை உணர்த்தும். செந்தமிழ் மொழியுயிர்கள் பன்னிரண்டு. அவை குறில் ஐந்தும் நெடில் ஏழுமாம். நெடிலொத்து அடங்கன்முறை ஏழும், குறிலொத்து எஞ்சியவை ஐந்துமாகத் திகழ்கின்றன. இவை குறிப்பான் சிவபெருமானின் திருவருளாற்றல்கள் எழினையும், தொழில்கள் ஐந்தினையும் அறிவிப்பனவாகும்.

திருமந்திரம் பத்தாம் திருமுறைக்கண் நின்று நிலவும் தெய்வத் திருமுறையாகும். இதுவே தமிழாகமம். திருமூல நாயனார் 'அரனடி நாடொறுஞ் சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே' எனத் திருவாய் மொழிந்தருளினர். இத்தகைய தமிழாகமத்தினைத் திருக்கோவில்களிலும், திருமடங்களிலும், வாழ்க்கைத் துறைகளிலும் நடைமுறைக்குக் கொண்டுவருவார்களாயின் உண்மைச் சைவநெறி உலகெலாம் பயின்றோங்கும்; ஒற்றுமையுண்டாகும்; உணர்ச்சி பெருகும்; வாழ்க்கையின்பம் வளரும். புனைவுப் பழமைகளின் பொய்யிலா மெய்ம்மை புலனாகும். புலனாகவே வீண் ஐயங்களும் கற்பிக்கும் மாசுகளும் அகலும். புரியா மொழி வழிபாடுகள் போய்க்கழியும். செய்வார், செய்விப்பார், சேர்ந்து தொழுவார் அனைவர்கட்கும் புகல்வது புரிந்து, பொருள் தெரிந்து இன்பமேலிட்டுப் பத்திவெள்ளம் பெருகும். அதற்குப் பெருவிளக்காய் நின்று துணைபுரிவது இவ்விளக்க விரிவுரை நூலாகும்.

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தார் தொடக்க முதல் பண்டும் பண்டும் ஒழுக்கநெறி வழுவா விழுத்தினைப் பெரியார் பலர்களைக்கொண்டு சிவநெறிக்குரிய செந்தமிழ்த் திருமுறைகளையும், சித்தாந்த நூல்களையும் சொற்பொழிவுகள், நூல் வெளியீடுகள், பாடமுறைகள் வாயிலாக நன்கு பரப்பிவந்திருக்கின்றனர்; வருகின்றனர்; வருவர். ஆசிரியர் இளவழகனாரைக்கொண்டு இப்பொழுது இருபதாண்டுகளாக இத்தொண்டினைப் புரிவித்து வருகின்றனர். அவற்றுள் 'திருமந்திர விரிவுரை' பதினைந்தாண்டுகளுக்குமுன் ஐந்தாண்டுகள் கிழமைக்கிரு முறையாகத் தொடர்ந்து நடந்து வந்தது. அதன் பிழிவாகவே இந்நூல் வெளிவந்துளது. இதன்கண், க. பொதுப்பாயிரம், கடவுள் வாழ்த்து

முதல் அறஞ்செயான் திறம்வரைப் பத்துப் பகுதிகளும், உ. அவையடக்கம், தற்சிறப்புப்பாயிரம், திருமூலர் தம் வரலாறு கூறுதல், சிறப்புப் பாயிரம் முதலிய சில பகுதிகளும் சேர்ந்து 164 திருமந்திரங்கள் வெளி வந்துள்ளன. திருமந்திரங்களுக்குக் கருத்தும் விளக்கமும் தெளிவு பெறக் காரணத்துடன் முதற்கண் புகன்று அடியில் அவற்றிற்குரிய திருமந்திரங்கள் இணைக்கப்பட்டுள்ளன. இவை கற்போர்க்குக் கழிபேரின்பம் பயப்பனவாகும். உரை திட்பநுட்பச் செறிவும் ஆற்றொழுக்கும் பொருந்தியன. ஆசிரியர் இளவழகனார் திருக்கழுக்குன்றத்தின்கணுறைந்து அகத்தவமுயற்சியால் அவ்வப்போது வெளிவந்துள்ள மணிமொழிகளே இவ்வுரை விளக்கமாகும். இதன்கண் திருமூலர் திருவுருவப் படம் அழகுற அமைந்துளது. இதனைப் பொதுவாகச் செந்தமிழன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் கற்றுப் பயனெய்துவதுடன் ஏனையவும் தொடர்ந்து வெளிவரத் துணைபுரிவார்களாக.

*யாத்திரை :*

வேலூர் அன்பன் மு. பெருமாள் எழுதியது. வெளியிட்டோர்: G. முருகேச முதலியார். மலிவுப் பதிப்பு விலை ரூ 1 50. திருமுருக கிருபானந்தவாரியாரவர்களால் சாற்றுக்கவி அளிக்கப்பெற்றது. இந்நூலாசிரியர் உலகமக்கள் நன்னிலையடைந்து வாய்மை வளம் பெற்றுத் தூய்மையராய்த் தெய்வ வழிபாட்டுடன், பெரியோர் வழிநின்று தெய்வம் ஒன்றே 'என்னும் தெளிவுடையராய்ச் சமயங்கள் பெயரால் வேறுபட்டாலும் கொள்கையால் ஒன்றுபட்டதென்னும் உண்மை நெறி ஒருவரோடு ஒருவர் எவ்வகைப் பிணக்குமின்றி இணக்கமாய் இன்புற்று வாழ ஏற்ற வழிவகைகளை இந்நூலகத்து நன்கு விளக்கியுள்ளார்

சமயப் பெரியார்கள் வகுத்த வழிவகைகள், திருப்பாடல்கள், வழிபாட்டு முறைகள், திருக்கோவில்கள், ஊழ்வினை, மறுபிறப்பு, காதல், மணம் முதலிய பல பொருள்களைப்பற்றிக் கதைப்போக்கில் உரையாடல் வாயிலாக நன்கு விளக்கியுள்ளனர். 'திருப்புகழமிர்தத்' திங்கள் வெளியீட்டில் சில பகுதிகள் அவ்வப்போது ஆசிரியரவர்களால் வெளியிடப்பட்டுள்ளன. அவை பலரானும் பாராட்டப்பட்டுள்ளன. எஞ்சிய பகுதிகளையும் சேர்த்து இஃதொரு முழுநூலாக வெளிவருகின்றது. இதன்கண் 'உடல் உணர்த்தும் உண்மை' முதல் 'பெருமணம்' ஈறாக அறுபது தலைப்புக்கள் காணப்படுகின்றன. சுவை மிகுந்த பகுதிகள், தெய்வத்தை வழுத்தும் பாடல்கள், திருக்குறள் ஒழுக்கங்கள் எல்லாம் எல்லா நிலையிலுள்ள அனைவர்களுக்கும் பெருந்துணை புரிவன. மக்களின் குழந்தைப் பருவம் முதல் கோலூன்றி நடக்கும் வரையுள்ள பருவங்களையே வாழ்க்கை யாத்திரையாகச் சித்திரித்துப் பல நிறம் அமைந்த அட்டைப் படத்துடன் இந்நூல் மிளிர்கின்றது. எளிய இனிய நடை. யாவர்க்கும் வாழ்க்கைத் துணையாகக் கையகத்திருக்கத்தக்க சிறந்த நூல். எல்லாரும் கற்று இன்பம் எய்துவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.




| சிலம்பு ௩௪ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, சித்திரை மே, 1960 | பரல் ௯ |
|---|---|---|

# பல்கலைக் கழகம் கற்பிக்கும் மொழியும் தமிழே

பல்கலைக் கழகம் கற்பிக்கும்போதனை மொழியும் தமிழ்மொழியாகவே இருத்தல் வேண்டும் என்னும் மெய்ம்மையினைப் பல எடுத்துக்காட்டுக்களுடன் நம் செல்வியில் முன்பும் எழுதியுள்ளோம். இன்றியமையாமை கண்டு இப்பொழுதும் எழுதுகின்றோம். ஒவ்வொருவருந் தத்தம் தாய்மொழி உயர்தல்வேண்டும் அதன் பொருட்டு உழைத்தல் வேண்டும் என்னும் உண்மை நோக்குடையராயிருப்பதியல்பே. அந்நோக்கம் எளிதிற் கைகூட அம்மொழி வளஞ்சால் மொழியாக வளர்ந்து திகழ்தல்வேண்டும். வளநிறை வில்லாவிடின் அம் மொழியாளர்கள் வளம்படுத்தும் அரிய பெரிய முயற்சியினை முதற்கண் மேற்கொண்டு முற்றுவித்தல் வேண்டும். அத்தகைய நிலையினும் அம்மொழிவல்ல பேரறிஞர்கள் உண்மை ஆர்வத்தால் அப் பணியினையும் செய்து கற்பிக்கும் மொழியாக்குகின்றனர். மேலும் அம் மொழிகளுட் பல அண்மைக் காலத்துத் தோன்றியனவும், வளம்பெறத் துவங்கியனவுமாகும்.

## தமிழின் தொன்மை

தமிழின் தொன்மையினை நன்கு துருவி ஆய்ந்து வரையறுத்து நடுநிலை திறம்பாது உண்மையுணர்த்திய பேரறிஞர் டாக்டர் கால்டுவெல் முதலிய மேற்புல அறிஞர்களாவர். அவர்கள் கருத்து இப்பொழுது உலகிடை வழங்கும் மிகப் பெரும் பழைய மொழிகள் சிலவற்றுள்ளும் மிகமிக முந்திய மொழி தமிழ்மொழியென்பதே.

இவ்வுண்மையினை நம் இந்தியக் குடியரசுத் தலைவர் இராசேந்திரப் பிரசாதின் மெய்ம்மைப் பொன்மொழியும் வலியுறுத்தும் அது வருமாறு:

ஏப்பிரல் ௨௧ ஆம் நாள் புதுதில்லியிலுள்ள 'தென்னிந்திய நாடகவரங்கத்தார்' தங்களுடைய கட்டிடப் பொருளின் பொருட்டு நான்கு நாடகங்கள் நடிக்க ஏற்பாடு செய்துள்ளனர். இவ் விழாவினைத் துவக்கி வைத்தபோது 'தமிழ் நாடக அரங்கு, மிகவுயர்ந்த தலைமுறை வழியினைச் சார்ந்தது என்பது எனக்கு நன்கு தெரியும். இந்தியாவில் பேசப்படும் மொழிகளில் **தமிழ்மொழி** மிகவுந் தொன்மை வாய்ந்தது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தோன்றியுள்ள இலக்கியத் தொன்மை வழக்கமைந்தது. மிக்க சிறப்புடையது. தமிழ் மக்களின் கலைத்திறனும், படைப்பு வல்ல கற்பனை ஆற்றலும் இணைந்து நாடகக் கால்வழியினை உருவாக்கியிருப்பது வியப்பினையூட்டும் செய்தியாகாது' என்பதே.

## அமைக்கு முயற்சி

தொன்று தொட்டு இருவகை வழக்கினும் நின்று நிலவி வழங்கிவரும் நம் தாய்மொழி குறைவிலா இலக்கண இலக்கிய வளம் நிரம்பியது. தனித்தியங்கும் ஆற்றல் வாய்ந்தது; சொல்லாக்குந் திறல்மிக்கது; இஃது இத்துணைக்காலமும் ஆட்சி மொழியாகத் திகழ்ந்திருந்தால் ஆங்கிலத்தின் மிக்க புகழினை அடைந்திருக்குமென்பதுறுதி. நற்காலமாக இப்பொழுது மாநில ஆட்சிமொழியாகவும், பல்கலைக் கழகக் கற்பிக்கும் மொழியாகவும் முறையே வந்தும் வரக்கூடிய நிலையிலுமிருக்கின்றது. சில பேறிஞர்கள்முன் உயர்நிலைப் பள்ளியில் ஆங்கிலத்தை மாற்றித்தமிழைக் கற்பிக்கும் மொழியாக அமைக்க முயன்ற காலத்தும் ஆங்கிலத்தின் தரங்குறைந்துவிடும், பாடப்புத்தகங்கள் இல்லை, கற்பிக்கும் ஆற்றல் வாய்ந்த ஆசிரியர்களில்லை எனத் தடை நிகழ்த்தினர்.

அதுபோலவே இப்பொழுதும் தடை நிகழ்த்துகின்றனர். எங்ஙனம் உயர்நிலைப்பள்ளியில் மிகவும் கற்பிக்கும் முறைகள் செவ்வையுற நடக்கின்றனவோ அதுபோல் பல்கலைக் கழகத்திலும் கற்பிக்கும் முறைகள் நாளடைவில் செவ்வையுற நடைபெறுமென்பதனை உன்னித்தல் வேண்டும். அந்நோக்கத்துடன் தங்கள் காலத்திலேயே தமிழ் கற்பிக்கும்மொழியாக இடம்பெற்ற தென்னும் பெருமையும் புகழும் பெற முயலுவதே நன்மைப் பாலதாகும். எச்செயலுக்கும் மாற்றமாகத் தொடங்குங்கால் சிறு சிறு இடர்ப்பாடுகளும், பெருமலைவும், கடும் எதிர்ப்பும் உண்டாவன இயல்பே. அவற்றை அரும்பெருமுயற்சியால் அகற்றுவதே அருங்கடனாகும். அங்ஙனமின்றி அஞ்சி யகல்வது ஆண்மைச் செயலாகாதென்ப.

இப்பொழுது கல்லூரிப் பாடங்களுக்கு அமைக்கும் பாட நூ சிறு சிறு குறைபாடுகளைக் கொண்டிருப்பினும் நாளடைவில் அக்குறைபாடுகள் முற்றும் அகற்றப்பட்டுவிடும் என்பது துணிபு. மேலும் இப்பொழுது கற்பிக்கும் ஆசிரியர்களும் கற்பிக்கக் கற்பிக்க விளக்கம் பெறுவர்; கற்பிக்குந்திறனும் வாய்க்கப் பெறுவர். கற்கின்ற மாணவர்களும் கலை நலம் நிரம்பிச் சிந்தனைத் திறங்களைத்தும் தாய்மொழியிலேயே எண்ணும் தனிப்பெரு வாய்ப்பினை எய்துவர். அவர்கள் நூலாசிரியராகவும், கற்பிக்கும் பேராசிரியராகவுந் திகழுங்காலத்து மிகச் செம்மையான நூல்களும், கற்பிக்கும் முறையுந் தாமே தோன்றிவிடும்.

இதுகாறுங் கற்பிப்போரும் கற்போரும் ஆங்கில மொழி வாயிலாகவே சிந்தனையினை வளர்த்து வந்திருக்கின்றனர். அதைத் தாய்மொழி வாயிலாக வெளிப்படுத்தும்போது விரைவாகவும் தெளிவாகவும் எழுதவோ இசைக்கவோ இயலாதவராகின்றனர். காரணம் வேற்றுமொழி வாயிலாகக் கற்றமையே யாகும். இப்பொழுது தாய்மொழி வாயிலாகக் கற்பிப்பதும் கற்பதும் ஆகிய நிலைமை அமைந்தமையால் இனி அத்தகைய இடர்ப்பாடுகள் உண்டாகா. சிந்தனையின் ஊற்று எம்மொழியோ அம்மொழியே வளர்ச்சி யெய்தும். அச்சிந்தனையாளரும் அம்மொழியின் ஆக்கத்தினையே நாடுவர். நாளடைவில் அவரும் அம்மொழியாளரேயாவர். இந்நிலையினாற்றான் இப்பொழுது தமிழ் வளர்ச்சியுறாது தளர்ச்சியுற்றுத் தோன்றுகிறது. அத் தளர்ச்சியினை நீக்கி வளர்ச்சியுறச் செய்யப் பல பேரறிஞர்கள் முன்வந்துள்ள இந்த நற்போழ்தில் தக்க நூல்களில்லை, தக்காரில்லை என்று அறிஞர்கள் சிலர் அறைகின்றனர். நூல்களும் தக்காரும் வேற்று நாட்டிலிருந்து வந்திறங்கவேண்டிய விலைப்பொருள்களன்று. அவை இந் நாட்டறிஞர்களாலேயே ஆக்கவேண்டிய அரும்பொருள்கள். எந்நாளாயினும் அவர்களேதாம் நூலாக்கித் தருதல்வேண்டும். அத்தகைய முயற்சியினை இன்றே தொடங்குவது நன்றல்லவா? தொடங்க வேண்டிய இன்றியமையாமையும் வந்துவிட்டது. இன்னுங் காலத்தைப் பின் தள்ளிப்போடுவோமானால் தாய்மொழியாந் தமிழ்மொழியின் முதன்மையிடத்தை அயன் மொழி எடுத்துக் கொள்ளுதல் கூடும். அதன்பின் தமிழ்மொழி சிறந்து வருவதற்கே வாய்ப்பும் இடமும் வருவதற்கின்று; என்னை? 1964-5 இல் மத்திய ஆட்சிமொழி கண்டிப்பாக இந்தி வந்துவிட வேண்டுமென்று எல்லாரும் முயலுகின்றன ரென்பதனாலென்க. ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் சப்பானிலும் துவக்கக் காலத்தில் இத்தகைய இடர்ப்பாடுகள் இருந்தன. அவை பின் அகன்று இப்பொழுது முன்னேறியுள்ளமை வரலாறு கண்ட உலகறியுண்மை.

## வட்டார மொழிகளில் வழங்குவன

இந்நாளில் எட்டுக்கு மேற்பட்ட மாநிலங்களில் பல்கலைக் கழகம் கற்பிக்குமொழி அவ்வம் மாநில வட்டார மொழிகளாக அமைந்துள்ளமை ஏனை மாநிலத்தார்க்குப் பெருந் தூண்டுதலாகும். இம் மொழிகளுக்கெல்லாம் நெடுங்காலத்துக்கு முன் தோன்றிக் குறைபாடில்லா நிறை வளர்ச்சியுடன் திகழும் தமிழ்மொழிக்கண் அம்முறை இன்னும் வராத் தயங்குவதென்பது எங்ஙனம் பொருந்தும்? ஏற்கெனவே எட்டு வட்டார மொழிகள் பல்கலைக் கழகம் கற்பிக்கு மொழியாகிவிட்டமையை இந்தியப் பேரரசின் கல்வியமைச்சர் ஸ்ரீமாலி அவர்கள் தில்லி மக்கள் மன்றத்தில் கூறியுள்ளார். மேலும் இம் முறையைப் பின்பற்றப் பதினொன்று பல்கலைக் கழகங்கள் இசைந்துள்ளனவாகவும் அறிவித்துள்ளார்.

வட்டார மொழிகளில் பல்கலைக் கழகப் படிப்பினை எய்திய மாணவர் அயல் மாநிலங்களுக்குப் போனால் வேலை கிடைக்குமா எனச் சிலர் எண்ணுகின்றனர். அவ்வம் மாநில மொழியே ஆட்சி மொழியாக இருக்கும்போது எந்த மாநிலத்தாரும் அயல் மாநில அலுவல்களை நினைப்பதற்கு இடமின்றென்க. ஆங்கில மொழியின் தொடர்பிருப்பதால் வெளிநாடு செல்வார்க்கு இடையூறுண்டாகுமோ என எண்ணும் ஐயத்திற்கும் வழியில்லை. ஆதலால் பல்கலைக் கழகம் கற்பிக்கு மொழியாகத் தமிழ் அமைய வேண்டுவது இன்றியமையாததும் சாலப் பொருத்தமுடையதும் ஆகும். மேலும் ஆட்சிமொழி தமிழாக அமைந்திருக்கும்போது அதனுக்கத்திற்குத் துணையாகப் பல்கலைக் கழகக் கற்பிக்கு மொழியும் தமிழ்மொழியிலமைவதே ஏற்புடையதாகும். இத்தகைய முயற்சியில் ஈடுபட்டுள்ள பேரறிஞர்களைப் பெரிதும் போற்றுகின்றோம். சிறப்பாகக் கல்வியமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்களை மிகுதியும் போற்றுகின்றோம். அவர்கள் 'அறிந்தாற்றிச் செய்கிற்கும் ஆற்றல் மிக்கவர்.' அதனால் அவர்கள் புகழும் போற்றல் மிக்க பொன்றாப் புகழாக மிளிர்கின்றது.

பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் இலட்சுமணசாமி முதலியாரவர்களும் இவ்வரும் பெருஞ் செயலுக்கு விழுமிய முழுத் துணைவராய் நின்று தங்கள் காலத்தில் பல்கலைக் கழகக் கற்பிக்கும் மொழி தமிழ்மொழியாயமைந்த தென்னும் பெருமையினை எய்தி அழியாப் புகழெய்துவார்களென்பதுறுதி. அங்ஙனம் எய்துமாறு அவர்களை வேண்டிக்கொண்டு அவர்களையும் பாராட்டுகின்றோம். உறுதுணையாகும் நல்லறிஞர்களையும் பாராட்டுகின்றோம். வாழ்க தமிழ்மொழி! வாழ்க பல்கலைக் கழகம்!

# இலக்கியத் திறனாய்வு

[திரு. ச. அகத்தியலிங்கம், M. A., B. SC.]

உலகில் முதன் முதலாக மனிதன் வாழ்வதற்கேற்ற சூழ்நிலையைத் தென்னிந்தியா தான் அடைந்தது என்று சில நூல் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். நீலகிரிமலை வட்டாரத்தில் காணப்படும் பாறைகள் மிகவும் பழமைவாய்ந்தன என்பது அவர்களுடைய கொள்கையாகும். ஆகையால் தமிழன் மிகப்பெரும் பழங்குடியைச் சார்ந்தவன் என்பது தேற்றமாகும். இதே போன்று அவன் பேசும் மொழியாகிய தமிழும் பழமைவாய்ந்தது. இலக்கியவளமும் இலக்கண அரணும் பெற்றுத் திகழ்வது என்று எண்ணும்போது அவன் உயர்வு நன்கு புலப்படும். அவன் நாகரிகமும் பண்பாடும் உலகில் மற்று எவர் நாகரிகத்துக்கும் பண்பாட்டுக்கும் பிற்பட்டதன்று. சுமேரிய, எகிப்திய, சீன நாகரிகங்கட்கும் பழமையான பண்பட்ட நாகரிகம் என்று ஆராய்ச்சியால் காணும்போது, கண்டு பிறநாட்டு அறிஞர் பெருமக்கள் வியக்கும்போது தமிழனாய்ப் பிறந்த எவனும் பெருமை கொள்ளாமல் இருக்கமுடியாது. இலக்கியம், இலக்கணம், நாகரிகம், பண்பாடு என்றின்னோன்ன துறைகளில் மிகப் பழங் காலம்தொட்டே முன்னேறியிருந்தது தமிழகம்.

ஆனால் சில துறைகளில் தமிழகம் முன்னேறாமலும் இருந்துள்ளது. வரலாறு இலக்கியத் திறனாய்வு போன்ற சில துறைகளில் அதன் வளர்ச்சியை ஏனோ காணமுடியவில்லை. வளர்ச்சியைக் காணமுடியவில்லையே ஒழிய இவைகளைத் தமிழர்கள் அறியாதிருந்தார்கள் என்று எண்ணுவது பொருந்தாதாகும். பண்டைத் தமிழக வரலாற்றின் சில கூறுகளைச் சில இலக்கியங்களில் காண்கிறோம். பதிற்றுப்பத்தின் மூலம் சேரவரசர்களின் வரலாற்றை ஓரளவு தெரிந்துகொள்ளுகிறோம். புறநானூறு, அகநானூறு போன்ற இலக்கியங்களிலிருந்து தமிழக அரசியல் வாழ்வையும் தமிழ்மக்களின் அகவாழ்வையும் சிந்திக்கமுடிகிறது. தமிழகத்தின் பல்வேறு கோயில்களிலும் ஊர்களிலும் காணப்படும் கல்வெட்டுக்களாலும் செப்பேடுகளாலும் வரலாற்றுச் செய்திகள் சிலவற்றை அறிகிறோம். புதுக்கோட்டை, ஆதிச்சநல்லூர் போன்ற இடங்களில் புதைபொருள் ஆராய்ச்சியாளர்களால் கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் சரித்திரகாலத்துக்கு முற்பட்ட செய்திகளைத் தருகின்றன. ஆனால் வரலாறாக எழுந்த நூற்கள் எதுவும் பண்டைத் தமிழகத்தில் இருந்தனவென்று நினைக்கப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. வள்ளுவனையும் இளங்கோவையும் கம்பனையும் பெற்றுத்தந்து பெருமைகொண்ட தமிழகம் ஒரு

ஹெரடோட்டசையோ[1], தூசிடைட்சையோ[2] பெற்றுத்தரவில்லை. ஒரு லிவி[3]யையோ அன்றித் தேசிடசையோ[4] பெற்றுத்தந்திருந் தால் கூட தமிழகத்தின் தெளிவான வரலாறு என்றோ எழுதப் பட்டிருக்கும். அன்னியர்கள் ஆராய்ந்து, அவரவர் மனநிலைக் கேற்பத் திரித்தும் கூட்டியும் குறைத்தும் எழுதுகின்ற அவல நிலைமை ஏற்பட்டிராது.

இதே நிலைமையைத்தான் இலக்கியத் திறனாய்விலும் காண் கிறோம். உலகில் எந்த மொழியிலக்கியத்துக்கும் குறைவுபடாத இலக்கியச்செல்வத்தைப் பெற்றிருக்கிறோம். ஆனால் இலக்கியத் திறனாய்வு நூற்களைத் தமிழில் காண்பது மிக அரிதாகும். சிறந்த இலக்கியங்களின் உரைகள் பலவற்றைக் காண்கிறோம். ஓர் உரையை மறுத்து மற்றோர் உரை தோன்றியிருப்பதையும் பார்க்கிறோம். அவ் வுரைகள் மூல இலக்கியத்தின் நயங்களை விளக்கத்தான் செய்கின்றன. ஆனால் அவைகள் இலக்கியத் திறனாய்வு நூற்களாகக் கருதப்படமாட்டா. இவ் வுரைகளின் கண்ணோட்டமும் போக்கும் வேறு; திறனாய்வின் கண்ணோட் டமும் போக்கும் வேறு என்பதை நாம் புரிந்துகொள்ள முடிகிறது. தமிழ் இலக்கியப் பரப்பில் திறனாய்வு நூற்கள் இல்லாத குறையை நாம் ஒத்துக்கொண்டுதான் ஆகவேண்டும்.

தமிழ் அறிஞர்கள் இக் குறையை ஓரளவு உணர்ந்துள்ளனர். இக் குறையை நீக்க முயன்றும் உள்ளனர். அவர்களின் முயற்சி யின் பயனாகச் சில சிறந்த திறனாய்வு நூற்கள் அண்மைக் காலத்தில் வெளிவந்துள்ளன. வ. வெ. சு. ஐயர் அவர்களின் கம்ப இராமா யணம் பற்றிய 'இரசனை'யும் 'டாக்டர்' மு. வ. அவர்களின் 'இலக் கிய ஆராய்ச்சி'யும் அறிஞர் அ. ச. ஞானசம்பந்தனார் அவர்களின் 'இலக்கியக் கலை'யும் இரகுநாதன் அவர்களின் 'இலக்கிய விமர் சனம்'மும் இவற்றுள் குறிப்பிடத் தகுந்தன. சிலப்பதிகாரம் கம்ப இராமாயணம் திருக்குறள் போன்ற நூற்களுக்குச் சில ஆராய்ச்சி நூற்கள் வெளிவந்துள்ளன. இன்னும் சில அறிஞர்கள் சில நூற்கட்கு முன்னுரையாகவும் சில இதழ்களில் கட்டுரைகளாகவும் எழுதியுள்ளவை தமிழகத்தில் இத்துறையில் முன்னேற்றம் காண அடிகோலுவனவாக அமைந்துள்ளன. இத் துறையில் பல்வேறு நூற்கள் வெளிவர அறிஞர்கள் ஊக்கம் கொண்டு உழைத்தல் தமிழின் வளர்ச்சிக்கு இன்றியமையாத சிறந்த ஒரு பணியாகும்.

இலக்கியத் திறனாய்வு மேலை நாட்டில் வானளாவ வளர்ந்திருப் பதைக் காணலாம். அரிஸ்டாட்டிலின் காலத்துக்கு முன்னாலேயே அவர்கள் இத்துறையில் நுழைந்துள்ளனர். அவர்களிடம் காணப் படும் பழமையும் வளர்ச்சியும் நம்மை அறியாமலே நம்மை

1. Herodotus. 2. Thucydides. 3. Livy. 4. Tacitus.

அவர்கள்பால் ஈர்த்து விடுகின்றன. கலை, கவிதை, காப்பியம், உரைநடை, புதினம், நாடகம், சிறுகதை என்றின்னோரன்ன பல துறைகளில் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு காலங்களில் பல்வேறு கோணங்களிலிருந்து ஆராய்ந்துள்ளனர். இதன் பயனாக எண்ணற்ற இறவாத நூற்கள் தோன்றியுள்ளன. அவைகளின் பெருமையையும் பேரளவையும் காணக்காணப் பாரதியாரின் 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்ற ஆணை காதுகளில் அலைமோதுகிறது.

இத்தகைய திறனாய்வு என்று தோன்றிற்று? என்ற வினாவுக்கு விடை காணவேண்டியது நம்முடைய கடமையாகும். கலை என்று தோன்றிற்றோ அன்றே திறனாய்வு தோன்றிற்று என்றும், இலக்கியம் என்று தோன்றிற்றோ அன்றே இலக்கியத் திறனாய்வு தோன்றிற்று என்றும் மிக எளிதில் கூறிவிடலாம். இக் கூற்றுக்குப் பல்வேறு சான்றுகளையும் தந்துவிடலாம். இன்னும் சிறிது ஆழமாகச் சிந்தித்தால் கலையும் அதன் ஒரு பிரிவாகிய இலக்கியமும் தோன்ற அடிப்படைக் காரணம் ஒருவகைத் திறனாய்வு என்பது புலப்படும். கலைக்குப் பின்னால் ஒருவகைத் திறனாய்வைக் காண்பதுபோல் கலைக்கு முன்னாலும் ஒருவகைத் திறனாய்வைக் காணலாம். வாழ்வின் திறனாய்வுதானே கலை! கலை முகிழ்க்க ஒருவகையான திறனாய்வு தேவையல்லவா? கவிதை வாழ்வின் திறனாய்வு என்றார், திரு. மாத்யூ ஆர்னல்ட். அவரின் ஆய்வுரையை எல்லாக் கலைகட்கும் கொண்டால் திறனாய்வின் தோற்றம் நன்கு புலப்படும். கலைக்கு முன்னால் ஒரு திறனாய்வு உளது. இதே போன்று கலைக்குப் பின்னாலும் திறனாய்வு உளது. திறனாய்வு என்ற உடன் நம் உள்ளத்தில் இரண்டாவது திறனாய்வு தான் இடம் பெறுகிறது. இதனை அறிஞர்கள் [1] திறனாய்வின் திறனாய்வு என்பர்.

சிறந்த தச்சன் நாற்காலி ஒன்றைச் செய்கிறான். பார்வைக்கு அழகாக இருக்கிறது. சிறந்த வேலைப்பாடு உடையது. நற்பயனும் உடையது. இத்தனை இருந்தும் அதனை ஒரு கலைப்பொருளாக நாம் கொள்ளுவதில்லை. அவனைக் கலைஞன் என்றும் கூறுவதில்லை. ஆனால் அதே தச்சன் பலகையில் மனித உருவத்தைச் செதுக்கு கிறான் என்று வைத்துக்கொள்ளுவோம். மனிதன் எலும்பும் தோலும் சதையும் குருதியும் பெற்றவன். நாடிகளையும் நரம்பு களையும் கொண்டவன். இதேபோன்று இன்னும் எத்தனையோ இலக்கணங்களைப் பெற்றுள்ளான். தச்சன் செதுக்கிய மனித உருவத்தில் இவை ஒன்றையும் நாம் காண்பதில்லை. ஆனால் அவ் வுருவம் நம் உள்ளத்தில் ஒருவித உணர்ச்சியை ஊட்டுகிறது.

1. Criticism of a criticism.

தச்சன் தான் நேராகக் காணும் மனிதனைப்பற்றிய தன் எண்ணத்தை அவ் வுருவத்தில் செதுக்குகிறான். இதேபோன்று தான் சிற்பியும் சிற்பமும் அவ்வுருவமும் கலைப்பொருட்களாகின்றன. சிற்பியும் தச்சனும் கலைஞர்கள் என்றழைக்கப்படுகின்றனர். நாம் நேரில் காணும் மனிதனை அவர்கள் நிறுத்தவில்லை. மனிதனைப் பற்றிய தங்கள் தங்கள் எண்ணத்தை, ஆய்வினை அங்கு வடிக்கின்றனர். செதுக்கப்பட்ட உருவத்தையோ சிற்பத்தையோ காணுகின்றபோது எழுகின்ற உணர்ச்சி நேரடியாக மனிதனைக் காணுகின்றபோது ஏற்படுவதில்லை.

கவிதை சிறந்த கலை. வாழ்விலிருந்து மூகிழ்ப்பதுதான் கவிதை. ஆயினும் வாழ்கின்ற எல்லோரும் கவிஞர்களாக இருப்பதில்லை. கவிஞர்களுள்ளும் எல்லோரும் கம்பனாகவும் இளங்கோவாகவும் விளங்குவதில்லை. அவர்கள் வாழ்வின் போக்கை ஆய்வதிலும் ஆய்ந்ததை வெளிப்படுத்துவதிலும் நம்மிலிருந்து வேறுபட்டவர்கள். இளங்கோ கண்ணகியின் வாழ்வைக் கண்டார். கண்டபோது பல்வேறு எண்ணங்கள் உணர்ச்சிகள் கற்பனைகள் அவருக்கு உண்டாயின. அவற்றை எல்லாம் ஒன்றாக இணைத்துப் பிறருக்கு இன்பம் கொடுக்கும் விதத்தில் உருக் கொடுத்தார். கவிதை என்பது அக் கலைதானே![1] அதுவே இன்று நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சிலப்பதிகாரம். கண்ணகியின் வாழ்வின் ஒருவகைத் திறனாய்வுதான் சிலப்பதிகாரம் என்னும் கவிதைக் கருவூலம். நாமும் இன்று நம்மிடையே சில கண்ணகிகளைக் காணலாம். ஆனால் அவர்களின் வாழ்வைக் காணும்போது இளங்கோவுக்கு ஏற்பட்ட எண்ணங்கள் உணர்ச்சிகள் நமக்கு ஏற்படுவதில்லை. ஏற்பட்டாலும் அவற்றிற்கு உருக் கொடுக்க நம்மால் முடிவதில்லை. இந்நிலையில்தான் சாதாரண மனிதனும் கவிஞனும் வேறுபடுகின்றனர். கண்ணகியின் கதையைப் படிக்கும்போது உண்டாகும் உணர்வு பக்கத்து வீட்டுக் கண்ணகியைக் காணும்போது உண்டாவதில்லை. நாடகத்தில் நல்லதங்காளைக் காணும்போது உண்டாகும் உணர்ச்சி வறுமையின் காரணமாகக் குழந்தைகளைக் கிணற்றில் தள்ளித் தானும் கிணற்றில் குதிக்க இருக்கும் இருபதாவது நூற்றாண்டு நல்ல தங்காளைக் காணும்போது ஏற்படுவதில்லை. இதுதான் கலைக்கும் உண்மைக்கும் உள்ள வேற்றுமை.

இத்தகைய நிலையை எல்லாக் கலைகளிலும் காணலாம். கலைகள் தோன்றிப் பெருகக் காரணம் கலைஞர்கள் வாழ்வைப் பல்வேறு கோணங்களினின்றும் ஆய்வதுதான். கலைகளைத்

---

1. Poetry is the art of uniting feeling and pleasure with the help of imagination.

தோற்றுவிப்பவர் அனைவருமே ஒருவகைத் திறனாய்வாளர்கள். ஆனால் அவர்களைக் கலைஞர்கள், கவிஞர்கள், சிற்பிகள் என்பன போன்ற பெயர்களால் அழைக்கிறோமேயன்றித் திறனாய்வாளர்கள் என்று அழைப்பதில்லை. கம்பனையோ இளங்கோவையோ மில்டனையோ திறனாய்வாளர்கள் என்று எண்ணுவதேயில்லை.

இவர்கள் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றனர். வாழ்வின் இன்ப துன்பங்களைப் படி எடுத்து வைக்கின்றனர். வாழ்வின் பொருளை நன்றாக அறிந்து கூறுகின்றனர். இலக்கியம் என்பது அதுதானே?[1] இவர்களின் கண்ணோட்டத்தின் எல்லையைக் கணக்கிட முடியாது. உலகெங்கும் செல்ல உரிமை பெற்றவர்கள். எப்பொருளையும் தங்கள் கவிதையில் வடிக்க உரிமையுடையவர்கள். அவர்களின் எல்லையை அவர்களே கணக்கிட்டுக் கொள்ளுகின்றனர். நமக்கு அதைப்பற்றிக் கேட்கஉரிமை இல்லை.

ஆனால் இலக்கியத் திறனாய்வு செய்பவர்கட்கு இத்தனை உரிமை இல்லை. அவர்களின் எல்லை கவிஞர்களின் எல்லையை விடக் குறைந்தது. சிலப்பதிகாரத்தைத் திறனாய்வு செய்பவன் அதன் உள்ளேயே நிற்றல்வேண்டும். வேண்டுமானால் பிற புலவர்களுடன் ஒப்பிடும்போது சிறிது விரிந்து செல்லலாம். இளங்கோ கூறியதற்குத் திறனாய்வேயன்றி "அவர் ஏன் இதைக் கூறவில்லை? இதை எப்படிக் கூறலாம்?" என்றின்றோரன்ன வினாக்களை எழுப்புதல் எல்லை கடந்த நிலையாகும். எப்படியாயினும் கவிஞனின் எல்லையைவிடத் திறனாய்வாளனின் எல்லை சுருங்கியதாகும்.

அவனுடைய எல்லை சுருங்கியதாயினும் அவன் கடமை பெரிதாகும். நடுநிலைமையில் நின்று இலக்கியங்களை ஆராய்ந்து கூறவேண்டியது அவன் கடமையாகும். சிறந்த திறனாய்வாளன் கவிஞனின் உள்ளத்தை நன்றாகப் புரிந்து கொள்ளவேண்டும். அப்படியானால் மாத்திரமே அவன் கவிஞனின் கவிதைக்கடலுள் மூழ்கிச் சிறந்த முத்துக்களை எடுத்து உலகுக்கு அளிக்க முடியும். இதற்கும் கவித்துவம் வேண்டும் என்று கருதுகின்றனர் திரு. பென்சான்சன் போன்ற அறிஞர்கள்.[2] இது சிறிது மிகைப்படுத்திக் கூறியதாக அமைந்திருந்த போதிலும் ஓரளவு உண்மையாகும். கவிஞனாக இல்லாவிடினும் திறனாய்வாளன் உண்மைக் கவித்துவத்தை உணருபவனாகவாவது இருத்தல் வேண்டும். சிறந்த கவிஞர்கள் எல்லோரும் சிறந்த திறனாய்வாளர்

1. Literature is a copy of life.
Literature is an interpretation of life.

2 To judge of poet is only the faculty of poets; and not all the poets but the best.

களாகவும் சிறந்த திறனாய்வாளர்கள் எல்லோரும் சிறந்த கவிஞர்களாகவும் இருப்பதில்லை. கலைகள் தனிப்பண்பு வாய்ந்தவை. கலைப்பண்பு எல்லோரிடமும் அமைந்து காணப்படுவதில்லை. காரிகை கற்றவர்கள் அனைவரும் சிறந்த கவிஞர்களாக விளங்குவதில்லை. ஆனால் காரிகையை வரன் முறையாகக் கற்காதவர்கள் சிலர் உள்ளத்தைத் தொடும்படியான கவிதைகளை ஆக்குகின்றனர். இந் நிலையை எல்லாக் கலைகளிலும் காணலாம். இதே போன்றுதான் திறனாய்வும். சிறந்த கல்வியறிவுடையவர்கள் அனைவரும் சிறந்த திறனாய்வாளர்களாக விளங்குவதில்லை. இயற்கையாக அதற்குரிய பண்பு அமைந்திருத்தல் வேண்டும். அப் பண்புக்குப் பக்கத்துணையாக கற்ற கல்வியும் அதனால் ஏற்படுகின்ற அறிவும் அமைகின்றன. எனவே இவ்வியற்கைப்பண்பும் அறிவும் ஒருவனைச் சிறந்த திறனாய்வாளனாக ஆக்குகின்றன. இதுவே அறிஞர் சாண்சன் கருத்து.[1]

இத்தகைய திறனாய்வாளர்கள் சிறந்த கருத்துக்களை உலகத்துக்குக் கொடுத்துள்ளனர். இலக்கியங்களைப் பல்வேறு கோணங்களில் நின்று ஆய்ந்து நிறைகளையும் குறைகளையும் கூறி உள்ளனர். மேனாட்டு இலக்கியப் பகுதிகளில் இவர்களுடைய பங்கும் சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது. ஆங்கில நாடக மன்னராகிய செகப்பிரியரை நன்றாகப் புரிந்துகொள்ளப் பிராட்லியை நன்றாக அறிய வேண்டும். அத்தகைய நிலையை இலக்கியத் திறனாய்வாளர்கள் அடைந்துள்ளனர். இவர்களுடைய திறனாய்வு நூற்கள் [2]படையல் இலக்கியங்களினின்றும் எவ்விதத்திலும் குறைந்ததல்ல என்பது திரு. போப் அவர்களின் கருத்தாகும். இவர்கள் இருவரும் தங்கட்கு வேண்டிய அறிவு ஒளியை இறைவனிடம் இருந்தே பெறுகின்றனர். இறைவனிடம் இருந்து கிடைத்த ஒளியைக் கொண்டே இவர்கள் இலக்கியப்பணி புரிகின்றனர் என்றார் திரு. போப் அவர்கள்[3]

தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தமட்டில் இந்த நிலை இன்னும் தோன்றவில்லை. எத்தனையோ இலக்கியச் செல்வங்களைப் பெற்றிருக்கிறோம். ஆனால் அந்த அளவுக்கேற்பத் திறனாய்வு நூற்களைத் தமிழகம் பெறவில்லை. இந்நிலையைத் தேடித் தருவது அறிஞர்களின் கடமையாகும். இப் பணிக்காகத் தமிழகம் ஏங்கிக் கிடக்கிறது என்று கூறுவதில் மிகை ஒன்றும் இல்லை. இவ்வேக்கம் தீரும் நாள் எந்நாளோ ?

---

1. Nature and learning had qualified for judges.
2. Creative literature.
3. "Both must alike from Heaven derived their light
   Those born to judge as well as those to write."

# தீப நாடகங்கள்

[திரு. பா. ப்ச்சையப்பன்]

(செல்வி, சிலம்பு ௩௪ - பரல் - ௮, ௩௮௦ ஆம் பக்கத் தொடர்ச்சி)

கோரஸ்: வருவதினை ஒருவாறு பகுத்துணர்ந்து சொல்லுவன்காண்
பெருமகனார் பிறப்பெதுவோ பெற்றோரார் எனப்பலவாம்
இரவுமறு தினத்திற்குள் இவ்வுலகம் மறையறியும்
மருளகற்றும் தெய்வதமே வாழ்கவுன தருட்டிறமே

ஒதிபன்: பெரியீர், நாம் சொல்லும் இடையன் வருகிறான், என்று நினைக்கிறேன். அவனாகத்தானிருக்கும். யான் இது வரையில் அவனைப் பார்த்ததில்லையன்றோ? அவனும் நம் கொரிந்தத்து நண்பரும் ஒரு வயதினராகத் தோன்றுகின்றனர். அவனை அழைத்து வருபவர்களும் என் ஆட்களே' ஆயினும் உங்களுக்குத்தான் அவன் யார் என்று தெரிய வேண்டும்.

கோரஸ்: ஆம், அவனேதான். அவனை யானறிவேன்.

[வயது முதிர்ந்த இடையன் ஒருவன் வருகிறான்]

ஒதிபன்: கொரிந்தத்தாரே! நீங்கள் பார்த்துச் சொல்லுங்கள்! இவன்தானா?

செய்திசொல்லி: இவனேதான்.

ஒதிபன்: கிழவா, என்னைப்பார், யான் கேட்பனவற்றுக்கு விடையளி. நீ இலேயர் வீட்டில் வேலையாளாக இருந்தாயா?

இடையன்: இருந்தேன். இங்குத்தான் பிறந்து வளர்ந்தேன்.

ஒதிபன்: உனக்கு என்ன தொழில்?

இடையன்: பெரும்பாலும் ஆடு மேய்ப்பதுதான்!

ஒதிபன்: நாட்டின் எப்பகுதியிலிருந்து வருவது?

இடையன்: சிதாரன் பக்கத்தில்தான்!

ஒதிபன்: இவரை இதற்குமுன் பார்த்ததுண்டோ?

இடையன்: யாரை? இவரையா? எங்குப் பார்த்திருப்பேன்?

ஒதிபன்: இவரைத்தான் எங்கேனும் எப்போதேனும் பார்த்ததுண்டோ?

இடையன்: எனக்கு நினைவில்லையே!

செய்திசொல்லி : இது பெரிதல்ல. நான் அவனுக்கு நினைப் பூட்டுவேன். நானும் அவனும் அண்டை அயலில் இருந்து வந்தவர்கள். அவனுக்கு இரண்டு மந்தைகள். எனக்கு ஒன்றுதான். ஒன்பது மாதங்கள் ஒன்றாகக் கழித்தோம். மழைக் காலத்தில் நான் கொரிந்தத்திற்குச் சென்றேன். அவன் தீபத்திற்கு வந்துவிட்டான்.

இடையன் : ஆம். அது பல ஆண்டுகட்கு முன்பல்லவோ?

செய்திசொல்லி: ஆயின், நீ எனக்கு ஒரு குழந்தையைக் கொடுத்தது நினைவில்லையா? கொடுத்து என் மகனைப்போல் வளர்த்துக் கொள்ளச் சொல்லவில்லையா?

இடையன் : (மருண்டு) என்ன நினைத்துக்கொண்டாய்? என்ன சொல்லக் கேட்கிறாய்?

செய்திசொல்லி : இங்கே நிற்பவர் நீ கொடுத்த குழந்தைதான்.

இடையன் : கெடுவோனே! வாயை மூடு!

ஒதிபன் : சொல் கிழவா! அஞ்சாமல் கூறு! உன்னினும் அவர் நல்லவர் போலிருக்கிறார்! உண்மையைக் கூறுகிறார்?

இடையன் : அரசே! நான் பொய் ஒன்றும் சொல்லவில்லையே. ஏன் கோபங்கொள்ளுகிறீர்கள்?

ஒதிபன் : அவர் கேட்டதற்கு நேர்விடை சொல்லாததற்குத் தான் கோபப்படுகிறேன்.

இடையன் : அவர் சொல்வதன் விளைவு இன்னதென்று அறியாமற் பேசுகிறார்!

ஒதிபன் : நீ உண்மையைச் சொல்லவில்லையாயின், அதனைச் சொல்லும்படி செய்வோம்.

இடையன் : இவ்வேழைக் கிழவனை ஒன்றும் செய்யாதீர்கள். அரசே, தெய்வத்தின் பெயரில் அன்பு காட்டுங்கள்!

ஒதிபன் : அவன் கைகளைக் கட்டுங்கள்!

இடையன் : இது என்ன கேடு! இன்னும் என்ன சொல்ல வேண்டும் நான்?

ஒதிபன் : அவர் சொல்லிய குழந்தை நீ கொடுத்ததா?

இடையன் : ஆம், கொடுத்த அன்றே நான் இறந்திருக்கக் கூடாதா?

ஓதிபன் : இப்போதுதான் என்ன? உண்மையைச் சொல்லும் வரையில் உன் உயிர் உனதல்லவே!

இடையன் : உண்மையை உரைத்தால் அது என் மரணத்தில் தான் முடியும்!

ஓதிபன் : இன்னுமா மறைக்க முயல்கிறாய்!

இடையன் : நான்தான் குழந்தையை அவனிடத்தில் கொடுத்த தாகச் சொல்லிவிட்டேனே! இன்னும் என்ன சொல்ல வேண்டும்?

ஓதிபன் : அக்குழந்தை எங்கிருந்து கிடைத்தது? உன் குடியிற் பிறந்ததா? அன்றி அக்குழந்தை வேறு குடியிற் பிறந்ததா?

இடையன் : என்னுடையதல்ல; வேறு ஒருவருடையது.

ஓதிபன் : எவன் குடியினது?

இடையன் : தெய்வத்தின் மேலாணை! என்னை மேலும் கேட்கா தீர்கள்!

ஓதிபன் : கேட்டதற்குத் தக்க விடையினைச் சொல்! சொல்லா விடில் இறந்து படுவாய்!

இடையன் : அது........இலேயர் வீட்டுக் குழந்தை.

ஓதிபன் : இலேயர் அடிமையின் குழந்தையா? அன்றி அவ ருடையதுவோ?

இடையன் : அதைச் சொல்லவேண்டுமா?

ஓதிபன் : சொல்லத்தான் வேண்டும், நான் கேட்கத்தான் வேண்டும்.

இடையன் : அது இலேயருடைய குழந்தைதான் என்றனர். உங்கள் தலைவியார் அதன் உண்மையைச் சொல்லக் கூடும்.

ஓதிபன் : இவள் உன்னிடம் கொடுத்தாளா?

இடையன் : ஆம் பெருமானே!

ஓதிபன் : எதற்காகவோ?

இடையன் : கொன்று போட!

ஓதிபன் : தான் பெற்ற குழந்தையினையா?

இடையன் : ஆம் பெருமானே! ஏதோ, அது பழியினைச் சுமந் தது என்பதால்

ஓதிபன் : என்ன பழியாம்?

இடையன் : அது தன் தந்தையைக் கொல்லும் என்பதாம்!

ஓதிபன் : தெய்வத்தின்மேல் ஆணையிட்டுக் கேட்கிறேன்; சொல், ஏன் அதனை இவனிடம் கொடுத்தாய்?

இடையன் : குழந்தையைக் கொல்ல மனமற்றவனுகத்தான் பெருமானே! இவனிடம் கொடுத்து வேற்று நாட்டுக்கு அனுப்பிவிட்டேன். இவனும் எடுத்துக்கொண்டான், உயிரைக் காப்பாற்றினன். நீங்கள்தாம் அக் குழந்தையெனின் உங்கள் உயிர்....

ஓதிபன் : ஆ, எல்லாம் வெளியாயிற்று. மறைக்க ஒன்றும் இனியில்லை. ஒளியே இனி உன்னைக் காண என் கண் கூசும். நான் யார், யான் செய்த தீமை என்ன என்பது விளக்கமாயிற்று, திமணம்! கொலை! இனி ஆவது என்ன இருக்கிறது.

[செல்கிறுன்.]

[செய்தி சொல்லியும், இடையனும் புறப்பட்டுப் போகிறூர்கள்.]

கோரஸ் :

*மறைவழியில் வந்தவன்கொள் மகிழ்ச்சியதும் மயக்கமதோ*
*நிறையறிவும் வலிவுமென நீள்புகழில் நிலைத்துளத்தில்*
*இறையவனுய் இருந்துவந்த இவ்வொதிபன் இழிந்தவனே*
*குறையேதும் இலையெனுமோர் குணவானும் இலையென்பேன்.*

*அரக்கிதனை அழித்தனனல் அரசுபுரிந் தெழுந்தானுல்*
*இரக்கமுடன் எழுந்தானுல் இவன்பெருமைக் கிலக்கினுன்*
*பரிதபிக்க இன்றவரும் பரிபவமும் பாடுவதோ*
*அரிதரிது மனத்துயரை மாற்றுவதும் அரிதாமால்.*

*தனையளித்துத் தனையிட்ட தந்தையினைக் கொன்றவனே*
*தனையளித்துத் தவிக்கவிட்ட தாயவளை மணந்தானே*
*வினையனைத்தும் காலத்தின் விளைவாமோ விதியிதுவோ*
*வினவிடிலோ இதுதானே விளங்குமுன திரங்கிலிசை.*

[அரண்மனையிலிருந்து ஒருவன் வருகிறுன்.]

வந்தவன் : தீபநகரத்துப் பெரியீர்! நீங்கள் உண்மையானவர்களாயின் நீங்கள் இனிக் கேட்கப்போவனவற்றுக்காக இரங்குங்கள்! நீங்கள் காணப் போவதற்காக வருந்துங்கள்! இலபடகர் வழியினர்க்கு வேண்டுமென்று தேடிக்கொண்ட கொடுமையினைக் கண்டு, கேட்டு உணர்ந்தீர்களானல், இக் கொடும்பழியினைத் துடைத்துப் போக்க இத்தராற்று நீரும், பாசியாற்று நீரும் பற்றுது!

கோரஸ்: இதுவரைக் கேட்டவற்றுக்குக் கண்ணீர் வடித்தாயிற்று. இனிக் கேட்பதற்கும் ஒன்றுண்டோ! என்ன சொல்லப் போகிறாய்?

வந்தவன்: சுருக்கமாக முதலில் சொல்வேன். அரசி இறந்தார்.

கோரஸ்: ஐயோ! எப்படி இறந்து போனார்?

வந்தவன்: தம் கையால் இக் கொடுவினையைச் செய்து கொண்டார். நான் கண்டதைச் சொல்லுகிறேன். உங்கள் முன்னிலையினின்றும் அச்சத்துடன் சென்றவர் தம் மணவறைக்குள் புகுந்து தலைமயிரைப் பிய்த்து இறந்து பட்ட தம் கணவன் இலேயரை நினைந்து அலறி அழுதார். முன்னாள் பெற்றெடுத்த குழந்தையினையும், அது மறைந்த செய்தியையும், பின் அக் குழந்தையால் அரசர்க்கு நேர்ந்த மரணத்தையும் சொல்லி அழுதார். மகனை மணந்து மக்களைப் பெற்ற தீவினையை வெளியிட்டழுதார். இவைகள் எங்கள் காதுபட வருந்தி நின்றோம். அவர் இறந்து பட்டது எங்களுக்குத் தெரியவில்லை. இதற்குள் அரசர் அரற்றிக்கொண்டே அங்குவந்தார். கத்தி, கத்தி என்று கத்தினார். மனைவி எங்கே, மனைவியுமல்லள் என்னை ஈன்றவள் என் மக்களை ஈன்றாள். என்று பல பேசிக்கொண்டிருந்தவர் மனத்தில் மாயப்பேய் புகுந்துகொண்டது போலும்! ஏனெனில் அவர் துயரைக்கண்ட எங்களால் ஒன்றும் செய்ய இயலவில்லை! அவர் துயரைப் பார்த்து மயங்கி நின்றோம். இதற்குள் ஏதோ ஒன்றால் உந்தப் பெற்றவராய் அரசர் அரசியின் மணவறைக் கதவினை முட்டித்தள்ளினார். கதவுத்தாள் பெயர்ந்து விழுந்தது. அரசர் உள்ளே ஓடினார். அரசி கயிற்றில் தொங்கியதைக் கண்டோம். அரசரும் பார்த்தார். மனத்தை உருக்கும் அரற்றலோடு கயிற்றினை அறுத்தார். தரையில் கிடத்தினார். இனித் தான் காண்பதற்குக் கூசுவது நேர்ந்தது. அரசி அணிந்திருந்த கோப்பூசியைக் கழற்றி அரசர் தம்கை நீளுமளவும் ஓச்சிப் பின் கண்களை நோக்கிக் குத்திக்கொண்டார். தம் கொடுமைக்கு ஆற்றாதார் கண்களைக் குத்திக்கொண்டார். இத் தீமையினைக் காணாதவாறு செய்துகொண்டார். மறுமுறையும் மறுமுறையும் எனப் பன்முறையும் குத்திக்கொண்டார். கண்களிலிருந்து வந்த இரத்தப் பெருக்கால் மங்கின. இருவர் பழியும் இவ்வாறு நேர்ந்தது. ஒருதலையன்றி இருதலைகள் பழிக்காளாயின. இவர்கள் இன்பவாழ்வு நீதிவழி நேர்ந்தவை தான். ஆயின் இன்றோ குழப்பம், கொலை, அழிவு, துயரக் கண்ணீர், பழி என நாமெல்லாம் சுமக்கும் தீமையாயிற்று.

கோரஸ்: அரசர் இப்போதெப்படியுள்ளார்?

வந்தவர்: வெளிச்சென்று தீபாகரத்து மக்களை அழைத்து வாருங்கள்; அழைத்து வந்து தந்தையைக் கொன்றவனைக் காட்டுங்கள். பழி தீர்ந்தது என்று சொல்லுங்கள் என்று அரற்றினர். அரசர் வலிவற்றவரானர். அக் கொடுங் காட்சியை நீங்கள் காண்பீர்களாக. கதவும் திறக்கிறது.

[குருடனாக ஒதிபன் வருகிறான்.]

ஆ; கொடுமை! தாங்கொணாதது!
என்றும் யான் கண்டிராதது,
உளமுருக்கும் உருக்குலைவு!
அறிவகற்றும் அவமிதுவே!
எவ்விதியின் அரக்கனுனை
இவ்வழியில் மிகவிரைவாய்
அழித்துனை மிதித்துவிட்டான்!
விழிபிதுங்க நிலைமாற!
நினைக்காண மனமகிழ்ந்த
என்கண்கள் கூசுவன
சொல்கேட்டு மகிழ்செவியும்
அல்லலினைக் கேட்டிரங்கும்.

ஒதிபன்: ஆ தாங்கொணாத் துன்பம்! நான் எங்கே இருக்கிறேன். இதுவோ என் குரல், எனக்குற்ற தீவிதிதான் என்னவோ?

கோரஸ்: கேட்க அஞ்சுவது! காணக் கூசுவது.

ஒதிபன்: ஆ, தாங்கவெண்ணு இரவே! விடுவித்துக் கொள்ள முடியா இரவே! பகலே இல்லாத காரிருளே! காற்றடியாக் கருமேகமே! ஆ! கண் குத்துகிறதே, தீவினையைச் சுட்டிக் ட்டுகிறதே.

கோரஸ்: இத் துன்பம் இருமுறை பெறவேண்டுவதோ? ஒன்று உடலுணர்வில் தாக்குவது! மறுமுறை உள்ளத்தைத் தாக்குவது!

ஒதிபன்: பேசுவது யார்? என் உண்மை நண்பரா? இன்னும் என் பக்கந்தான் உள்ளாரா? உங்கள் கை இக் குருடனுக்கு வழிகாட்டி! என் அருகேதான் இன்னும் உள்ளீரா? என் கண்கள் உங்களைக் காணு விடினும் யான் கேட்கும் குரல் உங்களுடையதே!

(தொடரும்)

# திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனுர், மயிலம்]

" அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு "

வருத 'ஆதிபகவன்' என்பது தத்தம் சமயக் வுளரையே குறிக்கும் என்பர் சமயவாதிகள். அவ்வாறு கூறிக் கொள்வதாலும் அதற்கேற்பத் தத்தம் சமய நூல்களிலிருந்து சான்றுகள் காட்டுவதாலும் குற்றங்கள் நேரா. ஆனல் பிற சமயத்தவர் கூறுவனவற்றை மறுக்கும்போதே குற்றங்கள் நேரும். அவ்வாறு நேராதபடி முறையோடு மறுப்பதே சாலச் சிறந்ததாகும். உயர்திரு. ஜீவபந்து, T. S. ஸ்ரீபால் அவர்கள், தாம் எழுதிய "திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்" என்னும் நூலில் 'ஆதிபகவன்' என்பது சமண சமய முதல்வராகிய ரிஷப தேவரைக் குறிக்கும் என்றெழுதியுள்ளார்கள். அவ்வாறு எழுதியது தவறில்லை. ஆனல் பிறர்கருத்தை மறுத்த முறை தான் மிகமிகத் தவறுடையதாகும். அதனல் அவர் மறுப்புப் பொருத்தமில்லை யென்பதைமட்டும் எழுத விரும்புகின்றேம். 'ஆதிபகவன்' என்பது யாரைக் குறிக்கும் என்பதைக் கூறவர வில்லை. இதை மனங்கொண்டு அன்பர்கள் இக்கட்டுரையைக் காண வேண்டுகின்றேம்.

இக்குறளின் பொருளும் விசேடமும் ஆகப் பரிமேலழகர் கூறியனவற்றைக் காண்போம்.

எழுத்துக்க ளெல்லாம் அகரமாகிய முதலை யுடையன; போல உலகம் ஆதிபகவனகிய முதலை யுடைத்து." என்பது அவர் எழுதிய பொருள்.

" இது தலைமைபற்றி வந்த எடுத்துக் காட்டுவமை. அகரத் திற்குத் தலைமை விகாரத்தா னன்றி நாதமாத்திரையாகிய இயல் பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வா னன்றி இயற்கையுணர்வான் முற்றும் உணர்தலானும் கொள்க. தமிழ் எழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி எழுத்தெல்லாம் என்றார். ஆதிபகவன் என்னும் இருபெயர் ஒட்டுப் பண்புத்தொகை வடநூல் முடிபு. உலகு என்றது ஈண்டு உயிர்கள்மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தால் காணப் படாத கடவுட்கு உண்மைகூற வேண்டுதலின் ஆதிபகவன் முதற்றே யென உலகின் மேல் வைத்துக் கூறினர்; கூறினரேனும் உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க.

ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டானே முதற் கடவுளது உண்மை கூறப்பட்டது.'' என்பது அவர் எழுதிய விசேடவுரை. இவ்வுரையை மேற்கூறிய நூல் ஆசிரியரவர்கள் ஒப்பவில்லை. என்றாலும் சான்றுகாட்டி மறுக்கவேண்டும். அவ்வாறின்றி எள்ளல் முறையில் கூறுகின்றார்கள். அவர்கள் கூற்றைக் காண்க :

"இவ்விளக்கவுரையை நுணுக்கமாக ஆராயின் பரிமேலழகரின் குழப்பநிலை வெளியாகிறது. உலகப் பொதுமறையாம் திருக்குறளை ஒரு சமயச் சார்புடையதாகக்கொள்ள வேண்டி, அவர் அறிவு படும்பாடு, அப்பப்பா! அளவிடற்பாலதன்று; "விகாரத்தானன்றி," "நாதமாத்திரை," "இயல்பாற் பிறந்தது," "செயற்கை யுணர்வு," "காணப்பட்ட வுலகம், காணப்படாத கடவுள்" "கூறினாரேனும்," "கருத்தாகக் கொளக," "முதற் கடவுள் உண்மை" ஆகியவை போன்ற சொற்களாகிய மயக்க மருந்தால் நமது அறிவைச் சுழற்றுகின்றார் பரிமேலழகர். அம் மருந்தையருந்தி மயக்கமுற்றோர் பலருண்டு. அச்சமயவாத மருந்து நமக்கு வேண்டா.

> "சமயக் கணக்கர் மதிவழிகூறாது உலகியல்கூறிப்
> பொருளிது வென்ற வள்ளுவர்."

எனத் திருக்குறளாசிரியரின் கடவுட்கொள்கையைக் களங்கமறக் கண்ட கல்லாடனார் கருத்துவழி நின்று ஆராய்வோம்." (பக். எ) இவ்வாறு பரிமேலழகரைப்பற்றிக்கூறிய ஆசிரியரவர்கள் தாமும் கல்லாடனார், வழிநில்லாமல் சமயக் கணக்கர் வழியேநின்று திருக்குறள் ஆசிரியரின் கடவுட் கொள்கையைக் களங்கம் உறக் கண்டவாற்றினை இனிக் காண்போம்.

"அகரமுதல என்பதில் முதல என்னும் பன்மைச்சொல் முதல் என்னும் ஒருமையினின்றே பிறந்தது. முதல் என்னும் சொல்லிற்குப் பல பொருளகள் உண்டெனினும் இங்கே எண் வரிசையைக் கொண்டு விளங்குகின்றது. இக்கருத்தின்படி எழுத்துக்கள் எல்லாம் அகரத்தைத் தமக்கு முதலாக அல்லது தலைமையாக வுடையன; அவ்வண்ணமே உலகம் ஆதிபகவனைத் தனக்கு முதலாக அல்லது தலைமையாக வுடையது என்னும் பொருளிலேயே அமைகின்றது; எனவே தலைமைபற்றி வந்த எடுத்துக் காட்டுவமை என்பது தெளிவாகிறது." (பக். எ, அ)

பரிமேலழகர் கூறிய 'தலைமைபற்றி வந்த எடுத்துக் காட்டுவமை' என்பதையே ஆசிரியரவர்கள் விளக்கினார்கள். ஆனாலும் முதல் என்பதற்கு எண் வரிசையில் முதல் என்பதுதான் பொருள் என்று கொண்டார்கள். தலைமை என்பதும் முன்

னிற்றலையே குறிக்கும் எனவும் கொண்டார்கள். பரிமேலழகர் கொண்ட தலைமை என்பதற்குரிய இலக்கணத்தைக் கொள்ள வில்லை; மறுப்பும் கூறவில்லை.

'அயோத்தி நகரில் நபிராஜா என்பவருக்கும் அவர் மனைவி மருதேவி என்பவருக்கும் தோன்றிய விருஷபதேவர் என்பவர், உலக மக்கள், மாக்கள் நிலையில் இருப்பதைக் கண்டார்; அவர் களுக்குப் பல திட்டங்களை வகுத்துக் கொடுத்து நல்வழிப்படுத்த எண்ணினார்; மக்கள் அறிவுவளர்ச்சிக்காக அகரமுதலாகிய எழுத்துக்களையும் ஒன்று முதலாகிய எண்களையும் தோற்று வித்துக் கல்வியையும் பல கலைகளையும் வளர்த்தார்; அந்த ரிஷப தேவரே ஆதிபகவன் ஆதலாலும், அவர் தோற்றுவித்த முதல் எழுத்து அகரம் ஆதலாலும், அவ்வகரத்தை முதலாகக் கொண்டே பிறஎழுத்துக்கள் தோன்றின ஆதலாலும் வள்ளுவர் கூறிய ஆதிபகவன் ரிஷபதேவரேயாவர்' என்று நிறுவ முயல் கின்றார்கள். அவர்கள் முயற்சியும் சமயக் கணக்கர் முயற்சியே யன்றி வேறில்லை, ஆசிரியரவர்கள் சைனர் ஆதலின்.

விருஷபதேவர் அகரமுதலிய எழுத்துக்களைப் படைக்கு முன் மக்கள் பேசினரா இல்லையா? எழுதவில்லை யென்றாலும் பேசினார்கள் என்பதில் மாறு இராது. பேச்சுக்களில் வந்த எழுத்துக்கள் எத்தகையன? பேச்சுக்களை வைத்து எழுத்துக் களைப் படைக்கத் தொடங்கிய விருஷபதேவர், அகரத்தை ஏன் முதற்கண் படைத்தார்? ஒருவித வலிந்த முயற்சியும் இன்றி இயல்பில்-அஃதாவது பரிமேலழகர் கூறியதுபோல விகாரத்தா னன்றி நாதமாத்திரையாகிய இயல்பில் பிறத்தலான் அன்றோ அதனை முதற்கண் படைத்தார்? இத்தலைமை கருதாமல் படைத் தார் என்றால் அகரத்தை முதற்கண் படைக்கக் காரணம் வேண்டுமே? மக்களை மாக்களாகக் கருதிய தேவர், எழுத்துக் களையும் முறைகருதாமல் - காரணம் கருதாமல் வரிசைப்படுத் தினர் என்று சொல்லலாமோ?

தேவர் அகர எழுத்தை வரிவடிவில் முதலாக வைத்துப் பிற எழுத்துக்களைப் படைத்தாரேயன்றி ஒலிவடிவில் படைக்க வில்லை. அவர்க்கு முன்பே கருத்துக்களைத் தெரிவிக்கும் சொற்கள் மக்களிடையே வழங்கின. சொற்கள் வழங்கவில்லை யென்று சாதிப்பின் ஒலிகளேனும் வழங்கின என்னலாம். அவ் வொலிகளில் முயற்சியின்றி வாயைத்திறந்த அளவில் தோன்றும் ஒலி அகரவொலியாகும். வாயைத்திறந்து பின்னரே நாக்கு முதலிய உறுப்புக்களால் பிறவொலிகளை யெழுப்புதல் வேண்டும். வரிவடிவில் முறைப்படுத்தியபோது தேவர் அகரத்தை முதற் கண் நிறுத்தியிருக்கலாம். ஒலிவடிவில் இருந்த காலத்தில்

அகரத்தை ஒலித்துப் பிறகு மற்றையவற்றை ஒலித்தல் என்ற வழக்கிருந்திராதன்றோ? ஆதலின் எழுத்து வரிவடிவில் சொற்கள் வருவதற்குமுன் பேச்சுவழக்கில் ஒலிவடிவில் மட்டும் இருந்த போது வரிசை முறையில்லை. அப்போது வழங்கிய ஒலித்த எழுத்துக்களுக்கு ஒலிகளுக்கு முதல் எது? இவ்வினாவுக்கு விடைகூறவியலாது. விடை வேண்டுமாயின் பரிமேலழகர் கூறியதைத்தான் விடையாகக் கொள்ளவேண்டும். ஒழுங்குபெற வரிவடிவில் எழுத்துக்கள் வருவதற்கு முன் ஒலிவடிவில் முறைப்படுத்தப்படாமலே ஒலிக்கப்பட்ட காலத்திலும், அவ்வெழுத்துக்களுக்கெல்லாம் இயல்பிற் பிறக்கும் அகரவெழுத்தே முதன்மையாக நின்றது. அதனை முதலாகக் கொண்டே மற்றைய வொலி எழுத்துக்கள் விகாரநிலையில் தோன்றின. அதனால்தான் பரிமேலழகர் அவ்வாறு எழுதினர். அகரத்தின் ஒலியெல்லா வெழுத்துக்களினும் நிறைந்துளது. அகரவெழுத்தின் ஒலிவழியில்தான் பிறவெழுத்தொலிகள் தோன்றும். அகர வொலி தோன்றவில்லையாயின் பிறவெழுத்தொலிகள் தோன்றா. பிறவெழுத்தொலிகளில் அகரவொலி உள்ளடங்கிக் கிடக்கின்றது. இக்கருத்துக்கொண்டு ஆதிபகவன் முதற்றே யுலகு என்பதைக் காணலாம்.

உலகம் ஆதிபகவனாகிய முதலை யுடைத்து என்பதை நோக்குமிடத்து, உலகம் ஆதிபகவனை முன்னிறுத்திக் கொண்டு பின்னர்த் தோன்றியது என்னலாம். இகரம் முதலியன அகர வொலி யின்றித் தோன்றா. உலகம் ஆதிபகவனை யின்றித் தோன்றாது. இகர முதலியவற்றில் அகரவொலி அடங்கியுள்ளது. உலகத்தில் ஆதிபகவன் மறைந்து நிறைந்துள்ளான். விருஷப தேவர்தான் ஆதிபகவன் என்றால் அவர்க்குமுன் உலகம் இல்லையென்பது பெறப்படும். நபிராஜாவுக்கும் மருதேவிக்கும் தோன்றிய அவர்க்குமுன் உலகம் இல்லையென்று சொல்ல முடியாதல்லவா? அவர் தோன்றுவதற்குமுன் இருந்த உலகம் யாரை முதலாகக் கொண்டது? யாரையும் முதலாகக் கொள்ளவில்லையென்றால் 'அகரமுதல வெழுத்தெல்லாம்' என்ற உவமை பொருந்தாது; பிறவெழுத்துக்கள் தோன்றுமுன் அகரம் தோன்றியதாதலின்; உலகம் தோன்றுமுன் விருஷபதேவர் தோன்றவில்லையல்லவா?

அகளங்கதேவர், "எழுத்துக்கள் அகரத்தை முதலாகவுடையன; தீர்த்தங்கரர்கள் விருஷபதேவரை முதலாகவுடையர்" என்று கூறியதை நாம் காணும்போதும் மேற்சொன்ன கருத்து வலியுறும். அகரம தோன்றிப் பிறவெழுத்துக்கள் தோன்றின. விருஷபதேவர் தோன்றிய பின்னர்ப் பிறதீர்த்தங்கரர்கள்

தோன்றினர். விருஷபதேவர்க்கு முன்னர்த் தீர்த்தங்கரர் இல்லை. அகரத்துக்குமுன் வேறு எழுத்தில்லை. இப்படிப் பார்க்கும் போது, 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்பதில் ஆதிபகவன் விருஷபதேவராகக் கொண்டால் விருஷபதேவர்க்குமுன் உலகில்லை யென்பதன்றோ பெறப்படும்?

இதுகாறும் கூறியவாற்றால் உவமை வகையில் நிலைநாட்டப் பட்ட ஆதிபகவன் விருஷபதேவர் ஆகார் - அஃதாவது சமண சமய முதல்வராகக் கருதப்படும் விருஷபதேவர் ஆகார் என்பது பெறப்படும். இனிப் பகவன் என்னும் சொல்லைப்பற்றிப் பார்ப்போம்.

பகவன் என்பது வடமொழிச் சொல் என்றும் அதற்குச் 'சர்வக்ஞன்', 'கேவலஞானி' என்பன பொருள் என்றும் கூறினர் ஆசிரியர். அச்சொற்கள் பிறசமயத்தாரும் கையாண்ட சொற்களாதலின் அவைபற்றி ஆதரவாகக் கொள்ளவும் மறுக்கவும் வேண்டியதில்லை. பகவன் என்பதற்கு ஆறு குணங்கள் உடையவன் என்றும் பிறவாறும் கூறினோரும் உளர். இன்றுள்ள கதைத் தொடர்பாக அமைந்த தமிழ்நூல்கள் யாவும் சமயச் சார்புமிக்க காலங்களில் எழுதப்பட்டன. சமயச் சார்பாக ஆதி பகவன் என்பதற்குப் பொருள் கூறுவதாயின் சைவ சமயம் முதலிய பிற சமயச் சார்பாகவும் கொள்ளலாம் அன்றோ?

பகவன் என்பது 'பகு' என்பதனடியாகப் பிறந்த தமிழ்ச் சொல் ஆகும். பகுத்தவன் பகவன் எனப்பட்டான். தன்னுடம்பில் பாதியைப் பகுத்தவன் பகவனாவான். எனவே உமை யொரு பாகனாகிய சிவனே ஆதி பகவனாவான் என்னலாம். அன்றியும், ஆதி என்பது சக்தியைக் குறிக்கும் என்றும், ஆதிக்கு - சக்திக்குத் தன் உடம்பைப் பகுத்தவன் ஆதிபகவன் ஆவான் என்றும் கூறலாம். இன்னும் விரிவாக இதுபற்றிச் சாத்திரத் துணைகொண்டும் கூறலாம். இவ்வாறே திருமால் ஆதிமூலம் எனப்படுவனாதலின் அவனையே ஆதிபகவன் என வள்ளுவர் வணங்கினார் எனவும் வைணவர் கொள்ளலாம்.

பகவன் என்ற சொல்லுக்குரிய பொருள்களைக் கூறவந்த சூடாமணி நிகண்டு ஆசிரியர்,

"பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்."

என்றார். அவர் பகவன் என்ற சொல் ஈசனைத்தான் முதலில் குறித்ததாகக் கொண்டார். "சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்" என்பதற்கேற்ப ஈசனை முதலில் குறித்தார். 'சிறப் புடைப் பொருளைப் பிந்துறக் கிளத்தல்' என்பதற்கேற்பவேனும்

சினனை யிறுதியில் கூறவில்லை. எனவே எப்படியும் சினன் - அருகன் - விருஷபதேவன் ஆதிக்கடவுளாகான் என்னலாம். சிவபிரானைக் குறிக்க அவ்வாசிரியர் எல்லாக் கடவுளுக்கும் பொதுவான சொல்லாகிய 'ஈசன்' என்ற சொல்லையே கொண்டார். பகவன் என்ற பொதுச்சொல் எப்படிச் சிவபிரானையே முதலில் குறிக்குமோ அப்படியே ஈசன் என்ற பொதுச்சொல்லும் சிவபிரானையே குறிக்கும் என்றெண்ணினார். அதனால்தான், "பகவனே சிவனே" என்று தொடங்காமல், "பகவனே ஈசன்" என்று தொடங்கினார். இவர் கூற்றுப்படியும் ஆதிபகவன் சிவனே என்னலாம்.

> " நுதல்விழி நாட்டத் திறையோன் முதலாப்
> பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக"
>
> (மணிமேகலை. க : ௫௪, ௫௫)

என்றார் சாத்தனார். இவரும் சிவபிரானை முதற்கண் கூறியது காண்க.

இவற்றால் ஆதிபகவன் என்பதைப் பொதுவில் முழுமுதற் கடவுள் என்று கொள்வதைவிட்டுக் காரணம் கருதிக் கொள்வதாயின் எல்லாச் சமயத்தாரும் தத்தம் கடவுளரைக் குறிப்பதாகக் கொள்ள இடமுண்டு. அதற்கேற்ப அடுத்தடுத்துவரும் குறள்களில் உள்ள 'வாலறிவன்' முதலிய சொற்களுக்கும் பொருள்காண இடம் உண்டு. அவற்றிற்கும் பொதுவில் இறையின் குணங்களாகக் கொள்வதே சிறக்கும். இல்லையேல் பிறர் கூறுவனவற்றை எடுத்துக் கூறிப் பொருந்தாமையைக் காட்டவேண்டும். ஆசிரியர் அவர்கள் அவ்வாறு செய்யாமல் தம் சமயத்துக்கேற்பக் கூறிச் சென்றார்கள். வாலறிவன், மலர்மிசையேகினான் முதலிய சொற்களுக்கும் தம் சமய நூல்களிலிருந்தே சொல்லாட்சிச் சான்று காட்டினார்கள். பிற சமய நூல்களிலும் அச்சொற்கள் ஆளப்பட்டுள்ளன. சைவ சமய நூல்களிலிருந்து மிகுதியும் காட்டலாம். இக்கட்டுரையின் நோக்கம் அஃதன்று ஆதலின் விடுத்து மேற் செல்கின்றேம்.

இனி ஆசிரியர் எழுதிய மாறுபட்ட கருத்துக்கள் சில இன்னும் காட்டுகின்றேம்.

(1) "நமது தமிழ் மறையாகிய திருக்குறள்போற்றும் ஆதி பகவன் கண்கண்டகடவுளா காணாதகடவுளா என்பதைப் பற்றிப் புலவர்களிடையே கருத்து வேற்றுமைகள் வளர்ந்து வருகின்றன." (பக். க) என்று தொடக்கம் செய்கிறார். கண்காணாக் கடவுளும் உண்டு என்று ஒப்புக்கொண்ட நிலையில் தொடக்கம் செய்திருப்பது அவர் கொள்கைக்கே மாறுபாடு. ஒப்புக்கொள்ள

வில்லையென்றால் கண்காணு இந்திரன் உண்டென்பதும் ஒப்புக் காள்வதற்கில்லை. ரிஷபதேவருக்குச் சமவசரணம் அமைத்து வழி பட்டான் இந்திரன் என்றெல்லாம் (தம் சமயக் கதையைக்) கூறு கிறார் அவர். இந்திரனைக் கண்டவர் யார்? ரிஷபதேவர் மக்களுள் ஒருவர். அவர் நல்லன புரிந்திருக்கலாம். பிறவும் செய்திருக் கலாம். இந்திரன் வழிபடச் சென்றது முதலிய யாவும் கதைகள் அல்லவா? கண்காணு இந்திரனைப்பற்றிக் கதைகட்டும்போது கண்காணுக் கடவுளும் உண்டென்று ஏன் கொள்ளலாகாது?

(2) "இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து, கெடுக கெடுக உலகியற்றி யான்." என்னும் குறட்பாவில் இவ்வுலகைப் படைத்துக்காத்து அழிக்கும் கடவுளை அச்சமின்றி வெறுக்கின் றார். அவ்வாறு ஒரு கடவுள் இருப்பதாக அவருக்கு நம்பிக்கையு மில்லை." (பக். நடு) இவ்வாறு ஆசிரியர் எழுதியுள்ளது எவ்வளவு பொருத்தமற்றது? குறளின் கருத்தையறியாது கூறியதை என் னென நினைப்பது? "உலகியற்றிய கடவுள் ஒருவன் இரந்தும் உயிர் வாழ என்று வேண்டினனாயின் அக்கடவுள் பரந்துகெடுக" என்ற கருத்தில் உள்ள இக்குறளில் ஆசிரியர் கூறிய கருத்தாவுளது? "கடவுள், ஒருவன் இரந்து உயிர்வாழ வேண்டினரில்லை; உலகத் தில் உள்ள ஒருவன் அவ்வாறு தாழ்நிலையடைந்து இரந்து வாழ் கின்றான். அஃது அவன் செயலே யன்றிக் கடவுள் விரும்பிய செயலன்று" என்பதன்றோ கருத்து இக்குறளுக்கு?

(3) "கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன், நற்றாள் தொழா அ ரெனின்." இக்குறளில் கற்றவரைமட்டும் அழைத்து, 'விருஷபதேவரைக் குருவாக வழிபடுக' என்று வள்ளுவர் கூறி னாராம். 'கற்றதனால் ஆனபயன் கடவுள் திருவடியை வணங்கு தலே' என்று கூறவந்த குறளில் அவ்வாறு கருத்துக் காணலாமா?

(4) "எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்." என்ற வெற்றிவேற்கைத் தொடருக்கு "எழுத்தறி வித்தவன் ஆதிபக வான் (விருஷபதேவராவார்)" என்று பொருள் கொண் டார் ஆசிரியர், 'ஆசிரியனை இறைவனாக (கடவுளாக)க் கருத வேண்டும் மாணவன்' என்பதை வற்புறுத்த வந்த தொடராகிய அதற்கு, 'எழுத்தை யார் வெளிப்படுத்தினார்' என்பதைக் கூற வந்ததாகக் கூறியது பெரும் பிழை. வெற்றிவேற்கை ஆசிரியர் அவ்வாறு கூறியிருப்பார் என்று துணிந்து பொருத்தமில்லாமல் எழுதியுள்ளார்கள்.

(5) விருஷபதேவர் நிலையையும் சிவபிரான் நிலையையும் ஒப்பிட்டுக் காணவேண்டும் என்று சில ஒப்புமைகளைக் கூறு கிறார் ஆசிரியர். அவர்கள் கூறும் ஒப்புமை, விருஷபதேவர் வரலாற்றை—குணங்களைச் சிவபிரானுக்குத் திரித்துக் கொண்

டார்கள் சைவர்கள் என்று கொண்டு கூறப்பட்டுள்ளது; ஆதாரம் கூறினர்கள் இல்லை. சைவ சமயக் கொள்கைகளை—சிவனுக்குரிய குணங்களைச் சைனர்கள் திரித்துக் கொண்டார்கள் என்று ஏன் கூறலாகாது? சிவபிரானை உமை யொருபாகன் என்பர் சைவர். விருஷபதேவரைச் சைனர் கேவலஞானக் கிழத்தியைப் பிரியாத பாகன் என்று திரித்துக் கொண்டார்கள். இப்படிப் பல திரிபுகள் கூறலாம்.

சமயம் என்ற குறுகிய அமைப்பில் அடங்காமல் அவரவர் தத்தமக்கு விருப்பமான கடவுளர்களை வழிபட்டு வந்த தமிழகத்தில் சைன பௌத்த சமயத்தவர்களாலேயே சமயங்கள் தோன்றலாயின. ‘பள்ளி’ என்ற சொல் சைன பௌத்த மடங்களைக் குறிப்பதைக் காணும்போது எங்கிருந்தோ வந்த கூட்டத்தார் (இராமகிருஷ்ண மிஷன், கிறிஸ்தவ மிஷன் போன்று) ஆங்காங்கு மடங்கள் அமைத்துத் தத்தம் சமயங்களைப் பரப்ப முற்பட்டனர் என்பது புலப்படும். வடமொழி வந்த பின்னர்த் தமிழ் தென்மொழி யெனப்பட்டது போல சைன பௌத்தர் வரவால் சிவனை வழிபட்டவர் சைவர் எனவும் திருமாலை (விஷ்ணுவை) வழிபட்டவர் வைஷ்ணவர் எனவும் சமயப்பெயர்கள் கொண்டு பிரிந்தனர். தூய தமிழகத்தில் வடமொழி வந்தமைக்கே சைன பௌத்தர்களே காரணர். தொல்காப்பியத்தில் மாயோன் முதலிய கடவுளர் கூறப்படுதலும் அருகனே புத்தனே கூறப்படாமையும் காண்க. சங்க இலக்கியங்களிலும் அவர் பெயர்கள் இல்லாமை காண்க. தமிழகம் வந்த சைனர் அவர் வருதற்குமுன் தமிழகத்திருந்த கதைகளையெல்லாம் திருத்தித் தம் சமயத்துக்கேற்பப் புனைந்து கொண்டனர். அப்புனைவில் ஒரு சிறப்பு என்னவென்றால் கேட்பதற்கு அருவருப்பாக வுள்ளனவற்றை யெல்லாம் விருப்பாகக் கேட்கும்படி திரித்துக் கொண்டதே. அவ்வாறு கட்டிய கதையே ஆதிபகவன் என்று அவர்கள் கூறும் விருஷபதேவர் கதையும். வடநாட்டுக் கதைகளாகிய இராமாயண பாரதங்களையும் தம் சமயத்துக்கேற்பத் திரித்துக் கொண்டார்கள். வான்மீகி இராமாயணத்தைக் கம்பர் தம் நாட்டுக்கேற்பத் திரித்துக் கொண்டார் சிலவிடங்களில். . அதுபோலவே சைனர்களும் திரித்துக் கொண்டார்கள். ஐவருக்கும் மனைவியென்ற திரௌபதியை அவ்வாறு கொள்வது நன்று அன்று என்று அர்ச்சுனன் ஒருவனுக்கே மனைவியாக்கிக் கதையைத் திரித்துக் கொண்டார்கள். எனவே கதையைத் திரித்துக் கொள்வதில் தேர்ந்தவர் சைனர்.

(6) பிற சமயநூல்களில் கடவுள் இவ்வுலகை ஏன் படைத்தார்? எங்கிருந்து படைத்தார்? என்பனபோன்ற கேள்விகளுக்கு

விடையில்லை என்று எழுதுகிறார். பிற சமய நூல்களைப் படித்துப் பார்க்கட்டும், விடை தெரியும். சைவ சாத்திரங்களைக் கற்றால் தெளிவாக விடை காணலாம். சாத்திர நூல்களையும் கதை கூறும் நூல்களையும் ஒன்றாகக் கருதாமல் சாத்திரங்களையும் அவற்றை விளக்க எழுந்த கதைகளையும் நன்கு படித்துப் பார்த்தால் விடை தெரியும். பார்க்க.

(7) இனி மேற்கோள் காட்டியதுபற்றிக் காண்போம். திருக்குறளைத் தம் சமயச் சான்றோர்கள் எவ்வாறு புகழ்கிறார்கள்—போற்றுகிறார்கள் என்பதற்குத் தோலாமொழித் தேவர் கூறிய "புகழ்ச்சி நூல்" என்பதையும், சமய திவாகர முனிவர் கூறிய "எம்மோத்து" என்பதையும் காட்டித் திருக்குறள் சைன சமயத்தைச் சார்ந்தவராகிய திருவள்ளுவர் இயற்றிய நூல் என்று கூறாமல் கூறுகிறார்கள். திருக்குறளையும் திருவள்ளுவரையும் போற்றாத சான்றோர் சமயப் பெரியார்கள் இல்லை. வீர சைவ சமயத்தவராகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தமது திருவெங்கைக் கலம்பகத்தில் வள்ளுவரை, "என்னடிகள்" என்று கூறுகிறார். திருக்குறளைச் "செஞ்சொற் பொருள்" என்று நால்வர் நான்மணி மாலையில் கூறுகின்றார். திருவள்ளுவரை வீரசைவர் என்பாரும் உளர். எனவே தம் சமயச் சான்றோர் புகழ்ச்சியைக் கொண்டு வலியுறுத்தல் வேண்டுவதில்லை.

திரு. வி. க. அவர்களின் பாக்களை மேற்கோள் காட்டிப் பெருமையுறுதல் பொருந்துவதே. என்றாலும் திரு. வி. க. அவர்களை நன்கு உணர்தல் வேண்டும். அறவோர் பட்டியலில் விருஷபதேவர், புத்தர், கிறிஸ்து, சோக்ரதர், இராமலிங்க அடிகள், தாயுமானவர், காந்தி முதலியவர்களைக் கூறினர் திரு. வி. க. அவர்கள். தம் சீடர்களுக்கு மீன் துண்டங்களைப் பகிர்ந்த கிறிஸ்துவை அறவோர் பட்டியலில் ஆசிரியர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்களோ? அருக சமயத்தில் கண்ட நல்லனவற்றை மதித்து "அருகன் அருகே" முதலிய நூல்களை யியற்றிய திரு. வி. க. அவர்கள் கிறிஸ்துவையும் போற்றியதை உணர வேண்டும். அன்றியும் சைவ சமயத்தை விட்டு மாறிவிடவில்லை யென்பதையும் மறக்கக் கூடாது. சைவ சித்தாந்த மகாசமாஜ மாநாடுகளில் கலவாமல் இருக்கவில்லை அவர்கள்.

(8) "ஐந்தவித்தா னாற்றல் அகல்விசும்பு ளார்கோமான், இந்திரனே சாலும் கரி." என்ற குறளில் ஐந்தவித்தான் என்பது விருஷபதேவரைக் குறிக்கும் என்றும் அவரை ஆயிரம்கண் கொண்டு வழிபட்டுப் போற்றியதையே 'இந்திரன்கரி' என்பது குறிக்கும் என்றும் எழுதினார் அவ்வாசிரியர். தம் சமண சமயத்

துக்கேற்ப எழுதிக்கொண்டார்; எழுதிக் கொள்க. ஆனால், "இந்திரன் கௌதம முனிவரின் மனைவியைக் கற்பழித்ததன் காரணமாக அம்முனிவரின் சாபத்திற்குள்ளாகி உடலெல்லாம் சொல்லொணுக் குறிகளை யுடையவனானன் என வைதிக சமய நூல்கள் கூறுகின்றன. இக்கொள்கையைப் பரிமேலழகரும் தற்கால உரையாசிரியர் சிலரும் ஏற்றுக் கொண்டுள்ளது வருந்தத் தக்க செய்தியாகும்." (பக். கசு) என்றெழுதியுள்ளமை மிகப் பெருந் தவறாகும். பரிமேலழகர் ஆயிரங் கண்ணுடைய இந்திரனை எந்தவிடத்தில் (குறளில்) குறித்துள்ளார்? "ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து, வேந்தனும் வேந்து கெடும்" என்ற குறளின் விசேடத்தில் இந்திரபதவி யடைந்த நகுடன் கதையைக் குறிப்பிட்டுள்ளாரேயன்றி அக்கதையை யாண்டும் குறிப்பிடவில்லை. ஆசிரியர் அவர்கள் எழுதியது எவ்வளவு பெரும் பிழை!

மேற்குறளுக்கு எந்தவகையிலும் புராணக் கதைதான் கூறியாக வேண்டும். கதையில் நல்லகதை கெட்டகதை என்று பாகுபாடு படுத்திக் கூறுவானேன்? கதை கதைதானே? ஐந்தவித்தானாற்றலுக்குச் சமண நூற் கதையைவிட வைதிக நூற்கதை மிகப் பொருத்தமே. இந்திரன் பற்றிய ஓவியத்தைக் காணும்போது ஆயிரம் கண்ணுடைய ஓவியமாயின் ஐந்தவித்தானாற்றல் நினைவுக்கு வரும். சமணக் கதையாயின் இந்திரனின் விருப்பம் என்பது விளங்குமேயன்றி (வைதிகக் கதைக்கேற்ப) ஐந்தவித்தான் ஆற்றல் விளங்காது. ஆயிரம் கண்களும் ஐந்தவித்தான் ஆற்றலால் வாராமல் இந்திரனின் வைக்கிரம சரீரத்தின் ஆற்றலால் வந்தன என்பதை ஆசிரியரே கூறினர். (பக். கச) எனவே வைதிகநூற் கதையே சாலச் சிறந்தது. இந்திரர் பலர் என்பது வைதிக நூல்களில் வருவது. அவருள் நகுடனும் ஒருவன். அவன் கதையை மேற்குறளுக்குக் கொள்வதில் யாதோர் அருவருப்பும் இராது. பரிமேலழகர் நகுடன் கதையையே மனதில் கொண்டவராகலாம்.

இதுகாறும் "திருவள்ளுவர் வாழ்த்தும் ஆதிபகவன்" என்ற நூலில் கண்ட கருத்துக்கள் பொருத்தம் இல்லை என்பதையே எழுதினேம். எம் முடிபாக ஒன்றும் எழுதவில்லை. ஆதிபகவனைப்பற்றி யென்பதைக் கூறிக் கொள்கின்றேம்.

---

# தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

# தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

1960 தைத் திங்களில் சென்னை மாநிலத்திலுள்ள பல புலவர் கல்லூரிகளிலும், தனிப்பட்ட முறையிலும் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் பட்டத் தேர்வு வகைக்குப் பயின்று விண்ணப்பிக்கும் மாணவர்களை ஊக்கும் வகையில் 1951 முதல் இச் சங்கத்தார் நடத்தி வரும் தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வில் இவ்வாண்டு,

| | விண்ணப்பித்தவர் | எழுதியவர் | தேறியவர் |
|---|---|---|---|
| வித்துவான் புகுமுகம் | 10 | 6 | 4 |
| ,, முதனிலை | 83 | 62 | 57 |
| ,, இறுதிநிலை | 51 | 39 | 39 |

இவர்களில் ஒவ்வொரு வகுப்பிலும் முதற்றகுதியில் தேர்ந்த முதல் மூவருக்கும் ரொக்கப் பரிசுகள் குறித்தபடி வழங்கப் பெறும். இவர்களுக்கும் மற்றும் தேர்ந்தவர்களுக்கும் தகுதித் தாள்கள் வழங்கப்பெறும்.

### வித்துவான் புகுமுகம்

291. பெ. வத்சலாபாய், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி, **முதற் பரிசு ரூ.** 20.

293. இரா. மகாலட்சுமி ,, **2-ஆம் பரிசு ரூ.** 15.

298. நா. இராமாத்தாள், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர், **3-ஆம் பரிசு ரூ.** 10.

### வித்துவான் முதனிலை

552. செ. பூவராஜ், அரசர் கல்லூரி, திருவையாறு, **முதற் பரிசு ரூ.** 40.

514. P. நடேசன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள், **2-ஆம் பரிசு ரூ.** 30.

546. R. நாகராசன், அரசர் கல்லூரி, திருவையாறு, **3-ஆம் பரிசு ரூ.** 20.

### வித்துவான் இறுதிநிலை

337. V. M. சம்பந்தன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள், **முதற் பரிசு ரூ.** 50.

349. சிங்காரவேலன், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர். **2-ஆம் பரிசு ரூ.** 35.

344. மாணிக்ககணபதி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள், **3-ஆம் பரிசு ரூ.** 25.

## புகுமுகம்

மூன்றாந்தகுதி

296. முகம்மதுஜக்கிரியா, அரசர் கல்லூரி, திருவையாறு.

## முதனிலை

இரண்டாந்தகுதி

559. த. பாலசுந்தரம், அரசர் கல்லூரி, திருவையாறு.
518. குருசாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
545. மு. பிச்சுமணி, அரசர் கல்லூரி, திருவையாறு.
525. கா. ச. அப்பாவு, சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
523. V. நடேசன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
517. R. கேசவன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
519. மன்னர்மன்னன், ,, ,,
585. S. இராசமாணிக்கம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
513. P. சங்கரலிங்கம், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
558. தி. சீனிவாசன், அரசர் கல்லூரி, திருவையாறு.
586. இராமானுசம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
562. அரங்கசாமி, கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
557. அ. சு. இராமலிங்கம், அரசர் கல்லூரி, திருவையாறு.

மூன்றாந்தகுதி

535. நஞ்சன், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
584. நெடுஞ்செழியன், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
579. காசிராசன், ,, ,,
581. S. R. மணி, ,, ,,
522. A. கிருஷ்ணன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
516. சபாநாயகம், ,, ,,
561. குழந்தைசாமி, கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
582. மாணிக்கவாசகம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
512. இராமசாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
544. துரையன், அரசர் கல்லூரி, திருவையாறு.
527. கொ. செங்கோடையன், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
591. சுயம்பு, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
511. K. செட்டிஐயா, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
551. சந்தானசவரிமுத்து, அரசர் கல்லூரி, திருவையாறு.
567. சையதுகுசைன்மகதூம், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
564. R. சபாபதி, கரந்தைப்புலவர் கல்லூரி, கரந்தை.
521. சுப்புராசு, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.

547. V. K. ஆறுமுகம், அரசர் கல்லூரி, திருவையாறு.
550. செ. கருப்பையன், ,, ,,
541. பழனியம்மாள், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
573. பாலசுப்பிரமணியன், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
515. S. ராதாகிருஷ்ணன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
592. வத்சலா, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
565. நேசம்மாள், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
520. G. தண்டபாணி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
539. பா. நா. அரங்கநாயகி, சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
549. மா. வை. சீனிவாசன், அரசர் கல்லூரி, திருவையாறு.
534. கு. சபாநாதன், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
542. கி. இராமதிலகம், ,, ,,
529. ந. பழனிசாமி, ,, ,,
540. S. மரகதம், ,, ,,
526. அ. சாமியப்பன், ,, ,,
590. சுவாமிநாதன், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
583. முத்தையன், ,, ,,
566. செண்பகவல்லி, திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
587. இரங்கசாமி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
574. R. பாலசுப்பிரமணியன், ,, ,,
556. பா. சுப்பராயன், அரசர் கல்லூரி, திருவையாறு.
532. ந. மாணிக்கம், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
538. கோ. ந. அங்கயற்கண்ணி, ,, ,,
536. ந. இரா. இராமசாமி, ,, ,,

## இறுதிநிலை

முதற்றகுதி

336. N. மாரிமுத்து, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
333. M. வைத்தியநாதன், ,, ,,
340. N. கோபால். ,, ,,
343. நாராயணசாமி, ,, ,,
339. வேங்கடாசலம், ,, ,,
374. திருஞானசம்பந்தம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
371. ப. நீலா, ,, ,,

இரண்டாந்தகுதி

338. G. சிவலிங்கம், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
367. வி. காந்திமதி, திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.

359. ந. கு. அப்பாச்சி, அரசர் கல்லூரி, திருவையாறு.
354. இரா. கதிரேசன், ,, ,,
366. P. S. கிருட்டிணமூர்த்தி, கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
335. S. கலியமூர்த்தி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
334. P. S. கலியமூர்த்தி, ,, ,,
341. குத்தாலலிங்கம், ,, ,,
373. அரங்கராமாநுஜம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
365. A. பாலன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
348. பார்த்தசாரதி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
346. வேங்கடாசலம், ,, ,,
376. மகாலிங்கம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
379. மணி, ,, ,,
355. மு. வேங்கடேசன், அரசர் கல்லூரி, திருவையாறு.
378. முத்துக்குமாரசாமி, பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

மூன்றுந்தகுதி

372. சௌந்தரராசன், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
377. கல்யாணராமன், ,, ,,
345. K. B. சுப்பிரமணியன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
347. G. திருஞானசம்பந்தன், ,, ,,
368. சோசப் சுந்தரராஜ், திருவள்ளுவர் செந்தமிழ்ப்புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
369. K. தமயந்தி, ,, ,,
357. மா. நா. நெல்லையப்பன், அரசர் கல்லூரி, திருவையாறு.
361. கை. பிச்சைப் பிள்ளை, ,, ,,
363. V. சக்கராராம், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
362. T. சாமிநாதன், ,, ,,
381. இராமலிங்கம், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.
380. பாலகிருஷ்ணன், ,, ,,
375. இரத்தினசபாபதி, ,, ,,

நெல்லை 4-4-60

**பு. சி. புன்னைவனநாதன்,**
புலவர்குழுத் தலைவர்.

# ஆறுங்கூர் அகத்தீச்சுரர் கல்வெட்டுக்கள்

[வித்துவான், இரதபதி பாலசுப்பிரமணியன்.]

ஆறுங்கூர் என்னும் சிற்றூர், தஞ்சை மாவட்டம் மாயூரம் வட்டத்தில், திருத்துருத்தி என்னும் தேவாரம் பெற்ற தலமாகிய குற்றாலத்துக்குத் தெற்கே சுமார் மூன்றுகல் தூரத்திலுள்ளதாகும். இவ்வூரின்கண் உள்ள திருக்கோயிலுக்கு 'அகத்திச்சுரம்' என்று பெயர். (ஈச்சரம் - கோயில்) அகத்திச்சரம் என்றால் அகத்தியரால் பூசிக்கப்பெற்ற கோயில் என்பது பொருள். இது, மழவர்கோன் மகளாகிய செம்பியன் மாதேவியாரால் கட்டப்பெற்ற கருங்கற்கோயிலாகும். கோடை விடுமுறையில் குற்றாலத்திலுள்ள என் உறவினர் வீட்டிற்குச் சென்றிருந்தபோது, ஒருநாள் ஆறுங்கூர் செல்லும் வாய்ப்பு ஏற்பட்டது. அது பொழுது அக் கோயில் கல்வெட்டைப் படிக்கும் பேறுபெற்றேன். இக் கல்வெட்டு இதுவரை தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதியில் வெளியிடப் பெறுமையால், ஆராய்ச்சியாளர்க்குப் பயன் படுமென்று கருதி நற்றமிழ் நங்கையாம் செந்தமிழ்ச் செல்வியில் வெளியிடுகின்றேன். கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ள இடமாவது, கரு இல்லில் வடபுறச் சுவராகும்.

**கல்வெட்டு**

**வரி - 1 :** ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவநச் சக்கரவர்த்திகள் கோனேரின்மை கொண்டான் செயங்கொண்ட சோழவளநாட்டு ஆறுங்கூர் திருக்கற்றளி மகாதேவர் கோயில் தேவகன்மிக்கும் மாகேசுரக் கண்காணி செய்வார்க்கும் ஸ்ரீகாரியம் செய்வானுக்கும் திருநாமத்துக் காணியும் தேவதான இறையிலியும்.

**வரி - 2 :** ஆன இந்நாட்டு வெள்ளை விநாயக மங்கலம் நிலம் அஞ்சரையே ஒருமாவரையே அரைக்காணி முந்திரிகைக் கீழரையே ஒரு மா வரைக்கும் காவேரித் தென் குலையிலே பதினாற்கோல் தறைபற்றிட்டு —— பதினெஞ்சாவது வரையும் செய்து வாராதே இத் தேவற்கு நடுநட—வது முதல் இ——ரைக் கோல் தறையாக செய்வித்துக் கொண்டு வாரா நின்றார்கள்

**வரி - 3 :** என்றும் இப்படியாகையாலே இவ்வூர்க்கு இரப் பறையே திரப்பின்றியே இரா நின்றதென்றும், இப்படி தவிர்க இவ்வூர்க்கு முன்பு பற்றிட்டு வருகிற இடத்து மேற்க்கடைய ஐங்கோல் தறை இவ்வூர்க்கு இப் பற்றாகவும் நீக்கி நின்ற கோவில்

பதினஞ்சாவது வரையும் செய்து வந்த கோலுக்கு மேலேற்றமாக செய்வித்த கோல் ஏழரையும் மூன்பு செய்து

**வரி - 4:** வந்த திருவமூந்தூராரே செய்யவும். நீக்கி நின்ற கோல் ஒன்பதும் மூன்பு ஊர்களாய் வாணதிராயர் நிச்சயித்த படியே இட்டு இந்நாட்டு அரைசூர்க்குப் பற்றாக இடசெய்யவும்: காட்டானமைக்கு காசுதண்டும் ஆண்டுகள் இவ் வெள்ளை விநாயக மங்கலத்துக்கும் இறுக்கும் காசு தவிரவும் கடவதாகப் பெற வேணுமென்று நித்திய — —

**வரி - 5:** நமக்கு சொன்னமையில் இப்படிச் செய்யக் கடவதாகச் சொல்லி கணக்கிலும் இட்டுக்கொள்ளக் கடவார் களாக வரிக்கூறு செய்வார்களுக்கும் சொன்னோம். எழுதினான் திருமந்திர ஓலை இராச நாராயண மூவேந்த வேளான் எழுத்து. இவை வில்லவராயன் எழுத்தென்றும், இவை விழிஞத் தரையன் எழுத்தென்றும்— —

**வரி - 6:** ராயன் எழுத்தென்றும் இவை வேணாட்டரையன் எழுத்தென்றும் இவை காடவராயன் எழுத்தென்றும் இவை — — எழுத்தென்றும், இவை காடவன் நாராயணன் எழுத்தென் றும், இவை மூவேந்தராயன் எழுத்தென்றும், இவை **தொண்ட மான்** எழுத்தென்றும் யாண்டு முப்பத்து நாலாவது நாள் நூற்று எண்பத்து ஆறினால் பிரஸாதஞ் செய்தருளிய திருமுகப்படி. இது பன்மாகேஸ்வர ரக்ஷை.

## அறிவீரே!

[வேண்பாவூர், பொ. திருஞானம்]

மறைகள் நுவலும் கருத்தினையே
மக்கள் அதனை அறியாமல்
குறைகள் சொல்லித் திரிவதனால்
குவலயம் நன்கு சிறந்திடுமோ?
முறையால் இறைவனை வணங்கிடவே

நிறையருள் பெற்றே உலகதனில்
நெடிது வாழ அறிவீரே!

# செந்திலாண்டவன்

# செய்தருளுஞ் சிறப்புத் திருவருள்

[ சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை. ]

தெய்வ நாட்டமுடைய நல்லன்பர்களுக்கு இறைவன் எந்நாளும் முன்னின்று சிறப்பித்துத் திருவருள் புரிந்து வருகின்றனன். இத்தகைய நாட்டமுடையவர் பள்ளியின்கண் ஆசானைச் சார்ந்த மாணவரொப்பர். தெய்வ நாட்டமில்லாதவர் தெருவில் திரிந்தலையும் கல்லாமாந்தரையொப்பர். சார்ந்தாரைக் காத்தலன்றோ தலைவர் கடனாவது!

இம்முறையில் செந்திலாண்டவனின் திருவடி நாட்டமிக்க மெய்யன்புப் பெரியார் மதுரை 'மாரியப்பசாமிக'ளாவர். அவர்கள் முருகன் திருவருளால் முத்தமிழ் வல்லாராய்த் திகழ்கின்றனர். அவ்வடிகளாரின் திருவரலாறு நம்மனோர்க்குப் பெருந்துணையாக நின்று நல்வழி காட்டும். அவர்கள் திருவருளின் மாட்டு உலையா நெஞ்சத்துறுதி மிக்கவர். அவ்வுறுதிப்பாட்டினால் திருவருள் தோன்றாத் துணையாக நின்று ஆட்கொண்ட அன்றுதொட்டு இன்றுகாறும் அவ்வப்போது அகத்தும் புறத்தும் செய்துபோதரும் அருளிப்பாடுகள் அளப்பில. அவற்றைப் பிறர்பிறர் வாயிலாகக் கேட்டுணர்வதன்றி அடிகள் வாயிலாகக் கேட்டுணர்வதும் அருமை. இம்முறை காரைக்காலம்மையார் தமக்குக் கிடைத்த திருவருள் வெளிப்பாட்டினை 'விளம்புந்திற மன்று' என உரைசெய்ய அஞ்சியதோடொக்கும். எனினும் அவ்வம்மையார் பிறர்பொருட்டு வெளியிட்டமை போன்று அடிகளாரும் உளங்கனிந்து ஒருசில கூறியுள்ளார்கள் உலகோர் பொருட்டு. அவை வருமாறு:

பிறப்பு

'பாண்டி நாடே பழம்பதி' யெனவும், 'தென்பாண்டி நாடே சிவலோகம்' எனவும், 'தென்னாடுடைய சிவனே' எனவும் சிறப்பித்துச் சொல்லப்படும் தென்பாண்டி நாட்டில் மதுரைமாநகர்க்கண் புதுக்குயவர் பாளையத்தில் வேட்கோவர் குலத்தில் பூச்சன் செட்டியாரென்னும் தெய்வ நாட்டமிக்க பெரியாரொருவர் வாழ்ந்திருந்தனர். அவர் தங்குலத் தொழிலாம் மட்பாண்டஞ் செய்புந் தொழிலை மேற்கொண்டிருந்தனர். இவர் தந்தந்தையார் வாழவந்தான் செட்டியாராவர். இவர்கள் தெலுங்கினைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். இவர்கள்தம் குலதெய்வம் வாழ

வந்த அம்மன். மண்டல மாணிக்கம், இவர்கள் கோத்திரம். தெலுங்குக் கோத்திரம் தொண்ணூற்றினுள் ஒன்று. இவர்தம் கால்வழியினராய நம் பூச்சன் செட்டியாரவர்கட்குத் தக்க பருவத்துப் பொருந்திய கோத்திரத்து 'அலர்மேலு' என்னும் நலமார் நங்கை ஒருத்தியை மணம் முடிப்பித்தனர். எளிய வாழ்க்கையாக வாழ்ந்து வந்தனர். பூச்சன் செட்டியாரின் தந்தை வழி முன்னோர்கள் இராமநாதபுரம் மாவட்டம் கமுதிப் பக்கமிருந்து வந்தவர்கள்.

நம் அடிகளாருக்குமுன் அவர்தம் தாய்தந்தையர்க்கு இரண்டு பிள்ளைகள் பிறந்து இறந்துவிட்டன. அதனால் அவ்வம்மையார் மிகவும் மனம் வருந்தியவராய் வண்டியூர்த் தெப்பக்குளத்து மாரியம்மன் கோவிலுக்கு அடுத்தடுத்துச் சென்று வழிபாடு புரிந்து பிள்ளைவரம் வேண்டி வருவாராயினர். அம்மையின் திருவருளால் சுபகிருது ஆண்டு (1902) ஆனித் திங்கள் எட்டாம் நாள் நம அடிகளார் பிறந்தனர். இப்பொழுது அடிகளாருக்கு அகவை ஐம்பத்தெட்டு. அடிகளாருக்கு அம்மையின் திருப்பெயரையே சூட்டினர் அதுவே 'மாரியப்பன்' என்பதாகும். அம்மையின் வரத்தால் பிறந்து அம்மையின் பெயர் சூட்டப் பெற்றமைக்கு அடிகளாருக்கு முற்றவப் பேறுண்டென்பது தெளிவு. 'தவமும தவமுடையார்க்'கன்றோ ஆவது. அம்மையின் அருந்துணை அடிகளார்க்கு நின்று நிலவுகின்றது. அடிகளார்க்கு 'மாரியம்மனின்' துணையுண்டென்பது அவர்தம் தாயார் மொழிந்த அருமறையாகும். அடிகளாரும் அம்மையாரை அந்நாள் தொட்டு வழிபட்டு வருகின்றனர். அடிகளார் மூன்றாவது பிள்ளையென்பதும் முன்னிரண்டு பிள்ளைகளும் இறந்துவிட்டனர் என்பதும் காட்டும் அறிகுறியாக அடிகளாருக்கு மூக்குப் பூரியிருப்பது காணலாம்.

கல்வி

திருவருளால் நிறைவுறுங்கல்விக்கு முன் உலகியன் முறைப்படி கல்விகற்கும் வாய்ப்பு அரிதாவது இயல்பு போலும். நம் அடிகளாரை அவர்தம் பெற்றோர் பள்ளிக்கு வைத்தல் வேண்டும் என்னும் எண்ணமுங் கொண்டிலர். அகவை எட்டுவரையும் அடிகளார் எந்தப் பள்ளிக்கூடத்தும் சென்றதில்லை. விளையாட்டுப் பிள்ளைகளுடன் ஆடிப் பாடிப் பொழுது போக்குவாராயினர்.

மதுரையில் மகமதியப் பெரியாரொருவர் ஊர்காவற்றுறையில் வேலை பார்த்து விடுதி பெற்றனர். அவர்க்கு விடுதி யூதியமாக வருந்தொகை ரூபா 6. இத்துடன் மதுரைப் புகைவண்டி நிலயத்தில் தென்பால் மட்டக்கடப்பு வாயிற்காவலராகவும்

அலுவல் பார்த்து வந்தனர். அதற்காக அவருக்கு வரும் மாசப் படி ரூபா 7 ஆகும். சமயக் கோட்பாட்டில் மிக்க அழுத்த முடையவர். தெய்வ நாட்டமிக்கவர். பொதுமைப் பண்புடையவர். அவர்கள் புகைவண்டிக் காவல் வேலையுடன், சில பிள்ளைகளுக்குச் செந்தமிழ்க் கல்வி கற்பித்து வந்தனர். அப்பிள்ளைகளுடன் சேர்ந்து நம் அடிகளாரும் சில திங்கள் கற்றனர். ஆசிரியர் மருத்துவத் தொழிலிலும் வல்லவர். மருத்துவத் தொழிலை நன்கொடையாகவே செய்து வந்தனர். மருந்துக்கு வேண்டும் மூலிகைகளைக் காவல் வாயிலுக்கு அண்மையில் ஒரு சிறு தோட்டம் அமைத்து வளர்த்து வந்தனர். அவைகட்குத் தண்ணீர் வார்க்க வேண்டியதும் மாணவர்களின் வேலையாகும். அவ்வாசிரியர் சமயப் பொதுநோக்க முடையவரென்பது அவர் மாணவர்களுக்கு அவ்வப்போது கூறும் அறிவுரைகளான் உணரலாம். அவை வருமாறு: சைவ மாணவர்களிடம் திருவெண்ணீறு பூசி வருதல் வேண்டுமெனவும், திருவெண்ணீறணியுங்கால் "அல்லல் போம் வல்வினை போம்" எனத் தொடங்கும் செந்தமிழ்ப் பாட்டை ஓதுதல் வேண்டும் எனவும் உரைப்பர். வைணவ மாணவரிடையே நாமம் போட்டுக்கொண்டு வருக எனவும், கிறித்துவ மாணவரிடையே சிலுவை அணிந்து கொண்டு வருகவெனவும் உரைப்பர். இவர்தம் சீரிய செயலால் தக்காரொருவர் ஒரு நெறிக்குரியராக இருந்துகொண்டே ஏனைப் பல நெறியும் அதனதன் இயல்பில் வாழத் துணைபுரிதல் எளிதென்பதும அதுவே முறைமை என்பதும் வெளிப்படுகின்றதல்லவா? அங்ஙனமாயின் திருவள்ளுவப் பெருந்தகையார் செந்நெறி யொன்றற்குரியராய் இருந்துகொண்டே எல்லா நெறிக்கும் பொருந்துமாறு பொதுப்படக் கூறுதலும் இயல்புடைத்தாம் என்பதற்கு எழுந் தடை யாது? ஏதும் இன்றென்க. மேலும் அம் முகமதிய ஆசிரியர் உலகப் பழிக்கும் அஞ்சி உலகத்துடன் ஒத்துவாழ வழிகாட்டுவார் போன்று மாணவர்களை நோக்கி நீங்கள் சமய அடையாளமின்றி யிருந்தால் துலுக்கனிடம் படிக்கப்போய்ப் பிள்ளைகள் கெட்டுவிட்டதெனப் பெற்றோரும் உலகும் சொல்லும். அப்பழிக்கு யான் ஆளாதல் கூடாது. கண்டிப்பாகச் சமய அடையாளங்களுடன் வருக எனவுங் கூறுவர்.

நம்மடிகள் இங்ஙனங் கற்றுக் கொண்டிருக்குங்கால் முற்பிறப்பின் தொடர்பால் இசையமைதியும் நாடகநோக்கமும் அவர்கட்குத் தாமே நிகழ்ந்தன. அது காரணமாக அப்பொழுதுள்ள நாடகக் கம்பெனிகளில் சிறந்ததாகிய "பாய்ஸ் கம்பெனி"யில் சேர்ந்தனர். அக்காலத்து அடிகளாருக்கு அகவை பன்னி

ரண்டு. தம் முயற்சியாலும், பணிவும் அன்புமாகிய பண்பாட்டி னலும் படிப்படியாக உயர்ந்து சிறப்புடைய ‘அரச’ வேடம் பூண்டு நடிப்பாராயினர். அக்காலத்து அகவை பதினைந்து; அதனல் நாடகக் கம்பெனியார்க்கும் வருவாயும், பேரும் புகழும் மிகுவ வாயின. வேறு பலரும் சுப்பமடிகளாரை முதன்மையாகக் கொண்டு நாடகங்கள் பல நடத்திப் பொருளீட்ட முயன்றனர். முயன்று அடிகளாரையும், உடன் நடித்த சிலரையும் அழைத் துக்கொண்டு கருங்குளம் திரு. சுப்பையா பிள்ளையவர்கள் திருச் செந்தூர் வந்து சேர்ந்தனர். நாடகத்துக்கு வேண்டிய முன்னேற் பாடுகளைச் செய்தனர். கொட்டகை வேலைகள் நடந்துகொண் டிருந்தன. எனினும் பணமுடையினல் அழைத்துக்கொண்டு வந்த அடிகள் முதலாயினரைச் செம்மையாகப் பேணமுடியாத நிலைமை வந்தது. இதனை உணர்ந்த அடிகளார் பெரிதும் வருந் தினர். அவ்வருத்தமும் தம் பொருட்டன்று. தம்மைச் சார்ந் தவர் பொருட்டேயாம். ஒருவகையாகத் தம்மோடு உடன் வந்தவர்களுக்கு ஒழுங்குபண்ணி ஊருக்கனுப்பி வைத்தனர்.

வாழ்க்கை வெறுப்பு

ஒரு நாள் ஆழ்ந்து எண்ணியவராய்த் தாம் பிறப்பெடுத்த இவ்வுடம்பினல் பெற்றோர்க்குப் பயன்படுமாறு ஏதுஞ் செய்ய முடியவில்லை. சார்ந்த நண்பர்க்குஞ் செய்ய முடியவில்லை. என்னே நம் வாழ்வு என வாழ்க்கையில் வெறுப்புண்டாயிற்று. பிறர்க்குப் பயன்படாத இவ்வுடலைச் சுமந்து திரிவதினும் இதனை விடுத்து இறப்பதே நன்றெனத் துணிந்தனர். திருச் செந்தூரையடுத்துள்ள அம்மன்புரத்தில் ஓர் இசக்கியம்மன் கோவிலுளது. அக் கோவிலுக்குச் சென்று, அவ்வம்மனை நோக்கி ‘ஏ தாயே! உனக்கும் மாரியம்மனுக்கும் யான் வேறு பாடு காண்கிலேன் நீ பலிவாங்கும் தெய்வமாக விளங்கு கின்றய். என் உயிரையும் பலியாக ஏற்றுக்கொள்’ எனக் கூறி உயிர்விடும் நோக்கத்தில் நாக்கை நன்றாக அறுத்தெறிந்தனர். குருதி அளவுக்கு மிஞ்சிப் பாய்ந்தது. மயங்கி வீழ்ந்தனர். இதை யுணர்ந்தார் அடிகளாரைக் கொண்டுவந்து மயக்கந் தெளிவித்து மருத்துவ மனைக்குக் கொண்டுபோக முயன்றனர். அடிகளார் குறிப்பாக மருத்துவ மனைக்குக் கொண்டுபோதல் வேண்டா மெனவும், பெற்றோர்களுக்கு அறிவித்தலும் ஆகாதெனவும், தம்மைக் கொண்டுபோய்ச் செந்திலாண்டவன் திருமுன் சேர்த்து விடல் வேண்டுமெனவும் எழுதியுணர்த்தினர். அவர்களும் அங்ஙனமே செய்தனர். இந்நிகழ்வு வைகாசி விசாகத்து அண் மையில் நிகழ்ந்தது. இந்நிகழ்வு நிகழுங்கால் அடிகளாருக்கு அகவை பதினைந்து பதினறிருக்கலாம்.

## செந்திலாண்டவன் செய்த சிறப்பருள்

அடிகளாருக்கு மாரியம்மன் திருவருளும் உறுதுணையாக விருந்தது. அடிகளாருங் கடும் நோன்பினை மேற்கொண்டனர். அஃதாவது இரண்டு சிறிய துண்டன்றி வேறு ஆடை வைத்துக் கொள்வதில்லை. திருமுருகனின் திருக்கோவிலின் எல்லை கடந்து ஊருக்குள் செல்லுவதில்லை; எவரிடமும் எதுங் கேட்பதுவும் பெறுவதுவும் இல்லை; காலை மாலை இரண்டு வேளை முறையே கடலிலும், நாழிக் கிணற்றிலும் தீர்த்தமாடுவது, பாலும் பழமு மேயுண்பது, திருவெண்ணீறணிந்து ஆறெழுத்தெண்ணி வழி படுவது, இடையறாது செந்திலாண்டவனை உள்குவது முதலிய அருந்தவச் செயல்களேயாம். முருகன் திருவருளால் திருக் கோவிலார் காலை மாலை இரண்டு வேளைகளிலும் பாலும் பழமும் கொடுத்துவந்தனர். உள்குவது - தியானிப்பது. இத்தகைய நோன்புத்தவம் ஏறத்தாழ ஒன்றேமுக்கால் ஆண்டுவரையும் நிகழ்ந்தது. நாக்கும் ஊறிப் பழைய நிலைமையை அடைந்தது.

## முருகன் திருவாணை

சோறுண்ணும்படி முருகன் திருவாணை பிறப்பின் சோறுண்பதெனை அடிகள் இருந்தனர் முருகப்பெருமானும் ஒரு நாள் அடிகளார் கனவிலெழுந்தருளிச் 'சோறுண்க' எனப் பணித் தருளினர். அந்நாள் தொட்டு அடிகளார் சோறுண்ணத் தொடங்கினர். திருக்கோவிலாரே உச்சிக்காலத்துக்குப்பின் சோறும், இரவில் பாலும் பழமுங் கொடுத்து வந்தனர். இங்ஙனம் நிகழுங்கால் முருகப்பெருமான் வலிய ஆட்கொள்ளும் வள்ளல் நம் அடிகளாருக்குச் சருக்கரைப் பொங்கல் ஊட்டுவிக் கத் திருவுள்ளங் கொண்டனன். திருச்செந்தூரில் தூண்டு கைப்பிள்ளையார் திருக்கோவிலை அடுத்துள்ள கவுண்டர் திரு மடத்தில் வாழும் 'சங்கர வடிவம்மாள்' என்னுந் தவமுதியாள் கனவில் தோன்றி நம் அடிகளாருக்குச் சருக்கரைப் பொங்கல் செய்து கொடுக்குமாறு கட்டளையிட்டருளினன். அவ்வம்மை யாரும் அவ்வாறே அமைத்துக் கொடுத்தனர்.

## பெற்றகடனால் பெருந்துன்பம்

அடிகளார் செந்திலாண்டவன் திருவாணைப்படி சோறுண்டு வருங்கால் சிற்சில வேளைகளில் உணவுண்ணத் தொடங்கும் போது சிலர் வந்து உணவு வேண்டி நிற்பர். அந்நேரத்து அடிக ளார் தமக்கென வந்த திருக்கோவிலுணவினைக் கொடுப்பது திருக்கோவிலார் நோக்கத்துக்கு மாறாகும். கொடாமலுண்பதும் அறத்திற்கு மாறாகும். பிறர்பால் ஒன்றைப் பெறமுயல்வது கொண்ட கொள்கைக்கு மாறாகும். இந்நிலையில் அடிகளாரின்

தூய்மையும் மேன்மையும் வாய்ந்த நல்லுள்ளம் வருந்திக் கடன் பெற்று உணவளிப்பது என்னும் முடிபிற்கு வந்தனர். அதன் மேல் திருக்கோவிலுக்கு அண்மையிலுள்ள ஒரு வெற்றிலைபாக்குக் கடையிற்சென்று அரையணுக் கடணுகப் பெற்று ஒரு கட்டிச் சோறு வாங்கி அவ்வன்பர்க்கு நல்கி மகிழ்விப்பர் இம்முறையாகப் பலகால் கடன்பெற்றுக் கடனும் ஏறுவதாயிற்று. அது பத்துத் திங்களுக்குள் பதினொரு அணுவாகப் பெருகிற்று கடன் தீர வேண்டுமே என அல்லும் பகலுங் கவல்வாராயினர். கவன்று ஆண்டவன்பால் வேண்டிக் கொண்டனர்.

ஆண்டவனும் ஒரு நாள் கடற்கரை மணன்மேல் சிறிது வெளித்தோன்றுமாறு ஒரு ரூபா நோட்டு ஒன்றினை அளித்தருளினன். அடிகளார் அதனைக் கண்டதும் ஆண்டவனைத் தொழுது மிக்க வுவகையுடன் எடுத்தனர். ஓடோடியுஞ்சென்று கடைக்காரர்பாற் கொடுத்தனர். கடைக்காரரும் தாம் கணக்கு வைத்துக் கொள்ளவில்லையென்றும், கடனுகக் கொடுக்கப்பட்டதில்லை யென்றுங் கூறிப் பணிவுடன் பெற்றுக்கொள்ள மறுத்தனர். அடிகளார் தம்முள்ளக்கணக்கு உண்டென்று வற்புறுத்தித் தாம் கடனுகவே பெற்றமையால் பெற்றுக்கொள்ளுதல் வேண்டுமென்றனர். மறுக்கமாட்டாமல் கடைக்காரரும் பெற்றுக்கொண்டு மீதமுள்ள ஐந்தணுவையும் கொடுத்துவிட்டனர். அடிகளார் அவ்வைந்தணுவையும் பெற்றுத் திருநீற்றுப் பையினுள் வைத்து மடியில் வைத்துக் கொண்டனர். மாலைக் காலவழிபாட்டிற்குச் செல்லும்போது உள்ளுள்ள தங்கக்கொடி மரத்துமுன் அப்பையினை வைத்துவிட்டுப் போய்விட்டனர். வழிபாடு முடித்துவந்து பார்த்தபின் அப்பையினைக் காணவில்லை. குறிப்பாக இதனல் அறியக்கிடப்பது பணத்தைத் தொடுவதில்லையென்ற கொள்கைக்கு மாருகப் பணத்தை வைத்துக் கொண்டிருத்தற்கு ஆண்டவன் இணங்கவில்லை யென்பதாம்.

காவடிச் சிறப்பு

அடிகளார் ஏறத்தாழ இரண்டாண்டு திருக்கோவிலிலேயே தங்கித் தவவாழ்க்கையினை மேற்கொண்டொழுகி வருவதைக் கண்ட பலரும் அடிகளாரது மேன்மையும், ஆண்டவன் அருளிப்பாடும் உன்னியுன்னி அடிகள்பால் மிகவும் ஈடுபாடு கொள்வாராயினர். திருச்செந்தூரிலுள்ள முக்காணியப் பார்ப்பனர் அடிகளாரைக் கொண்டு 'காவடி' செலுத்துவிக்க எண்ணினர். அன்பர் பலரின் துணைகொண்டு பொருள் தொகுத்து மிகவும் சிறப்பாக அடிகளாரைக் கொண்டு காவடி செலுத்துவித்தனர். அது வகைக்கு நேர்ந்த செலவும் ஆயிரத்தைஞ்ஞூறு ரூபாவுக்குக் கூடுதலாக விருக்கும்.

### திருநெல்வேலி மாவட்டத்தில் தங்கல்

ஆண்டவனருள் பெற்று எவரிடமுங் கல்லாது திருவருள் உண்ணின்றுணர்த்த அவ்வப்போது அகத்தெழுந் தெய்வக் கீர்த்தனைகளைத் தாமே பாடி நினைவில் வைத்திருந்து வர்ண மெட்டுகள் அமைத்து அனைவரும் வியக்குமாறு ஆங்காங்கு இசையரங்குகள் பல நிகழ்த்தி வந்தனர். அவற்றால் வரும் பொருள்களைக் கொண்டு தம் பெற்றோரைப் பேரன்புடன் பேணி வந்தனர். அம்பாசமுத்திரம், காருகுறிச்சி, பாபநாசம் முதலிய வூர்களில் தவவாழ்க்கையாகவே ஒன்பது யாண்டுகள் தங்கி வருவாராயினர். கீர்த்தனங்கள் மனத்தே தோன்றும்போதெல் லாம் பாடிக்கொண்டும், பின் நினைத்து எழுதிவைத்துக் கொண் டும் வருவாராயினர். இசையரங்குகளில் பெரும்பாலும் தம் பாட்டுக்களைப் பாடுவதையே மேற்கொண்டுவரும் அடிகள் இடை யிடையே தேவாரம் திருவாசக முதலிய திருமுறைகளையும், தாயு மானவர், பட்டினத்தார், திருவருட்பா, கிளிக்கண்ணி முதலிய பாடல்களையும் சேர்த்துப் பாடி வருவாராயினர். இயல்பாக இசைப் பெரும்புலவர்கள் தக்கவோர் ஆசானையடுத்துப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் பணிபுரிந்து வேறு எம்முயற்சியுமின்றி அதுவே முயற்சியாகப் பயின்று திறமையுற்றுறும் திகைப் புற்று வியக்குமாறு அடிகளாருக்கு முருகப்பெருமான் திரு வருளால் சிலவாண்டுகளுக்குள் இசைப் புலமை எளிதிற் கைகூடுவதாயிற்று. நெருங்கிப் பழகும் மெய்யன்பர்கள் பலர் அடிகளார்க்குத் திருமணம் புரிவித்தல வேண்டுமென எண்ணி னர். அடிகள்பால் இசைத்தனர். அடிகளும் ஆண்டவன் திரு வுள்ளம் பணித்தருளுமேல் அங்ஙனம் செய்துகொள்வது நலம் என விடையிறுத்தனர். திருவுள்ளத் திருக்குறிப்புணர்தற் பொருட்டு அடிகளார் அம்பாசமுத்திரத்தின்கண் நாற்பது நாள்கள் அருந்தவம் புரிந்தனர். அந்நாளில் செந்திலாண்டவன் அடிகளார் கனவில் அருந்தவமுதியாராகத் தோன்றித் திருமணம் புரிந்துகொள்ளுமாறு பணித்தருளினன். அதன்மேல் திருமண முயற்சி நிகழ்வதாயிற்று.

### புதுவீடு புகுதல்

அடிகளார் திருமண முயற்சி நிகழ்வதைக் கண்டதும் மணத்திற்குமுன் வீடு ஒன்று வாங்குதல் இன்றியமையாத தெனக் கண்டனர். அதற்கு வேண்டும் பொருள் தொகுப்பான் நாடினர். ஆடிப்பிழைத்தல் ஆகாதெனக் கொண்ட அடிக ளார் இசைப்புலமையாலே பொருளீட்ட முயன்றனர். ஆங் காங்கு இசையரங்குகளும் நிகழ்ந்து பொருள் வருவாயும் பெரு கிற்று. பேரிசைப் புலவர்களுக்குக் கொடுக்கும் பெருந்தொகை

யாகிய 125 ரூபாவும் வானொலி இசையரங்கில் பெற்று வருவா ராயினர். அடிகளாரின் தமிழிசைப்பாக்களுக்கு நல்ல மதிப்பு ஏற்படலாயிற்று மற்றைய இசைப்புலவர்களும் அடிகளாரின் இசைப்பாக்களை இசையரங்குகளிலும் பாடுவாராயினர். நாடகத் திற் பேர்போன 'கிட்டப்பா'வும் சில பாக்களை எழுதி வாங்கிப் பயன்படுத்திக் கொண்டனர்.

இராமலிங்க அடிகளார் படத்திலும், பூம்பாவையம்மையார் படத்திலும் வேண்டும் இசைப்பாக்களை இயற்றுபவராயும், அப் பாக்களைப் பயிற்றுபவராயும், பயிற்றுவித்தவைகளை இவ்விவ் வாறு பாடி நடிக்கவேண்டுமெனத் தூண்டித் துணைபுரிபவராயும் எல்லாவகைக்குந் தாமே ஆசானாய்த் திகழ்ந்து அப்படங்களுக் குப் பேரும் புகழும் பெருகப் பணிபுரிந்தனர். பொருளும் வந்தது. இராமலிங்க அடிகளார் படம் கல்கத்தாவிலும், பூம் பாவை அம்மையார் படம் சென்னைமாநகரிலும் எடுக்கப் பட்டன. அதனால் அடிகளாரின் இசைப்பாவும் புகழும் இவ்விரு நகரங்களிலும் பரவின. இவ்வாற்றால் ஈட்டிய பொருளைக் கொண்டு மதுரைமாநகர்க்கண் ஓர் அழகிய வீடு விலைக்கு வாங்கிக் குடி புகுவாராயினர்.

அருமறை பெறுதல்

அடிகளார் சீரலைவாயாகிய திருச்செந்தூரின்கண் இருக்கும் போது 'முருகப்பெருமான்பால் அடியேன் நினைந்துகொண்டுங் கணித்துக் கொண்டும் வரும் பெருமறையினை ஓர் ஆசான் வாயி லாகப் பெறுதல் வேண்டும்' என விண்ணப்பித்துக் கொண்டனர். அருமறை என்பது உபதேசம். திருவருளால் வற்கலை நாராயண சாமிகளின் மாணவர் இசைப்புலமையுமிக்கார் 'சுகுணானந்தகிரி சுவாமி' யவர்கள்பால் நினைந்தவண்ணமே அருமறை கேட்டுக் கொண்டனர். அம்மறை முருகனின் 'தாரகமந்திர'மாகும். திருப்பரங்குன்றத்து வீற்றிருந்து சித்துக்கள் பல புரிந்து சைவ மேன்மையினை நிலைநாட்டி மெய்யன்பர் பலர்க்கு ஆசானாய்த் திகழ்ந்த 'மாயாண்டிசாமி' யவர்களும் நம்மடிகளாருக்கோர் குருவாவர்.

பெற்றோர் பிரிவு

அடிகளாருக்கு அகவை இருபத்துமூன்று நிகழுங்கால் தந்தையார் இறையடி எய்தினர். அக்காலத்துத் தந்தையார்க்கு அகவை 87. தந்தையார் இயற்கை எய்துவதற்கு மூன்றாண்டு களுக்கு முன் அருமைத் தாயார் இறையடி எய்தினர்.

(தொடரும்)

# கவுந்தியடிகள்

[திரு. மது ச. விமலானந்தர், எம். ஏ.,]

(செல்வி சிலம்பு ௩௪, பால் அ, ௩அ௩ ஆம் பக்கத் தொடர்ச்சி)

உயர்ந்தோரும் உரைசால் பத்தினியும்

இளங்கோ காப்பியத்தை எழுதிய நோக்கே கற்பின் செல்வி கண்ணகியின் சிறப்பையும் சீர்மையையும் சித்திரிப்பதற்கன்றோ? அந்நோக்கு இனிது நிறைவேற ஒரு பெண்ணை - அதிலும் தூய முதிய தவச் செல்வியைக் கொண்டு கண்ணகியை ஏற்றிப் போற்றச் செய்கின்றார். ஆண் ஒரு பெண்ணைப் புகழ்வதில் வியப்பில்லை; ஆனால் ஒரு பெண் இன்னொரு பெண்ணை, அதிலும் குற்றமே காணும் குணமுடைய ஒரு முதியள் - தவம் பூண்ட தவத்திறன் மிக்க ஒரு கிழவி உடனுறைந்து - துன்பத்தின்போது துணையாக அமைந்து - ஊடாடிப் பழகிப் பின்னர்ப் போற்றிப் பரவுகின்றாள் எனின் அப் பத்தினிப் பெருந்தெய்வத்தின் பெற்றியை என்னென்பது? அதிலும் எப்படிப் புகழ்கின்றார் பாருங்கள்:

"தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி
இன் துணை மகளிர்க்கு இன்றி யமையாக்
'கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது
பொற்புடைத் தெய்வம்' யாம்கண் டிலமால்."

(அடைக். ௧௩௧-௧௩௪)

மாடலன், தேவந்தி, காவற்பெண்டு, மாடலன் போன்றோர் புகழ்ந்தாரெனில் அதில் சிறப்பு ஒன்றுமிராது; அவர்கள் அவளோடு பழகியவர்கள், கண்ணோட்டத்தின் காரணமாக - துன்புறும் நிலைகண்டு இரங்கிக் கண்ணகியைப் போற்றுதல் கூடும். ஆனால் கவுந்தியோ முன் பின் அறியாதவள் - குற்றம் கண்டு பொறாதவள், சிறு குற்றம் காணினும் சீற்றமுறும் தன்மையள்; இதனை வம்பப் பரத்தைக்கும் வறுமொழியாளனுக்கும் விடுத்த சாபத்தினின்றும் நன்கறியலாம். கானுறை தெய்வமே கலங்குமளவிற்குத் தவவலி மிக்கவள்!

இத்தகைய கவுந்தியே (Electro-mycroscope போன்றவள் எனலாம்) குறை காணாது நிறையே கண்டு கண்ணகியின் கற்பின் சிறப்பையும், பொற்பின் பொலிவையும் போற்றுகின்றார் எனின் கண்ணகியின் பண்பு நலத்திற்கும் பலர்தொழு பத்தினித்தன்மைக்கும் வேறு சான்றென்ன வேண்டும்? உயரிய உள்ளமும் ஒன்றிய நோக்கும் கொண்ட கவுந்தியைவிட உயர்ந்தோர் வேறுளரோ?

இங்ஙனம் உலகிற் கோங்கிய ஒருமாமணியாம் கண்ணகியைச் சிறப்பிக்கவே கவுந்தியடிகளைக் காப்பியத்தில் பயன்படுத்தியுள்ளார் இளங்கோ எனும்போது எவருள்ளந்தான் இறும்பூது எய்தாது? அடைக்கலக் காதையின் பிற்பகுதியே கண்ணகியின் கற்பின் சிறப்பைக் காட்டுவதுதானே! பார்தொழு பத்தினிக்குப் பெரியதொரு சிறப்பு (Tribute) நல்கும் சிறந்த பாத்திரமாகவும், தம் சமயக் கொள்கைகளை எடுத்தியம்பும் வாயிலாகவும் அறச் செல்வியை அமைத்துள்ளார் அடிகள் என்பதும் இனிதே போதரும்.

இவ்விரு கருத்துக்களையும் இலைமறை காய்போல் இலங்கச் செய்ததில் அமைந்துவிடவில்லை அடிகள் திறம். கவுந்தியடிகள் காப்பியத்திற்குத் தேவையற்றவர் என்ற எண்ணம் எள்ளளவும் ஏற்படாவண்ணம் காப்பியத்தில் இன்றியமையாப் பாத்திரமாகப் படைத்தமையே பெரிதும் பாராட்டற்பாலது. கோவலன் கண்ணகியரை 'என் மக்கள்', 'என் பூங்கோதை' என்று கூறச் செய்தும், வழித்துணை என்ற அளவோடு நிறுத்திவிடாது காப்பியத் தலைவன் தலைவியரின் வாழ்வோடு ஒன்றிக் கலக்கச் செய்யுமாற்றான்,

“ தவந்தரு சிறப்பிற் கவுந்தி சீற்றம்
நிவந்தோங்கு செங்கோல் நீள்நில வேந்தன்
போகுயிர் தாங்கப் பொறைசா லாட்டி
என்னோடு இவர்வினை யுருத்த தோவென
உண்ணா நோன்போடு உயிர்பதிப் பெயர்த்ததும்.”

(நீர்ப்படைக். எக-அ௩

கூறிக் கவுந்தியைக் கதையிலே பின்னிப் பிணைத்து இரண்டறக் கலக்குமாறும் செய்த சேரன் தம்பி - தன் சீர்மையே சீர்மை. இங்ஙனம் இரண்டறக் கலக்குமாறு செய்து சமண சமயப் பிரசாரகர் கவுந்தி என்ற கருத்து எள்ளளவும் எவர் மனத்திலும் எழாது செய்து விடுகின்றார் சிலம்பாசிரியர்.

அன்றியும் வேறு எந்த இடத்திலேனும் கவுந்தியைக் காப்பியத்தில் நுழைத்திருப்பாரேல் இவ்வளவு வெற்றி பெற்றிருக்க முடியாது! கண்ணகியோடு கோவலன் மதுரைக்குச் சென்ற ஞான்று வழித்துணையாக அமைவதாகக் காட்டி அவர் கதையில் வந்த சுவடோ, காப்பியத்தினின்று விலகும் சுவடோ இம்மியும் தென்படாதவாறு கற்பனைத் திறமும், கவிதையாற்றலும் அமையுமாறு காப்பியத்தை நடத்திச் செல்லும் சிறப்பு சீர்மையுடைத்து. வழி நடந்து செல்லும் கால இடையீட்டிலேயே காப்பிய நிகழ்ச்சியினின்றும் சற்றே நெகிழ்ந்து சென்று (Digression) தம் சமயக்

கருத்தைக் கவுந்தியடிகள் மூலம் தெளிவு படுத்தியமையும், மாடலனை மறுத்து மொழிந்தமையும் அடிகளின் கைவண்ணத் தைக் காட்டா நிற்கும்.

பிற்பகுதியால் இளங்கோவின் நோக்கை எளிதே நிறை வேற்றுமாற்றுற் பத்தினியை ஏற்றிப் போற்றியும், இளங்கோவின் உள்ளமுணர்த்தும் ஓர் வாயிலாக - அவர்தம் சமயக் கருத்தை விளக்கும் வாயிலாகவும அமைந்தவர் கவுந்தியடிகள் என்றும்; சமண சமயப் பிரசாரகர் கவுந்தி என்ற எண்ணம் எழாதவண் ணம் கண்ணகிக் கதையோடு ஒன்றிப் பிணைத்து, கண்ணகி புகழ் பாடும் புண்ணிய முதல்வியாக அமைத்து, அவர் காப்பியத்தில் நுழைந்த சுவடும், காப்பியத்தினின்று நீங்கிய சுவடுதானும் தோன்றுது கற்பனைத் திறத்தாலும் கவிதை யாற்றலாலும் காப்பியத்தைக் கொண்டு செல்கின்றுர் சிலம்பாசிரியர் என்றும் கண்டோம்.

இதுகாறும் இக்கட்டுரையால் கண்டவற்றின் பிண்டப் பிழிவு: தவத்திறனும் பண்பு நலனும் மிக்க தவச்செல்வி கவுந்தி யடிகள் என்றும், அவரால் காப்பியம் பெறும் சிறப்பும் சீர்மை யும் இன்னதென்றும், கற்பனைப் படைப்பன்று - காப்பியத்திற்கு இன்றியமையாப் பாத்திரமே கவுந்தியடிகள் என்றும், இப்புண் ணிய முதல்வியால் பெருங் காப்பியத்தின் அவலச்சுவை அதிகப் படுத்தப்பட்டுள்ளது - அதன் கண்ணேதான் காப்பிய ஆசிரிய ரின் கைவண்ணமும் காணக்கிடக்கின்றது என்றும் தெளிந் தோம்.

---

## இறைவன் துணை

[நாஞ்சில், கா. கணபதி]

வையம் முழுதும் ஆண்டாலும்
வாழ்வில் முழுமை கண்டாலும்
ஐயம் அறவே அகன்றுலும்
ஆராக் காதல் துய்த்தாலும்
செய்ய நெறிகள் சென்றுலும்
செழுமை யறங்கள் புரிந்தாலும்
ஐயன் இறைவன் துணையன்றி
அனைத்துப் பயனென் றிலையேகாண்!

# அடைக்கலப் பத்து

[நல்லைக்கவி இளங்கோவன்]

கண்ணேயென் கண்மணியே கண்மணியிற் பாப்பாவே
பெண்ணேயென் பேராசைப் பெட்டகமே நின்னுடைய
தண்ணாரும் அருட்கடலில் தமியேனை யாடவிடு
பண்ணாரப் பாடுகின்ற பத்தனுன்றன் அடைக்கலமே! (க)

ஊனாகி உயிராகி உயிர்க்குயிரு மாகிவருந்
தேனாகித் தெவிட்டாத தெள்ளமுத வெள்ளமுமாய்
ஆனாத அருட்கடலு மாகிவருந் தமிழணங்கே
தானாக வந்தடைந்தேன் தாசனுன் அடைக்கலமே! (உ)

சோறாகிச் சுகமாகிச் சுவைமிகுந்த மதுப்பாயும்
ஆறாகி யதுநிறையும் அருட்கடலு மாகிநின்று
வேறாகி நின்றேனை விழைந்திழுத்துக் குளிப்பாட்டிச்
சீராக வைத்தவளே சிறியேனுன் அடைக்கலமே! (ங)

எண்ணாத எண்ணங்கள் எண்ணியிடர்ப் பட்டேனைப்
புண்ணாக மனங்கெடுத்துப் புலம்பியழு திருந்தேனை
உண்ணாத பாலூட்டி உளந்தழையச் செய்தவளே
கண்ணாரக் கண்டுவந்த காதலனுன் அடைக்கலமே! (ச)

உள்ளமெனும் கோவிலிலே ஒருகுடியா யுள்ளவளே
கள்ளமெலாம் போக்குவித்த காதலியே காவியமே
தள்ளியெனைத் தட்டாமல் தான்தழுவ வந்தவளே
அள்ளியணைத் திடுவென்னை அடியேனுன் அடைக்கலமே! (ரு)

துன்பங்கள் நீக்கிமனத் துயரங்கள் போக்கிவிட்டு
இன்பங்கள் சேர்க்கவந்த இளங்குயிலே எழில்மயிலே
மன்புவியில் எனையாண்ட மங்கையரே மாதவியே
அன்புடனே எனைத்தழுவி ஆதரியுன் அடைக்கலமே! (சு)

மண்ணுலகில் பற்றெனக்கு மற்றெதுவு மில்லையம்மா
என்னுமுன்றன் பற்றல்லால் இனியதமிழ்த் தனியரசி
வண்ணமிகு பெண்ணணங்கே வான்மதியே போன்முகத்தாய்
திண்ணமுறச் சேர்த்தணைப்பாய் சேர்ந்தேனுன் அடைக்கலமே! (எ)

சங்கமுறு மேலோர்கள் தந்தநகை யணிந்தழகு
பொங்கவரும் பூவையரே பொற்புமிகு பாவையரே
அங்கமெலாம் காட்டியெனை யணைத்தன்பு செய்தவரே
இங்குமக்கே இனியன்யான் என்றுமும தடைக்கலமே! (அ)

இலக்கியமும் இலக்கணமும் இயலழகும் இசையழகும்
குலக்கொடியே உன்னுடைய கூத்தழகும் கண்டுவந்து
கலக்கமெலாம் போக்கிவிட்டுக் காதலினாற் கட்டுண்டேன்
விலக்காமல் அணைத்திடுநான் வேண்டுவதுன் அடைக்கலமே! (கூ)

காதலுக்குக் கண்ணுண்டோ கடையனே நானெனினும்
மோதிவிட்டேன் உன்னுடலை முத்தமிழின் நாயகியே
ஏதுமில்லை குற்றமென்மேல் எடுத்தணைத்துக் கொள்ளடியே
சாதலின்றி யுனைத்தழுவும் தமியேனுன் அடைக்கலமே! (க0)

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) இந்தியே ஆட்சி மொழியாகும்!

இந்தியப் பாராளுமன்றக் குழு தந்துள்ள பரிந்துரையினை ஏற்றுக் குடியரசுத் தலைவர் டாக்டர் இராசேந்திர பிரசாது அவர்கள், 1965 க்குப் பிறகு இந்தி மொழியே இந்தியாவின் ஆட்சி மொழியாகவும் ஆங்கிலம் துணை ஆட்சி மொழியாகவும் நீடிக்கும் எனக் கடந்த 29-4-60 இல் ஆணை பிறப்பித்துள்ளார்.

குறிப்பு: பல்வேறுபட்ட நாகரிகம், பண்பாடுகளைக் கொண்ட இவ்விந்தியத் துணைக்கண்டத்தில் இந்தி ஆட்சி மொழியாதல் எவ்வகையிலும் ஏற்புடைத்தன்று எனப் பன்னெடுங்காலமாகத் தமிழ் அறிஞர்களும், பிறமொழி அறிஞர்களும் அரசியல் அறிஞர்களும் எடுத்துக் கூறி வந்துள்ளதை நாடு நன்கறியும். அங்ஙனமெல்லாம் இருந்தும் இந்திய அரசினர் இந்தி மொழியை அரியணை யேற்ற முனைந்திருப்பது மக்களாட்சிப் பண்பாகாதது மட்டுமன்றி நாட்டுக்கு நலம் பயப்பது மாகாது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறோம்.

(உ) அரசியல் அலுவலகங்களில் தமிழ்

1958 ஆம் ஆண்டில் தமிழகத்தில் தமிழை ஆட்சி மொழியாக்கும் முயற்சியின் முதற்படி துவங்கப்பட்டது. அதனைத் தொடர்ந்து இவ்வாண்டு மேத்திங்கள் 2 ஆம் நாள் முதல் மாவட்ட நிலை அலுவலகங்களில் கடிதப் போக்குவரத்துக்களைத் தமிழிலேயே நடத்துவதென்று சென்னை அரசினர் முடிவு செய்துள்ளனர்.

குறிப்பு: அரசினரின் இம்முயற்சி பாராட்டற்குரியதே. இங்ஙனமே தொடர்ந்து முயன்று பிற அரசியற்றுறை அலுவலகங்களிலும் தமிழ் மணம் கமழச் செய்வார்களாக.

(ங) பல்கலைக் கழகங்களும் வட்டார மொழியும்

"இயன்ற விரைவில் பல்கலைக் கழகங்களில் அந்தந்த வட்டார மொழியிலேயே பாடங்களைப் பயிற்றுவிக்க வேண்டுமென்று மைய அரசு விரும்புகிறது." என்று 18-4-60 இல், பல்கலைக் கழகக் கொடைக் குழுவின் அறிக்கையின்மீது நடைபெற்ற விவாதத்துக்கு விடையிறுக்குமுகத்தான் கல்வி அமைச்சர் டாக்டர் ஸ்ரீமாலி கூறினர்.

குறிப்பு: மைய அரசினரின் இந்த நோக்கம் வரவேற்கத் தக்கதும் பாராட்டத் தக்கதுமாகும். இதனால் அந்தந்த மாநிலங்களின் தாய்மொழி வளர்ச்சியுற வழியேற்படும். எனினும் அண்மையில் இதே அரசினர் இந்தியே ஆட்சி மொழியாகும் என அறிவித்திருப்பது நாம் எதிர்பார்க்கும் நற்பயன்களைச் சிதைக்கும் அளவுக்கு முரண்பட்டதாகவும், இந்திக்கே ஏற்றம் அளிப்பதாகவும் இருப்பது வருந்தத்தக்கதே.

(ச) கல்வித்துறை இயக்குநர் கருத்துரை

"குழந்தைகள் நன்றாய் வளர்ந்தால் நாட்டுக்கு நலம்; 1945 இல் 25 மாவட்டங்களடங்கிய நம் மாநிலத்தில் 1600 துவக்கப் பள்ளிகளும் 480 உயர்நிலைப் பள்ளிகளும் இருந்தன. ஆனால் இப்போது 26000

துவக்கப் பள்ளிகளும், 1200 உயர்நிலைப் பள்ளிகளும் உள. சென்னை மாநிலம் மற்ற மாநிலங்களைவிடப் பிற்போக்காக இல்லாமல் சிறந்தே விளங்குகின்றது.'' என்று அண்மையில் தஞ்சையில் நடைபெற்ற, பள்ளிச் சிறார்க்கு இலவச உடை வழங்கு விழாவொன்றில் பேசியகாலைச் சென்னைக் கல்வித்துறை இயக்குநர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் குறிப்பிட்டார்கள்.

**குறிப்பு:** நம் கல்வித்துறை இயக்குநரவர்கள் கல்வியைப் பரப்புவதிலும், இளஞ்சிறாரின் நலம் நாடிப் பள்ளிகளில் பகலுணவுக்கு ஏற்பாடு செய்து வருதலையும் அனைவரும் அறிவர். அத்தகையோர் ஈண்டு வழங்கியிருக்கும் கருத்துரையைக் கவனித்துப் பெற்றோர்கள் தம்மக்கட்குக் கல்வி அளிக்க அரசியலாருடன் ஒத்துழைப்பார்களாக.

## (ச) மெய்யுணர்வு விழா

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் கடந்த 24-4-60 முதல் 7-5-60 முடிய டாக்டர் குருசாமி முதலியார் தொண்டைமண்டல உயர்நிலைப் பள்ளியில் மெய்யுணர்வு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. செட்டிநாட்டரசர் டாக்டர் எம் எ. முத்தையா செட்டியார், அமைச்சர்கள் திரு. பக்தவத்சலம், சி. சுப்பிரமணியம், தவத்திரு. குன்றக்குடியடிகளார், ஆசிரியர் இளவழகனார், கிருபானந்தவாரியார் மற்றும் பல தமிழறிஞர்கள் தலைமை தாங்கியும், பேருரை வழங்கியும் விழாவினைச் சிறப்பித்தனர்.

**குறிப்பு:** மெய்யுணர்வு என்னும் அரிய கருத்தை அடிப்படையாக வைத்துச் சீரிய முறையில் விழாக் கொண்டாடிய சிவனடியார் திருக்கூட்டத்தினரைப் பாராட்டுகிறோம். இதுபோன்ற விழாக்களை மேலும் பல நடத்திச் சைவம் தழைத்தோங்க அவர்கள் வழிகோலுவார்களாக.

மெய்யுணர்வு விழா என்ற பெயரில் கடந்த சில ஆண்டுகட்கு முன்னர் ஒரு விழாக் கொண்டாட நம் கழகம் முயன்றதையும் பின்னர் வேறுபல காரணங்களால் அஃது ஒத்திவைக்கப்பட்ட செய்தியையும் அன்பர்கள் அறிவர்.

## (ரு) புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டு

தென்காசித் தாலூகாவைச் சேர்ந்த குத்துக்கல் வலசை கிராமம் அழகர்புரத்துக்கு நேர்வடக்கே அரைக்கல் தொலைவில் புன்செய் நிலத்தில், 382 ஆண்டுகட்கு முற்பட்ட பழங்காலக் கல்வெட்டு ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டிலிருந்து அதிவீர ராமபாண்டியன் ஆட்சி செய்த விவரங்கள் காணக் கிடக்கின்றன.

## (சு) தமிழகப் புலவர் குழு

தமிழகப் புலவர் குழு கடந்த எப்பிரல் திங்கள் 16, 17ஆம் நாட்களில் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா மண்டபத்தில் கூடிற்று. முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் புலவர் குழுவின் செயல் முறைகள் பற்றி விரிவுரையாற்றினார். பல்கலைக் கழகத் துணைவேந்தர் புலவர் பெருமக்கட்குப் பொற்சரிகை மாலை அணிவித்தனர். கூட்டத்தில் தமிழ் வளர்ச்சி பற்றிய திட்டங்கள் பல ஆராய்ந்து முடிவு செய்யப்பட்டன. அம்முடிவுகள் நீண்டதோர் அறிக்கையாக வெளியிடப்பட்டுள்ளது.

# மதிப்புரை

" தனிப்பாடல் திரட்டு "

தொகுத்துரை ஆசிரியர் 'கலைச் செல்வி'. 'மீனாட்சி பதிப்பகம்' கீழ இராசவீதி, புதுக்கோட்டை, விலை ரூபா. 1-30. நாட்டின் நலமும், வளமும், ஒற்றுமையும், முன்னேற்றமும் நாடும் நன்மக்கள் முதற்கண் இன்றியமையாது உணர்ந்துகொள்ள வேண்டிய அரும்பெருஞ் செய்திகளுள் தலையாயது, அந்நாட்டுப் புலவர்களின் வாழ்க்கை வரலாறுகளேயாம். புலத்துறைமுற்றிய அப்புலவர் பெருமக்கள் பாடிய பாடல்களே நாட்டின் உண்மையான நிலைமையினை எடுத்துக் காட்டிப் பின்னுள்ளோர்க்கு ஊக்கமூட்டுவதாகும்.

அம்முறையிலமைந்த நூல்களே 'தனிப்பாடல் திரட்டுக்கள்.' தனிப்பாடல்களைத் தொகுத்து முன் வெளிப்படுத்தின நல்லறிஞர்களும் பலராவர். அவர்களில் பெரும்பாலோர் நாட்டில் வழங்கியனவும், ஏட்டிலுள்ளனவும் இறவாவண்ணம் காத்து வெளிப்படுத்தியுள்ளனர். கால ஆராய்ச்சி முதலியன செய்து செவ்வைப்படுத்தி வெளியிட அக்காலத்து இப்பொழுது கிடைத்துள்ளமை போன்ற வாய்ப்புக்கள் அவர்களுக்குக் கிடைத்தில.

இத்தொகுப்புரையாசிரியர் வரலாறு, கல்லெழுத்து, முடிமன்னர், குறுநிலமன்னர், பெருநிலக்கிழார், புரவலர், பெருங்குடி மக்கள், வள்ளல்கள் முதலியோர்களின் செய்திகளாகிய புறச் சான்றுகளையும், புலவர் பாடல்களில் காணப்படும் அகச்சான்றுகளையும் நன்காய்ந்து ஒப்புநோக்கிக் கால்வரையறையோடு வரன்முறைப்படுத்திச் செவ்வையுற அமைத்துள்ளார். ஒட்டக்கூத்தரும் புகழேந்தியாரும் ஒரு காலத்தவரல்லரெனவும், அவ்வையார் பலரெனவும் விளக்கியுள்ளார். திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களின் ஆன்றவிந்தடங்கிய கொள்கையினையும், புலமை மாண்பினையும் மாணவர்ப் பேணிய வண்மையினையும் விரித்துரைத்துள்ளனர்.

இதன்கண் முப்பத்தொரு பெரும்புலவர்களின் வரலாறுகளும் பாடல்களும் காணப்படுகின்றன. பாடல்களுக்கு வேண்டுமிடத்துச் சொற்பொருள், கருத்து, பொழிப்பு, விளக்கம் முதலியன திட்ப நுட்ப ஒட்பமுற வரைந்துள்ளார்கள். 'பல்சுவைப் பகுதி,' என்னும் தலைப்பில் ஒழுகலாற்றுக்கு வேண்டும் சிறந்த பாடல்கள் சில காணப்படுகின்றன. அவை வாழ்க்கைக்கு வழிகாட்டுவன. எளிய இனிய ஆற்றொழுக்கு நடை. இந்நூலினைச் செந்தமிழ்ச் செல்வர்களும் ஆசிரிய மாணவர்களும் இன்றியமையாது வாங்கிப் பெறுவார்களாக. இதனை வாங்கும் வாயிலாக எஞ்சியுள்ளவற்றையுந் தொகுத்து வெளியிடத் துணைபுரிவார்களாக.

**'தமிழன் உலா'**

ஆசிரியர் இராசை கி. **அரங்கசாமி** அவர்கள். வெளியிடுவோர் திருக்குறள் பதிப்பகம், இராசிபுரம், சேலமாவட்டம். விலை ரூபா 1-00.

பண்டைக் காலத்துப் பல்பெரும் புலவர்களால் பாராளும் மன்னர்கள்மீதும் அம்மன்னர்களுக்கும் அனைத்துயிர்களுக்கும் அன்னையும் அத்தனுமாகத் திகழும். "வினையின் நீங்கி விளக்கிய அறிவின் முனைவனும்" விழுமிய முழுமுதல்வன் மீதும் பல உலாக்கள் பாடப்பட்டுள்ளன. இவ்வுலாக்களுக் கெல்லாம் ஆதியுலாவாகக் காணப்படுவது சேரமான்பெருமாள் நாயனாரருளிய திருக்கைலாய ஞான வுலாவாகும் இதன்கண் காணப்படும் எழ்பருவப் பெண்களின் உள்ளுறை யுருவகம் ஆருயிர்களின் பிறப்பேழுமாகும். பெரும்பாலும் உலாக்களினுள் நாட்டு வளம், போர்ச்சிறப்பு, மன்னனின் ஆண்மை, வரையாது வழங்கும் கொடைத்திறன், எழ்பருவப் பெண்ணும் சூழ்வந்து நோக்கிக் காதல் கைம்மிக்குப் புகழ்தல் முதலியன காணலாம்.

அவற்றின் போக்கில் ஆனால் சிறந்த சீர்திருத்தத்துடன் இக்காலத்துக் கேற்றமுறையில் இந்நூலாசிரியர் பாடியுள்ளார்கள். சுவைமிக்கபாட்டு. அறமுறைகாட்டும் அளப்பருஞ் சீர்த்திமிக்கது. ஆடவர்களும் உலாவினைக் கண்டு களிக்கின்றனர். பருவப் பெண்களும் பார்த்துவக்கின்றனர். பெண்கள் பார்த்தல் பழமைபோன்று காதல்நோக்கமன்று, தமிழ் மொழிவளர்ச்சி, தமிழ் நாட்டு முன்னேற்றம், திருக்குறட் பண்பாடுகள் எல்லா மக்களிடையேயும் சிறந்து பரவுதல், ஆண்மை, உழைப்பு, ஒற்றுமை முதலியனமிகுதல், தொண்டு, தொழில் முதலிய பல நலங்களும் பரவுதல் முதலிய குறிக்கோள் கொண்டதாகும். செய்யுட்கள் சிலேடை முதலிய அணிநலங்களமைந்துள்ளன. செம்பாகமான நடையுடையன. திரி சொல் மிக்குப் பயிலாதன. ஆற்றொழுக்கின. எளிதிற் பொருள் விளங்குவன. ஆசிரியரவர்கள் நன்குழைத்து நூல்யாத்துள்ளார்கள். இதனைப் பொதுவாகச் செந்தமிழன்பர்களும், சிறப்பாக ஆசிரிய மாணவர்களும் கற்றுப் பயன் எய்துவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் ; வ. சுப்பையா.





| சிலம்பு ௩௪ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, வைகாசி ஜூன், 1960 | பரல் ௧௦ |
| --- | --- | --- |


# அச்சுக்கு வாராத அருந்தமிழ்ச் செல்வங்கள்

ஒவ்வொரு நாட்டின் பண்பாடும், நாகரிகமும், செல்வ வளமும், நிலவளமும், நீர் வளமும், கடல், மலை, காடு முதலிய காவல் வளமும் பிறவும் அவ்வந் நாட்டின் தொன்மையினையும் முன்னேற்றத்தினையும் அங்கை நெல்லியென எடுத்துக்காட்டுங் கருவூலங்களாகும். மேலை நாட்டவரும் பிறரும் தத்தம் நாட்டின் வரலாறுகளைக் காலவரையறையுடன் எழுதிவைத்துள்ளனர். நம் தமிழக வரலாறு அங்ஙனம் பண்டைக் காலத்திருந்து எழுதி வைக்கப்படவில்லை. அதனால் வரலாற்று மெய்ம்மை காணுதற்குச் சிறிது இன்னலாகவே இருக்கின்றது. எனினும் தோலா நாவின் மேலோராகிய நல்லிசைப்புலவர்கள் அவ்வப்போது வேந்தர், மன்னர், புரவலர், போற்றும் வள்ளல்கள் முதலியோரைப் பாடிய எழின்மிகு தனிப்பாடல்களும், அகத்திணைச் செய்யுள்களாக ஆக்கியமைத்த அரும்பெரும் பாடல்களும், சேரர் வரலாறுகளாகக் காணப்படும் பதிற்றுப்பத்து முதலிய நூல்களும் சங்கத் தொகை நூல்களாகத் திகழ்ந்து தமிழக வரலாற்றை ஒருபுடையாக விளக்குகின்றன. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய தொடர்நிலைச் செய்யுட்களும் அன்ன பண்பினவே. தேவாரம் முதலிய திருமுறைகள், மெய்கண்ட நூல்களும், திருவாய்மொழி, பட்டினத்தார், குமரகுருபரர், தாயுமானார் முதலியோர் பாடிய பனுவல்களும் அத்தகையவே.

சிந்தாமணி, பெரியபுராணம், கம்பராமாயணம், வில்லி பாரதம், தலபுராணங்கள், கலம்பகம், உலா, பிள்ளைத்தமிழ், திருவருட்பா, சீட்டுக் கவிகள், கோவை, தூது, மடல், விலாசம்,

கொம்மி, சிந்து, பள்ளு, குறவஞ்சி, ஏற்றப்பாட்டு, கப்பற்பாட்டு, ஏசல், சதகம் முதலிய பலவகை நூல்களும் நாட்டு வரலாறு காட்டும் நற்செல்வங்களேயாம். இவ்வகை நூல்களில் அச்சுக்கு வந்தன சில; வரவேண்டுவன பல, அச்சுக்கு வந்தனவற்றுள்ளும் பல நூல்கள் மீண்டும் அச்சிடுவாரற்று இறந்து போகுந்தறுவாயி லுள்ளனவும் எண்ணில. இவையெல்லாம் ஒருபுற மிருக்க நாட்டுப் பாடல்களாக நானிலத்துள்ள உயர்ந்தோர், ஏனோர் முதலியோரால் காலமும் இடமும் நோக்கி வழி வழியாக வழங்கி வரும் பழமொழிகள், சிலேடைகள், ஏற்றப்பாடல்கள், இழுவைப் பாடல்கள், வழிநடைப் பாடல்கள், ஓடப்பாடல்கள், உழவுப் பாடல்கள், கப்பல்பாடல்கள், சிட்டுக்கவிகள், விடுகவிப் பாடல் கள், உவமைகள், மரபுச்சொற்கள், நாட்டு வழக்கமாக வழங்கும் நல்லியற்சொற்கள், செவிவழியாக வழங்கிவரும் சிறிய கதைகள், ஆங்காங்கு நிகழும் தெய்வ வழிபாட்டு முறைகள், மணவினை பிண வினை முதலியசடங்குகள், ஊர் மன்றத்தும் குடும்ப மரபிலும் வழங்கும் ஆட்சிச்சொற்கள், ஒப்பாரிகள் முதலிய பலவகையான அரும் பெரும் செய்திகளும் அழகிய நூல் வடிவில் அச்சாகி வெளிவரவேண்டுவது இன்றியமையாத முதற்கடனாக இருக் கின்றது. இவைகள் வெளிவருமாயின், இப்பொழுது தமிழக வர லாற்றின் தொன்மை கணிப்பார், சாசனங்கள், கல்லெழுத்துக்கள் வெளி நாட்டவர் எழுதி வைத்துள்ள குறிப்புக்கள் முதலியன கொண்டு கணிக்கின்றதோடு இவைகளையும் துணையாகக்கொண்டு, கணிக்க நேரும்; சொற்கள் தோன்றித் திரிபின்றி வழங்கி யும், திரிந்து இடப்பெயர்ச்சியால் மாறுதல் எய்தியும் வருவதற் குரிய காலவரையறைகள் தொன்மை காண்பார்க்கு உறுதுணை யாகும் என்பதுறுதி. புதை பொருளாராய்ச்சியால் அரிது முயன்று காணும் அப்பெரும் செய்திகளினும் மிகச் சிறந்தன வாகும், நாட்டில் வழங்கிவரும் மேற்கூறிப் போந்த செய்தி களால் கிடைப்பன.

முன்னுள்ளோர் அமைத்து வெளியிட்டுள்ள தனிப்பாடற் றிரட்டு, விநோதரச மஞ்சரி, புலவர் புராணம், அபிதான சிந்தா மணி முதலியவற்றால் வெளிப்போந்த புலவர்களின் வரலாறுகளு பாடல்களும் சில நூற்றுக்கணக்கேயாகும். இப்பொழுது கழகம் வாயிலாக ஏறத்தாழ இரண்டாயிரத்தொரு நூறு புலவர்களுக்கு மேற்பட்டோர் வரலாறுகளும், அத்துணைத் தனிப்பாடல்களும் இருபத்துநான்கிற்கு மேற்பட்ட நூல்களாக வெளிவந்துள்ளன. இன்னும் வெளிவருதற்கும் இருக்கின்றன. இதுபோல் மேற் கூறிப்போந்த நாட்டுச்செல்வங்கள் வெளிவருதற்கு ஆங்காங்குள்ள புலவர் பெருமக்களும், ஏனை அன்பர்களும் பெரிதும் முயன்று ஏட்டுச்சுவடிகளையும், சுவடிகளில்லாது வழங்கி வருவனவற்றை

எழுதுவித்தும் கழகத்துக்கு அனுப்பிவைப்பார்களாயின் கழகத்தார் அவற்றை மனமுவந்தேற்று அவரவர்தம் பெயருடன் அச்சிட்டு வெளிப்படுத்த முன்னிற்கின்றனர். மேலும் இம் முயற்சிக்குத் தக்கவாறு தொகைகொடுத்துதவவும் துணிந்துள்ளனர். தொகையின் பொருட்டன்று அம்முயற்சி, தொன்மைத் தமிழ்க் கருவூலங்கள் வெளிவரும் தோலாப் புகழின் பொருட்டென்றே அன்னார் கொள்ளுதல் வேண்டும்.

இப்பொழுது நம் தமிழன்னை அரியணை வீற்றிருந்து செங்கோலோச்சுகின்றனள். அதனால் ஆட்சிமொழியும், பல்கலைக் கழகக் கற்பிக்கும் மொழியும் தமிழாகத் திகழ்கின்றன. இச் செவ்விவாய்ந்த நேரத்து நாட்டுச் செல்வங்கள் வெளிவருமேல் தமிழ் வளர்ச்சிக்கு அவை பெருந்துணையாகும். பண்டுபோலில்லாமல் இந்நாட்களில் மாவட்டத்துக்கப்பால் வட்டங்களினும், பேரூர் சிற்றூர்களினும் உயர்நிலைப்பள்ளிகள் இடப்பரப்பிற்கேற்றவாறு இரண்டு மூன்றுகள் அமைந்துள்ளன. ஒவ்வொரு பள்ளிகளினும் புலமை சான்ற தமிழ்ப் பேராசிரியர்கள் பலர் அமர்ந்து அருந்தமிழ்ப்பணி ஆற்றிவருகின்றனர். அவர்கள் சிறிது அகனமர்ந்த அன்பினராய் நாட்டுச் செல்வங்களைத் தொகுத்தமைக்கும் நற்றமிழ்த் தொண்டில் ஈடுபடுவராயின் இப்பெருந்தொண்டு மிக எளிமையாக எழினுற முற்றுறும். அம்மட்டோ? வழிவழி அழியாது நிற்கும் விழுமிய பெரும் புகழையுந் தரும்.

பொன்னும், பொருளும், காணியும், மனையும் பிறவும் மன்னாப் பொருள்களே, மன்னும் பொருளாயுள்ளன செந்நாப் புலவர் பாடி வழங்கியுள்ள பயனார் நூற்செல்வங்களேயாம். தமிழ் மூதாட்டியாராகிய ஔவையாரும் இது குறித்துப் பாடிய வெண்பா வருமாறு :

> " நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினும் நூற்சீலை
> நாற்றிங்கள் நாளுக்குள் நைந்துவிடும்—மாற்றலர்கள்
> பொன்றப் பொருதடக்கைப் போர்வேல் அகளங்கா
> என்றுங் கிழியாதென் பாட்டு."

மற்றொரு சான்றோரும் பாட்டின் பெருமையினை வருமாறு கூறுவது காண்க :

> " பூமாலைக் கேதுபுகழ் பொன்மாலைக் கேதுமணம்
> பாமாலைக் குண்டே பயன்,"

செந்தமிழ்த் திருமாமறையின்கண் செந்நெறி முதல்வர்கள் அருளிய திருப்பாட்டுக்களுங் காண்க :

"பூம்படி மக்கலம் பொற்படி மக்கல மென்றிவற்றால்
ஆம்படி மக்கலம் ஆகிலும் ஆரூர் இனிதமர்ந்தார்
தாம்படி மக்கலம் வேண்டுவ ரேற்றமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலஞ் செய்து தொழுது மடநெஞ்சமே."
—ச. கo௩ - ௩.

"வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன உள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே."  —கo. கஎக௩.

இதுகாறுங் கூறியவாற்றால் நாட்டுப் பாடல்கள் முதலிய நற்றமிழ்ச் செல்வங்களை இறந்து பட்டுப்போகாது குறிக்கொண்டு காத்து அச்சிட்டு வெளிப்படுத்தி அனைவரும் பயனெய்துமாறு செய்யவேண்டுவதும், அவ்வாற்றால் செந்தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரியவேண்டுவதும் சிரிய புலவர் பெருமக்களின் நேரிய கடனாகும். அதனை முன்வந்து மனமுவந்து செய்து தருமாறு அவர்களைப் பன்முறையும் வேண்டிக்கொள்கின்றோம்.

வாழ்க தமிழ்மொழி! வளர்க நாட்டுப்பாடல்கள்!

---

## பேராசிரியர், மயிலை. சிவமுத்து அவர்கட்குப் பாராட்டு விழா

நனிமிகு முதுமையினுந் தமிழ் நலம் நாடித் தளராது உழைத்து வரும் பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்களின் தொண்டுகளைப் பலபடப் பாராட்டிச் சிறப்பித்தற்கென 10-4-60 இல் சென்னை வாழ் புலவர்களும் நண்பர்களும் கூடி, முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் ஒரு பாராட்டுவிழா நடத்தினர். உயர்திரு. கீ. இராம லிங்கனார், எம்.ஏ, அவர்கள் விழாவுக்குத் தலைமை தாங்கினர். திரு. டி. எஸ். உமாபதி எம்.ஏ., எல்.டி. அவர்கள் விழாக்குழுவின் சார்பில் **தமிழ்நெறிக் காவலர்** என்னும் சிறப்புப் பட்டப்பெயர் பொறித்த பதக்கத்தைப் பேராசிரியருக்கு அணிவித்துப் பாராட்டினர். அறிஞர் பலர் பேராசிரியர் அவர்களின் தமிழ்த் தொண்டினைப் பாராட்டிப் பேசினர். பேராசிரியரவர்கள், பாராட்டிய பல்லோர்க்கும் தம் பண்பமை நன்றியை நயனொடு நவின்றனர். வாழ்த்தும் நன்றியும் வனப்புற நவிலக் கூட்டம் இனிது நிறைவுற்றது

உயர்திரு. மயிலை சிவமுத்து அவர்களின் தமிழ்த் தொண்டினைத் தமிழகம் நன்கு அறியும். முதுமையிலும் முறுக்கேறிய உள்ளத்தோடு பேசும், எழுதும் ஆற்றல் மிக்கவர். மாணவர் மன்றத்தின் மூலம் அவர்கள் ஆற்றிவரும் தொண்டு அளப்பில. அவர்தம் புகழ் தமிழகத் தில் என்றும் நின்று நிலவுவதாக. பேராசிரியர் அவர்கள் மேலும் பல்லாண்டுகள் நலமுடன் வாழ்ந்து நற்றமிழ்ப் பணிபுரிய எல்லாம் வல்ல அம்மையப்பர் அருள்புரிவாராக.

## தமிழ்ப்புலமை சான்ற பண்டிதை

# தனபால் பத்மாவதி அம்மையார் மறைவு

"தோற்ற முண்டேல் மரணமுண்"டென்பது தொன்று தொட்டு நிகழ்ந்து வரும் மாறா வுண்மையாயினும், ஒருவர் மறைவினைக் கேட்கும்போதும் காணும்போதும் அன்புடையாரெவரும் வாட்டமுறுதிரார். நிறையுணவாம் ஆன்பாலின் மாட்டு எவர்க்கும் இயற்கையிலேயே அன்பு பெருகுவது போன்று கற்றுணர்ந்து அடங்கும் புலமைசான்ற நல்லோர்மாட்டு யாவர்க்கும் ஆர்வம் பெருகுவது இயற்கையே. அவர்கள் மாந்தர்குழுவினுக்குக் கலங்கரை விளக்கமாகத் திகழும் அருட்செல்வர்களாவார்கள். அத்தகைய நெறியினின்ற நீர்மையர் நம் அம்மையாரவர்களாவர். அம்மையாரின் மறைவு ஈடுசெய்ய வொண்ணாப் பேரிழப்பே யாகும்.

மேலும் அம்மையாரின் உயிரனைய தமக்கையார் பண்டிதை கிருட்டிணவேணியம்மையாரின் நிலைமையை உன்னித்து நோக்கும்போது இன்னும் ஆற்றொணாத் துன்பத்தையே தருவதாகும். அவ் வம்மையாருக்குக் கழகத்தாரின் ஆழ்ந்த ஆறுதலுரை உரியதாகுக. ஆண்டவனும் உள்ளம் ஆறுதலெய்த அருள்புரிவானாக.

விழுமிய தமிழின் கண்ணனைய புலவர் பெருமக்களிருவரும் தமிழ்ப்புலமை எய்தித் தமிழ்ப்பணி புரிந்தமை சால வியப்புடைத்தாம். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சென்னைப் பெத்துநாய்க்கன்பேட்டை, கொண்டித் தோப்பு முத்துக்கிருட்டிணன் தெருவில் திருவாளர் முத்துக்கிருட்டிண நாயுடு அவர்கள் வாழ்ந்து வந்தனர். இவர் வீட்டிற்கு எதிர் வீட்டில் திருவாளர் வல்லை சண்முகசுந்தர முதலியாரவர்கள் வாழ்ந்து வந்தனர். முதலியாரவர்கள் தமிழ்ப்புலமை சான்றவர்கள். நாயுடு அவர்களின் தாய்மொழி தெலுங்கு. நாயுடு அவர்கட்குத் தவப் புதல்வியராகக் கிருட்டிணவேணி அம்மையாரவர்களும், பத்மாவதி அம்மையாரவர்களும் முறையே தோன்றினர். தமக்கையாரவர்கள் கிருட்டிணவேணியம்மையார். அவர்கள் முதலியாரவர்கள்பால் செந்தமிழ் பயின்றார்கள். உடனிருந்து கேட்டுக்கொண்டுவந்த தங்கையாராகிய பத்மாவதி யம்மையாரும் தமிழ் பயில்வாராயினர். பயின்று புலமை நிரம்பினர். நூலுரைகள் யாக்கவும் அரிய சொற்பொழிவுகள் ஆற்றவும், கற்பிக்கவும் ஆற்றல் வாய்ந்தவர்களாயினர். பல வூர்களிலும் சென்று பயனுடைய சொற்பொழிவுகள் பல ஆற்றினர். நாவன்மையோடு பாவன்மையும் பெற்றிருந்தனர். கற்பொழுக்கமும், கடவுட் கொள்கையும், ஈவிரக்கமும் நிரம்பப் பெற்றவர்கள்.

பெண்பாலார் முன்னேற்றத்தில் பெரிதும் நாட்டமுடையவர், அதற்கென உழைத்த ஆக்கத்தினர். அம்மையாரின் தோற்றம் 1896 ஆம் ஆண்டாகும். ஏறத்தாழ அரை நூற்றாண்டுகளுக்கு முன் தாய்மொழி தெலுங்காயிருந்தும் தமிழ்மொழிக்கண் ஆர்வ முற்றுக் கற்றுப் புலமை பெறுதற்குரிய இனிய வாய்ப்புக்கள் உண்டாவதற்குக் காரணம் தமிழ் மொழியின்கண் இயல்பா யமைந்துள்ள தனிப்பெருஞ் சீர் சிறப்புக்களேயாம். தெய்வ வழிபாட்டினரை அத்தெய்வந் தன்வயமாக்கிக் கொள்வது போன்று தமிழ் மொழியும் தன்னைப் பயில்வாரைத் தன் வய மாக்கிக் கொள்வதில் என்றும் மாறா வுண்மையுடன் திகழ் கின்றது. இருவரும் ஓங்கிய ஆங்கிலமும் சோதிடமும் சமய நூல்களும் பொருவறக் கற்ற புலமையர்.

பண்டிதை எஸ். கிருட்டிண வேணியம்மையாரின் வாழ்க்கை இடையீடுபட்டு முற்றுந் தமிழ்த்தொண்டுக்கு ஒப்புவிக்கப்பட் டது உலகறிந்ததொன்றே. பண்டிதை பத்மாவதி அம்மையார் வாழ்க்கை உலகியலோடொத்த தனிப்பெரும் மாண்பமைந்த செம்மை வாழ்க்கையாகும். இவர் தம் கணவனார் திரு. தனபால அரங்கசாமி நாயுடு என்பவராவர். இவர்கள் உருவினும், திரு வினும், கல்வியினும், உயர்ந்த ஒழுக்கத்தினும் மேம்பட்டு உல கோர் போற்றத் திகழ்ந்தனர். இருவருங் கருத்தொத்து மனை யறம் பேணினர். மக்கள் பலரை யீன்றனர். மாண்புடன் வளர்த்து நன்னிலையிலமர்த்தினர்.

நம் பத்மாவதி யம்மையாரவர்கள் 1-5-1960 இல் இறை வன் திருவடி நீழலை எய்தினர். அவர்தம் ஆவி இறைநிறைவில் என்றும் இன்புறுமாக. அவர்தம் மக்கட்கும், அரிய தமக்கை யாரவர்கட்கும் கழகத்தாரின் ஆறுதலுரை உரியதாகுக.

சென்னை மாணவமன்றத்தார் தமிழ்மொழி வளர்ச்சிக்குச் செய்துபோதரும் அரியதொண்டுகள் அளப்பில. மாணவ மாணவியர்கட்கு ஊக்கமும் ஆக்கமும் உண்டாக்கும் முறையில் ஆற்றிவரும் நற்பணிகள் நனிமிகப்பல. கற்றுவல்ல இருபாற் புலவர் பெருமக்களுக்கும் கல்வி வளர்ச்சிக்காம் அருஞ் செயல் கள் பலபுரிந்து வருகின்றனர். பல வகையானும் புலவர் பெரு மக்களைப் பாராட்டி வருகின்றனர். இவ்வகையில் குறிக்கொண்டு உற்றபோதுழைக்கும் ஒரு மன்றமாகத் திகழ்வது இம் மாணவர் மன்றமே. இம்மன்றம் அமிழ்தினுமினிய தமிழ் வரலாற்றுக் கருவூலமாகத் திகழ்கின்றது. இம்மன்றத்தார் நம் பத்மாவதி யம்மையார் பிரிவு குறித்து ஓர் ‘இரங்கல் மலர்’ வெளியிட்டுள் ளார்கள். மன்றத்தார் அரும்பணிகள் என்றும் வாழ்க.

சிவமயம்

# *கோவில் திருப்பணியும் கோனாட்சியும்

1. சாலிவாகனசகாப்தம் 945 (கொல்லம் 199இல்) மதுரை பாண்டியராஜா சேகரம் உக்கிர பாண்டியராஜா மானூருக்கு வந்து அதற்கு சமீபமாய் உக்கிரன்கோட்டையும் போட்டு அரசாண்டார். அக்காலத்தில் சங்கரநயினார்கோவில் ஆலயம் திருப்பணி உண்டானது.

2. சகாப்தம் 1017 (கொல்லம் 271 இல்) ஷையார் குமாரர், அள்ளியுண்டராஜா திருக்குறுங்குடி சுவாமி அழகியநம்பி தெரிசனத்திற்கு வந்தபொழுது வேட்டைக்குப்போக மலைச்சார்பாய் வரும் வழியில் மலைக்குள் சுவாமி சுப்பிரமணியர் இருக்கிறதைக் கண்டு முன் மண்டபம் கட்டி வள்ளியூரை ஸ்தாபித்துப் பிரபலம் செய்தார்.

3. சகாப்தம் 1056 (கொல்லம் 310இல்) ஷையார் குமாரர் பிராந்தராஜா அரசாண்டார்

4. சகாப்தம் 1095 (கொல்லம் 349இல்) ஷையார் குமாரர் சிவிலிமாரபாண்டியராஜா, வள்ளியூருக்கு வந்து ஸ்வாமி தெரிசனஞ்செய்து திருப்பணியுஞ்செய்து பிற்பாடு சங்கரநயினார் கோவிலுக்குப்போய்ப் பெரியபிராகாரம் முதலிய திருப்பணி செய்தார். பிற்பாடு மானூரைப் பிரபலம் பண்ணிவைத்து ஓர் பெரியகுளமும் வெட்டினார். இவர் நாளையில் கரூர் சித்தர் திருநெல்வேலி முதலிய இடங்களைச் சபித்தது.

5. சகாப்தம் 1132 (கொல்லம் 386இல்) ஷையார் குமாரர் வீரகேரளராஜா அரசாண்டார்.

6. (கொல்லம் 424இல்) தென்காசி ஆலயம் கட்டினது.

---

*வெளியீடு No 1. சில முக்கிய அன்பர்களின வேண்டுகோளின் படி தச்சநல்லூரில் நம்முடைய ஸ்வாமி வேதமூர்த்தி மடாலயத்தில் இருக்கும், சீதாள ஓலைக்கணக்கில் இருந்து திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சில தேவஸ்தானங்களின் திருப்பணி விஷயமாயும் அரசாக்ஷி செய்தவர்களின் விபரத்தையும் எடுத்து எழுதியிருக்கிறேன்.

ஷை விபரங்கள் 1906, 1907ஆம் வருஷம் பிரசுரமான திருநாவுக்கரசு என்ற பத்திரிகையிலும் வெளியிடப்பட்டு இருககிறது.

இஃது நெல்லை, கர்ப்பூரப்பணிவிடை சிவசூரியப்பரதேசியால் வெளியிடப் பெற்றது.

7. (கொல்லம் 445இல்) குலசேகரராஜா கோட்டை கட்டினது, வள்ளியூர்.

8. சகாப்தம் 1192 (கொல்லம் 446இல் வீரகேரளராஜா வம்சத்தில் உதித்த குலசேகரப் பெருமாள் ராஜா, அவர் தம்பி நால்வரும் வேட்டையாடத் திருக்குறுங்குடிக்குப்போய் ஓர் பத்திரகாளியின் உத்திரவுப்படி கோட்டையும் போட்டு (ஸ்வாமி பேர்) அருளாளப்பெருமாள், பிரதிஷ்டையும் செய்தனர்.

9. கொல்லம் (685 முதல் 714) வரை திருநெல்வேலி அரியநாயக முதலியார் அதிகாரம்

10. கொல்லம் (714 முதல் 813) வரை நாயிக்கமார் அதிகாரம்

11. கொல்லம் (813 முதல் 850) வரை வடமலையப்ப பிள்ளையன் அதிகாரம்.

12. கொல்லம் 817 முதல், புதுசேரியான் வந்து வடமலையப்பபிள்ளையன் கூட யுத்தம் செய்து அபஜயமடைந்து அன்றிரவிலேயே திருச்செந்தூர்க் கோவிலைக் கொள்ளையிட்டு கப்பல் மார்க்கமாய் ஸ்வாமியையும் தூக்கிக்கொண்டு போகையில், ஸ்வாமி கனத்தால் கப்பல் தாங்கக்கூடாமையால் ஸ்வாமியை சமுத்திரத்தில் போட்டுவிட்டான்.

13. (கொல்லம் 829இல்) ஸ்வாமியைக் கடலில் இருந்து வடமலையப்பபிள்ளையன் எடுத்துப் பிரதிஷ்டையும் செய்தனர்.

14. கொல்லம் 831இல் திருமலைநாயக்கன் பரமபதம்.

15. கொல்லம் 832இல் முத்துவீரப்ப நாயக்கனுக்கு துரைத்தனம்.

16. கொல்லம் 833 முதல் 855 வரை சொக்கப்ப நாயக்கர் துரைத்தனம்.

17. கொல்லம் 836இல் வடமலையப்பபிள்ளையனால் சொக்கநாதன் பெருங்கால், சிவலப் பேரிக்கு வெட்டினது.

18. கொல்லம் 680 தாதுவருஷம் தைமீ 10உ திருநெல்வேலி நெல்லையப்பர் ஆலயத்துக்குப் பெரிய முதலியாரால் திருவுருதுலாம் 165 கிரயம் பொன் 13612.

19. கொல்லம் 697 தாருண வருஷம் சித்திரைமீ ஷெயாரால் ஸ்வாமி அறுபத்து மூவர் திருவுருவுக்குப் பொன் 17280.

20. கொல்லம் 730 காளயுக்தி வருஷம் வைகாசி மீ திருநெல்வேலிப் பெரியகொடி மரம் பிரதிஷ்டை.

21. கொல்லம் 780 சவும்ய வருஷம் தை மீ திருப்பணி பண்டாரம் தருமம் (பெரிய தேர் வெள்ளோட்டம்).

22. கொல்லம் 801 பிரமோதூத ௵ தை மீ அம்மன் கோவில் கோபுரம் கட்டினது.

23. கொல்லம் 781இல் ஸ்வாமி கோவில்கோபுரம் கட்டினது.

24. கொல்லம் 811 தை மீ சேரகுளம் பிரவிப்பெருமாள் பிள்ளை தருமம் (ஊஞ்சல் மண்டபம்).

25. கொல்லம் 821 சார்வரி ௵ சித்திரை மீ வடமலையப்ப பிள்ளையன் அதிகாரத்தில் ஷெயாரால் சங்கிலிமண்டபம்

26. கொல்லம் 823 சுபக்ருது ௵ ஆவணி மீ ;7½ முழத்தில் (பொற்றேர் ஓட்டம்).

27. கொல்லம் 828 கீலக௵ சிவந்தியப்பநாயக்கர் தர்மம் சந்நிதி ரிஷபக்கொடிமாமண்டபம்.

28. கொல்லம் 811 விக்கிரம ௵; ஆற்றங்கரை தீர்த்த வாரிமண்டபம் பிறவிப்பெருமாள்பிள்ளையன் தர்மம்.

29. தென்காசி நயினார்செட்டியார் தர்மம், அழகப்ப முதலியார் அதிகாரத்தில் நயினார் குளம் வெட்டினது.

30 வடமலையப்பபிள்ளையன் தர்மம் ஸ்வாமிகோவில் சீவிலி மண்டபம் கீழ்புறம், தென்புறம் மேல்புறம் ஆறுமுகநயினார் கோவில் வரைக்கும். (ஆறுமுகநயினார் பி ர தி ஷ் டை யு ம்

31. வடபுறம் பிள்ளையன் மச்சினன் கீழவளவு திருமலைக் கொழுந்து பிள்ளையன் தர்மம் ¾ பங்கும் ¼ பங்கு பலபேர் உபயம்.

32. ஸ்வாமிகோவில் சுற்றுப்பிரகாரத்தில் தென்னம்பிள்ளைகள் மமதீசுபுகான் அதிகாரத்தில் முத்துப்பிள்ளை தர்மம்.

33. நடுக்கோபுரவாசலுக்கு தெற்கு அருகாக மண்டபம் பிள்ளையன் உடன் பிறந்தார் தர்மம்.

34. அம்மன் சன்னதி கொடிமரத்துக்குத் தெற்கு மண்டபம் சுந்தரத்தோழபிள்ளை உபயம்

35. கருமாரி நாலுகால் மண்டபம் முதல் கிழக்குவரைக்குத் தளவாய் அழகப்பமுதலியார் தர்மம், நாலுகால் மண்டபத்துக்கு

வடக்கு மேல்புறம் முக்கால் பங்கு தளவாய் அழகப்பமுதலியார் தர்மம்.

36. மேல்புறம் கால்பங்கு வடபுறம் தெற்கு ஒரு பத்தி மண்டபம், மண்டகப்படி திருமலையப்பப்பிள்ளை தர்மம்.

37. மமதிசுபகான் அதிகாரத்தில் வெங்கிடகிருஷ்ண முதலியார் தர்மம், அதாவது:—சுந்தரத்தோழபிள்ளை வீடு முதல் மடைவைத்துப் பல்லிக்கோட்டைப் பண்டாரம் வீட்டு வழியாகக் கால்வாய் ஜலம் கருமாரிக்கு வந்து தளவாய் அழகப்ப முதலியார் மண்டகப்படி வழியாக; ஆயிரக்கால் மண்டபத்துக்கு வடக்கு அருகாமையாகக் கொடிக்கம்பத்துக்குக் கிழ்ப்புறமாக மடைவைத்துப் பொற்றாமரைக்கு வந்து கல்லத்திமுடுக்குக்கு வடபுறமாக ஆனையப்பமுதலியார் வீட்டுக்கு கொல்லை வழியாகத் தெப்பக்குளத்துக்கு ஜலம் வரும்படி மடை செய்து வைத்திருக்கிறார்.

38. பொற்றாமரையின் வடபுறம் படித்துறைக்குக் கிழக்கு மண்டபம் (ஆயம் தானப்பமுதலியார் தர்மம்)

39. வடபுறம் படித்துறைக்கு மேல்புறம் மண்டபம் வெங்கிட கிருஷ்ணமுதலியார் தர்மம்.

40. பொற்றாமரையில் கீழ்புறம் மண்டபம் பூராவும் திருவாவடுதுறை ஆதினத்தின் தர்மம்

41. பொற்றாமரையின் தென்புறம் பாதிமண்டபம் தர்மபுரம் மடம் ஆதினத்தின் தர்மம்.

42. ஷைதென்புறம் மீதம் பாதி மண்டபம் பலபேர் உபயம்.

43. அம்மன் கோவில் பிராகாரத்தில் தென்னம்பிள்ளை வெங்கிடகிருஷ்ணமுதலியார் தர்மம்.

44. மமதிசுபுகான் அதிகாரத்தில் திரிசரபுரம் சிவராம காசியாபிள்ளை தர்மம் நெல்லையம்பலம் வடிவம்பலம் தெரு மால்.

## கருவூர் சித்தர்

சிவிலிமாறபாண்டியன் நாளையில், கருவூர்சித்தர் திருப்புடை மருதூர் முதலிய இடங்களைச் சபித்து விட்டு, பின் திருநெல்வேலி வந்து ஸ்வாமியை நெல்லையப்பர் என்று கூப்பிடச் சுவாமி கேளாததினால், ஈசன் இல்லையோ வென்று ஈசன் அங்கு

எருக்கு இங்கு, என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டு மானூருக்கு வரும்போது நெல்லையப்பர் இச்சிறந்தசிவபக்தனுடைய வலி மைக்கு மெச்சி, அடிக்கு ஆயிரம் பொன்வைத்து ஆவணி மூலத்தில் கண்டார். பின் இவர் செந்நெல் அங்கு எருக்கு இங்கு என மறுசாபம் கொடுத்துவிட்டு, மானூரிலேயே தங்கி அன்று ஒரு பிராமணர் இல்லம் புகுந்து பசிக்குச் சாதம் கேட்க, அப்பிராமணி என்காணும் சத்தம் போடுநீர் என் கணவர் வயிற்று வலியால் கஷ்டப்படுகிறார் சாதம் கிடையா; மற்றோர் கிரகம் செல்லுமென. இவர் ஓ! பிராமணியே உன் கணவன் வயிற்றுவலி அகன்றிடில் என் விருப்பின்படி சாதம் போடுவாயோ என்று கேட்க அம்மாது ஆமோதிக்க வயிற்று வலியும் அகன்றது. அம்மாது இவர் விருப்பின்படி ஆடு, கோழி முதலியவைகளின் மாமிசத்தால் கறிசெய்து கொண்டு இருக்கை யில், பக்கத்து வீட்டுப் பிராமணர்கள் அறிந்து அரசனிடம் தெரியப்படுத்தி அவள் கிரகத்தைப் பரிசோதிக்கையில் ஒன்றும் இல்லாமல் இருந்தது. உடனே சித்தர் கோபம் கொண்டு, "அகடு, முகடு கூடினாலும் அக்கிராமம் அடுத்தவீடு கூட்டாமல் போக" என்றும், "முக்கால் விளைந்தாலும் மோருக்கு விதியற் றுப்போக" என்றும் சபித்து விட்டுத் திருச்செந்தூருக்குச் சுவாமி தெரிசனம் செய்யச் செல்லுகையில் சுப்பிரமணியர் "தம் ஆலயம் முதலியவற்றை சபிப்பார் என்று எண்ணி" வழி எல்லாம் சிவலிங்கங்களை உண்டுபண்ணி இவர் நடந்துவர ஒட்டாமல் செய்தார். பின் இவர் தலையால் உருண்டு கொண்டு தலையூண்டி மடம்வரைக்கும் வந்தார். அங்கே ஸ்ரீ சுப்பிரமண்யர் பிரசன்னமாகி, 'அப்பா நீ வந்து தெரிசனம் பண்ணிக்கொண்டு யாதொன்றையும் சபியாமல் உடனே மோக்ஷத்துக்கு வழி தேடிக்கொண்டால், இச்சங்கடத்தை நிவர்த்திக்கிறேன் என்றார். அங்ஙனமே இவர் ஒப்புக்கொள்ள, சுப்பிரமண்யர் ஊரைச்சுற்றி சிவலிங்கங்கள் இல்லாமல் இருக்கச்செய்து சுருக்கமாகப்போக வழிகாட்டினார். இவர் அங்ஙனமே போய்ச் சிவதெரிசனம் செய்து கொல்லம் 386இல் காந்தீசுரத்தில் ஒளியோடே ஐக்கியமானார்.

| | |
|---|---|
| கொல்லம் 1104-ஆம் தை மீ 12உ | இங்ஙனம் ஒப்பம். இ—பேர |

---

செல்லும் வண்டிகளின் கோவையைப் போல இவைகள் வரன் முறை பெற்றுச் செல்லுகின்றன. சாலையின் தரம், முன் பின் செல்லும் வண்டிகளின் வேகம் மூலை முடுக்குகளின் நிலை ஆகிய இவைகளைப் பார்த்தே ஒவ்வொரு வண்டியும் வேகத்தை ஏற்றியும் இறக்கியும் செல்ல வேண்டுவது இன்றியமையாதது ஆகும். அவ்வாறே எழுத்தொலிகளும் முன்னே எழும் எழுத்தொலிக்கும், பின்னே எழும் எழுத்தொலிக்கும் ஏற்ப எடுப்புடனோ, அடங்கியோ, நடுங்கியோ ஒலித்துச் செல்லுகின்றன. முன்னெழுந்த எழுத்தொலியின் பிறப்பிடமான உறுப்புக்களின் அசைவினையே பின்னெழும் ஒலியும் பெற்றதாயின் அது சற்று விரைவினிலே இழும் என எழூந்தொலிக்கும் அன்றி வேறு உறுப்புக்களின் அசைவினால் பிறப்பதாயின் விட்டெழுந்து வேகம் பெற்று ஒலிக்கும்.

சில எழுத்தொலிகள் சொற்களாய்த் தொடரும் போது குறிப்பிட்ட மாத்திரை அளவினும் குறைவு பெற்றமையும் இக் காரணத்தினாலே ஆகும். முன்னெழுந்த எழுத்தொலியின் பிறப் பிட உறுப்புக்களான் பெரும்பகுதி வாய் மூடப்படும் நிலையினை அடைவதனால் பின்னெழும் எழுத்தொலிகள் முழு ஒலி நிலையை அடைவதில்லை. உகரம் குறைந்ததும், இகரம் குறைந்ததும், மகரம் குறைந்ததும், ஐகார ஔகாரங்கள் குன்றியதும் இக்கார ணத்தினாலேயே ஆகும். அவைகளை ஒலித்துக் காணின் இந்நிலை புலப்படும்.

எனவேதான் இன்ன மெய்கள் இன்ன மெய்களோடு மயங் கும், இவை இவை மயங்கா என்ற வரையறை வகுக்கப்பட்டது. தமிழ்மொழி தோன்றியபோது உறுப்புக்களின் வளரா நிலைமை யான் அல்லது நன்கு திரிபுற்று வழங்கா நிலைமையான் இவை வேண்டியவாறு புழங்கா நிலைமையை அடைந்தன என்பதை நாம் உணரல் வேண்டும்.

சுற்றுப் புறத்திற் கேற்ப மனிதனின் மனநிலையும், உடல் நிலையும் மாறுபடுவதைப் போல எழுத்தொலிகளும் முன்பின் எழுத்தொலிகளான் மிக்கும் குறைந்தும் மாறுபடுகின்றன. தனித்தனியே அவைகட்குப் பிறப்பு முறை கூறப்பட்டதாயினும் ஒலிகள் தொடர்புற்று, சொற்களாகச் சேர்ந்தொலிக்கும்போது அவைகள் சிற்சில இடங்களில் சிறிது குறைந்தும், சிற்சில இடங் களில் சிறிது மிகுந்தும் ஒலிக்கப் பெறுதல் இயல்பாகும். இந் நிலை எல்லா மொழிகளுக்கும் உண்டு. ஆங்கிலம் போன்ற மொழி களில் சில ஒலிகள் ஒலிக்கப்பெறு நிலைமையை அடைதலும் உண்டு. 'Often' என்ற சொல்லைக் காணுங்கள். 'T' என்ற எழுத்தொலி எழுதப்பட்டாலும் ஒலிக்குங்கால், முன்னுள்ள 'F'

ஒலிக்கும், பின்னுள்ள 'E' ஒலிக்கும் ஏற்ப இயைந்துவரும் பிறப்பிடத்தினை 'அது' கொண்டிராமையால் ஒலித்தல் கடினம் நோக்கி விடப்படுதல் காண்க. இவ்வாறு தமிழ்மொழியில் விடப்படுவதில்லை. இதற்குத் தமிழ்மொழியின் ஒலிப்புமுறையும், எழுத்து முறையும் ஒன்றாக இயங்குவதே காரணம் ஆகும். இது தமிழுக்குரிய ஒரு தனிச் சிறப்புமாகும். இந்த நிலை இல்லாமை ஆங்கிலம் போன்ற மொழிகளுக்குக் குறைபாடாகும். அம்மொழிகளில் எழுதப்படுவதுபோல உச்சரிக்கப்படுவதில்லை.

இதுகாறும் கூறியவற்றால் எழுத்துக்கள் முன்பின் வரும் எழுத்துக்களின் நிலைநோக்கி மிக்கும் குறைந்தும் ஒலிக்கப் பெறுவது உண்மை என்பது விளங்கும். எனவே ஒரே எழுத்தே ஒரு சொல்லில் வலிந்தொலிக்கும், வேறொரு சொல்லில் மெலிந்தொலிக்கும்; மற்றொரு சொல்லில் இடைப்பட்ட ஒலிபெற்று இயங்கும். இது எழுத்தொலி இடத்திற்கேற்பத் தன்னை இயைத்துக் கொள்ளும் இயல்பை உணர்த்தும். இவ்வாறு சிறிது மாறுபட்டு ஒலிக்கும் அவ்வொவ்வோர் ஒலிக்கும் ஒவ்வொரு வரிவடிவங்கொள்ளுதல் தேவையற்றதாகும். 'க' என்ற எழுத்தொலியை எடுத்துக் கொள்ளுவோம். 'க' என்று தனித்து ஒலிக்கும்போது எழும் ஓசைக்கும், 'கலம்' என்று சொல்லின் முதலிற் பெய்து ஒலிக்கும்போது எழும் ஓசைக்கும், 'பக்கம்', 'அகம்' என இடையில் பெய்து ஒலிக்கும்போது எழும் ஓசைக்கும், 'வாழ்க' என்ற ஈற்றிற் பெய்து ஒலிக்க எழும் ஓசைக்கும் சிறிது சிறிது வேறுபாடு இருத்தலை நோக்குக. இவ்வொலி ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு வரிவடிவத்தைக் கையாடல் தேவையற்றதாகும். இவ்வாறு நோக்கினால் 'க' என்ற எழுத்தொலியே பலவாறு திரிந்தொலிக்கும், அவை ஒவ்வொன்றற்கும் ஒவ்வொரு வரிவடிவங்கொளப் புகின் எழுத்துக்கள் பல்கும். தமிழ் எழுத்துக்கள் 247 என்பது போய்ப் பல்லாயிரக் கணக்காகப் பெருகிவிடும். இயந்திரத்தால் அனைத்தையும் இயக்கும் இவ்விருபதாம் நூற்றாண்டு மனிதனுக்கு, இளைப்பாறவும் நேரமில்லாது வருந்தும் இக்கால மனிதனுக்கு அது பெருந்துன்பத்தையே அளிக்கும். வரிவடிவம் எவ்வளவுக் கெவ்வளவு குறைகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு பயிலும் துன்பமும் பயன்படுத்தும் துன்பமும் குறைகின்றன. இதை உன்னியே நம்முன்னோர் திரிபுற்ற ஒவ்வோர் ஒலிக்கும் வரிவடிவங் கொள்ளார் ஆயினர்.

ஆங்கிலத்தில் 26 எழுத்துக்களே உள்ளன. ஆனால் ஒலி வடிவங்களோ மிகப்பல உள்ளன. ஆங்கிலத்தில் உயிர் எழுத்துக்கள் ஐந்து; (a, e, i, o, u) உள்ளன. ஆனால் அவைகள்

ஏறக்குறைய முப்பது உயிரொலிகளைக் குறித்து நிற்கின்றன என அறிஞர் கூறுகின்றனர். எனவே ஒலி வடிவம் ஒவ்வொன்றற்கும் வரிவடிவங் கண்டு போதல் மிகையாம்.

எழுத்துக்கள் பிறக்கும் முறையினைக் கூறிய தொல்காப்பியனார் தாம் கூறியவாறன்றி எழுத்துக்கள் சிற்சில இடங்களில் திரிந்து ஒலிக்கும் நிலையுமுண்டு என உணர்ந்தனர். ஆதலின்,

"தத்தம் திரிபே சிறிய என்ப." (தொல். எழுத்.)

என இலக்கணம் வகுத்தனர். பின்னர் எழுந்த நன்னூலும் இதனைத் தெளிவுபட வலியுறுத்திச் செல்லுகின்றது. மொழியிடைப் படும்போது எழுத்துக்கள் சிறிது எடுத்து ஒலிக்கப்படுதலும், படுத்தும் நலிந்தும் ஒலிக்கப்படுதலும் உண்டு எனக் கூறிப் போந்தனர் நன்னூலார்.

"எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பில்
திரிபும் தத்தமிற் சிறிதுள வாகும்." (நன்னூல். 88)

என நன்னூல் நவிலல் காண்க.

எனவே நான்குவகை எழுத்துக்கள் தமிழில் _ லால் இது தமிழ்ச் சொல்லன்று எனக் கூறுதல் தவறு என்பதும், அவ்வெழுத்தொலிகள் தமிழில் உண்டு என்பதும், ஆனல் வெவ்வேறு வரிவடிவங்கள் கோடல் தேவையற்றது என்பதனல் தமிழறிஞர் கொள்ளாராயினர் என்பதும், சொற்களை ஆயப்புகுவார் வெறும் ஒலி நிலைநோக்கி இது இம்மொழிச்சொல், அது அம்மொழிச்சொல் என முடிவுகூறல் சிறந்ததன்று என்பதும், வேர்ச் சொற் கொண்டு முடிவுகூறலே சிறந்தது என்பதும் அறிஞர் நோக்கற் பாலனவாகும்.

---

## திருவாட்டி இராதாபாய் சுப்பராயன் மறைவு

இந்திய மைய அரசின் போக்குவரத்து, அஞ்சற்றுறைகட்கு அமைச்சர் டாக்டர் திரு பி. சுப்பராயன் அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் திருவாட்டி இராதாபாய் சுப்பராயன் அவர்கள் கடந்த 2—6—60 இரவு புதுதில்லி மருத்துவ விடுதியில் தமது 69ஆவது அகவையில் காலமானர்கள். அம்மையாருக்கு மூன்று ஆண்மக்களும் ஒரு மகளும் உளர்.

இச் செய்தி அறிந்து பெரிதும் வருந்துகிறேம். அம்மையாரவர்கள் உயர்குடியிற் பிறந்தவர்கள். பொதுநலம் நாடி உழைக்கும் பெற்றியர். இத்தகையாரை இழந்து வருந்தும் டாக்டர் சுப்பராயன் அவர்கட்கும், அவர்தம் மக்களுக்கும் உற்றார் உறவினர் நண்பர் ஆகிய அனைவருக்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேம். அம்மையார் ஆவி இறையடியில் இன்புறுவதாக.

மேற்கு சர்மனி பான் பல்கலைக் கழகத்திற்குத்

# தமிழ் எழுத்தொலி ஆராய்ச்சியாளர்



டாக்டர், C. R. சங்கரன்

தமிழ்ப் பேரறிஞர், எழுத்தொலி ஆராய்ச்சியாளர், **டாக்டர் C. R. சங்கரன்** என்பவரை, மேற்கு சர்மனி நாட்டின் **பான்** (Bonn) பல்கலைக் கழகத்தில் சென்றுபோதிக்கும் பேராசிரியராக (Visiting Professor) நியமித்திருப்பது மகிழ்தற்கு உரியது.

டாக்டர் சங்கரன், சென்னை மாநிலத்தைச் சேர்ந்தவர்; பூனை தெக்காணக் கல்லூரி எழுத்தொலி ஆராய்ச்சி நிலையத்தில் பணியாற்றியவர். இவர் தொல்காப்பியத்தின் எழுத்ததிகாரத்தை அடிப்படையாகக்கொண்டு, 'Phonemics of old Tamil' என்ற அரிய ஆராய்ச்சி நூலை எழுதினர். தொல்காப்பியர் விஞ்ஞான முறையின்படி கையாண்ட சொற்களின், எழுத்தொலிகளின் ஆக்க அமைப்பு முறை, பாணினி எழுதிய அட்டாத்தியாயி என்னும் வடமொழி இலக்கண நூலிலும் காணப்படுவது அன்று என்றும், இக்கால எழுத்தொலி ஆராய்ச்சியாளர் கண்ட புதிய கொள்கைகள் பல, இப் பழந்தமிழ் இலக்கணத்தில் காணப்படுவது பெரும் வியப்பைக் தருகின்றது என்றும் முதல் முதல் ஆராய்ச்சி உலகிற்கு இந்நூலால் அறிவித்தவர் இப் பேராசிரியரே ஆவார்.

எழுத்தொலி ஆராய்ச்சியுடன் இசை ஆராய்ச்சியிலும் வல்லுநர், இப் பேராசிரியர். தமிழ்நாட்டு இசைமுறை வடநாட்டு

இசைமுறை என்னும் இரு இசைமுறைகளையும் நன்கு பயின்று தேர்ந்தவர். இருக்கு வேத இசையிற் பயிலும் சுரங்களைப் படம் பிடித்து இக்காலத்தே விஞ்ஞான முறைப்படி ஆராயும் கருவி களைக்கொண்டு ஆராய்ந்து தெளிவுபெற வெளியிட்டார். பேச்சொலியிற் காணும் நுண்ணிய சார்பு ஒலிகளின் நிலையை இசையிற் பயிலும் நுண் சுருதிகளைக்கொண்டே விளக்கும் ஆற்றல் வாய்ந்தவர் இவர்.

தொல்காப்பியர் விளக்கிய ஆய்த எழுத்தொலியை அடிப்படையாய்க்கொண்டு ஆராய்ந்து எழுத்தொலிகளின் ஆக்கத்திற்கு ஆய்த ஒலியே அடிப்படையாவது எனக் கண்டார். இதற்கு ஆய்த நிலை (Aytham phenomenon) எனப் பெயரிட்டு, Alpha phonoid (ஆல்பா பொனொய்ட்) என்னும் புதுக்கொள்கையை இவர் நிறுவினார். இவர் ஆராய்ச்சிகள் எழுத்தொலி இயலைக் கணக்குமுறைப் படிக்கும், விஞ்ஞானமுறைப்படிக்கும் நிறுவ எழுந்தவை. இவை ஐரோப்பிய நாட்டு அறிஞர் பலர் கருத்தைக் கவர்ந்தன. அவர்கள் இவ்வாராய்ச்சியைப் பாராட்டினர். இவர் கண்ட உண்மைகளையும், தொல்காப்பியர் காட்டிய முறையையும் பான் பல்கலைக் கழக மாணவர் முன் விளக்கவும், போதிக்கவும், டாக்டர் சங்கரன் அவர்களை இப்போது நியமித்துள்ளனர்.

சென்றுபோதிக்கும், ரிச்சர்ட்-மெர்டன் பேராசிரியராக (Richard - Merton Visiting Professor) ஒன்பது மாதங்கள் 1960-மே மாதம் முதல் 1961 ஜனவரி மாதம் முடிய இப் பல்கலைக் கழகத்தில் இவர் பணியாற்றுவார்.

பாண்டியன் பனுவல் பேரவையின்கண், அன்று, தொல் காப்பியர் மயங்காமரபின் எழுத்துமுறை காட்டிப் பல்புகழ் நிறுவிய படிமையோன் எனத் திகழ்ந்தார். அவ்வாறே, இன்று **உயர்திரு டாக்டர் சங்கரன்** அவர்களும் பான் பல்கலைப் பேரவையிலும் பேரறிஞர்கள்முன் மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டிப் பல்புகழ் நிறுவச் சென்றுள்ளார். இப் பேராசிரியர் நலம் பல பெற்றுப் புகழ் பல நிறுவி, வெற்றியுடன் மீளுமாறு வாழ்த்துகிறோம், இறைவனை வேண்டுகிறோம்.

எழுத்தொலிகளைப் படம் பிடித்து, அவ் வொலிப்படங்களை விஞ்ஞானக் கருவிகள் கொண்டு இப் பேராசிரியர் ஆராய்வதைத் தலைப்பில் காணும் படம் காட்டுகின்றது.

# செந்திலாண்டவன்

# செய்தருளுஞ் சிறப்புத் திருவருள்

[சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை.]

(செல்வி சிலம்பு ௩௪, பரல் ௯, ௪௪௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

திருமணம்

அடிகளாருக்கு அகவை முப்பத்திரண்டு நிகழுங்கால் தம் வழியைச் சார்ந்த 'தாயாரம்மாள்' என்னும் நற்பண்பெல்லாம் ஒருங்கமைந்த நங்கையினைத் திருவருளால் திருமணம் புரிந்து கொண்டனர். அந்நங்கையும் சீர் சிறப்புடன் மனையறம் பேணி வந்தனர். முருகனருளால் அவ்வம்மையார்பால் ஆண்மகவிரண்டும் பெண்மகவொன்றும் பிறந்தன. ஏறத்தாழ அடிகளாரின் அகவை 44 அல்லது 45 நடக்கும்போது இவ்வம்மையார் இறையடி எய்தினர். அதன்பின் இவ்வம்மையின் அண்ணன் மகளாகிய 'முத்துலட்சுமி' என்னும் நங்கையினைத் திருமணம் புரிந்து கொண்டனர். இவ்வம்மையார்பால் ஆண்மகவொன்றும் பெண்மகவொன்றும் பிறந்தன. பிள்ளைகளனைவருஞ் வேண்டுஞ் சிறப்புடன் வாழ்ந்து வருகின்றனர். அடிகளாரும் கற்பிற்சிறந்த மனைவியார் முத்துலட்சுமியம்மையாரும் மக்களும் குடும்பமாக வாழ்ந்து வருகின்றனர்.

கடல்கடந்த வெளிநாடும் போய்வரல்

கண்காணும் முருகன் முதலடியாராகத் திகழும் திருமுருக. கிருபானந்தவாரியாரவர்கள் பெருந்துணையால் மலேயாவுக்கும், கொழும்பு சுந்தரம் கம்பெனி உரிமையாளர் திரு. வை. கணபதியா பிள்ளையவர்களின் நற்றுணையால் கொழும்புக்கும் அடிகளார் சென்று இசையரங்கு நிகழ்த்திப பேரும, புகழும், பொருளும் பெருகப் பெற்று மீண்டனர். அன்பர் வேண்டுகோளின்மேல் பெங்களூர் சென்று இசையரங்கு நிகழ்த்தினர்.

போட்டிப் பரிசு

தமிழிசை வளர்த்த பெருவள்ளல் ராசா சர். அண்ணாமலைச் செட்டியார் நிறுவிப் புகழொடு திகழும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் 'தமிழிசைப்பாவின் போட்டி'யொன்று நிகழ்த்தினர். அதன்கண் கலந்து கொள்ளுமாறு அன்பர்கள் பலர் அடிகளாரைத் தூண்டினர். அடிகளார்க்குப் பிறர்பெறும் பரிசுக்குத் தாம் போட்டியாக நிற்பது தகாதென்னும் நினைவுண்டாயிற்று. அதனால் அடிகளார் அப்பரிசிற் கலந்து கொள்ளவில்லை. அங்ஙனமிருந்தும் அடிகளார்பால் மெய்யன்பு பூண்ட அன்பரொருவர்

அடிகளார் அருளாலாக்கிய கீர்த்தனங்கள் பலவற்றைத் தாமாக எழுதி, அண்ணுமலைக் கழகப் போட்டிக்கு அனுப்பி வைத்தனர். இஃது அடிகளாருக்குத் தெரியாது. போட்டியில் அடிகளார் பாக்களே முதன்மையானவை யென்று முடிவு செய்தனர். பரிசினை வந்துபெற்றுக் கொள்ளுமாறு கடிதம் வந்தது. கடிதங் கண்ட அடிகளார் வேறு செய்வதற்கில்லாமையால் அண்ணுமலை நகர் சென்று பரிசு பெற்று மீண்டனர்.

திருவிழாக் காட்சி உறுதி

அடிகளார் செந்திலாண்டவனை அடுத்தநாள்முதல் ஏறத்தாழ நாற்பதாண்டுகளுக்குமேல் ஆவணித் திங்களிலும், மாசித் திங்களிலும் நடக்குந் திருவிழாக் காலங்களில் ஆறுந்திருநாள் இரவு திருச்செந்தூருக்கு வந்து ஏழு எட்டுத் திருவிழாக்களை இன்றியமையாது கண்டு வழிபட்டு முருகன் அருள்பெற்றுப் பெருந் தொண்டாற்றி வருகின்றனர். அந்நாட்களில் எத்துணைப் பெரும் பொருள் வருவதாகவிருந்தாலும் அடிகளார் இசையரங்குக்கு இணங்குவதில்லை. எதிர்பாராத முட்டுக்கள் நிகழுமேல் அவற்றையெல்லாம் முருகப்பெருமான் தோன்றுத்துணையாகவிருந்து நீக்கி ஆட்கொண்டருளுகின்றனன். அங்ஙனம் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பல. இரண்டொன்று இங்குக் காண்க. அடிகளார் எவரிடமும் பொருள் கேட்டுப் பெறுவதில்லையென்று நோன்பு கொண்டிருந்த காலத்து அம்பாசமுத்திரமிருந்து 'ஏழாந் திருநாளுக்கு' வந்து சேர்தல் வேண்டும்; புகைவண்டிக்கும் உந்து வண்டிக்குமாக வேண்டிய கட்டணத்துக்கு ஒரு ரூபா குறையவிருந்தது. ஆண்டவன் புகலிடுவான் என்னும் முழு நம்பிக்கையுடன் அடிகளார் முருக நாட்டங்கொண்டு வருவாராயினர். அப்பொழுது பெருஞ்சாலை நடுவழியில் ஒரு ரூபா நோட்டுத் தென்பட்டது. அடிகளார் அதனை முருகனருள் என்றேகொண்டு வந்து சேர்ந்தனர். பின்னொருகால் வேண்டும் பொருளுடன் திருநெல்வேலியில் நாலைந்து நாட்களுக்கு முன்பாகவே வந்திருந்து புகைவண்டித் துண்டெடுக்கப் பெருமுயற்சி பண்ணியும் முடியாதாயிற்று. ஆறுந்திருநாளின் இரவு அடிகளார் திருச்செந்தூருக்குப் போகாவிடின் அடிகளார் மேற்கொண்ட நோன்பு முட்டுற்றதாகும். இறுதி நேரம் வரையும் துண்டு கிட்டவில்லை. பெருங்கவலையுடன் அடிகளாரிருந்தனர். அன்பர் ஒருவர் அம்பாசமுத்திரமிருந்து திருச்செந்தூருக்கு இரண்டாவது வகுப்பு வண்டியில் வந்து கொண்டிருந்தனர். ஒரு காரணமுமில்லாமல் அவர் திருநெல்வேலியுடன் நின்றுவிடலானர். இதனையுணர்ந்த அடிகளாரின் அன்பர் அத்துண்டினை விலைக்கு வாங்கி அடிகள்பால் நல்கினர். அடிகளும் அருள் நினைந்துருகிச் செந்தூர் சென்று வழிபட்டு இன்புற்றனர்.

மலேயாவிலிருந்து வருதல்

அண்மையில் மலேயா சென்ற அடிகள் ஆறு திங்களுக்கு அங்குத் தங்கும் உரிமைச் சீட்டுடன் சென்றிருந்தனர். நான்கு திங்கள் கழிந்ததும், ஏழாந் திருநாள் வந்தது வருவாயைக் கருதாது அடிகளார் புறப்படவுன்னினர். ஆனால் கப்பல் புறப்படுவதற்கெனக் குறிக்கப்பட்டுள்ள நாள் விழாவுக்கு வந்துசேரப் போதுமானதாகவில்லை. அடிகளாரும் மிருதியுங் கவலை கொண்டனர். எதிர்பாராத வகையாக 'ஏகுலர்' என்னுங் கப்பல் புறப்படுவதாக விருந்தது அதில் ஏறினர். ஏறியுமென்? அது வழக்கம்போல் கிள்ளான் சென்று நாகப்பட்டினத் துறைமுகம் வந்திருந்தால் விழாவுக்குச் செல்ல முடியாததாகவே யிருந்திருக்கும். திருமுருகன் திருவருளால் வேறெங்குஞ் செல்லாது சென்னைத் துறைமுகமே வந்து சேர்ந்தது. அதனால் அடிகளார் எவ்வகை இடையூறுமின்றிக் குறித்த நாளில் செந்தூர் சேர முடிந்தது. அடிகளார் முருகன் திருவருளையுன்னிப் பெருமகிழ்வுகொண்டனர். வழக்கம்போல் விழாக்கண்டு வணங்கிப் பேரின்புற்றனர். தெய்வத் திருவருளை நம்பினோர் அத்திருவருளால் எல்லா வகையானும் நடத்தப்பட்டின்புறுவர் என்பது இதனால் நன்கு விளங்குகின்றதல்லவா?

அடிகளார் நூல்

அடிகளார் பாடியுள்ள திருவருட்டமிழ்க் கீர்த்தனங்கள் பலவும் காலத்தொடு பொருந்த வெளிப்போந்த சிறப்பினவாகும். அவையனைத்தும் அச்சாகிச் சுவடி நிலைபெற்று வெளிவருவது மிகவும் இன்றியமையாததாகும். அடிகளார் அதுகுறித்து ஏதும் முயலுவதாகவில்லை. அன்பர்களும் செந்நெறிச் செல்வர்களும் முன்னின்று வேண்டுவன செய்வது பெரும் சிவபுண்ணியமாகும். அதுபோல் அடிகளாரின் முழுவரலாற்றையும் விரிவாக வெளிவரச் செய்வதும் நம்மனோர் கடனேயாம்.

1928 ஆம் ஆண்டில் ஏறத்தாழ நாற்பது கீர்த்தனங்களடங்கிய ஒரு சுவடி "செந்திலாண்டவன் கீர்த்தனை" என்னும் பெயருடன் நெல்லை மாவட்டத்து அம்பாசமுத்திரத்தினின்றும் வெளிப் போந்துளது. இஃது இரண்டாம் பதிப்பாகும்; படிகள் 2000. வெளியிட்டவன்பர் அம்பாசமுத்திரம் 'பெருமாளாச்சாரி அவர்கள் குமாரர் பெ. சங்கரநாராயணன்' அவர்களாவர். இதற்குச் சாற்றுக்கவி நல்கிய பெரியார் திருநெல்வேலி தெற்குப் புதுத்தெரு 'நாராயணக் கவிராசா' அவர்களாவர். வடக்குக் காருகுறிச்சி அடுக்குமொழி பி. ஆவுடையப்பச் செட்டியாரவர்கள் நூலின் பெருமையினையும் அடிகளாரின் மெய்வரலாற்

றினையும் 17 கண்ணிகள் கொண்ட நொண்டிச்சிந்தாக விளக்க முறப் பாடியுள்ளார்.

அடிகளார் தமிழகத் தலைநகராம் சென்னை மாநகருக்கு வரும்போதெல்லாம் நுங்கம்பாக்கத்து வாழும் யாழ்ப்பாணம் திருவாளர் தி. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் மகனார் டாக்டர் இராசராசன் அவர்கள் வளமனைக்கண் தங்குவர். இப்பொழுதும் அங்குத்தான் தங்கியுள்ளனர். இவ்விராசராசனார் திருமணத் தின்போது அடிகளார் இசையரங்கு நிகழ்த்தி யாவரையும் களிப் புறச் செய்தனர் என்பதும், அந்நாட்டொட்டு நெருங்கிய உணர்ச்சியொத்த உறவினராய்த் திகழ்கின்றன ரென்பதும் உணரத்தக்கது.

அடிகளாரின் பாடல்கள் பத்திச்சுவைமிக்கது. 'தியாக ராசசுவாமிகளைப்' போன்று அவ்வப்போது கசிந்துருகிப் பாடும் கனிவும் பொருந்தியது. அடிகளார் ஒரு சிறந்த 'சுரவுணர்வின' ராவர். சுரவுணர்வு — சுரஞானம். அங்ஙனமிருப்பினும் வெறுஞ் 'சுரம்' நிரப்பிப் பாடுவதில் ஈடுபடுவதில்லை. அச்சுரம் களைக்கொண்டு இசைப் பாட்டாகிய சாகித்தியம் அமைத்து அவையோர் விழையுமாறும் இன்புறுமாறும் பாடுவதில் மிக்க திறலினராவர். அதுவே அவர்தம் பழக்கமுமாகும். ஒவ்வொரு பாடல்களின் இறுதியிலும் 'ப. த. நி. ச.' என்று எல்லாரும் பாடுவதற்கு மாறாக அடிகளார் 'பரமசாம்பவனுமே' என்று பாடுவர். இங்ஙனம் பாடுவது மிக்க இசைத்திறம் வாய்ந்தார்க்கே இயல்வதாகும்.

இசையன்பர்களும் இளைஞர்களும் அடிகளாரின் வரிப் பாட்டுக்களை விரும்பிக் கேட்டு அவர்களை ஊக்குவித்தல் வேண் டும். இது அவர்தம் தலைக்கடமையுமாகும். 'சென்னை இசைக் கழகம்' ஆண்டுதோறும் நிகழ்த்தும் விழாக்களில் அடிகளாரைப் பாடச் செய்வதில்லை. 'தமிழிசைச் சங்கமும்' அடிகளாரைச் சிறப்புறச் செய்தல் வேண்டும். செந்திலாண்டவன் திருவரு ளால் இசைப்பாட்டுக்கள் அவ்வப்போது இயற்றி அரங்கங்களில் பாடி அணி செய்யும் அடிகளார் இக்காலத்துத் திகழும் 'தியாக ராயர்' எனவே கூறலாம்.

அடிகளார் முருகப்பெருமான் திருவருளால் பல்லாண்டு வாழ்ந்து குடும்ப மாண்பு, செல்வ வளம், திருவடித் தொண்டு, நல்வாழ்வு எல்லாம் பெருகி வாழச் செந்திலாண்டவன் சேவடியை வணங்குதும்.

வாழ்க மாரியப்ப அடிகள்.

மெய்ஞ்ஞானச் செல்வர்கள் :

# சின்மய தேசிகர்

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

### சின்னன் சாமிகள்

சின்னன் சுவாமிகள் எனவும் சின்மய தேசிகர் எனவும் மக்களாற் கூறப்பெற்ற இப் பெரியார் தோன்றிய இடம் காலம் குலம் முதலியன அறியப் பெறவில்லை. ஆடையும் அற்றவராய்ப் பிறந்த மேனியாய் விளங்கிய இவர் தஞ்சை மாவட்டத்தில் பல சிற்றூர்களினுஞ் சுற்றிக்கொண்டிருந்தார். ஏறக்குறைய ஐம்ப தாண்டுகட்கு முன் இவர் வாழ்ந்திருந்ததாகத் தெரிகிறது.

### அறைக்குள் அகப்படாமை

இவர் அடியக்கமங்கலம் என்னும் ஊரில் சுற்றிக்கொண் டிருந்த காலத்தில் ஒருவனுடைய எலுமிச்சைத் தோட்டத்திற்குள் நுழைந்து காவலனுக்குத் தெரியாது எலுமிச்சம் பழங்களைப் பறித்துக்கொண்டு வெளியே வரத்தொடங்கினார். காவற்காரன் இவரைக் கண்டான். தோட்டத்துக்குள் இருந்த கட்டிடம் ஒன்றுக்குள் இவரைப் பிடித்து அடைத்துப் பூட்டினான். விரைந்து சென்று தன் தோட்டத் தலைவனாகிய உரிமையாள னிடஞ் செய்தியைக் கூறினான். இருவரும் விரைந்து தோட்டத் திற்குள் வந்தனர். அடிகளார் கட்டிடத்திற்கு வெளியே உட்கார்ந்து கொண்டிருந்தனர். இருவரும் அடிகளாரது பெரு மையை உணர்ந்து வணங்கினர். காவல்காரன் தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண் டான். அதுமுதல் அத் தோட்டம் மிகுந்த பலனைக் கொடுக்கத் தொடங்கியது.

### நாகூரில் நடந்தது

அடிகளார் நாகூரில் ஐந்நான்காண்டுகள் அமர்ந்திருந்தனர். இவர் உடை கோவணமற்றவராய் உலாவியது அங்கிருந்த முகமதி யர்கட்கு வெறுப்பை விளைவித்தது. அடிகளாருடைய கண்கள் இரண்டினும் தில்லம்பாலைக் கறந்து ஊற்றி நிறைத்து ஓர் அறையிற் போட்டுப் பூட்டினர். ஆனால் அடிகளார் வேறொரு தெருவிலே காணப்பட்டார்.

### தண்ணீரில் அமிழாமை

பின்பொருநாள் இவருடைய கைகால்களை இறுகக்கட்டி ஆற்றுப் பெருக்கில் தூக்கி யெறிந்தனர். சிறிதுநேரத்தில் கட்டவிழ்ந்துவிடக் கரையேறிக் காட்சி நல்கினார்

### கண்டயோகம்

பிறகு இவர் திருவாரூரை அடைந்தார். இவருடைய பெருமையை நன்குணர்ந்த மருத்துவன் ஒருவன் இவரைப் போற்றிப் பாதுகாத்துத் தன்னுடைய இல்லத்திலே வைத்திருந்தான். அவன் ஒவ்வொருநாள் காலையிலும் தான் செய்த மருந்துகளை இவருடைய திருவடிகளில் வைத்து எடுத்துக் கொண்டுபோய் நோயாளிகட்குக் கொடுத்தான். இவ்வாறு செய்யத்தொடங்கிய நாள்முதல் அவனுடைய மருந்து நோய்களைத் தவறாமல் நீக்கியது. அதனால் அம் மருத்துவனுக்கு வருவாய் மிகுதியாகி அவன் சிறப்போடு வாழலானான்.

### மறையவனுக்கு மக்கட்பேறு

பிறகு அடிகளார் நாகைக்கு அண்மையில் உள்ள இஞ்சிக் கொல்லை யென்னும் ஊரையடைந்து ஈரைந்தாண்டுகள் இனிதமர்ந்திருந்தார். அவ்வூரிலே அப்பொழுது மறையவன் ஒருவன் பட்டாமணியக்காரனாக வேலை பார்த்துக்கொண்டிருந்தனன். அம் மறையவனுக்கு அகவை ஐம்பதாகியும் மக்கட்பேறு உண்டாகவில்லை. பலவகை நோன்புகளை அவன் மேற்கொண்டும் பயனில்லாது போயிற்று. ஞானியைப் போற்றின் நலமெலாம் உண்டாம் என்பதை நன்குணர்ந்த அவன் இப் பெரியாரைப் போற்றித் தனதில்லில் வைத்து உணவாதி தந்து வழிபட்டான். இவருடைய மிச்சில் உணவை உண்ட காரணத்தினால் அவனுக்கு மகப்பேறு உண்டாயிற்று. இப் பெரியார் உணவைப் பிறர் வாயிலூட்டினால் உண்பதேயன்றித் தாம் தமது கையினால் எடுத்து உண்பதில்லை. இவரைப் போற்றிப் பாதுகாத்து வைத்திருந்த மறையவன் இவருக்கு உணவு ஊட்டியபிறகே தான் உண்பது வழக்கம். ஒருநாள் மறையவனுடைய மனைவி அடிகளாருக்கு உணவூட்டுதற்கு வந்தனள். உணவில் நெய்க்குப் பதில் நல்லெண்ணெயைக் கலந்து கொண்டுவந்தனள். அவள் தொலைவில் வரும்போதே இவர் நல்லெண்ணெய் கெட்ட நாற்றம் வீசுகிறதென்று கிளத்தினார். இதனையறிந்த அந்தணன் வேறு உணவில் நெய்யூற்றிக் கலந்து கொண்டுவந்து இவருக்கூட்டினான்.

### மண்ணே மருந்து

பின்னர் அடிகளார் புதுக்குடி என்னும் ஊரில் ஆறு ஆண்டுகள் தங்கியிருந்தனர். அவ்வூரில் ஒருவன் முற்பிறப்பின் தீவினையினால் இரைப்பு நோய் எய்தி வருந்தினான். அதைப் போக்கும் பொருட்டுப் பல மருத்துவர்களிடத்தில் மருந்து சாப்பிட்டுப் பார்த்தான். நோய் மிகுதிப்பட்டதேயன்றிச் சிறிதுங் குறைய

லில்லை. அவன் அந்நோயால் அளவுகடந்த அல்லல் அடைவதை அறிந்த அடிகளார் அந்நோயை அகற்றத் திருவுளத்தில் எண்ணினார். சிறிது மண்ணையள்ளிக் கொடுத்து உண்ணச் செய்தார். அக்கணமே அந்நோய் அகன்று அவன் நலமுற்றான்.

## விலைமகள் மடமை

பின் அடிகளார் குடவாசல் என்னும் ஊரில் ஐந்தாண்டுகள் தங்கியிருந்தனர். அவ்வூரில் விலைமகள் ஒருத்தி அடிகளார்க்கு உணவு முதலியன அளித்துப் பாதுகாத்தாள். அவ்வூரிலுள்ளார் சிலர் அடிகளாரின் தன்மையை ஆராய்ந்து பார்க்க எண்ணினர். அவ் விலைமகளையே ஏவினர். அறியாமையிற் கட்டுண்டுற்ற அவ் வாயிழை பெரியார்க்குப் பிழைசெய்தல் பிழையைத் தருமென்று ஏழை மதியால் அறியாது போயினாள். ஒருநாள் அடிகளாரை அவள் இறுகக் கட்டித் தழுவினாள். உடனே இவர் கூச்சலிட்டுக் கொண்டு வெளியே ஓடிப்போயினர். அற்றை நாள்முதல் அவ் விலைமகட்குப் பொருள் வரவின்மை, நோய், மனக்கவலை முதலாம் பல தொல்லைகள் உண்டாயின. இது தனது மடமையால் எய்தியதென்பதை நன்கறிந்த அவள் இப் பெரியார் இருக்குமிடத்தையடைந்து, "பெரியீர்! அறிவின்மையால் அடியாள் செய்த தவற்றினைப் பொறுத்துப் பண்டேபோல் நான் நலமடைய நல்லருள் நல்கியருள வேண்டுமெனப் பலகால் வேண்டிக்கொண்டனள். இப் பெரியாரும் அவ் விலங்கிழையின் பிழையைப் பொறுத்து மன்னித்தருளினார். அம் மடமாது பின்னர் முன் போல் நலமுற்றிருந்தனள்.

## தாசில்தாரும் ஏவலனும்

பிறகு அடிகளார் நாச்சியார் கோவிலில் இரண்டு ஆண்டுகளும் குடந்தையில் ஈரிரண்டாண்டுகளும் இருந்தனர். குடந்தையில் வள்ளுவ மாதொருத்தி இப் பெரியாரது பெருமையை உணர்ந்து உணவு முதலியன கொடுத்துப் போற்றினாள். அடிகளார் ஒருநாள் காவிரியாற்றின் பாலத்தின்மீது உட்கார்ந்து கொண்டிருந்தனர். அப்பொழுது அவ்வழியே தாசில்தார் ஒருவரும் அவருடைய ஏவலன் ஒருவனும் வந்தனர். அவர்கள் தம் வழியே செல்லாது இப் பெரியாரிடம் வம்பு செய்தனர். பாலத்தைவிட்டுக் கீழே இறங்குமாறு பகர்ந்தனர். அவர்களது செயல் அடிகளாருக்குச் சினத்தை அளித்தது. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தலரிது" என்பதை அவர்களிருவரும் அறியாதுபோயினர் "இவனைப் பாடையிற் பார்த்தால் அன்றிப் பாலத்தைவிட்டுக் கீழே இறங்கேன்" என்றனர். அன்றே அத் தாசில்தார் இறந்து பாடையில் ஏறினார்.

### இவருடைய இயற்கை

பிறகு இவர் ஆரியச்சேரி என்னுமிடத்தில் ஆறு ஆண்டுகள் தங்கியிருந்தார். இவருடைய பழக்க வழக்கங்கள் புதுமையானவை. ஒருவேளையில் மூன்று சேர் மிளகாயை உண்ணுவார். இவர் தாமே நீராடார். உடலில் அழுக்குப் படிந்திருக்கிறதே என்று யாரேனும் கொட்டினால் கொட்டும் வரை பேசாதிருந்து பிறகு தலையைத் தரையின்மீது மோதிக்கொள்வார் இடைவிடாமல் கொட்டினால் மோதாமல் இருப்பார், கொட்டுவோர் களைத்துப் போனால் மகிழ்ச்சியடைவார்.

### பத்தன் மகப்பேறு

கண்டரமாணிக்கத்தில் இருந்த ஒரு பத்தன் மகப்பேறில்லாக் குறையால் வருந்தி இவரையடைந்து பணிந்து போற்றினன். தன்னுடைய குறையை முறையிட்டுக்கொண்டான். "இரண்டோர் ஆண்டுகளில் உனக்குக் குழந்தை பிறக்கும்" என்று இவர் திருவாய்மலர்ந்தருளினர். அவ்வாறே அவனுக்கு மகப்பேறு உண்டாகியது.

### ஒருவன் ஞானம் பெறுதல்

பேரவாவும் தீராக் கவலையும் ஒழியாத் துன்பமும் அமையப் பெற்ற ஒருவன் வந்து அடிகளாரை வணங்கினன். அடிகளார் ஒரு காலை அவனுடைய தலையின்மீது சூட்டினர். கால்நாழிகை கழிந்தபின்னர் எழச் செய்தனர். அந் நல்வினையாளன் பிறகு இல்லறவாழ்வை மேற்கொள்ள முயன்றும் முடியவில்லை. காசி முதலிய சிவப்பதிகளுக்குப் பயணஞ் சென்று மெய்யறிவினை யடைந்து சிறந்து விளங்கினன்.

பிறகு சன்னா நல்லூரில் இருந்த வைத்தியலிங்கம் பிள்ளை என்பவர் அடிகளாரைத் தம்முடைய ஊருக்கு அழைத்துக் கொண்டு சென்றார். அங்கு ஆறு திங்கள் இருந்த பிறகு கலியுகம் ௫௦௧௦ இல் சௌமிய ஆண்டு ஆடித் திங்கள் ௩௧ ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை ஆயிலிய நாளில் வீடுபேற்றை அடைந்தார்.

### வணக்க நூல்கள்

இப் பெரியார் மீது சிலர் தனிப் பாடல்களையும் சிலர் வணக்க நூல்களையும் இயற்றினர். சேலம் சி. மாணிக்க

முதலியார் என்பவர், 'சின்மய தேசிகர்மாலை' என்னும் நூல் ஒன்றைப் பாடினார்.

"மாற்றுயர்ந்த பசும்பொனிடை மணிகுயிற்றுங்
கோயில்வாய் மன்ன உன்னை
ஏற்றுதலின் நடைவாவல் என்மனத்திற்
பேராசை இருத்தி வைத்தேன்
தாற்றுயர்ந்த பூகந்தெங் கினியபல
மாஞ்சோலைத் தருக்கள் வான்றோய்
சாற்றுயர்ந்த வளஞ்சாலும் பதிசன்னை
அமரர்சின்னுஞ் சாமித் தேவே."

என்பது அந்நூலில் ஒரு பாட்டு.

---

## ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

மதுரை ஆதீனம்

70, தெற்கு ஆவணி மூலவீதி,
மதுரை 18-4-'60

உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள்,
தபால் பெட்டி 85.
**சென்னை-1.**

எல்லாம்வல்ல எம்பெருமானது இன்னருளால் எல்லா நலங்களும் எய்துக.

தங்களுடைய 16வ கடிதம் கிடைத்தது. மகிழ்ந்தோம். நெல்லை, திரு. இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை அவர்களும், திரு. நெல்லையப்ப பிள்ளை அவர்களும், (17—4—60) காலை இவிடம் வந்து சேர்ந்தார்கள். முற்பகலிலும், இரவிலும் மறைத்திரு. மறைமலையடிகளாரது சொற்பொழிவுகளையும், செரியன் தம்பதிகளின் பேச்சுக்களையும், நாடா ஒலிப்பதிவு செய்துகொண்டோம்.

பிற்பகலிலும், இரவு 9 மணிக்கு மேலும், இராமநாதபுரம் ஸ்ரீ காசிநாததுரைக்கும், வேறு சில அன்பர்களுக்கும் பலருடைய தொனிகளில் பேசி மகிழ்வித்தனர்.

**(ஒப்பம்) ஞானசம்பந்த தேசிகர்,**
19—4—60.

(பொ - ள்.) நீலநிறம் பொருந்திய நஞ்சைச் சிறப்புடைய கழுத்தில் அலங்காரமாக அமைத்துக்கொண்ட திருவாலவாயி லென்னும் பதியி லெழுந்தருளியிருக்கின்ற சொக்கர் பெருமா னுடைய திருவருளைப் பெறுந்தன்மையுடையவர்களே உலகை யாளுஞ் சிறப்புடையவர்க ளாவார்கள்.

2. ஏழுலகப் பெருமையுங் கொண்ட ஆலவாயிலென்னும் பதிக்கிறைவனாகிய சிவபெருமானின் மேன்மைப் பண்புகளைக் காலனும்மை நெருங்கா தழியும்படி பேசுவீர்களாக.

3. கல்லாலின் மரத்தடியிலிருந்து அறமுதல் நால்வர்க்கு அறமுரைத்த பெருமானாரும் திருவாலவாயி லெழுந்தருளி யிருக்கின்றவரும் எமனுக்கு எமனாயிருப்பவரும் (காலங் கடந்த வரும்) ஆகிய சிவபெருமானிடத்து அன்புடையவர்களாவீர்கள்.

4. முடிவில்லாத புகழமைந்த எம் தந்தையாய திருவால வாயில் வரிசையுட னெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானின் திருவடிகளை நீள நினைப்பீர்களாக.

5. அறுபானான்கு திருவிளையாடல்களை அன்பர்பொருட்டுச் செய்தருளிய நான்மாடக் கூடலாகிய மதுரையம்பதியி லெழுந் தருளி யிருக்கின்ற தலைவனாகிய சோமசுந்தரப் பெருமானை மனம் நெக்குருகிப் பாடி அன்னவனை நாடி வாழ்வீர்களாக.

இரண்டாந் திருமுறைக்கண், ஆலவாய் நகரினைச் சுட்டித் திருநீற்றின் பெருமையினை விளக்கியமை காண்க.

"மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருஆல வாயான் திருநீறே."

(திருஆலவாய் - திருநீற்றுப்பதிகம்)

(பொ - ள்.) இத் திருப்பதிகம், மதுரைப்பதியிலாண்ட பாண்டியனுக்கேற்பட்ட கடுஞ் சுரம், வெப்பு நோய், தணித்தற் பொருட்டு அருளியமை.

பாண்டியன், புறச்சமயமாம் சமணசமயத்தைப் பின்பற்றித் தானாண்ட பெருமைமிகு ஆலவாய் அண்ணலின் அருளைமறந்து, வெப்புநோயினால் பீடிக்கப்பட்ட காலை, சமணசமயத்தாரால் முயன்றும், தீர்க்கவொண்ணாப் பெருநோயினை, பாண்டியனின் மேனியில் திருநீற்றினை யணிவித்து இப்பதிகத்தைப் பாடிப் போக்கினரென்பதையும், திருநீற்றின் பெருமையை விளக்கி யருளியமையும் அறிதற்பாற்று. இப்பதிகம் முழுமையும் சைவப்

பெருமக்கள் பொருளறிந்து போற்றித் திருநீற்றின் திருவருட் டன்மையினை யறிவரேற் சாலச் சிறந்ததும், சிவஞானத்தைத் தருமென்பதும் தீதறத் தெளிவுடனறியலாமென்பதே யெம் முடிவு.

மூன்றாந் திருமுறைக்கண் பெருமானார் ஆலவாயமர் அருளனும் சிவத்தின் பெருமையினைத் திருக்குறிப்புடனருளி யமை கருத்துட்கொள்க.

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூதநா யகன் நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே."

(பொ - ள்.) திருவருள் துணை என்றுமே நின்றிலங்கும், தன் கணவனாகிய பாண்டியன் புறச்சமயத்தைச் சார்ந்து சிவபெருமானை மறந்திருந்தும், அன்னவனின் பட்டத்தரசியாகிய பாண்டிமாதேவி சிவப்பரம்பொருளின் திருவருளை நன்கு தெளிந்த சிவஞானம் வாய்க்கப்பெற்றவளாய் நாடொறும் ஆலவாய்க்கண் அங்கயற்கண்ணியாம் அருட்சத்தியுடன் தன்னை வேண்டுவார்க்கு வேண்டுங் கருணை அளிப்பவனாய் அமர்ந்திருக்கும் திருக்கூத்தன் மதுரைக்கண் எழுந்தருளியிருக்கின்றனனென்ற திருப்பதிகத்தை யருளுடன் அருளியமை பதிக்கற்பாற்று. பாண்டி மாதேவியை மங்கையர்க்கரசியெனப் பெருமைப் படுத்தியமை தமிழகத்துத் தலைவியாயமர்ந்த பாண்டிமாதேவிக்குச் சிறப் புடைத்தெனக் கருத்தறிந்து சமணர்களோடு வாதிட்டு அவர்களை வென்று, சைவசமயத்தை மீண்டும் பாண்டி நாட்டில் நிலை நிறுவினர். அருட்பெருங் கடலாகிய அரன் திருவிளையாடல் கண்ட நான்மாடக்கூடல் சைவச் செந்நெறி தழைத்தோங்கும் அருள் நகராய்ப் பொலிவுற்றது; பொலிகின்றது.

திருநாவுக்கரசுப் பெருமானாருளிய ஆறாந்திருமுறைக்கண் திருவாலவாயின் சிறப்பினை யருளியமை கருத்துட்செலுத்தி ஆய்க.

"வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்

தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க்கென்றும்,
சேயானைத் தென்கூடல் திரு வாலவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே."
(திருவாலவாய், திருத்தாண்டகம் ௧௧ - அ)

எம்பெருமான் கோலத்தினைச் சிறப்புறச் சித்திரித்தருளியமை தெளிவின்திகழொடு தெரித்தலறிக.

மேலும் திருவாசகத் தேனை மாந்திக்களிக்க அருளிய மாணிக்கவாசகப் பெருந்தகை மதுரையம்பதிச் சிறப்பினை யெடுத்தாண்ட முறைமை தெளிகருத்தெழும் வண்ணம் அமைத் திருத்தல் திருவருட்டிறனே. செவிமடுக்க.

"செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினான்
அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த
அப்(பு)ஆர் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக வொப்புவித்த உள்ளத்தார் உள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய்."
(திரு வம்மானை, ௧௧)

அடிகளருளிய அழகினை உற்றுப் பொருள் கொள்க. "அப்பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த" என்ற அடியினைத் தமிழ்த் தாயின் தவச்செல்வர்கள் நன்காய்வரேல், பாண்டிநாட்டினைத் தன் கருணையா லருளளித்துவரும் சிவபெருமானின் திருவருட்டிறனை யறிந்து வழிபடுவரேல் வேண்டிய நல்லெண்ணங்களினால் விழையும் கருத்திற்காய அருளுதவியினை அருளளிப்பனென்ற தன்மை திகழ்ந்து சிவபெருமானின் திருவருளால் சிறக்க வாழ்வரென் பதே உண்மையென அறிதல் நன்று.

மேற்குறித்ததாய அப்பாண்டிநாட்டுப் புகழ்ப்பதியின் சிறப் பினையும் சோமசுந்தரப் பெருமானார் அருட்டிறத்தினையும் அருளுடையண்ணலின் அருளாளப் பெருமானாருளியமை கூர்ந்து நோக்கற்பாற்று.

"பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண்டக் கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய்."
(திரு வம்மானை, அ)

திருவாசகம் முழுமைக்கும் எவரும் புரிந்துகொள்ளும் வழியில் பொருளுரைத்த தமிழ்நாட்டுப் பழம் பெரும்பதியாம் திருநெல்லையப்பர் அன்னை காந்திமதியின் அருட்டலத்துப் பிறந்து புகழுடன் வாழ்ந்திருந்த மதிப்பிற்குரிய, ஆராய்ச்சித் துறையறிவழகர், தமிழ்ப் பேராசிரியர், தாகூர் சட்டவிரிவுரை யாளருமாகிய திருநெல்வேலி திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., எம். எல்., என்ற தமிழ் மகன் யாத்த உரையினை ஒவ்வொரு தமிழரும் கற்றுணர்வரேல், திருவாசகத்தேன் எத் துணைச் சிறப்புவாய்ந்த களிப்புடை அருளுடைக் கருவூலமெனக் கண்டானந்திப்பரென்பதே யெம் கருத்தெழும் நற்கருத்தே.

இவ்விதம் புகழுடைப் பெரும்பதியாம், அம்மை அங்கயற் கண்ணியாம் மீனாட்சியம்மையும் அப்பன் சொக்கலிங்கப் பெரு மானும் அருள் வழங்குந் திருத்தலத்து முதற்கண் எம்மியக்குநர் வழிச் சொற்பொழிவாற்றப் பேறுகிடைக்க அருளளித்தவனும் அம்மை அம்பலவாணனை வணங்குகின்றும் மறைமலையடிக ளென்ற காணுவுலகவாசி.

உயிர்களின் நிலையினைத் திருவாசகத்தாய்ந்தால் வேண்டுங் கருத்துக்கள் தெளிவுறத் தெரிக்கும். உயிர் என்றுமே அழிவ தில்லை. உயிர்களுக்குப் பலபிறவிகள் உண்டு என்பதை மணிவாசகப் பெருமானருளிய திருவாசகத்துச் சிவபுராணத்துச் சிறப்புறக் காணலாம். அவர் துய்த்த அநுபோகத்தினை புலகறியச் செய்திருக்குந் தன்மை சைவப் பெருமக்கள் யாவர்க்கும் ஞானசிரியனாய், ஆடகச்சீர் மணிக்குன்றும் அம்மை அம்பலவாணரின் அருளுடைச் சிறப்பினாற் றோன்றிச் சிவபெரு மானின் திருவருட்டன்மையை உலகறியச் செய்த பெருவுடைப் பிறவியென்று போற்றற்கு நம் தமிழகம் என்றும் கடப்பாடுடைய தென்பதை அடிகளாம் மறைமலை அன்னவனை அருட்குருவா யடைந்து அம்மை அம்பலவாணராம், கூத்தப் பெருமானின் திருவருட் பேற்றினைச் சிறக்க எய்தலாமென்பதே உறுதிப்பாடு. அடிகளருளிய அருளுரையைக் காண்மின்.

" பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள்கண்டின்று வீடுற்றேன்

உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா, விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வென ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்."

(சி.

இத் திருமொழியினை ஆய்ந்தால், மனிதர்க்குப் பிறவிகளுண் டென்பதுவும், இவற்றையெல்லாம் நடத்துவிக்கும் இறைவ னொருவன் உண்டென்று உலகறியச் செய்ததொரு திருமொழி யெனக் கருத்துட் கொளலே, அருட்பேறென வறிதலே சாலச் சிறப்புடைத்து.

எம் பெரும் சிறப்புடைச் சிவபெருமானின் திருவருட் டிறனைத் தமிழ்மறை தந்த மாணிக்கவாசகப் பெருமானருளிய அருள்மொழியினை அறிவுடனுய்க.

"கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே."

(சிவபுராணம்)

"வேற்று விகார விடக்குடம்பின் உட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து, பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே."

(சிவபுராணம்)

(தொடரும்)

# தீப நாடகங்கள்

[திரு. பா. பச்சையப்பன்]

(செல்வி, சிலம்பு ௩௪ - பரல் - ௧, ௪௧௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**கோரஸ் :** அந்தக் கண்கள்—நீங்கள் செய்து கொண்ட கொடுமையை எவ்வாறு செய்ய இயன்றது? எந்தத்தீவினை அவ்வாறு செய்ய உந்தியது?

**ஒதிபன் :** அப்பலவன், நண்பர்காள், அப்பலவன் இக்கொடுந் தண்டத்தினை எனக்கிட்டான். அவன் கையாலன்று; என் கையால். இப்பழிகளை வைத்துக் கொண்டு கண்களால் எனக்காவதென்ன?

**கோரஸ் :** பழி மறக்க ஒண்ணாததுதான்.

**ஒதிபன் :** கண்கள் காண
கவினார் பொருளும் உண்டோ
புண்களாயின கண்கள்
புகழின் அழிவும் போந்ததே.

**கோரஸ் :** ஊனிலும் உள்ளத்தும்
எனிந்தக் கொடுமை
தெய்வமொழி பொய்யாக
மெய்யழிந்து போயிருப்பின்.

**ஒதிபன் :** கால்தளை யகற்றி என் உயிரினை மீட்டவன்
அழிக, உயிரினும் இறப்பே எனக்கு
ஏற்ற நன்மை. பிறந்துவாழ்ந் தழிவதினும்
பிறந்த அன்றே இறப்பது மேல்.

**கோரஸ் :** அப்படி நேர்ந்திருக்க வேண்டும்
நேராமல் போனதற்கு வருந்துகிறோம்.

**ஒதிபன் :** தந்தையின் குருதியைச் சிந்தியவன்
தாயினை மணந்த பேயனிவன்
தெய்வம் மகிழா தீவினையன்
தீமைக்கு ஒதிபன்.

**கோரஸ் :** எனினும் தாங்கள் செய்து கொண்ட கொடுமை ஆய்ந்து செய்ததல்ல. குருடாகி வாழ்வதினும் இறந்து போவது மேலன்றோ?

**ஒதிபன் :** இந்தக் கொடுமையினும் வேறு தண்டம் எனக்கு ஏற்றதல்ல என்றே நினைக்கிறேன். எனக்கு வேறு பாடமும்

கற்பிக்க வேண்டாம். பார்க்குங் கண்களுடன் என் தந்தையின் கல்லறையைக் காணவேண்டுமா? முறையற்றுப் பிறந்த குழந்தைகளின் அழகிய முகங்களைக் காணவேண்டுமா? தீப நகரத்தின் நிலை மாடங்களைப் பார்க்கவேண்டுமா? அழகிய சிற்பச்சிலைகளைத்தான் காணவேண்டுமா? எதற்காக இக் கண்கள்? அவைகள் இருந்து என்ன பயன்? யானே 'குற்றஞ் செய்யாதீர்கள், தூய்மையாயிருங்கள்' என்று ஆணையிட்டுக் காத்தேன். ஆயின் யானே எல்லாக் குற்றங்களையும் செய்தவனானேன். இப்படித் தீச்செயல் புரிந்த எனக்குக் கண்கள் இருந்தென்ன பயனும். மக்கள் என் தீவினையைச் சுட்டிக் காட்டுங்கால் அதனை என்கண்களால் காணவேண்டுமா? வேண்டாம். இவற்றையெல்லாம் பார்க்க விரும்பேன். தீச்செயலையும் சொல்லக்கேளேன். செவிடாக்கிக் கொள்ள இயலுமாயின் அதனையும் ஆக்கிக் கொள்ளவே விரும்புகிறேன். இப்பொழும் உடலைத் தனியிடத்திலே இட்டு எதையுங் காணாது எத்தீங்கையும் கேளாது இருக்கவே விரும்புகிறேன். அதுவரையில் என் மனம் அமைதியுறாது. துன்பத்தினைத் தாண்டி நிற்கும் மனநிலையே அமைதி நிலையாம்.

சித்தரன் மலையே! என்னைக் காத்து வளர்த்த அம்மையே, இதற்கோ எனக்குக் காப்பளித்தாய். என்னைக் கண்டெடுத்ததும் கொன்றிருந்தால் இத்தீமைக்கு ஆளாகியிருப்பேனா? கொரிந்தமே! பொலிபனே! இக்கொடுமைக்கு ஆளாவேன் என்றுநினைத்ததுண்டோ?

ஆ! காடுதாண்டி முக்கூட்டில் வந்து என் தந்தையைக் கொல்ல நின்றேனே, தீப நகரத்திற்கு என்னசெய்ய நினைந்து வந்தேன்! தந்தை, தாய், மகன், மனைவி, அன்னை என்று குழப்பிக் கொடுமை செய்யவோ யான் வந்தேன்? சொல்லொணுத் தீச்செயல்கள், இனி அவற்றைச் சொல்லேன். தெய்வத்தின்மேல் அன்பிருப்பின் என்னை எங்கேனும் மறைத்து வையுங்கள். அன்றிக் கொன்று போடுங்கள். கடலில் இட்டு மூழ்கடியுங்கள். இக் கையினைக் கொண்டு போடுங்கள். (கைகளை நீட்டுகிறான்) முதியவர்கள் இத்தீச்சொற்களைக் கேட்டு அஞ்சி நடுநடுங்கிப் பின்னடைகிறார்கள்.

எனக்கு இரங்குங்கள். கொடுங்கள். தொட்டிழுத்துச் செல்லுங்கள்! தொடுவதற்கு அஞ்சாதீர்கள்! இத்தீவினை என்னையன்றி ஒருவரையும் சேராது. எனக்கே அதற்கான தண்டம் கிடைக்கட்டும்.

**கோரஸ் :** கிரியன் இதோ வருகிறார். உங்கள் விருப்பத்தினைச் செய்வதற்கு அவரே ஏற்றவராவர். உங்களுக்குப்பின் அவர் எங்களைக் காப்பவராவர் ?

**ஒதிபஸ் :** அவனுக்கு என்ன சொல்வது ? அவன் கண்ணில் இரக்கம் தோன்றுமா ? முற்றும் அவனுக்குத் தீமை இழைத்தபின் எனக்கு என்ன நன்மை செய்வான் !

**கிரியன் :** ஒதிப, உனக்கு நேர்ந்த அழிவைப் பேசி நகைக்க வரவில்லை. சென்ற காலத்தில் செய்த தீமைகளைச் சுட்டிக் காட்டவும் வரவில்லை. நண்பர்காள், உயிர் கொடுக்கும் ஞாயிற்றினைப் பாருங்கள். தூய்மையற்றோர் அவன் கண்ணெதிரே நிற்கத்தகார். நிலனோ, நீரோ காற்றோ தூய்மையற்றவனை இங்கிருத்தல் ஒட்டாது. உள்ளே அழைத்துக் கொண்டு போங்கள் ! உறவினர்கள் தாம் இவன் ஏற்றுக் கொண்ட துன்பத்தினைக் காணவும் கேட்கவும் வேண்டும்.

**ஒதிபன் :** மேன்மை மிக்க அன்பனே ! ஒன்றே ஒன்று நான் கேட்கிறேன். என்னைப் போன்றவன் கேட்டுப்பெற இயலாத ஒன்றுதான். தெய்வத்தின் பேரால், உன் நன்மைக்குத் தான்—எனக்காக அல்ல............

**கிரியன் :** இவ்வளவு தாழ்மையுடன் என்ன கேட்கிறாய் ?

**ஒதிபன் :** இப்போதே, இந்நாட்டைவிட்டு வெளியே தள்ளிவிடு; மனிதன் காணா இடத்திற்குக் கொண்டுவிடு.

**கிரியன் :** விரைவில் அவ்வாறு நடக்கும். ஆயின் தெய்வத்தின் ஆணையை எதிர் நோக்கி நிற்கிறேன் !

**ஒதிபன் :** தெய்வத்தின் ஆணை உனக்குத் தெரியவில்லையா ? தீயது மாய்ந்து போகவேண்டுமே, இங்கே அது நிற்கிறதே!

**கிரியன் :** இருந்தாலும் சரியான வழிகாட்டத் தெய்வத்தினை வேண்டி நிற்கிறோம். வழி பிறக்கும்.

**ஒதிபன் :** இழந்த உயிருக்கா வழி பிறக்கும் ? தெய்வம் பொறுக்காதவனுக்கா வழி பிறக்க வேண்டும் ?

**கிரியன் :** தெய்வத்தின் அருளை வேண்டுவதில்லை. உனக்குத் தெய்வத்தின் அருள் வேண்டுமா ?

**ஒதிபன் :** வேண்டும். நான் கேட்பதெல்லாம் இவைதான் உள்ளே இறந்து கிடப்பவளை எடுத்து ஈற்றுக் கடன்களை முடித்துவிடு. உனக்கு உடன் பிறந்தவள். நீ நல்லதுதான்;

செய்வாய் எனக்கு. என் தந்தையின் நாட்டில் இருந்து பழிக்கிடமாகாதவாறு வெளியே சென்று மலைப்பக்கத்தே இருந்து காலங்கழிக்க விடு.

சித்தாரன்! என்னை வளர்த்தவன் பேர், சித்தாரன்! மலைமீது இருந்து அங்கேயே மரணம் எய்துவேன். என் பெற்றோர்கள் எங்குவிட்டு இறந்துபோக விரும்பினார்களோ அங்கே சென்று இறந்துபோவேன். முதுமையோ, நோயோ, வேறேதேனும் இடையூற்றினாலோ என் வாழ்வு படுமென்று நினைக்கவில்லை. தீவினைக்கு ஆளாகவேண்டுமென்றுதானே பிறந்ததும். இறந்துபட வழிசெய்தும் உயிர்வாழ்ந்தேன் ........என்மக்கள்........ஆண்மக்களைப் பற்றிக் கவலையுறுதே; அவர்கள் எங்குச் சென்றாரேனும் பிழைத்துக் கொள்வர். பெண்மக்கள், இளஞ்சிறு பெண்கள் என்னுடனன்றிப் பிரிந்துண்டு அறியாதவர்கள், அவர்களைப் பார்த்துக்கொள்........ ...........கிரிய..............அவர்களை ஒருமுறை தொட்டு உணர்ந்து அழுதுவிட்டுச் செல்ல இடங்கொடு!

(இசுமேன், அந்திகனி, என்னும் அவ்விளஞ்சிறுமிகள் முன்னமேயே அங்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் ஒதிபன் முன்வந்து நிற்கிறார்கள்.)

என்ன, என் இளங்குழந்தைகள் அழுகின்றனவா? கிரியன் எனக்கிரங்கி இங்கு அனுப்பியுள்ளானா? என் உயிரே? இங்கேயா இருக்கின்றீர்கள்?

**கிரியன்:** இங்கேதான் இருக்கிறார்கள். அவர்கள்மீது உனக்குள்ள அன்பினை அறிவேன். எனவேதான் அவர்களை அழைப்பித்தேன்.

**ஒதிபன்:** கிரிய, தெய்வம் உன்னைக் காக்கும்! குழந்தைகாள்! என் அருகே வாருங்கள்! உங்கள் உடன் பிறந்தான் கைகளைத் தொட்டுப் பாருங்கள். அவைதான் இக்கண்களை இருளடையச் செய்தன.....உங்கள் தந்தையின் கண்கள் தாம் அவை. அவை நீங்கள் பார்த்தவைதாம். அவைகளும் உங்களைப் பார்த்தவைதாம். ஆயின், அவை உங்கள் தந்தையென்னும்போது தாம் செய்த தீங்கினைக் கண்டு தெரிந்து கொள்ளாதன. இப்போது அவை உங்களைக் காணமாட்டா. எனினும் அவை உங்களுடன் அழுகின்றன. இனி வரும் நாட்களில் உங்களுக்குத் துயர் நேரும். அப்போது உலகத்து வாழ்க்கையில் ஈடுகொடுக்க வேண்டும். நல்ல நாட்களும், அரசர் கொண்டாடும் நாட்களும் இனி உங்களுக்கு

மகிழ்வூட்டா. பிறர் மகிழ்ந்தாடும்போது நீங்கள் துயரத்துடன் வீட்டுக்குள் இருக்க நேரும். தக்க வயதினராகும் போது, உங்கள் பழியினைப் பாராட்டாது மணக்க முன்வருவார்களும் இருப்பார்களோ? நம்மினும் தீயரென்றுபேரெடுத்தாரும் இருப்பார்களோ? தந்தை, தந்தையினைக் கொன்றவன். மக்கள் பிறந்த அறைக்கே தீவினை செய்தோன் மக்கள் என்று எள்ளி நகையாடுவர். உங்களுக்கேற்ற கணவன் மார்களைக் காண்பீர்களோ. கணவரின்றி கன்னியராகத்தான் இருக்கக்கூடும். மெனேசுவன் மகனே! அவர்கள் உன் உறவினர்கள். அவர்களுக்கு இனி நீதான் தந்தை. அவர்களுக்கு உயிரூட்டிய நாங்கள் இனி அவர்களுக்கு இல்லை யென்பதாயிற்று. இவர்கள் இருக்க வீடின்றிக், காக்கக் கணவரின்றி அலையவிடாதே! நான் உறுவதுபோல் அவர்களை அவதியுறவிடாதே! இளம் வயதினர், ஏழையர், உன்னையன்றிப் பிறர் அனைவரையும் இழந்தவர்கள். செய்வாயா? உன் கைகொடுத்து ஆணையிடு (கிரியன் கையினைக் கொடுக்கிறான்) நண்ப! குழந்தைகாள்! நீங்கள் பெரியவர்களாகும்போது பலவும் அறிந்து கொள்வீர்கள். இவற்றையெல்லாம் கேட்டுத் துன்பினை இப்போது சுமக்க இயலாதவர்கள். ஆயின் தெய்வத்தினை வணங்குங்கால், வாழ்வில் நல்லன அருளவேண்டுங்கள்!

**கிரியன் :** இதுபோதும் இனி நீ உள்ளே செல்லலாம் அன்றோ?

**ஒதிபன் :** நான் செல்லத்தான் வேண்டும்.

**கிரியன் :** எல்லாவற்றிற்கும் எல்லை உண்டு.

**ஒதிபன் :** உன்வாக்கு நிறைவேறு மன்றோ?

**கிரியன் :** என்ன வாக்கு?

**ஒதிபன் :** என்னை நாடுகடத்துவது.

**கிரியன் :** தெய்வம் அது செய்யும், நான் அல்ல.

**ஒதிபன் :** தெய்வம் எனக்காகப் பேசாது.

**கிரியன் :** உன் விருப்பப்படி ஆவதாக!

**ஒதிபன் :** (மன அமைதிபெறாதவனாக) என்னை அழைத்துப் போங்கள்.

**கிரியன் :** செல்க (ஒதிபன் அரண்மனை நோக்கிச் செல்கிறான். அவன் கைகள் குழந்தைகள் மேலிருக்கின்றன) ஆயின் அக் குழந்தைகளை விட்டுவிடு.

**ஒதிபன் :** வேண்டாம்! அவர்களை என்னிடமிருந்து பிரிக்காதே.

கிரியன் : இனியும் அரசாணை இடாதே. கீழ்ப்படிந்து நட. உன் அரசு முடிந்தது.

(ஒதிபனை அழைத்துச் செல்கின்றனர்)

கோரஸ் : திபாகரச் செல்வர்கள்! செப்புவதுங் கேண்மினோ
உபகாரி, உயர்ந்தவனும் உள்ளமறை உணர்ந்தவனும்
திபாகரம் பெருமைபடத் தீரனென திகழ்ந்தவனும்
அபசாரப் பட்டவனும் அழிந்தனனும் ஒதிபனுமே!

எனவே,

பிறந்தவர் எவரும் இறப்பது திண்ணம்
என்பதை உணர்ந்து இறக்கு மளவும்
கருத்துடன் வாழ்வைக் காத்திடல் வேண்டும்
தீவினை தொடராச் சீருடை வாழ்வினைச்
செலுத்தி உய்மின்! செலுத்தி உய்மினே!

இந்த நாடகத்தினைத் தொடர்ந்து, **கொலனத்து ஒதிபன்** என்னும் இரண்டாம் நாடகத்தில், ஒதிபன் கொலனத்தை அடைவதும் அங்கு எதனத்து மன்னன் ஆதரவால் தங்கி உயிர் விட்டதும் விளக்கப் பெறுகின்றன.

அதற்கு அடுத்த கதைத் தொடர்பு அந்திகனி என்னும் நாடகத்தால் விளக்கப் பெறுகிறது. அந்நாடகத்தில் ஒதிபனின் இரண்டு ஆண் பிள்ளைகளும் மடிந்துபோக, கிரியன் இளையவனை மிகப் பெருமை செய்து அடக்கம் செய்யவும், முதன் மகனை கழுகு நரி முதலியன பிய்த்துத் தின்க என வாளா விடுக்கவும் ஆணை பிறப்பிக்கிறான். அந்திகனி என்னும் தங்கை முதற் சோதரனுக்கு விதித்த தண்டத்தினைப் பொறுதவளாய் புதைக்க முயலுகிறாள். அது கண்டு அவளை இருட் குகையில் கிரியன் சிறைப்படுத்துகிறான். அவள் காதலனும் கிரியன் மகனும் ஆன ஏமன் என்பான் உயிர்விடுகிறான். அது பொறாளாய் அவன் தாய் உயிர்விடுகிறாள். இங்ஙனம் மூன்றும் நாடகமும் துன்பத்தின் எல்லையை எட்டி முடிகிறது.

இவ்வாறு மூன்று நாடகங்களும் ஒரு கதைத் தொடர்புடையவையே ஆயினும் அவை முன் பின்னாகவே இயற்றப் பெற்றன. அந்திகனி கி. மு. 442 - 441; ஒதிபமன்னன் கி. மு. 429 - 420; கொலனத்து ஒதிபன் 401 (கொபக்கிளியர் இறந்த பிறகு) என ஸவிவந்தன. இவைகளின் பெருமை, மாந்தர் இயல்பு எனப் பலவும் நம்மருஞ் செந்தமிழ்ச் செல்வியில் அவ்வப்போது அறிஞர் பெருமக்களால் ஆய்ந்து எழுதுதற்கேற்றன.

முற்றும்

# ஆதன் அவினி

[திரு. பா. பாப்பு இராமநாதன்]

எட்டுத் தொகை நூற்களில் ஐங்குறு நூறும் ஒன்று. இஃது ஐந்து நூறுகளைக் கொண்ட குறுகிய அடிகளையுடைய நூலாகும். இந்நூலின் கண்ணுள்ள மருதத் திணையைப் பாடி புள்ளவர் ஓரம்போகியார் என்னும் புலவராவர். இவர் மருதம் பாடுதலில் வல்லுநர். புலத்துறை முற்றிய கூடலூர்க் கிழார் இந்நூலைத் தொகுத்துள்ளார். யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை தொகுப்பித்துள்ளார்.

"இந்நூலைத் தொகுத்தோரும், தொகுப்பித்தோரும் முறையே மலைநாட்டுப் புலவரும் மலைநாட்டு அரசரும் ஆதலின், ஆதன் அவினி என்னும் சேரனைத் தலைவனாகப் பெற்ற முதற் பத்தையுடைய மருதம் முதலினும்" என்று பழைய முகவுரை கூறுகின்றது. எனவே, இவன் அரசன் என்பதற்கு யாதொரு ஐயமுமில்லை. ஆதன் என்ற மொழிக்கு, குரு, குருடன் என்ற பொருட்களும் காணப்படுவதால், இவன் குருவாகவேனும், அன்றிக் குருடனாகவேனும் இருந்திருத்தல் கூடும்; இவனுடைய இயற்பெயர் அவினி; சிறப்புப்பெயர் ஆதன். ஏனெனில், இவ்விரு பெயர்களும் ஒரே இயற்பெயராய் இருந்திருப்பின், முதலாம் பத்தாகிய வேட்கைப் பத்திலுள்ள ஒவ்வொரு செய்யுட்களின் முதலடியிலும் "வாழி யாதன் வாழி யவினி" எனப் பிரித்துக் கூறவேண்டுவதின்று. சிறப்புப் பெயருடன் இயற் பெயர் கூடின் அவ்வியற் பெயரைப் பின்னே கூறவேண்டுமென்பது இலக்கணம்.

> "திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
> குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ
> டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே." (ந. சூத்திரம் ௬௩௫)

கண் பார்வை குன்றிய வீரராகவ முதலியாரவர்கள் அந்தகக் கவி வீரராகவ முதலியாரெனவும், விரைவிற் பாடுமியல் புடைய வல்லூர்த் தேவராச பிள்ளையவர்கள் ஆசுகவி எனவும், இயற்பெயர் முன் சிறப்புப் பெயர்கொண்டு அழைக்கப் பட்டமை காண்க.

'மாவிலங்கை அரசனும், ஓய்மான் நல்லியக் கோடனுக்குப் பின் அரசுபுரிந்தவனுமாகிய 'ஓய்மான் வில்லியாதன்' என்பவன் ஆதன் என்னும் பெயர்கொண்டிருப்பதால், ஆதன் அவினியும், தன் ஆதன் என்னும் பெயருக்கு முன்னே, பல சிறப்புப் பெயர்கள் பெற்றிருக்கவேண்டும். அவை நாளடைவில் மறைந் தொழிந்து ஆதன் என்னும் பெயர் எஞ்சியிருத்தல் வேண்டும்.

பின், அவினி என்னும் பெயர் மக்களால் இடப்பட்டிருக்க வேண்டும். ஆகவே, இத்தகைய காரணத்தை யூகித்தறியத்தான் நூலாசிரியரும் வாழி யாதன் அவினி என இணைத்துக் கூறாது, "வாழி யாதன் வாழி யவினி" எனப் பிரித்துக் கூறினார் போலும்.

இவராற் பாடப் பெற்ற முதல் மூவரசர் சேர சோழ பாண்டியராவர். இம் மூவரினும் ஒவ்வொரு மரபினரினும் ஒருவரையே பாடியிருப்பதால் இம்மூவர் காலத்திலும் இவர் வாழ்ந்திருக்க வேண்டும். அவர்கள் அரசியல் முறை பிறழாது அரசு புரிந்திருக்க வேண்டும். இப் புலவரை அவர்கள் ஆதரித்து இருக்கவேண்டும். இந்நூலில் சோழனையும் பாண்டியனையும் குறிப்பிடுகின்றார். சோழனை "வெல்போர்ச் சோழன் கடுமான் கிள்ளி" எனப் பெயர்கூறி, பாண்டியனைப் பெயர் கூறாது விடுத்தது யாது காரணம் என்பது சிந்தித்தற்குரியது. இதற்குக் கீழ்க்கண்ட செய்யுட்கள் சான்றாம்.

"பகல்கொள் விளக்கோ டிராநா ளறியா
வெல்போர்ச் சோழ ராமூ ரன்னவிவள்
நலம்பெறு சுடர்நுத றேம்ப
எவன்பயஞ் செய்யுநீ தேற்றிய மொழியே." (ஐங், செய் ருசு)

"திண்டேர்த் தென்னவ னன்னாட் டுள்ளதை
வேனி லாயினுந் தண்புன லொழுகும்
தேனூ ரன்னவிவ ளெரிவளை நெகிழ
ஊரி னூரனை நீதர வந்த
பஞ்சாய்க் கோதை மகளிர்க்
கஞ்சுவ லம்ம வம்முறை வரினே." (ஐங், செய் ருச)

"கதிரிலை நெடுவேற் கடுமான் கிள்ளி
மதில்கொல் யானையிற் கதழ்புநெறி வந்த
சிறையழி புதுப்புன லாடுகம
எம்மொடு கொண்மோவெந் தோள்புரை புணையே." (ஐங், செய் எஅ)

இவர்களைச் சிறப்பித்தமையால் இவர் பரிசில் பெற்றமை விளங்குகிறது.

நக்கீரரின் தந்தையின் பெயர் இன்னதென விளங்கவில்லை. அவர் மதுரையில் ஆசிரியராக விருந்தமையால், அவரை இயற் பெயர் கொண்டழைத்தல் இழுக்கென்றெண்ணி, அவரை மதுரைக் கணக்காயனார் என அழைத்தனர் போலும். அது போல இப் பாண்டியன் பெயர் கூறல் இழுக்கென வெண்ணிப் பெயர் கூறாது, பாண்டியனென அழைத்தனர் எனக் கொள்ளின் இழுக்கென்னை ?

சேரர் மரபில் சேரமான் செல்வக் கடுங்கோவாழியாதன் என, ஆதனெனும் பெயரிய அரசனொருவன் இருந்திருக்கின்றான்.

இவனைப்போல ஆதன் அவினியும் நீண்ட பெயரையுடையவனாக விருந்திருத்தல் வேண்டும். அப்பெயர் நாளடைவில் குறைந்து, ஆதன் அவினி யென எஞ்சியிருத்தல் வேண்டும். இன்றேல், சேரமான் எனத் தொடங்கி, வாழி யாதன் என முடிந்த பெயர் ஒன்றும், சேரமான் எனத் தொடங்கி, வாழி யவினி என முடிந்த பெயர் ஒன்றுமாக இரு பெயர் வழங்கியிருத்தல் வேண்டும். அங்ஙனம் இருந்தமையாற்றான், ஓரம் போகியார், சோழன் கடுமான் கிள்ளியை வெல்போர்ச் சோழன் எனவும், கதிர்வேல் நெடுவேல் கடுமான் கிள்ளி யெனவும் இருபெயர்கொண்டு சிறப்பித்தமை போல, ஆதன் அவினியையும் இருபெயர்கொண்டு சிறப்பித்தார். 54ஆவது செய்யுளில் குறிப்பிடப்பட்ட திண்டேர்த் தென்னவன் என்ற பெயர் இன்ன பாண்டியனென விளங்கவில்லை. முதற் குலோத்துங்கன் மெய்க்கீர்த்திகள் இரண்டிலும் தென்னவன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதன் பின்னுள்ள பாக்கூர்ச் சாசனம் வீரராசேந்திர தேவன் மெய்க்கீர்த்தியில் பொலங்கழல் தென்னனை, சிவல்லவன் மகன் சிறுவனை என்ற வடி காணப்படுகின்றது. அதன் குறிப்புரையில் கீழ்க்கண்ட செய்திகள் காணப்படுகின்றன:

தென்னன்—பாண்டியன் போலும். சிவல்லவன் மகன் சிறுவன்—சிவல்லவ பாண்டியன் மகன். இவன் பெயர் வீரகேசரி என்பர். (தமிழ்ச் சாசனம்....பக்கம் ௩௮.)

இக் குறிப்பிலிருந்து ஓரம் போகியார் குறிப்புடன் ஒப்பு நோக்கின், தென்னன் பெயர் வீரகேசரியாக விருக்க வேண்டு மென்று தெரிகிறது. அவன் சிறந்தவனாக விருந்தமைபற்றிப் பெயர் கூறல் சிறப்பன்றென்றெண்ணிப் பாண்டியனைத் தென்னன் எனக் குறிப்பிட்டார் போலும்.

இவர் • ஆதன் அவினியையும், கடுமான் கிள்ளியையும், பாண்டியனையும் மருதத் திணையில் குறிப்பிட்டிருப்பதால், இம் மூவரும் ஒரே காலத்தவராதல் வேண்டும். ஆகவே, பாண்டியன் காலம் ஆதன் அவினியின் காலமாக விருக்க வேண்டும். பாக்கூர் சாசனம் கி. பி. ௧௦௬௬ ஆம் ஆண்டு ஏற்பட்டிருப்பதால் தென்னனைக் குறிப்பிடும் சாசனம் ஏற்பட்ட காலமே ஆதன் அவினி வாழ்ந்த காலமாதல் வேண்டும். ஆதன் அவினியின் காலம் கி. பி. ௧௧ ஆம் நூற்றாண்டென்பதற்கு ஐயமில்லை. ஆகவே, அதன் சிறப்பைத் தெரிவிக்க வேண்டி வாழி யாதன் அவினி யெனக் கூறாது, வாழி யாதன் வாழி யவினி எனக் குறித்தனர் போலும்.

# அச்சப்பத்து

[நல்லைக் கவி—இளங்கோவன்]

வெவ்விய விடநா கத்தை வெங்கொடும் புலியை யஞ்சேன்
அவ்வியம் பேசு வாரை ஆக்கமில் லாரை யஞ்சேன்
செவ்விய மொழியி னாளைச் செந்தமிழ்ச் செல்வி யாளைக்
கவ்விய நெஞ்சி லாரைக் காண்பதை யஞ்சு வேனே! (௧)

செந்தழல் நெருப்பை யஞ்சேன் தியநஞ் சுணவை யஞ்சேன்
வெந்தறு கண்வே ழத்தை வேற்படை தன்னை யஞ்சேன்
முந்தையோர் சங்கங் கண்ட மொய்ம்பினள் தமிழ்மி னாளைச்
சிந்தையிற் சேர்த்தி லாரைச் சேர்வதை யஞ்சு வேனே! (௨)

திட்டிய கத்திக் கஞ்சேன் தீயவர் தமக்கு மஞ்சேன்
நீட்டிய வாளுக் கஞ்சேன் நிசருக் கஞ்ச மாட்டேன்
பாட்டியன் மொழியி னாளைப் பைந்தமிழ்க் குமரி யாளைக்
கூட்டிலா தவரைக் காணக் கூசுவேன் அஞ்சு வேனே! (௩)

அறமெலாங் கொன்று தீர்க்கும் அதமருக் கஞ்ச மாட்டேன்
மறமெலாங் கூட்டிச் சேர்க்கும் வண்டருக் கஞ்ச மாட்டேன்
திறமெலாஞ் சேரக் கொண்ட தீந்தமிழ்த் தெய்வப் பெண்ணாள்
உறவெலாம் இல்லா ராகும் ஊணருக் கஞ்சு வேனே! (௪)

பொய்யருக் கஞ்ச மாட்டேன் புரட்டருக் கஞ்ச மாட்டேன்
வெய்யதாய் அணுவின் குண்டை வீசுவார்க் கஞ்ச மாட்டேன்
செய்யநற் சீரை மிக்காள செந்தமிழ்க் கன்னி யாளை
மெய்யுறத் தழுவி டாத வீணருக் கஞ்சு வேனே! (௫)

அரசியற் சூதுக் கஞ்சேன் அறமிலா ராட்சிக் கஞ்சேன்
பரசுவார்க் கின்பம் நல்கும் பாத்தமிழ்ச் செல்வி யாளைத்
தருசுவை யமுத மூட்டும் தாய்த்தமிழ்த் தெய்வ மாதைக்
குறைசொலித் திரிவா ரான கொடியவர்க் கஞ்சு வேனே! (௬)

அன்பிலா தவர்க்கு மஞ்சேன் அருளிலா தவர்க்கு மஞ்சேன்
என்பெலா முருகி யோடி இதயமும் உருகும் வண்ணம்
இன்பநல் லிசைகள் பாடும் இசைத்தமி ழினியாள் தன்னை
வன்பினால் தாக்க நோக்கும் வஞ்சகர்க் கஞ்சு வேனே! (௭)

கோடைவா னிடிக்கு மஞ்சேன் கொல்லுமின் னற்கு மஞ்சேன்
நீடிய வாழ்வு கொண்ட நித்தியக் கன்னி தன்னைப்
பாடுவார்க் கினிய ளாகும் பசுந்தமிழ்ப் பாவை யாளைச்
சாடுதற் கெண்ணங் கொண்ட சழக்கருக் கஞ்சு வேனே! (௮)

வெம்புயல் வீச்சுக் கஞ்சேன் வெறிமிகுஞ் சூறைக் கஞ்சேன்
கம்பனுக் கிளங்கோ வுக்குக் கற்புயர் வள்ளு வற்குத்
தெம்புறக் கவிக ளீந்து தெளிதமிழ் நூல்கள் கொண்ட
செம்பொருட் செல்வி யாளைச் சேவியார்க் கஞ்சு வேனே! (௯)

வறுமையும் நோயு மஞ்சேன் மாதர்கண் வீச்சு மஞ்சேன்
பெருமையில் நிறைந்து தோன்றிப் பேச்சினிற் சிறந்து நின்று
நறுமலர்க் கவிம லர்த்தி நற்கலைத் தென்ற லாகி
வருதமிழ்ப் பாவை தன்னை வாழ்த்திடார்க் கஞ்சு வேனே! (௧0)

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) பாஸ்கரத் தொண்டைமான் நூலுக்குப் பரிசு

சிறந்த தமிழ் இலக்கிய நூலுக்கு ஆண்டுதோறும் 1000 வெண்பொற்காசுகள் பரிசு வழங்குவதென்று, அருணாசலம் படப்பிடிப்பு நிலைய உரிமையாளர் திரு. ஏ. கே. வேலன் அவர்கள் செய்துள்ள முடிவுப்படி இவ்வாண்டு திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், எம். ஏ. அவர்கள் எழுதிய 'வேங்கட முதல் குமரி வரை' என்னும் நூலுக்குச் சிறந்த அப்பரிசு அளிக்கப்பட்டது. இந் நூலாசிரியரைப் பாராட்டவும், நூலின் சிறப்பினை எடுத்துரைக்கவும் கடந்த 8-5-60இல் கோடம்பாக்கம் அருணாசலம் படப்பிடிப்பு நிலையத்தில் ஒரு விழா நடைபெற்றது. விழாவிற்குத் திரு. எஸ். மகராஜன் அவர்கள் தலைமை தாங்கினார். திரு. வேலன் அவர்களால் ஏற்படுத்தப்பட்ட 1000 வெண்பொற்காசுப் பரிசினைத் திரு. டி. எம். கிருஷ்ணசாமி ஐயா அவர்கள் திரு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கட்கு வழங்கினர். திருவாளர்கள் கே. எம். பாலசுப்பிரமணியம், மீ. ப. சோமசுந்தரம், முத்தமிழ்க் காவலர் கி ஆ. பெ. விசுவநாதம், திருவாட்டி சௌந்திரம் கைலாசம், வித்துவான் துரைசாமி, டி. கே. சண்முகம், பேராசிரியர் அ. சீனிவாசராகவன் ஆகியோர் நூலாசிரியரைப் பாராட்டிப் பேசினர். திரு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் பாராட்டல்களுக்கு நன்றி தெரிவித்துப் பேசினர். திரு. ஏ கே. வேலன் அவர்கள் நன்றி உரை நவில விழா இனிது முடிந்தது.

**குறிப்பு :** கலைத் துறையில் தாம் ஈட்டிய செல்வத்தை இங்ஙனம் இலக்கிய வளர்ச்சியின் ஆக்கத்திற்குச் செலவிடும் திரு வேலன் அவர்களின் தாய்மொழிப்பற்றையும், பரந்த உளப்பாங்கினையும் நூலாசிரியர், கலைச்செல்வர் திரு பாஸ்கரத் தொண்டைமான் அவர்களையும் பாராட்டுகிறோம். இவர்கள் தொண்டு மேலும் சிறப்பதாக.

## (உ) பெருந்தலைவர்கள் மாநாடு

மேல் திசை, கீழ்த்திசை நாடுகளிடையே நல்லுறவு வளர வழிகோலுதற்கெனக் கடந்த 16-5-60 இல் பாரிசில் பெருந் தலைவர்களான அமெரிக்கத் தலைவர் ஐசனோவர், உருசியத் தலைவர் குருச்சேவ், பிரிட்டிஷ் முதலமைச்சர் மாக்மிலன், பிரெஞ்சுத் தலைவர் டிகாலே ஆகியோரின் மாநாடு கூடிற்று. ஆனால் வருந்தத்தக்க விதத்தில், கூடிய அதே நேரத்தில் அம் மாநாடு முறிவுற்றது. "அமெரிக்க உளவு விண்ணூர்தி உருசிய நாட்டின்மீது பறந்தது தவறு; அதற்காக அமெரிக்கத் தலைவர் ஐசனோவர் மன்னிப்புக் கேட்கவேண்டும், இன்றேல் நான் இம் மாநாட்டில் பங்கு கொள்ளமாட்டேன்" என்றார் குருச்சேவ். ஐசனோவர் இதற்கு உடன்பட்டாரில்லை. பிரெஞ்சுத் தலைவர் திரு. டிகாலே நடுநின்று ஒற்றுமையை நிலைநாட்ட முயன்றும் பயனில்லாது போயிற்று. இதனால் அம் மாநாடு நடைபெறாது ஒழிந்தது. எனினும் மீண்டும் ஒரு முறை இவ் வல்லரசுகள் கூடிப் பேசி உலக அமைதிக்கு வழிகாண வேண்டும் எனத் திரு டிகாலே முயன்று வருகிறார்.

**குறிப்பு :** பெருந் தலைவர்களிடையே தோன்றியுள்ள இந்த மன மாறுபாடு மீண்டும் ஓர் உலகப் போருக்கு வித்தூன்றுவதாகும் என அரசியல் அறிஞர்கள் அஞ்சுகின்றனர். அந்நிலை நிகழாவண்ணம் இறைவன்தான் இவ்வுலகைக் காத்தருளவேண்டும்.

(ங) ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 272ஆம் திருநாளும் காசிமடத்தார் அறக் கொடைகளும்

11-6-1960 இல் நடைபெறும் குமரகுருபர சுவாமிகளின் 272 ஆம் ஆண்டுத் திருநாளை முன்னிட்டுத் திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரானவர்கள், திருக்கேதாரம், ரிஷிகேசம், ஹரித்துவார், பிரயாகை, ஸ்ரீகாசி, திருக்காளத்தி, திருத்தணிகை, காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம, சென்னை, திருவண்ணமலை, சிதம்பரம், ஆச்சாள்புரம், சீர்காழி, வைத்தீசுவரன் கோவில், மாயூரம், திருப்பனந்தாள், சுவாமிமலை, திருவையாறு, திருப்புகலூர், திருவாரூர், திருவானைக்கா, பழனி, மதுரை, திருக்குற்றாலம், பழைய பாவநாசம். ஸ்ரீ வைகுண்டம், திருச்செந்தூர், இராமேசுவரம், கன்னியாகுமரி ஆகிய திருத்தலங்களில் அந்தணர், அருந்தவர், ஏழைகள் ஆகியோருக்கு அன்னம் வழங்குதற்கென மொத்தம் 5,57,600 வெண்பொற்காசுகள் மூலதனமாக ஒதுக்கியுள்ளனர். அதிலிருந்து ஒவ்வோர் ஊர்களுக்கும் பல்வேறு செலவுத் தொகைகள் ஒதுக்கப்பட்டுள்ளன. அத்தொகை மொத்தத்தில் 10,219 வெண் பொற்காசுகளாகும்.

தில்லையில் பெரிய புராணச் சொற்பொழிவு நிதி: கடந்த 22-5-60 முதல் 30-5-60 முடிய, சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்தில் நாடோறும் பெரியபுராணச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. புலவர் பெருமக்கள் பலர் ஒவ்வொரு சருக்கங்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் இதற்கென முதற் பொருளாக 7000 வெண்பொற்காசுகள் கொடுத்துள்ளனர். இங்ஙனமே மதுரை, காஞ்சிபுரம் முதலிய பதிகளிலும் திருவிளையாடற் புராணம், கந்த புராணம், திருவாசகம் ஆகிய புராணச் சொற்பொழிவுகட்குப் பல்வேறு வகையில் மூலப் பொருள் வழங்கியுள்ளனர். இவ்வகையில் கொடுக்கப் பட்டிருக்கும் மொத்தத் தொகை 42,000 வெண் பொற்காசுகளாகும்.

(ச) காஞ்சி மணிமொழியார் மணிவிழா

தென்னகத்து மொழி அரசியல் போராட்டங்களில் பங்கு கொண்டு உழைத்தவரும் 'போர்வாள்' என்னும் இதழின் ஆசிரியருமான திரு. காஞ்சி மணிமொழியார் அவர்களின் மணிவிழா கடந்த 17—5—60இல் சென்னை செயின்ட் மேரீஸ் மண்டபத்தில் சிறப்புறக் கொண்டாடப் பட்டது. செந்தமிழ்ப் புலவர் செல்வராஜ் அவர்கள் தலைமை தாங்கினர். பல தமிழறிஞர்களும், அரசியல் தலைவர்களும் பாராட்டுரை வழங்கினர். அறிஞர் சி. என். அண்ணாத்துரை M.A., M.L.A. யவர்கள் திரு. மணிமொழியாருக்குப் பொன்னாடை போர்த்தி வாழ்த்துரை வழங்கினர். இவ் விழாத் தொடர்பாக மணிவிழா மலர் ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. அதில் திரு. மணிமொழியார் அவர்கள் வரலாற்றுக் குறிப்புக்களும், அவர் ஆற்றிய அரும்பணிகளும் மிக அழகுறத் தரப்பட்டுள்ளன.

குறிப்பு: காஞ்சி மணிமொழியார் அவர்களைத் தமிழகம் நன்கு அறியும். நாடும் மொழியும் நலமுற, எண்ணத்தால்—எழுத்தால்—எழுச்சியுள்ளத்தால் நற்பணியாற்றுபவர். பொது வாழ்வுக்கெனச் சிறை வாழ்வும் பெற்றவர். அன்னாருக்கு நமது வாழ்த்தினைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். இப் பெரியார் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து நாட்டுப் பணி புரிய எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவானாக.

## (ஞ) திரு. அன்ணல் தங்கோ பொன் விழா

தமிழன்பர், திரு. கு. அண்ணல் தங்கோ அவர்களின் பொன் விழா வாணியம்பாடியில் 13-5-60 முதல் 23-5-60 முடிய 11 நாட்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஆசிரியர் இளவழகனார் நாடோறும் திருக்குறள் முப்பால் விரிவுரை நிகழ்த்தினர். கடைசி நாள் மறைமலையடிகள் விழாக் கொண்டாடப்பட்டது. வித்துவான், மே. வி. வேணுகோபாலப் பிள்ளையவர்கள் தலைமை தாங்கினார். தேவநேயப் பாவாணர், கிருட்டிணமூர்த்தி, புலவர் அரசு ஆகியோர் பேசினர். ஆசிரியர் இளவழகனார் திரு அண்ணல் தங்கோவிற்குத் 'தூய தமிழ்க் காவலர்' என்னும் பட்டத்தை வழங்கினர். மாவட்ட நீதிபதி திரு. மகராசன் அவர்கள் அண்ணல் தங்கோவிற்குப் பொன்னாடை போர்த்தினர்.

**குறிப்பு**: பொன்விழாக் கொண்ட தூய தமிழ்க் காவலர் திரு அண்ணல் தங்கோ அவர்கட்கு நமது உளமார்ந்த வாழ்த்துக்கள் உரித்தாகுக. அவர் மேலும் பல விழாக்கள் கண்டு பல்லாண்டுகள் வாழ எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவானாக.

## (ஐ) கரந்தைத் தமிழ்ச்சங்க 49-ஆம் ஆண்டு நிறைவு விழா

1960, ஜுன் திங்கள் 5, 6 ஆம் நாட்களில் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் 49 ஆம் ஆண்டு நினைவுவிழா டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியாரவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. பல தமிழறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். அத்துடன் கரந்தைப் புலவர்கள் கல்லூரி ஏழை மாணவர்களின் உணவுச் செலவிற்காக 22 ஏக்கர் நஞ்சை நிலத்தை அறக்கொடையாக வழங்கியுள்ள சங்கப் பேரன்பர் தென்னங்குடி திரு. நா. சுந்தரராச நாட்டார் அவர்களுக்கு நன்றியும் வாழ்த்துரையும் வழங்கப்பட்டன.

**குறிப்பு**: கரந்தைத் தமிழ்ச் சங்கத்திற்கு நம் வாழ்த்துக்களைத் தெரிவித்துக்கொள்வதோடு, அறக்கொடை நல்கிய திரு சுந்தரராச நாட்டார் அவர்களையும் பாராட்டுகிறோம்.

## (எ) தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 76 ஆம் ஆண்டு நிறைவு விழா

தூத்துக்குடி சைவசித்தாந்த சபையின் 76-ஆம் ஆண்டு நிறைவு விழா கடந்த மேத்திங்கள் 21, 22 ஆம் நாட்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. தவத்திரு சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் தலைமை தாங்கினார்கள். சித்தாந்தச் சிவநெறிச் செல்வர்களும் செந்தமிழ்ப் புலவர்களும் சொற்பொழிவாற்றினர்.

**குறிப்பு**: இச் சைவசித்தாந்த சபை மேலும் பல்லாண்டுகள் சிவத்தொண்டு புரிந்து சிறப்புடன் விளங்குமாக.

## (அ) உலகப் பெருஞ் செல்வர் ராக்பெல்லர் மறைவு

உலகத்திலேயே மிகப் பெருஞ் செல்வர் என மதிக்கப்பட்டு வந்த ஜான் டி ராக்பெல்லர் (ஜே. ஆர்) தமது 86 ஆம் அகவையில் அரிசோனாவில் டுசான் என்னுமிடத்தில் 11-5-60 இல் காலமானார். இவர் தம் தந்தையாரைப் போலவே பெருஞ் செல்வராகமட்டுமன்றிப் பெருங் கொடையாளராகவும் திகழ்ந்தார். தந்தையும் மகனும் சேர்ந்து மொத்

தத்தில் வழங்கியுள்ள நன்கொடை 875 மில்லியன் டாலர்களாகும். இப்போது நியூயார்க்கில் ஐக்கிய நாடுகளின் தலைமை நிலையம் அமைந்துள்ள இடத்தை வழங்கியவர் திரு ராக்பெல்லரேயாவர். இது அவர் கொடைகளில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது.

தென்னகத்தில் பல கல்விக் கூடங்கட்கும் மருத்துவ நிலையங்கட்கும் ஆக அவர் அள்ளி அள்ளி வழங்கியுள்ள நன்கொடைகள் மிகப் பல. ஆந்திர நாட்டில் விசாகப்பட்டினத்திலுள்ள மருத்துவக் கல்லூரியில் உடல் நூல் ஆராய்ச்சிக்கென 10,000 டாலர்கள் வழங்கியுள்ளார்.

வேலூரிலுள்ள கிறித்துவ மருத்துவக் கல்லூரிக்கு அறுவை மருத்துவக் கருவிகள் வாங்குவதற்கு மட்டும் 10,000 டாலர்கள்.

இவையேயன்றி இந்தியாவின் பல்வேறு பாகங்கள், கிழக்கு ஆசியா, ஐரோப்பா முதலிய பகுதிகளில் இவர் பல்லாயிரக் கணக்கான டாலர்களை நன்கொடையாக வழங்கியுள்ளனர்.

குறிப்பு: இங்ஙனம், "ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம் பேரறிவாளன் திரு" என்னும் பொய்யாமொழிக்கோர் எடுத்துக்காட்டாக விளங்கிய திரு ராக்பெல்லரின் மறைவு பொருளாதார உலகிற்குப் பெரியதோர் இழப்பேயாகும்.

(௯) ரெவரெண்ட் எச். ஏ. பாப்லி மறைவு

ஈரோட்டில் லண்டன் மிஷனில் 30 ஆண்டுகள் சமயத்தொண்டு புரிந்து ஓய்வு பெற்றிருந்த ரெவரெண்ட் எச். ஏ. பாப்லி அவர்கள் தமது 81 ஆவது அகவையில் கூனூரில் 'சன்பீம்' என்னும் தமதில்லத்தில் கடந்த 9-5-60 இல் காலமானார்.

திரு பாப்லி அவர்கள் திருக்குறளை மொழிபெயர்த்துள்ளார். கர்னாடக இசை முறைப்படி தமிழில் கிறித்துவப் பாடல்கள் பல இயற்றியுள்ளார். அனைத்திந்திய ஒய். எம். சி. ஏ. இல் சில காலம் செயலாளராகப் பணியாற்றியுள்ளார். இறுதிக்காலத்தில் ஒய். எம். சி. ஏ யின் தலைவராகவும், உள்ளூர்க் கோவாப்ரேடிவ் அர்பன் பாங்கியின் இயக்குநர்களுள் ஒருவராகவுமிருந்தார். இவருக்கு ஒரு மனைவியும் ஒரு மகனும் உளர். இந்நல்லாரை இழந்து வருந்தும் இவர் தம் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

(௰) கல்கத்தாவில் மறைமலையடிகளாரின் மைந்தர்

தமிழ்க்கடல் மறைமலையடிகளாரின் மைந்தரும், தூத்துக்குடி, வ. உ. சி. கல்லூரித் தமிழ்ப் பேராசிரியருமான மறை திருநாவுக்கரசு அவர்கள் கடந்த 25-4-60 முதல் 28-4-60 முடிய நான்கு நாட்கள் கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத்தில், 'ஞானசம்பந்தரின் சிறப்பியல்புகள்', 'நாவுக்கரசரின் சொல்லமிழ்தம்' 'உண்மைக் கவிகள் உணர்ச்சி' 'தமிழின் கதிர்காலம்' என்னும் பொருள்கள் பற்றிச் சொற்பொழி வாற்றினர். கூட்டத்திற்கு ஏராளமான மக்கள் வந்திருந்தனர்.

இவர்தம் அண்ணனார் திருமறை மாணிக்கவாசகனார்க்கு இந்திய மைய அரசினர் 'சிறந்த ஆசிரியர்' எனும் சிறப்புப்பட்டமும் பரிசும் வழங்கிச் சிறப்புச் செய்தது மிகவும் பாராட்டற்பாலதாகும்.

# மதிப்புரை

**“சிதம்பரத் தோத்திரத் திரட்டும் சில சிறந்த செய்யுட்களும்”**

[பதிப்பாளர் சிவத்திரு, சி. ப. விசுவநாத சுவாமி அவர்கள், இதன் விலை ரூ. 1-00; கிடைக்குமிடம் ‘சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்’ 1/140, பிராட்வே, சென்னை—1]

பதிப்பாளராகிய அடிகள் அரும்பாடுபட்டு இந்நூலைத் தொகுத்துள்ளார்கள். நெடுநாளைக்கு முன் அச்சாகி வெளிவந்து மீண்டும் அச்சுக்கு வாராத அரும்பெரும் நூல்கள் பலவாகும். அந் நூல்கள் இறக்குந் தறுவாயிலிருக்கின்றன என்று கூறுவது மிகையாகாது. அவற்றைத் தேடித் தொகுத்து அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டுங் கடமை பொருட் செல்வமும் புலமைச் செல்வமும் ஒருங்கமைந்த சீரியோர் கடனாகும். மேலும் பொருட் செல்வமிக்க சிவபுண்ணியர் பொருளினை நல்கி வெளிப்படுத்துவிப்பதும் பொருந்துவதாகும்.

“குருநமசிவாயர்” என்னும் தமிழ் மாமுனிவர் அண்ணாமலைக் குவட்டின்கண் வீற்றிருந்தருளிய குகை நமசிவாய மூர்த்தி என்னும் சித்தர் ஒருவரின் சிறந்த மாணவராவர். அவர்தம் திருவருளாணை பெற்றுத் திருத்தில்லைக் கெழுந்தருளினர். வழிநெடுக நிட்டையிலிருந்து விழித்த போதெல்லாம் பசியுண்டாதலும், பசி நீக்கத்தின் பொருட்டு இறைவியை நோக்கித் தண்டமிழ் வெண்பாச் சோறுவேண்டிப் பாடுதலும், இறைவியும் பொற்றாம்பாளத்தும் பிற கலத்தும் சருக்கரைப் பொங்கலும்பிற அமுதும் கொண்டு நல்கியருளலும் அவர்தம் வரலாற்றிற் காணப்படுகின்றன. இறைவி தன்னை இளமையளாய்ப் பாடுமாறு பணித்தருளப் பாடிய வெண்பா வருமாறு:

“முத்த நதிசூழும் முதுகுன் றுறைவாளே
பத்தர் பணியும் பதத்தாளே—அத்தர்
இடத்தாளே மூவா முலைமேல்அ ரார
வடத்தாளே சோறுகொண்டு வா.”

தில்லையம்பலவாணர் தம் திருக்கோவிற்றிருப்பணியைச் செய்விக்குமாறு பணித்தமையும், பரிசு பல வழங்கினமையும், குருநமசிவாயர் பணி பல புரிந்தமையும் வரலாற்றிற் காணப்படுகின்றன. அம்முனிவர் பெருமான் பாடியருளிய நூல்கள் ‘பரமரகசியமாலை, சிதம்பர வெண்பா, அண்ணாமலை வெண்பா’ முதலியனவாகும். அவற்றுள் இதன்கண் ‘சிதம்பர வெண்பா’ முழுநூலும், ‘பரமரகசிய மாலையில்’ சில பாக்களும் காணப்படுகின்றன. இவையல்லாமல் சிறந்த தலைப்புக்களமைத்து அவற்றிற்கேற்ற தேவாரத் திருப்பாட்டுக்கள் பலவும் சேர்க்கப்பட்டுள்ளன. கிருட்டிண ஐயரவர்களால் இயற்றப்பெற்ற ‘தில்லைச் சிவகாமியம்மை பிள்ளைத் தமிழி’லிருந்தும், ‘சேக்கிழார் பிள்ளைத் தமிழி’லிருந்தும் பல அரிய பாக்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இதுபோல் ‘பிரபுலிங்க லீலை, பகவற் கீதை, திருவருட்பா’ முதலிய நூல்களிலிருந்தும் தொகுக்கப்பட்டுள்ளன.

இச் சீரிய நூலைச் செந்தமிழன்பர்களும் செந்நெறிச் செல்வர்களும் வாங்கியும் வாங்குவித்தும் நற்பயனெய்துவார்களாக. மேலும் இந்நூலை வாங்கும் வாயிலாக அடிகளார் வெளியிடக் கருதும் நூல்கள் பலவும் வெளிவரப் பேருதவி புரிவார்களாக.

**" தமிழின்பம் "**

[பதிப்பாசிரியரும் வெளியிடுவோரும்: **என். ரத்னசபாபதி** 161, செட்டியார் தெரு, கொழும்பு-11; தனி இதழ் சதம் 50. ஆண்டு; கட்டணம் ரூ. 6-00.]

இலங்கையினின்று புதிதாக வெளிவரும் இத் திங்களிதழ் கடல் கடந்து வாழும் தமிழர்கள் தம் தாய் மொழிக்காற்றும் பெரும்பணியை எடுத்துக் காட்டுகின்றது. அங்கு வாழும் தமிழ்ப் பேராசிரியர்கள், பேறிஞர்கள் அனைவரும் இவ் விதழில் அரிய கட்டுரைகள் எழுதி யுள்ளனர். தமிழ் இலக்கியம், இலக்கியத் திறனாய்வு, இலக்கிய வரலாறு போன்ற பல துறைகளில் கட்டுரைகள் அமைந்திருப்பனவன்றித் தமிழர் சமய நெறி, கலை பற்றிய ஆய்வுக்கட்டுரைகளும் இதில் இடம் பெற் றுள்ளன. இவ்விதழ் அழகிய முறையில் குறைந்த விலையில் வெளியிடப் படுவது வெளியிடுவோரின் தமிழ்ப் பணி ஆர்வத்தைக் காட்டுகின்றது.

**'சொல்லும் பொருளும்'**

[ஆக்கியோர்: திரு. எம். **பாலசுப்பிரமணியம்** எம். ஏ. அவர்கள் விலை ரூ. 1-83. கிடைக்குமிடம் 39. ஆயலூர் முத்தியாமுதலித் தெரு ஜார்ஜ் டவுன், சென்னை—1]

இந்நூல் பாச்செய்யுள் போன்று உரைச் செய்யுளாகத் திகழ்கின்றது. ஆசிரியரவர்கள் மிக முயன்று திட்பநுட்பம் அமையச் சுருக்க விளக்க மும், இனிமையும் எழுச்சியும் பொதுள இதனை அமைத்துள்ளார்கள். இதன்கண் எழுத்தாளர்கட்கு அவர்தம் உள்ளத்துறு துணையாக நின்று அவ்வப்போது வேண்டுங் கருத்துக்களையும் அவற்றிற்கு வேண்டும் சொற்றொடர்களையும் ஒப்பில் பேராற்றலொன்று உணர்த்திவந்துள்ள உண்மையினை நன்கு விளக்கியுள்ளார். இம்மெய்ம்மை நம் தமிழகத்து மட்டுமன்றி மேற்புல நாடுகளிலும் நிகழ்ந்துள்ளமைக்குப் பல ஆங்கிலப் பேராசிரியர்களின் வரலாறு ஆங்காங்குக் குறித்துள்ளார்கள். மேலும் 'காவிரிக் கரையில் ஒருகாலை என்பது முதல் உயர்நிலைமாடம் தரும் எழுச்சி' என்பதீறாகப் பன்னிரண்டு பெருந் தலைப்புக்களும் அவற்றுட் பல பகுதிகளும் அமைத்து நூல்யாத்து விளக்கியுள்ளார்கள். திருக் குறள், திருவாசகம், பெரியபுராணம், திருவருட்பா, சங்கத்தொகை நூல்கள், பிற சான்றோர் நூல்கள் முதலியவற்றிலிருந்து பல அரிய மேற்கோள்களும் அவ்வவற்றிற்குப் பொருந்திய விளக்கங்களும் நூலை மிகவும் அணிசெய்கின்றன. இடை நிலைக்கலை மாணவர்கட்கு இந்நூல் பலவகையாலும் மொழிவளம், அறிவுவளம், நல்லொழுக்கம், நன்னெறிச் செலவு முதலிய பலவும் இனிதாகவும் எளிதாகவும் கைகூடுவதற்குப் பெருந்துணை புரியுமென்பதற்கு எட்டுணையும் ஐயமின்று.

பொதுவாகச் செந்தமிழன்பர்களும், சிறப்பாக மாணவ ஆசிரியர் களும், இதனை வாங்கியும் வாங்குவித்தும் பயனெய்துவார்களாக.



---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநர்

**திரு. நெ. து. சுந்தரவடிவேலு, எம்.ஏ., எல்.டி.**




| சிலம்பு ௩௪ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, ஆனி<br>ஜூலை, 1960 | பரல் ௧௧ |
|---|---|---|

# தமிழ்நாட்டுப் பள்ளிச் சீரமைப்பு

பள்ளி என்பது திருக்கோவில், முனிவரிருக்கை, கற்பிக்குமிடம் முதலியவற்றைக் குறிக்குஞ் சொல். அரண்மனை முதலிய வேந்தர் இருப்பிடங்களையும் குறிக்கும். புத்தப்பள்ளி, சமணப்பள்ளி, துலுக்கப்பள்ளி, பள்ளிக்கூடம் முதலியவாக வழங்கும் வரலாறுகளான் இச் சொல்லின் சீர்மை உணரலாம். 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' என்னும் மூதுரையால் எழுத்தறிவிக்கும் விழுத்துணை ஆசான் மாணவர்களாலும் மாந்தர்களாலும் இறைவனோடொப்பானவனாகக் கருதப்படுவன். அவனுறைந்து கற்பிக்கும் இடத்தினையும் பள்ளியென்று வழங்கினர். கூடம் மாணவர் கூடியிருப்பது. மாணவர்கட்கு அறிவுகூடச் செய்வது என்னும் இரு பொருளும் நிகழுவதற்கிடனாயிருப்பது பள்ளிக்கூடம். மக்களை மாக்களினின்றும் வேறுபடுப்பது வாய்ப்பேச்சு ஒன்றேயாம். கிளி நாகணவாய்ப்புள் முதலியன பேசக் காண்டுமெனினும் அவை சொல்லிக்கொடுத்த அளவில் பேசுவனவே. தாமாகக் கேட்டும் கருதியும் பேசுவனவல்ல. மேலும் பேசுவிப்பனவும் அன்று. எழுத்தறிந்தெழுதும் வாய்ப்புக்களும் அவைகட்கின்று.

மக்கட் பிறப்பொன்றே பேசவும் எழுதவும், பேசுவிக்கவும் எழுதுவிக்கவும், கற்கவும் கற்பிக்கவும் வாய்ப்புடைய பிறப்பாகும். இச் செய்தொழில் வேற்றுமையே சிறப்பாகும். ஏனைப் பொறியுணர்வுகள் கூடியும் குறைந்தும் பருவுடலின்கண்ணமைந்த உறுப்புக்களுக்கேற்றவாறு ஒப்ப நிகழ்வனவே. மேலும் நுண்ணுடலின்கண் அமைந்துள்ள உறுப்புக்கள் ஓரறிவு முதல் ஆறறிவு

ஈருகவுள்ள அனைத்துயிர்கட்கும் எவ்வகை வேறுபாடுமின்றி ஒன்றுபோலமைந்துள்ளன. அதனால் அவை பொதுப் பிறப்பாகும். இவ்வுண்மை வரும் திருவள்ளுவ நாயனார் திருப்பாட்டானுணர்க:

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்." —திருக்குறள், ௯௭௨.

ஒக்கும் பிறப்பு - நுண்ணுடற் பிறப்பு. ஒவ்வாச் சிறப்பு - பருவுடற் பிறப்பு.

'செய்தொழில் வேற்றுமையான்' சிறப்புப் பிறப்பெய்திய மாந்தர் கற்காதொழியின் மக்களுக்கும் விலங்கினுக்கு முள்ள ஏற்றத்தாழ்வுகள் போன்று மாந்தருள்ளும் கற்றார்க்கும் கல்லாதவர்க்கும் ஏற்றத்தாழ்வுகள் உள. மாந்தர்க்கு இத் தாழ்வினையொழித்து உயர்ந்த வாழ்வினை அளிப்பது பள்ளிக்கூடமேயாம். இவ்வுண்மைவரும் செந்தமிழ்ப் பொதுமறையானுணரலாம்:

"விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்." —திருக்குறள், ௪௧0.

மாந்தர் கூடி வாழுமிடம் கூடமாம். அவை, பள்ளிக்கூடம் பணிக்கூடம், வாழ்க்கைக்கூடம், படைக்கூடம், ஆட்சிக்கூடம், தொழுகைக்கூடம் என அறுவகைய. இவ்வனைத்தினுள்ளும் அடிப்படையாக அமைந்துள்ளது பள்ளிக்கூடமே. எழுத்தே யாவர்க்கும் விழுத்துணையாகும். எழுத்தறியவே இழிதகைமை தீரும்; அகவிழி திறக்கும்; பழியகலும்; வழிவிளங்கும்; விழுமியது கூடும்; தொழுகுலமாகும். உலகில் மக்களை எக்காலத்தும் எவ்வேற்றுமையுமின்றித் தக்க ஒற்றுமையுடன் ஆண்டவன் மக்களென அன்பு பூண்டொழுகுவிப்பது பள்ளிக்கூடமும் தொழுகைக்கூடமுமேயாம். இவற்றுள்ளும் பள்ளிப் பயிற்சியினாலேயே இவை நிலைபெறுதல் வேண்டும். தொழுகைக்கூடம்-திருக்கோவில்.

இத்துணைச் சிறந்த பள்ளியின் சீரமைப்பு எத்துணை இன்றியமையாமையுடையதெனக் கூறுதலும் வேண்டுமோ! உடலை வளர்க்கும் உணவினும் உயிரை வளர்க்கும் உணர்வு எத்துணை விழுமியதென உணர்மின்! ஊட்டி வளர்த்தாலும் ஒரு காலத்து அழியும் உடம்பு அழியும். உணர்வு விளங்க உறுதுணையாக நிற்குங் கல்வி அழியா உயிர்போன்று அவ்வுயிருடன் ஒன்றி ஒரு காலமும் அழியாது. இவ் வுண்மை வரும் நாயனார் திருமொழியானுணர்க:

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து." —திருக்குறள், ௩௯௮.

இத்தகைய பள்ளியினை உயிரினும் மேலாகப் போற்றி வளர்த்துவருதல் வேண்டுமென்னும் மங்கா உண்மையினை ஊருக்கும் உலகுக்கும் எடுத்துக்காட்டி உணர்த்திய பெரியார் 'சென்னை மாநிலக் கல்வித்துறை இயக்குநர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களாவர். அப் பெருந்தகையார் ஏனை இயக்குநர் போன்று துறையலுவலைமட்டும் முறையுற ஆற்றியிருப்பரேல் இத்துணைச் சிறந்த சீரமைப்புத் தோன்றியிராது. அவர்கள் ஆணைவழி நடத்தமுடியாத தொன்றை அன்பின்வழி நடத்த முடியுமென்னும் மெய்ம்மையினை நாட்டியுள்ளார்கள். இதுகாறும் பள்ளிப் பொறுப்புப் பள்ளியினை நடத்துவோருக்கும், ஆசானுக்கும், ஆட்சியினர்க்குமே என்று எண்ணியிருந்த ஊரவர் எண்ணத்தை நம் இயக்குநரவர்கள் தம்முடைய பணிவு அன்பு இன்சொற்களால் மாற்றி முழுப்பொறுப்பும் ஊரவர்களுக்கே என அவர்கள் உளங் கனிந்து ஒப்புக்கொண்டு நடத்தி வரும்படி நாட்டியுள்ளார்கள்.

முன்னில்லாத சிறப்பாக இந்நாளில் பள்ளி மாணவர்களுக்கு நன்கொடைப் பகலுணு, உடை, தனிப்பாடவாய்ப்பு, புத்தக முதலியன உளமுவந்துதவ ஒருப்படுத்தியுள்ளார்கள். இத்தகைய நன்னோக்கங்கட்கெல்லாம் முன்னோக்கமாக விருந்தது அவர்தம் காலஞ்சென்ற தனிப் பேரறிவு மகனார் திருவள்ளுவன் என்னும் திருப்பெயர் வாய்ந்த செல்வனின் நல்லுரையேயாம். அம் மகனார்க்கு அமைந்திருந்த அன்பு, பணிவு, இன்சொல், ஏழை மாட்டிரக்கம், ஏழை மாணவர் எவ்வகையாகலேனும் கல்வி கற்றுச் சிறக்கவேண்டுமென்னும் காதற் கனிவுள்ளம், ஈகை, அறிவுக் கூர்மை முதலிய நற்பண்புகள் எவரும் வியக்குமாறு இயற்கையிலேயே அமைந்துள்ளன. இவ்வனைத்தும் ஓங்கி வளர்தற்குச் செவ்விய தவமார் ஈன்றோரின் நற்பண்புகள் வித்துக்குச் செவ்வையான நிலமும் நீரும் காற்றும் பிறவும் உறுதுணையாவன போன்று துணையாய் நின்றன. இக் குடும்ப முற்றுமே ஏழைகளின் நலத்திற்கும் கல்வி வளர்ச்சிக்கும் துணைபுரியுமாறு தோன்றாத் துணையாம் தொல்லோன் நல்வாழ்த்துடன் அவற்றைச் சீரும் சிறப்பும் பெருகத் தோற்றுவித்தருளினன் போலும். இது முன்னைத் தவப் பேறேயாம்.

நம் பெருந்தகை இயக்குநர் பள்ளிச் சீரமைப்பினைப் பல் வேறிடங்களிற் பல்வேறு மாநாடுகளின் வாயிலாக ஊரவர்க்குணர்த்தி உருவாக்கிய ஒண்மை உண்மையிலேயே ஒப்பில் மாபெருந்தொண்டாகும். அத்தகைய மாநாடுகள் இதுகாறும் நூற்றிருபது நிகழ்ந்துள்ளனவாகத் தெரிகின்றது. நூற்றிருபதாவது மாநாடு அண்மையில் திருச்சி மாவட்டம் குளித்தலையில் மிக்க சிறப்பாக நடந்துள்ளது. இம் மாநாட்டு நிகழ்ச்சிகள் வரலாற்

றேட்டில் மன்னும் பொன்னெழுத்தால் பொறிக்கப்படவேண்டிய அழியா முதன்மையும் சிறப்பும் வாய்ந்தனவாகும். விரிவஞ்சி ஈண்டுச் சில பல குறிப்புக்களைத் தருகின்றோம் :

சென்னைமாநிலப் பள்ளிச்சீரமைப்பு முதல் மாநாடு செங்கற் பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த கடம்பத்தூரில் 1958 பிப்ரவரியில் தொடங்கப்பட்டது. ஊர்ப் பெருமக்களிடையே இம் மாபெருந் திட்டத்தினை முதற்கண் விரித்துரைத்து ஒப்புவித்தனர். மக்களும் சொல்லொணா மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டனர். அவற்றுள் பள்ளிக் கட்டட அமைப்பு, நலவசதி, நன்கொடையாக நூல் வழங்கல், குடிநீர் வசதி போன்ற திட்டங்கள் நிறைவேற்ற 15,000 ரூபா தர மனமுவந்து சொல்லுறுதியளித்தனர். பண்டமாகவும் பணமாகவும் கூட்டத்திலேயே அளித்தனர்.

இதுபோல் திருவள்ளூர் மாநாட்டில் ரூபா 25,000 மதிப்புள்ள திட்டம் வகுத்தனர். அவற்றை ஏற்று ரூபா 13,000க்குப் பண்டமாகவும் பணமாகவும் ஈந்தனர். திக்கெல்லாம் புகழும் மிக்க சீர்த்தியுடன் திகழும் திருநெல்வேலி மாவட்ட வளளியூரில் பொறுப்பேற்ற ரூபா 124 ஆயிரம், உடனுதவிய ரூபா 37 ஆயிரம்.

நான்காம் மாநாடு நெல்லை மாவட்டத்தில் நடந்தது. அது இராதாபுரவட்ட மாநாடாகும். நடந்த இடம் திசையன்விளை. இம் மாநாட்டைத் திறந்து வாழ்த்தியவர் தமிழக முதலமைச்சர் திரு. **காமராசர்** அவர்களாவர். காந்தியடிகள் நாற்பதாண்டுகளாகக் கூறிய அருளுரையின் வழி இப்பொழுதுதான் சென்னை மாநிலக் கல்வித்துறையில் முதன் முதல் உருவாகின்றது. மாநாடு வகுத்த வளமுறுதிட்டம் 666 ஆயிரம்; ஏற்ற பொறுப்பு 133 ஆயிரம். வாழ்த்தி வழங்கிய வெண்பொன் 41 ஆயிரம்; இவற்றுள் திசையன்விளைப்பள்ளிக்கு ரூபா 10,000 நன்கொடையாகச் சாமியார் சங். ஞானப்பிரகாசம் அவர்கள் முதலமைச்சரிடம் வண்மையுளத்துடன் வலியவந்து வழங்கினர்.

தென்னார்க்காடு மாவட்டம் மேல்மலையனூரில் பொறுப்பேற்ற வெண்பொன் 124 ஆயிரம். உடனடி வரவு 37 ஆயிரம். இம் மாவட்ட வளத்தி மாநாட்டில் கானத்தம்பட்டுப் பள்ளிக்கட்டடத்திற்குத் திரு. மாணிக்க கவுண்டர் அளித்த நன்கொடை ரூபா 2000.

ஆறும் மாநாடு பூவிருந்தவல்லியில் அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் திரு. **பக்தவத்சலம்** அவர்களால் தொடங்கிவைக்கப் பட்டது. இதன்கண் வகுத்த திட்டம் 126 ஆயிரம். கிடைத்த

வெண்பொன் 29 ஆயிரம். ஆவடி ஆர். சி. பள்ளி தளவாடங் களுக்காக ரூ. 4000 மாநாட்டில் அமைச்சரிடம் நல்கினர்.

ஏழாம் மாநாடு செங்கற்பட்டு மாவட்டம் திருவொற்றியூரின் கண் நிகழ்ந்தது. இதைத் தொடங்குவித்தவர் கல்வி, நிதி யமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள். வகுத்த திட்டம் வெண்பொன் 380 ஆயிரம். உடனடியாக வந்த வெண்பொன் 67 ஆயிரம். இம் மாநாட்டில் 'வில்லிவாக்கம் சிங்காரம் பிள்ளை உயர்நிலைப் பள்ளியின் கட்டடத்தின்பொருட்டுப் பள்ளியின் ஆட்சிப் பொறுப்பினர் திரு. என். எஸ். பிருகபாணி அவர்கள், அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்களிடம் ரூபா 15,000 வழங்கினர். இதுபோல் இம் மாநாட்டில் ரெட்ஹில்ஸ் பள்ளிக்கு 50,000 மதிப்புள்ள கட்டடமும் 10,000 கைப்பணமுமாகத் திரு. ஏகாம்பரச் செட்டியார் கல்வியமைச்சரிடம் வழங்கினர்.

எட்டாம் மாநாடு சேலமாவட்டத்தில் கெங்கவல்லியில் நடந்தது. திட்டம் 70 ஆயிரத்துக்கு வகுத்தனர். உடனடியாக 23 ஆயிரம் கைப்பணமாகவும், ஏனையவை நிலக்கொடை ஆவணங் களாகவும் வழங்கினர். இம்மாநாடுகள் எட்டினுலும் 'வகுத்த மதிப்பு பத்திலக்க வெண்பொன்'. வந்த கைப்பணம் இரண்டிலக் கத்து முப்பத்தொன்பதினுயிரம்.

பல்வேறு பள்ளிகளில் இன்றியமையாத ஒதுங்குமிடங்களும் அமைக்கப்பட்டுள்ளன. ஏனைத் தளவாடங்களும், பள்ளிகளின் அகலிப்பும், விளையாட்டிடம், தோட்டம் முதலியனவும் ஏற்ற பெற்றி எல்லா இடங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன.

செங்கைமாவட்டம் தெரிசாபுரம் ஆர். சி. பள்ளியின் ஆட்சிப் பொறுப்பினர், ஆசிரியர்கள் குடியிருப்பதன்பொருட்டு வளமனை யனைய வனப்பமை நான்கு வீடுகள் 15,000 ரூபா செலவில் அமைத்துள்ளார்கள். இப்பெருந்தகைமையினை ஏனைய பள்ளி களின் ஆட்சிப் பொறுப்பினரும் பின்பற்றுவார்களென்பது உறுதி.

திருவள்ளூர் மாநாட்டில் கல்வி இயக்குநர் விடுத்துள்ள வாழ்த்துச் செய்தியின் சிறந்த குறிப்புக்களால் அன்னவர்தம் நன்மைசால் உளப்பாங்கு நன்கு போதரும்:

"உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?"

"முயற்சிதன் மெய்வருத்தக் கூலிதரும்"

"ஆண்டவன் காட்டுவாரே ஒழிய ஊட்டுவாரா?"

"தன்கையே தனக்கு உதவி."

"ஞாலங் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்."

" இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்."

"பள்ளிக்கூடம், சமூகத்தின் நாற்றங்கால். உழைக்கத் தயங்காத நன்னம்பிக்கைகொண்ட, ஏற்றத்தாழ்வற்ற முறையோடு வாழும் சமூகப் பயிர்நாற்றுப் பள்ளிக்கூடங்களில் வளரவேண்டும். அதற்கான ஆர்வமும் வளரவேண்டும். ஊக்கமும், உறுதியும், தன்முயற்சியும் தொடக்கப் பள்ளிகளிலேயே கிளைக்கவேண்டும். காலமும் இடமும் பொருந்தியதை யுணர்ந்த தொடக்கப்பள்ளி யாசிரியர்கள் மனுப்போடும் மரபை மறந்துவிட்டு, தங்கள் கால்களிலே நின்று அக்கம் பக்கத்திலுள்ளோர் ஆதரவைப் பெற்றுப் பலவகையாலும் பள்ளிகளை அபிவிருத்தி செய்யமுன் வந்தது பெரிதும் பாராட்டுதற்கு உரியது.

"யானைக்கு யானை கைகொடுத்ததைப்போல் ஆசிரியர்களுக்கு உதவிசெய்ய விரைந்துவந்த எல்லாப் பெரியோர்களுக்கும் நம் நன்றி உரியதாம். கடம்பத்தூர், திருவள்ளூர் ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் தன்னுதவிக் கொள்கையில் தமிழகத்திற்கு வழி காட்டுகிறார்கள். அவர்கள் தொடர்ந்து அவ்வழிச் சென்று வெற்றிபெறுவார்களாக. பிறரும் அவர்களைப் பின்பற்றி நாட்டை முன்னேற்றுவார்களாக. மேலும் முயன்று பள்ளிகளைக் கவர்ச்சிக் கூடங்களாய், உயிரூட்டும் கூடங்களாய், ஒளிவீசுங் கூடங்களாய் மாற்றுவதில் விரைந்து வெற்றி காண்பார்களாக. வெல்க அவர்கள் முயற்சி! வாழ்க அவர்கள் பல்லாண்டு! பல்லாண்டு!"

சென்னை மாநிலப் பள்ளிகளில் 23,105இல் 7,73,429 குழந்தைகளுக்கு மக்கள் உதவியால் பகலுணவு அளிக்கப்பட்டு வருகிறது. இஃதல்லாமல் எல்லாத் தொடக்கப் பள்ளிகளிலும் பகலுணவு அளிக்கப்பட்டு வருகிறது, இச்செலவு முழுவதும் அரசாங்கமே ஏற்றுக்கொள்கிறது. இன்று 300-உம் அதற்கு மேற்பட்ட மக்கள் தொகையும் உள்ள சிற்றூர்கள் எல்லாவற்றிலும் பள்ளிகள் திறக்கப்பட்டுள்ளன. செங்கை மாவட்டத்திலுள்ள எல்லாப் பள்ளிகளிலும் 57,015 குழந்தைகளுக்கு நண் பகலுணவு கொடுக்கப்பட்டு வருகிறது.

சிற்சில தனிப்பட்ட பெருமக்கள் வழங்கிய அரும்பொருள்களும் பெயர்களும் பின்வருமாறு: உள்ளதை உவந்து அள்ளிக் கொடுக்கும் குமாரபுரம் கோபால நாயக்கர், நாசரத் சந்தோஷ நாடார், மதுராந்தக வட்டம் ஆனந்தமங்கலம் மகாலட்சுமி அம்மையார் அகங்கனிந்தளித்த வெண்பொன் ஐயாயிரம் மதுராந்தகத்திற் பெரும்பாக்கம் பள்ளிக்குப் பழைய மாணவி. மணமகள் கத்தூரி அம்மாள் மணமகன் இராமகிருட்டினருடன் வந்து

வழங்கிய குடிநீர் ஏனம் ஒன்று. நாசரத்வட்டங் கண்டு கொண்டா னூர் திருமதி செல்வம் அம்மாளும், துறையூர் வட்டக் கீரம்பூர்த் திருமதி வரதாம்மாளும் தாந்தாம் அணிந்திருந்த நகைகள் ஒவ்வொன்றையும் உவந்தளித்தனர். கோவிலாங்குளம் நனிமுதிர் அம்மையார் பார்வதியார் அளித்த நன்கொடையால் அவ்வூர்ப் பள்ளிக் கட்டடம் நிவந்தோங்கிக் காட்சியளித்து நிற்கின்றது. கண்டுகொண்டான் மாணிக்கம் ஊரில் பள்ளிக்கூடத்திற்கும், ஆசிரியர்களுக்கும் கட்டடங்கள் அமைத்துக் கொடுப்பதன் பொருட்டுத் திருமதி செல்லம்மாள் நன்கொடையளித்துள்ளாள்.

திருமங்கலவட்டம் வன்னிவேலன்பட்டித் தோழர் மாடசாமி என்பார் தங்நிலமனைத்தையும் வழங்கியுள்ளனர். பழைய வத்தலக் குண்டுப் பள்ளிச் சேவகர் வேல்நாயகர் சில நன்கொடைகள் வழங்கியுள்ளனர். கோயிலாங் குளத்தில் அரசாங்கத்தார் உதவி யுடன் கோயிலாங்குளம் ஊர்மக்களும் திருமதி பார்வதியம்மா ளும் வழங்கிய பெரும் பொருட்கொடையால் அவ்வூர் உயர்நிலைத் தொடக்கப் பள்ளிக் கட்டடம் உயர்ந்தோங்கிக் காட்சியளிக்கின் றது. இதுபோன்று நன்கொடையளித்த பெருங்கொடையாளர் பன்னூறாயிரவராவர். இதுகாறும் நன்கொடையாக வந்த தொகை மூன்று கோடி என்ப.

இத்தகைய 'பள்ளிச் சீரமைப்பின்' செயற்கரிய செய்கை யினையும், அதனால் நாட்டுக்கு நிலைப்பாக விளையும் நினைத்தற்கரிய நற்பயனையும், இம்முறையில் சென்னை மாநிலம் முன்னணியாக நின்று ஏனை மாநிலங்கட்கு வழிகாட்டியாகத் திகழும் வாய்மை யினையும் இந்தியப் பேரரசின் முதலமைச்சர் திரு. நேரு முதல் பல மாபெருந் தலைவர்களனைவரும் நனிமிகப் பாராட்டியுள்ளனர். சென்னை மாநிலம் வழிகாட்டியாக நிற்பதை உற்றுணர்ந்து ஏனை மாநிலங்களும் விரைவில் இத்துறையைத் தொடங்கி நிறைபயன் எய்துமாக.

உருவும் திருவும், அறிவும் உரனும், ஆற்றலும் போற்றலும், அறமும் அருளும், பிறர்க்கென வாழும் பெருந்தகைப் பெற்றியும், மன்னுயிரனைத்தும் தன்னுயிரெனக் கொள்ளும் மாண்பும், 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் மாறா அணியும், எண்ணித் துணிவதும், துணிந்தவற்றைத் தொடர்ந்து முடிப்ப தும் முதலிய பல நலங்கட்கு உறையுளாகத் திகழும் ஒப்பிலொரு வராம் சென்னைக் கல்வித்துறை இயக்குநர் செந்நெறித் திருவினர் **நெ. து. சுந்தரவடிவேலவர்களும்** அவர்கள் அரும்பணியாம் **பள்ளிச் சீரமைப்பும்** குறைவிலா நிறைவாய் வேண்டுவ எய்திப் பல்லாண்டு வாழ்க!

## *சென்னை மாநிலத்தில் கல்வி நிலையங்களின் வளர்ச்சி

| கல்வி நிலையங்கள் | 1954—55 நிலையங்களின் எண்ணிக்கை | 1954—55 மாணவர்கள் சிறுவர் | 1954—55 மாணவர்கள் சிறுமியர் | 1958—59 நிலையங்களின் எண்ணிக்கை | 1958—59 மாணவர்கள் சிறுவர் | 1958—59 மாணவர்கள் சிறுமியர் |
|---|---|---|---|---|---|---|
| துவக்கப்பள்ளிகள் | 19,154 | 14,46,545 | 7,88,896 | 22,183 | 17,02,547 | 9 95,067 |
| ஆதாரப்பள்ளிகள் | 882 | 69,740 | 89,984 | 8,231 | 3,19,871 | 2,01,275 |
| நடுத்தரப்பள்ளிகள்—சிறுவர் | 683 | 3,10,138 | 28,798 | 1,014 | 4,61,278 | 81,554 |
| நடுத்தரப்பள்ளிகள்—சிறுமியர் | 144 | 1,619 | 60,460 | 181 | 3,666 | 96,192 |
| ஆண்கள் கல்லூரிகள் | 33 | 29,589 | 704 | 41 | 30,702 | 1,076 |
| பெண்கள் கல்லூரிகள் | 14 | — | 4,079 | 15 | — | 6,538 |
| பயிற்சிக்கல்லூரிகள் (ஆண்களும் பெண்களும்) | 8 | 497 | 174 | 16 | 832 | 869 |
| பயிற்சிப் பள்ளிகள்—(ஆண்) | 35 | 5,113 | 121 | 12 | 1,495 | 48 |
| பயிற்சிப் பள்ளிகள்—(பெண்) | 37 | — | 4,362 | 11 | — | 1,314 |
| பயிற்சிப் பள்ளிகள் (ஆதாரம்) ஆண் | 22 | 2,407 | 36 | 71 | 9,129 | 412 |
| பயிற்சிப் பள்ளிகள் ( ,, ) பெண் | 13 | 33 | 1,192 | 43 | 184 | 5,933 |

* கல்வித்துறை இயக்குநர் திரு. நே. து. சுந்தரவடிவேலு அவர்கள் 1954 ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் பொறுப் பேற்றபின் அவர்தம் அரும்பணியால் கல்வித்துறையில் பல்வேறு நிலையங்கள் எங்ஙனம் பெருகியுள்ளன என்பதை விளக்கும் பட்டி. இப்பட்டியின்கண் கன்னியாகுமரி மாவட்டமும், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பகுதியும் சேர்க்கப்பெறவில்லை. இது 1-9-1959 இல் எடுக்கப்பெற்ற குறிப்பாகும்.

# *மதுரைப் பழம்பதி மாண்பு

(செல்வி சிலம்பு, ௩௪, பரல் ௧0, ௪௮௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

## கீர்த்தித் திருவகவல்

" தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகுந்
துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்
என்னுடை யிருளை ஏறத் துரந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்.

ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப ஊர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும், எவ்வெவர் திறமும்
அப்பரி சதனா லாண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை ஈங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற ஒன்ற உடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்
மாலது வாகி மயக்கம் எய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத வென்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகஎன்று
இதஞ்சலிப் பெய்தநின்று ஏங்கினர் ஏங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடம்நவில்

---

* மதுரை திருஞானசம்பந்தர் மடாலயத்தில் 17—4—60இல் மறைத் திரு மறைமலையடிகளார் ஆவியுலகத் தொடர்பாளர் திரு. இரா. நா. குற்றாலலிங்கம் பிள்ளை வழி ஆற்றிய சொற்பொழிவு.

களிதரு செவ்வாய் உமையொடு காளிக்கு
அருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கயிலை யுயர்கிழ வோனே."

(பொ - ள்.) முதற்றோன்றிய கடவுளர்க்கு அருள்செய்த மகாதேவன் என்பதே தனக்குரிய அழகிய பெயராகக் கொண்டருளிய(சதாசிவர், அநந்தர், சீகண்டர், குணிருத்திரர், விட்டுணு, பிரமா முதலாயினோர்) அறியாமையிருளைப் போக்கியருளின பேரின்பத்தையே தான் ஊர்ந்து செல்லும் ஏறுகவும், எவ்வுயிர்க்கும் அருள்செய்த பேர் அருளே தான் அமர்ந்திருக்கும் மலையாகவும் கொண்டருளி, எவ்வளவு பெருந்தன்மையையும், எவரெவர் கூறுபாட்டினையும், அவ்வவற்றிற்கு ஏற்ற தன்மைகளால் அடிமை கொண்டருளி, நாயிற்கடைப்பட்ட அடியேனை, நன்மை மலிந்த தில்லைமாநகருள், அழகுநிறைந்த அம்பலத்தின் கண்ணே வருவாயாக வென்று சொல்லி, இசைவானபடியாய் ஏழையேனை இந்நிலத்திலேயே போக்கிவிட்டு, அடியேனை இந்நிலத்தே விட்டுச் சென்ற அந்நாளில் தன்னோடு கூடச்சென்ற, தன் அருளைப் பெறுதற்குரிய அடியார்கள், தன்னோடு ஒருங்கு பொருந்த, அவரோடு இரண்டறக் கலந்தருளி, அங்ஙனம் அவனது அருளை அடைய வராதவர் தீயின்கட் பாயவும், வேட்கையுடையோர் ஆகி, கடலிலே புகுதற்கு மிக்குச் சென்று, தலைவனே! தலைவனே! என்று சொல்லி அழுது ஆரவாரித்து, திருவடியை யடைந்தவர் அதனோடு பிரிவறக் கலத்தலைப் பெறவும் பதஞ்சலி முனிவர்க்கு அருள்புரிந்த மேன்மைமிக்க கூத்தனே என்று சொல்லி, நெஞ்சம் எழுச்சி பெறும் இமயமலையின் தன்மையினை உடைய அழகிய பொன்வேய்ந்து விளங்கும் தில்லையம்பலத்திலே, திருக்கூத்தைப் பயிலும், கொவ்வைப்பழம் போன்ற சிவந்த வாயினையுடைய உமைப்பிராட்டியாருக்கும் மாகாளியம்மைக்கும் அருள்செய்த அழகிய முகத்திடத்ததான அழகுமிக்க முறுவலிப்பினையுடைய சிவபெருமான் தேவர்கள் வழுத்தும் பாட்டின் ஒலி அறாத கைலை மலைக்குச் சிறந்த உரிமையுடைய திரண்ட அடியாருடன் விளங்காநின்ற தில்லைக்கண்ணே புகுந்து இனிதாக அமர்ந்தருளினன் (விரிவை யாம் வரைந்த திருவாசக விரிவுரையிற் காண்க) உயிர்கள் என்றுமே திருவருளுடன் சேர்ந்து இணைவதில்லை. அத் தன்மையினை விரிக்கிற் பெருகும்.

தமிழ்மறையாம் திருமூல தேவ நாயனாரருளிய திருமந்திரத்தின்கண் பதி பசு பாசமென்பதின் முப்பொருளுண்மையினை அழகுற அருளியிருக்கின்றனர். தருகுதும்:

பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியி னைப்போற் பசுபாசம் அநாதி
பதியி னைச்சென் றணுகா பசுபாசம்
பதிய ணுகிற் பசுபாச நில்லாவே.

(திருமூலர் - முதல் தந். ககரு)

(பொ - ள்.) பதி பசு பாசம் எனச் சித்தாந்தப் பனுவல்கள் நுவலும்முப்பொருள்களுள், பசுவும் பாசமும் பதியினைப் போலவே தொடக்கம் இல்லாதன. ஆனால் பசுவும் பாசமும் இணைந்த நிலையின் இறைவனை அடையா. இறைவன் நெருங்கினால் அவற்றின் இணைப்பும் நில்லாது.

சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
சூரியன் தோற்றமுன் அற்ற மலங்களே.

(பொ - ள்.) சூரியகாந்தக்கல்லும் அதனைச் சூழ்ந்துள்ள பஞ்சும் போன்ற ஆன்மாவும் அதனைப் பற்றியுள்ள மலங்களும், சூரியகாந்தக்கல் தானே பஞ்சினை யெரிக்கும் தன்மையுடைய தன்று, ஞாயிற்றின் ஒளிபட்டால்தான் எரிக்கும். அதுபோல் இறைவன் அருள் தோன்றவே ஆன்மாவின் மலங்கள் அற்று ஒழியும்.

மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தானுள் நயந்தான் அறிந்தே.

(பொ - ள்.) மலங்களைப் போக்கினேமென இறைவனருளி என்னைப் புனிதமாக்கிச் சிவதத்துவ மண்டலங்களில் ஐந்தாவதான சதாசிவ உலகத்திருந்து நீங்கி, அம்பலத்தே வீற்றிருக்கும் எம்பெருமான் ஐவகை அருட்டொழில்களால் என்னுள்ளே விரும்பி முற்றறிவோடு பொருந்தினான்.

அறிவைம் புலனுட னேநான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போலக்
குறியறி விப்பான் குருபர னாமே.

(பொ - ள்.) வழியறியாது ஆழமிக்க நீர்ப்பரப்பினைப் புணையொன்றில்லாது அடைந்ததுபோல அறிவு ஐம்புலனுடன் பொருந்தி நின்றது எம்பெருஞ் சிவபெருமான் குருபரனாக வந்து வழிகூட்டச் சிற்றறிவு பேரறிவினுள் அழிந்தது. பசுஞானம் கெட்டுப் பதிஞானம் தோன்றியது.

பதைக் கடைப்பிடிக்க. கதிரொளியுங் கண்ணொளியும் ஒருங்கியைந்து பிரிப்பின்றி ஒன்றுபோல் நிற்பினுங் கதிர் கதிரே. கண் கண்ணே. அதுபோலச் சிவனறிவும் உயிரறிவும் ஒருங்கியைந்து பிரிப்பின்றி நிற்குமாயினும், சிவன் சிவனே, உயிர் உயிரே. சிவனருளிலிவ்விதமே படிந்து கிடக்குமே தவிர உயிர் அழிந்து போமாறில்லை யென்பதனை நன்கறிதல் நன்று. வேண்டுஞ் சான்றுகள் சைவசித்தாந்த சாத்திரங்களுக்குள் பொருட்செறிவுடன் நிறைந்திருக்கின்றன.

பூவுலகுவாழ் மக்களே!

புதியனவொன்றில் தம்மைப் பிணைக்கப் பெருவிருப்புடன் நம்பூவுலகின்கண் வாழ்ந்த மறைமலையடிகள் தம் உயிர் நம் பூவுலகின்கண் வாழ்ந்ததோர் தூல உடலினை விட்டுப் போயினும், மாந்தர் தம்முடல் விட்டுப்போயின் அவர்தம் உயிர் அழிவதில்லை; பிற நான்குடலுடன் கூடி வாழ்ந்து அவன் கொண்ட நன்மை தீமைகளுக்கேற்ப, பூவுலகு விட்டுப் போந்த பின்னரும் மறுமையில் அவர் தம்வினைக்கேற்ப அனுபவித்தலென்ற வொன்றுண்டு என்பதை விளக்கவே எம் மியக்குநரின் வழி, தாம் வியப்புறும் வகையில் எம்தம் இயற்குரலிலே சொற்பொழிவாற்றத் திருவருட்டுணை அளித்த எம் அம்மை அம்பலவாணரைப் போற்றுகின்றும்.

யாமாம் மறைமலை சின்னுட்களாக எம்மியக்குநர்வழித் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பொறுப்பாளையரும், சென்னையம்பதியுறை செல்வராகிய திரு. திருவரங்கனுரிளைஞராய திரு. சுப்பையா அவர்கட்கு அஞ்சல்கள் வரைவதுடன், செந்தமிழ்ச் செல்வி என்ற கழகத் திங்கள் வெளியீட்டிற்குக் கட்டுரைகளும் வரைந்துவருகின்றனம். எம் மூலகுறை, பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரும் பின்னுஞ் சிலரும் கட்டுரைகள் வரைந்துவருகின்றனர்.

நோக்காளர்களே!

இஃது ஒரு வியப்பினை யளிக்குமென்பதே. சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் தம் பழைய நூற்களை விற்கப் பயன்படுத்துமோர் புதினமோவெனக் கொளலுமியற்கையே. அவ்விதமோர் கருத்மதழின் தவறே. வேண்டும் நூற்சான்றுகளிருக்கின்றன. யாமாம் மறைமலையடிகள் நம் பூவுலகில் வாழ்ந்த காலை "இறந்தவர்களின் நிலை" என்னவென ஆய்ந்து வரைந்த நூற்களே "மரணத்திற்குப்பின் மனிதர் நிலை", "மனிதவசியம் அல்லது மனக்கவர்ச்சி" போன்றவைகளாகும். மேலுமிதனைத் தெளிகருத்துடன் விளக்கி, இறந்தவர்களுடன் தொடர்புகொள்ளும் முறையினை

எளிதிலறியும் வண்ணம் நூல் யாத்த இவண் அமர்ந்த திருஞானசம்பந்தப் பெருமானார் திருமடத்துத் திருவிருக்கை வெளியிட்டுள்ளனர். "மரணபயந் தீரும் வழி", என்ற நூலொன் றும் அண்மையில் யாத்துளார்.

உடன்பிறந்தோர்களே!

இச்சான்றுகள் எதற்காயெடுத்தறைகின்றோமெனின், இது தனியொருவர் கற்பனையன்று, கைச்சரக்கன்று, திட்டமிட்டு நிதி திரட்டக் கையாளும் கலையன்று, அடுக்கு மொழிகளால் அவை யினை ஈர்த்து, நிதி ஈட்டும் செப்பிடுவித்தையன்று, மனிதன் இப் பூவுலகில் வாழுங்கால் அவன் தன்னையறிந்து நம்மைப் படைத்த எழிலார் இறை யொன்றுண்டு; அவ்விறை எம் சிவபெருமானே யென நாடோறும் அன்னவனைப் போற்றி வழிபடலவசியம். அவனவன் செய்த நன்மை தீமைகளுக்கேற்ப அனுபவித்தலென்ற வொன்று மறுமையிலுமுண்டு என்பதனைத் தெளிவுபடுத்தவே, உலகறியச் செய்யவே எம் அம்மை அம்பலவாணனின் திருவருள் கொண்டு இயக்குநராம் இரா. ந. குற்றாலலிங்கமென்பான் வழி உரைத்தனமென்பதை அறிதற்றிறனே. அம்மை அம்பலவாண னருள் என்றுமே நின்றிலங்கி அருள்செய்ய அன்னவனைப் போற்றுவோம்.

---

## கலைக் களஞ்சியம் ஏழாந் தொகுதி

# வெளியீட்டு விழா

இவ்விழாச் சென்னைப் பல்கலைக்கழக மண்டபத்தில் 1960 சூலை 6 ஆம் நாள் கல்வி நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடந்தது. இது தமிழ் வளர்ச்சிக் கழகத் தின் தனிப்பெருந் தொண்டாகும். கழகச்செயலாளர் திரு. பெரியசாமி தூரன் வரவேற்புரையும் ஆண்டறிக்கை படித்தலும் ஆற்றினர்.

சென்னை மாநில முதலமைச்சர் திரு. கே. காமராசர் அவர்கள் கலைக் களஞ்சியத்தின் ஏழாந் தொகுதியை வெளியிட்டனர். இக் கழகம் சென்ற 13 ஆண்டுகளாகச் செய்துவரும் பணியினைப் பாராட்டினர்.

சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் நீதிபதி திரு. வி. சுப்பிரமணி யம் அவர்கள் பரிசுப் பத்திரங்களை வழங்கிப் பாராட்டினர்.

விழாத் தலைவரவர்கள் இக்கழகத்தார் கலைக் களஞ்சியத்தை வெளி யிடுவதன் வாயிலாகத் தமிழன்னைக்குச் சிறப்பான முறையில் தொண் டாற்றி வருவதைப் பாராட்டினர்.

மதுரை

# சைவசித்தாந்தப் புத்தக நிலையத்

## திறப்பு விழா

நீண்ட காலமாகச் செந்தமிழ் மொழிக்குச் சீரிய பணி செய்துவரும் 'திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக'த்தின் விற்பனை நிலையத்தை மதுரை திண்டுக்கல் சாலை 51 என்னுள்ள கட்டடத்தில் **சைவ சித்தாந்தப் புத்தக நிலையம்**" என்னும் பெயரால் 6-7-'60 புதன்கிழமை காலை 10 மணி அளவில் கழகத்தின் ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் திறந்துவைத்தார்கள். இந்த நிலையம் மதுரை திரு. மீ. சண்முகம் அவர்களின் சொந்தப் பொறுப்பிலேயே திறப்பிக்கப்பெற்றுள்ளது.

இந் நிலையத்தால் ஆண்டுள்ள மக்களுக்கும் விற்பனையாளர்கட்கும் நேரிலும் அஞ்சல் வழியாகவும் புத்தகங்கள் எளிதிற் பெறக்கூடிய வாய்ப்புக்கள் அமைந்துள்ளன. இதுபோல் சுற்றிலுள்ள மாவட்டங்களுக்கும் வாய்ப்புக்கள் அமைந்துள்ளமை சொல்லாமலே பெறப்படும். பெருமக்களை இதனைப் பயன்படுத்திக்கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிறோம்.

## வடநாட்டில் தமிழ் பயிற்றல்

தில்லி அலகாபாத் பல்கலைக் கழகங்களில் தமிழ்மொழி கற்பிக்கும் ஆராய்ச்சிக்கான பேராசிரியரை அமர்த்தச் சென்னை அரசு பண உதவி செய்துவருகிறது. மேலும் தில்லிப் பல்கலைக் கழகத்துக்கு ஆண்டொன்றுக்குப் பதினாயிரம் ரூபாவும், அலகாபாத் பல்கலைக் கழகத்துக்கு ஆண்டொன்றுக்கு நான்காயிர ரூபாவும் ஐந்தாண்டுகளுக்குத் தொடர்ந்து வழங்க முடிவுசெய்திருக்கிறது. மேலும் இந்தியாவின் மற்றைய மாநிலப் பல்கலைக் கழகமும் இம்முறையாகத் தமிழ்மொழி கற்பிப்பதன் பொருட்டுப் பணவுதவி கோரினால் கவனிக்கப்படுமெனக் கல்வியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அறிவித்துள்ளதாகத் தெரிகிறது.

இது நனிமிகப் பாராட்டி நானிலமும் எல்லையின்றி மகிழத்தக்க நல்லதோர் செய்தியாகும். தமிழன்னை தமிழகத்தில் ஆட்சி மொழியாகவும் கல்லூரியிற் கற்பிக்குமொழியாகவும் விளங்குவதோடமையாது அண்டை நாட்டவருங் கற்று அதன் சீரும் சிறப்புமோர்ந்து அதன் வாயிலாகப் பேரறிவும் பெருநலமும் பெற்றுத் திகழ்வதற்கு வழியாகவும் அமைந்து விளங்குவது சாலச் சிறந்ததேயாம்.

# பண்டைப் பிரித்தானியர் சைவ சமயத்தினரா?

[வித்துவான் மாவை-துரை. பழனி மகாதேவன், ஆம்பூர்.]

***பிரித்தனின் பண்டைய மக்கள் :***

*ஏறத்தாழப் பத்தாயிரம் ஆண்டுகட்கு முன்னமே பிரித்தானியத் தீவுகளில் வெளிநாட்டு மக்கள் குடியேறத் தொடங்கினர் என்பதற்குச் சான்றுகள் பல உள்ளன. கோமர் (Gomer) என்பான் விவிலிய நூலுட் கூறப்படும் நோவாவின் (Noah) பெயரன். அவன் உறவினர் எனக் கூறப்பெறும் சிமிரியர்களே முதன்முதலில் பிரித்தனில் குடியேறியவர்கள். அவர்கள் வட ஆப்பிரிக்காவிலிருந்து வந்தவர் எனக் கூறப்படுகின்றனர். கிறித்து பிறப்பதற்கு 2000 ஆண்டுகட்கு முன்னமேயே கிழக்கு ஐரோப்பாவிலிருந்து வேறொரு சாதியார் அங்கு வந்தனர். கி. மு. 700 இன் அண்மையில் வெவ்வேறு காலங்களில் கால்ஸ் (Gauls) என்பவர்களும், கெல்தியர்களும் (Celts) ஐரோப்பிய பெருநிலத்தைக் கடந்து, முற்கூறியவர் அயர்லாந்து, ஸ்காத்லந்து மலைப்பாங்குகளிலும், பிற்கூறியவர் இங்கிலாந்தின் கிழக்குக் கடற்கரையிலுமாகக் குடியேறினர். பின்னரே சாக்சானியர் அந்நாட்டிற்கு வந்தனர் என்ப.*

*அங்ஙனம் முதற்கண் பிரித்தனுக்கு வந்த சிமிரியர்கள், தம்மைத் "தெஃவ்ரஃபாணி" (Deffrobani) என்னும் வேனில் நாட்டிலிருந்து "உஃகாதரன்" (Hu Gadaran) என்பவன் பிரையதீன் தீவுக்கு அழைத்து வந்தனன் எனக் கூறிக்கொண்டனர்.* மக்கள் குடியேற்றத்திற்குமுன், பிரையதீன் தீவு "கிளாசு மெருதின்" (Clas Merddin) எனவும், மா ஈதன் (Aedd, the Great) மகன் பிரையதீன் அத்தீவில் தனது ஆட்சியை நிறுவிய பின்னர், அவன் பெயராலேயே அத் தீவு வழங்கியது எனவும் கூறுவர். சிமிரியர் கூறும் வரலாற்றிலிருந்து, பண்டு பிரித்தனில் உறைந்த சமயக்குருக்கண்மாராகிய துரூயித்துகள் (Druids) எந்நாட்டிலிருந்து அங்குப்போந்தனர் என ஆராய்ந்தறிய இடம் உண்டாகிறது. "தெஃவரஃபாணி" எனப்படும் நாட்டின் பெயர் தரைநூலுட் சுட்டப்படும் ஓர் இடமோ எனின், அன்று; ஆயின் அஃது இறையுணர்வு மேம்பட்டு, "பயன் கொடுக்கும் இளவேனில்"போல் நிறைந்த இறைஞானம் கொண்டு விளங்கிய நாடொன்றனையே சுட்டுவதாகும். அக்கால மாந்த*

* Saivaism—the religion of the Ancient Great Britons (1932) என்ற நூலைக் காண்க.

ருக்கு இஞ்ஞான்று போல வரையறை செய்யும் தரை நூலறிவு இருந்ததோ என ஐயம் கொள்ளுதற்கும் இடமுண்டு. அத் தெஃவ்ரஃபாணி நாடு "வேனில் நாடு" (The land of Summer) என்னும் சிறப்பு அடை சேர்த்துக் கூறப்படுதலினாலும், அந்நாடு உணர்ச்சி நிறைந்த மேலிடங்கள் (Animative High Places) கொண்டது எனக் கூறப்படுதலினாலும், அச் சிமிரியர்கள் ஆன்ம அறிவுடன் இணைந்த பட்டறிவுகொண்ட மக்கட்குழு வொன்றின் பிரிவினராதல் வேண்டும். வட ஆப்பிரிக்கா வழியாக அவர்கள் பிரித்தனுக்கும் பிரித்தானியத் தீவுகளின் வடவெல்லையாகிய எரினுக்கும்* போந்தனராகவே, ஆப்பிரிக்கப் பெருநிலத்தின் அண்மையிலிருந்த பண்டைத் தமிழகமாகிய குமரிக்கண்டம் கடல்கோள்களால் அழிவுற்றபோது தம் உயிரைப் பாதுகாத்தற் பொருட்டுப் படகுகளில் தப்பியோடிய தமிழ்மக்களின் ஒரு பிரிவினராகலாம் அச் சிமிரியர்கள் எனக் கருதுதற்கு ஐயமின்று. மேற்போந்த கருத்தை வலியுறுத்த, சாம்யூல் லெயிங் (Samuel Laing) என்பார் தமது 'மனிதன் பழைமை' (The Antiquity of Man) என்னும் நூலின்கண் கூறிய உண்மையும் ஈண்டு நோக்கத் தக்கது. "இந்தோ ஆப்பிரிக்க இணை நாட்டிலிருந்து முதன் முதல் தோன்றிய மாந்தர்கள், ஆப்பிரிக்கா, ஐரோப்பா முதலிய நாடுகளுக்குப் பரவிச்சென்றனர். ஐரோப்பிய ஆசிய நாடுகளி லிருந்து அமெரிக்காவுக்கும் சென்றனர். பண்டைய மனிதன் ஆத்திரேலியாவுக்கும் தன் நாட்டுப் பண்டை இணைப்புகளூடே நடந்து சென்றான்" எனக் கூறுகின்றார்.

மேலும் பேரறிஞர் ஹெக்கல் சந்தாத் தீவுகளிலிருந்து ஆப் பிரிக்கக் கிழக்குக் கரைவரையும் பரவியிருக்கும் பெருங்கடலில் ஒரு பெருநாடு இருந்து மறைந்தது எனவும், அது மாந்தரினத் தின் தொட்டில் எனவும் கூறு கின்றனர். சர். வால்டர் ராலே என்னும் அறிஞர் தமது "உலக வரலாற்"றின்கண் ( History of the world) "இந்தியாவே பேரூழிக்குப்பின் மக்களால் நிலை பெற்ற மக்கள் நிரம்பிய நாடாகும்," என்கின்றார்.

இன்னும் பண்டைத் தமிழ் மக்களே உலகெங்கணும் பரவிச் சென்றனர் என்ற உண்மையை நிறுவுவதற்குப் பல சான்றுகளும் உள. சர். வி. வி. ஹறந்தரால் காமச்சட்கா (Kamaschatka) என்னும் வடகிழக்கு ஆசியா முனையிலுள்ள தீவ கற்பத்திலும், இந்தியன் ஆண்டிக் வெரி பகுதி 10 இன் ஆசிரிய யரால் இத்தாலி நாட்டின் தசுகனி (Tuscany)ப் பகுதிகளிலும், J. R. A. S. என்ற ஆய்வுப் புதினத்தால் நியூசிலந் தீவிலும்

* Erin.

தமிழின் சிதைந்த மொழிகள் இன்றுகாறும் பேசப்படுகின்றன என்று அறிகின்றோம்.

1912 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் வெளியாகிய 'சித்தாந்த தீபிகை'யில் ஓர் அறிஞர் தம் கட்டுரையொன்றில் இலண்டன் நகர சென்ற் பால் கோயிலில் பல சிவலிங்கங்களைக் கண்டதாகக் கூறுகின்றார்.

சர் உவில்லியம் சோண்சு என்பார் பண்டைத் தமிழ்ச் சமயத்தவர்க்கும், கெல்திய சமயத்தவர்க்கும் இடையே ஒரு படித்தான சமயக் கோட்பாடுகளும், முறைகளும் நிலவி வந்தன என்றும், ஈரினத்தவரும் ஓரினத்தைச் சார்ந்தோரே எனவும் உலகச் சுற்றுச்சூழற்கேற்பத் தம் கொள்கையை மாற்றிக் கொள்ளா உயர்உளம் கொள் மாந்தர்கள் எனவும் அவர்களைக் குறித்து ஆய்ந்து எழுதியுள்ளார்.*

இன்றும் இங்கிலாந்தில் வில்ட்சையரில் உள்ள ஸ்டோன் ஹென்ச், ஆவ்பரி, சிப்பிங் நார்ட்டன், கெஸ்விக் ஆகிய இடங்களில் பெரிய வட்டக் கற்கள் (சிவலிங்க ஆவுடையார்கள்?) காணப்படுகின்றன. அவை துரூயித்துகளின் சமயச் சின்னங்களாக இன்றும் மதிக்கப்படுகின்றன. பண்டைத் துரூயித்துகள் பாம்பு வணக்கம் செய்தனர் என்பதற்குச் சான்றுகள் கிடைக்கின்றன.

## பெருவிழாச் சிறப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் ஸ்ரீஞானம்பிகா சமேத ஸ்ரீஞானபுரீசுவர சுவாமி கோயில் மகோற்சவம் 7-5-'60 முதல் 17-5-'60 முடிய ஆதீன முதல்வரின் அருளுளப் பாங்கின்படி சொல்லொணாச் சிறப்புடன் நிகழ்ந்தது உணர்ந்து பெரிதும் இன்புறுகின்றோம். பெருவிழா நிகழ்ச்சியின் பெறுபேறாக ஒவ்வொரு நாளும் இயல், இசை, நாடக வல்லார் தம் நுண்மாண் நுழைபுலச் சீரால் மெய்யன்பர்களுக்கு அளித்த தமிழமிழ்தால் சைவமுந் தமிழும் ஞாலமெல்லாம் பரவித் தழைந்தோங்குமென்பதுறுதி. மகாசந்நிதானம் நீடு வாழவும் திருவருளை வேண்டி வழுத்துகின்றோம்.

* ............There were strong similarities in the ancient religious systems of the Hindu and Celtic nations and that both are of one type, viz dreamy type of people who fail to adopt themselves to the practical affairs of life. —Sir W. Jones.

யால் ஏற்படும் இன்ப வுணர்ச்சி நிலையானதொன்றன்று. எனினும், பரிவும் அன்பும் கலப்பதனால் அவ்வுணர்ச்சி மாறுபடாது ஓரிடத்தேயே நிலைபெறுகிறது. தேர்ந்தெடுத்த ஆடவன் மீது அன்பும் பரிவும் உடையவளாகின்றாள் பெண். காதலுணர்ச்சி முதலில் மகளிடத்திலேயே தோன்றி வளர்வதாயிற்று. இவ்வாறு ஒருவனுக்கு ஒருத்தி, ஒருத்திக்கு ஒருவன் என்ற கொள்கை நாளடைவில் வளரலாயிற்று.

**மிகப் பண்டைய மகளிர் நிலை:**

ஒரு தாய் வட்டத்திலுள்ள ஒரு பெண் பிறிதொரு தாய் வட்டத்திலுள்ள ஆடவனைச் சேர்ந்து புதல்வரைப் பெற்றாள். பெண் தன் தாய் வட்டத்திலேயே வாழ்ந்தாள். கணவன் தன் தாய் வட்டத்திற்குப் பிரிந்து சென்று வாழ்ந்தான். அப் புதல்வர்கள் தம் தந்தையரை அறியார். தந்தையர்க்கும் புதல்வர்களுக்கும் எவ்விதத் தொடர்பும் உண்டாகவில்லை. ஆணுக்கும் பெண்ணுக்கும் கணவன் மனைவிக்குரிய கடமைகளும் தோன்றவில்லை. பின்னர், மகளிர் தாம் விரும்பிய பலரைக் கணவர்களாகக் கொள்ளும் வழக்கம் எழுந்தது. இலங்கை, மடகாஸ்கர், அரேபியா முதலிய நாடுகளில் இவ்வழக்கம் இருந்தது. நம் நாட்டுத் தொதவர்களிடத்தும், நாயர்களிடத்தும் இவ்வழக்கம் இருந்தது. இத்தகைய வாழ்க்கை உலக முழுமையிலும் உண்டு. அக்காலத்தில் ஆடவர் மகளிரது சொத்தாக விளங்கினர். வியபிசாரம் (போற்றா ஒழுக்கம்) என்ற சொல்லே அக்காலத்துக் கிடையாது. (Mother Rights in India—Polyandry)

தேனீக்களின் வாழ்க்கை போன்றதே அக்கால மக்களின் வாழ்வு. ஆண்கள் வேட்டையாடுவோராக அலைந்து திரிந்தனர். பெண்கள் ஓரிடத்தில் தங்கி வாழ்ந்தனர்; ஆதலின் குடும்பத் தலைவியர்களாக விளங்கினர். தாய்க்குப்பின் மகள் அதிகாரமுடையவளானாள். பெண்களே உணவுப்பொருள்களைப் பயிரிட்டனர். ஆதலின், பெண்கள் ஆடவரினும் கண்ணியம் உடையவராகவே வாழ்ந்தனர். அதனால் முதலில் தாய் வழிபாடே உண்டாயிற்று. தாய் கன்னித் தெய்வமாக வழிபடப்பட்டாள். அங்ஙனம் வழிபட்டது கலியாணம் என்ற சடங்கு இல்லாது அவர்கள் வாழ்ந்தமையினால் போலும். அக் காலத்துப் பெண்கள், ஆடவர்போல் போர் செய்யும் திறனுடையவர்களாக வாழ்ந்தனர். பெண் பயிர்த்தொழிலை வளர்த்தாள்; புதல்வர்களுக்குக் கல்வி கற்பித்தாள்; சமூகத்தைத் திருத்தினாள். மூர்க்கமும் முரட்டுத்தனமும் உடைய ஆடவரை அழிக்கும் செயலிலிருந்து ஆக்கும் செயலிலீடுபடும்படி திருப்பியவர்கள் இயல்பி

லேயே மென்மைக்குணமுடைய மகளிரே ஆவர். (Life - outlines of general Biology).

பின்னர், அங்குமிங்கும் அலைந்து வேட்டையாடுவோராக இருந்த ஆடவர் உழவுத்தொழிலில் ஈடுபட்டனர்; ஓரிடத்துத் தங்குவோராயினர். பெண்கள் மேற்கொண்டிருந்த தொழிலை ஆடவர் மேற்கொண்டனர். பெண்கள் வேலையற்றவர்களாக வீட்டில் தங்கினர். பொருள் வருவாயின்மையினால் ஆடவர்களை எதிர்பார்ப்போராயினர். ஒருவன், தன்னால் காதலிக்கப்பட்ட பெண்ணோடு வேறொருவன் நட்புக் கொள்வதை விரும்பவில்லை. ஆதலின், மகளிர் தம் கணவரையன்றிப் பிற ஆடவரோடு நட்புக் கொள்ளா வண்ணம் தடுக்க அவர்களை வீட்டிலேயே இருக்கும்படி திட்டமிட்டனர். இந்நிலையே நாளடைவில் உறுதியடையவதாயிற்று. இன்றைய நிலை இந்நிலையே. திருமணச்சடங்கு ஏற்பட்டதன் காரணமும் இதுவேயாம்.

**நாகரிகத்தின் முதற்படி :**

திருமணம் என்பது ஆடவரும் மகளிரும் காதல் வாழ்க்கையிலீடுபட்டு, நல்லறநெறியில் ஒழுகுவான் வேண்டிச் சமூகத்தவர்களால் விதிக்கப்பட்ட வழக்கங்களுக்கேற்ப ஓர் ஆடவன் ஒரு பெண்ணைக் காமம், பொருளாதாரம் காரணமாகக் கொள்ளும் செயல் நிகழ்ச்சியேயாகும். மக்களது உள்ளமும், சமூக வியலும் தொடர்புறுதற்கு இக்காம உணர்ச்சியே காரணம் என்பது தெற்றெனப் புலனும். திருமணம் செய்துகொள்வதன் முன் மகளிர் தாம் விரும்பியவாறு காம இன்பம் துய்க்கலாம் என்ற கொள்கை மிகுந்த காலம் உலோகாயத மதம் சிறந்து விளங்கிய காலம். 'ஆடவரும் மகளிரும் உண்டு, உடுத்துக், களித்து உறங்கி வாழ்கின்றது தான் சிறந்தது; வயிற்றுப்பசியோடு காமப்பசியையும் போக்குவதுதான் தம்தொழில்' எனக் கருதிய காலம் அது. அங்ஙனம், ஈடுபடும் ஆடவரும் மகளிரும் இணைபிரியாது வாழவேண்டுமென்றோ, புதல்வர்களைப் பெற்று மகிழ வேண்டுமென்றோ எண்ணாத காலம் அது. இத்தகைய வாழ்க்கையைச் சமூகம் விரும்பவில்லை. ஆதலின், திருமணம் கொள்வதன்முன் மகளிர் இணைவிழைச்சுக் கொள்ளுதல் ஆகாது எனச் சமூகக் கட்டுப்பாடு எழுந்தது. ஆதலின் திருமணம் கொள்வதன்முன் அந்நிகழ்ச்சி தொடர்ந்து நிகழாது அருகிய நிலையில் நிகழ்ந்தது. அந்நிலையினும் ஒறுத்தலுக்கு ஆளாக வேண்டியிருப்பதால் மணமாகும் வரையில் இணைவிழைச்சினை விலக்கி இருக்க வேண்டிய நிலை உறுதிப்படலாயிற்று. மகளிர் தமக்குக் காம எழுச்சி உண்டானபோதெல்லாம் 'யாவராயினும்

மணம் கொள்வதற்குமுன் ஒருவரை யொருவர் காணுதிருந்து திருமணத்தின் போதுதான் காண்பது என்ற நிலை எழுந்தது. மகளிர் பூப்பெய்தியபின் திருமணம் நிகழும்வரை இற்செறிக்கப் படுகிற வழக்கம் இக்காரணத்தால் எழுந்ததாம். களவொழுக்கத்தி லீடுபட்ட மகளிர் பாங்கியின் துணையை நாடினும், தாம் நினைத்த படி நிகழவேண்டும் என்னும் எண்ணம் மிகுவதனுல் மாந்திரீகருடைய உதவியை நாடும் வழக்கமும் மிகுந்தது. பேய், பிசாசு முதலிய பல கணங்களை நாடும்முறை இருப் பினும் அவற்றுள்ளும் சிறந்தனவற்றைத் தேர்ந்துகொள்ளும் நெறி இக்காலத்தே ஏற்பட்டது.

திருமணம் கொள்வதன்முன் மகளிர் கன்னிமை யழியப் பெருதவர்களாய் இருத்தல் வேண்டும் என்பது சமூகக் கட்டுப் பாடாக ஆனபிறகு, 'தனக்கு உறுதுணையாவர்' எனக் கண்டு அவரையே நாடும் வழக்கம் ஒவ்வொருவருக்கும் உரியதாயிற்று. தன்னுடன் இருப்போர் யாவரும் தனக்குத் துணையாக முடியும் என நம்புதலியலாது என்னும் எண்ணம் வலுத்தது. எனவே இக்காலத்து மாந்திரீகம் வளர்ச்சியடையத் தொடங்கிற்று. திருமணத்துக் குரியவளாகிய பெண் கன்னிமையழியப் பெற்ருள் எனத் திருமண நிகழ்ச்சியின்போது தெரியவரின், அவளுக்கும் அவளது பெற்ரேர்களுக்கும் ஒறுத்தலும் அவமானமும் உண்டாம். ஆதலின் அத்தகைய பழியும் இழிவும் நேராவண்ணம் தங்களைக் காக்கவேண்டும் எனக் கடவுளை வணங்கி வழிபடும் நிலை மிக்கது. ஆகையால், மக்கள் தாம் வாழும் இடங்களில் எல்லாம் கடவுளருக்கெனக் கோயில் அமைக்கும் வழக்கமும் மிக்கது. திருமணத்தின்முன் கன்னிமை யழியப்பெருத மகளிரை ஆடவர் மனைவியாகப்பெற்று வாழ்ந்தகாலம் பிறரொடு ஒப்புரவு கொண்டு வாழும் காலமாக விளங்கியது. ஒப்புரவு எனின் பிறருக்கு உபகாரியாந் தன்மையாம். இங்ஙனம் படிப்படியாக நாகரீகத்திலும் பண்பாட்டிலும் முன்னேறுகின்ற காலத்து மக்கள் உலோகாயதத்தினின்றும் சிறிது சிறிதாக மாறி, தமக்குப் புலனுகா ஆற்றல் ஒன்று உண்டு என உணர்ந்து கடவுளை நம்பி வாழத் தொடங்கினர். அவர்கள் வாழ்க்கை தழைத்தது.

மகளிர் திருமணம் நிகழாமுன் கன்னிமை யழியப்பெறின் அவர்தம் பெற்ரேர் அவர்களை வீட்டில் சேர்க்காது விலக்கினர். பின்னர், அவர்களது பெற்ரேர் அச்செயலுக்காக அவளுக்கென நிச்சயிக்கப்பட்ட ஆடவனையும் அவனைச் சார்ந்தாரையும் அணுகிப் பிறர் அறிய மன்னிப்புக் கேட்டுக்கொள்வதும் உண்டு. ஊரவர் அக்குற்றம் வீண் பழிப்புக்கிடமானது எனக்கருதுவராயின் அவளை அவ்வாடவன் ஏற்றுக்கொள்வதும் உண்டு.

**ஒருவனுக்கு ஒருத்தி**

'மகளிர் தம் கணவரோடன்றிப் பிறரொடு இணை விழைச்சுக் கொள்வது கூடாது,' என்னும் கட்டுப்பாடு தோன்றி வளர்ந்தது. அவ்வடிப்படையில் பல மனைவியரைக் கொள்ளும் வழக்கமுடைய மரபு தன் பண்பாட்டினை நிலைநிறுத்தும்; ஆனால், அதனை வளரும்படி செய்யாது, அம்மரபு புதுப்புதுக் கொள்கைகளை ஏற்றுக் கொள்ளும் ஆற்றலற்றது ஆகும். சமூகத்தில் ஒப்புரவோடு வாழ வேண்டும் என எண்ணுகின்ற மரபினரில் ஒன்றிய அன்பொடு இணைவிழைச்சுக் கொள்ளும் ஆடவரைவிட மகளிருக்குத்தான் இக்கட்டுப்பாடு மிகமிக இன்றியமையாததாகும். இந்நிலையில் ஒருவனைப் பல மகளிர் மணப்பின் அம்மகளிர்பால் கரு அமைவது அரிதாம். அவ்வாடவன் பலரை மகிழ்விக்கவேண்டியிருப்பது அதன் காரணமாம். கணவனது அன்பைத் தாம் விரும்பியவாறு பெறமுடியாதவர்கள் அம்மகளிர்கள். ஆதலின், அவர்கள் தம் உயிருள்ளளவும் தம் கணவரைவிட்டு விலகலாகாது என்ற நிலை எழுந்தது. ஒருவரைவிட்டு ஒருவர் விலகாது வாழ்கின்ற காதலர் நிறைந்த சமூகந்தான் ஒப்புரவு கொண்டு வாழும் ஆற்றலையுடையதாகும்; அறநெறியில் வழுவாது பண்பாட்டொடு வாழும் பகுத்தறிவுடையவர்கள் நிறைந்த சமூகமாக விளங்கும்.

இத்தகைய ஏகதார மணம் வழக்கிலுள்ள நாட்டில்தான் அரசியல் நன்னிலையில் அமையும். எச் சமூகமும் முதலில் தமக்கென ஒரு தலைவனையுடையதாகத்தான் திகழுகிறது. ஆனால், நாளடைவில் அந்நிலை மாறுகிறது. அம் மாறுதலுக்குக் காரணம், அந்நாட்டு ஆளுங்கணத்தார்களிலோ குடிகளிடத்தோ கணவன் மனைவியர்க்குள் ஒன்றிய அன்பொடு கூடிய காமப் புணர்ச்சியால் ஏற்படும் மாறுதல்களே என்பர் மக்கள் உயிரின ஆராய்ச்சியாளர்கள். நாட்டில் முடியாட்சிமுறை நிலவுதற்குரிய காரணங்கள் இரண்டு. அவை (1) ஆளும் கணத்தாரின் ஆற்றலும், (2) அந்நாட்டு மக்களின் காம ஒழுக்கமும் ஆம். இவை காரணமாதலை ஆட்சி முறையில் அவ்வப்பொழுது நிகழும் மாறுபாடுகளை அவ்வக்கால நிலைநோக்கியுணர்க. குடியரசுக்கொள்கை நிலவி வருதலை இன்று காண்க. ஒரு சிறு கூட்டத்தார் மற்றவர்களைவிட மிக ஆற்றலுடையவராக விளங்கின் அந்நாட்டில் சர்வாதிகாரமுறை ஏற்படும். கடவுளைப்பற்றிய மெய்ம்மையை (அத்வைத நிலையை) உணர்ந்த சமூகம் 'மகளிர் தாம் கொண்ட கணவரை விட்டு விலகலாகாது'' என்ற கொள்கையை யுடையதாகும். ஆதலின் திருமணம் கொள்வதன்முன் மகளிர் கன்னிமை யழியாதவராயிருத்தல் வேண்டும் என்ற கட்டுப்பாடு வலுத்தது.

இக் கட்டுப்பாடு அக்கால அரசமரபினரிடையில் மிகுந்திருந்தது. வியபிசாரம் ஒடுக்கப்பட்டது. மகளிர் வியபிசார

நெடுவாக்கியத்தைப் பலவேறு தனிச் சிறுவாக்கியங்களாய்த் துணிப்பது அரிதான செயலன்று; எச்சவினைகளை முற்றுவினைகளாக மாற்றினால், பொருளினிது புலப்படுவதோடு, பலப்பல குறுவாக்கியங்கள் தெற்றெனப் பிரிந்து வேறாக வரும். அவ்வண்ணஞ் செய்யாமல், நிறுத்தவேண்டிய இடமறிந்து நிறுத்திப், பொருத்தமான முறைதெரிந்து படித்தால், நெடுவாக்கியங்கள் அனைத்தும் பொருள் எளிது விளக்கி நிற்றல் காணலாம். அதுவேயும் அன்றித், தமிழ் வரைவாளர் சிலர், இன்னுஞ் சிறிது பொறுமையோடிருந்து அடிகளின் நூல்களைப் பயில முற்படுவார்களானால், அவர்கட்கு ... ச்சுத் திணறாது.

குளத்து நீருள் மூழ்கிச் செல்லும் ஒருவன், அதில் பயிற்சியும் தேர்ச்சியும் நிரம்பப்பெறாத நிலையில் மூச்சுத் திணறித் துன்புறுதல் அனைவரும் அறிந்த உண்மையாகும். ஆனால், அவன் அத்துறையில் பன்முறை வருந்தி முயன்று பயிற்சி பெற்று வருவானானால், நீண்ட தூரம் நீருள் முழுகிச் செல்லும் திறமையை எளிதில் எய்துவான்; நெடுநேரம் நீண்ட தூரம் நீருள் மூழ்கிச் சென்று வந்தாலும் மூச்சுத் திணறுகிறது என்று சொல்லமாட்டான்.

தமிழ் எழுத்தாளரும், மறைமலையடிகளின் தமிழ் நடையில் வருஞ் சொற்றொடர் நீட்சியில் இன்னுஞ் சிறிது ஈடுபாடெய்திப் பயில்வார்களாயின், அன்னார் மூச்சுத் திணறுகின்றதென்று கூச்சமின்றிக் கூட்டத்தில் கூறமாட்டார். இது தமிழ்தானா? என்ற வினாவை விளம்பமாட்டார்.

இன்னும் நெடுவாக்கியங்களை வழுவற எழுதுதலும் ஒரு தனி ஆற்றலாகும் என்றும்; அவ்வாறு எழுதினாலும் கருதும் பொருளை மருளற விளங்க வைத்தல் வித்தகர்க்கல்லால் மற்றவர்க்கு அரிதாகும் என்றும் எழுத்தாளர் உணரப் பெறுவாரானால் அடிகளின் நடையை எளிதாகக் குறைகூறமாட்டார். மாறாக, அதனைத் திரும்பத் திரும்ப விரும்பிப் பயில முயல்வார். கருத்தினிமையை மட்டுமேயன்றிச் சொல்லழகையும் உணர்ந்தின்புற விரும்புவார். அந்நிலையில் இது தமிழ்தானா? என்ற வினாவை எழுப்பமாட்டார். இதுதான் தமிழ்! என்ற கருத்தைக் கற்றோர் அவை நடுவே விளம்புவார்.

"மறைமலையடிகளின் நடையோ, பண்டிதர் சொல்லாட்சித் தளைகளிலிருந்து விடுபட்டதாகத் தெரியவில்லை. எங்கே வடமொழிச் சொல் புகுந்துவிடுமோ என்ற அச்சத்தோடு எழுதுகின்ற காரணத்தால், இயற்கையான ஓட்டத்தைக் காணாது" என்று தெரிவிக்கின்றார், வரைவாளர்,

கற்றறிந்தார்க்கு எழுதும் உரைநடை, கடுநடையிலிருந்தால் பாராட்டப்படுமே யன்றிப் பகடி செய்யப்படாது. ஆனால், பண்டிதர் சொல்லாட்சித்தளை என்பது, இரட்டுறலும் கவர்படு பொருள் மொழியும் உரைநடையில் அமைந்திருத்தல்தான்; அருகிய வழக்கும் கருகிய கருத்தும் அமைந்த முறுகிய கடுஞ்சொல்லை அடுக்கித் தொடுத்தல்தான்; பிறர்க்குத் தெரியாத மரூஉ, இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி, சொற்குறுக்கம் முதலியவற்றைத் தழுவி எழுதுதல்தான்.

ஈதிங்ஙனமாக, இலக்கண வழுவின்றி உயர்ந்த சொற்களாலும் சொற்றொடர்களாலும் விளங்குகின்ற மறைமலையடிகளின் உரைநடை, பண்டிதர் சொல்லாட்சித் தளையிலிருந்து விடுபட்டதாகத் தெரியவில்லை என்ற கண்டனம் அறிவுடைப் புலவர்முன் செல்லாது. சங்கநாளில் பெருகிய வழக்காயிருந்த சொல்சொற்றொடர்களையும், பொள்ளெனப் பொருள் புலப்படுக்குந் தொடர்களையும், மென்பதப்பட்ட இன்மொழிகளையும், தேன் ஒழுகினாற்போலத் தெரிவிக்கும் சொல்லாட்சிப் போக்கே மறைமலையடிகளின் நடையில் யாங்கணும் காண்கின்றோம்.

“தமிழ்ச் சொற்கள் திரிபடையாமலும், அயன்மொழிச் சொற்கள் விரவுதலால் தன் சொற்கள் இறந்துபடாமலும் வழங்கி வருதலாலன்றோ, இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழ்மொழியில் எழுதப்பட்ட நூல்களை நாம் இன்றைக்கும் எளிதிலே கற்றறியப் பெறுகின்றோம்”. எனவே, “பொல்லாத வடசொற்கள்” என்று தெரிதமிழ்ப்புலவர் பரிதிமாற் கலைஞரால் எள்ளி நகையாடப்பட்டவை, தம் நடையில் பெரும்பாலும் கலவாமல் இருக்க அஞ்சினார், மறைமலையடிகள். அஃது எற்றால் எனின், “அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்” என்றார் வள்ளுவர் 9ின் என்பது.

## கொட்டடா முரசு!

கொட்டடா கொற்றவனே, கோதிலாத் தென்றமிழை
எட்டுணையே னுங்கொன்றித் தென்னகத்தே—திட்டமதாய்
வல்லதோ ராட்சியொடு வாழும்வண்மை யிந்திக்(கு)
இல்லையிங் கென்றே முரசு!

# *மலைக்கண் பிறந்த மணி

[திரு. ஆதி முருகவேள்]
(தமிழ் விரிவுரையாளர் ஹா. க. ரா. ஹ கல்லூரி, உத்தமபாளையம்)

கவலல் மகளே கவலல் மகளே
கணவனிற் செல்லக் கவலல் மகளே
ஞாயு நுந்தையு மீன்றன ரன்றித்
தோயுநின் னுரிமை துணைவற் கன்றே
பெருமலைப் பிறந்த பிறங்குமணி தோன்றிய
அருவரை நீங்கி யணிபவர்க்
குரிய தென்ப துலகுணர்ந் ததுவே.

## †குரீஇ யொலியும் குணக்கெழு கதிரும்

தண்ணறும் பொழிலின் ஒண்குரீஇப் பல்லினம்
ஒருங்குடன் குழீஇ யிரீஇஇ யென்னும்
ஆரொலி கேட்டேம் ஆங்குள மியைந்து
நின்றே மாக நின்ற காலை
முறைமையிற் போந்த மூதறி வன்பர்
நிறையிருள் சீத்த நெடியோன் போன்றே
உலகிருள் நீக்கும் ஒள்ளியோன் குணக்கின்
எழுந்தனன் ஆங்கே யிருஞ்சுடர்க் கதிரிற்
புன்முதற் பலவும் பொலிவுற
மன்னினன் என்னே மாண்புடை நலமே.

* மணவினை முற்றி மணமகனொடும் அவனில்லஞ் செல்லாநின்ற மணமகள் கவன்று நின்றாளைக் கருதிப் பாடியது.

† நண்பரொடும் காலையில் வெளிச் சென்றவிடத்துக் கேட்டுக் கண்டு பாடியது.

# சிலம்பிலே செங்குட்டுவன்

[திரு. மது. ச. விமலானந்தம், எம்.ஏ.,]

முன்னுரை :

கற்பின் செல்வி கண்ணகியை ஏற்றிப் போற்ற முனைந்தனர் இருவர். இருவரிலே ஒருவர் கவிமன்னர்; இன்னொருவர் புவி மன்னர். காற்சிலம்பு காரணமாகவே கண்ணகி கதை நடந்தது. அக் காற்சிலம்பு காரணமாக ஒரு நூற்சிலம்பைக் கண்டு சொற் கோயில் கட்டினார் சேரநாடு தந்த செந்தமிழ்ச் செல்வர்—இளங் கோவடிகள். மற்றொருவரோ காற்சிலம்பு காரணமாக ஒரு கற்கோயிலையே கட்டி முடித்தார்; அவரே சேரநாடு தந்த செம்மல்—சேரன் செங்குட்டுவன். ஒருவர் ஏட்டிலே தீட்டினார்; இன்னொருவர் கல்லிலே நாட்டினார்.

இரண்டுமே ஈடு இணையற்ற இனிய தொண்டுதான். ஆனால் காலவெள்ளத்தில் கற்கோயில் சென்றது; சொற்கோயில் நின் றது. எனினும் சொற்கோயிலாம் சிலம்பை யாத்த இளங்கோ வடிகட்கு எத்துணைச் சிறப்பும் பெருமையும் உண்டோ அத் துணைச் சீரும் சிறப்பும் உண்டு கற்கோயில் கட்டிய காவல னுக்கும். இலக்கியம் யாத்த இளங்கோவே இவன் புகழ் பாடுகின்றார். எனின் இவனது பண்பையும் பெருஞ் சிறப்பையும் என்னென்பது? இளங்கோவின் எண்ணமே மூவேந்தர் சீர்மை யும், முந்நாட்டின் நீர்மையும் முழக்குவதன்றோ? அம்முறை யிலேதான் புகார்க் காண்டத்தில் சோழன் கரிகாலனையும் சோணாட்டையும் புகழ்ந்து, மதுரைக்காண்டத்தில் பாண்டி நாட் டையும் பாண்டியன் நெடுஞ்செழியனையும் பாராட்டியவர் சேர நாட்டையும் சேரனையும் புகழவேண்டுமன்றோ? அம்முறையிலே தான் வஞ்சிக்காண்டத்தை அமைத்து அதில் வஞ்சியானை நெஞ்சாரப் போற்றுகின்றார்—புகழ்கின்றார்.

## காப்பியத்திலே குட்டுவன்

சேரன் செங்குட்டுவன் என்றதும் சேரன் செங்குட்டுவன் என்று ஒருவன் இருந்தானா? அவன் இளவல்தான் இளங்கோவா? சேரன் செங்குட்டுவன் காலத்தில்தான் கண்ணகி கதை நடந்ததா? உண்மையா? என்பனபோன்ற அறிவியல் ஆராய்ச்சியன்று இவண் பேசப்படுவது; இளங்கோ காட்டும் வஞ்சிக்காவலன் பற்றிய விளக்கமே ஈண்டு பேசப்படுவது. பாவலன் படைத் துள்ள காவலனைக் காணுங்காலைத் தலையாய பண்பினன் என்றே

எண்ணத் தோன்றுகிறது. அந்த முறையில் செங்குட்டுவன் ஆற்றல் மட்டும் அமைந்தவனாகத் தீட்டப்படவில்லை; ஆற்றலொடு அமைதியும், அன்போடு அருளுணர்வும், அறிவோடு ஆன்றவிந் தடங்கிய கொள்கையும், பதவியோடு பண்பும், மறத்தொடு அறவுணர்வும், இறைப்பற்றோடு இனிய தமிழ்ப்பற்றும், உறவோடு உரிமையும், பாராட்டும் பெற்றியோடு பழிநாணும் உள்ளமும் பெரியோர் துணைநாடும் பான்மையோடு, பெண்மை போற்றும் பெற்றியும், சமயப் பற்றோடு சமயப் பொதுநோக்கும் கொண்ட பலவாய பெருங்குணங்கள் ஒருங்கமைந்த உயர்பண்பினனாகக் காணப்படுகின்றான். இன்னணம் வைரம் பலவாய கோணங்களி னின்றும் பலதிறப்பட்ட ஒளிகளை வீசுதல்போன்று பண்பு பல ஒருங்கு பெற்ற இச்செங்குட்டுவன் சிறப்பைச் சிறிது காண்பாம்.

இவன் காப்பியத்தில் தோன்றி மறையும் இடங்கள் முறையே காட்சிக் காதையும் (௩-ஆம் அடி), வரந்தரு காதையும் (௯௦ ஆம் அடி) ஆகும். இதற்கிடையில் இவன் பேசுமிடங்கள் ஒன்பது. இவனை ஏற்றிப் போற்றுவோர் மாடலமறையோன், வில்லவன் கோதை, அழும்பில்வேள், குன்றக்குறவர், வஞ்சிமகளிர் முதலியோராவர்.

மஞ்சுசூழ்சோலை மலைவளம் காண்குவமென்று பைந்தொடி ஆயமோடு பரந்தொருங்கீண்டி இளங்கோ, வேண்மாள் இருவரொடும் விளங்கு இலவந்தி வெள்ளிமாடத்து வீற்றிருக்கின்றான் வானவர் தோன்றலாம் வாய்வாட்கோதை. அதுபோது குன்றக் குறவர் தாங்கள் கண்ட திறத்தைக் காவலனுக்கு,

" ஏழ்பிறப் படியேம் வாழ்கநின் கொற்றம்
கான வேங்கைக் கீழோர் காரிகை
தான்முலை இழந்து தனித்துயர் எய்தி
வானவர் போற்ற மன்னொடும் கூடி
வானவர் போற்ற வானகம் பெற்றனள்.
எந்நாட் டாள்கொல்! யார்மகள் கொல்லோ!
நின்னாட்டி யாங்கள் நினைப்பினும் அறியேம்
பன்னூ றாயிரத்து ஆண்டு வாழியரென "
(காட்சிக்காதை, ௫௬ - ௬௩)

கூறுகின்றனர். மண்களி நெடுவேல் மன்னவன் முற்றும் உணரா நிலைகண்ட அவணிருந்த தண்டமிழாசான் சாத்தன் ஒண்தொடி மாதர்க்கு உற்றதை யெல்லாம் திண்திறல் வேந்தர்க்குச் செப்புகின்றான். செவிமடுத்த சேரன் சிந்தை நொந்து நெஞ்சம் நெகிழ்கின்றான். பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டுமென அரசி கூறவே, பத்தினிப்பெண் சிலை சமைக்க இமயத்தினின்றும் கற்கொள்ள உள்ளம் கொள்கின்றான். இதனை இகல் யானை எருத்

தத்து ஏற்றி அணிநகர் மருங்கே அறைபறை அறிவிக்கின்றனர் கரும வினைஞரும் கணக்கியல் வினைஞரும்.

'வாழ்க எங்கோ மன்னவர் பெருந்தகை ஊழிதோறூழி உலகங்காக்க' என வாழ்த்த, வாளும் குடையும் வடதிசை பெயர்க்கின்றனர். உற்றூர் மகிழ ஊரார் ஏத்த வினைமேற் செல்கின்றான் வேந்தன். படை பல வந்தபோதும் தடைபல நேர்ந்தபோதும் திடமுடன் நின்று வென்று வினைமுடித்துப் பொற்கோட்டு இமயத்துப் பொருவறு பத்தினிக் கற்கால் கொள்கின்றான் காவலன்.

கடவுட் பத்தினிக்குக் கற்கால் கொண்டபின் கங்கைப் பேர் யாற்றங் கரையகம் புகுந்து பாற்படு மரபின் பத்தினிக் கடவுளை நூற்றிறன் மாக்கள் துணைகொண்டு நீர்ப்படை செய்கின்றான். பின்னர் காவா நாவிற் கனக விசயர்தம் கதிர்முடித்தலை ஏற்றிக் கல்லைக் கொணர்கின்றான். நடுகல் விழா நடத்துவான் வேண்டிப் பன்னாட்டு மன்னரையும் அழைத்து விழாக் கொண்டாடி வேள்வி பல செய்து கடவுள் மங்கலம் செய்கின்றான் சேரன். வானவன் விழாக்கண்ட வஞ்சி மகளிர் வாழ்த்துகின்றனர். தெய்வமுற்ற தேவந்தி வாழ்த்தி வரந்தர, வேள்விச்சாலை நோக்கி வேந்தன் போந்தனன். இதுவே வஞ்சிக்காவலன் காப்பியத்தில் பெரும் பகுதியும் தகுதியும் ஆகும்.

இதுகாறும் காப்பியத்தில் குட்டுவனைக் கண்டோம்; இனிக் குணநலம் காண்போம் :

**குணம் நாடும் கொள்கையன்**

பாண்டியன் பழியினைச் சுட்டாது குறைகூறும் பழியஞ்சி அவனைப் பாராட்டுகின்றான் குட்டுவன். பாண்டியன் பழியைச் சாத்தனாரும் காண்கிறார். செங்குட்டுவனும் காண்கிறான். ஆனால் இருவர் காணும் நோக்கிலும் போக்கிலும்தான் எத்துணை வேறுபாடு! சாத்தனார்,

> **"கொற்ற வேந்தன் கொடுங்கோல் தன்மை**
> **இற்றெனக் காட்டி இறைக்குஉரைப் பனள்போல்**
> **தன்னாட்டு ஆங்கண் தனிமையிற் செல்லாள்**
> **நின்னாட்டு அகவயின் அடைந்தனள் நங்கை."**
> (காட்சிக்காதை, அஎ - கo)

என நவில்கின்றார். ஆனால் செங்குட்டுவனோ சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு பாண்டியனைத் தூற்றியிருக்கலாம். அப்படிச் செய்தானில்லை ; தூற்றுதற்குப் பதிலாகப் போற்றுகின்றான். தென்னர் கோமான் தன் தீத்திறம் கேட்ட மன்னர் கோமான் :

"எம்மோர் அன்ன வேந்தர்கு உற்ற
செம்மையின் இகந்தசொற் செவிப்புலம் படாமுன்
உயிர்பதிப் பெயர்த்தமை உறுக ஈங்கென
வல்வினை வளைத்த கோலை மன்னவன்
செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோ லாக்கியது."

௬௫ - ௬௯)

என வருந்திக் கூறுகின்றான். செங்குட்டுவனது பழிகண்டவிடத்தும் நல்லது நாடி நலம் பாராட்டும் நேர்மையை எண்ண எண்ண இனிக்கிறது, அவனது அருளுணர்வும் புலப்படுகின்றது. தம்மையொத்த வேந்தர்க்கு உற்ற இப்பழி நமக்கு ஏற்படாது என்பது என்ன வுறுதி என்ற அச்சமும் (Terror) எம்மை யொத்த வேந்தர்க்கு இப்படி நேர்ந்ததே என்ற இரக்க வுணர்வும் (Pity) இதன்கண் தோன்றுகின்றதன்றோ?

## கடமையுணர்ந்த காவலன்

அரசு நிலையை நன்குணர்ந்து, பொறுப்புணர்ந்தவன் நம் செங்குட்டுவன்.

"மழைவளம் கரப்பின் வான்பேர் அச்சம்
பிழையுயிர் எய்திற் பெரும்பேர் அச்சம்
குடிபுர வுண்டுங கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்லென"

(காட்சிக்காதை, ௧00 - ௧0௪)

இவன் கூறுமாற்றான் நாடாளும் பொறுப்பை நன்குணர்ந்து, ஒன்றிய உள்ளமும் ஓங்கிய உறுதியும் கொண்டு அரசாளும் அன்புள்ளத்தான் நம் குட்டுவன் என்றறிகிறோம்.

## பெண்மை போற்றும் பெற்றியன்

பெண்ணுரிமை பற்றிப் பேசுகின்றோம். 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாமே' எனப் பாடுகின்றார் பாரதியும். சமூகத்தில் மட்டுமன்று, அரசியலினும் சமவுரிமை கொடுக்கின்றான் குட்டுவன். சாத்தனார் வாயிலாகக் கண்ணகிக்கு வந்துற்ற அவலநிலையும், பாண்டிமாதேவி அடைந்த துயரமும் உணர்ந்த செங்குட்டுவன் தன்னுடன் இருந்த வேண்மாளை,

'உயிருடன் சென்ற ஒருமகள் தன்னினும்
செயிருடன் வந்தஇச் சேயிழை தன்னினும்
நன்னுதல்! வியத்தகு நலத்தோர் யாரென"

(காட்சிக்காதை, ௧0எ - ௧0௯)

வினவுகின்றான். மாதேவியும், "காதலன் துன்பம் காணாது கழிந்த மாதரோ பெருந்திருவுறட்டும், நம் அகனாடடைந்த பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டு"மெனக் கூற, பத்தினித் தெய்வத்தைப் பார் தொழுதேத்தவும் செய்கின்றான். பெண்மையின் பெற்றியை இன்னொரு பெண்ணே நன்குணரக்கூடும் என்றறிந்து அரசமாதேவியை வினவும் வானவர் தோன்றலின் நுண்மாண் நுழைபுலம்தான் என்னே!

அடைக்கலம் பேணும் அருளாளன்

துணை இழந்து நலமிழந்து நலிந்து மெலிந்து நல்லாதரவின்றித் தன்னாடடைந்தாள் கண்ணகி என்றறிந்தான்; அதிலும் திக்கற்ற பெண் என்றதும் தனித்துயரெய்துகின்றான். தன்னாடடைந்த தகைசால் பூங்கொடிக்குத் தக்க பாதுகாப்பும் நல்க வேண்டுமென விழைகின்றான். எண்ணியவண்ணமே இதன் பொருட்டு இமயத்தினின்றும் கல்லைக் கொணர்ந்து, கங்கையிலே நீராட்டி, நடுகல்லை நிலைபெறச் செய்கின்றான். என்னே இவன் பெண்மை போற்றும் பெற்றியும், அடைக்கலம் பேணும் அருள் நெஞ்சமும்!

மானமே பெரியதென மதித்தோன்

வடதிசை மன்னர் சிலர் தென்னக மன்னரைப் பழித்ததாக இமயத்தாபதர் சாற்றக்கேட்டுச் சீற்றம் கொண்டான் சேரன்! 'வடதிசை மன்னர் முடித்தலை நெறித்துக் கடவுள் எழுதவோர் கற்கொண்டு பெயர்வேன்' எனச் சூளுரைக்கின்றான். ஆனால், ஆசான் ஒருவன். 'இமய வரம்ப! நின்னை இகழ்ந்தோரல்லர்' எனக் கூறுகின்றான். ஆனால், சேரனோ, 'எம்மைப் பழித்ததாகாதெனினும், எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சி தரும்' என உரைத்துத் தமிழகத்திற்கு வந்த பழியைத் தனக்கு வந்ததாகவே கருதுகின்றான். இன்னொருவனுக்குக் குறை நேர்ந்தபோது எனக்கா வந்தது என எண்ணி இருப்பது எவரது இயல்புமாகும். ஆனால் சேரனோ, தன்னையொத்த பிற வேந்தர்கட்கு வந்துற்ற பழியைத் தனக்கு வந்ததாக, தமிழுக்கே வந்ததாக, தமிழகத்திற்கே வந்ததாகக் கருதிக் கொதித்தெழுகின்றான். இதன்கண் இவனது பொதுமை பேணும் பெருங்குணமும், மானமே பெரிதென மதிக்கும் மனமும் தெற்றெனவிளங்குவது காண்க.

இற்றை நாளில்,

"தன்னைப் பழித்தானைத் தாய்தடுத்தால் விட்டுவிடு
தமிழைப் பழித்தானைத் தாய்தடுத்தாலும் விடாதே"

எனக் கூறுவதற்கோர் எடுத்துக் காட்டாகவன்றோ இலங்குகின்றான் இவ் வேந்தன். தனக்கு ஈடான வேந்தற்கு வந்த

மொழியை, பழிச்சொல்லைத் தனக்கு வந்ததாக எண்ணியும், தமிழுக்கு நேர்ந்ததாகக் கருதியும், தமிழகத்திற்கே வந்துற்றதாக வும் கொண்டு பழிதுடைத்தற்பொருட்டு இமயப் படையெடுப் பையே நிகழ்த்துகின்றான் எனின் அவனை யார்தாம் ஏற்றிப் போற்றார்? எவர்தாம் மறக்கவல்லார்? அப்படி மறந்தாலும் வாழார், வாழ்ந்தாலும் சிறக்கார்.

> “ பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
> உறைபதி என்னும் உலகு.” (குறள், .

என்ற வள்ளுவன் வாக்கிற்கு விளக்கம் தருவதாகவன்றோ அமை கின்றான் இச் செந்தமிழ்ச் சேரன்! இத்தகைய சேரன் புகழ்பாடிச் செந்தமிழ் வளர்த்தலன்றோ நம் கடனும் கடப்பாடுமாகும்?

**நின்ற சொல்லன்**

இன்னணம் பழிதுடைக்குமாற்றான் சீற்றம்கொண்ட சேரன்,

> “ கடவுள் எழுதவோர் கற்கொண்டு அல்லது
> வறிது மீளுமென் வாய்வா ளாகிற்
> செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப்
> பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற்
> குடிநடுக் குறூஉங் கோலே னாகென.” (கால்கோள். ௧௪-௧௮)

வஞ்சினம் சாற்றினான். இவ்வுலகில் சொல்வேறு செயல்வேறு அமையவே பலரிருக்கக் காண்கின்றோம். பொதுநலம் புரிவோ ரிடத்தும் இக்குறையே பெருங் கறையாகக் காணக்கிடக்கிறது. ஆனால், நம் செங்குட்டுவனோ சீற்றமுடன் சாற்றிய வஞ்சினத்திற் கேற்ப வடபேரிமயத்து வான்தரு சிறப்பின் கடவுட் பத்தினிக்குக் கற்கால்கொண்டு, அதனைக் கனகவிசயர்தம் கதிர்முடிமிசை யேற்றிக் கங்கைக் கரையகம் புகுந்து நீர்ப்படை செய்து நாடு திரும்புகின்றான் எனின் இவனது சொற்றிறம்பாச் செப்பமும், செயல் திறம்பாச் சிந்தையும்தான் என்னே என வியக்கவேண்டி யவாயுள்ளன.

**சான்றோர் உரை போற்றும் சால்பினன்**

செந்தமிழ்ப் பாவைக்குச் சிலை சமைக்கவும், விருந்தின் மன்னர் தம்மொடும் கூடி அருந்தமிழாற்றல் அறியாது இகழ்ந்த காவா நாவிற் கனக விசயர்க்குத் தென்தமிழாற்றலைத் திறம்பட உணர்த்தற்பொருட்டும் இமயப் படையெடுப்பை மேற்கொண் டான் மன்னன். அதுபோது தானாகவே தீர்மானித்தானல்லன். ஐம்பெருங்குழு எண்பேராயம் ஆகியவற்றுடன் கூடி ஆராய்ந்து கருமவினைஞரும் கணக்கியல் வினைஞரும்,

ஞரும் தந்திர வினைஞரும் 'மண்திணி ஞாலமெலாம் ஆள்வோன் வாழ்கென' வாழ்த்தவே வினைமேற் செல்கின்ருன்.

இன்தமிழாற்றலை இகழ்ந்து இழிவடைந்த இருவரையும் ஏனை மன்னர் இருவர்க்கும் (சோழ பாண்டியர்கள்) காட்டிவரச் செய்கின்ருன். காட்டிவந்த நீலன் முதலாய கஞ்சுகமாக்கள் சேரன் செயலை ஏனை இருவரும் இடித்துரைத்ததாகக் கூறுகின்றனர். அன்னவர் சாற்றிய உரை கேட்டுச் சீற்றம் கொள்கிருன் சேரன். சினந்த நிலையிலாவது சோழனை ஏசியோ, அல்லது பாண்டியனைச் சுட்டியோ அமைதியடைந்திருக்கலாம். அங்ஙனம் செய்தானில்லை. கோமகன் நகுதலைக் கண்ட குறையாக் கேள்வி மாடல மறையோன் எழுந்து,

"அரசர் ஏறே! அமைகநின் சீற்றம்
மண்ணாள் வேந்தே! நின்வாழ் நாட்கள்
தண்ணான் பொருநை மணலினுஞ் சிறக்க."

(நடுகற்காதை, கஉச - உக)

என வாழ்த்திச் சினத்தை ஆறுமாறு செய்கின்ருன். சினந்த நிலையிலும் ஆன்றோன் அறவுரைக்கு அடங்கி அமைகின்ருன்.

அன்றியும், மாடலன் யாக்கை நில்லா, இளமை நில்லா, செல்வம் நில்லாஎன உண்மை பல உணர்த்தி,

"அருமறை மருங்கின் அரசர்க் கோங்கிய
பெருநல் வேள்வி நீசெயல் வேண்டும்
நாளைச் செய்குவம் அறமெனின் இன்றே
கேள்வி நல்லுயிர் நீங்கினும் நீங்கும்."

(நடுகற்காதை, கஎஎ, அ0)

எனக் கூறுகின்ருன். அதுபோதும் அவனுரை போற்றி, வில்லவன் கோதையொடு கூடி ஆய்ந்து வேள்வி நிகழ்த்த அழும்பில் வேளுக்கு ஆணையிடுகின்ருன். இதனல் இவன் பெரியோரைப் பணிந்து போற்றும் பெற்றியன் என்பதும், சான்ருேர் உரைக்கு அடங்கும் சால்பினன் என்றும் அறிந்தோம்.

(தொடரும்)

# தங்கப்பாவை

[வித்துவான் திரு. தி. பொ. நாராயணசாமி பாரதி, உத்தமபாளையம்]

அரசனது ஆணையை மீறுகிறவர்க்குப் பலவகைத் தண்டனை கொடுத்தான் பழங்கால அரசன். அத் தண்டனைகளில் ஒன்று, 'தங்கப்பாவை' கொடுத்தல் என்பது. குற்றம் செய்தவன், தன் உடல் எடை அளவுள்ள தங்கத்தால் தன்னைப்போல் பாவை ஒன்று செய்து அரசனுக்குத் தர வேண்டும். இத்தகைய மரபு இருந்ததைச் சங்க இலக்கியங்களும் சுவையுடன் சொல்கின்றன.

"கொங்கு வேளிர்" என்ற புலவர் இயற்றிய 'பெருங்கதை' என்ற காப்பியத்தில், "உதயணன்—வாசவதத்தை" என்ற இவர்களின் கதை கூறப்படுகிறது. வாசவதத்தையின் தந்தை பிரச்சோதனன், அவந்தி நாட்டில் உச்சைனி நகரத்திலிருந்து ஆண்டவன். ஒருநாள் நீராட்டு விழாவுக்குச் 'சிப்பிரா நதி'க்குச் செல்லும்படி ஆணையிடுகிறான். பொதுமக்கள் அனைவரும் நீராடச் சென்றனர். "பிரச்சோதனனின் மகள் இளவரசி வாசவதத்தை நீராடும் துறையிலும் அதற்கு மேலாக இருக்கும் துறைகளிலும் யாரும் நீராடக்கூடாது; மீறி நீராடுபவர் குற்றம் செய்தவராவர்; நீராடிய குற்றம் செய்தவர் தம் உடல் எடை அளவுள்ள தங்கத்தால் பாவை செய்து கொடுக்கவேண்டும்; இதுவே தண்டனை" என்று துறைக்காவலர் கூறுகின்றதாகப் பெருங்கதை பேசுகிறது.

கொங்குவேளிர் காலத்துக்கும் முற்பட்ட காலத்தில் இத்தகைய நிகழ்ச்சியொன்று ஏற்பட்டது. சங்க காலப் புலவரான 'பரணர்' தாம் பாடிய பாடல்களில் ஏதேனும் ஒரு வரலாற்றுக் குறிப்பைக் கூறாது விடுவதில்லை. உகூஉ ஆவது குறுந்தொகைப் பாட்டில் ஒரு நிகழ்ச்சியைக் கூறுகின்றார்.

"இளவிச்சிக்கோ" என்ற சிற்றரசன், 'விச்சி மலை'க்கு உரியவனாக இருந்தான். இவனுடைய முன்னோர்களில் ஒருவன், 'நன்னன்' என்பவன். இந்த நன்னன் என்ற சிற்றரசன், ஆற்றங்கரையில் தோப்பு உண்டாக்கினான். அதில் அருமையான மாமரம் ஒன்றை வளர்த்தான். அம்மரம் காய்க்கும் பருவம் பெற்றது; மரத்திலிருந்து மாங்காய் ஒன்று ஆற்றிலே விழுந்தது; மிதந்து வந்தது. நீராட அங்குச் சென்ற பெண் ஒருத்தி மிதந்துவரும் மாங்காயைக் கண்டாள்; பெண்களுக்கு இயல்பாக உள்ள புளிச்சுவைக் கவர்ச்சியால் அவளுக்கு வாயில் எச்சில் ஊறியது; அவ்வளவுதான். அம்மாங்காயை அம்மங்கை கடித்துச் சுவைத்துத் தின்றாள். தோப்பிலிருந்த காவலர்கள் அம்மங்கையைக்

கையும் களவுமாகக் கண்டனர். அரசன் நன்னன்முன் கொண்டு நிறுத்தினர். "மாங்காயைத் தின்றது உண்மைதான்; இது சாதாரணம்" என்றாள். நன்னனுக்கோ கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "நான் என் உயிரினும் மேலானதாகக் கருதி வளர்க்கும் மாமரத்தினது காயை நீ தின்றாய்! உனக்குக் கொலைத் தண்டம் விதிக்கிறேன்" என்றான். இத் தண்டனை அவளுக்குப் பீதியை உண்டாக்கி நீதியைக் காணத் தூண்டியது; தன் தந்தைக்குச் செய்தி அனுப்பினாள். திருமணம் ஆகாதவள்; அவளுடைய தந்தை ஓடிவந்தார். "அரசே! என் மகள் செய்த தவற்றுக்காக அவளது உடல் எடை அளவுள்ள தங்கத்தால் செய்த பாவை ஒன்றையும் எண்பத்தோர் ஆண் யானைகளையும் தண்டனையாகக் கொடுக்கிறேன்; என் மகளை விடுதலை செய்க!" என வேண்டினார். அரசன் நன்னனோ சிறிதும் மனம் இரங்காமல் அவளைக் கொலை செய்வித்தான் என்பது அந் நிகழ்ச்சி.

இவ்வாறு பெண்ணைக் கொலை செய்ததால் நன்னனைப் "பெண் கொலைபுரிந்த நன்னன்" என்று புலவர்கள் பழித்துக் கூறலாயினர்.

"மண்ணிய சென்ற ஒள்நுதல் அரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு அவள் நிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன்."

என்பது அவர் பாடல்.

'அகநானூறு' என்ற சங்க கால நெடும்பாட்டில் 'தங்கப் பாவை' பற்றிய செய்தி வருகிறது. மாமூலனார் என்ற புலவர், "நெடுஞ்சேரலாதனுக்கு அவனுடைய பகை அரசர்கள் திறைப் பொருளாக(கப்பம்)த் தந்த நல்ல அணிகலன்களுடன் தங்கத்தால் செய்த பாவையையும் தந்தனர்" என்று அந்நூல் ௧௨௭ ஆம் பாடல் கூறுகிறது.

"வலம்படு முரசின் சேரலாதன் ... ...
நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்
பணிதிறை தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை ... ..."

அப்பகுதி இது.

ீர அன்றித திறை செலுததும சிற்றரச ரும் 'தங்கப்பாவை' தருவர் என்பதும் மேற்கூறிய செய்தியால்

"பெண் கொலைபுரிந்த" என்ற பழியை ஏற்ற நன்னனது வழியிலே 'விச்சிக்கோ' என்பவனும் முன் கூறப்பட்ட 'இளவிச்சிக்கோ' என்பவனும் உடன் பிறந்தவர்கள். இளவிச்சிக்கோவும், கடை எழு வள்ளல்களில் ஒருவனை கண்டீரக்கோப் பெருநள்ளியின் தம்பியான இளங்கண்டீரக்கோவும் ஒரு சமயம் ஒன்றாய் அமர்ந்திருந்தனர். அச்சமயத்தில், 'பெருந்தலைச் சாத்தனார்' என்ற புலவர் சென்றார்; இளங்கண்டீரக்கோவை மார்புறத் தழுவினார்; அந்த அளவில் பக்கத்திலிருந்த இளவிச்சிக்கோ, "என்னை ஏன் மார்புறத் தழுவவில்லை?" என்று பெருந்தலைச் சாத்தனாரைக் கேட்டான்; அப்புலவர், "பாடுவோர்க்குப் பரிசு கொடுக்காமல் வீட்டுக்கதவை அடைத்த காரணத்தால் எம் போன்ற புலவர் முற்காலத்திலிருந்தே உம் மலையையும் உம் முன்னோர்களையும் உன்னையும் பாடிப் புகழாது விட்டுவிட்டனர். அப்புலவர் பெருமக்களைப் பின்பற்றி நானும் உன்னை இப்போது தழுவவில்லை; மேலும் 'பெண்கொலை புரிந்த நன்னன்' வழியில் வந்தவன் நீ; ஆதலாலும் உன்னைத் தழுவவில்லை" என்று அஞ்சாது கூறினார்:

"நன்னன் மருகன் அன்றியும் நீயும்
முயங்கற்கு ஒத்தனை? மன்னே வயங்குமொழிப்
பாடுநர்க்கு அடைத்த கதவின் ஆடுமழை
அணங்குசால் அடுக்கம் பொழியும்நும்
மணங்கமழ் மால்வரை வரைந்தனர் எமரே."

என்ற கருக ஆவது புறநானூற்றுப் பாடல் பகுதியால் மேற் கூறிய செய்தியை அறியலாம். இப்பாட்டுப் பெருஞ்சித்திரனார் பாடியது.

பண்டைக்கால உரோமாபுரியில் "பைத்தண்டனை" வழங்கினார்கள்: "பழி பாவமான செயல் செய்தவர்களை ஒரு பைக்குள்போட்டு அதனுள் ஒரு குரங்கு ஒரு பாம்பு ஒரு சேவல் ஆகியவற்றையும் போட்டுக் கட்டிக் கடைசியில் ஆற்றில் அழுத்தி விடுவார்களாம்." தேசங்கள் தோறும் தெண்டனை வேறு.

## களை அகற்றுக!

[நாஞ்சில், கா. கணபதி]

எம்மொழி யாயினும் செம்மையி லேயே
சீர்மையும் நேர்மையும் எய்துதல் சாலும்;
அதனால், பிறமொழிக் களையினை நந்தம்
தண்டமி ழ்தனில் ஒண்ட விடாதீர்!

# "பெயர் சொல்லாப் பெரும்புலவர்"

[திரு. கி. இரா. திருமலையப்பன், தென்காசி.]

இத்தலைப்பின் கீழ் நம்மருமைச் செந்தமிழ்ச் செல்வியின் சிலம்பு ௩௩, பரல் ௧௦ இல் வித்துவான் பாப்பு இராமநாதன் அவர்கள் எழுதியுள்ள கட்டுரையைப் படித்தேன். அக் கட்டுரையில் அவர்கள் ஆராய்ந்துள்ள துறையில் ஒரு திருத்தக் கருத்தே இஃது ஆகும்.

செம்மையுறச் சங்கந்தொட்டுச் சீர்மைபெறத் தமிழ் வளர்த்தார் தென்பாண்டி வேந்தர். அச்சங்கந்தன்னில் அங்கம் ஆகித் தங்கத் தமிழில் தலைசிகர் கருத்துக்களைத் தந்து தந்து ஏற்றம் பெற்றார் தண்டமிழ்ப் புலவர். அவர்கள் அன்று அவ்வாறு இயற்றியருளிய அருந்தமிழ்ப் பாடல்கள் சிலவற்றுக்கு இன்று ஆசிரியர் பெயர் அறியாது அல்லலுந் தொல்லையும் படுகின்றோம். இது நமக்கு இன்று ஒரு பெருங்குறையேயாகும். இந்நிலையில் அத்தகைய பாடல்களின் ஆசிரியர்கள் யாரென்று அறிய முயலுவதும் இன்றியமையாத ஒன்றேயாம். திரு. இராமநாதன் அவர்கள் இம் முயற்சியில் இறங்கியிருப்பது போற்றற்பாற்று. மேற் குறித்த கட்டுரையில் உ௫௬ ஆம் புறப்பாடலுக்கும் ௩௩௩ ஆம் குறுந்தொகைச் செய்யுளுக்கும் அவர்கள் அவ்வாறு ஆசிரியர் பெயர் ஆய்ந்துள்ளார்கள். அவர்கள் ஆராய்ச்சியைக் கொஞ்சம் [ஆய்]வோம்.

புறநானூறென்னும் புகழ்மிகு புனிதநூலில் உ௫௬ ஆம் பாடலாகத் திகழுவது இதுதான் :

"கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே
அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய
சிறுவெண் பல்லி போலத் தன்னொடு
சுரம் பலவந்த வெமக்கு மருளி
வியன்மல ரகன்பொழி லீமத் தாழி
அகலி தாக வனைமோ
நனந்தலை மூதூர்க் கலஞ்செய் கோவே."

இப்பாடலை இயற்றிய ஆசிரியர் யாரென்பது தெரியவில்லை புறம் உ௨அ இதேமாதிரிக் 'கலஞ்செய் கோவே கலஞ்செய் கோவே' என்றே தொடங்குகிறது. 'நனந்தலை மூதூர்க் கலஞ் செய் கோவே' என்னும் வரியும் இரண்டு பாடல்களிலும் இருக்கின்றன. எனவே, இரண்டையும் இயற்றியவர் ஒருவரே என்று துணியலாம். புறம் உ௨அ ஐப் பாடியவர் ஐயூர் முடவனார் என்று அறிகிறோம். ஆகவே, உ௫௬ ஐப் பாடியவரும் அவரே

என்பது ஒருதலை. இவ்வுண்மையை அறிந்து கூறியுள்ள ஆசிரியர் அவர்களுக்கு நம் நன்றி என்றும் உரியது.

இனி, அவர்கள் அடுத்து எடுத்துக்கொண்ட குறுந். ௩௧௩

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந்து உண்டு,
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும் துறைவனொடு
யாத்தேம்; யாத்தன்று நட்பே;
அவிழ்த்தற்கு அரிது; அது முடிந்து அமைந்தன்றே."

என்பதாம். இப்பாடலுக்கும் இயற்றியவர் பெயர் தெரியவில்லை. இப்பாடலில் காக்கைக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அடைமொழியும் புறம். உருகூ இல் பல்லிக்குத் தரப்பட்டுள்ள அடைமொழியும் ஒன்றேயாக—அஃதாவது 'சிறுவெண்' என்பதேயாக இருப்பதால் இவ்விரண்டு பாடல்களையும் பாடியவர் ஒருவரே—ஐயூர் முடவனாரே என்று வித்துவானவர்கள் கூறுகிறார்கள். ஆனால், இக் குறுந். ௩௧௩ ஐ இயற்றியவர் ஐயூரார் அல்லர் என்பது எளியேன் எண்ணம். இவ்வாறு யான் எண்ணிடக் காரணம் பின் வருவதேயாகும்:

எட்டுத்தொகையுள் ஒன்றாக இடம் பெற்றுள்ள ஐங்குறுநூற்றில் 'சிறுவெண்காக்கைப்பத்து' என்பது கஎ ஆம் பத்தாக இருக்கிறது. அப் பத்திலுள்ள ஒவ்வொரு பாடலும் இக் குறுந். ௩௧௩ ஐப்போலப் 'பெருங்கடற்கரையது சிறுவெண் காக்கை' என்பதையே முதல் வரியாகக்கொண்டு விளங்குகிறது.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீர் இருங்கழி இரைதேர்ந்து உண்டு,
பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும்
துறைவன் சொல்லோ பிற ஆயினவே!" (ஐங். கசுஉ)

இப்பாடலின் மூன்றடிகளும் (குறுந். ௩௧௩) அப்பாடலின் மூன்றடிகளும் ஒத்திருக்கின்றன. ஐங்குறுநூற்றுப் பாடலின் ஆசிரியர் அம்மூவனார். அவரே பாடிய பாட்டிற் பத்து மட்டும் ஐங்குறுநூற்றிற் சேர்த்து எஞ்சிய ஒன்றினைக் குறுந்தொகையிற் சேர்த்திருப்பர் என நான் கருதுகின்றேன். "சிறுவெண்" என்ற அடையைப் பல்லிக்குக் கொடுத்திருப்பது கண்டு அவர் தாம் எனக் கூறுவதினும் இது சிறந்ததன்றோ?

இவ்வாறு சங்க நூல்களில் எண்பத்துமூன்று பாடல்கள் உள. அவற்றை இயற்றிய புலவர் பெயர்களை ஆய்ந்து வெளிப்படுத்தல் அறிஞர் கடமையாம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) கல்லூரிகளில் தமிழ் ஆக்கம்பெற மேலும் முயற்சி

கல்லூரிகளில் தமிழைக் கற்பிக்கும் மொழியாகச் செய்யும் வண்ணம் பல்கலைக் கழகச் சட்டத்தைத் திருத்தியமைக்கும்படி சென்னை அரசினரைக் கேட்கும் தீர்மானமொன்றைத் தமிழ் வளர்ச்சி, ஆராய்ச்சிக் குழுவினர் அண்மையில் நிறைவேற்றியுள்ளனர். இக்குழு கடந்த 25-6-60 இல் இராசாசி மண்டபத்தில் கூடிற்று. கல்லூரிப் பாடப்புத்தகங்களுக்கேற்றபடி கலைச் சொற்களைத் திருத்தியமைக்கும் துணைக்குழு வொன்று திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் தலைமையில் நிறுவப்பட்டது. கல்லூரிகளில் பாடமாக வைத்தற்கேற்ற ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதற்கென மற்றொரு குழுவும் திரு. தி. சு. அவினாசிலிங்கம் அவர்கள் தலைமையில் நிறுவப்பெற்றது.

**குறிப்பு :** நிறுவப்பெற்றுள்ள குழுக்கள் கல்லூரிகளில் மேலும் தமிழ் வளரவும், பல ஆங்கில நூல்கள் தமிழில் வெளிவரவும் விரைந்து ஆவன செய்வார்களாக.

## (உ) பீகாரில் இந்தி ஆட்சிமொழி

கடந்த சூன் திங்கள் முதல் பீகார் மாநிலத்தில் ஆங்கில மொழி அகற்றப்பட்டு, அரசியல் அலுவலகங்கள் தோறும் இந்தியே ஆட்சிமொழியாகச் செயல்படுத்தப்பட்டுவிட்டது. இனி அங்கு அமைச்சவை நடவடிக்கைகள் அனைத்தும் இந்தியிலேயே நடைபெறுமாம்.

**குறிப்பு :** இங்ஙனம் வடநாட்டில் பல பகுதிகளில் இந்தி அரியணை யேற்றப்பட்டு வருகிறது. 1965க்குப் பிறகு இவ்விந்தியத் துணைக்கண்ட முழுதும் இந்தியே ஆட்சிமொழியாகக்கப்படும் என்று அண்மையில் இந்தியக் குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பித்திருப்பதும் நோக்கற்பாலது.

## (ங) தமிழகத்தில் இந்தி எதிர்ப்பு வலுப்பெறும்!

> “தென்னகத்தில் எப்போதும் இந்திக்கு எதிர்ப்பு இருந்து வருவதை அறிந்திருந்தும், இந்திய முதல் அமைச்சர் பண்டித சவகர்லால் நேரு அவர்கள் மக்கள் மன்றத்தில் அளித்த வாக்குறுதிக்கு மாறாகவும் ‘1965க்குப் பின் நாடெங்கும் இந்தியே ஆட்சி மொழியாகும்’ என்று இந்தியக் குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பித்துள்ளது வருந்தத்தக்கது. அந்த ஆணையை வரும் ஆகஸ்டுத் திங்கள் 30 ஆம் நாளுக்குள் திரும்பப் பெறாவிடில் இந்தியை எதிர்த்து அறப்போர் தொடுக்கப்படும்” என்று 19-6-60 இல் குமாரபாளையத்தில் கூடிய தி. மு. கழகச் செயற்குழு தீர்மானித்துப் பதினேழு பேர்களடங்கிய தொரு போராட்டக் குழுவையும் நிறுவியுள்ளது.

**குறிப்பு :** தமிழகத்தில் நீண்டகாலமாக இந்திக்கு எதிர்ப்பு இருந்து வருவது அன்பர்கள் அறிந்ததே. குடியரசுத் தலைவரின் ஆணைப்படி இந்தி திணிக்கப்படுமானால்—எத்துணைதான் நாம் தமிழுக்கு ஆக்கம் தேடினும், ஆட்சிமொழியாக்கப்படும் இந்தியின் முன் நந்தமிழ் அதன் ஒளியினை நிச்சயம் இழக்க நேரிடும். முன்னர் ஆங்கில ஆட்சிமொழியால்

தமிழ் மங்கிக்கிடந்தது போன்ற நிலை மீண்டும் ஏற்படலாம். எனவே தமிழ்ப்பற்றுடையோர் அனைவரும் வருமுன் காப்போராய்க் கருத்து வேறுபாடின்றித் தமிழ் காக்க முன்வருவார்களாக.

(௪) **நல்ல தமிழ் வளரப் பரிசுத்திட்டம்**

தமிழிலேயே பாடங்களைக் கற்பிப்பதற்கு ஏற்ற வண்ணம் கல்லூரிப் பாடப் புத்தகங்களை நல்ல முறையில் எழுதுவோர்க்குப் பரிசு வழங்குவதெனச் சென்னை அரசினர் திட்டமிட்டுள்ளனர். அதன்படி தத்துவம், உளவியல், நிலநூல், பொருளாதாரம் அரசியல் முதலிய பொருள்களில் சிறந்த நூல்களை எழுதும் ஆசிரியர்கட்கு 1000 ரூபாய் பரிசு அளிப்பதென்று அரசினர் முடிவு செய்துள்ளனர்.

**குறிப்பு:** இத்தகைய நல்ல திட்டங்களை வகுத்துள்ள அரசினரைப் பாராட்டுகிறோம். இதனை ஆசிரியர்கள் நல்லமுறையில் பயன்படுத்திக் கொண்டு நல்ல தமிழ் வளர வழி செய்வார்களாக.

(௫) **பி. ஏ. வகுப்புக்குத் தமிழ்ப் பாடப்புத்தகங்கள்**

கல்லூரித் தமிழ்க் குழுவினரால் படைக்கப்பட்ட பி. ஏ. வகுப்புக்கான புததகங்கள் சில அண்மையில் வெளியிடப்பட்டுள்ளன. உளவியல், தற்கால அரசியல், நிலநூல் முதலியன இவ்வகையில் வெளிவந்துள்ளன. இவை பல்கலைக் கழகக் கல்விக் குழுவினர் பார்வைக்கு அளிக்கப்பட்டுள்ளன.

**குறிப்பு:** கல்லூரித் தமிழ்க்குழுவின் இவ்வரிய முயற்சியினைப் பாராட்டுகிறோம். இங்ஙனம் மேலும் பல தமிழ் நூல்கள் வெளிவந்து கல்லூரிகளெங்கும் தமிழ்மணங் கமழ்வதாக.

(௬) **இராசராச சோழன் காலத்துப் பொற்காசுகள்**

சோழ மன்னர்களில் புகழ்பெற்றவனாகிய இராசராச சோழனுடைய காலத்தவை என்று கருதப்படும் ஆறு பொற்காசுகள் தென்னார்க்காடு மாவட்டத்தில் சிதம்பரம் தாலுகாவிலுள்ள திருச்சின்னபுரம் என்னும் சிற்றூரில் அண்மையில் நிலத்துக்கடியிலிருந்து கண்டெடுக்கப்பட்டன. ஆறு காசுகளின் மொத்த மதிப்பு ரூபா 700 இருக்குமெனக் கருதப்படுகிறது. காசின் முன்பக்கத்தில் யானை உருவமும் பின் பக்கத்தில் பூ முத்திரையும் காணப்படுகின்றன. அந்தப்பூ முத்திரைக்குள் தமிழ்ச் சொல் பொறிக்கப்பட்டுள்ளது.

முசலீம் ஒருவருக்குச் சொந்தமான நிலம் ஒன்றில் ஒருவர் செங்கல் காளவாய் போடுவதற்காக மண்வெட்டியபோது இந்த நாணயங்கள் பளபளவென மின்னினவாம். உடனே இச் செய்தி மேலதிகாரிகளுக்கு அறிவிக்கப்பட்டது. சிதம்பரம் தாசில்தார் விரைந்து வந்து அவற்றைப் பெற்றுத் தாலுகாக் கருவூலத்தில் வைத்தனராம். இந்த நாணயங்கள் வரலாற்று ஆராய்ச்சிக்குத் துணைபுரிவன எனக் கருதப்படுகிறது.

**குறிப்பு:** பண்டைத் தமிழகத்தின் மாண்புக்கு இஃதோர் எடுத்துக்காட்டு. இத்தகைய புதைபொருளாராய்ச்சியினை அரசினர் மேலும் ஊக்கத்தோடு செய்வார்களாயின் தமிழகத்தின் வரலாற்றிலே புத்தொளி வீசச் செய்யலாமன்றோ!

# மதிப்புரை

**புதுவை விலக்ஷண கவி ஏ. வே. இராமாநுஜ நாவலர் சரித்திரச் சுருக்கம்**

[...]றியவர் வி—பூஆர்—புலவர் **கீ. வேங்கடசாமி ரெட்டியார்** அவர்கள். புதுச்சேரி. இஃதோர் அழகிய சிறு நூல். விலை காசு 25. கிடைக்குமிடம் 'சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம்' சென்னை.]

குறித்த நாவலரவர்கள் செந்தமிழ்ப்புலமையும் திருமாலடிப்பற்றும் மிக்கவர். கி. பி. 1831 இல் தோன்றியவர், திருமால் நெறியினை யாங்கணும் பரப்பிய செம்மல், மாணவர் பலர்க்கும் செந்தமிழ் பயிற்றிய சீரியர். இவர் முப்பத்தொரு நூற்கள் இயற்றியவர். அவற்றுள் இருபத்து மூன்று நூல்கள் அச்சுக்கு வந்துள்ளன. இவர்தம் வரலாற்றால் அக்காலத்துப் பெரும் புலவர் பலரை அறியலாம். பண்டையோர் வரலாற்று நூலைப் பின்னையோர் கற்பது மொழிக்கும் நல்வாழ்க்கைக்கும் பெருந் துணையாகும். அம்முறையில் இதனை அனைவருங் கற்றுப் பயனெய்துவார்களாக.

**திருப்பாவை**

ஆண்டாள் அருளியது முப்பது திருப்பாட்டுக்களும் கொண்டது. அருமையான பிரஞ்சு மொழிபெயர்ப்போடு கூடியது, விலை ரூபா 1 விராங்கு 75. மொழிபெயர்ப்பாசிரியர். புதுவை திரு. ரா. தேசிக **பிள்ளை**யவர்கள. இவ்வரிய நூலால் பிரஞ்சு மொழிவல்லாரும் பிரெஞ்சுநாட்டவரும் நம் நாட்டு அரும் பெரும் சமயக் கொள்கைகளையும் தெய்வப் புகழ்ப்பாக்களையும் தெரிந்து சீர்மையுற வாயிலுண்டாகும். அழகிய பதிப்பு. இவ்வாசிரியரவர்கள் இது போன்ற செந்தமிழ்ப் பனுவல்கள் பலவற்றையும் பிரஞ்சு மொழியிலாக்கித் தமிழின் பெருமையை வெளியுலகிற்கு விளக்குவார்களாக.

*திராவிட ஆட்சிமுறை 333*

[ஆசிரியர் இராசைத் திரு. கி. **அரங்கசாமி** அவர்கள் ஆவர். **வெளி**யிடுவோர் திருக்குறள் பதிப்பகம், இராசிபுரம், சேலமாவட்டம். ரூபா 1-00.]

[...]ரல் பண்டைத் தென்னாட்டின் சிறப்பையும் திராவிடநாடு என்றும் என்னும் பெயர்க்காரணத்தையும் தெளிவுபடுத்துகின்றது. ஆசிரியர்க்கு உரைநடை போன்று செய்யுள் நடையும் கைவந்துள்ளது. அதனால் செய்யுள் நடையில் இந்நூல் யாக்கப்பட்டுள்ளது. மேலும் எளிதிற் கற்று மறவா துளத்தமைக்கவும், வேண்டுமிடங்களில் வேண்டும் போது எடுத்து வழங்கவும் வாய்ப்புடையது வெண்பாயாப்பேயாம். அத்தகைய வெண்பாயாப்பால் இஃதமைக்கப்பட்டுள்ளது. 333. வெண்பாக்களானமைந்தமைபற்றி நூற்பெயரமைந்துள்ளது. ஆசிரியர் 180 ஆம் வெண்பாவில் 'வடநாடு தென்னாடாம் வாதின்றி' அன்போடு ஆண்டு வரலே ஆட்சி முறையென வலியுறுத்துகின்றனர்.

நாட்டு நலம் நாடுவார் ஒவ்வொருவரும் இந்நூலை நன்கு கற்று மெய்ம்மையோர்ந்து செய்வன செய்வார்களாக.

## ஸ்ரீ. வேதாந்த தேசிகர் வரலாற்றுச் சுருக்கம்

[எழுதியவர் புதுவை திரு ரா. தேசிக பிள்ளை அவர்கள். விலை காசு இருபது :— திருமால் திருநெறி மன்ற வெளியீடு, புதுவை. கிடைக்குமிடம் கழகம். சென்னை.]

இந்நூல் வேதாந்த தேசிகரின் வரலாற்றை நன்கு விளக்குகின்றது. அவர் சாலிவாகனசகம் 1191 இல் தோன்றியவர். இருமொழி வல்லவர். திருமால் திருவருள் கைவரப் பெற்றவர். பல நூலும் உரையும் ஆக்கியவர். பல சித்துக்கள் புரிந்தவர். பொன்னை மதியாது எம்பெருமானையே பெரிதாக மதித்தொழுகிய செம்மல். பொன் வேண்டிய மாணிக்குத் தாயாரைக் கொண்டு பொன் பொழியச் செய்தவர். வடமொழி வேதத்துக்குச் செம்பொருள் நாலாயிரத் தமிழ் மறையாற்றுங்கண்ட வுண்மையைப் பாடியவர். இந்நூலை அனைவரும் வாங்கிக்கற்று அரும்பயன் எய்துவார்களாக.

## மனை மாட்சி

[ஆசிரியர் திரு. தோ. ந. வீரராகவன் அவர்கள். இமயப்பதிப்பகம், நாகப்பட்டினம். விலை ரூபா. 1-25]

நாட்டின் ஒழுக்கமும், பண்பாடும், நாகரிகமும், வளமும், வாழ்க்கையும், கல்வியும், கற்பும், நிறையும், காதல் மாண்பும், நலமும், நெடுவாழ்நாளும் பெருகிப் பீடுறுவதற்கு ஆண்பாலாரும் பெண்பாலாரும் அறமுறை புணர்ந்து, தெய்வநாட்டத்துடன் கூடி வாழவேண்டுவது இன்றியமையாததாகும். அவ்வாழ்வு கற்புநிறை சான்ற பொற்புறு திருமணத்துடன் அன்பு அருள் அடிப்படையில் பொருந்தியிருத்தல்வேண்டும். அதற்கு வேண்டிய வழிவகைகள் பெரும்பாலும் இந்நூலகத்து ஆசிரியரால் விளக்கப்பட்டுள்ளன. மேலும் மனைவியர் எல்லாவகையாலும் கணவன்மார்க்கு அகத்தும் புறத்தும் உதவியாக இருத்தல் வேண்டும் என்பதும், கணவன்மாரும் கற்புநிறை காத்து உண்மை அன்புடன் மனைவிமாருடன் வாழ்தல் வேண்டுமென்பதும், ஒருவனும் ஒருத்தியுமாய் மணம் புணர்ந்து வாழ்வதே கற்புநிறை கடவா நற்பண்பு சேர் ஒழுக்க மென்பதும், அங்ஙனம் ஒழுகின் மணவிலக்குச் சட்டத்திற்கே வாய்ப்பு நேராதென்பதும், கற்பொழுக்கந் தவறிய மகளிர் எல்லாராலும் இழிக்கப்படுவதுபோன்று கற்புநிறை கடந்து போற்றா ஒழுக்கம் புரிந்து ஆண்மையும் நாணமும் இன்றியொழுகும் ஆண்களை மக்கட் குழுவினர் கண்டாரைக் கொல்லும் நஞ்சனையர் என நெஞ்சிற்கொண்டு எஞ்சாது ஒறுத்தல் வேண்டுமென்பதும் பற்பல சான்றுகளுடன் நன்கு விளக்கப்பட்டுள்ளன. கற்பார்க்குச் சுவைமிகுதி யுண்டாகும்படி கடித வடிவமாகஇந்நூலை ஆசிரியர் திறம்பட ஆக்கியுள்ளனர். நல்வாழ்க்கையினை விரும்பும் இருபாலார்க்கும் இந்நூல் வழிகாட்டியாகும். இதனைச் செந்தமிழன்பர்கள் அனைவர்களும் வாங்கிக் கற்று நற்பயன் எய்துவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.

## மதுரை சைவசித்தாந்தப் புத்தகநிலையத் திறப்பு விழா




புத்தக நிலையத்தைக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் திறந்து வைத்தகாலை எடுத்த படம்.



கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள், நிலைய உரிமையாளர் மீ. சண்முகம் அவர்கள், வருகை தந்த பெருமக்கள், பொதுமக்கள் ஆகியோர்.




| சிலம்பு ௩௪ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௯௧, ஆடி<br>ஆகஸ்டு, 1960 | பரல் ௧௨ |
| --- | --- | --- |

# ஆட்சிமொழி பொதுவாம் ஆங்கிலமே நன்று

ஒரு நாட்டிலுள்ள பல்வேறு மக்களையும் வேற்றுமை கொள்ளாது ஒற்றுமை கொள்ளச் செய்வது உயிரினுஞ் சிறந்த அந்நாட்டு மொழியே யாம். அந்நாடும், அந்நாட்டு மக்களும் அனைத்துலக மக்களாலும் அழைக்கப்படுவதும் அந்நாட்டு மொழிப் பெயராலே யாம். பொதுவாக உடலுறுப்புக்கள் பெரும்பாலும் ஒன்றாகக் காணப்படினும் ஒருவரைச் சிறப்பாக அறிந்து கொள்ளுவதற்கு அவர்தம் தனியுரிமையாகத் திகழ்வது அவர்தம் முகம் ஒன்றேயாம். அதுபோல் நாடுகள் பெரும்பாலும் நிலவளம், நீர்வளம், செல்வவளம், கல்விவளம், கலைவளம், ஒழுக்கவளம், ஆட்சிமுறை, உடல்வளம், உரனுடைமை, கடவுட் கொள்கை முதலியவற்றில் உடலுறுப்புக்கள் போன்று ஒப்புடையதாகக் காணப்படினும் முகம்போன்று தனியுரிமையாகக் காணப்படுவது அந்நாட்டு மொழியொன்றுமே யாம். அம்மொழியினுக்கு நேர்முகமாகவேனும், மறைமுகமாகவேனும் சிறு ஊறு விளையும் போல் தோன்றினும் உயிருக்குற்ற ஊறென உன்னி அதனைத் தடுப்பதற்கு அம்மொழிக்குரியாரனைவர்களும் மடிதற்று முந்துறுவர். அதன்பொருட்டு உடல் பொருள் ஆவி மூன்றனையும் ஒருங்கிழக்கவும் பின்னிடார். மறமானமிக்க அன்னார் இத்தகைய அறப்போரில் கலந்து செயலாற்றுவது கிடைத்தற்கரிய பெரும்பேறெனவுங் கொள்வர். கொண்டு உரங்கொண்டுழைப்பர். ஊறு நேரின் விழுப்புண் எனக்கொண்டு களிப்பர். உயிரீயநேரின் பிறவிப் பெரும்பயன் என்று நனிமிக மகிழ்ந்து இனிதினீவர்.

எல்லா நாட்டினும் மக்களுக்குள் வேற்றுமைக்கு வித்தாயிருப்பன செல்வம் வறுமை, கல்வி கல்லாமை, சாதி சமயம்,

ஏவுவோர் இயற்றுவோர் முதலுடையார். தொழிலாளர் ஆள்வோர் ஆளப்படுவோர் என்ப போன்றவைகளாகும். இவையனைத்தையும் கொள்ளவொட்டாது தள்ளி மேற்போந்து ஒற்றுமைப் படுத்துவது அந் நாட்டுத் தாய்மொழி யொன்றேயாம். தாயை இழந்த சேய் ஒருவாறு பிறரால் பேணப்பட்டேனும் வாழும். தாய்மொழியை இழந்த நாடு ஒருவாற்றானும் தன்னிலையில் வாழாது. வந்த மொழிக்கு அடிமையாய் அந்த மொழியை மேற்கொண்டு, தன்மொழியைத் தானே கொன்று பழிநிற்க வீழும். ஒரு நாட்டைக் கெடுக்க எண்ணுவார் முதற்கண் அந் நாட்டு மொழியைக் கெடுத்தல் வேண்டும் என்பது நன்றல்லார் கூறும் சூழ்ச்சிகளுள் ஒன்று. அவ்வுண்மை கடந்த பன்னூறுண்டுகளாக வேற்றுமொழியாளர் பரந்து பட்ட நம் பரத கண்டத்தை வல்லாட்சியால் ஆண்டு நாட்டு மொழிகளைக் கொல்லாமற் கொன்று குற்றுயிராக்கி முற்றடிமையாக முடித்தன்ரென்பதனால் நன்கு விளங்கும்.

கடைசியாக ஆண்ட ஆங்கிலேயரும் அங்ஙனமே செய்தனர். அதனால் நாட்டு மொழி எந்நிலையிலிருந்ததென்பது நாமெல்லாங் கண்கூடாகக் கண்ட பேருண்மையாகும். மொழியிழந்தமையானே அடிமைகளாகவும் ஆக்கப்பட்டோம். சிலர் அவர்கள் போல் நடிக்கவுந் தலைப்பட்டனர். அங்ஙனந் தலைப்பட்டார் ஏனைத் தம் பிறப்பினராய மக்களையும் தம் தாய் மொழியாகிய நாட்டுமொழியையும் வேற்றுநாட்டவரினும் மிகக் கொடுமையாகப் புறக்கணித் தொதுக்கினர். அம்மட்டோ பலரறியப் பெரிய மேடைகளில் தமக்குத் தமிழில் பேசத் தெரியாதெனக் கூறிக் கொள்வதைக் கூசாது பாராட்டிப் பேசவுந் துணிந்தனர். இந்த இழிநிலை என்று மாறும்? அடிமைத்தளை எந்நாளறும்? உரிமையாட்சி தொடங்கும் பொன்னாள் எந்நாள்? என மாந்தர் அனைவரும் எதிர்பார்த்தேங்கினர். பேரொறுத்தலுக்கும், பேரிழப்புக்கும் உட்பட்டனர். பல்லோர் உரமொடு உயிருமீந்தனர். காந்தியடிகளாரின் கணக்கிட வொண்ணா அரும்பேருழைப்பினால் நாட்டுக்கு உரிமை கிடைத்தது. அடிமைப் படுத்துங் கோனாட்சியொழிந்து, உரிமை வழங்கும் குடியாட்சி வந்தது. எல்லாரும் அகமும் புறமும் அளவிலா இன்பமும் மகிழ்வுங் கொண்டனர்.

இந்த நிலைமையில் மீட்டும் இந்தி நுழைவும் இந்தித் திணிப்பும் ஏற்படத் தொடங்கிப் பல இன்னல்களை நாட்டுமக்களுக்கு நல்கின. அந்நாளில் கழகத்தார் பலவழியாலும் முன்னின்று எதிர்ப்பத்தூண்டியும், எதிர்ப்பார்க்குத் துணை புரிந்தும் எதிர்த்தும் வந்தனர்; வருகின்றனர்; வருவர். 23-11-36 'தமிழ் நாட்டுக்கு இந்தி வேண்டுமா?' என்னும் தலைப்புக்கொண்ட வெளியீடு ஒன்று

பெருமக்கட்கும், பொருவில் புலவர்கட்கும், கட்சித் தலைவர்கட்கும், ஆட்சித்துறை வல்லார்க்கும், பிறர்க்கும் விடுத்தனர். அவற்றை மனமார வரவேற்று விடையிறுக்கு முகத்தான் சான்றோர் பலரும் தத்தங் கருத்துக்களையும் ஒருங்கெழுதியுள்ளனர். அவை எண்ணில. அவற்றுள் சில ஈண்டுக் கூறுதும்: அந்நாள் முதலமைச்சராகத் திகழ்ந்த திரு. இராசகோபாலாச்சாரியார், ஆ. அருள்தங்கையா, பண்டித. சி. த. நாராயணசாமி, லங்கேச்வரன், குளித்தலை கம்பர் செந்தமிழ்ச் சங்கம், சேலம் கோ. வேணுகோபால் நாயுடு, வித்துவான் ம. இராசமாணிக்கம் பி. ஓ. எல்., புதுவை. சுத்தானந்த பாரதியார், புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம், வித்துவான் இ. சிவகுருநாதன், முகைதீன் கவிராயர் (United Theological College Bangalore) என்போராவர். மேலும் துண்டு வெளியீடாக வெளிவந்தன பல. அவற்றுட் சில: தமிழும் இந்தியும், ஹிந்திமொழிப் பயிற்சியா? என்பன.

ஆசிரியர் "மறைமலையடிகளார்" அவர்கள் அந்நாளில் இந்தி எதிர்ப்புக் கூட்டங்களில் தலைமை தாங்கி வன்மையாகக் காரணங் காட்டிக் கண்டித்தும் 'இந்தி பொது மொழியா' என்னும் நூல் வாயிலாக இந்தியின் தோற்றமும் அதன் வளமிலாத் தன்மையும், இலக்கண இலக்கியங்களில் ஏதுந் தோன்றாமையும், தூய இந்தி பேசு மக்களின் தொகைச் சுருக்கமும், வடநாட்டின்கண் இந்தியினைப் பலரும் புரிந்துகொள்வர் எனப் புகலும் பொருத்தமில் உரையும், பிறவுந் தெளிவுறக் காட்டி விளக்கியுள்ளார்கள்.

ஏறத்தாழக் கால்நூற்றாண்டுகளாக நந்தமிழ் நாட்டில் இந்திப் போராட்டம் இருந்துகொண்டேயிருக்கிறதென்றால் ஆட்சியாளர் உண்மையோர்ந்து மாந்தர் குரலுக்கு மதிப்புக் கொடுத்துக் குடியாட்சியின் நன்மையையும் மேன்மையையும் நாட்டாமையே அதற்கு ஏதுவாகும் எனப் பிறர் எண்ண இடமாகின்றது.

அண்மையில் குடியரசுத்தலைவர் திரு. இராசேந்திரப் பிரசாத் வெளியிட்ட கட்டளையில் 1965க்குப் பின் எல்லாத் துறைகளிலும் இந்தியே ஆட்சி மொழியாக இருக்கும், ஆங்கிலம் அகற்றப்பட்டு விடும் எனக் கூறியது நாட்டில் கிளர்ச்சிக்கு இடமாயிற்று.

குடியரசுத்தலைவர் 29-7-60இல் ஐதராபாத் உருது இலக்கியக் கழகத்தில் பேசியதன் சுருக்கம்: "ஒரு மொழி மற்றொரு மொழியிலிருந்து சொற்களை எடுத்துத் தாராளமாகக் கையாள ஆரம்பித்துவிட்டால் மொழிபற்றிய தகராறுகள் பெரும்பாலும் தீர்ந்துவிடும். இந்தி மொழியிலும் உருது மொழியிலும் போதுமான அளவு சொற்கள் இருக்கின்றன. உருதுவும் இந்தியும் வெவ்வேறான மொழிகள் அல்ல. உருதுவுக்கும் இந்திக்கும் இலக்

கணம் ஒன்றே. உருது மொழியிலிருந்து அராபிய மொழிச் சொற்களையும் பர்சிய மொழிச் சொற்களையும், இந்தி மொழியிலிருந்து சமக்கிருதச் சொற்களையும் நீக்கிவிட்டுப் பார்த்தால் இரண்டும் ஒரே மொழி என்னும் உண்மை தோன்றும்.

அதுபோலவே மற்றொரு புதுமுறையையும் கையாளலாம். அஃதாவது இந்தியில் கலந்துள்ள சமக்கிருதச் சொற்களை உருது மொழியினும் உருதுவில் கலந்துள்ள அராபிய, பர்சியச் சொற்களை இந்தியினும் கலந்துவிட்டால் நல்ல பயனும் நன்மையும் விளையும்'' என்பதே. இக்கருத்து நம் தமிழ் மொழியைப் பொறுத்தமட்டில் ஒருசிறிதும் பொருந்தாது. தனித்தியங்கும் ஆற்றலும், சொல்வளப் பெருக்கமும், புதிய சொற்களை வேண்டும் போதெல்லாம் படைத்துக்கொள்ளக்கூடிய இயற்கைப் பண்பும், தொன்மை முதலிய மேன்மையும் இல்லாத மொழிகளுக்குப் பொருந்துமேனும் அவையனைத்தும் ஒருங்குடைய தமிழ் மொழிக்கு எங்ஙனம் பொருந்தும்? குறைவிலாத் தமிழ்மொழியில் வேற்றுச் சொல் ஒன்று புகுமேனும் அச்சொல் முன் வழங்கி வந்த இயற்கைச்சொல் ஒன்றைக்கொன்றே நிலைக்கின்றது. தமிழின் இயற்கைத் தூய்மையுங் கெடுகின்றது. அதனால் தமிழ் பிறமொழிச் சொற்களைக் கடன்பெற இணங்குவது தற்கொலைக்கு ஒப்பாகின்றது. இதனை உன்னித்து விழிப்பாயிருக்க வேண்டுவது தமிழரின் பெருங் கடனாகின்றது.

வேண்டாத பன்மொழிச் சொற்கள் வந்து கலப்பதால் ஒரு மொழியின் தூய்மை கெடுவதுடன், அம்மொழியின் பண்பாடும், இயல்புங் கெட்டுப் புதுமொழியாக நின்றுவிடுகிறது. எடுத்துக் காட்டாக, பண்டு தமிழாகத் திகழ்ந்த மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு முதலியன முற்றும் மாறுபட்டு வேற்றுருவும், பெயரும் பெற்றுத் தோற்றமுறுகின்றன. இங்ஙனம் நேர்ந்த மாறுபாட்டால் ஒருகுலத் தமிழ்மக்கள் நாற்குலமாய் நண்ணார்போல் வாழ்வாராயினர். ஒரு மொழியில் வேற்றுமொழிச் சொற்கள் ஏராளமாகக் கலப்பதால் இருமொழியாகப் பிரிபட்டொழியும் என்னும் உண்மையினை இந்தியும் உருதும் வேறானமை விளக்கிய குடியரசுத் தலைவர் பேருரையா னுணரலாம். எனவே, எந்த மொழியும் தன்பாலில்லாத சொற்களையும் ஆக்க இயலாத சொற்களையும் கடன்பெறுதல் தவறாகாது. அங்ஙனமின்றி இருக்குஞ் சொல்லை விடுத்து வாளா வேற்றுமொழிச் சொற்கடன் பெறுதலும் ஆக்க முயலாது மடியராயிருக்கப் பெறுதலும் வெறுப்புக்கு இடமாகும். செந்தமிழ் மொழிக்கு இவ்விரு வகையான இடர்ப்பாடுகள் எந்த நாளினும் நேர்வதற்கில்லாமை அதனுடைய தொன்மையும், இலக்கணஇலக்கிய வளஞ்சார் நன்மையுமாமென்க

இந்தியைப்பற்றி இயல்பாகவே நடுங்கிக்கொண்டிருக்கும் தமிழ் மக்கட்குப் பிரதமர் நேரு கூறும் உறுதிமொழியினை உறுதிப்படுத்தாத குடியரசுத் தலைவர் ஆணை மக்கள் மனத்தில் பெருங் குழப்பத்தினை உண்டாக்கிவிட்டது. அதனை நீக்கு முறையில் மத்தியப் பேரரசின் உள்நாட்டமைச்சர் திரு. பந்த் கூறியதன் சுருக்கம் வருமாறு:

“1965 ஆம் ஆண்டுக்குப் பின்னும் ஆங்கிலம் இணை ஆட்சி மொழியாக இருந்து வருமென்றும், இந்திய அரசாங்க வேலைகளில் சேர்வதற்கு இந்தி பேசாத பகுதியினர் இந்தி மொழியில் கட்டாயமாகத் தேறவேண்டிய அவசியமில்லையென்றும், தலைமையமைச்சர் உறுதிமொழி கொடுத்திருந்தார்.” அதைப்பற்றி எழுந்த வினாவில் திரு. பந்த் கூறிய விடையே வருமாறு:

“தலைமையமைச்சரின் வாக்குறுதியினின்றும் மாறுபடும் எண்ணம் சிறிதும் இல்லை. தலைமை அமைச்சர் அளித்த உறுதி மொழிகளுக்கு இணங்கவே அரசின் நடவடிக்கைகள் இருக்கும் என்று குடியரசுத் தலைவர் உத்தரவில் தெள்ளத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 1965ஆம் ஆண்டுக்குப் பின்னரும் ஆங்கிலம் நீடிக்கவேண்டுமெனத் திட்டவட்டமாகத் தீர்மானித்து விட்டோம். இதன் தொடர்பாக அரசியல் சட்டவிதி முறைகளுக்கு இணங்கச் சட்டவரைவு (மசோதா) ஒன்று பாராளுமன்றத்தில் கொண்டு வரப்படும். இந்தச் சட்டவரைவு நிச்சயமாக 1965ஆம் ஆண்டுக்குள் பாராளு மன்றத்தில் கொண்டுவரப்படும். இதில் எல்லா விவரங்களும் அடங்கியிருக்கும். இந்திய அரசு வேலைகளில் சேரவிரும்பும் இந்தி பேசாத பகுதியினர் இந்தித் தேர்வில் கட்டாயமாகத் தேரவேண்டுமென நிபந்தனை விதிக்கப்படவில்லை. சிறிது காலத்திற்குப் பிறகு இந்திய அரசு வேலையில் சேர்வோர்க்கு இந்திமொழித் தேர்வைக் கட்டாயமாக்கவேண்டுமென ஆட்சி மொழி பற்றிய பாராளு மன்றக்குழு பரிந்துரை செய்திருக்கிறது. ரல் அந்தப் பரிந்துரையை நாங்கள் ஏற்க மறுத்துவிட்டோம்.”

குடியரசுத்தலைவர் டாக்டர் பிரசாத் அவர்கள் ஐதராபாத் இந்திப் பிரசார சபைப் பட்டமளிப்பு விழாவில் பேருரையாற்றிய போது குறிப்பிட்டதன் சுருக்கம்: “இந்தி மொழியை எவர் மீதும் ஒருபோதும் வலுக்கட்டாயமாகத் திணிக்கமாட்டோம்” என்பதே.

**பாராளுமன்ற தி, மு. க. உறுப்பினர் திரு. ஈ. வெ. கி. சம்பத்துக்கு பண்டித நேரு அவர்கள் தந்த மறுமொழி வருமாறு:**

“மொழிச் சிக்கலைக் குறித்து நான் அளித்த வாக்குறுதிகளை முழுக்க முழுக்க அப்படியே இந்திய அரசு நிறைவேற்றி

வைக்கும்" எனப் பாராளுமன்ற உறுப்பினர் திரு. ஈ. வெ. கி சம்பத்துக்கு எழுதியுள்ள தலைமை யமைச்சர் கடிதத்திற் கூறியுள்ளார். ஆட்சிமொழி பற்றிக் குடியரசுத் தலைவர் பிறப்பித்துள்ள உத்தரவுத் தொடர்பாகத் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர்களில் ஒருவரான திரு. சம்பத் தனிப்பட்ட முறையில் ஒரு கடிதம் எழுதியிருந்தார். இந்தக் கடிதத்திற்கு நேரு எழுதியுள்ள பதில் கடிதத்தில் கூறிய விடையே மேற்குறித்ததும் வருவதுமாகும். "மொழிச் சிக்கலின் தொடர்பாக நான் அளித்துள்ள வாக்குறுதிகளினின்று இந்திய அரசு அணுவளவும் பிறழாது. மொழிச்சிக்கல் குறித்து மக்கள் சபையில் நான் அளித்துள்ள உறுதிமொழிகளுக்கு முரணாக ஒருபோதும் இந்திய அரசு நடந்ததில்லை. குடியரசுத்தலைவர் உத்தரவில் என் வாக்குறுதிகள்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதையே இரண்டு நாட்களுக்கு முன்னர் உள்நாட்டமைச்சர் மக்கள் சபையில் வலியுறுத்திக் கூறியிருக்கிறார். சென்னை நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியமும் இதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். ஆகவே இச்சிக்கல் குறித்து ஏன் தவறான கருத்துத் தோன்றியிருக்கிறதென்பது எனக்கு விளங்கவில்லை. பழைய வாக்குறுதிகளுக்கிணங்கவே நாங்கள் நடந்து வருகிறோம். நமது குடியரசுத் தலைவரை அவமதிக்கும் முறையில் உங்கள் கட்சி (தி. மு. க.) நடந்துகொள்வது மிகவும் வருந்துதற்குரியது" என்பதே.

மேற்கண்ட மறுமொழி வருவதற்கு வாயிலாகப் பாராளுமன்ற உறுப்பினர் பதினைவர் கைச்சாத்திட்ட கடிதம் ஒன்று திரு. நேரு அவர்களுக்கு விடுக்கப்பட்டுள்ளது. அது வருமாறு:

திரு. என். சிவராசு (குடியரசுக் கட்சி), ஈ. வெ. கே. சம்பத், ஆர். தர்மலிங்கம் (தி. மு- க.), டாக்டர் ஏ. கிருட்டிணசாமி (சுயே), முகம்மது இமாம், பி. ஆர். ஜே. கோயாங்கர், என். பி. சண்முகக் கவுண்டர், எம். எஸ். சுகந்தி, ஹெம்பருவா, பி. ஜே. கெயிக்வாட், பி. சி. கேம்பிள், டி. ஏ கட்டி, கமால்சிங், ஜெய்பால்சிங், என். சி. பரூச்சா ஆகிய பதினைவர். "ஆட்சிமொழி உத்தரவில் நேருவின் வாக்குறுதி பற்றித் தெளிவான குறிப்பு இல்லாவிட்டால் பல்வேறு அமைச்சுத் துறைகளும், அரசுத் துறைகளும் ஆட்சிமொழிச் சிக்கல் குறித்துத் தங்கள் தங்கள் மனம் போனபடி நடக்க வழி ஏற்படும். இந்த அச்சத்தைப் போக்க மக்கள் சபையில் தாம் அளித்த வாக்குறுதிகளை மீண்டும் வலியுறுத்தித் தலைமை யமைச்சர் ஓர் அறிக்கை வெளியிடுதல் வேண்டும். 1965ஆம் ஆண்டிற்குப் பிறகும் தேவையான காலம் வரை ஆட்சிமொழியாக ஆங்கிலத்தைத் தொடர்ந்து பயன்படுத்த வழிசெய்யும் சட்டம் ஒன்றைப் பாராளு மன்றத்தில் கொண்டு

வருதல் வேண்டும். ஆட்சி மொழியில் மாறுதல் செய்வதுபற்றி முடிவு செய்வதில் இந்தி பேசாத மக்களின் குரலுக்கு முதலிடங் கொடுத்தல் வேண்டும். இந்த நடவடிக்கைகள் எடுக்கப் படுமானல் நாட்டு மக்களிடையே ஒற்றுமைக்கு வழி ஏற்படும். அத்துடன் குடியரசுத் தலைவரின் சென்னை மாகாணச் சுற்றுச் செலவில் விரும்பத்தகாத நடவாமல் தடுக்கமுடியும்" என்பதே.

இதுகாறுங் கூறியவாற்ருல் விரிந்த நம் பரத கண்டத்தில் பதினன்கு மொழிகள் ஆட்சி மொழியாம் ஆக்கமுடைத்தென வரையறுக்கப்பட்டவற்றுள் ஒன்ருகிய இந்தி மொழிக்குத் தனிப் பெருமை வருவது எங்ஙனம் என ஏனையார் எண்ண நேர்வது இயல்பே. ஒரு மொழி பெரும்பான்மையோரால் பேசப்படுவ தென வைத்துக்கொண்டாலும் ஏனைய மொழியாளர்களின் தொகையை நோக்கும்போது அப் பெரும்பான்மை மிக மிகச் சுருங்கிய சிறுபான்மையாகிவிடும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. மேலும் அம்மொழியாளர்கட்குத் தங்கள் மொழி ஆட்சி முதன்மை பெற்று வீறுகொண்டுள்ளதெனத் தருக்குண்டாவதற்கு ஏதுவுமாகும். ஏனைமொழியாளர்கட்கு நம்முடைய மொழி ஆட்சி முதன்மை பெறவில்லையே என ஏங்குதற்கும் இடனுண்டாவதும் இயற்கையாகும். இவை அனைத்தும் எளிதின் அகன்றொழிதற்கும், அனைவரும் உவப்புடன் ஏற்று ஒழுகுவதற்கும் துணை ஆட்சி மொழியாக இருத்தல் வேண்டுமென வரையறுக்கப்பட்டுள்ள ஆங்கிலமே ஆட்சிப் பொதுமொழியாக அமைத்துக்கொள்வது சாலச் சிறந்ததாகும் எனக் கருதுதல் எல்லார்க்கும் ஏற்புடைத்தாம். மேலும் ஆங்கிலம் உலகப் பொது மொழியாகவுந் திகழ்கின்றது. நூல்வளமிக்கது. நம் பரத கண்டத்தில் உரிமை வேட்கை எழுப்பிப் பெறத் தளராதுழைத்த தலைவர்கள் ஒருவரோடொருவர் அளவளாவத் துணைநின்றதும் மக்கட்குள் அவ்வுணர்ச்சியை யெழுப்ப முன்னின்றதும் அவ்வாங்கிலமேயாம். இப்பொழுதும் நம் பரத கண்டத்திற்கு உலகத் தொடர்பிற்கு உறுதுணையாக நிற்பதும் அதுவே. மாநிலக் கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள்கையாள்வதும் அதுவே. கற்று வல்ல பலரும் அம்மொழியிலேயே சிறந்திருக்கின்றனர். அதுவே மேலும் கற்பதற்கும் எளிதாக இருக்கும். இத்தகைய சிறந்த காரணங்களால் பேரரசினர் ஒவ்வொரு மாநிலத்தும் ஆட்சிமொழியும் பல்கலை கற்பிக்கு மொழியும், முறைமன்ற மொழியும் பிறவும் அவ்வம் மாநில மொழியாகவே இருத்தல் வேண்டுமெனவும், பொது ஆட்சி மொழி ஆங்கிலமாக இருத்தல் வேண்டுமெனவும் ஆணையிடுவரேல் அது பொருத்தமுடையாமெனத் தெரிவித்து அங்ஙனம் செய்யுமாறு வேண்டிக் கொள்கின்ருேம்.

# *தூயோன்

[வித்துவான். நெல்லை. க. சுப்பிரமணியன்]

தூயோன் என்பான் அகமும் புறமுந்
தூய்மையால் திகழும் வாழ்க்கையன் ஆவான்
பயனிலா நினைவும் பண்பிலாச் செயலும்
மறந்தும் அவன்பால் மருவுதல் இலவே.
நில்லா வுலகில் நீத்தவன், அறவோன்,
'அல்லல் நீத்த உவகை'யின் வாழ்வான்
அறிவுசேர் நெஞ்சிற் குறிக்கோள் கொண்டு
வறிதிடர்ப் படாது வாழ்குவன் அமைந்தே.
அரண்மனை வாழ்வும் படைஞரின் காப்பும்
ஈண்டிவ் வுலகில் வேண்டிலன் மாதோ!
கொடுமையின் இடியொலி கேட்டுநனி நடுங்கி
உய்ந்துசெல் வழியும் நாடுதல் இலனே.
வாழ்க்கையில் எதிர்ப்படுந் துயரெலாங் காணின்
'நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரள வின்றே' ஆனால்,
ஏனோர்க் கெல்லாம் இவ்வள வாயினும்
துகளறு சிறப்பின் துயோற் கிலவே.
அதிர்வின்றி அவன்விழி ஒளிமிகுந் திருக்கும்
வினையின் விளை வாகிய வேதனை எண்ணித்
தினையின் அளவும் கலங்கித் திரியான்.
இடரெலாங் கண்டவன் ஏளனஞ் செய்குவன்
அவற்கு,
மேன்மையாம் நினைவே மேதகு நண்பன்
தான்பிறர்க் கெல்லாம் வாழ்ந்துகட னாற்றிய
பயனுறு நாட்களே பழியிலாச் செல்வம்
உயர்நிலை உலகத்து உறையுள்வேட் டதனால்
அஃதவன் பயிலும் அரும்பெரு நூலாம்;
அதற்குரிய நெறியே அவன்மெய் யுணர்வாம்
வான்றமிழ்ப் பண்பின் தூயோன் ஆதலின்
'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோன் ஆயினன்' வாழ்குவன் சிறந்தே.

* THE UPRIGHT MAN என்னும் ஆங்கிலப் பாட்டின் கருத்தைத் தழுவியது.

# சோலையப்ப சுவாமிகள்

[திரு. சு. அ. இராமசாமிப் புலவர்]

## தோற்றம்

சோலையப்ப சுவாமிகள் என்னும் பெயருடைய இவர் ஏறக்குறைய இருநூறு யாண்டுகட்கு முன்னர்க் கிழைக் கடற்கரை யோரத்தில் உள்ள வேடநத்தம் என்னும் ஊரில் அனுப்பக் கவுண்டார் குலத்தில் தோன்றினர். இவர் இளம்பருவம் முதற் கொண்டே அறிவு நூல்களைக் கற்று மெய்யறிவு பெறுதற்காம் வழியை நாடிநின்றார். வேடநத்தம் சிற்றூர் சேதுவுக்குஞ் செல்லும் வழியில் அமைந்தது. இராமேசுவரத்திற்குப் போகும் வடநாட்டுத் துறவிகள் இவ்வழியே செல்லுவார்கள். அவ்வாறு செல்லுவோருக்கு வேண்டிய உதவிகளை இவர் செய்து அவர்களுடைய அருளைப்பெற்றார். அவ்வாறு செல்வோர்களில் தகுந்த பெரியோர்களிடம் அருளுரை பெற்றுத் தத்துவ உண்மைகளை நன்றாய்த் தெரிந்துகொண்டார்.

## ஆசிரியர்

பிறகு இவர் எப்போதும் வென்றான் என்னும் ஊருக்குச் சென்று அங்குப் பள்ளிக்கூடம் ஒன்று வைத்து மாணவர்கட்குக் கல்வி போதித்துக் கொண்டிருந்தார். மாணவர்களிடத்தில் இவர் பேரன்பு காட்டியபடியால் அவர்களும் இவரிடத்தில் மிகுந்த பற்றுடையவர்களாக இருந்தார்கள். பின்னால் நிகழக்கூடிய செய்திகளை முன்னால் அறிந்து சொல்லும் ஆற்றலும் இவரிடம் அமைந்திருந்தது.

## ஐயப்ப சுவாமிகள்

இவர் பள்ளிக்கூட ஆசிரியராக அமர்ந்திருந்த காலத்தில் கழுகுமலையில் இருந்து துறவியொருவர் எப்போதும் வென்றான் ஊருக்கு வந்தார். அவருடைய பெயர் ஐயப்ப அடிகள். அவர் ஊருக்கு வடக்கில் இருந்த குளக்கரையில் தங்கியிருந்தார். சோலையப்ப சுவாமிகள் ஐயப்ப அடிகளைக் கண்டு வணங்கினார். அவரையே தம்முடைய குருவாகக் கொண்டு ஒழுகினார். அவருக்கு வேண்டிய தொண்டுகளைச் செய்தார்.

### தீயைத் துணியில் முடிதல்

ஒருநாள் ஐயப்பஅடிகள் சோலையப்ப சுவாமிகளைப் பார்த்து "சிறிது கஞ்சாவும் நெருப்புந் தேடிக் கொண்டுவா" என்று கட்டளையிட்டார். சோலையப்ப அடிகள் விரைந்து சென்று கஞ்சாவைப் பெற்றார். பிறகு ஒரு வீட்டிற்குச் சென்று "சிறிது நெருப்பு வேண்டும்" என்று கேட்டார். வீட்டில் இருந்த பெண் நெருப்பை ஒரு கரண்டியிலே எடுத்துக்கொண்டுவந்து வேறெதிலேனும் வாங்கிக் கொள்ளுமாறு கூறினாள். சோலையப்ப அடிகள் சுற்றுமுற்றும் பார்த்தார். நெருப்பை வாங்குவதற்கு எதுவும் அகப்படவில்லை. தம்முடைய ஆடையின் ஒரு முனையிலே வாங்கி முடிந்துகொண்டு சென்றார். குருவினிடம் கஞ்சாவைக் கொடுத்து விட்டுத் தீயையும் முன்தானையில் இருந்து அவிழ்த்து எடுத்துக் குருவிடம் கொடுத்தார். ஐயப்ப அடிகள் இப் புதுமையைக் கண்டு வியப்படைந்தார். அது முதல் சோலையப்ப சுவாமிகளை ஐயப்ப அடிகள் மிகவுங் கண்ணுங் கருத்துமாகப் போற்றிவந்தார். பிறகு ஆசிரியரும் மாணவரும் பல ஊர்கட்குச் சுற்றுப் பயணஞ் சென்றார்கள். மக்களுக்கு அறிவுரை வழங்கி அவர்களை நல்வழியில் நடக்கச் செய்தார்கள்.

### வெற்றிலை பாக்கு

ஒருநாள் சோலையப்ப அடிகள் உணவு சமைத்துக்கொண்டிருந்தார். அப்போது ஐயப்ப அடிகள் இவரைக் கூப்பிட்டுச் "சிறிது வெற்றிலை பாக்கு இடித்துக்கொண்டு வா" என்று கட்டளையிட்டார். அப்பொழுது வேலை மிகுதியாக இருந்த படியால் வழக்கம்போல் பாக்கு வெற்றிலைகளை இடித்துக்கொடுக்க முடியவில்லை. தம் வாயிலே போட்டு நன்றாக மென்று ஐயப்ப அடிகளிடங் கொடுத்தார். அவர் அதனை வாங்கி வாயிலே போட்டுக்கொண்டு, "இன்று நீ இடித்துக் கொடுத்த வெற்றிலை பாக்கு மிகுந்த மணம் பொருந்தியதாகவும் மனத்திற்கு இனிமையுடையதாகவும் இருக்கிறதே! எவ்வாறு இதனை இடித்தாய்? இதனை இடித்த கருவியைக் கொண்டு வா, பார்ப்போம்" என்று சொன்னார். குருவினுடைய உரையைக் கேட்ட உடனே சோலையப்பர் தம் வாயிலே போட்டு மென்று கொடுத்த செய்தி தெரியுமாறு தம் தலையைத் திருகிக் கையில் எடுத்துக் காட்டினார். இவர் தெய்வத்தன்மை அமைந்தவராகவும் அட்டாங்கயோகத்தில் வல்லவராகவும் இருந்த படியால் இவருக்கு இஃது எளிமையான செயலாயிற்று.

### இருவருக்கும் மாறுபாடு

ஐயப்ப அடிகள் சோலையப்ப சுவாமிகளின் வியத்தகு செயலைப் பாராட்டினாராயினும் உடனே அவருடைய மனம்

மாறுபட்டது. சோலையப்பரைப் பார்த்து, "உன்னிடஞ் சித்தர்கட்குண்டான குணங்கள் யாவும் குடிகொண்டிருக்கின்றன. இதனை நான் முன்னரே ஒருவாறு உணர்ந்துள்ளேன். ஆயினும் குருவாகிய என்னிடத்தில் நீ சிறிது அடக்கமாக நடந்துகொள்ள வேண்டாமா? குருவுக்கு மிஞ்சின சீடன் என்பதைக் காட்டு கிறாயே உன்னுடைய இறுதிக் காலத்தில் உடல்வேறு தலைவேறாகப் போகக் கடவது" என்று வசவுரை வழங்கினார். உடனே சோலையப்ப சுவாமிகளும் தம்முடைய குருவைப் பார்த்துத் "தங்களுடைய திருவாக்கை நான் அன்புடன் ஏற்றுக்கொள்ளு கிறேன். குருவாக இருக்கும் தாங்கள் என்னிடத்தில் சிறிதும் அருள் செய்யாமல் இவ்வாறு வசவுரை வழங்கியது தக்கதன்று. ஆகவே சுவாமிகளுக்கும் சுவாமிகளின் வழிமுறையார்களுக்கும் இறுதிக் காலமானது இருப்பிடத்தில் ஏற்படாமல் இதர இடங் களில் ஏற்படக் கடவது" என்று எதிர்வாக்குக் கொடுத்து வசவுரை வழங்கினார்.

### ஐயப்ப சுவாமிகள்

ஒருவருக் கொருவர் வசவுரை வழங்கிக்கொண்ட குருவும் மாணவரும் பிரிந்தார்கள். ஐயப்ப அடிகள் பலவிடங்களில் சுற்றுப்பயணஞ் செய்துவிட்டுக் கடைசியாய்த் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள செட்டியாப்பத்து என்னும் ஊரில் தங்கி யிருந்தபோது அடக்கமானார்.

### சோலையப்ப அடிகள் இறுதி

சோலையப்ப அடிகள் தம் குருவைப் பிரிந்து திருநெல்வேலி, ஆழ்வார் திருநகரி முதலிய பல இடங்களிலும் சுற்றுப் பயணஞ் செய்து மக்களுக்குப் பல புதுமைகளைக் காட்டினார். குருசாமிச் செட்டியாருக்குக் குன்மரோகத்தைப் போக்கினார். நாராயண ரெட்டியாருக்குக் கண்ணோயை ஒழித்தார். மாசானமூப்பனு ருக்குக் காசநோய் நீங்கச் செய்தார். மற்றும் பலருக்குப் பலவகையான நோய்களை நீக்கினார். சோலையப்பர் ஒட்டப் பிடாரம் என்னும் ஊரில் உலகம்மன் கோயிலில் சிலகாலந் தங்கியிருந்தார். இரவு கோயிலில் வழிபாடு முடிந்து எல்லோரும் போன பிறகு இவர் தம்முடைய உடலைக் கருத்துடன் பார்த்துக் கொள்ளுமாறு மாணவன் ஒருவனிடஞ் சொல்லிவிட்டுத் தம் தலையோடு மட்டும் விண்வழியாகப் பலவிடங்கட்குஞ் செல்வார். மறுநாள் பொழுது விடியுமுன் திரும்பி விடுவார்.

ஒருநாள் கோயிலில் பூசை செய்கிறவர் வழக்கத்திற்கு மாறாகச் சிறிது நேரம் முன்னால் வந்து விட்டார். சோலையப்ப

அடிகளாரின் தலையற்ற உடலைக் கண்டு அஞ்சினர். ஏதோ மோசம் நேர்ந்து விட்டதென்று ஊரார்கட்குத் தெரியப்படுத்தினர். எல்லோரும் வந்து பார்த்து மாணவனை உசாவினார்கள். மாணவர் உள்ளதை உரைத்தார். ஊரார்கள் உடலையெடுத்து எரிக்க முயன்றார்கள். அடிகளாருந் திரும்பி விட்டார். தம்முடைய மறைமுகச் செயல் வெளியாகிவிட்டதை யுணர்ந்தார். இனிமேல் உடலிற் புகுந்து வசிப்பதில்லை என முடிவு செய்தார். விண்ணில் இருந்தபடியே உருவிலி வாக்காய், தமது உடலை எப்போதும் வென்றான் ஊருக்குக் கீழ்புறம் கருடன் வட்டமிடும் எல்லையில் அடக்கஞ் செய்துவிடுமாறு கட்டளையிட்டு மறைந்தார். அன்பர்கள் அவ்வாறே அவருடைய உடலை அவ்வூருக்குக்கொண்டு போய் அடக்கஞ் செய்தார்கள். இவர் இயற்றிய வியத்தகு செயல்கள் பல என்று விளம்புகின்றனர். இருவரும் வழங்கிக் கொண்ட வாக்குகளும் பலித்துவிட்டன.

நூல்கள்

இப் பெரியார்மீது சிலர் புகழ்ப் பாமாலைகள் பாடியுள்ளனர்.

## தமிழக வழிபாட்டின் தனிமாண்பு

"சிவனெனும் நாமந் தனக்கே யுடைய செம்மேனி எம்மானை" விழுமிய முழுமுதலாகக்கொண்டு தொன்றுதொட்டு இன்றுகாறும் தொடர்பாக வழிபட்டு வருவது தமிழகத்தின் தனிச் சிறப்பாகும். சிவமென்னுஞ்சொல் நன்மை, மங்களம் முதலிய விழுப்பொருள்களைக் குறிக்கும் 'சிவத்தைப் பேணின் தவத்திற் கழகு' என்பது தமிழ் மூதாட்டியார் திருமொழி. தவம் என்பது தெய்வ நினைவூட்டும் இல் வாழ்க்கையேயாம். சிவம் அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூவகை நிலையினையுங் கடந்தது. எனினும் வழிபாட்டின் பொருட்டு அம்மூவகை நிலையினையும் சிவபெருமான் கொண்டருள்வன். அவ் வுண்மை வருமாறு :

பொன்னம் பலம்அருவம் பொற்றாண் அருவுருவம்
பின்உருவம் கூத்தப் பிரான் பொற்றாண்—சிவலிங்கம்

—தொண்டன்

# மக்கள் பண்பாடும் மகளிர் நிலையும்

[வித்துவான், சு. குமாரசுவாமி ஆச்சாரி, M. A., மயிலம்.]

(செல்வி சிலம்பு, ௩௪, பரல் ௧௧, ௫௨௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

மகளிர் ஆடவருக்கு அடங்குதல்

மகளிர் கற்புநெறி வழுவாது வாழ்தல்வேண்டும். ஆதலின் அவர்கள் கணவர்க்குக் கீழ்ப்படிந்து பணிவிடை செய்து வாழும் கடமையுடையவராயினர். கணவர்களோடு வாழும் காலத்திலும் தம் விருப்பப்படி புணர்ச்சியின்பம் பெறும் உரிமை சமயச் சார்பான சில கட்டுப்பாடுகளால் குறைக்கப்பட்டது. சமயத்தால் எழும் நன்மையை இங்கு ஓர்ந்துணர்தல் வேண்டும்.

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்."

என்னும் வள்ளுவர் வாக்கினை உன்னுக. இக் கற்புநெறி முதலில் ஒருவித வெறுப்புணர்ச்சியை மகளிர்க்குத் தரும் எனினும் சிறிது காலத்திற்குப் பிறகு அந்நெறி தங்களுக்குப் பெருமை யளிக்கிறது என்பதைப் புகழ் விரும்பும் மகளிர் உணர்வர். ஆடவர்கள் தம் புதல்வர்களையும் அடக்கி ஆளும் உரிமையுடையவர் ஆவர். தம் பெற்றோர்களுக்கு அவர்கள் வேண்டும் பொருளைத் தருபவரையே மகளிர் தம் கணவராகக் கொள்ள வேண்டும் என்ற வழக்கம் தோன்றிய காலத்திலிருந்து, தம் கணவரது ஏனைய பொருள்களைப் போல மனைவியரும் ஒரு பொருளாகக் கருதப்பட்டனர். ஆதலின், ஆடவர் தம் மனைவியரை விற்கும் உரிமையும் பெற்றனர்.

தமக்கு அடங்கி உழைப்பவருக்குத்தான் தம் பெண்களைத் தரவேண்டும் என்று பெண்ணின் பெற்றோர் விரும்பியகாலத்தும், மகளிருக்குச் சீதனம் தரும் வழக்கம் விளங்கியகாலத்தும் மகளிர் தம் கணவருக்கு ஏனைய பொருள்கள்போல ஒரு பொருளாக இருக்கிற நிலை மாறியது. கணவனொடு மனைவி சம உரிமை பெறும் நிலை எழுந்தது. சம உரிமை என்ற நிலை எழவே, காம இச்சையை அடக்கிவாழ முடியாத மகளிர் தம் கணவரை விட்டு, விலகிவிடுவது என்ற வழக்கமும் தோன்றியிருக்கிறது. 'ஒருவனுக் கொருத்தி' என்ற கொள்கை நாளடைவில் வளர்ச்சியடைந்

ததனுல் ஆடவரும் மகளிரும் தமக்குரிய காதலரைத் தாமே தேடிக்கொள்ளவும், வேண்டாதபோது விலகிவிடவும் உரிமை யுடையவர்களானுர்கள். இந்நிலை கற்புக்கு இழுக்காதலின் பண் பாட்டில் குறைபாடு உண்டாம்.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பெனும்
திண்மை யுண்டாகப் பெறின்."

பண்பாடில்லா நாகரிகம்

இங்ஙனம் ஆடவர்கள், கணவன் என்றும் தந்தை என்றும் இருவகைப்பட்ட உரிமையின்பம் உடையவராயினர். பெற்ளேர் களின் உடன்பாடு பெற்றே மணங்கொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு எழுந்தது. இக் கட்டுப்பாடு மிகுந்ததனுல் மகளிர் தம்பெற்ளேரின் உடன்பாடின்றியே களவொழுக்கத்திலீடுபட்டுத் தம்மால் விரும்பப்பட்டவனெடு பிறரறியாது தம் ஊரைவிட்டு அகன்றுவிடுவது என்ற வழக்கந் தோன்றியது. இங்ஙனம் உடன்போக்கு நிகழ்ந்தகாலத்தில் பெண்ணின் தமர் சென்று அவர்களைத் தடுத்து அவ் வாடவனெடு பூசலிடுவது முண்டு. அவர்கள் பெண்ணின் கற்புநிலை யுணர்ந்து, அவனுக்கே அவளை மணம் புணர்த்தலும் உண்டு. அங்ஙனம் மணம் புணர்க்குங் காலத்தில் அவன் செய்த குற்றத்திற்காக அவன்பால் பொருள் பெறுதலும் உண்டு. தாம் விரும்பிய பெண்ணை மணங்கொள்ள லாகாது என மகனைத் தாய் தந்தையர் கடியும் நிலையுமுண்டு. அப்போது மகன், தன் தந்தையின் சொத்தில் தனக்குரிய பங்கைப் பெற்றுக்கொண்டு தாய் தந்தையரைவிட்டு விலகி வாழ்தலுமுண்டு. இவ்வாறு தம்பெற்ளேர் உடன்பாடின்றியே ஆடவரும் மகளிரும் தம் காதலரோடு வாழும் நிலை மிகுந்ததனுல் வியபிசாரம் ஒறுத்தலுக்குள்ளாகியது. ஆதலின், பரத்தையர் கூட்டம் நாட்டில் மெ

தொல்காப்பியத்துள்

இந்தச் சிறந்த கொள்கை (கற்புநெறி) வளம்பெறத் திகழ்ந்த காலத்தில் தான் தொல்காப்பியம் எழுந்தது. மேற்கூறப்பட்ட பல்வகைக் காமவாழ்க்கை நிலையின் அடிச்சுவடுகளைத் தொல் காப்பியத்துள் காணலாம். 'களவியல்' எனும் ஒரு பகுதியுள்ளமை யினுல் ஆடவரும் மகளிரும் தாம் விரும்பியவாறு காம இன்பம் பெறும் உரிமையுடையவராகத் திகழ்ந்தனர் என்பது விளங்கும். 'பாங்கற் கூட்டம்,' 'பாங்கியிற் கூட்டம்,' 'சேட்படை' என்பவை களால் இக் களவொழுக்கம் அருகிய நிலையில்தான் இருக்கலாமே யொழிய நீடித்தலாகாது என்பது விளங்கும். 'வரைவு கடாதல்'

என்னும் பகுதியினால் மகளிர் ஆடவரைக் கற்புநெறியில் திருமணம் கொள்ளவேண்டும் என்பது புலனாம். 'அறத்தொடு நிற்றல்' என்னும் பகுதி, 'மகளிர் களவில் இன்பம் துய்த்த காதலனையன்றிப் பிறரை மணங்கொள்ளுதல் ஆகாது' என்ற வழக்கம் நம் நாட்டில் இருந்தது என்பதை அறிவிக்கிறது. 'நொதுமலர் வரைவுகூறி வரைவு கடாதல்' என ஒரு பகுதி உண்மையினால், மகளிர் களவொழுக்கத்தில் ஈடுபட்டிருப்பினும் பெற்றோரால் நிச்சயிக்கப்பட்டவர்களையே மணம் செய்துகொள்ள வேண்டும் என்ற கட்டுப்பாடு நாட்டில் இருந்தது என்பதும் நன்கு புலனாம். மகளிர் தாம் விரும்பிய காதலனையடைய இடையூறுண்டாயின் பிறர் அறியாமல் அக்காதலனொடு ஊரை விட்டு அகலுவர் என்பது 'உடன்போக்கு' என்னும் பகுதியால் விளங்கும். 'அறத்தொடு நிற்றல்' என்னும் பகுதியால் மகளிர், தாம் திருமணங் கொள்வதன்முன் கன்னிமை யழியப்பெற்றார் என்ற குற்றம் வாராது காத்துக்கொண்டனர் என்பது விளங்கும். 'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்' என்னும் பகுதியால் பெண்ணின் பெற்றோர் அக் குற்றத்திற்குக் காரணமான ஆடவரிடம் தாம் வேண்டும் பொருளைப்பெற்ற பின்னரே அவ்வாடவர்க்கு மகளிரை மணம் செய்துகொடுத்தனர் என்பது விளங்கும். பிறப்பு, குடிமை முதலிய பத்தினையும் ஆய்ந்து பெண்ணின் பெற்றோர் தர, அப்பெண்ணை மணம் கொள்வது தான் சிறந்தது என்ற கொள்கையே சிறந்தது என்பது களவியலை அடுத்துக் கற்பியலை அமைத்த முறையினால் உணரலாம். 'உடன் போக்கு நிகழினும் திருமணச் சடங்கு நிகழ வேண்டும்' என்ற கட்டுப்பாடு இருந்தது என்பது "கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே" என்பதனால் புலனாம்.

நன்முறையில் அமைந்த காமவாழ்வே, சமூகம் நன்னிலையில் விளங்குதற்குக் காரணமாம் என்பது "அகத்திணை மருங்கின் அரிறப உணர்ந்தோர், புறத்திணை யிலக்கணம் திறப்படக் கிளப்பின்," என்னும் தொல்காப்பியர் கூற்றால் விளங்கும். தொல்காப்பியப் புறத்திணை யியலில் காணப்படும் தொடாக் காஞ்சி, ஆஞ்சிக் காஞ்சி, மூதானந்தம், முதுபாலை, தாபதநிலை, பாலைநிலை முதலிய துறைகளும் சமூக வாழ்வில் ஆடவர்க்கு மகளிர் துணையாவர் என்பதை விளக்கும். புறப்பொருள் வெண்பா மாலையில் காணப்படும் தலைத்தோற்றம், உண்டாட்டு, வெறியாட்டு, சிருங்காரநிலை, உவகைக் கலுழ்ச்சி, மூதில் முல்லை, ஆனந்தப் பையுள், நாண்முல்லை, இல்லாண்முல்லை, பான்முல்லை, கற்புமுல்லை, குற்றிசை, குறுங்கலி முதலியனவும் சமூகவாழ்வில் மகளிர் நிலையைப் புலப்படுத்துவன காண்க. பெண்பாற் கைக்கிளை

பற்றியும் பெருந்திணை பற்றியும் தொல்காப்பியம் விரித்துக் கூறவில்லை. அவை சமூக நல்வாழ்விற்கு ஏற்றனவல்ல என்பது தொல்காப்பியர் கருத்தாம். ஆதலின் தொல்காப்பியர் காலம் நாகரிகத்தின் சிகரமாக விளங்கியது என்பது போதரும். புறப்பொருள் வெண்பாமாலை தோன்றியகாலத்து அரசியல், மக்கள் நிலை, மகளிர்நிலை பற்றி உணரின் தொல்காப்பியர் முதலிய பண்டையோர் கருத்துச் சிறந்தது என்பது தானே விளங்கும். தொழில் வளர்ச்சி, வாணிக வளர்ச்சி, சமய வளர்ச்சி முதலியனவும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஓர்ந்துணரின் நன்கு விளங்கும். "மாதரார், கற்பில் நின்றன கால மாரியே" என்ற கம்பன் வாக்கு இந்நிலையினை நன்கு விளக்குதலையுங் காண்க.

ஆதலின், நாடு நல்வளம் பெறவேண்டுமாயின், திருமணங் கொள்ளும் முன்பும், கொண்ட பின்பும் மகளிர் கற்புநெறி தவறாது வாழ்தல் வேண்டும் என்பது நன்கு புலனாதல் காண்க.

## மறைமலையடிகள் நூல்நிலையம்

'மறைமலையடிகள் நூல்நிலையம்' 1958 ஆகஸ்டு 24 ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை தொடங்கப் பெற்றுச் செவ்வனே நடந்து வருகிறது. முதலாண்டு நிறைவு விழாவும் சிறப்புற நிகழ்ந்தது அந்நாள் தொட்டுக் 'கொடுத்து வாங்கும் நூல்நிலையப்பகுதியும்' நிலையத்தின் அடித்தளத்தில் துவங்கப்பெற்று நடந்து வருகிறது. இதிற் சாரும் உறுப்பினர் வைப்புப்பணமாக ரூபா. 10/- (பத்து) செலுத்துதல் வேண்டும். அப்பணமும் உறுப்பினர் விரும்பும்போது திரும்பக் கொடுக்கப்படுந் தன்மையதே. இதைத்தவிர வேறு எவ்விதமான கட்டணமுங் கிடையாது. இதன்கண் இதுகாறும் ஏறத்தாழ நாற்பத்து மூன்று உறுப்பினர்கள் பயன்பெற்று வருகின்றனர். இருந்து கற்கும் நூல்நிலையத்திலும் ஏறத்தாழச் சராசரி நாடோறும் நூறுபேர்கள் பயின்று வருகின்றனர். நூல்நிலைய 'இரண்டாவதாண்டு நிறைவு விழாவும்,' கழகத்து 'ஆயிரத்தெட்டாவது நூல் வெளியீட்டு விழாவும்' அண்மையில் நிகழவிருக்கின்றன. அனைத்துலக நூலகத்திறலர் டாக்டர். எஸ். ஆர். அரங்கநாதனவர்கள் அகரவரிசையில் 'கழக நூற்களின் விளக்கப்பட்டி' ஒன்று நூலகக் கலையின்படி அமைத்துள்ளார்கள். இவ்வருஞ் செயலுக்கு அவர்தம் பொற்காலம் நூற்றிருபது மணிக்குமேல் பயன்பட்டுள்ளது. இத்தனையும் நூல்நிலையத்தால் விளைந்த நலங்களாகும்.

# சிலம்பிலே செங்குட்டுவன்

[திரு. மது. ச. விமலானந்தம், எம்.ஏ.,]

(செல்வி, சிலம்பு - ௩௪, பரல் - ௧௧, ௫௩௭ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**விறல்மிகு வேந்தன்**

அருங்குணம் பல நிறைந்தவன் மட்டுமல்லன், ஆற்றல் நிறைந்தவனும் ஆவான். ஆற்றல் அமையப் பெற்றதோடு ஆற்றலுக்கேற்ற மாற்றுண்மை நிலைபெறச்செய்யும் நீர்மையனும் ஆவான். ஆற்றலுக்கேலாத பகையிலோ அன்றிச் செயலிலோ இவன் சிறிதும் சிந்தை கொள்ளான் என்பதை, நூலறிபுலவோர் பொதியமலையினின்றோ அன்றி இமயத்தினின்றோ கல்லெடுத்துக் கங்கைப் பேர்யாற்றங்கரையிலேனும் காவிரிப்புனலிலேனும் நீர்ப் படை செய்யலாம் எனக் கூறியபோது,

"பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு
முதுநீர்க் காவிரி முன்றுறைப் படுத்தல்
மறத்தகை நெடுவா ளெங்குடிப் பிறந்தோர்க்குச்
சிறப்பொடு வரூஉஞ் செய்கையோ வன்று."

(காட்சிக்காதை, ௧௨௨ - ௨௫)

என்று கூறுகின்றமை கண்டு அறியலாம். அன்றியும், நூற்றுவர் கன்னர் வடதிசை மருங்கின் வானவன் பெயர்வது கடவுள் எழுதவோர் கற்கே யாயின் ஓங்கிய இமய மருங்கில் கற்கால் கொண்டு வீங்கு நீர்க் கங்கையில் நீர்ப்படை செய்து தாங்கள் கல் கொணர்ந்து சேர்ப்பதாகக் கூறியபோது, சேரன்,

"பால குமரன் மக்கள் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
அருந்தமி ழாற்றல் அறிந்திலர் ஆங்கெனக்
கூற்றங் கொண்டிச் சேனை செல்வது."

(கால்கோட் காதை, ௧௫௮ - ௬௨)

எனக்கூறி அவனது தன் கையே தனக்குதவியாக எண்ணும் தன்மையை—பிறர் உதவி நாடாத பெற்றியை அறிவுறுத்து கின்றமை அறியத்தக்கது.

இவனது வீரத்திற்கும் வளர் தீரத்திற்கும் ஆசான் ஒருவ கூறும் கூற்றே போதிய சான்றாக அமைவதும் காண்க:

"ஆர்புனை தெரியலும் அலர்தார் வேம்பும்
சீர்கெழு மணிமுடிக்கு அணிந்தோர் அல்லால்
அஞ்சினர்க்கு அளிக்கும் அடுபோர் அண்ணல்! நின்
வஞ்சினத் தெதிரு மன்னரும் உளரோ?"
(கால்கோட் காதை, கக - உஉ)

அடுத்து, வில்லவன் கோதை வேந்தற்கு உரைக்குமாற்றான் அமைந்ததாக உள்ள,

"கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை யாட்டிய அந்நாள்
ஆரிய மன்னர் ஈரைஞ் ஞூற்றுவர்க்கு
ஒருநீ யாகிய செருவெங் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கட் கூற்றம்
இமிழ்கடல் வேலியைத் தமிழ்நா டாக்கிய
இதுநீ கருதினை யாயின் ஏற்பவர்
முதுநீர் உலகின் முழுவதும் இல்லை."
(காட்சிக்காதை, கசுO - கஎ)

எனும் கூற்றே வேந்தனின் வீரமேம்பாட்டிற்கும் வென்றிச் சிறப்புக்கும் போதிய சான்றாகும்.

சடையினர் உடையினர் சாம்பற் பூச்சினராகவும், பீடிகைப் பீலிப்பெருநோன்பாளராகவும், பாடும்பாணியராகவும், பல்லியத் தோளினராகவும், ஆடு கூத்தராகவும் வேடமிட்டுப் பகைவர் எங்கணும் ஏந்துவாள் ஒழியத் தாந்துறைபோகுமாறு மறக்களம் முடித்தான் செங்குட்டுவன்—இஃது இவனது வாளாண்மைக் கொரு விளக்கமென்க.

வேல்மிகு தானையும் வென்றிச் சிறப்பும் மிகுந்தவனாயினும் தன் ஆற்றலை வெறும் மண்ணாசைக்கோ அன்றிப் பொன்னாசைக்கோ பயன்படுத்தினானல்லன். அறத்திற்கும் மறத்தைப் பயன்படுத்தினான் என்றே கூறவேண்டும். கண்ணகிக்கு நடுகல் சமைக்கவும், தமிழாற்றலறியாது விருந்தின் மன்னர் கூறிய இகழ்ச்சி மொழியை நீக்கவுமே அவன் வீரம் புரிந்தான் எனக் கூறும் இளங்கோவடிகள் திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலது.

"அறத்திற்கே அன்புசார்பு என்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை." (குறள், எO)

என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கும் ஒருபடி முன்னர்ச் சென்று அறத்திற்கே மறத்தையும் கையாண்டிருக்கிறான் குட்டுவன் எனும்போது இஃதென்னே என வியக்கின்றோம். இல்லையா?

சமயப் பொது நோக்குடையன்

செங்குட்டுவன் சைவ சமயத்தவனாகவே காட்டப் பெறு கின்றான். இதனை,

'செஞ்சடை வானவன் அருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ.' (கால்கோட், கஅ - கக)

'ஆனேறு ஊர்ந்தோன் அருளில் தோன்றி
மாநிலம் விளக்கிய மன்னவன்.' (வரந்தரு காதை, கசக - சஉ)

என்ற அடிகளே இனிது விளக்கும். தம் சமயப்பற்றால் பிற பிற சமயங்களை வெறுக்கவோ துறக்கவோ முனைந்தானில்லை. ஏனைய சமயங்களோடு இனிய உறவும் கொண்டிருந்தான். அதனோடு மக்கள் அனைவரும் தத்தம் சமயத்தில் உரிமையும், புறச்சமயத்தோடு உறவும் கொண்டிருத்தல் வேண்டுமென்பதற் கோர் எடுத்துக்காட்டாகவும் விளங்கினான்; இமயப் படையெடுப் பின்போது சிவனடி சென்னிமீது வைத்துச் செல்கின்றான்; அவ்வளவில் குடக்கோக் குட்டுவன் கொற்றங்கொள்கென ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்தோன் சேடங்கொண்டு சிலர் நின்றேத்தவே அதனை ஒதுக்காது அன்போடு எடுத்தணிந்து செல்கின்றான். இதனை ஆசிரியர்,

"தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள்
வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்
ஆங்கது வாங்கி யணிமணிப் புயத்துத்
தாங்கின னாகித் தகைமையிற் செல்வுழி."
(கால்கோட், சுச - சுஎ)

என அழகாக நயம்பட நவில்கின்றார்.

மக்கள் நலம் போற்றும் மன்னன்

'மக்கள் நலனே மன்னன் நலம்' என்பதை நன்குணர்ந்தவன் நம் செங்குட்டுவன். தன் குடியைக் கண்ணை இமை காப்பது போல் காத்தனன் எனலாம். இதற்கு இவன் சாற்றிய வஞ்சினமே ஏற்ற சான்றாகும். 'கடவுள் எழுதவோர் கற்கொள்ளாது வறிது மீள்வேனாயின் செறிகழல் புனைந்த செருவெங் கோலத்துப் பகையரசு நடுக்காது பயங்கெழு வைப்பிற் குடிநடுக்குறூஉம் கோலேனாகெனக்' கூறுகின்றான். இதனின்றே இவன் குடிகள் நலம் பேணுவதில் எத்துணைக் கண்ணும் கருத்தும் வைத்துள் ளான் என்பது இனிது போதரும்.

கொங்கச் செல்வி கொடுமுடியேறி விண்ணகமடைந்த காட்சி கண்டு மாட்சியுற்ற குன்றக் குறவரும்கூட,

"எந்நாட் டாள்கொல்! யார்மகள் கொல்லோ!
நின்னாட் டியாங்க ணினைப்பினும் அறியேம்!
பன்னூறு ஆயிரத்து ஆண்டுவா ழியரெனக்"
(காட்சிக், கூக - கூரு)

கூறுமாற்றான் குட்டுவன் நாட்டில் அல்லலுற்றாரே இல்லையென மொழியக் காண்கிறோம். அன்றியும் விசும்பியங்கு முனிவர் வியன் நிலமாளும் வானவனைக் கண்டு,

"மலயத் தேகுதும் வான்பே ரிமய
நிலயத் தேகுதல் நின்கருத் தாகலின்
அருமறை அந்தணர் ஆங்குளர் வாழ்வோர்
பெருநில மன்ன! காத்தல்நின் கடனெனக்"
(கால்கோட், கOO - ச)

கேட்டுக்கொண்டதற்கிணங்க, மக்கள் துயர் போக்கும் முறையிலே இமயப் படையெடுப்பை இனிது முடிக்கின்றான். மக்களை உடலாகவும் மன்னனை உயிராகவும் ஓதும்,

"யானுயிர் என்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே."

என்னும் புறப்பாட்டையும் (கஅசு) கடந்து,

"செயிர்இலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிர் எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்."
(பாலகாண்டம், அரசியல், கO)

எனக் கம்பன் காட்டும் காவலனைப் போன்றன்றோ விளங்குகின்றான் வானவர் தோன்றல்!

## ஈத்துவக்கும் இனியன்

செங்குட்டுவன் கை கோலேந்தும் கை மட்டுமன்று; கொன்று சிவந்த அவனுடைய கைகள் கொடுத்தும் சிவந்தன. ஈத்துவக்கும் இன்பம் அறிந்தவனே தவிர வைத்திழக்கும் வன்கண்மை யறியாதவன். கொலையுள்ளம் படைத்தவன் மட்டுமன்று; கலையுள்ளம் படைத்தவனும் ஆவான். கூத்தச்சாக்கையர்தம் ஆடலைக்கண்டு அகமகிழ்கின்றான். கலையுள்ளம், நாடி வருவோர்க்கும் தேடியடைவோர்க்கும் கோடி கோடியாக அள்ளித் தந்து அகமகிழ்கின்றான். மாடலமறையோனை ஏற்றிப் போற்றும் முறையிலே ஆடகப் பெருநிறை ஐயைந்திரட்டி (ஐம்பது துலா பாரம்) தன்நிறைப் பொன்னளித்துப் பெருமைப்படுத்துகின்றான்.

**கூடிமகிழும் குணத்தினன்**

ஆடிப்பாடி அகமகிழ்வதினும், கூடிவாழ்ந்து குலவுவதிலும், இதயங் கலந்து இனியவற்றை இன்புறப் பேசுவதிலுந்தான் இணையற்ற இன்பம் உண்டென உணர்ந்தவன் செங்குட்டுவன். எனவேதான் பலர் தொழு பத்தினிக்குச் சிலை சமைக்குங்காலத்து அருஞ்சிறை நீங்கிய ஆரிய மன்னரோடும், பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரோடும், குடகக் கொங்கரோடும், மாளுவ வேந்தரோடும், கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனோடும் கூடி மகிழ்ந்து களிப்பெய்துகின்றான்; விழவயர்கின்றான். அரசர்களைப் பன்னாள் பெருவிருந்து புரிந்து போற்றுகின்றான். இவனது விருந்தோம்பும் அருந்தமிழ்ப் பண்புதான் என்னே!

**மூவரிலே முதல்வன்**

முத்தமிழ்க் காப்பியத்தில் மூன்று காண்டங்களிலும் முறையே சோழ, பாண்டிய, சேர மன்னர்களையே சித்திரிக்கக் காண்கிறோம். மூவர் திறமும் காட்டப்படுகின்றதெனினும் நம்மனம் நாடும் நீர்மையன் சேரன் செங்குட்டுவனே யாவான். அவனுடைய அரிய பெரிய செயல்கள் நம் அனைவரையும் அவன்பால் அன்பு கொள்ளச் செய்கின்றன.

“அருந்திறல் அரசர் முறைசெயி னல்லது
பெரும்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாதெனப்
பண்டையோர் உரைத்த தண்டமிழ் நல்லுரை”

(நடுகற், உ0எ - கூ)

தான் போற்றுது, கண்ணகி கோவலன் இருவரும் தாங்கள் பிறந்த பொன்னாடு நீத்துப் பாண்டியநாடு ஏகுமாறு செய்தான் சோழன்; பாண்டியனோ கைப்பொருள் இழந்து தவித்த இருவரையும் பிரித்துத் தீது தீர் மதுரை தீக்கிரையாகக் காரணமாயினான். அவர்கட்கு ஆதரவளிக்க வேண்டிய பாண்டியனே கோவலனைக் கொன்று கோல் கோடினான்; ஆனால் செங்குட்டுவனோ பெண்மை போற்றி அடைக்கலமாக வந்த பத்தினிக் கடவுட்குப் பெருஞ்சிறப்புச் செய்யும் வகையிலே இமயம்வரை சென்று கற்கொணர்ந்து கடவுள் மங்கலம் செய்தான். இம்மூவரிலே இறுதியாகக் கூறப்பட்டவனன்றோ எவருள்ளத்தும் நிறைந்தும் சிறந்தும் விளங்குபவனாக உள்ளான். எனவே தமிழ்கெழு மூவரிலே தன்னுடைந்த திக்கற்ற தகைசால் பூம்புகார்ப் பாவைக்குப் பத்தினிக்கல் சிலை சமைத்த சேரனே சிறந்தோன் எனலாம்—சிறந்தவன் மட்டுமல்லன், நல்லவன்—தூயவன். எனவேதான் பத்தினிப் பெருந் தெய்வத்தைத் தான் மட்டும் விண்ணிலே

"என்னேயிஃ தென்னேயிஃ தென்னேயிஃ தென்னேகொல்!
பொன்னஞ் சிலம்பிற் புனைமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்றேட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன் றுமீவிசும்பிற் றேன் றுமால்"
(வாழ்த்துக்காதை, க)

என வியக்க முடிந்தது. வேறு எவர்க்கும் கிடைக்காத பேறு குட்டுவனுக்குக் கிடைத்தது. அன்றியும் ஒருமாமணியாய் உலகிற் கோங்கிய திருமாமணி கண்ணகியே 'நீடூழி செங்குட்டுவன் வாழ்க!' என வாழ்த்துமளவிற்கு வளர்ந்து விளக்குமுற்றுன் வானவர் தோன்றல் எனின் இவனது ஏற்றத்தை என்னென்பது?

## முதல்வனும் முப்பெரும்பணியும்

மூவரிலே முதல்வனுக மட்டுமன்று, முப்பெரும்பணிகளை மேற்கொண்டவனுகவும் காட்சியளிக்கின்றுன். இறை திருப்பணியும், தமிழ்ப் பொற்பணியும், நாட்டு நற்பணியும் புரியும் நல்லவன் நம் குட்டுவன். இறைவன் ஒருவனே, அவனையடையப் பலவாய வழிகளும் சிலவாயசமயங்களும் உள ; எனவே அவற்றிற்குள்ளே வேறு பாடோ மாறுபாடோ கூடாதென்ற கொள்கையாலன்றே ஆடகமாடத்துச் சேடமணிந்து சிந்தை மகிழ்கின்றுன். இமையப் படையெடுப்பிற்கு முன்னர்க்கூட இறையடி தொழுதன்றே எடுத்தடி வைக்கின்றுன்?

'விருந்தின் மன்னர் தமிழாற்றலைப் பழித்ததாகவே எண்ணி அருந்தமிழாற்றலை அன்னவர் உணருமாறு கூற்றங்கொண்டு இச்சேனை செல்வதாகக் கூறுவதாலும்,' தென் தமிழாற்றல் (கால்கோட் - கஅரு), வண்டமிழ் (கால்கோட் - உஉக), தென் தமிழாற்றல் (நீர்ப்படைக்-ரு) அருந்தமிழாற்றல் (நீர்ப்படைக்-கஅக), தண்டமிழ் (நடுகற் - கருஈ) எனப் பின்னரும் பாராட்டுவதாலும் அவனது 'தமிழ்ப் பெரும்பணி' புலப்படக் காண்கிறோம்.

அன்றியும் தன்னைப் பழித்தால் என்ன? தன்னையொத்த பிற வேந்தர்களைப் பழித்தால் என்ன? என்றெண்ணித் தமிழகத்திற்கே வந்துற்ற பழிமொழியாகக் கருதிப் படையெடுத்துச் செல்கின்றுன் சேரன் என்றுல் அவனது நாட்டு நற்பணியை நாம் பாராட்டுமாறு எங்ஙனம்?

இன்னணம் இறையருளே இன்பக் கனவாக, செந்தமிழே சிந்தையாக, தமிழகமே தன் செயல்படு மனமாகக்கொண்ட சேரன் சிறப்பே சிறப்பு!

## நிறையும் குறையும்

இங்ஙனம் பன்னலமும் பெருங்குணமும் ஒருங்கமைந்த இப்பெரு வேந்தன்பால் குறையும் காணக்கிடக்கின்றது. வடதிசை

ஆரியரை வணக்கியதாலோ என்னவோ இவன்பால் செருக்கும் சிறிது தலைகாட்டிற்று. அதனால்தான், தான் சிறைப்படுத்திய கனகவிசயரை ஏனை இருபெரு வேந்தர்க்கும் காட்டிவரச் செய்கின்றான். அருந்தமிழாற்றலைப் பழித்தமைக்கு அவர்களைச் சிறைப்படுத்தியமையே போதியதாகும். அத்தோடு நில்லாது அவர்களும் தன மானம் உடையவர்களாயிற்றே என்பதையும் மறந்து மாற்று வேந்தரை மண்டியிடச் செய்ததோடு அமையாது, இழிவு படுத்துமாற்றான் அவர்களை ஏனைப்பிற வேந்தர்முன் நிறுத்தியது எவ்வாற்றானும் ஒவ்வாத ஒன்றாகும்.

அப்படிக் காட்டிவரச் செய்தபோதும் சோழ பாண்டியர்கள் சொல்லிய மாற்றம் கேட்டுச் சீற்றம் கொள்கின்றான்; இஃது இவன்பால் காணப்படும் குற்றம் அன்றெனினும் குறையேயாகும். வென்றிச் சிறப்பால் எவர்மாட்டும் ஏற்படும் இயல்பு இஃதென்க. எனினும் மாடலமறையோன் இடித்துரைத்தபோது தவற்றை புணர்ந்து அவர்களையும் விழாக்காலத்து விடுதலை செய்து விருந்தோம்புகின்றான்; சீரும் சிறப்பும் செய்கின்றான். குறை புணர்ந்தபோது நிறைவுபெற்று, குற்றம் அறிந்தகாலை நற்றம் செய்து சிறக்கும் சேரனது செயலால் அவனது தூய உள்ளம் துலங்கக் காண்கிறோம். நிறையிடையே குறைகாணப்படினும், அக்குறையையும் இங்கே அவன் நிறைகளை மேலும் நிலைநாட்டும் நல்ல பிற்புலமாக—பகைப்புலமாக(Foil) அமைக்கின்றார் அடிகள். இல்லையா?

## முடிப்புரை

இதுகாறும் கூறியவற்றால் செந்தமிழ்ச் சிலம்பில் சிறந்தோங்கும் வேந்தன் சேரன் செங்குட்டுவனே என்பதும்; அவன், குணம் நாடும் கொள்கையன், கடமையுணர் காவலன், பெண்மை போற்றும் பெற்றியன், அடைக்கலம் பேணும் அருளாளன், மானமே பெரிதென மதித்தோன், சான்றோர் உரை போற்றும் சால்பினன், விறல்மிகு வெற்றிவீரன், சமய சமரசப் பொது நோக்கினன், மக்கள் நலம் நாடும் நல்லவன், கூடிமகிழும் குணத்தினன், ஈத்துவக்கும் இனியன், தவறு கண்டவழி தன்னைத் திருத்திக் கொள்ளும் தூய உள்ளத்தினன் என்பதும்; அகநலனும் அரசு வளமும், செயல் பலமும், சிந்தை நலனும், தமிழ் வளமும், தெய்வத் திருவுளமும் பெற்ற பெருவேந்தன் என்பதும்; மூவரிலே முதல்வனாகவும், முத்தமிழ் வித்தகனாகவும், தனிப்பெருங் காப்பியத்தின் தலையாய முதலாய—மூத்த வேந்தனாகவும் விளங்குபவன் என்பதும் இனிது பெறப்பட்டன.

# தமிழ்ச் செய்தித்தாள்களும் தமிழும்

[புலவர் திரு. வி. பொ. பழனிவேலன், பி. ஓ. எல்.]

தமிழை இதுகாறும் நூல்வழக்கு, உலகவழக்கு என இரண்டாகவே வழங்கிவந்தோம். இனி, 'செய்தித்தாள் வழக்கு,' என்ற ஒன்றையும் சேர்த்துக்கொள்ளும் கட்டாயம் ஏற்படுமோ என்ற ஐயம் எழுகின்றது. ஏனெனில் தமிழ்ச் செய்தித்தாள்கள் பெரும்பாலும் தமிழ்ச்சொற்கள் பலவற்றைச் சிதைத்தும், திரித்தும் பிழைபட எழுதிவருவதுடன் ஆங்கிலம் முதலிய பிறமொழிச் சொற்களைத் தமிழ் எழுத்துக்களால் எழுதி வருகின்றன. அவற்றை நாடோறும் படிக்கும் மக்களும் அவ்வாறே தாங்களும் எழுதத் தொடங்குகின்றனர். இன்னும் ஒரு நூற்றாண்டு கழியின் இந்தச் செய்தித்தாள் வழக்கும் புதுமை எழுத்தாளர்களின் இலக்கியப் படைப்புக்களில் இடம்பெற்று விடும் என்பதில் ஐயமில்லை.

தமிழ்ச் செய்தித்தாள்களில் பெரும்பாலானவை தமிழ் வளர்ச்சி பற்றியோ தமிழ் முன்னேற்றம் பற்றியோ கவலைப்படுவ தில்லை. தமிழில் எழுதும் கதை, கட்டுரை, கவிதைகளில் எழுத்தாளர்கள் தங்கட்குத் தெரிந்த, தெரியாத எல்லா மொழிச் சொற்களையும் கலந்தே எழுதுகின்றனர். எழுத்தளவில் அவை தமிழாக இருக்கின்றனவே அல்லாமல் சொற்கள் தமிழாக விருப்பது அரிதாயுளது. அத்தகைய கலப்பு (கதம்ப) நடையைத் தான் இன்றைய தமிழ் உலகம் விரும்பிப் படிக்கின்றது. அதனு லன்றோ செந்தமிழ் நடையில் எழுதப்பெறும் கதை, கட்டுரை, கவிதைகளைத் தற்காலச் செய்தித்தாள்களின் ஆசிரியர்கள் ஏற்ப தில்லை. திருப்பியனுப்பப் போதிய அஞ்சற்றலை வைத்து அனுப்பி னுலும் திரும்புவதில்லை.

சிலர் திரு. மறைமலையடிகள் தமிழ் ஒரு தமிழா? என்கின் றனர்; சிலர் தமிழில் பிறமொழிச் சொற்களைத் தாராளமாகச் சேர்த்தால்தான் தமிழ் வளரும் என்கின்றூர்கள்.

சிலர் தமிழ் எழுத்துக்களைச் சீர்திருத்துவதாகக் கூறி எழுத்துக்கொலை செய்ய முற்படுகின்றனர். சிலர் இந்தியாவி லுள்ள எல்லா மொழிகளுக்கும் ஒரே மாதிரி எழுத்துமுறை இருக்கவேண்டுமென்று கூறி, நாகரி எழுத்தையும், உரோமன் எழுத்தையும் பரிந்துரைக்கின்றனர். இவர்கள் அனைவரும் தமிழ் மொழியின் தன்மையையும், தூய்மையையும், தொன்மையையும்

அறியாததுடன் மொழி நூல் அறிவும் அற்றவராவர். தங்களுக்குரிய பணியினைச் சரிவரச் செய்ய இயலாதவர்கள் மொழிச் சீர்திருத்தத்தில் இறங்குவது வியப்புக்குரியதே. மொழிநூல் வல்ல (Ph. Ds) அறிஞர்கள் அந்த வேலையைச் செய்துகொள்ளுவார்கள். அரசியலில் ஈடுபட்டுள்ளவரும், சமூகச் சீர்திருத்தக்காரர்களும் மொழியைச் சீர்திருத்தும் பணியை விட்டுத் தந்தம் கடமைகளைச் செய்வது நலம்பயப்பதாகும்.

சிலர் தமிழை நன்கு கற்றுப் புலமை மிக்கவராயிருந்தும் தாம் பேசும்போதும் எழுதும்போதும் பிறமொழிச் சொற்களைக் கலக்காமல் இருப்பதில்லை. தக்க தமிழ்ச்சொற்கள் இருந்தும் அவற்றை விலக்கி வேற்றுமொழிச் சொற்களை மிகுதியும் பயன்படுத்துகின்றனர். இவர்கள்தாம் தமிழ்ப்பற்றுள்ளவர்களா? தமிழ் வளர்ப்பவர்களா? அத்தகையோரைத் தமிழ்க் 'கொலைஞர்' என்றே கூறலாம். ஏனெனில் தூய தமிழ்ச்சொல் ஒன்றைவிட்டு அதற்கு மாற்றாகப் பிறமொழிச் சொல்லொன்றைப் பயன்படுத்தும்போது அத் தனித்தமிழ்ச்சொல் வழக்கொழிந்துதானே போகிறது? அச்சொல் அப்போது இல்லாது செத்துப்போனதாகத்தானே கருதவேண்டும்? ஆதலின் அத்தகையோரைத் தமிழ்க்கொலை செய்பவர் என்று கூறின் தவறென்னை?

தற்காலத்தில் தமிழ் எழுத்தாளர் என்று சொல்லிக்கொள்பவர்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பதுபேர் அவ் வினத்தைச் சேர்ந்தோரே. இன்று தமிழில் வெளியாகும் நாள், வாரம், திங்கள் இதழ்களில் பலவும் நாடோறும், வாரந்தோறும், திங்கள்தோறும் தமிழ்க்கொலை செய்யும் பணியில் பிற்பட்டவையல்ல. செந்தமிழ்ச் செல்வி, தமிழ்ப்பொழில், குயில் போன்ற ஒருசில செய்தித்தாள்கள்தாம் இப்பணியை மனமறிந்து செய்வதில்லை. தமிழ்ச் செய்தித்தாள்கள் பலவற்றில் யான் கண்ட சில பிழைபட்ட சொற்களையும் அவற்றின் திருத்தமான வடிவங்களையும் பொதுமக்கள் கவனத்திற்குக் கீழே தருகின்றேன்.

| **பிழையான வடிவம்** | **திருத்தமான வடிவம்** |
|---|---|
| முயற்சிக்கிறேன் | முயல்கிறேன் |
| வரலாறில் | வரலாற்றில் |
| தவறை | தவற்றை |
| வயிறில் | வயிற்றில் |
| சுவற்றில் | சுவரில் |
| திருவையார் | திருவையாறு |
| மனதில் | மனத்தில் |
| இயக்குனர் | இயக்குநர் |

| | |
|---|---|
| தேரினன் | தேறினன் |
| தவாராமல் | தவறாமல் |
| நடப்பட்ட | நடப்பெற்ற |
| சிலவு | செலவு |
| பத்துவரவு | பற்றுவரவு |
| பேதமை | பேதைமை |
| பொரித்தான் (எழுதினன்) | பொறித்தான் |
| கட்டடம் | கட்டிடம் |
| பொருத்துக்கொள் | பொறுத்துக்கொள் |
| அகட்டி | அகற்றி |
| கழட்டினன் | கழற்றினன் |
| புண்ணாக்கு | பிண்ணாக்கு |
| புடவை | புடைவை |
| வாழைத்தார் | வாழைத்தாறு |
| குருவைநெல் | குறுவைநெல் |
| சூரையாடினன் | சூறையாடினன் |
| செல்லப்பிள்ளை | செல்வப்பிள்ளை |
| ரொம்ப | நிரம்ப |
| நெறஞ்சமனசு | நிறைந்த மனம் |
| அமுல் | அமல் |
| உடமை | உடைமை |

பெருவழக்காயுள்ள சில சொற்களைமட்டில் குறிப்பிட்டுள்ளேன். இன்னும் சில எளிய சொற்களைக்கூடத் தவறாகப் பயன்படுத்துகின்றனர்.

மேலும், செய்தித்தாள்கள் பயன்படுத்தும் பிறமொழிச் சொற்களையெல்லாம் எடுத்து எழுதி அவற்றிற்கு நேரான தமிழ்ச்சொற்களையும் எழுதுவதென்றால் இவ் ஏட்டில் அடங்கா. தனியே ஒரு நூல் எழுதவேண்டியதுதான். எனவே, ஈண்டு அவற்றை எழுதாது விடுத்தனன். இனியேனும் தமிழில் செய்தித்தாள்கள் நடத்தும் தமிழ்ப்புலமை யற்றோர், பிழைப்புக்காகச் செய்தித்தாள் நடத்துவோர் முதலியவர்கள் ஒரு தமிழ்ப் புலவரைக்கொண்டாவது இலக்கணப்பிழை எழுத்துப்பிழைகளைக் களைந்து, அச்சிட்டு, வெளியிடுமாறு தமிழ்த்தாயின் சார்பில் இதழாசிரியர் அனைவரையும் பணிவுடன் வேண்டிக் கொள்ளுகின்றேன்.

வாழ்க! தமிழ். வளர்க! தமிழரசு.

# மாத்தமிழும் மகரவீறும்

[புலவர். தேவி-கவிமணிதாசன்]

உயர்தனிச் செம்மொழியாய், உலகில், தொன்மையும் மென்மையும், திண்மையும் வண்மையும் பெற்று விளங்கும், நம் வண்ணத் தமிழ்மொழி, வளர்பிறையாய் வாழ்வதையும், அறிவுள்ளத்திருக்கையினின்று ஆள்வதையும் அறிவோம். ஆயினும, அத்தகு நற்றமிழ், அவனியில் வளர்ந்து, பாரெலாம் தம்புகழ் பரப்பும் ஒரு சில மொழிகளின் கூட்டரங்கில், இடம் பெற விழையாதார் யார்? ஒருவருமிலர்.

புவியரங்கில் புகழிடம் பெறுமாறு, நம் பைந்தமிழ் வளர வேண்டுமெனில், காலத்திற்கேற்ற கருத்துக்களையும், மாறுதல் களையும், புதுமைகளையும் நாம் ஏற்றுத்தாக வேண்டும். எனினும், தமிழ்ப்பெரு வயலுக்குத் தொல்காப்பியர், பவணந்தி யார் போன்றோர், மொழிக் காவலாக இட்டுள்ள இலக்கணவேலிக் குப், பழுது நேராவண்ணம் பார்த்துக்கொள்ளலும் வேண்டும்.

காலத்தால் வழக்கும், பொருளும், இழந்தும் திரிந்தும் பல சொற்கள், நம் மொழியிடை யுள்ளதெனினும், மீண்டும் வழக் காற்றிற்கு வரும் நிலையிலும் பொருளிலும் பல சொற்கள் உள. மிகச் சில சொற்களே, மீண்டும் இன்றைய இலக்கிய உலகில், பண்டு தாம் கொண்டு விளங்கிய பொருளில், தலையெடுக்க வியலா நிலையிலிருக்கின்றன. அவற்றுள், ஈண்டு யான் குறிக்கவிருப்பது, 'தீமை' எனும், ஒரு சொல் பற்றியது. பிறவற்றைப் பின் எழுது வல். பழங்காலத்தே, 'நெய்' எனும் சொல், வித்துக்களின் சாற்றைக் குறிக்கும் ஒரு பொதுச்சொல்லாகப் பயன்பட்டுத், தற்போது பாலினின்று எடுக்கப்பெறும் ஒரு பொருளுக்கே யுரிய சிறப்புச் சொல்லாக வழங்கி வருகிறது. அத்துடன், எருமைநெய், பசுநெய் என, வேறுபாடு தெரியுமாறு வழங்கப் பட்டு வருகிறது. இதுபோன்றே, காமம், விளையாட்டு, எண்ணெய் முதலிய பல சொற்கள் பொருள்திரிந்து வழங்குகின்றன.

'தீமை' எனும் பண்புப் பெயர்ச்சொல், தற்காலத்தே 'தீங்கு' என ஒரு பொருளிலேயே வழங்கி வருகின்றது. அதற்கு, இனிமை எனும் பொருளுமுண்டு எனில், நம்புவாரில்லை. இனிமையெனும் பொருளில் தீமையெனும் சொல், வழக்கற்று விட்டதென்றே துணிந்தியம்பலாம். ஆனல், முற்பட்ட காலத்தில் தீஞ்சொல், தீஞ்சுளை, தீந்தமிழ் போன்ற பண்புத்தொகைகள், தீமை+சொல்; தீமை+சுளை; தீமை+தமிழ் எனப் பிரிக்கப்படு வது, இலக்கண முறையெனக் கூறில், நகைப்பிற்கிடமாகவுள்ளது. காலத்தின் கோலத்தால், சொற்பொருட் கருத்து மாறியுளது.

"செம்மை........தீமை........இவற்றெதிர் இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே" (நன்னூல் நூற்பா, ௩௩௫) என்னும் நூற்பாவில், 'தீமை' என்பதைப், பண்புப்பொருளினின்றும் வேறு பொருள் பகுக்கப்படாத நிலையையுடைய பதம் எனப் பொருள்கொண்டு உரையாசிரியர்கள் உரைத்திருப்பதால், "ஈறுபோதல் ..........இனமிகலினையவும் பண்பிற் கியல்பே;" எனும், அடுத்த நூற்பாவின்படி, தீமையெனும் பண்புச்சொல், மை விகுதி கெட்டு, வருமெழுத்திற்கு இனவெழுத்து மிகுந்து, தீஞ்சுனை, தீந்தமிழ், தீம்பழம், தீங்கனி என்றெல்லாமாகிறது.

நன்மைக்கு மாறான தீமையெனும் பண்புச் சொற் பொருளில், தீச்செயல், தீயசெயல், தீவினை, தீயவினை என்பன போன்று பல சொற்கள், இன்று தமிழகத்தில் உலவி வருகின்றன. தீச்சொல், தீவினை போன்ற சொற்றொடர்களுக்குத், தீப்போன்ற சொல், தீப்போன்ற வினை என, வலிதில் வேண்டு மென்றே பொருள் கூறுவோரு முளரெனினும், அவ்விடத்தும் அவைகளைப், பண்புவகைத் தொகைகளெனப் பொருள்கோடலே சிறப்புடைத்தாகிறது. எனவே, ஆங்குமத் தீமையெனும் சொல், இனிமையெனும் பொருளிலில்லை எனப் புலப்படுகின்றதன்றோ?

இனித், தீச்செயலும், தீவினையும் போன்ற சொற்றொடர்கள, தீமை+செயல்; தீமை+வினை; என்று பிரித்துப் பொருள் காணும் நிலையில், தீஞ்சுனை, தீந்தமிழ், தீம்பழம், போன்ற இனிமைப் பண்பேற்ற சொற்றொடர்களையும், தீமை+சுனை; தீமை+தமிழ்; தீமை+பழம்; எனப் பிரித்துப் பொருள் கூறுதல், இக்காலத்திற்கு ஏற்புடைத்தா என்பதை எண்ணிடுமின். கருத்தும் காலமும் நோக்கிக் கருதுமின்.

அடுத்து, 'தீம்' எனும் சொல், இற்றைநாளில் பெரு வழக்காய், இனிமையெனும் பொருளில், 'செந்தமிழ் அகராதி' யிலும் இடம்பெற்றுள்ளது. ஒருவகையி லாய்ந்தால், இத் 'தீம்' எனும் சொல், இனிமைப் பொருளில் வழங்கிய, 'தீமை'யெனும் பண்புச்சொல்லின் திரிபே என்பது, தீம்பழம், தீம்பால் முதலிய சொற்றொடர்களை உன்னுவார்க்கு நன்கு புலனாகும்.

தீஞ்சுனை போன்ற பண்புத்தொகைகளில், பண்பினின்றும் வேறுபொருள் பகுக்கப்படாத சொல்லாகிய 'தீமை'யே, இலக்கண விதிப்படி, மை விகுதி கெட்டு, வருமெழுத்திற்கு இனவெழுத்தாக மிகுந்து நிற்கவியலும். "செம்மை.... .. ...நுண்மை யிவற்றெதிர் இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே." எனும் நூற்பாவில், 'தீம்' எனும் சொல்லைச் சேர்க்கவியலாது; அடுத்த நூற்பாவும் அதற்கிடம்கொடாது.

அங்ஙனமாயின், நன்னூலிற்குப் புறனடையாகப், "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே." என, நூற்பா வகுத்த பவணந்தி முனிவர்க்கும், முன்னோர்க்கும் எவ்வகையில் பெருமையும் தகுதியும் வழங்குவது?

உரையாசிரியர் உரையை நோக்காது, நூலாசிரியரின் நூற்பா ஒன்றையே, நாம் துணைக்கொள்ளுவோமாயின், 'தீம்' எனும் இனிமைப் பொருளுடைய சொல்லை, உயிர்ற்றுப் புணரியலின் மகரவீற்று நூற்பா விதியிலடக்கிக் கொள்ளலாம். இங்ஙனம், 'தீம்' எனும் சொல்லுக்கு, "மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும் வன்மைக் கினமாத் திரிபவு மாகும்" (நன்னூல் நூற்பா - உகக) எனும் மகரவீற்று நூற்பாவையும், 'தீமை' யெனும், தீங்குப்பொருளதாக வழங்கும் பண்புச்சொல்லுக்குச் "செம்மை சிறுமை சேய்மை தீமை, வெம்மை புதுமை மென்மை மேன்மை, திண்மை யுண்மை நுண்மை இவற்றெதிர் இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே." எனும், பண்புப் பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியா யமைந்துள்ள நூற்பாவையும் கைக்கொண்டு, இக்காலத்துக்கு ஏற்றவாறு பிரித்துப் பொருள் கூறுதல், ஏற்புடைத்தென்று எண்ணுகின்றேன்.

இனி, 'உயிரீறொப்பவும்' என்பதற்கு, உயிர் வரின் மகரமெய் கெட்டு உடம்படுமெய் பெற்றும், வல்லினம் வரின் மிக்கும், மெல்லினமும் இடையினமும் வரின் இயல்பாயும் புணருமென்ற காண்டிகை யுரையாசிரியர், வேற்றுமையினும், அல்வழியில் பண்புத்தொகை உவமைத்தொகைகளினும், மெல்லினம் வரின் இருவழிகளினும் மகரமெய் கெடுமெனக் கொள்க என்றார். அத்துடன், பண்புத்தொகை, உவமைத் தொகையிரண்டு மொழிந்த அல்வழிப் புணர்ச்சியினும், வினையாலணையும் பெயர், தனிக்குறில் வேற்றுமையின்கண் இறுதி மகரம் பெற்று, வருமொழி முதலில் வல்லினம் வரப்பெற்றாலும் கெடாது, இனவெழுத்தாகத் திரியும் எனவுங் கொள்க என்றார்.

நாம், மரம்+அடி=மரவடி, மரம்+வேர்=மரவேர், மரம்+கோடு=மரக்கோடு என வேற்றுமையினும், வட்டம்+ஆழி=வட்டவாழி, வட்டம்+வடிவம்=வட்டவடிவம், வட்டம்+கல்=வட்டக்கல் எனப் பண்புத்தொகையினும், பவளம்+இதழ்=பவளவிதழ், பவளம்+வாய்=பவளவாய், பவளம்+கால்=பவளக்கால் என உவமைத்தொகையினும் முடிந்ததை, "உயிரீறொப்பவும்" எனும் விதியினும், தீம்+சுனை=தீஞ்சுனை, தீம்+தமிழ்=தீந்தமிழ், தீம்+கனி=தீங்கனி போன்றவற்றை, "வன்மைக்கினமாத் திரிபவு"மாகும் எனும் விதியினும், 'திரிபவும்' எனும் சொல்லின் உம்மையால், திரியாமலும் வ

எனப் பொருள்கொள்ளக் கிடத்தலால், தீம்பால், தீம்பழம் போன்றவற்றை அவ்விதியினும் அடக்கிப் பிரித்துப் பொருள் காண்பதே, மொழி வளர்ச்சிக்கேற்ற காலத்தோடொட்டிய இலக்கணக் கருத்தென்பது எனது துணிபு. ஒரு சில தமிழ்ப் புலவர்பெருமக்களும், இதே கருத்தைக் கொண்டுள்ளனர் என்றும் அறிகின்றேம். ஆதலின், அறிஞர் பெருமக்கள் இக் குறிப்புக், குறையுடைத்தெனக் கருதின் பொறுத்தருள்வார்களென நம்புகின்றேம்.

இனித் தொல்காப்பியர், "மகர விறுதி வேற்றுமை யாயிற் றுவரக் கெட்டு வல்லெழுத்து மிகுமே" (எழுத். நூற்பா. ௩௧௦- நச்சர் உரை) என்றும், ௩௧௨ ஆம் நூற்பாவில், "மெல்லெழுத் துறழு மொழியுமா ருளவே செல்வழியறிதல் வழக்கத்தான," என்றும், ௩௧௪ ஆம் நூற்பாவில், "அல்வழி யெல்லா மெல் லெழுத்தாகும்" என்றும் கூறியுள்ளார்.

தொல்காப்பியர், 'செல்வழி யறிதல் வழக்கத் தான,' எனக் கூறியிருப்பதுடன், நச்சினார்க்கினியரும், 'இனி எல்லாமென் றதனால், அல்வழிக்கண் மகர ஈறு பிறவாற்றான் முடிவன வெல்லாம் முடிக்க' என்றியம்பி நமக்குக் கைகொடுக்கிறார்.

நெருப்பைக் குறிக்கும் 'தீ' யெனும் ஓரெழுத்து மொழியி னின்று தீமையெனும் பண்புச்சொல்லும், இனிமைப் பொருள் நல்கும், 'தீமை'ச் சொல்லினின்றோ, அன்றித் 'தேன்' எனும் மொழியினின்றோ 'தீம்' எனும் சொல்லும் தோன்றியிருத்தல் கூடும். இலக்கியத்திற்கே இலக்கணமாகையால், ஏற்புழிக் கோடலே இனியது. தீயால் இன்பமும் துன்பமும் கண்ட நம் முன்னோர், இவ்விரு பண்புகளையும் ஏற்றதொரு சொல்லாகத் 'தீமை' என வழங்கியிருத்தல் கூடுமல்லவா?

இதுகாறும் கூறியவாற்றான், தீச்சொல் என்புழிப் பண்புத் தொகையாயின், தீமை+சொல், எனவும், உவமைத் தொகை யாயின் தீப்போன்ற சொல், எனவும் கொள்வதுடன், தீஞ்சொல் என்புழிப் பண்புத்தொகை யெனவே, தீம்+சொல், எனக் கொண்டு, மகரவீற்று நூற்பாவின் விதி, அமையும் எனக் கண்டோமல்லவா? இனி அறிவியலின் அடிப்படையில் அமைந் துள்ள உடலியல், உளவியல், உழவியல், நுண்பொறியியல், மண் ணியல், விண்ணியல் போன்ற பல துறைகளில் எழுந்துள்ள புதுமைப் பூந்தமிழ்ச் சொற்களுக்கு, இலக்கண அமைதிகளை இனி யடுத்த கட்டுரைகளில் இயம்புவோம்.

# காலை இசைப்பா *

[திருவாட்டி. C. பத்மாவதி, எம். ஏ.]

இறைவா! இப்பாரில் வாழ்மக்கள் அனைவருடைய எண்ணங்களையும் இயக்குபவன் நீயே! இந்திய நாட்டின் வருங்கால நிலைமையை உருவாக்கித் தருபவன் நீயே! இந்நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள மக்களின் இதயங்களில் உன் பெயர் உணர்ச்சிக்கனலை எழுப்புகிறது. உனக்கு வணக்கம் செலுத்துகையில், அவர்கள் பாடும் புகழ் இமய விந்திய மலைகளின் வாயிலாக எங்கும் எதிரொலிக்கின்றது. கங்கையும் யமுனையும் பாடும் இன்னிசையொடு அப் புகழ் இசையும் ஒன்றி இணைகிறது. அன்றியும், இந்தியப் பெருங்கடலின் அலைகளும் உன் புகழைப் பாடிப் பரவுகின்றன. இங்ஙனம் யாவும் உன்தன் நல் ஆசிக்கு இறைஞ்சுகின்றன. நாட்டின் விதியினை நாட்டும் நாயகமே! இம் மாநில மக்களின் காப்பு உன்பொறுப்பில்தான் உள்ளது.

இறைவா! வெற்றி வெற்றி! வெற்றி உனக்கே!

இரவும் பகலும் உன் அரியணையின் முன்னிலையில் கூடுவதற்காக, நீ அழைக்கும் குரல், எந்நாளும் எம்மதத்தினர் செவிகளிலும் ஒலிக்கின்றது. அவர்கள்தம் அன்பிற் கறிகுறியாக உன்னைப் பராவுகின்றனர். நாட்டின் விதியினை நாட்டும் நாயகமே! அனைவரும் ஒற்றுமையாய் வாழ்வு நடாத்த நீயே வழி அமைத்துத் தருகிறாய்.

இறைவா! வெற்றி வெற்றி! வெற்றி உனக்கே!

கரடுமுரடான நெறிகளிலே தேரைச் செலுத்தும் பாகனைப் போல, மக்களினத்தை எண்ணற்ற கடுஞ் சிக்கல்களினின்றும், கடினமான நிலைமைகளினின்றும் நன்கு காத்து, மீட்டு வந்துள்ளனை. உன்னுடைய வெற்றிச் சங்கத்தின் முழக்கத்தால், உறுதி இழந்தவர்க்கு உரம் ஊட்டி, உறுதுணையாய் இருந்து, பல இடர்களினின்றும் காத்து அழைத்துவந்துள்ளனை. நாட்டின் விதியினை நாட்டும் நாயகமே! உன் ஆணையே உலகுக்கு வழிகாட்டியாக

இறைவா! வெற்றி வெற்றி! வெற்றி உனக்கே!

பன்னெடுங்காலமாக, உதவியற்று, இருளில் அழுந்திச் சோம்பிக்கிடந்த நாட்டை, ஊக்கமும் உணர்வும் பெற்று முன்னேறும் வரை, அன்புருவாய அன்னைபோலப் பன்னாள்

---

* அறிஞர் தாகூரின் 'Morning Song' என்ற பாட்டின் கருத்துரை.

உறக்கமின்றிப் பல பேரின்னல்களினின்றும் போற்றிவந்தனை நாட்டின் விதியினை நாட்டும் நாயகமே! துன்புறும்போதில் தோன்றாத் துணையாயிருந்து, கவலுறுங் காலத்தில் காவலனாகவும் உதவியுள்ளனை.

இறைவா! வெற்றி வெற்றி! வெற்றி உனக்கே!

பொழுது புலர்கிறது; இருளும் இரிகிறது. புள்ளினங்கள் பண் இசைக்கின்றன. காலை இளங்காற்றுப் புத்துயிர் அளிக்கின்றது. தாய்நாடு புத்துணர்வு பெற்றுக் கண்விழிக்கிறது; உன் பேரருளினால் நல் ஆசியும் பெற்று, உன் திருவடி வீழ்ந்து நன்றியறிவுடன் தன் வணக்கத்தைச் செலுத்துகிறது. நாட்டின் விதியினை நாட்டும் நாயகமே! எவ்வகை நலங்களும் வழங்கும் அரசர்க்கரசே!

இறைவா! வெற்றி வெற்றி! வெற்றி உனக்கே!

---

## இழிசொல் ஏன்றல் என்னை

[திரு. அ. கணேசன்]

நலவள மெல்லாம் நனிமிகப் பொருந்தி
நாமகள் நாவினிற் பீடுற நடந்து
கனிமொழித் தமிழினில் மணியிடை பவளம்
காணுத லழகே யெனப்பழி யேற்றிய
பொய்ம்மொழி யாளர் பொய்யுரை கடிந்து
போதக முத்தமிழ் மாக்கட லுடனே
ஆரிய மாங்கிலக் கடல்களை முகந்து
பாரிய துறைகளில் மேவுறப் படிந்து
உலகிய லறிந்த பலகலைப் புலவரும்
அலகியற் சோதிய னருந்தமிழ் மீட்டும்
இருந்தவா றென்னே யெனவுளம் மகிழப்
பொருந்திய சொற்களைப் பொற்புறக் குயிற்றிப்
புதுவளம் புதுக்கிய வணிகல மெல்லாம்
தண்டமிழ்ச் செல்விக் கழகுறப் பூட்டித்
தனித்தமிழ் அரசியைத் தகவுறக் காட்டிய
அருங்கலைச் செல்வ னன்றநூற் புலவன்
தனித்தமிழ் சைவந் தன்னிரு கண்ணெனப்
பாங்குறப் போற்றிய மாத்தமிழ்க் கடலோன்
மறைமலை யடிகள் திறம்பயில் சொல்லினைக்
குறையென நாவாற் குழறின ரம்ம
அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்து,
இழிசொல் ஏன்றல் என்னை
பேதைசொல் நோன்றல் அறிவெனப்படலோ.

# இலக்கியமும் உணர்ச்சியும்

[திரு. தி. நா. அறிவுஒளி]

இலக்கியத்தை ஆக்குவதற்கும், இலக்கியத்தைச் சுவைப்பதற்கும் வேற்றுமை உண்டு. ஆயின், இவ் விரு உழைப்பிற்கும் இலக்கிய உணர்வு வேண்டற் பாற்று. இலக்கிய வாழ்க்கை இரு பகுதிகளைக் கொண்டது. ஒன்று உழைத்து மகிழ்வளிப்பது. பிறிதொன்று சுவைத்து மகிழ்வது!

இலக்கிய உணர்வு என்பது என்ன?

உள்ளம் கற்பனையோடு இரண்டறக் கலந்து, ஒன்றி, தன்னை மறந்து, தன்னை இழந்து தனிப் பேரின்பத்தில் திளைத்து மயங்குவதே இலக்கிய உணர்வு எனலாம்.

வாழ்க்கையில் ஒவ்வொருவரும் ஓரளவு இலக்கிய உணர்வு படைத்தவர்களாகவே இருக்கிறார்கள். உள்ளத்தின் இயற்கையே இலக்கிய உணர்வு அமைந்ததாக இருக்கிறது.

குழந்தைகளிடத்தில் கலை உணர்வையும், இலக்கிய உணர்வையும் இயல்பாகக் காணலாம். உள்ளம் கற்பனையால் வாழ்வது; கற்பனையோடு கை கோத்துத் திரிவது. அவ்வாறு திரிவதில்தான் உள்ளத்தின் உரிமை சிறப்படைகிறது.

விரிந்து மணக்கும் மலர் இதழிலும், சிரித்து மயக்கும் செவ்விதழாளின் அழகிலும், தண்ணென் ஒளியால் ஒள்ளிய உணர்வைத் தழையச் செய்யும் தவழ் நிலவிலும், மெல்லெனத் தழுவி நல்ல இன்பந் தரும் தமிழனைய தளர்நடைத் தென்றலின்பத்திலும், பூவார் பொழிலிலும், பாவார் பண்ணின்பத்திலும், விண் நல்கும் வியப்பெழிற் கண்காட்சியிலும், இயற்கை எழிலின் இன்னரும் எழில் இலக்கியமாய ஒவ்வொரு சுவைப் பெருங் காட்சிகளிலும் மக்களகத்துள்ளே மாளாத மாண்பார் இலக்கியங்கள் பேருணர்வை மூட்டுகின்றன.

நீலப் பேரார் கலியினெதிரே நின்று; நெஞ்சுணர்வெல்லாம் நீக்கமில் ஓர் உணர்வாக, அகங்கரைந்து, மொழிமறந்து, விழிநீர் வார உணர்வால் கட்டுற்று நிற்கும் ஒருவனும் இலக்கிய உணர்வு உடையவனே. மூவேந்தர் போற்றிய பாவேந்தர் பாட்டெழில் துய்க்கும் பண்பழகுடைய ஒருவனும் இலக்கிய உணர்வு உடையவனே.

“நிலா நிலா ஓடிவா! நில்லாமல் ஓடிவா!
மலைமேலே ஏறிவா! மல்லிகைப் பூக் கொண்டுவா!

எனத் தாயும் சேயும் நிலாமுற்றத்தில் நின்று வானிலே எழிலரசியென விளங்கும் விண்ணிலவை விருந்தாளியாக அழைக்கின்ற தூய உணர்வுநிலை ஊனையும், உணர்வையும், உயிரையும் உருக்குவதொன்றன்றோ!....இதே காட்சியைப் புலவன் ஒருவன் தீஞ்சொற் கவிதையில் பாடி அமைப்பின் அஃது இலக்கியப் பாட்டாக மலர்ந்து விடுகிறது!

"தங்க வளைக்கையில் தன்மகவை ஏந்தியவள்
பொங்கு நிலாமுற்றம் போயிருக்க — எங்குதலை
அங்காந்து ஆர்ப்பரித்து ஆர்வமொடு 'வா' என்று
திங்கள்மேல் நீட்டும்தன் கை."

இந்நேரிசை வெண்பாவைக் கற்கும்போது ஒருவன் சுவைக்கும் இலக்கிய உணர்ச்சியை, மேற்காட்சியைக் காணும்போதும் ஒருவன் துய்க்கிறான் அன்றோ? ஆகவேதான் வாழ்விலக்கியங்கள் சாகாது காலம் வென்று வாழ்கின்றன. ஏனையவை பாழ்பட்டு மாய்கின்றன.

குழந்தையின் நெஞ்சில் கொஞ்சும் இளமை அழகுணர்ச்சியை அறிவால் அளந்துரைக்க முடியாது. நிலவைக் கண்டு, நினைவை இழந்து, அதைப் பற்றிப் பலப்பல எண்ணும்; பலப்பல கற்பனை செய்யும், பலப்பல கனவுகள் காணும். அத்தூய உணர்வுகளை என்னவென்று எழுதி முடிப்பது? அத்தகைய ஒள்ளிய உணர்வுப் பெருக்கில் ஒரு துளியே, "நிலா நிலா ஓடிவா!" என்ற இனிய எளிய இசைப் பாடல். குழந்தைமை உணர்வைத் தூண்டக் கூடிய அப்பாட்டை முதன் முதலில் பாடிய புலவர் யாரோ தெரியவில்லை! ஆனால், குழந்தை இலக்கியம் படைக்கும் குழந்தைப் புலவர் அவரே யாவர்! குழந்தை உளத்தைப் புரிந்துகொண்டு, சின்னஞ் சிறு எளிய சொற்களைக் கொண்டு, அழகிய இலக்கிய உணர்வோடு இத்தகைய இன்னிசைப் பாடலை இயற்றிய மேதைக்கு நம் பாராட்டும், நன்றியும் என்றும் உரித்தாகும்.

அதைப் போலவே 'கைவீசல் பாட்டும்' நம் வீடுகளில் நாடோறும் பாடப்படும் குழந்தை இலக்கியப் பாட்டாக விளங்குகிறது.

'கை வீசம்மா கை வீசு! கடைக்குப் போகலாம் கைவீசு!
இனிப்பு வாங்கலாம் கைவீசு! இனிக்கத் தின்னலாம் கைவீசு."

இப் பாடலைத் தாயார் பாட, அதைக்கேட்டு மகிழும் குழந்தைகளின் உள்ள நிறைவும், உணர்வுச் சிறப்பும் உரை கடந்தவை யாகும். குழந்தையரின் குற்றமற்ற எழிற்றிரு விளையாட்டைக் காணக் காண நம் அகமும் முகமும் குழைந்

துருகி மலர்ந்தொளி வீசிப் பேரின்பமுறும்! நாமும் அக் குழந்தையரோடு குழந்தையாகிக்-குளிர்ந்த உணர்வுடையராகிக்-குறுகுறுப்போடு விளையாட அவாவுவோ மன்றோ! அவ்வகை உணர்வு வெற்றியும், பயனுக்கமும் நல்கும் பாட்டினை 'இலக்கியம் அன்று' என்று கூறுவது எவ்வாறு சாலும்?

"காக்காய்! காக்காய்! ஓடிவா!—குழந்தை
கண்ணுக்கு மைகொண்டு வா!
குருவி! குருவி! ஓடிவா!—குழந்தை
கொண்டைக்குப் பூக்கொண்டு வா!"

என்ற பாட்டைப் பாடியவாறு பொட்டிட்டுப், பட்டுடுத்தி, நெய்நீவித் தலைவாரிப் பூச்சூட்டி, எழிலோவியமாகக் குழந்தையை அன்னை காட்டும்போது தாவியணைத்துத், தண்ணென முத்த மிட்டுத், தமிழுணர்வு கொள்கிறோமன்றோ!! இத்தகைய உள்ளக் குழைவையும், உணர்ச்சி நெகிழ்வையும், உயிர்த் துடிப்பையும் அருளுவதே இலக்கிய உணர்வின் தலையாய பணி. இவ்வாறு பாடும் பாட்டே இலக்கிய உணர்வு செழித்த பாட்டு.

குழந்தைமை உணர்வை மீண்டும் பெற வேண்டும் என்று நம் உள்ளம் ஏங்கும் வண்ணம் ஓர் உணர்ச்சித் துடிப்பை அப் பாட்டுத் தூண்டி விடுகிறதே அதுவே இலக்கியம் செய்யும் பெரும் பணி!....பேராற்றல் மிக்க பணி! இதைப் போலவே தொடித் தலை விழுத்தண்டினார் என்ற ஒப்பில் உயர்புலவர் தம் முதுமைப் பருவத்தில் மீண்டும் 'கல்லா இளமை' வருதல் வேண்டும் என்று ஏங்கினார். அவ் வேக்க உணர்வின் பயனாக உரவோர் உள்ளக் கோயிலின் தூங்கா மணிவிளக்காய்த் துலங்கும் புறநானூற்றில் எழில் பழுத்த இனிய (உசங) பாட்டொன்று கனிந்தது. அவர் பாட்டு இழுமென் மொழியும் விழுமிய உள்ளுணர்வும் கொண்டு கற்பார் அகம் கரையுமாறு விளங்குகிறது.

"இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கயம் ஆடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு
உயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோடு ஏறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரைஅகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா இளமை
அளிதோ தானே! யாண்டு உண்டு கொல்லோ!

தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று
இருமிடை மிடைந்த சிலசொல்
பெருமூ தாளரேம் ஆகிய எமக்கே." (புறம்: உ௪௩)*

இப் பாடல் புலவரின் பழுத்த முதுமைக் காலத்தே முற்றிய புலமை யாற்றலோடு பாடப்பட்ட பாடல். அறிவுலகிலும், புறவுலகிலும் பல்லாண்டுகள் பணியாற்றி, ஆழ்ந்த துய்ப்புணர்வுகளை அடைந்து, உடலுரம் தணிந்து ஒடுங்கும் முதுமையில் தம் இளமைக் காலத்தை எண்ணி, இளமையின் அருமை-பெருமையையும், ஆண்மை வேகத்தையும், பொறுப்பற்ற விளையாட்டுப் பான்மையையும், குற்றமற்ற ஒண்மை உணர்வு நிலையையும் நினைந்து உள்ளம் நெக்குருகி, காதலாகிக், கசிந்து, கண்ணீர் மல்கி ஓதுவார்தம் உள்ளம் உருகவும், உணர்வு பெருகவும், உள் நிறைந்த பேரன்பால் உணர்வுருகி, மொழி குழறி, உவகையாகி இரக்க உணர்வின் எல்லையை எய்துமளவிற்கு மிக அழகாக இயற்றி இருக்கிறார் இப் பாட்டைப் புலவர் தொடித்தலை விழுத்தண்டினர்.

இப் பாடலை எண்ணி உரை வேண்டும். வாழ்க்கையின் கோடிக் கரையில் முதுமை அடைந்த ஒவ்வொருவரும் தம் இளமையை எண்ணி உருகுவது உலகியற்கை நிகழ்ச்சியே. இந்த இளமையை எண்ணி எண்ணி எழுச்சி கொள்ளும் முதியோரும்,

---

* மணல் செறிந்துள்ள இடத்தில் வண்டற் பாவைக்குப் பறித்து வந்த பூக்களைச் சூடி விளையாடியும், குளிர்ந்த பொய்கையில், இன்பத்தோடு விளையாடும் இளம் பெண்களோடு கைகோத்து; அவர்கள் தழுவும் போது தழுவியும், அசையும்போது அசைந்தும் மகிழ்ச்சிறக்கப் பேரின்ப விளையாட்டுக்கள் விளையாடியும்; ஒளிவு மறைவு என்பது என்னவென்று அறியாத வஞ்சனை யற்ற, இளமை செழித்த மைந்தருடன் கூடி, உயர்ந்த கிளைகளையுடைய மருத மரத்தின் கிளைகள் பொய்கை நீருக்கு அருகில் வளைந்து தாழ்ந்திருக்கும் உச்சிக் கொம்பிலே ஏறி, கரையில் நின்று காண்பவர்கள் வியந்து மருட்சியடையவும், நீரின் அலையிலே திரைத் துளிகள் சிதறித் துள்ளி எழவும், மிகுந்த தண்ணீரைக் கொண்ட ஆழமான மடுவில் 'துடும்' என்ற ஒலி உண்டாகுமாறு குதித்து; நீரினுள் மூழ்கி, அக் கயத்தின் அடி ஆழம் வரை சென்று, ஆங்கிருந்து மணலை அள்ளி வந்து காட்டிய கல்வியற்ற நல்ல இளமை இப்பொழுது எங்கே இருக்கிறதோ?.. ஆ! அந்தக் கள்ளா இளமை இரங்கத்தக்கது! பூண் செறிக்கப்பட்ட தலைப் பகுதியைக் கொண்ட பெரிய ஊன்றுகோலை ஊன்றி, உடல் தளர்ந்து நடுங்கவும், இருமல் இடை இடையே வருதலால் சில சில சொற்களையே பேசும் மிகப் பெருங் கிழத்தன்மையையுடைய எங்களுக்கு இறந்த காலத்தில் மறைந்து கழிந்துபோன இன்பமான இளமையை எண்ணி, இப்பொழுது இரக்கம் மிகுதியாக உண்டாகிறது.

[குறிப்பு: புறப்பாட்டிலிருக்கும் வேகம், உணர்ச்சி முதலிய நலன்களை உரைநடையில் கொண்டுவர இயலவில்லை. இதுதான் பாட்டினிடம் இருக்கும் பேராற்றல் போலும்!]

இளமையில் தாம் ஆற்றிய மறச்செயல்கள், குறும்புகள், புகழ்ச் செயல்கள், காதல் நாடகங்கள், கல்வி, துய்ப்பு, பணிகள் ஆகியவை பற்றி ஆயிரமாயிரம் கதைகளைக் கூட்டியும் குறைத்தும் கூறுவது யாவரும் அறிந்ததே.

இத்தகைய இயற்கையான வாழ்க்கை உணர்ச்சியை-வாழ்வுண்மையை-முதுமையின் ஏக்கத்தை எத்துணை அழகொழுகப் பாடுகிறார் புலவர்! இஃதன்றோ வாழ்விலக்கியம்!

புலவரின் இயற்பெயர் காலப்போக்கில் மறைந்து விட்டது. மேற்பாடலில் கிழவர்களின் ஊன்று கோலைத், "தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி நடுக்குற்று இருமிடை மிடைந்த சில சொல் பெருமூதாளரேம் ஆகிய எமக்கே........" என்று பாராட்டிய ஒப்பற்ற சொல்லாட்சி நலனை உணர்ந்த தமிழறிஞர்கள் புலவருக்கு 'தொடித்தலை விழுத்தண்டினார்' எனப் புகழ்ப் பெயர் சூட்டிவிட்டனர். புலவர் முதுமையுற்றாலும்கூட, அவர்தம் புலமை இளமை எழிலோடும், மிடுக்கோடும் பீடுகெழுமிய திருவிளையாடல் ஆடுகின்றதன்றோ! மேற்பாட்டில் நயம்மிக்க, அழகிய, இனிய சொல்லாட்சிகள் அணி செய்கின்றன:

"நல்லா இளமை, அளிதோ தானே! யாண்டுண்டு கொல்லோ!"

"கரையவர் மருளத் திரையகம் பிதிர, நெடுநீர்க் குட்டத்துத்
துடுமெனப் பாய்ந்து..."

உயர்ந்த கலைஞரின் படைப்புகள் காலத்தை வெல்பவை. அக்கலைகள் காலம் கடந்த மேதை ஆற்றலினின்று தோன்றுபவை; நிலையாமை வாய்ந்த நீளுலகில் நிலைபேறு பெற்று விளங்குபவை. யாக்கை என்னும் இடிகரையில் தொடித்தலை விழுத்தண்டினார் மறைந்தாலும், அவரது உள்ளத்துணர்ச்சி, அவ்வுணர்ச்சி ஓவியமான பேரிலக்கியம் மறையவில்லை! எப்படி மறைய முடியும்?

வாழ்க்கையில் எவ்வாறு உணர்ச்சி உயிரோட்டத்தோடு ஊடாடிக்கொண்டிருக்கிறதோ; அப்படியே இலக்கியத்திலும் உணர்ச்சி உயிர் நாடியாக இயங்குகிறது. உணர்ச்சி வேகம் தானே மக்களினத்தையே வாழவும், வளரவும் செய்விக்கிறது!

சிற்றூர்களில் இரவில் ஒரு வீட்டிலிருந்து மறுவீட்டிற்குப் பெண்டிர் அகல் விளக்கை ஏற்றி எடுத்துச் செல்வர். எப்படி? ஒரு குடத்திலோ, தவலையிலோ அகல் விளக்கை வைத்து எடுத்துச் செல்வர். ஏனெனில் காற்றடித்து விளக்கு அணைந்துவிடாமலிருக்க. இச் சிறிய காட்சியை ஒரு பெரிய புலவர் பார்த்தார். உடனே அந்த மேதையின் மூளை அழகிய இலக்கியப் பாட்டு ஒன்றைப் படைத்துவிட்டது.

குடத்து விளக்கின் ஒளி வெளியே தெரியாது. குடத்தின் உள்ளே மட்டும் 'பளிச்' சென்று சுடர் வீசும். குடத்துக்கு வெளியே ஒளி இல்லை என்பதற்காகக் குடத்தினுள் விளக்கோ, ஒளியோ இல்லையென்று சொல்ல முடியுமா?—இந்தக் காட்சியை, பெண்களின் உள்ளத்தையும், உணர்ச்சியையும் விளக்க அப் புலவர் பயன்படுத்திக் கொண்டார்.

பெண்கள் மிகவும் நல்லவர்கள். மிக மிக நல்லவர்கள்தாம். ஆனால், அவர்களின் மனம் வேறு; செயல் வேறு! எண்ணம் வேறு; சொல் வேறு! உள்ளொன்றும் புறம் ஒன்றுமாக வாழ்வதில் அவர்களுக்கு ஈடு இணை அவர்களேதான்!

எதையும் பொறுத்துக் கொள்ளும் பொறுமைப் பண்பு பெண்களுக்கு இயற்கை அளித்த பிறவிப் பேறு. பெண்டிர் உள்ளத்தில் காமம் மூண்டால் அது வெளியே அவ்வளவு எளிதில் புலப்படாது. நீறு பூத்த நெருப்புப் போல உள்ளுக்குள்ளேயே கனன்று கொண்டிருக்கும். இதனையே புலவர் உணர்ச்சியோடு உவமையாக [illegible]

பெண்களின் உள்ளம் குடம். அக் குடத்துள் காமவிளக்கு உணர்ச்சித் துடிப்பாகிய ஒளியை வீசிக்கொண்டிருக்கும்.

ஏதாவது ஒரு சிறு நிகழ்ச்சி அவர்கள் மனத்தைத் தாக்கி விட்டாலும் போதும்; உடனே குபீரென அந்த உணர்ச்சி மூண்டு விடும். பிறகு? கட்டுக்கடங்காது!........

....இந்த அழகிய உளவியல்பை முத்தொள்ளாயிரத்துள் யாரோ ஒரு புலவர் ஒரு வெண்பாவில் மிக அழகாகப் பாடியிருக்கிறார்.

பாண்டியனிடம் ஒரு பெண் அளவில்லாத காதல் கொண்டு விட்டாள். அவளோ நாணம், நற்பண்பு, பெண்மை யாவும் ஒருங்கே அமையப் பெற்ற மெல்லியல். அவள் காதலோ குடத்து விளக்குப் போல உள்ளத்தினுள்ளேயே சுடர் வீசி ஒளிர்ந்து கொண்டிருந்தது.

ஒருபோது பாண்டியன் ஊர்வலம் வந்தான். அவனைப் பார்த்துவிட்டாள் அவ்விளம் பெண். அவ்வளவுதான்! அவள் காதலுணர்வு கட்டற்று, கரைகடந்து, வேலி தாண்டி, எல்லைமீறி வெளியாகத் துவங்கிவிட்டது. அந்த உணர்ச்சி வேகம் எப்படிப் பரவியதாம்?

பகற்பொழுதில் மலையானது பார்க்கப் பசுமையாக (நீலமாகவும்) குளிர்ச்சியாக, அமைதியாக இருக்கும். பொழுது சாய்ந்து,

மேயச் சென்ற மாடுகள் வீடு திரும்பும் முன்னிரவு நேரத்தில் மலையில் குபீர் குபீரெனத் தீப்பற்றி எரியும். ஓரிடத்தில் தீ மூண்டால் அது மலை முழுதும் பரவிவிடும்! மலையே பற்றி எரிவது போலத் தோன்றும். இதைத்தான் காட்டுத்தீ - மலைத்தீ - என்பார்கள். மரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்தோ, சில போது உயிர் வளியின் சேர்க்கை மிகுவதாலோ இத்தகைய தீத் தோன்றுவது வழக்கம். (இவ்வாறு காற்றால் தீத் தோன்றித் திடீரென எரிவதையே 'கொள்ளிவாய்ப் பேய்' எனக் கூறி மக்களில் சிலர் மருள்வர்!) இம் மலைத் தீயை மறைத்துவைக்க முடியுமா? ஊரார், நாட்டினர் யாவரும் பார்க்கும்படி அது கொழுந்து விட்டு எரிகிறதே! அதைப்போலப் பாண்டியனைக் கண்ட பெண்ணின் அடங்காக் காமம் யாவரும் அறியும் மலைத் தீப்போல் வெளிப்பட்டு விடுமாம்! அவ்வளவுதான். இத்தனை நாளும் உள்ளத்திலேயே மூடி மூடி மறைத்து வைத்திருந்த குடத்து விளக்குப் போன்ற பெண்ணின் காமம் மலைத்தீப் போல நாடறியப் புலப்பட்டுக் கெட்ட பெயரை அப் பெண்ணிற்கு உண்டாக்கிவிட்டது! ஊரார் அவளை அலர் (பழிமொழி) தூற்றத் துவங்கிவிட்டனர். அந்தோ! அப்பேதை என் செய்வாள்?

இந்த அழகிய காதலுணர்ச்சியை ஓவியக் காட்சி போல இன்பத் தமிழில் புலவர் காட்டுகிறார்; பாருங்கள்:

> "குடத்து விளக்கேபோல் கொம்பனார் காமம்
> புறப்படா; பூந்தார் வழுதி—புறப்படில்
> ஆபுகு மாலை அணிமலையில் தீயேபோல்
> நாடறி கௌவை தரும்." (முத்தொள்ளாயிரம்*)

இப் பாட்டில் குடத்து விளக்கும், மலைத்தீயும் பெண்டிர் காதலுணர்வுக்கு உவமையாக அமைந்து அழகிய இலக்கியச் சுவை பயக்கிறது. இறந்த கால இருளிலே மறைந்துவிட்ட ஊரும் பேரும் அறிய வியலாத யாரோ ஒரு தமிழ்ப் புலவனை எண்ணினால் உருகாத நெஞ்சமும் இருக்குமோ?

காம உணர்வைத் திருக்குறளிலே கூட வள்ளுவப் பெருந்தகை 'தீ' என்றே பாடியுள்ளார்:

> "தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
> விடிற்சுடல் ஆற்றுமோ தீ." (௧௧௫௯)

---

*முத்தொள்ளாயிரம் ௧௮00 ஆண்டுகட்கு முன் தோன்றிய தென்பர். பாடிய புலவரோ; புலவர்களோ அறிய முடியவில்லை. மூன்று தொள்ளாயிரம் (௯00 × ௩ = ௨,௭00) இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களுக்கு, ௧0௮ பாடல்களே கிடைத்துள்ளன. பிற ௨,௫௯௨ பாட்டுக்கள்...?

வள்ளுவர் வெறுந்தீயின் இயல்புக்கு மாறுபட்ட இயல்புடையது காமத்தீ என்று அழகிய நயத்தோடு வேற்றுமையை விளக்குகிறார். நெருப்பைத் தொட்டால்தான் சுடும். தொடாவிட்டால் சுடாது. ஆனால் புதுமையான காமத்தீயோ தொடாவிட்டாலும் சுட்டுவிடும்!

"மனக்காமம் அகல் விளக்கின் சிறுதீ
புறக்காமம் மலையில் பரவிய பெருந்தீ."

என்ற உள்ளத்துணர்ச்சியை அடிப்படையாக வைத்துக்கொண்டு அழகிய பாட்டிலக்கியம் படைத்த முத்தொள்ளாயிரப் புலவர் புகழை என்னெனப் போற்றுவோம்!

குடத்து விளக்கே போலக் கொம்பன்னார் காமம் புறப்படாதது போலவே, நல்லோர் (உரவோர்) காம நோயும் வெளியே தெரியாது. இவ்வுண்மையை நாலடியாரில் புலவரொருவர் மிகத் தெளிவாக

"பரவா; வெளிப்படா; பல்லோர்கண் தங்கா;
உரவோர்கண் காமநோய் ஓ! ஓ! கொடிதே!
விரவாருள் நாணுப் படல்அஞ்சி யாதும்
உரையாது உள்ஆறி விடும்." (நாலடியார்: ௮௮*)

மிக ஒப்பற்ற, உயர்ந்த காம ஒழுக்கத்தை இப்பாட்டு எத்துணை எழிலோடு, பண்போடு விளக்குகிறது! சீரியோரின் வாழ்வை ஆராய்ந்தால் மேற்பாட்டின் உண்மை நன்கு புலனாகும். பாசமே கொள்கலனாகக் கொண்ட எளிய மக்களின் உள்ள நிலையினின்றும் மேற்பாட்டைக் கற்றால் அப் பாட்டின் கூற்று கற்பனையாய் பொய்யாய்த் தோன்றும். ஆனால், சான்றாண்மை நிறைந்த உள்ளத் துணர்ச்சி நிலையை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது பாடல்!!

எளிய பொருள்களுங்கூட ஏற்ற முறையில், ஏற்றவர் வாயிலாக அமையும்போது அவை உயர்வும், சீரும் பெற்று விடுகிறது.

---

* "சான்றோர்களிடத்தில் காமம் மிகுதியாகப் பரவாது. ஒருபோது மிகுந்து விடினும், யாவரும் அறியுமாறு வெளிப்படாது வெளியாகி விட்டாலும், தமக்கு உரிமையுடைய காதலரிடமே தான் வெளியாகும். பிறரிடம் வெளியாகாது. அறிஞர்களின் காமநோய் ஓ! ஓ! மிகக் கொடுமையானது!! தம் உரிமைக் காதலரிடத்தும் கூட அவர் காதலுணர்வோடிருக்கும் போதுதான் தொடரும். அவ்வாறு காதலர் காதலுணர்வற்று இருப்பதை அறிந்தால் உடனே நாணமுறும். பின்னடையும். அவர்மாட்டும் வெளிப்படாது உள்ளத்திலேயே ஆறிவிடும்!

[சான்றோர் நிலையை விளக்குவது இப்பாட்டு சால்புணர்ச்சியோடு கற்றால் ஒழிய இதனுண்மை தெளிதல் அருமையே.]

பொருள்களும், நிகழ்ச்சிகளும், சொற்களும் ஒளிராத மின் விளக்குகள். புலமை என்பது மின்னாற்றல். புலவர் என்போர் இசைக்கருவி. இம் மூன்றும் ஒன்றிணைந்து இயங்கும்போது 'கலை', 'இலக்கியம்' என்ற ஒளி சுடர் கால்கிறது.

உணர்ச்சிகளைப் பாட்டில் கையாள்வதற்கு தனித் தகுதியும், தனிப் புலமை யாற்றலும், தனித்திறமையும் வேண்டும். ஒரே உணர்வு நிலையைப் பல புலவர் பாடும்போது சிலருடையதே யாவருள்ளத்தையும் கவர்ந்து என்றும் வாழும் எழிலிலக்கியமாகி விடுகிறது. ஏனையோர் படைப்புக்கள் கடலில் கரைத்த இனிப்புப் போல அழிந்து படுகின்றன !

இலக்கியமும் உணர்ச்சியும் எத்தகைய உறவுடையன என்பதை ஓராங்குத் தெளிய உணர்ந்துணர்ந்து வாழ்வைத் துய்த்து, ஆழ்ந்தாய்ந்து இலக்கியத்தைக் கற்று ஒய்ந்து ஓர்ந்து எண்ணும் போதே சுவைத்தின்புற முடியும்.

இலக்கியம் கற்பவன் மாட்டைப் போல 'அசைபோடும்' திறன் படைத்தவனாதல் வேண்டும். நிறையக் கற்றல் வேண்டும். பின் அமைதியாக அமர்ந்து, ஆழ்ந்து ஈடுபட்டு கற்றவற்றை ஆராய்ந்து சுவைக்க வேண்டும்.

உணர்ச்சி மிக்க இலக்கியத்தின் பேரழகு நிலைக்கொரு நூற்பாவைக் காணலாம்:

"எளிமையில் ஏற்றம் + சிறுமையிற் பெருமை = புலமையின் பேரழகுநிலை."

## பயனற்ற

உலக வழக்கிற்குப் பயன்படாத வடமொழிமேல் வைத்த போலிப் பற்றால், வளம் நிறைந்த தூய தமிழைக் கெடுக்க முந்துதல் சிறிதும் முறையாகாது.

தமிழுக்குப் புறம்பான மொழிகளை ஆராய்ந்து சொல்லுகின்றேம். தமிழுக்குள்ள சிறப்பு வேறு எந்த மொழிக்கும் இல்லை. இதை எப்போதும் நினைவில் வைத்துக்கொள்ளல்வேண்டும்.

தென்னாட்டவர்கள் தமக்கு எவ்வகையிலும் பயன்படாததும், தெரியாததுமான இந்தி மொழிகளில் ஒன்றை வருந்திக் கற்றலால் வீண் காலக் கழிவும், வீண் உழைப்பும், வீண் செலவும் உண்டாகுமே யல்லாமல் வேறொரு நன்மையும் உண்டாகாது என்பதும் நன்கு விளங்கும்.

—மறைமலையடிகள்.

# "நம்பி திருமுருகனுர் திருமடம்"

[புலவர் திரு.ச. கணபதிராமன், எம். ஓ. எல்.]

சைவமும் தமிழும் தழைத் தினிதோங்கத் தோன்றிய அறுபான் மும்மை நாயன்மார்களுள் முருகநாயனுரும் ஒருவர். கோள்நிலை திரிந்து கோடைநீடினும் தான்நிலை பொய்யாத் தண் டமிழ்ப்பாவை காவிரியாள் பாய்ந்து வளம் சுரக்கும் சோழவள நாட்டினர். திருப்புகலூர் என்னும் ஊரினர்.* எவ்வுயிரிடத்தும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணர். அறஞ்சான்ற நெறியினர். புகலூர் வர்த்தமானேசசரர்க்குப் பூத்தொடுத்துச் சூட்டும் தொண்டினர். சிந்தை இடையறு தன்பும், திருமேனி தன்னில் பொலிவும் கொண்டிலங்கிய இவர் சிவனடியார்கள் வந்து தங்குவதற்பொருட்டு தாம் பிறந்த ஊரான திருப்புகலூரில் திருமடம் ஒன்றமைத்தார். அத்திருமடம், திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், திருநீலநக்கர், சிறுத்தொண்டர், முதலிய பெருமக்கள் தங்கியிருந்த பேறுபெற்றது. அத்துணைப் பெருமைவாய்ந்த திருமடத்தைச் சேக்கிழார்,

> "ஆங்கணையும் அவர்களுடன் அப்பதியில் அந்தணராம்
> ஓங்குபுகழ் முருகனுர் திருமடத்தி லுடனுகப்
> பாங்கில்வருஞ் சீரடியார் பலருமுடன் பயில்கேண்மை
> நீங்கரிய திருத்தொண்டின் நிலையுணர்ந்து நிகழ்கின்ருர்
> (பெரியபுராணம். திருநாவுக்கரசர் புராணம் - செய்யுள் 243)

என்று குறிப்பிட்டுள்ளார். அத்திருமடத்தில் முதற் குலோத்துங்க சோழ தேவனின் 35ஆம் ஆண்டில் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு அறிக்கையில் இது காணக்கிடக்கிறது.† இக்கல்வெட்டறிக்கையில் திருமுருகனுர் திருமடம் என்று மட்டுமே குறிக்கப் பட்டுள்ளது. ஆனல் இக்கல்வெட்டு மூலத்தில் [THE TEXT] இத்திருமடம் "திருப்புகலூரில் வடக்குத் தெருவில், வடசிறகில் உள்ளது" என்பதைக் குறிப்பிடுகின்றது. இவ்வூரில் இன்றும் இத் திருமடம் மிளிர்வதைக் கண்டு களிக்கலாம். இதனை நமக்கு உணர்த்தும் மூலக் கல்வெட்டு, திருப்புகலூர் அக்கினீசுவரர் கோயில், இரண்டாம் கோபுரத்தின் தென்பாலுள்ள மதிற் சுவரில்

---

* திருப்புகலூர், தஞ்சைமாவட்டம், நன்னிலம் வட்டம், நன்னிலம் புகைவண்டி நிலையத்திற்குக் கிழக்கே மூன்று கல் தொலைவில் இருக்கிறது.

† The Annual Report on South Indian Epigraphy for the year 1927—1928 Ins. No. 88.

இன்றும் ஒளிவிட்டுக்கொண்டிருக்கிறது. அக் கல்வெட்டு பின் வருமாறு :

"புகழ்மாது விளங்க ஜயமாது விரும்ப நிலமகள் மலர்மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி மீனவர் கெட, வில்லவர் குலைதர ஏனை மந்நவர் இரியலுற்றிழி தர திக்கனைத்திலும் தன் சக்கர நடாத்தி விசை அபிஷேகஞ் செய்து வீர ஸிம் மாஸநத்து அவனி முழுதுடையாளொடும் வீற்றிருந் தருளிய கோவி ராஜகேஸரி பந்மரான திரிபுவனச் சசகரவர்த்திகள் ஸ்ரீ கொலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு ௩௰ரு ஆவது குலோததுங்க சோழ வளநாட்டு பனையூர் நாட்டு ஸ்ரீ முடிகொண்ட சோழ சதுர்ப்பேதி மங்கலத்து பெருங்குறி மகாசபையோம். இந்நாட்டு உடையார் ஸ்ரீபுகலூர் தேவர் திரிபுவன சண்டேஸ்வர தேவர் பக்கல் நாங்கள் கொண்ட காசு ரா. இக்காசு நூறுங்கொண்டு இறையிலி செய்து கொடுத்த நிலமாவது இவ் வூர்கீழ்பிடாகை... .................. கட்டளையில் ஸ்ரீ பூமிவதிக்கு கிழக்கு திருக்கண்ணபுர வாய்க்காலுக்கு தெற்கு இரண்டாம் கண்ணாற்று மூ................த்து மேற்கடைய நிலம் நாலு மாச்சின்னத்தில் தெற்கடைய விளை நிலம் இறையிலி செய்துகொடுத்த பரிசாவது. இந் நிலத்துக்கு வந்த பெருவரி சில்வரி வெட்டி முட்டையாள், எச்சோறு, கூற்றரிசி, திரு........ய சில்ல போந்த குடிமை மற்றும் யெப்படிப் பட்டது நாங்களே யிறுக்கக கடவோமாகவும்

இந்நிலத்தில் போகங்கொண்டு சித்திரைத் திருநாளும் திருநாளுக்கு சேவிக்க வந்த ஸ்ரீ மாகேஸ்வரரை இவ்வூர் வடக்கில் தெருவில் ...ட.சிற நில் நாபி ருகனர் திருமடத்தில் ஊட்டக் கடவதாகக் கோயில் நம்பி இத்தன்மம் செய்தார் நம்பிராட்டியார் அகப்பரிவாரம் ஏழுலகமுடையார் அகப்பரிவாரப் பெண்டுகளில் ராஜ ராஜன் சோழன் ரம்பையார் ஸபை உள்ளிருந்து பணித்தார். ராஜேந்திர சோழச்சேரி உழைச் சரணன் பசுவதி ஸ்ரீ கொண்ட சோழச் சேரியில் ஏலாயந் ஆதித்தன் ஸோம தேவ ஸகஸ்ரந் திரிபுவன மாதேவிச் சேரியில்...... ...........அழகிய மணவாளன் திருவிக்கிரம நாராயண ஸ்ரீ அரங்கநாத பட்டர் கவுணியந் திருவரங்க நாராயண...........ஊர்க்கணக்கன் சண்டேசுவரன் ஐவேலியும் தேவூரும் ஆநாற்றங்கு..................காணியுடைய தில்லை வாணன் எ....."

இக் கல்வெட்டு முதற் குலோத்துங்க சோழனின் முப்பத்தைந்தாவது ஆட்சியாண்டில் ஏற்பட்டது. முதற் குலோத்துங்கன் காலம் கி. பி. 1070—1120 என்று அறிஞர்கள் ஆய்ந்த

முடிபாகும். எனவே இக் கல்வெட்டு கி. பி. 1105இல் வெட்டப் பட்டது என்று தெளிய முடிகிறது. திருநாவுக்கரசர், திருஞான சம்பந்தர், திருநீலநக்கர், சிறுத்தொண்டர் ஆகிய நால்வரும், திரு முருகனார் திருமடத்தில் தங்கிச் செந்தமிழ்த் திறம் பேசி மகிழ்ந் தார்கள் என்று சேக்கிழார் கூறுகிறார். ஆகவே திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் காலமான கி. பி. ஏழாம் நூற்றாண்டே திரு முருகனார் காலமும் ஆகும். கி. பி. ஏழாம் நூற்றாண்டுச் செய் தியை கி. பி. 11ஆம் நூற்றாண்டில் கல்வெட்டில் குறிப்பிடப்பட் டுள்ளது.

மேலும் இக் கல்வெட்டால் புதிய மற்றொரு செய்தியும் நமக்குக் கிட்டுகின்றது. திருத்தொண்டத் தொகை பாடிய சுந்தரமூர்த்திகள், அறுபான் மும்மை நாயன்மார்களுக்கு அடை மொழி கொடுத்துப் பாடினார். ஆனால் முருக நாயனாரை "முருகனுக்கும் முருத்திர பசுபதிக்கு மடியேன்" [திருத் தொண்டத் தொகை] என்றுமட்டுமே கூறியுள்ளார். ஆனால் இம் முதற் குலோத்துங்கன் காலத்தில் வெட்டப்பட்ட இக் கல் வெட்டு அவருக்கு "நம்பி" என்ற அடைமொழி கொடுத்து "நம்பி முருகனார்" என்று குறிப்பிடுவது அறிந்து மகிழ்ந்து போற்றற்குரியதாகும்.

---

## முந்நூல்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

திருக்குற ளென்னும் தெய்வ நூலினை
உருக்க முடனே ஓதுவிர் நாளுமே.
செருக்கும் கீழ்மையும் தீயார் சேர்க்கையும்
இருக்குமா றன்றிச் சுருங்கிப் போகுமே.

திருவா சகத்தை ஒருபொழு தேனும்
கருதியே உளத்தில் மருவுவீர் நலமே
சருக்கும் கனியும் அயின்றவ ரெய்தும்
திருநிறை அருளே பெருகலும் வருமே.

திருக்கோவை யென்னும் செழுமை நூலை
அருத்தம தறிந்து ஆழ்ந்து கற்பீர்
திருப்பம் வாழ்வில் இருப்ப தறிவீர்
கரப்பொன் றின்றிக் கடவுளை அறிவீர்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) பழனியில் கீழ்த்திசைக் கலைக்கல்லூரி

பழனி ஆண்டவர் அறநிலையப் பாதுகாவலர்களால் ஏற்படுத்தப்பட்டுள்ள கீழ்த்திசைக் கலைக்கல்லூரி கடந்த 23-7-60இல் பழனியில் துவக்கப்பட்டது. அமைச்சர் பக்தவத்சலம் அவர்கள் இக் கல்லூரியினைத் திறந்துவைத்தார்கள். அதுகாலை, இந்து சமயத்தின் சிறப்புப் பற்றியும் தமிழ்மொழியின் மாண்பு, தமிழரின் பண்பாடு ஆகியவை பற்றியும் சீரிய சொற்பொழிவாற்றினர். சிற்பிகளுக்குப் பயிற்சிதர மகாபலிபுரத்திலும் சுவாமிமலையிலும் அரசினர் பள்ளிகள் நிறுவியுள்ள சிறப்பையும் எடுத்துரைத்தனர்.

குறிப்பு: இத்தகைய கல்லூரிகள் மேலும் பல பல்கி நாட்டில் கலைக் கல்வியை எங்கணும் பரவுவதாக.

## (உ) தமிழின் மாண்புபற்றிச் சென்னை ஆளுநர் கருத்துரை

"தமிழ் மிகத் தொன்மையான மொழிகளுள் ஒன்று. தற்போது தமிழின் சிறப்பை அறிந்து அதனைக் கற்க உருசியர் முன்வந்துள்ளனர். இதற்கு முன்னர்க் கிறித்துவப் பாதிரிகள் தமிழிலுள்ள சிறந்த தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளனர். மொழி கருத்தைத் தெரிவிக்க ஒரு வாயிலாக அமைந்துள்ளது. எனவே மொழி வேற்றுமைகளில் கருத்தைச் செலுத்தி ஒற்றுமைக்கு ஊறுசெய்தல் கூடாது," என்று கடந்த 25—7—60இல் திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரியில் பேசிய சென்னை ஆளுநர் திரு. விட்ணுராம் மேதியவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பு: மொழிகள் கருத்தை வெளியிடுதற்கு ஏற்பட்டவை என்பது ஒருபுறமிருக்க, மக்கட்குழுவின் பண்பாடு, நாகரிகம், கலை இன்ன பிறவற்றையும் வெளியிடும் கருவியுமாகும் என்பதை நாம் அறிதல் வேண்டும். அவ்வகையில்தான் தமிழர் தம் மொழிக்கு முதன்மை கொடுத்துப் பேசுகின்றனர். ஒற்றுமை எங்ஙனம் இன்றியமையாததெனக் கருதப்படுகின்றதோ அங்ஙனமே மக்களின் நாகரிகம் பண்பாடு இன்ன பிறவும் காக்கப்படுதல் வேண்டும் என்ற எண்ணம் மக்களிடையே எழுதலும் இயல்பேயன்றோ?

## (ங) இலங்கை அரசியலில் மாற்றம்

காலஞ்சென்ற முன்னாள் இலங்கை முதலமைச்சர் பண்டாரநாயகா அவர்களின் மனைவியார் திருவாட்டி சிரிமாவோ பண்டார நாயகா அவர்கள் தற்போது முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். உலகின்கண் முன்னேற்ற மெய்திய தம்முரிமை நாடுகள் பலவற்றினும் மாதரார் சட்டமன்ற உறுப்பினராகவும், ஆட்சித்துறை அலுவலராகவும், அமைச்சராகவும் போந்து பணியாற்றுகின்றனர். ஆனால் முதலமைச்சராக உலகினிலேயே முதன்முதல் வந்தவர் இவ்வம்மையாரே யாவர். ஆட்சிக்கு வந்துள்ள அம்மையாரவர்கள் தமிழர்களையும் சிங்களவர்களையும் ஒரேபடித்தாய் வைத்தெண்ணப் போவதாகவும், சிறுபான்மையினருக்குரிய உரிமைகளை வழங்கப்போவதாகவும் உறுதி கூறியுள்ளார்.

குறிப்பு: அம்மையார் அவர்களின் ஆட்சியிலாவது இதுகாறும் தமிழர் பட்ட அல்லல்கள் நீக்கப்பட்டுத் தமிழர் சிங்களவர் ஒற்றுமை வளரும் என நம்புகிறோம்.

## (ச) நாட்டின் ஒருமைப்பாடு பற்றிக் குடியரசுத் தலைவர் கருத்து

"முன்னாளில் இந்தியாவில் பல்வேறு மொழிகள் வழங்கப்பட்டது மட்டுமல்ல, பல்வேறு பண்பாடு பழக்க வழக்கங்களும் நிலவியிருந்தன. இந்தியா பண்டைநாளில் என்றுமே ஒரே ஆட்சியின்கீழ் இருந்ததில்லை. பல சிறு சிறு நாடுகள் நிலவியிருந்தன. அவற்றுள் போராட்டங்களும் இருந்துவந்தன. ஆயினும், அடிப்படைப் பண்பில் இந்தியா ஒன்றாக இருந்தது இன்றும் இருந்து வருகிறது இது கடவுளருளால் நமக்குக் கிடைத்திருக்கும் பேறு. இந்த ஒற்றுமையை நாம் பாதுகாத்தல் வேண்டும் அங்ஙனம் பாதுகாக்கத் தவறினால் அது நமக்குத் தீவினையே யாகும். உலகம் நம்மைப் பழிக்கும். எதிர்காலப் பரம்பரையினர் நம்மைக் குறை கூறுவர்" என்று 29—7—60இல் ஐதராபாத்தில் பேசிய காலை குடியரசுத் தலைவர் திரு. இராசேந்திர பிரசாத் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

குறிப்பு: குடியரசுத் தலைவரின் கருத்து மிக மிகச் சீரிய கருத்தாகும். அனைத்திந்தியா மட்டுமன்று, அனைத்துலகும் ஒன்றுபட வேண்டுமென்பதுதான் அறிஞர்கள் கருத்து. ஆனால், அரசியல், மொழி, பொருளியல், பண்பியல் துறைகளில் நாட்டின் ஒரு பகுதியினர் மீது மற்றொரு பகுதியினர் ஆதிக்கம் செலுத்தும் மனப்பான்மை மாறினாலன்றி—மக்கள் தம்முரிமையோடு வாழ வகைசெய்யப்பட்டாலன்றிக் குடியரசுத்தலைவர் போன்றாரின் கருத்துரைகள் பயன்தருதல் கடினமே.

## (ரு) டாக்டர், அ. சிதம்பரநாதன் செட்டியார் உருசியாச் செலவு

சென்னைப் பல்கலைக் கழக ஆங்கிலம்—தமிழ் அகராதித் தொகுப்பாசிரியர் குழுத் தலைவரும், 'செந்தமிழ்ச் செல்வி' ஆசிரியர் குழுத் தலைவரும், செந்தமிழ்க் காவலருமான டாக்டர், அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். எல். சி. அவர்கள் மாஸ்கோவில் 9-8-60 இல் நடைபெறும் உலக மொழிப் பேரறிஞர் மாநாட்டிற்கு இந்திய அறிஞர் தூதுக்குழுவில் தென்னகத்துத் தூதுவராகச் சென்றுள்ளார். சென்னைப் பல்கலைக் கழகம் மொழித்துறை இலக்கியத்துறை ஆராய்ச்சிக் கென முதன்முறையாக இவரை அனுப்பியுள்ளது. கடந்த 4-8-60 இல் தமிழகப் பெருமக்களும் தமிழறிஞர்களும் மீனம்பாக்கம் விண்ணூர்தி நிலையத்தில் திரு. செட்டியாரவர்களை வாழ்த்தி வழியனுப்பினர்.

குறிப்பு: தென்னகத்தின் சார்பில் மொழிப் பேரறிஞர் மாநாட்டிற்குச் செல்லும் இவர் பல்லாற்றானும் தகுதி வாய்ந்த தகைமையாளர். இவர் தம் உருசியாச் செலவால் முதன்மைத் தமிழுக்கும் தமிழகமக்கட்கும் வரும் மாண்பு குறித்துத் தமிழகத்தார் களிபேருவகை எய்துவர். அவர் செலவு செவ்வனே நிறைவேறவும் மாநாடும் சிறப்புற நிகழவும் வாழ்த்துகிறோம்.

## (சு) பண்டித கா. பொ. இரத்தினம் அவர்கள் உருசியாச் செலவு

இலங்கைத் தமிழ் மறைக் கழகத் தலைவர், செந்தமிழ்க் கலைமணி வித்துவான், கா. பொ இரத்தினம் எம் ஏ. அவர்களும் மாஸ்கோவில் நடைபெறும் மொழிப் பேரறிஞர் மாநாட்டிற்குக் கடந்த 4-8-60 இல் இலங்கையிலிருந்து பயணமானார்கள். இவ்விருவர்களின் செலவுகளும் தமிழ் மக்களின் பாராட்டிற்குரியன.

# மதிப்புரை

**“சிறுவர் பாட்டு”**

[ஆசிரியர் திரு நாரா நாச்சியப்பன், அவர்கள். விலை ரூபா ஒன்று வெளியிடுவோர் ‘தாமரைப் பதிப்பகம்’ 97, பிராட்வே, சென்னை-1.]

இந் நூல் கண்கவர் வனப்பினதாய்ப் பாட்டுக்குப் பொருத்தமான பன்னிற வண்ண ஓவியங்களுடன், உயர்ந்த தாளில், அழகிய எழுத்துக்களால் ஆக்கப்பட்டுள்ளது. பாட்டுக்கள் கற்பார்க்கு எளிதில மனத்தில் தங்கும் முறையாக அகரவரிசையில் கோத்துள்ளார்கள்.

சிறுவர்க்கு வேண்டிய இன்றியமையாத பயனுள்ள பாடல்களை ஆசிரியர் எண்ணி இனிமையும் எளிமையும் இன்பமும் பொருளப் பாடியுள்ளார் இசையமைதியும், ஆற்றொழுக்கும் கவர்ச்சி நடையும் பொருந்தியன, எல்லாப் பாட்டுக்களும். இது பாட்டுப்புத்தகமாக அமைந்திருப்பினும் எடுதொடங்கும் மாணவர்கட்கு ஒருபுடை நெடுங்கணக்கு (அரிச்சுவாடி)ப் போன்றும் அமைந்துள்ளது.

இதனைக் கல்வித்துறையாளர் சிறுவர் வகுப்புக்களுக்குத் துணைப் பாடமாக வைத்துத் துணைபுரிவது நல்லது. ஏனைப் பெரு மக்களும் இதனை வாங்கியும் வாங்குவித்தும் ஆசிரியர் மேன் மேலும் இம் முறையில் பல நூல்களை யாத்துத் தமிழுக்கு ஆக்கஞ் செய்யத் துணைபுரிவார்களாக.

**“சிவமலைப் பிள்ளைத்தமிழ்”**

இப் பிள்ளைத் தமிழைப் பாடியளித்த நூலாசிரியரின் பெயர் புலப்படவில்லை யெனக் குறிக்கப்பட்டுள்ளது. இந் நூலைப் பல விடங்களில் தேடியும் முற்றும் பெறமுடியாத நிலையில் கிடைத்தவரையுள்ள சுவைமிக்க பாடல்களை முருகன் அடியவர்கள் விரும்பி ஓதுதற்குத் துணையாக ‘முது பெரும் புலவர், வித்துவான், வே. ரா தெய்வசிகாமணிக் கவுண்டர்’ அவர்கள், (ஈரோடு செங்குந்தர் உயர்நிலைப் பள்ளியின் முன்னாள் தலைமைத் தமிழாசிரியர்) அழகிய குறிப்புரையும் வரைந்து வெளியிட்டுள்ளார்கள் இதன்கண் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி ஆகிய பருவங்களுக்குரிய பாடல்கள் பத்துக் காணப்படுகின்றன. இதனை மெய்யன்பர்கள் வெளியீட்டாசிரியர்க்கு அஞ்சற்றலை விடுத்துப் பெற்றுக்கொள்ளலாகும்.

**“மறைமலையடிகள் வரலாறு”**

[இதன் ஆசிரியர் திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள், இதன் விலை ரூபா 15/- கிடைக்குமிடம்: திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட் 1/140, பிராட்வே, சென்னை-1.]

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் வரலாறு அனைவர்கட்கும் வாழ்க்கை வழிகாட்டியாய், மலை விளக்காய் நிலைபெற்று நின்று நீங்காத் துணைபுரியும். அவ்வரலாறு உரியவர்களால் எழுதப்படுவது உயர்வுடைத்தாகும். ஆயினும் உரியவர்கள் தங்கள் பெருமையினை உள்ளவாறு விரித்துக் கூறாது குறிப்பிற் புலப்படுமாறு சுருக்கிக் கூறுவர். அயலாராயின் கண்டதுங் கேட்டதுங் கொண்டெழுதுவதன்றி விட்டு விடாது அனைத்தையும் சிறப்புற எழுதும் வாய்ப்பு எய்தப் பெறார்.

அங்ஙனமின்றி இந்நூலாசிரியர் நூலின்கண் நுவலப்படும் மறைமலையடிகளாரின் மகனாராவர். பெரும் புலமையும் பேரும் வாய்ந்த பெரியார். அவர்களும் ஏனையோர் போன்று கண்டதுங் கேட்டதுங் கூறாது ஆசிரியர் மறைமலையடிகளார் 1899 முதல் 1950 வரை எழுதி வைத்திருந்த நாட்குறிப்பை அடிப்படையாகக் கொண்டு நினையும் வழுவாது செப்பமுற வரைந்துள்ளார்கள்.

இந்நூல் டிம்மியளவில் ஏறத்தாழத் தொள்ளாயிரம் பக்கங்களை யடுத்துள்ளது. அழகிய கட்டடம் அமைந்தது. மறைமலையடிகள் வரலாறெனப் பெயர் பெறினும் தமிழகப் பெரும் புலவர் பலர் வரலாறுகளும் இதன்கண் காணப்படுகின்றன. தமிழ் வரலாறு, தமிழின் மாண்பு, தமிழக வரலாறு முதலிய தனிச் சிறப்புக்களும் வாய்ந்துள்ளன. செந்நெறி மாண்பு, சித்தாந்த சைவச் சீர்மை அதனைத் தமிழுலகத்தும் வெளியுலகத்தும் பேணி வரும் கழகத் தொகைகள், தொண்டுகள், அடிகளார் தொடர்பு கொண்டுள்ள அரும்பணிகள் முதலிய பலவும் ஈண்டு விளக்கமுறத் திகழ்கின்றன. நூலின் நடை ஆசிரியர் அடிகளார் மகனாதலின் அக் கனப்புடையது. அழகிய வண்ணப்படங்கள் பல ஆங்காங்கு மிளிர்ந்து நூலினை எழில் செய்கின்றன.

இதனைச் செந்தமிழ் அன்பர்களும் செந்நெறிச் செல்வர்களும் இன்றியமையாது வாங்கியும் வாங்குவித்தும் பெரும் பயன் எய்துவார்களாக. எல்லா நூல் நிலையங்களிலும் இந்நூல் இருத்தல் வேண்டுமென்பது சொல்லாமலே அமையும்; என்னை? இதுவே தமிழின் அமிழ்தமாம் உண்மை யொன்றுதலான் என்க.

## ஜீவபந்து T. S. ஸ்ரீபால் அவர்களின் வாழ்க்கையும் தொண்டும் "மணிவிழா மலர்"

[இம் மலரை மணிவிழாக் குழுவினர் அளித்தனர். இதன் விலை ரூபா. 2·00. கிடைக்குமிடம் 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்— அஞ்சற் பெட்டி 85. சென்னை-1.]

இம் மலர் திரு. பாலவர்களின் உயர்ந்த பண்பாட்டையும், சிற்றுயிர்கள் மாட்டுக்கொண்டுள்ள பேரருளின் காரணங்களையும், அது காரணமாக எத்தனையோ இன்னல்களை யடைந்தும் மேற்கொண்டுள்ள தொண்டினை விடாது புரிந்து வரும் சிறப்பினையும், தமிழுக்குத் தனிப்பட ஆற்றும் பணியினையும், சமய நோக்காது தமிழ்ப்புலவர்கள் அனைவர்களோடும் உளங்கலந்து அளவளாவும் அன்பின் பெருக்கையும், பொது நோக்குடைய சங்கங்களில் கலந்து உழைக்கும் உழைப்பினையும், அவர்தம் வரலாற்று விரிவினையும் நன்கு விளக்குகின்றது. பல் பேரறிஞர்களின் ஆராய்ச்சி மிக்க கட்டுரைகளும் வாழ்த்துக்களும் இம் மலரை அணி செய்கின்றன. பல வேறு வகையான சிறந்த வண்ணப் படங்கள் காணப் படுகின்றன. 192 பக்கங்கள் உள்ளன. உயர்ந்த அழகிய பதிப்பு. இதனைச் செந்தமிழன்பர்கள் அனைவர்களும் வாங்கியும் வாங்குவித்தும் நலம் பெறுவார்களாக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.